# ஐரோப்பிய வரலாறு

(கி.பி. 1815 முதல் 1870 வரை)

ஆசிரியர்கள் :

ச. வெங்கடேசன், M.A.

டாக்டர் பா. சுப்பிரமணியன், M.A., Ph.D.



டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—880

# ஐரோப்பிய வரலாறு

## (கி. பி. 1815 முதல் 1870 வரை)

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்கள்
ச. வெங்கடேசன்,
பேராசிரியர், துறைத்தலைவர்,
வரலாற்றுத் துறை,
அரசினர் கலைக் கல்லூரி, சேலம்.

டாக்டர் பா. சுப்பிரமணியன், எம்.ஏ., பிஎச்.டி.,
துணைப் பேராசிரியர்,
வரலாற்றுத் துறை,
அரசினர் கலைக் கல்லூரி, சேலம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — December, 1978
Number of Copies—1000

T.N.T.B.S. (C.P.) No. 830



HISTORY OF EUROPE (From 1815 to 1870 A.D.)

C. VENKATESAN and DR. P. SUBRAMANIAN

Price Rs. 15-80

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*

SAKTHI PRESS,
No. 56, Arunachala Achari Street,
Madras-600 005.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **ஐரோப்பிய வரலாறு (கி.பி 1815 முதல் 1870 வரை)** என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **830** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **865** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் ; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

**செ. அரங்கநாயகம்**

# முன்னுரை

## 1815-ல் ஐரோப்பா

வரலாறு என்பதே சமுதாய வளர்ச்சியின் தொடர்ச்சி பற்றிய ஆய்வாகும். தொடக்கக் காலந்தொட்டே மனிதன் அனைத்துத் துறைகளிலும் படிப்படியாக வளர்ந்துவந்திருக்கிறான். 19ஆம் நூற்றாண்டுவரை அவனது வளர்ச்சி மெதுவாகவிருந்தது. 19ஆம் நூற்றாண்டில் அவனது வளர்ச்சி மிக விரைவுபட்டது. 15ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரிருந்தே அவனது வளர்ச்சி சற்று விரைவு பட்டது. கடல் நாடுகள் கண்டுபிடிப்பு ஐரோப்பியருக்கு ஒரு புது அனுபவமாயிருந்தது. அதனால், அவன் புத்துணர்வு பெற்றான். அதனால், அவனுக்கு அறிவும் வளமும் மிகுந்தன. வளமுற்ற அம் மனிதன் உணவால்மட்டும் நிறைவுறாது, தனது சமயத்தையும் நுணுகி ஆராய்ந்தான். உரிமையோடு பிறக்கும் மனிதன் சமயத்தால் எங்கும் கட்டுண்டு கிடப்பதை உணர்ந்தான். தனது அறிவு வளர்ச்சிக்கு அச்சமயம் தடையாயிருத்தலைத் தெள்ளென உணர்ந்தான் அம்மனிதன். சமயத் தளையிலிருந்து விடுபட அவன் சமயப் புரட்சியிலும் ஈடுபட்டு மறு சமயமொன்றை உருவாக்கிக்கொண்டான். இதனால், சமயத் துறையில் அவனது உரிமை மிகுந்தது. சமயத் துறையில் உரிமை பெற்ற மனிதன் அதோடுமட்டும் அமைதியுறாது அரசியல் துறையிலும் உரிமை பெற விழைந்தான். வல்லரசர்களால் தனக்கெவ்வித உரிமையும் நல்கப் படாமலிருந்ததை அம் மனிதன் உணர்ந்தான். அரசியல் தளையி லிருந்தும் விடுபட்டு உரிமையோடு திகழ அவன் புரட்சியிலீடு பட்டான். அதன் விளைவுதான் 1789-ல் நிகழ்ந்த சிறப்புமிக்க ஃபிரெஞ்சுப் புரட்சியாகும். உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கூக்குரலின் எதிரொலிதான் அப் புரட்சியாகும். அவ் வுரிமைகளைப் பெற்றதோடு, அவ் வுரிமையைத் தர மறுத்த அரசரையும் சாய்த்தான் அவ் வீர மனிதன். தனது நெடுநாளைய கனவை இதன்மூலம் நனவாக்கிக்கொண்டான் மனிதன். ஃபிரெஞ்சு மண்ணில் மக்களாட்சி மலர்ந்தது. அதற்கு அமெரிக்காவும் ஒரு முன்னோடியாய் நின்றது. இவ் வெற்றிக் களிப் பில் திளைத்த மனிதன் தொலைநோக்கும் பயிற்சியேதுமின்றி ஒரு மக்களாட்சியை நிறுவிக்கொண்டான். தனது தாயகம் மட்டும்

உரிமையோடு இருப்பது தக்கதன்று. தன்னைப்போன்ற பிற மனிதர்களும் உரிமையோடு திகழவேண்டுமென அறைகூவல் விடுத்தான் அந்த ஃபிரெஞ்சு மனிதன். மன்னர்கள் அனைவரும் மக்களின் பகைவர்கள்—அவர்களை வீழ்த்துவதே உரிமை நாடும் ஒவ்வொருவரின் பணியாகுமெனப் பிறரையும் தட்டியெழுப்பினான் அந்த ஃபிரெஞ்சுக்காரன். அதனால், ஐயமும் அச்சமும் கொண்ட தன்னல ஐரோப்பிய வல்லரசுகள் அவனை வீழ்த்தவும் சபதம் பூண்டு, ஒன்றுகூடின. பயிற்சியேதுமில்லாத இம்மனிதன் தனது உரிமைகளைப் பேணிக் காத்துக்கொள்ள இயலவில்லை. அவன் அமைத்த மக்களாட்சியும் துன்பக் கடலில் சிக்குண்டது. அதனைக் காப்பதற்காக ஒரு மாவீரன் நெப்போலியன் என்ற பெயரில் தோன்றினான். வியப்புறும் வகையில் அனைத்து ஐரோப்பிய வல்லரசுகளையும் சாய்த்து வெற்றிவாகை சூடினான் அம் மாமனிதன். வெற்றி மமதையில் அவனும் தன்னை இழந்தான். அவனும் 1804-ல் ஒரு பேரரசனானான். அதனுடன் அவனுடைய வீழ்ச்சியும் தொடங்கியது. ஐரோப்பிய வல்லரசுகள் அனைத்தும் ஒன்றுகூடி 10 ஆண்டுகள் தொடர்ந்து அவனுடன் போரிட்டு அவனை முடிவில் 1814-ல் வீழ்த்தின. வீழ்ந்துபட்டாலும் அம் மாமனிதன் ஐரோப்பிய நாடுகளனைத்திற்கும் நாட்டுப்பற்று என்ற படிப்பினையை ஊட்டினான். அந் நாட்டுப்பற்றே ஐரோப்பிய வரலாற்றில் பல மாற்றங்களுக்கு வித்திட்டது. நெப்போலியனை வீழ்த்திய பிறகு அனைத்து நாடுகளும் வியன்னா மாநாட்டில் கூடின. அவை ஐரோப்பாவை மீண்டும் புதுப்பித்துக்கொண்டன. அதில் பல நாடுகள் நன்மையுற்றன பல நாடுகள் ஏமாற்றமுற்றன. நன்மையுற்றோர்க்கும், ஏமாற்றமுற்றோர்க்கும் நடந்த போராட்டமே (1815-க்குப்) பின்னர் வரும் வரலாறாகும்.

ஃபிரெஞ்சுப் புரட்சி ஐரோப்பிய வரலாற்றைப் பெரிதும் மாற்றியது. நெப்போலியனும் ஐரோப்பாவை முற்றிலும் மாற்றினான். ஃபிரெஞ்சுப் பேரரசராக அரியணையேறிய மாவீரன் நெப்போலியன் 1806-ல் புனித ரோமானியப் பேரரசைத் துணிந்து அகற்றினான். ஆயிரம் ஆண்டுகளுக்குமேல் சிறப்புற்றுத் திகழ்ந்த ஒரு பேரரசு அகற்றப்பட்டது. 1800-க்கு முன்னர் சீரும் சிறப்புமாகத் திகழ்ந்த ஆஸ்திரியாவும் ஸ்பெயினும் இதனால் நிலைகுலைந்துபோயின. பிற்போக்காட்சி நிலைகுலைந்தது பல நாடுகளுக்கு நன்மையாய் அமைந்தது. அதன் வீழ்ச்சியில் பெரிதும் நன்மையுற்ற நாடு இங்கிலாந்து. உலகமெங்கும் குடியேற்றங்களை நிறுவி, அது ஐரோப்பாவில் கடல் ராணியாகத் திகழ்ந்தது. நெப்போலியன் காலத்து வலுவுள்ள ஃபிரான்சை முழு மூச்சுடன் எதிர்த்தது இக் கடைக்காரர்களின் நாடேதான். ஹேப்ஸ்பர்க்குகளின் வீழ்ச்சி

யால் மிகவும் மகிழ்ந்தவர் ஹோகன் சோலன் குடும்பத்தின ராவர். பிரஷ்யா ஆஸ்திரியச் சீர்குலைவில் பெரிதும் வளர்ந்தது. ஜெர்மனியிலேயே பிரஷ்யா ஒரு வலுவுள்ள நாடாக வளர்ந்தது. ஐரோப்பாவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் நெடுநாள்கள் உறங்கிக் கிடந்த ஐரோப்பிய நாகரிகத்தின் இறுதிக் குழந்தையான ரஷ்யாவையும் தட்டி யெழுப்பின. மகா பீட்டரும், இரண்டாம் காதரைனும் மிக்க விழிப்புற்று ரஷ்யாவை ஒரு வல்லரசாக மாற்றினர். ஐரோப்பிய அரங்கில் ரஷ்யாவும் பீடுநடை போடத் தொடங்கியது. போலந்தும், இத்தாலியும், ஜெர்மனியும் வல்லரசு களின் ஆதிக்க வேட்டைக்கு இரையாயின. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில்தான் பல போராட்டங்களுக்கும், போர்களுக்கும் பின்னர் இத்தாலியும் ஜெர்மனியும் ஒன்றுபட்டன. 19ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் மிக்க வலிவுடனும் பொலிவுடனும் திகழ்ந்த நாடுகள் இரண்டு: அவை (1) ஃபிரான்சு, (2) இங்கிலாந்து. அவற்றுடன் ஆஸ்திரியாவும், ரஷ்யாவும், பிரஷ்யாவும் போட்டி யிட்டன. இங்கிலாந்தும், ரஷ்யாவும், பிரஷ்யாவும், ஆஸ்திரியாவும் ஒன்றுகூடியே நெப்போலியனை வீழ்த்தின. ஆகவே, 19ஆம் நூற்றுண்டில் இந் நான்கு நாடுகளுமே சிறப்புற்றுத் திகழ்ந்தன. வியன்னு மாநாட்டிற்கும் அவையே தலைமையேற்றன. வல்லரசு சமநிலையைப் பேணுவதும் அவற்றின் கடமையாயிற்று. போர்ச்சுகல், ஸ்பெயின், ஹாலந்து, நார்வே, ஸ்வீடன், டென்மார்க் போன்ற நாடுகள் இரண்டாந்தர நாடுகளாய் கருதப்பட்டன. அவற்றிற்கு எத்தகைய சிறப்பினையும் வல்லரசுகள் நல்கவில்லை.

19ஆம் நூற்றுண்டில் அரசியல் துறையில் ஏற்பட்ட மாற்றங் களைப்போன்று சமுதாயத்துறையிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இச் சமுதாயத்திலேற்பட்ட மாற்றங்களால் 19ஆம் நூற்றுண்டு ஐரோப்பா முந்தைய ஐரோப்பாவினும் மிக்க உரிமையோடு திகழ்ந்தது. போக்குவரத்துத் துறைகளிலேற்பட்ட மாற்றங்கள் காரணமாக, அனைத்து நாடுகளும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. அரசியல், அறிவு, வணிகம் போன்ற துறைகளில் ஐரோப்பா பெரும் மாற்றங்களுக்கு உட்பட்டது. நகர வளர்ச்சி, வணிக வளர்ச்சி, அரசியல் மாற்றம் போன்ற காரணங் களால் நிலமானிய முறை அகன்றது. கடல் வணிகம், பிற வணிகம் காரணமாக, நடுத்தர வகுப்பு மக்கள் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தனர். அவர்கள் அறிவிலும், ஆற்றலிலும், வணிகத் திலும், வளத்திலும் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். இவர்கள் செல்வர் களின் செருக்கையும், அவர்களுக்கு நல்கப்பட்டிருந்த சிறப் புரிமைகளையும் எதிர்க்கத் தலைப்பட்டனர். அரசியல், பொருளாதார சமூகத் துறைகளிலேற்பட்ட மாற்றங்களுக்கு இவர்களே தலைமையு

மேற்றனர். இவர்களிடை மாபெரும் அறிஞர்களும் தோன்றி இவர்களைச் சிறப்பித்தனர். சமுதாயத்தின் தலைமை இவர்கள் கைக்கு மாறியது. அதனைக் கண்ணுற்ற வல்லாட்சியாளர் களும் இவர்களையே மதித்தனர்; இவர்களின் தலைமையினையே வரவேற்றனர். செல்வர்களின் செருக்கால் அவர்கள் பெற்றிருந்த சிறப்புரிமைகளால் பெரிதும் அதிருப்தியுற்றிருந்த அரசர்கள் நடுத்தர வகுப்பு மக்களைப் போற்றி வரவேற்றனர். தங்களுக்குப் பெரிதும் போட்டியாய்த் திகழ்ந்த செல்வர்களை அடக்கி ஒடுக்குவதற்கு அவ் வரசர்கள் நடுத்தர வகுப்பு மக்களின் ஆதர வைப் பெரிதும் நாடினர். உழவுப் புரட்சியின் காரண மாகவும், தொழிற் புரட்சியின் காரணமாகவும் பல புதுச் செல்வர்கள் முகிழ்த்தனர். அவர்களும் பழைய செல்வர்களை விரும்ப வில்லை. நடுத்தர வகுப்பு மக்களும் தங்களது சிறப்பினைப் படிப்படியாக உணர்ந்தனர். கால்வீனிய சமயம் போன்றவை அவர்களது உரிமை வேட்கையினை மிகுதிப்படுத்தின. மெல்ல மெல்ல அவர்களும் கொடுங்கோன்மையினை எதிர்க்கத் தலைப் பட்டனர். இங்கிலாந்தில் அவர்கள் ஸ்டுவர்ட் அரசர்களின் கொடுங் கோன்மையை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தித் தங்களது உரிமைகளை நிலைநாட்டிக்கொண்டனர். கடல் வணிகம் காரண மாகப் பெரும் பொருளீட்டிய இவர்கள் பாராளுமன்ற உறுப்பினர் களாகி அரசர்களைப் பெரிதும் எதிர்த்து மக்களின் உரிமைக்காகப் போராடினர். ஃபிரான்சிலும் இந்நிலையே இருந்தது. திறமையற்ற, நேர்மையற்ற, ஊழல் மிக்க மன்னராட்சியை அகற்றினாலன்றி, தாங்கள் முன்னேற இயலாதென நடுத்தர வகுப்பு மக்கள் உணர்ந்தனர். புரட்சியும் செய்து 1789-ல் தங்கள் உரிமையை நிலைநாட்டிக்கொண்டனர்.

ஃபிரெஞ்சுப் புரட்சியின்மூலம் செல்வாக்குப் பெற்ற நடுத்தர வகுப்பினர், அங்கு மன்னராட்சியினையும் அகற்றினர்; சிறப் புரிமைகள் அனைத்தையும் அகற்றினர். அடிமை முறையினையும் அவர்கள் அகற்றினர். நிலமானிய உரிமைகளனைத்தும் செல்வர் களிடமிருந்து பறிக்கப்பட்டன. செல்வர்களின் நிலங்களும் பறிக்கப்பட்டு எளிய உழவர்களுக்கு வழங்கப்பட்டன. கத்தோலிக்க சமயமும் அகற்றப்பட்டுப் பகுத்தறிவுச் சமயமும் புகுத்தப்பட்டது. ஐரோப்பாவெங்கும் ஒரு மாபெரும் மலர்ச்சி தோன்றியது. உரிமையும், சமத்துவமும் ஐரோப்பாவின் பொதுச் சொற்களாயின. முற்போக்குள்ளம் கொண்ட அனைவரும் இம் மாற்றத்தினை வரவேற்றனர். ஆயினும், இச் சமுதாய மாற்றத்தினைப் பழைமை யில் பற்றுமிக்க ஐரோப்பியப் பிற்போக்கு அரசுகள் விரும்பவில்லை. ஃபிரெஞ்சுப் புரட்சியினை முறியடித்தாலன்றித் தாங்கள் அமைதி

யுடன் வாழ்தல் அரிதெனக் கருதி, கூட்டணியொன்றனை நிறுவிப் புரட்சியையொடுக்க முற்பட்டனர். அதனைக் காக்க வந்த நெப்போலியனையும் வீழ்த்த விரும்பின அப் பிற்போக்கரசுகள். கடைக்காரர்கள் நாடான இங்கிலாந்து நீங்கலாக அனைத்து ஐரோப்பிய நாடுகளையும் தனது காலடியில் கிடத்தியிருந்த நெப்போலியனும் இறுதியில் 1814-ல் தோற்கடிக்கப்பட்டான்.

நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பின்னர், ஃபிரெஞ்சுப் புரட்சிக் கெதிரான மாறெதிர்ச் செயல்கள் (Reaction) தலைதூக்கின. வெற்றிகொண்ட வல்லரசுகள் அனைத்தும் புரட்சிக் கருத்துகளை எதிர்த்துக் கூட்டமைப்பொன்றையும் நிறுவிக் கொண்டன. அக்கூட்டமைப்பு புரட்சிக் கருத்துகளை எதிர்த்துச் செயல்படவும் தொடங்கியது. 1789-ல் புரட்சிக்கு முந்திய ஐரோப்பாவை மீண்டும் உருவாக்க அக் கூட்டணி முயன்றது. இக் கூட்டணி தெய்விக உரிமைக் கோட்பாட்டில் நம்பிக்கை மிக்க பழைய அரசுகளையே ஆதரித்தது. பிற்போக்கில் நம்பிக்கை மிக்க செல்வர்களையும் சமயவாதிகளையும் அது ஊக்குவித்தது. பழைய சமுதாய முறையினையே ஏற்புடையதாக அது ஏற்றது. பழைமையில் ஊறிய ஆஸ்திரியாவும், ரஷ்யாவும், பிரஷ்யாவும் ஐரோப்பாவுக்குத் தலைமையேற்றன.

பழைமை மீண்டும் வென்றது உண்மை. ஆயினும், புதுமை முற்றிலும் தோற்கடிக்கப்படவில்லை. ஐரோப்பாவென்ற பேராற்றில் பழைய கருத்துகள் என்ற வெள்ளத்துடன் புதிய கருத்துகளும் கலந்தோடின. பழைய கருத்துகளென்னும் பெரு வெள்ளத்தின் பேரிரைச்சலுக்கிடையே புதுக் கருத்துகளென்ற வெள்ளமும் அதன் ஆழ்பகுதியில் அமைதியாக ஓடிற்று. அவ் வெள்ளத்தின் ஓட்டத்திற்குத் தடைபோட்டபோதெல்லாம் அது பேரிரைச்சலோடு மேலே வந்தது. 19ஆம் நூற்றுண்டு முழுவதிலும் பழைமையும் புதுமையும் மோதிக்கொண்டன. 19ஆம் நூற்றுண்டின் முற்பகுதி முழுவதிலும் பழைமையே வென்றது. அந் நூற்றுண்டின் பிற்பகுதியில் பழைமை சோர்ந்துபோயிற்று. புதுமை புதுப் பொலிவு பெற்று வெற்றியும் பெற்றது. இவ் விரண்டுக்குமிடையே ஏற்பட்ட போராட்டம்தான் 19ஆம் நூற்றுண்டு ஐரோப்பிய வரலாறுகும்.

# பொருளடக்கம்

# 1. வியன்ன மாநாடு (1815)

உலக வரலாறு கண்ட மாவீரர்களில் ஒருவரான நெப்போலியன், ஐரோப்பியக் கூட்டணிப் படைகளால் 1813-ல் லைப்சிக் (Leipzig) என்ற வரலாற்றுச் சிறப்புமிக்க போர்க்களத்தில் தோற்கடிக்கப்பட்டார். அரும்பாடுபட்டு நெப்போலியன் எழுப்பிய அழகும் பொலிவும் மிக்க அவரது மாளிகை அத் தோல்வியால் சரிந்து வீழ்ந்தது. அத்துடன் நெப்போலியனைத் தோற்கடிக்கவே இயலாது என்ற கதையும் பொய்த்தது. வெற்றிக் களிப்பில் திளைத்த ஐரோப்பியக் கூட்டணி நாடுகள், ஃபிராங்க்பர்ட் (The Treaty of Frank Furt) உடன்பாட்டின்மூலம், அத் தோல்விக்குப் பின்னரும் நெப்போலியனே தொடர்ந்து ஃபிரான்சின் அரசராக இருக்கலாமென இசைவு தெரிவித்தன. பெல்ஜியம், ஸ்வாய், ரைன் பகுதிகளில்கூட, நெப்போலியன் மேலாண்மையை அவை பெருந்தன்மையுடன் ஏற்றுக்கொண்டன. அவற்றின் வேண்டுகோளை நெப்போலியன் முற்றிலும் ஏற்றுக்கொண்டு, அவற்றுடன் அவர் ஒத்துழைப்பாரென நம்பின. இந் நம்பிக்கை அவை நெப்போலியனைச் செவ்வையாகப் புரிந்துகொள்ளவில்லை என்பதற்கு ஒரு சான்றாய் விளங்குகிறது. உயர்வில் ஒரு மனிதன் உயர்ந்து விளங்குவது பெரிதல்ல. தாழ்வில் ஒருவரது உளப்பாங்கே அவரது உண்மையான பண்பினை விளக்குவதாகும். தாழ்விலும் நெப்போலியன் தாழ்ந்துபோக மறுத்து, அவ்வுடன்பாட்டிற்கு உடன்படவில்லை. ‘ஒரு முழ நிலத்தினை இழப்பதினும் சாவே சாலச் சிறந்தது’ எனப் பகர்ந்து அவ்வுடன்பாட்டினை ஏற்க உறுதியாக மறுத்தார்.

வல்லரசுகள் அதனால் பெரிதும் ஏமாந்தன. 1814ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் அவை சவ்மான்ட் என்ற இடத்தில் கூடி, சவ்மான்ட் உடன்பாடும் (The Treaty of Chaumont) செய்து கொண்டன. நெப்போலியனை முற்றிலும் தோற்கடித்து அவரைப் ஃபிரெஞ்சு அரியணையிலிருந்து அகற்றுவதென முடிவு செய்தன. அத்துடன் ஐரோப்பிய நாட்டெல்லைகளைத் தக்கவாறு மாற்றி அமைத்து அதனை இருபதாண்டுகளுக்கேனும் எத்தகைய மாற்றமுமின்றிக் கட்டிக் காப்பதாயும் அவை உறுதிபூண்டன. பின்னர் தங்களது கூட்டணிப் படைகளை அவை ஃபிரான்சுமீது ஏவின.

நெப்போலியனும் அவரது வீரர்களும் மாபெரும் வீரத்துடன் போராடியும் தங்களது தாயகத்தினைக் காப்பாற்றும் வலிவிழந்து பின்வாங்கினர். அவை ஐரோப்பிய எழிலரசி எனப் போற்றப்பட்ட பாரிஸைக் கைப்பற்றின. உடலால் தளர்ந்து உள்ளத்தால் பெரிதும் சோர்வுற்றுப்போன மாவீரன் நெப்போலியன், கூட்டணிகள் வழங்கிய ஃபான்டேன்புளோ என்ற உடன்பாட்டினை (The Treaty of Fontainebleau) ஏற்றுக்கொண்டார். ஃபிரெஞ்சு அரியணைக்குத் தாமோ அல்லது தமது வழித்தோன்றல்களோ இனி உரிமை கொண்டாடப் போவதில்லை என்ற நிபந்தனையினை அவர் ஏற்றுக் கொண்டார். பேரரசர் என்ற பட்டத்துடன் எல்பாத் தீவினை மட்டும் ஆள்வது என்ற வெற்றி பெற்றோரது நிபந்தினையினையும் ஏற்றுக்கொண்டார். அவருக்கு இழப்பீடு போன்று ஆண்டு ஒன்றுக்கு, இருபது லட்சம் ஃபிராங்குகள் வழங்கப்படுமென்றும் அவ்வுடன்பாடு கூறியது. அவர்தம் வாழ்க்கைத் துணைவியும் ஆஸ்திரிய இளவரசியுமான லூயி மேரி என்பாருக்கு இத்தாலியில் பார்மா என்ற சிற்றரசு (Duchy of Parma) வழங்கப்பட்டது. இவ்வுடன்பாட்டிற்குப் பின்னர் ஒரு மாபெரும் புயலென ஐரோப்பாவையே ஆட்டிப் படைத்த அஞ்சா நெஞ்சம் கொண்ட நெப்போலியன் 1814ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களில் எல்பாவுக்கு அனுப்பிவைக்கப்பட்டார்.

### முதலாம் பாரிஸ் உடன்பாடு

நெப்போலியனை வீழ்த்திய ஐரோப்பியக் கூட்டணி நாடுகள் பெரிதும் மகிழ்ந்தன. மாபெரும் பூகம்பம் ஒன்றிலிருந்து ஐரோப்பாவினை மீட்ட பெருமையோடு திகழ்ந்தன அவை. அடிபட்ட புலியெனக் கிடந்த ஃபிரான்சை எவ்வாறு ஆற்றுப்படுத்துவது என்ற கவலை அவற்றை ஆட்கொண்டது. ஃபிரான்சை இனித் தங்கள் விருப்பம் போலாடும் ஒரு கைப்பாவையாகவே வைத்திருக்க அவை விழைந்தன. மீண்டும் அது ஒரு மாபெரும் வல்லரசாக மாறுமலிருக்க அவை விழிப்புடனிருந்து செயலாற்ற விரும்பின. முறைமைக் கொள்கைவழியே (The Principle of Legitimacy) அவை இயங்குதல் தக்கதென்ற, தாலிரான் (Tallerand) என்பாரது கூற்றினை அவை அவ்வாறே ஏற்றுக்கொண்டன. அதனைச் செயல் படுத்த 1814ஆம் ஆண்டு, மேத் திங்களில் அவை முதலாவது பாரிஸ் உடன்பாட்டினையும் 18ஆம் லூயியுடன் செய்துகொண்டன. அதன் படி அவர் ஃபிரான்சின் மன்னராக்கப்பட்டார். 1792-ன் எல்லைகள் பிரான்சுக்கு வழங்கப்பட்டன. ஃபிரான்சுமீது போர் இழப்பீடேதும் சுமத்தப்படவில்லை. ஃபிரான்சு மிக்க பெருந்தன்மையுடன் நடத்தப் பெற்றதற்குத் தாலிரான் என்பாரே காரணம் என்பர். அவரது

முறைமைக் கொள்கை ஃபிரான்சைப் பெரிதும் காப்பாற்றியது எனில் மிகையாகாது.[1]

### இம் மாநாட்டில் பங்கேற்ளோர்

1648-ல் நிகழ்ந்த வெஸ்ட்ஃபேலியா உடன்பாட்டிற்குப் (The Treaty of West Phalia) பின்னர் இம் மாநாடே சிறப்பு மிக்கதெனப் போற்றப்படுகிறது. ஐரோப்பிய நோயாளி எனக் கருதப்பட்ட துருக்கி நீங்கலாகப் பிற ஐரோப்பிய நாடுகளனைத்தும் இம் மாநாட்டில் பங்கேற்றன. பேரரசர்களும், குறுநில மன்னர்களும், செல்வர்களும், அரசியல் நுட்பம் மிக்கோரும், கற்ளோரும், மற்ளோரும் பங்கேற்று இம் மாநாட்டினைச் சிறப்பித்தனர்.

இம் மாநாட்டினை ரஷ்யப் பேரரசர், முதலாம் சார் அலெக்ஸாந்தர், ஆஸ்திரியப் பேரரசர் முதலாம் ஃபிரான்சிஸ் போன்ற பேரரசர்கள் பங்கேற்று அலங்கரித்தனர். இம் மாநாட்டிலேயே முதலாம் சார் அலெக்ஸாந்தர்தான் புகழ் மிக்கவரும் புதிர் மிக்கவரும் எனப் போற்றப்பட்டார்.[2] நெப்போலியன் மீது அவர் கண்ட வெற்றியும் அவரது முற்போக்குக் கொள்கை குறித்த போலி வழிபாடும் அவரை அம் மாநாட்டில் பெரிதும் பாராட்டுக்குரியவராக்கின. அது மட்டுமன்றி அவரது பெரும்படையும் அவரது பெரும் புகழுக்குக் காரணமாயமைந்தது. தமது செல்வாக்கினுல் அவர் இம் மாநாட்டில் மிக முக்கியமானவர்களில் ஒருவராய்த் திகழ்ந்தார். கெடல்பி என்ற வரலாற்று வல்லுநரின் கூற்றுப்படி

[1] முதலாவது பாரிஸ் உடன்பாட்டின்மூலம் ஃபிரெஞ்சு விவகாரங்களை முடிவு செய்துகொண்ட பின்னர், வியன்னுவில் மாநாடு ஒன்றினைக் கூட்டிப் பிற செய்திகளை ஆராய வல்லரசுகள முடிவு செய்தன. அம் முடிவுப்படி 1814ஆம் ஆண்டு, அக்டோபர் திங்களில் ஆஸ்திரியத் தலைநகரான வியன்னுவில் இம் மாநாடு கூடியது, இதில் மொத்தம 216 உறுப்பினர்கள் பங்கேற்றனர். இம் மாநாடு நடந்துகொண்டிருந்தபோதே பேரரசர் நெப்போலியன் எல்பாவிலிருந்து தப்பி வந்து மீண்டும் 1815ஆம் ஆண்டு, மார்ச் திங்கள், 15ஆம்நாள் ஃபிரான்சின் பேரரசரானுர், 18ஆம்லூயி மன்னர் பாரிஸிலிருந்து தப்பியோடினுர். மீண்டும் அரியணையேறிய நெப்போலியன் 100 நாள்கள் மட்டுமே ஆளமுடிந்தது. மீண்டும் அவர் 1815ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 18ஆம் நாள் கூட்டணிப் படைகளால் வாட்டர்லூ (Waterloo) என்ற போர்க்களத்தில் தோற்கடிக்கப்பட்டார். அவர் செயின்ட் ஹெலினுத் தீவுக்கு நாடு கடத்தப்பட்டார். மீண்டும் அவருக்குப் பின்னர் 18ஆம் லூயி மன்னரே இரண்டாவது பாரிஸ் உடன்பாட்டின்மூலம், ஃபிரெஞ்சு மன்னரானுர். இதுபோழ்து ஃபிரான்சுக்கு 1790ஆம் ஆண்டின் எல்லைகளே வழங்கப்பட்டன. போர் இழப்பீடாகப் பெருந்தொகையினையும் அது வழங்க நேரிட்டது. ஐரோப்பியக் கூட்டணி நாடுகள் 18ஆம் லூயி மன்னரோடு செய்துகொண்ட இரண்டாவது பாரிஸ் மாநாட்டினை ஃபிரெஞ்சு மக்கள் முற்றிலும் வெறுத்தனர் என்பது நாம் ஈண்டு நினைவுகூர வேண்டிய ஒன்ருகும்.

[2] Ketelbey, C. D. M., *A History of Modern Times*, p. 45.

முதன்முறையாக ரஷ்யா, ஐரோப்பிய அரங்கில் தலைமை பெற்றது.[1] ஆயினும், முதலாம் சார் அலெக்ஸாந்தர் இவ் வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக்கொள்ளத் தவறிவிட்டார். அரசியல் நுட்பமற்ற அவர் அரசியலரங்கில் செவ்வையாக இயங்க இயலவில்லை. அவரது முரண்பாடுமிக்க பண்பு நலன்கள் அவர் வெற்றி பெற இயலாமற் செய்தன.

ஆஸ்திரியப் பேரரசரான முதலாம் ஃபிரான்சிஸ் என்பாரும் இம் மாநாட்டில் பலரது கவனத்தைக் கவர்ந்தார். இம் மாநாட்டினை நடத்தும் பேரரசர் என்ற காரணத்தால், இவரும் இம் மாநாட்டில் மிக முக்கிய இடம் பெற்றார். ஆயினும், செயலாண்மையோ சூழ்ச்சித் திறனோ அற்ற காரணத்தால், இவரால் இம் மாநாடு பாதிக்கப்பட வில்லை. பிற்போக்குத் தன்மையும், குறுகிய நோக்கும் மிக்க இவர் தமது வாழ்நாள்களில் நிகழ்ந்த மிக முக்கிய நிகழ்ச்சிகளால் எத்தகைய படிப்பினையும் பெறவில்லை. பழைமையே சிறந்தது என்பதே இவர்தம் கோட்பாடு. ஆதலின், காலத்தின் போக்கினை இவரால் செவ்வையாகப் புரிந்துகொள்ள இயலவில்லை. இவர் இம் மாநாட்டில் முற்போக்குக் கருத்துகளுக்கு ஒரு முட்டுக் கட்டையாகவே திகழ்ந்தார்.

இம் மாநாட்டில் பங்கேற்ற மற்றுமோர் அரசர் மூன்றாம் வில்லியமாவார். பிரஷ்ய அரசரான இவர் அச்சம் நிறைந்தவராயும், மந்தகதியில் செயலாற்றுபவராயும், பழைமையில் பற்றுமிக்கவராயும் திகழ்ந்தார். புதிய கருத்துகளுக்கும் முற்போக்குச் செயலுக்கும் மாறுபட்ட இவர் இம் மாநாட்டில் பிற்போக்குக் கொள்கைகளை நிலைநாட்ட முயன்றதில் வியப்பேதுமில்லை. இவர்களுடன் டென் மார்க் அரசரும், பவேரியா, உர்டம்பர்க் போன்ற இடங்களின் குறுநில மன்னர்களும் இம் மாநாட்டில் கலந்துகொள்ளும் வாய்ப் பினைப் பெற்றனர்.

இம் மாநாட்டிற்கு இங்கிலாந்தின் சார்பாகத் தொடக்கத்தில் காசல்ரீயும், பின்னர் வெல்லிங்டன் சீமானும் வந்திருந்தினர். காசல்ரீ இம் மாநாட்டில் மாபெரும் பங்கேற்றுப் பணியாற்றினார். இங்கிலாந்தின் முதன்மை நிலையும் அதன் கடற்படை வன்மையும் அவருக்குப் பெரிதும் துணைநின்றன. 1812-ல் இவர் இங்கிலாந்தின் வெளித்துறையமைச்சராகப் பதவி ஏற்றபோது ஐரோப்பிய நாடுகள் வேறுபட்டுக் கிடந்தன. ஒன்றிணைந்து நெப்போலியனுக்கெதி ராகப் போராடும் நிலையிலில்லை அவை. இந்நிலையில் பதவிக்கு வந்த

[1] Ketelbey, p. 145.

இவர் ஐரோப்பிய நாடுகள் பலவற்றிற்குச் சென்று பிரிவுபட்டுக் கிடந்த அனைத்து நாடுகளையும் ஒன்றிணைத்தார். நெப்போலியனை எதிர்த்து மாபெரும் கூட்டணி யொன்றினை நிறுவிய பெருமை இவரையே சாரும். 1814-ல் வியன்னு மாநாட்டில் இங்கிலாந்துக் கென்று ஒரு தனியிடத்தை நிறுவியவர் இவரேயாவார். ஐரோப் பாவில் நடுநாயகமாகத் திகழ்ந்த இங்கிலாந்தின் உறுப்பினரான இவர் அம் மாநாட்டில் ஒரு மிக முக்கிய நடுவராய்த் திகழ்ந்தார். அதுமட்டுமன்றி ஐரோப்பாவுக்கு ஒரு பொது நிறுவனம் வேண்டு மென்பதை வலியுறுத்தி அதற்கு அடிக்கல் நாட்டியவரும் இவரே யாவார். பன்னுட்டு அரசியலரங்கில் கலந்து ஆய்வு முறையின் முக்கியத்தினை வலியுறுத்தியவரும் இவரேயெனில் மிகையன்று. வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளில் (Settlement) இவரது பணி சிறப்புமிக்கது. ஃபிரான்சு இம்மாநாட்டில் மிக்க பெருந்தன்மை யுடன் நடத்தப்பெற்றதற்கு இவரே காரணமாவார். 'வெற்றி வாகை சூடி, பெருமைப்படுவதல்ல நமது பணி; உலகுக்கு அமைதியினை நல்குவதே நல்ல பணி' என்பதே இவர்தம் கோட்பாடாகும்.

காசல்ரீ ஃபிரான்சிடமிருந்து அதன் பகுதிகளை வன்முறையில் பறிப்பதைப் பெரிதும் வெறுத்தார். இவர் லிவர்பூல் என்ற தம் உற்ற நண்பருக்கு எழுதிய கடிதத்தில் இதனையே வலியுறுத்தியுள்ளார். இவரது பெருநோக்கும் பெருந்தன்மையும் மாநாடு வெற்றி பெறுவ தற்குப் பெரிதும் துணைநின்றன. தாம் மட்டுமன்றிப் பிறரும் பெருந்தன்மையுடன் நடந்துகொள்ளவேண்டுமென இவர் வலி யுறுத்தினுர். இவரது பெருந்தன்மையால் ஃபிரான்சு பெரிதும் காப் பாற்றப்பட்டது. இவர் விரும்பியவாறே பிற ஐரோப்பிய நாடுகளும் ஃபிரான்சை அனுதாபத்தோடு நடத்தின. இத்தகைய சிறந்த பண்பு நலன்கள் மிக்க காசல்ரீ, லாயிட் ஜார்ஜ் என்பாரினும் சிறப்போடு விளங்கினுர். முதல் உலகப் போருக்குப் பின்னர் லாயிட் ஜார்ஜ் பங்கேற்று நடத்திய வெர்சாய் உடன்பாடு 20 ஆண்டுகள்கூட, நிலைக்கவில்லை. ஆயினும், காசல்ரீயும் பிறரும் செய்துவைத்த வியன்னு ஏற்பாடுகள் ஒரு நூற்றாண்டுக் காலம் ஐரோப்பாவில் அமைதியைக் காத்தது.

காசல்ரீயினும் சிறப்புறத் திகழ்ந்த ஒருவர் மாநாட்டில் உண்டெனில் அவர் மெட்டர்னிக் என்பாரேயாவார். கி. பி. 1815-லிருந்து 1848 வரை ஐரோப்பிய நாடுகள் அனைத்தையும் ஆட்டிப்படைத்த மாமனிதர் அவரேயாவார். இவர் காலத்தை 'மெட்டர்னிக் காலம்' என்றும், அவர் பின்பற்றிய முறையினை 'மெட்டர்னிக் முறை' என்றும் அழைப்பர் வரலாற்று வல்லு நர்கள். இதுவே இவரது பெருமைக்கு நல்லதொரு சான்றாகும்.

வரலாற்றாசிரியர் ஹேசன் (Hazen) என்பார் கூற்றுப்படி இவர்தாம் 19ஆம் நூற்றாண்டில் ஆஸ்திரியா உருவாக்கிய தலைசிறந்த அரசியல் வல்லுநராவார்;[1] அத்துடன் அரசியல் நுட்பமும் மிக்கவர். மேலும் மிக அழகிய தோற்றமும் கொண்டவர். இவர் ஒரு பெண்ணாக இருந்திருப்பின் இவரையே நான் காதலித்திருப்பேன் என்ற நெப்போலியனின் கூற்று இதனை மெய்ப்பிக்கும். இவ்வாறு அனைத்து நலன்களும் கொண்ட இவர் ஐரோப்பிய அரசியல் அரங்கில் சீருடனும் சிறப்புடனும் திகழ்ந்ததில் வியப்பேதுமில்லை. நெப்போலியனை வீழ்த்தியதில் பெரும் பங்கேற்ற இவர் தம்மை 'வெற்றி கொண்டவரை வெற்றிகொண்டவர்' (The Conqueror of the Conqueror) எனக் கருதிக்கொண்டார். அவப்பேறு காரணமாக இத்துணைச் சிறப்பியல்புகளைக் கொண்ட இவர் ஒரு பிற்போக்காளராய்த் திகழ்ந்தார். மக்களாட்சியினையும், புதிய கருத்துகளையும், புரட்சியினையும் இவர் முற்றிலும் வெறுத்தார். ஆயினும், இவர் தமது ஒப்பற்ற திறமையால், பெருநீர்ச்சுழியான வியன்னாவில் ஒரு மீனைப் போன்று எளிதாக நீந்தினார்.

இவர் ஒரு தற்புகழ்ச்சியாளர் எனினும், ஐரோப்பாவினை நன்கு புரிந்துவைத்திருந்தார். அழிந்துவரும் ஓர் அமைப்பு முறைக்குத் தான் ஒரு பற்றுக்கோடு எனப் பெருமைப்பட்டுக்கொண்டார். 'எனது நிலை தனித்தன்மை மிக்கது. அனைத்துக் கண்களும் என்னையே நோக்குகின்றன. அனைத்தும் என்னையே எதிர்நோக்கி நிற்கின்றன' என இவர் அடிக்கடி கூறுவதுண்டாம். 1848ஆம் ஆண்டு நிகழ்ந்த பிப்ரவரிப் புரட்சிக்குப் பின்னரும் இவர் ஒரு சிறிதும் மாறவில்லை. அதன் பின்னரும் 'எனதுள்ளம் ஒருபோதும் தவறு செய்யாது' என உறுதியாய் நம்பினார் இவர்.

புரட்சியினை முற்றிலும் வெறுத்த இவர் புரட்சிகளைத் தடுத்தலையே தமது வாழ்நாளின் பெருங் குறிக்கோளாய்க் கொண்டிருந்தார். 'புரட்சி ஒரு தொற்று நோய்; அது குணப்படுத்தப்படல் வேண்டும். அது ஓர் எரிமலை; அவிக்கப்படல் வேண்டும். அது உடலின் ஓர் உணர்ச்சியற்ற பகுதி; பழுக்கக்காய்ச்சிய இரும்பால் சுடிட்டு அதனைப் போக்குதல் வேண்டும். அது ஐரோப்பிய சமூக அமைப்பை விழுங்கவல்ல பல தலைகளையுடைய ஒரு நச்சுப் பாம்பு' என்பது அவர்தம் கூற்று. பாராளுமன்றங்கள் பயனற்றவையென அவற்றை இவர் வெறுத்தார். பாராளுமன்றத்தினைக் கொண்ட இங்கிலாந்து நாட்டினை இவர் ஓர் அரசாங்கமில்லாத நாடு எனக் கருதினார். பாராளுமன்ற அரசை இவர் ஓர் அரசென

[1] Hazen—Europe since—1815, p. 14.

ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஐரோப்பாவின் பழைய நிலையே சிறந்தது என்பதே இவர்தம் கோட்பாடாயிருந்தது. ஃபிரெஞ்சுப் புரட்சியால் விளைந்த துன்பங்களும், நெப்போலியஞல் ஐரோப்பாவுக்கு நிகழ்ந்த அல்லல்களும் இவருக்கு உற்ற துணையாய் நின்றன. வியன்ஞ மாநாட்டில் இவர் பெரிதும் வெற்றி பெற்றதற்குக் காரணம், இவரது அரசியலறிவாலும் பிரெஞ்சுப் புரட்சியாலும் நெப்போலியஞலும் விளைந்த துன்பங்களுமே பெருங் காரணங்களாகும். இவர் புரட்சியாளர்களைச் சிறையிலிட்டார். ஆயினும், புரட்சிக் கருத்துகளைச் சிறைப்படுத்த முடியவில்லை. புதிய கருத்துகளைக்கொண்ட ஒரு பெரும் புது வெள்ளத்தையெதிர்த்து எதிர் நீச்சலிட்டார். இறுதியில் வலிவுமிக்க அவ் வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டார். காலப்போக்கினை அறிந்துகொள்ள மறுத்துத் தோல்வியுற்றோர்களில் இவரும் ஒருவராவார்.

அடுத்து, மாநாட்டின் கவனத்தைக் கவர்ந்தவர்களில் தாலிரான் என்பாரும் ஒருவராவார். தோற்றுப்போன ஃபிரான்சினது பிரதிநிதியெனினும், இவரும் இம் மாநாட்டில் பெரும் பங்காற்றினர். சோம்பல்மிக்க விலாங்கு மீனைப் போன்ற (Slippery like eel) தன்மைமிக்க இவரும் அரசியல் நுட்பமும், செயலாற்றுந் திறனும், வஞ்சகத் தன்மையும் கொண்டவர். மாற்றார் குறையைத் தமது நலனுக்குப் பயன்படுத்துவதில் வல்லவர் இவர். இவரது திறமையாலும் அரசியல் நுட்பத்தாலும் தோற்றுப்போன நாடான ஃபிரான்சும், வல்லரசுக் கிணையாக வியன்ஞ மாநாட்டில் முக்கிய உறுப்பினராய்க் கருதப்பட்டது. வல்லரசுகளுக்கிடையே நிலவிய கருத்து வேறுபாடுகளை நன்கு பயன்படுத்திக்கொண்டு, தமது தாயகம் சீர்குலையாமல் பார்த்துக்கொண்ட பெருமை இவரையே சாரும்.

### மாநாடு எதிர்நோக்கிய பிரச்சினைகள்

இங்கிலாந்து, ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா ஆகிய இந் நான்கு நாடுகளுமே இம் மாநாட்டில் பெரும் பங்கேற்று நடத்தின. நெப்போலியனை இவ் வல்லரசுகளே வீழ்த்திய காரணத்தால், அவ் வீழ்ச்சிக்குப் பின்னர் புதிய ஐரோப்பாவை உருவாக்கும் பொறுப்பும் அவற்றிற்கே ஏற்பட்டது. சிறு நாடுகள் இம் மாநாட்டில் மிகுதியாய்ச் செயலாற்ற இயலவில்லை. அவை பெரும் வல்லரசுகளின் கைப்பாவைகளாகவே விளங்கின.

வியன்ஞ மாநாடு எதிர்நோக்கிய பிரச்சினைகளில் தலையாயது ஃபிரான்சினைப் பற்றியதேயாம். அந் நாட்டினை என்ன செய்வது என்பதே இம் மாநாட்டுக்குப் பெரும் பிரச்சினையாயிருந்தது. அங்கு எத்தகைய அரசை நிறுவுவது என்பதில் அவற்றுக்கிடையே

கருத்து வேறுபாடுகள் தோன்றின. நெப்போலியனே தொடர்ந்து மன்னராக இருக்கலாம் என்பது ஒருசாரார் கூற்று. நெப்போலியனைக் கண்டு அஞ்சிய பல நாடுகள் அதனை ஏற்க மறுத்தன. பின்னர், நெப்போலியனின் மகனை 'ரோமப் பேரரசரின் தலைமையில் ஒரு பகர ஆட்சியினை (Regency) நிறுவலாமெனப் பலர் நினைத்தனர். அவ்வாறு நிறுவப்படும் பகர ஆட்சிக்கு யார் தலைமையேற்பது என்பதில் கருத்து வேறுபாடுகள் தோன்றிய காரணத்தால், அம் முறையும் நடைமுறைக்கொவ்வாதுபோனது. சிலர் ஃபிரெஞ்சுப் படைத் தலைவரான பெர்னேடோ (Bernadotte) என்பார் தலைமையிலொரு படையாட்சியினை (Military Regime) நிறுவ விழைந்தனர். பெர்னேடோ ரஷ்யாவின் உற்ற நண்பர் என்று கருதப்பட்டவர். ஆதலின், அதனையும் பலர் ஏற்கவில்லை. பலர் இப் பிரச்சினையைப் ஃபிரெஞ்சு மக்களுக்கே விட்டுவிடலாமெனவும் எண்ணினர். மீண்டும் நெப்போலியனே எனில், மீண்டும் வலிவுள்ள ஆட்சி ஃபிரான்சில் அமையும். அதன் விளைவாக வல்லரசுச் சமநிலை (Balance of Power) பாதிக்கப்படுமென அஞ்சி அம் முடிவு கைவிடப்பட்டது. ரோமப் பேரரசன் தலைமையிலான பகர ஆட்சியெனில், அவர் ஆஸ்திரியா நாட்டுறவினர் என்ற முறையில் ஆஸ்திரிய ஆதிக்கத்திற்கு ஆட்படுவரோ என்ற அச்சம் காரணமாக, அதுவும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. பெர்னேடோ தலைமையிலமையும் படையாட்சியும் மறுக்கப்பட்டது. பெர்னேடோ தலைமையிலான ரஷ்ய ஆதிக்க ஆட்சியினையும் பலர் ஏற்கத் தயங்கினர். ஃபிரெஞ்சு மக்களிடமே ஆட்சியினை ஒப்படைக்கலாமென்ற கருத்தினையே பலர் எதிர்த்தனர். புரட்சிக்காரர்களிடம் ஆட்சியினை ஒப்படைத்தல் தக்கதன்று எனப் பலர் அஞ்சினர். இவை அனைத்தையும் நோக்குமிடத்து 18ஆம் லூயி மன்னர் தலைமையிலமையும் முறைமை வழியாட்சியே (Legitimate Rule) சிறந்தது என அனைவரும் கருதினர். இறுதியில் 18ஆம் லூயி மன்னரின் தலைமையில் மீண்டும் பழைய ஆட்சியினை அங்கு நிறுவுவதென முடிவு செய்யப்பட்டது.

அடுத்து, போரில் கவர்ந்த பகுதிகளை எவ்வாறு பகிர்ந்துகொள்வது என்பதில் வல்லரசுகளுக்கிடையே கருத்து வேறுபாடு தோன்றியது. பிரஷ்யா, சாக்சனியைப் பெற விரும்பியது. ரஷ்யா போலந்தைப் பெற முனைந்தது. இதனை இங்கிலாந்து, ஃபிரான்சு, ஆஸ்திரியா போன்ற நாடுகள் ஏற்கவில்லை. இதனைக் கண்ணுற்ற பிரஷ்யாவும் ரஷ்யாவும் ஒன்று சேர்ந்துகொண்டு தங்களது கொள்கைகளை வலியுறுத்தத் தொடங்கின. பிரஷ்யா தன் வசமுள்ள போலந்துப் பகுதிகளை ரஷ்யாவுக்கு வழங்கவும் அதற்கு ஈடாக சாக்சனி முழுவதையும் பெறத் திட்டமிட்டது. அத் திட்டத்தினைத்

ரஷ்யாவும் வரவேற்றது. பிரஷ்யா சாக்சனி முழுவதையும் அடைந்து வலிவும் பொலிவும் பெற்றுத் திகழப்போவதை மெட்டர்னிக் விரும்பவில்லை இதனால், பிரஷ்யாவின் வலிமை மிகும். ஜெர்மனி யில் தமது ஆதிக்கம் குறையக்கூடுமென மெட்டர்னிக் அஞ்சினார். பிரஷ்யா, சாக்சனியைப் பெறுவதை இங்கிலாந்தும் விரும்பவில்லை. இதனால், ஹனோவர் பகுதி மீதான தனது ஆதிக்கம் பாதிக்கப்பெறு மென இங்கிலாந்து அஞ்சியது. போலந்து முழுவதையும் ரஷ்யா பெறுவதை இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும் எதிர்த்தன. ரஷ்யா, மிக்க வலிவுள்ள நாடாக மாறிவிடுமெனவும் அதனால் வல்லரசுச் சமநிலை பாதிக்கப்படுமெனவும் இவ்விரு நாடுகளும் கவலை கொண்டன. ஃபிரான்சும் அவற்றை ஆதரித்தது. இம் மூன்று நாடுகளும் ரஷ்யாவினை எதிர்த்து ரகசிய உடன்பாடொன்றும் செய்துகொண்டன. அப்போது நெப்போலியன் எல்பாச் சிறையி லிருந்து தப்பிவந்து மீண்டும் ஃபிரெஞ்சுப் பேரரசரானார். இம் மாபெரும் அறைகூவல் காரணமாக, மீண்டும் வல்லரசுகள் தங்கள் உட்பகையினை மறந்து ஒன்றுகூடின. மூன்றில் இரு பங்கு சாக்சனியைப் பிரஷ்யா பெறுவதையும், போலந்தின் பெரும் பகுதியினை ரஷ்யா பெறுவதையும் அவை ஏற்றுக்கொண்டன. வல்லரசுகளைக் குழப்பிய மாபெரும் பிரச்சனைகளில் இதுவும் ஒன்றாகும்.

இம் மாநாட்டின் மூன்றாவது பிரச்சினை, ஐரோப்பிய நாடுகளது எல்லைகளை எவ்வாறு பழைய நிலைக்குக் கொணர்வதென்பதாகும். ஃபிரெஞ்சுப் புரட்சியாளர்களின் போரும் நெப்போலியனது போர் களும் ஐரோப்பிய நாடுகளின் எல்லைகளை முற்றிலும் மாற்றிவிட்டன. இதனால், வல்லரசுச் சமநிலையென்பது இல்லாமற்போனது. புனித ரோமானியப் பேரரசு அகற்றப்பட்டுவிட்டது. பழைய ஜெர்மனி முற்றிலும் மாறி அவ்விடத்தில் ரைன் கூட்டரசு நிறுவப்பட்டிருந்தது. அதுபோன்றே வெஸ்ட்பேலியா அரசு, மாபெரும் வார்சா அரசு (The Grand Duchy of Warsaw) போன்ற புதிய அரசுகளை நெப் போலியன் உருவாக்கி ஐரோப்பிய எல்லைகளை முற்றிலும் மாற்றியிருந்தார். அவற்றை என்ன செய்வதென்பது பெரும் பிரச்சினையாக இருந்தது. ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்ற நாடுகளின் எல்லைகள் பன்முறை மாற்றப்பட்டுக் குழப்பத்தில் இருந்தன. அவற்றை எவ்வாறு பழைய நிலைக்கு மாற்றியமைப்பது? பல பழைய அரசர்கள் பதவியிழந்து அவல நிலையிலிருந்தனர். அவர் களை என்ன செய்வது ? புதியவர்கள் பலர் அரசர்களாக மாற்றப் பட்டிருந்தனர். அவர்களை என்ன செய்வது ? நெப்போலியப் போர்களால் பெரிதும் பொருளிழந்து கிடந்த ஐரோப்பிய நாடுகள் பலவற்றிற்கு எவ்வாறிழப்பீடு வழங்குவது ? மீண்டும் பழைய

ஆட்சியினை எவ்வாறு கொணர்வது ? புரட்சினை எவ்வாறு தடுப்பது ? ஐரோப்பாவுக்கு எவ்வாறு நிரந்தர அமைதியை வழங்குவது ? இவை யாவும் மாநாட்டை எதிர்நோக்கி நின்ற மாபெரும் பிரச்சினை களாகும்.

**மாநாட்டின் நோக்கங்கள்**

1. **மீண்டும் பழைய ஐரோப்பாவை உருவாக்குதல்** : ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் புதிய கருத்துகள் பல ஐரோப்பாவில் பரவி விரவி நின்றன. அதன் விளைவாக ஐரோப்பாவெங்கும் குழப்பங் களும் புரட்சிகளும் மிகுந்தன. இப் புரட்சிகளின் விளைவாக உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் போன்ற கருத்துகள் மக்கள் உள்ளத்தில் வேரூன்றி அதன் விளைவாக மன்னராட்சியினை நீக்கப் பல நாடுகளில் மாபெரும் முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் அதன் குழவியாக இருந்த நெப்போலியன், கடைக்காரர்கள் நாடான இங்கிலாந்தினைத் தவிர, பிற ஐரோப்பிய நாடுகளனைத்தையும் வென்று வெற்றிவாகை சூடித் திகழ்ந்தார். தன்னை எதிர்த்து அமைக்கப்பட்ட கூட்டணி களையும் முறியடித்து ஐரோப்பாவையே அல்லோலகல்லோலப் படுத்தினார் அவர். நெப்போலியனை வென்று ஐரோப்பாவைக் குழப்பத்திலிருந்து மீட்பது வல்லரசுகளின் கடமையானது. நான்காம் முறையாக நிறுவப்பட்ட கூட்டணி, நெப்போலியனை வெற்றிகரமாக முறியடித்தது. மீண்டும் புரட்சிக்கு முந்திய பழைய ஐரோப்பாவை உருவாக்கவும், நிரந்தர அமைதியினை நிறுவவும் அக் கூட்டணி நாடுகள் விரும்பின. பழைய ஐரோப்பாவை மீண்டும் நிறுவினால்தான், வல்லரசுச் சமநிலையைப் பேண முடியு மெனவும் அவை நம்பின.

2. **ஐரோப்பாவிற்கு நிரந்தர அமைதியை வழங்குதல்** : ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் ஐரோப்பா அமைதியின்றிக் காணப்பட்டது. மாபெரும் புரட்சிப் புயல்கள் பழைய ஐரோப்பிய அரசியல், சமுதாய முறைகளைப் பெரிதும் மாற்றிவிட்டன. அம் மாபெரும் புயல்களுக்குப் பின்னர் ஐரோப்பிய வல்லரசுகள் பெரிதும் வலுவிழந்துபோயின. அமைதியாக விளங்கிய ஐரோப்பிய அரசியலென்ற நீரை, இப் புதிய புரட்சிக் கருத்துகள் பெரிதும் கலக்கின. நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பிறகு, 1815-ல் கூடிய வியன்னா மாநாடு உயர்குடியினர் நடத்திய மாநாடு என் பதால், ஐரோப்பாவைப் பிடித்த நோய்க்குக் காரணம், இப் புரட்சிகளே என எண்ணியதில் வியப்பேதுமில்லை. அவை இப் புதிய கருத்துகளைத் தடுத்து நிறுத்தியும் புரட்சிகளை அடக்கியும்

நிரந்தர அமைதியினை ஐரோப்பாவிற்கு வழங்க விழைந்தன. ஆடம்பரம், ஆரவாரம், வெற்றிக் களிப்பிற்கிடையே கூடிய இம் மாநாடு, புரட்சியினைத் தடுத்து நிரந்தர அமைதியை நிறுவ முடிவு கொண்டது.

**3. ஃபிரான்சைச் சுற்றி வலுவுள்ள அரணமைத்தல் :** ஐரோப்பிய அமைதிக்கு ஊறு விளைத்தவை, ஃபிரான்சும் அதன் புரட்சிகளுமே யாகும். கி. பி. 1789 ஃபிரெஞ்சுப் புரட்சி பழைய ஐரோப்பிய முறைக்கே ஓர் அறைகூவலாக அமைந்தது. உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் போன்ற புதிய கருத்துகளைக் கண்டு ஐரோப்பிய வல்லரசுகளும், உயர் குடியினரும் பெரிதும் அஞ்சினர். தங்களது செல்வாக்கு, செல்வம், சிறப்புரிமைகள், பிறப்புரிமைக ளனைத்தும் பறிபோய்விடுமே என்ற அச்சம் அவர்களைப் பெரிதும் ஆட்கொண்டது. தங்களை அழிக்கவல்ல இப் புதிய கருத்துகளின் தாயகமான ஃபிரான்சை அவர்கள் பெரிதும் வெறுத்தனர். தங்களது அச்சத்திற்கும், ஐரோப்பிய சமூக அமைதி இன்மைக்கும், கூக்குரலுக்கும், கொந்தளிப்புக்கும் ஃபிரான்சே காரணம் என அந் நாட்டினைப் பழித்தும் இழித்தும் உரைத்தனர். இத்தகைய நிலை யினைக் கட்டுப்படுத்த வேண்டுமாயின், ஃபிரான்சினையும் கட்டுப் படுத்தவேண்டுமென அவர்கள் எண்ணினர். அதன்பொருட்டு ஃபிரான்சைச் சுற்றி வலிவுள்ள நாடுகளை நிறுவவேண்டுவது இன்றி யமையாததென உணர்ந்தனர். ஃபிரான்சைச் சுற்றியுள்ள சிறு நாடுகள் ஃபிரெஞ்சு ஆதிக்கத்திற்கு எளிதில் ஆட்பட்டுவிடக்கூடு மென வல்லரசுகள் கருதின. அச் சிறிய நாடுகளில் புரட்சியென்ற தொற்றுநோய் பரவினால், அது பெருநாடுகளையும் எளிதில் பற்றி விடுமென்ற அச்சம் நிலவியது. இதனைத் தடுத்து நிறுத்த சிறு நாடுகளையெல்லாம் ஒன்றிணைத்து வலிவுள்ள அரசை நிறுவ வேண்டுமென இம் மாநாடு கருதியது. அதன்பொருட்டு சிறு நாடுகளை இணைக்க இம் மாநாடு விழைந்ததில் வியப்பில்லை.

**மாநாடு செயல்பட அடிப்படையாயிருந்த கொள்கைகள்**

பின்வரும் முப்பெரும் கொள்கைகளின் அடிப்படையில் இம் மாநாடு செயல்பட்டது.

**1. முறைமைக் கொள்கை** (The Principle of Legitimacy) : இயன்றளவு முறையான பழைய அரசர்களையே மீண்டும் பதவியி லமர்த்துவதையே இம் மாநாடு ஒரு கொள்கையாகக் கொண்டு செயல்பட்டது. முறைமைக் கொள்கை வழிச்செயல்பட்டால், ஐரோப் பாவில் நிரந்தர அமைதியினை நிறுவ முடியுமென இம் மாநாடு நம்பியது. ஃபிரெஞ்சுப் பிரதிநிதியாக இருந்த தாலிரான் என்பாரும்

இக் கொள்கையினையே பெரிதும் வலியுறுத்தினர். அவர் தமது தாயகத்தைக் காக்கும் தன்னலத்திற்காக இக் கொள்கையினை வலியுறுத்தினர். அதனால், அவர் பூர்போன் அரசரை மீட்டு, ஃபிரான்சைக் காப்பாற்றினர். ரஷ்ய அரசர் முதலாம் சார் அலெக்ஸாந்தரும் இக் கொள்கையினையே பெரிதும் வரவேற்றார். புரட்சிகளையும் புதிய கருத்துகளையும் பெரிதும் வெறுத்த இவர், முறைவழிக் கொள்கைமூலம், பழைய ஐரோப்பாவினை உருவாக்க முயன்றதில் வியப்பேதுமில்லை. இம் மாநாட்டில் குழுமியிருந்த பெருவாரியான உறுப்பினர்கள் இக் கொள்கையினையே வரவேற்றனர். ஆதலின், இம் மாநாடு இதனை ஒரு கொள்கையாக ஏற்றுக்கொண்டுச் செயல்படத் தொடங்கியது.

இக் கொள்கைமூலம் ஃபிரான்சில் பூர்போன் அரசக் குடும்பம் நிலைநிறுத்தப்பெற்றது. ஸ்பெயினிலும், சிசிலியிலும் அவர்களே மீண்டும் நிலைநிறுத்தப் பெற்றனர். ஆரஞ்சுக் குடும்பமே மீண்டும் ஹாலந்தில் பதவியேற்றது. சார்டினியா, பீட்மாண்டு அரசுக்கு மீண்டும் சவாய் குடும்பமே (The House of Savoy) நியமிக்கப் பட்டது. இக் கொள்கைப்படி ஆஸ்திரியா, டைரோல் என்ற பகுதியினைத் திரும்பப்பெற்றது. போப்பரசுகள் (Papal States) போப்பாண்டவருக்கே மீண்டும் வழங்கப்பட்டன. போர்ச்சுக்கலிலும் அதன் பரம்பரையரசே மீண்டும் பதவியேற்றது. ஸ்விஸ் கூட்டமைப்பும் (Swiss Confederation) மீண்டும் நிலைநாட்டப்பட்டது. அதற்கு உரிமையும் நடுநிலைமையும் உறுதியளிக்கப்பட்டன.

**2. வல்லரசுச் சமநிலையை நிறுவுதல் :** வல்லரசுச் சமநிலையை நிறுவுதலும் இம் மாநாட்டின் மிக முக்கியமான கொள்கையாகும். ஃபிரெஞ்சுப் புரட்சியாலும் நெப்போலியனாலும் வல்லரசுச் சமநிலை பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆதலின், இரு நோக்கங்களின் அடிப்படையில் வலலரசுச் சமநிலையை நிறுவ வல்லரசுகள் விரும்பின. முதலாவது, வல்லரசுச் சமநிலையை நிறுவுவதன்மூலம் ஐரோப்பாவைப் பிரெஞ்சுப் படையெடுப்பிலிருந்து காத்தல். இரண்டாவது, ஃபிரான்சிடமிருந்து எந்த நாடும் மிகுதியான பகுதிகளைப் பெற்று, அதனால் அது மிகுதியான வலிமை பெறாமல் காத்தலுமாகும். நெப்போலியனிடம் போரிட்ட போது இங்கிலாந்து பல குடியேற்றங்களைப் ஃபிரான்சிடமிருந்து கைப்பற்றிக்கொண்டது. இங்கிலாந்து, ஃபிரான்சினை எதிர்த்துப் போரிட்டுப் பெரும் இழப்பிற்கு உட்பட்ட காரணத்தால், அது வென்ற குடியேற்றங்களை அதுவே பெற்றது. அக் குடியேற்றங்களில் மீண்டும் பழைய ஆட்சியினை நிலைநாட்ட இயலாததால், அவை இங்கிலாந்திற்கே வழங்கப்பட்டன. அதனை எதிர்க்க எந்த வல்லர

சுக்கும் துணிவில்லை. இங்கிலாந்தின் மாபெரும் கடற்படையினைக் கண்டஞ்சிய பிற வல்லரசுகள், அது பல குடியேற்றங்கள் பெறுவதை எதிர்க்கவில்லை. வல்லரசுச் சமநிலையை நிறுவவும் ஃபிரான்சைச் சுற்றி வலிவுள்ள அரண்களை அமைக்கும்பொருட்டும் பல சிறு நாடுகள் ஒன்றிணைக்கப்பட்டன. ஃபிரான்சின் வடகிழக்கே இருந்த ஹாலந்தும், பெல்ஜியமும் ஒன்றிணைக்கப்பட்டன. இக் கொள்கையின் அடிப்படையில் ஸ்வீடனும், நார்வேயும் இணைந்தன. ஜெர்மனியும், இத்தாலியும் சிறுநாடுகள் என்ற காரணத்தால், அவை ஆஸ்திரியாவின் பாதுகாப்பின்கீழ் வந்தன. இக் கொள்கை மூலம் அமைதியினை நிறுவ முயன்றது வியன்னு மாநாடு.

**3. புதிய கருத்துகள் பரவாமல் தடுத்தல் :** வியன்னு மாநாட்டிற்கு வந்த உறுப்பினர்களனைவரும் பிற்போக்குவாதிகள். அவர்கள் புதிய கருத்துகளையும், புரட்சிகளையும், மக்களாட்சியினையும் பெரிதும் வெறுத்தனர். ஐரோப்பாவிற்கு நேர்ந்த இடுக்கண்கள் அனைத்திற்கும் ஃபிரெஞ்சுப் புரட்சியும், புதிய கருத்துகளுமே காரணம் என்பது அவர்களின் அசையாத நம்பிக்கையாகும். ஐரோப்பிய அமைதியைப் பேண விரும்பிய அவர்கள், புரட்சியினைத் தடுத்தலை ஒரு கொள்கையாகக்கொண்டு செயல்பட்டனர்.

**இம் மாநாட்டின் ஏற்பாடுகள்** (Settlement of the Congress)

மேற்கூறிய நோக்கங்கள், கொள்கைகளின் அடிப்படையில் வியன்னு மாநாடு பல ஏற்பாடுகளைச் செய்தது. அவை வருமாறு :

**1. பிரான்சு :** நெப்போலியன் எல்பாத் தீவிலிருந்து தப்பிவந்து மீண்டும் ஃபிரெஞ்சுப் பேரரசனுகப் பதவியேற்றதால், இம்மாநாடு செய்த முதல் பாரிஸ் உடன்பாடு செல்லாததானது. நெப்போலியனை இரண்டாம் முறையும் வாட்டர்லூ (1815) போர்க்களத்தில் தோற்கடித்த பின்னர் 18ஆம் லூயி மன்னனோடு இம் மாநாடு இரண்டாவது பாரிஸ் உடன்பாடு ஒன்றினை 1815ஆம் ஆண்டு, நவம்பர் திங்கள், 20ஆம் நாள் செய்துகொண்டது. இதன்படி ஃபிரான்சுக்கு 1790-லிருந்த எல்லைகளே வழங்கப்பட்டன. பூர்போன் அரசரான 18ஆம் லூயி மன்னர் மீண்டும் ஃபிரான்சின் அரசராகப் பதவியில் அமர்த்தப்பட்டார். 28 மில்லியன் பவுன்களை அது போரிழப்பீடாகப் பிறநாடுகளுக்கு வழங்கவேண்டும் எனவும் ஏற்பாடானது. ஃபிரான்சில் மீண்டும் புரட்சி ஏற்படுவதைத் தடுக்கும்பொருட்டு, கூட்டணிப் படையொன்று பாரிஸில் நிலை நிறுத்தப்பட வேண்டுமெனவும் முடிவானது. நெப்போலியன் கவர்ந்த கலைப் பொருள்களனைத்தையும் ஃபிரான்சு அந்தந்த நாடுகளுக்கே திருப்பித் தரவேண்டுமெனவும் ஏற்பாடானது.

2. **ஹாலந்து;** ஹாலந்திற்குப் பெல்ஜியம் வழங்கப்பட்டது. அங்கு ஆரஞ்சுக் குடும்பத் தலைமையில் ஐக்கிய நெதர்லாந்து அரசு (The United Kingdom of the Netherlands) ஒன்றும் நிறுவப்பட்டது. இவ்வாறு ஃபிரான்சின் வடகிழக்கே வலிவுள்ள அரசொன்று நிறுவப்பட்டது.

3. **ஆஸ்திரியா :** இம் மாநாட்டின் ஏற்பாட்டிற்கேற்ப ஆஸ்திரியா தனது பேரரசின் ஒரு பகுதியான பெல்ஜியத்தினை இழந்தது. அதற்கு இழப்பீடாக இத்தாலியில் லொம்பார்டியும், வெனிஸியாவும் வழங்கப்பட்டன. டைரோல், இல்லிரியன் மாநிலங்கள், ஸால்ஸ்பர்க் போன்ற பகுதிகளையும் இது பெற்றது. போலந்திடமிருந்து ஆலிசியா என்ற பகுதியினையும் இது பெற்றது. ரைன் கூட்டரசாக இருந்து ஜெர்மன் கூட்டரசாக மாற்றியமைக்கப்பட்ட ஜெர்மனிக்கும் இது தலைமையேற்றது. இத்தாலியிலும் இதன் மேலாண்மை நிறுவப்பட்டது. இம் மாநாட்டால் மிகுதியும் பயனடைந்த நாடுகளில் ஆஸ்திரியாவும் ஒன்றாகும்.

4. **பிரஷ்யா :** இம் மாநாட்டால் பிரஷ்யா பெரிதும் விரிவுபடுத்தப்பட்டது. போலந்தின் தாழ்வாரப் பகுதிகளும், போஸனும் இதற்கு வழங்கப்பட்டன. ஸ்வீடன் நாட்டிடமிருந்து பெற்ற பொமரேனியா என்ற பகுதியும் இதற்கு வழங்கப்பட்டது. சாக்சனியில் 2/5 பகுதியும் இதற்கு நல்கப்பட்டது. ரைன் பகுதிகளையும், கோலொன், டிராவஸ் பகுதிகளையும் இது பெற்றது. இவ்வாறு ஃபிரான்சுக்குக் கிழக்கே வலுவுள்ள நாடொன்று உருவாக்கப்பட்டது.

5. **ரஷ்யா :** நெப்போலியனை வீழ்த்திய மிக முக்கிய நாடுகளில் ரஷ்யாவும் ஒன்று. தனக்கு நேர்ந்த இன்னல்களுக்கு மிகுந்த இழப்பீடு தரப்படல் வேண்டுமென அது வியன்னா மாநாட்டினரை வேண்டியது. ரஷ்யப் பேரரசரான முதலாம் சார் அலெக்ஸாந்தர் வார்சாவின் கிரேண்ட் டச்சி (The Grand Duchy of Warsaw) தமக்கு நல்கப்பட வேண்டுமென வியன்னா மாநாட்டினரை வேண்டினார். நெப்போலியனால் உருவாக்கப்பட்ட இந்தக் கிரேண்ட் டச்சி, முன்னர் ஆஸ்திரியாவுக்கும் பிரஷ்யாவுக்கும் உரியதாயிருந்தது. (1792-ல் பிரஷ்யாவும், ஆஸ்திரியாவும் அப் பதிகுகளைப் போலந்துப் பிரிவினையின்போது பெற்றன). அந்த டச்சியினை முதலாம் சார் அலெக்ஸாந்தர் தமது ஆதிக்கத்தின்கீழ்க் கொணர விழைந்தார். சார் மன்னரின் திட்டத்தினைப் பிரஷ்யாவும் வரவேற்றது. தனக்கு இழப்பீடு நல்கப்பட்டால், போலந்துப் பகுதிகளை ரஷ்யாவுக்கு விட்டுக்கொடுக்கவும்

பிரஷ்யா முன்வந்தது. அதற்கு மாருகத் தனக்கு சாக்சனி (Saxony) வழங்கப்படவேண்டுமென அது வேண்டியது. டிரெஸ்டன் (Dresden), லைப்ஸிக் (Leipzig) போன்ற மிக முக்கிய நகரங்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்த சாக்சனியைப் பெற்று, மிகச் சிறப்படைய வேண்டுமென்பது பிரஷ்யாவின் அவாவாகும். லைப்ஸிக் போர்க்களம் வரை, நெப்போலியனை ஆதரித்து நின்ற சாக்சனியைத் தனக்கு இழப்பீடாகத் தருவதில் தவறேதுமில்லையெனவும் அம் மாநாட்டில் அது வாதிட்டது. வியன்னு மாநாடு ரைன் பகுதிகளை அதற்கு இழப்பீடாகத் தர முன்வந்தபோது அவற்றைப்பெற அது முற்றிலும் தயங்கியது. ஏனெனில், ஃபிரான்சுக்கும், தனக்கும் ஒரு பொதுவான எல்லைக்கோடிருப்பதை அது முற்றிலும் வெறுத்தது.

ரஷ்யாவும் பிரஷ்யாவின் வேண்டுகோளை வரவேற்றது. பிரஷ்யாவும் ரஷ்ய–வார்சாவின் கிரேண்ட் டச்சியைப் பெறுவதை முற்றிலும் ஆதரித்தது. இதனை ஆஸ்திரியாவும் இங்கிலாந்தும் எதிர்த்தன. மைய ஐரோப்பாவில் ரஷ்யா மிகச் செல்வாக்குப் பெறுவதை அவை விரும்பவில்லை. ஆஸ்திரியாவைப் பொருத்தமட்டில், அது தனது போலந்துப் பகுதிகளை இழக்க விரும்பவில்லை. அத்துடன் ரஷ்யா தனது போலந்துப் பகுதிகளைப் பெற்று மிக்க வலிமையடைவதையும் அது விரும்பவில்லை. இங்கிலாந்தும் ரஷ்ய, பிரஷ்ய திட்டத்தினை எதிர்த்தது. ரஷ்யா வலிமை பெறுவதை அது விரும்பவில்லை. பிரஷ்யா சாக்சனியைப் பெறுவதையும் அது ஆதரிக்க இயலவில்லை. பிரஷ்யா சாக்சனியைப் பெற்ருல், அது தனக்குரிய ஹனேவருக்கு ஊறு விளைவிப்பதாய் அமையுமென அஞ்சியது. இப் பிரச்சினை வியன்னு மாநாட்டினையே பெரிதும் கலக்கியது. இதனுல், வியன்னு மாநாடே தோல்வியுறும் நிலைக்கும் வந்துவிட்டது. ரஷ்ய, பிரஷ்ய வேண்டுகோளைப் பிற வல்லரசுகள் முற்றிலும் வெறுத்தன. அவற்றின் பிடியிலிருந்து ஐரோப்பாவை விடுவிக்கவும் அவை முயன்றன. ரஷ்ய, பிரஷ்ய இணைப்பை எதிர்த்து இங்கிலாந்தும், ஆஸ்திரியாவும், ஃபிரான்சும் ஒன்றுகூடி முக்கூட்டு உடன்பாடொன்றினையும் (The Tripartite Treaty) **1815** ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், **3**ஆம் நாள் செய்து கொண்டன. இது ஓர் இரகசிய உடன்பாடாயினும், இது ரஷ்யாவையும், பிரஷ்யாவையும் அச்சத்தில் ஆழ்த்தியது. முக்கூட்டு உடன்பாட்டு நாடுகளான இங்கிலாந்தும், ஃபிரான்சும், ஆஸ்திரியாவும் ரஷ்யாவின் வலிமையை நன்குணர்ந்து அதனுடன் மிகப் பெருந்தன்மையாக நடந்துகொண்டன. போரை மீண்டும் விரும்பாத ரஷ்யாவும், முக்கூட்டு உடன்பாட்டு நாடுகளுடன் உடன்பட்டுச் செல்ல முன்வந்தது. இதன் விளைவாக வியன்னு

மாநாட்டை எதிர்நோக்கி நின்ற மாபெரும் பிரச்சினை ஒரு முடிவுக்கு வந்தது. ரஷ்யாவின் வேண்டுகோளுக்கேற்ப அதற்கு வார்சா கிரேண்ட் டச்சியின் பெரும் பகுதிகள் வழங்கப்பட்டன. அது ஸ்வீடனிடமிருந்து பெற்ற பின்லாந்தையும் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. துருக்கியிடமிருந்து பெற்ற பெசரேபியாவையும் (Bessarabia) அதுவே வைத்துக்கொள்ளவும் அனுமதிக்கப்பட்டது. இது ரஷ்யாவின் பெருமையை மிக உயர்த்தியது. ரஷ்யா, ஐரோப்பிய வல்லரசுகளில் மிக முக்கிய வல்லரசானது.

6. **ஸ்வீடன்:** பின்லாந்தை இழந்த ஸ்வீடனுக்கு நார்வே வழங்கப்பட்டது. இதனால், டென்மார்க் நார்வேயினை இழந்தது.

7. **ஜெர்மனி:** நெப்போலியனால் அமைக்கப்பட்ட ரைன் கூட்டரசுக் கலைக்கப்பட்டு, அங்கு ஜெர்மன் கூட்டரசு நிறுவப்பட்டது. ஜெர்மன் கூட்டரசின் தலைவராக ஆஸ்திரியா நியமிக்கப்பட்டது. ஜெர்மனி முழுவதிலும் ஆஸ்திரிய ஆதிக்கம் மேலோங்கி நின்றது.

8. **இத்தாலி:** இம் மாநாட்டால் பெரிதும் அல்லலுற்ற நாடுகளில் இத்தாலியும் ஒன்றாகும். இத்தாலி பல பகுதிகளாகத் துண்டாடப்பட்டது. (1) ரோமும் ரோமைச் சுற்றியுள்ள போப்பரசுகளும், போப்பாண்டவர்க்கு வழங்கப்பட்டன. (2) நேப்பிள்ஸ் சிசிலியில் பூர்போன் அரசு நிறுவப்பட்டது. (3) வெனிசியாவும், லொம்பார்டியும் ஆஸ்திரியாவுக்கு வழங்கப்பட்டன. (4) சார்டினியா, பீட்மாண்ட் ஆகியவற்றின் அரசுக்குச் சவாய் அரச குடும்பம் மீண்டும் நியமிக்கப்பெற்றது. (5) இத்தாலி முழுவதிலும் ஆஸ்திரிய மேலாண்மை நிறுவப்பட்டது. இவ்வாறு இத்தாலிப் பல பகுதிகளாகத் துண்டாடப்பட்டதுமன்றி அன்னிய ஆதிக்கமும் அதன்மீது நிறுவப்பட்டது.

9. **ஸ்விட்ஸர்லாந்து:** ஸ்விட்ஸர்லாந்தின் சுதந்திரமும் அதன் நடுநிலைக் கொள்கையும் பேணிப் பாதுகாக்கப்படுமென உறுதியளிக்கப்பட்டது. இதுகாறும் ஃபிரான்சு வசமிருந்த மூன்று கன்டோன்களும் இதனுடன் இணைக்கப்பட்டன. மொத்தம் 22 கன்டோன்களைக்கொண்ட நாடாக இது மாற்றியமைக்கப்பட்டது.

10. **இங்கிலாந்து:** ஃபிரான்சின் குடியேற்றப் பகுதிகள் பலவற்றை இது பெற்றது. மத்தியதரைப் பகுதியிலுள்ள மால்டா, வட கடலிலுள்ள ஹெலிகோலாந்து, அயோனியத் தீவுகள், தென்னாப்பிரிக்காவிலுள்ள கேப் குடியேற்றம், சிலோன், மொரிசியஸ்,

செயின்ட் லூசியா, டுபாகோ, டிரினிடாடு போன்ற பகுதிகளை இங்கிலாந்து பெற்றது. இது இப் பகுதிகளைப் பெற்ற காரணத்தால், ஹாலந்து நாட்டிற்கு 6000 000 பவுன்களை இழப்பீடாகக் கொடுக்கும்படி ஏற்பாடானது. வியன்னு மாநாட்டிற்குப் பின்னர், இங்கிலாந்தின் கடல் வன்மை மேலும் மிகுந்தது.

11. **போலந்து**: அவப்பேறு மிக்க இந் நாடு 18-ஆம் நூற்றாண்டிலேயே மும்முறை (1772, 1793, 1795) துண்டாடப் பட்டது. நெப்போலியன் இதனை வென்று அங்கு வார்சா கிரேண்ட் டச்சியை (The Grand Duchy of Warswa) நிறுவினுர். 1815-ல் கூடிய வியன்னு மாநாட்டில் அந்த டச்சியினைத் தனக்கு நல்குமாறு முதல் சார் அலெக்ஸாந்தர் வேண்டினர். அதற்கொப்ப வியன்னு மாநாடும் இந் நாட்டை நான்காம் முறையாகத் துண்டாடியது. வார்சா டச்சியின் பெரும்பகுதி ரஷ்யாவுக்கு வழங்கப்பட்டது. போசன் (Posen) மாநிலத்தைப் பிரஷ்யாவே வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது கிராகோ ஒரு சுதந்திர நகரமாக இயங்க அனுமதிக்கப்பட்டது. கலிசியா (Galicia)-வை ஆஸ்திரியாவே வைத்துக்கொள்ள இம் மாநாடு இசைவு தெரிவித்தது. வியன்னு மாநாட்டின் விளைவாக ரஷ்யா, ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் போலந்தைப் பிரிவினை செய்துகொண்டன.

**இம் மாநாடு பற்றிய மதிப்பீடு**

1. **குறைபாடுகள்**: வரலாற்றுச் சிறப்புமிக்க மாநாடுகளில் இதுவும் ஒன்று. ஐரோப்பியப் பிரச்சினைகளைப் பேச்சுவார்த்தைகள் மூலம் தீர்த்துக்கொள்ளும்பொருட்டு, எடுத்துக்கொள்ளப்பட்ட முதல் முயற்சியாகும் இது. ஒரு நூற்றாண்டுக் காலம் ஐரோப்பாவில் மாபெரும் போர் ஏற்படாவண்ணம் காத்த மாபெரும் மாநாடு இதுவெனில் மிகையாகாது. வல்லரசுச் சமநிலையை நிறுவி, அதன் மூலம் நிரந்தர அமைதியினை ஐரோப்பாவுக்கு நல்க இம் மாநாடு முழு முயற்சி எடுத்துக்கொண்டது. ஆயினும், இதில் குறை பாடுகள் உள்ளன.

2. **பிற்போக்கு மாநாடு**: ஐரோப்பிய சமுதாயத்தின் மறு சீரமைப்பு (Reconstruction of European Society) ஐரோப்பிய அரசியல் முறையினை மேம்படுத்துதல் (Regeneration of the Political System of Europe) போன்ற சொற்றொடர்கள் இம் மாநாட்டில் மிகுதியும் பயன்படுத்தப்பட்டன. ஆயினும், இம் மாநாடு பற்றி ஆராயின், இச் சொற்கள் மக்களை ஏமாற்றுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட சொற்களென்பன நன்கு விளங்கும். இம் மாநாடு பிற்போக்குவாதிகளால் தங்கள் நலனைப் பேணுவதற்காக

நடத்தப்பெற்ற ஒன்றுகும். அதற்குப் பிற்போக்கரசர்களும், அவர்களைச் சார்ந்த உயர் குடியினரும் வரவழைக்கப்பட்டனரே யன்றி மக்கள் பிரதிநிதிகள் இம் மாநாட்டிற்கு அழைக்கப் பெறவில்லை. இங்கு உண்மையிலேயே புதிய கருத்துகளோ, மக்கள் நலனோ இடம்பெறவில்லை. ஐரோப்பியப் புனரமைப்பு, புனிதக் கூட்டு, சமூக மேம்பாடு போன்ற கருத்துகள் இங்குப் பரக்கப் பேசப்பட்டாலும் அவற்றை நிறைவேற்ற இங்குக் குழுமி யிருந்த வல்லரசுகள் ஆர்வம் காட்டவில்லை. இம் மாநாடு மக்கள் நலனை முற்றிலும் புறக்கணித்துவிட்டது என்றே பல வரலாற்று வல்லுநர்களும் கருதுகின்றனர். இம் மாநாட்டின் செயலராகப் பணியாற்றிய கென்ட்ஸ் (Gentz) என்பாரும் இக் கூற்றினையே நன்கு சுட்டிக் காட்டுகிறார். 'பொற்காலத்திற்குத் திரும்புவோம் என வாக்குறுதி வழங்கப்பட்டது. ஆயினும், இம் மாநாடு பழைய நிலையினை மீண்டும் மீட்டதேயன்றி வேறெதுவும் செய்யவில்லை' என்ற அச் செயலரின் வாக்கு இம்மாநாட்டின் பிற்போக்குத் தன்மைக்கு நல்லதொரு சான்றாகும்.

**2. வல்லரசுகளின் தன்னலம் :** மாநாட்டில் வல்லரசுகள் தன்னலம் மிக்கவையாய்த் திகழ்ந்தன. போட்டியுணர்வும், பொச்சாப்புணர்வும் மிக்க அவற்றால், பொதுநல நோக்கோடு திகழ இயலவில்லை. ஈகை, நீதி வழுவாமை, அமைதி (Charity, Justice and Peace) போன்ற சொற்களை அவை மிகுதியும் பயன்படுத்தின. ஆயினும், அவற்றைச் செயல்படுத்தும் நோக்கம் வல்லரசுகளிடம் ஒரு சிறிதும் காணப்படவில்லை. தங்கள் நாடுகளின் நலனைப் பேணுவதிலும், பிற நாடுகளின் பகுதிகளைக் கவர்வதிலும் ஆர்வம் காட்டினவேயன்றி, ஐரோப்பியப் பொதுப் பிரச்சினை பற்றி அவை மிகுதியும் கவலைப்படவில்லை. வல்லரசுகள் சிறு நாடுகளைத் துண்டாடுவதிலும், அவற்றின்மீது ஆதிக்கம் செலுத்துவதிலும் நாட்டம் செலுத்தினவேயன்றி, அவற்றின் உண்மையான உணர்ச்சிகளை மதிக்கவில்லை. தன்னலம் காரணமாக, அவை பல சிறு நாடுகளின் உரிமைகளையும் பறித்தன. இம் மாநாடு சிறு நாடுகளை முற்றிலும் புறக்கணித்தது மாபெரும் தவறாகும்.

(1) தன்னலம் காரணமாக, ரஷ்யா, போலந்தின் பெரும் பகுதிகளைக் கவர்ந்துகொண்டு போலந்து மக்களைப் பெரிதும் ஏமாற்றியது.

(2) ஆஸ்திரியாவும் தன்னலம் காரணமாக, பெல்ஜியத்தை ஹாலந்திற்கு வழங்கிவிட்டு, அதற்கிழப்பீடாக இத்தாலியில் லொம்பார்டியையும் வெனிசியாவையும் பெற்றுக்கொண்டது. வெகு

தொலை தூரத்தேயிருந்த பெல்ஜியத்தைக் கட்டிக்காப்பது அரிதெனக் கருதி அதனை ஹாலந்துக்கு வழங்கிவிட்டு, மைய ஐரோப்பாவில் தனது வலிமையைப் பெருக்கிக்கொள்ள இத்தாலியில் லொம்பார்டியினையும் வெனிசியாவினையும் பெற்றுக்கொண்டது. அத்துடன் அமையாது, ஆஸ்திரியா தனது வலிமையைப் பெருக்கிக்கொள்ள இத்தாலிக்கும் ஜெர்மனிக்கும் தலைமையேற்றது. இத்தாலியும் ஜெர்மனியும் அதனை எதிர்த்துப் புரட்சி செய்தபோது அவை நசுக்கப்பட்டன.

(3) பிரஷ்யாவும் சாக்சனிப் பகுதியைப் பெற்றுத் தனது வலிமையைப் பெருக்கிக்கொள்ள விரும்பியதே தவிர, பிற நாடுகளைப் பற்றிக் கவலைப்படவில்லை.

(4) அதுபோன்றே இங்கிலாந்தும் மிகுதியான குடியேற்றங்களைப் பெறுவதிலும், தனது நாட்டிற்கு நன்மை தேடுவதிலும் முனைந்து நின்றதேயன்றி, பிற நாடுகளின் நலனில் மிகுதியும் அக்கறை காட்டவில்லை. ஆதலின், இரு நாடுகள் இம் மாநாட்டில் நம்பிக்கை இழந்தன. அவை துண்டாடப்பட்டதால் புரட்சி செய்தன. ஐரோப்பாவுக்கு நிரந்தர அமைதியினை வழங்கப் போவதாக வாக்களித்த இம் மாநாடு, தனது தவருன ஏற்பாடுகளாலும் வல்லரசுகளின் தன்னலத்தாலும் அமைதியின்மைக்கும், புரட்சிகளுக்கும் வித்திட்டது.

**3. நாட்டுப் பற்றினைப் புறக்கணித்தமை:** இம் மாநாடு ஒரு தற்காலிக உடன்பாடேயன்றி நூற்றுண்டுக் காலம் நீடிக்கவல்லதோர் அமைதிக் கோட்பாட்டினைக் கொண்டதல்ல[1]. இதனையே லாட்ஜ் (Lodge) என்ற வரலாற்று வல்லுநரும் வலியுறுத்துகிறுர். இது செயற்கைத் தன்மை மிக்கது. நிரந்தரத் தன்மையற்றது என்பது அவர் தம் கூற்று. அரை நூற்றுண்டுக் காலத்திற்குள் வியன்னு மாநாட்டின் ஏற்பாடுகள் முற்றிலும் புறக்கணிக்கப் பட்டன. புதிய வரலாற்றுச் சக்திகள் பல 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன்றி இம் மாநாட்டின் ஏற்பாடுகளை மாற்றியமைத்து ஐரோப்பிய வரைபடத்தையும் மாற்றி வரைந்தன.

அதற்குரிய காரணம் யாதென ஆராயின், இம் மாநாடு, நாட்டுப் பற்றினையும், மக்களது உணர்ச்சிகளையும் புறக்கணித்தலேயாம். வியன்னு மாநாட்டில் பங்கேற்றோரனைவரும், உயர்குடியினர்.

[1] Lipson-*Europe in the 19th and 20th Centuries*, p. 212.

மக்கள் பிரதிநிதிகள் அதில் பங்கேற்கும் வாய்ப்பினைப் பெறவே யில்லை. ஆதலின், மக்கள் உணர்ச்சிகளை மாநாட்டினர் புரிந்து கொள்ளும் வாய்ப்பினை முற்றிலும் இழந்தனர். அதுபோன்றே நாட்டுப் பற்றினையும் மாநாட்டினர் முற்றிலும் புறக்கணித்தனர். நாட்டுப் பற்றினை அவர்கள் புறக்கணித்ததனாலேயே பின்னர், பல்வேறு பிரச்சினைகளுக்கும் ஐரோப்பா ஆட்பட்டது.

(1) முன்னிலை மீட்பு (Restoration), முறைமைக் கொள்கை (Legitimacy) ஆகியவற்றின் அடிப்படையில் ஃபிரான்சில் மீண்டும் பூர்போன் குடும்பம் அரசணையேற்றப்பட்டது. 18ஆம் லூயி மன்னர் மக்கள் விருப்பத்திற்கு மாறாக மன்னராக்கப்பட்டார். அவருக்குப் பின்னர் பட்டத்திற்கு வந்த அவருடைய தம்பியான 10ஆம் சார்லஸ் ஒரு பிற்போக்குவாதியாவார். வரம்பற்ற முடியாட்சியில் மிக்க நம்பிக்கை கொண்டிருந்த அவர், மக்களாட்சி மரபுகளையும் உரிமைகளையும் முற்றிலும் புறக்கணித்தார். மீண்டும் அடக்கு முறையாட்சி நிறுவப்பட்டது. அவரது கொடுங்கோன்மை மிக்க முடியாட்சியினை மக்கள் பெரிதும் வெறுத்தனர். 1830ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள் ஒரு புரட்சி மூலம் மக்கள் அவ்வாட்சியினை நீக்கினர். மீண்டும் பூர்போன் வம்சம் பதவியிழந்தது. இம் மாநாடு மக்கள் உணர்ச்சிகளைப் புரிந்துகொண்டு செயல்பட்டிருப்பின் இத் தவறு நிகழ்வதற்குரிய வாய்ப்பின்றியே போயிருக்கும்.

(2) வியன்னு மாநாடு செய்த அடுத்த மாபெரும் தவறு, பெல்ஜியத்தினையும் ஹாலந்தையும் ஒன்றிணைத்ததாகும். டச்சு உரிமைப் போருக்குப் பின்னர் ஹாலந்தும் பெல்ஜியமும் தனித்தனி நாடுகளாயின. 1648-ல் நிறைவேறிய வெஸ்ட்பேலியா உடன்பாட்டின்படி (The Treaty of Westphalia) அவை இரண்டும் இரு வேறு நாடுகளாக அங்கீகரிக்கப்பட்டன. இனத்தால், மொழியால், சமயத்தால், பண்பாட்டுக் கூறுகளால் வேறுபட்டு நின்ற இவ்விரு நாடுகளும் தனித்தனி தேசிய நாடுகளாயின. வியன்னு மாநாடு இவ் வேறுபாடுகளனைத்தையும் புறக்கணித்து அவ்விரு நாடுகளையும் ஒன்றிணைத்தது. ஃபிரான்சைச் சுற்றி வலுவுள்ள அரண்களை அமைக்கவேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் செயலாற்றிய இம் மாநாடு இவ்விரு நாடுகளையும் ஒன்றிணைத்து அவற்றின் வெறுப்பைத் தேடிக் கொண்டது. நாட்டுப் பற்று வலுவுள்ள ஒரு சக்தியென்பது வியன்னு மாநாட்டினருக்குப் புலப்படாதது வியப்பிற்குரிய ஒன்றேயாம். ஹாலந்தும் பெல்ஜியமும் ஒன்றிணைக்கப்பட்டு ஐக்கிய நெதர்லாந்து அரசு நிறுவப்பட்டது. அதற்கு ஆரஞ்சுக் குடும்பம் அரியணையில் அமர்த்தப்பட்டது. நாட்டுப்பற்று மிக்க பெல்ஜிய மக்கள் அதனை

விரும்பவில்லை. 1830 ஜூலையில் ஃபிரான்சில் தோன்றிய புரட்சி இங்கும் எதிரொலித்தது. பெல்ஜியம் புரட்சி செய்து விடுதலையும் பெற்றது. இது வியன்னு மாநாட்டின் தவருன போக்கால் விளைந்த விளைவுகளில் ஒன்ருகும். அதனுல்தான், பேராசிரியர் ஹெய்ஸ் (Hayes) என்பார் வியன்னு மாநாட்டுப் பகுதி மாற்றங்களில் தாற்காலிகத் தன்மை மிகுதியாயும் நிரந்தரத் தன்மை குறைவாயும் இருந்ததாகக் குறை கூறுகிறர். வரலாற்று வல்லுநர் ஹேசன் (Hazen) என்பாரும் "1815-க்குப் பின்னர் ஐரோப்பா" என்ற தமது நூலில் இக்குறையினையே காண்கிறர். உயர்குடி மக்களது மாநாடான வியன்னு மாநாடு, நாட்டுப் பற்றினைப் புரிந்துகொள்ள வில்லை. அது மக்களாட்சியை வெறுத்தது. அம் மாநாடு, தான் விரும்பிய வண்ணம் ஐரோப்பாவை மீண்டும் மாற்றியமைத்தது. அதன் விளைவாகவே பல புரட்சிகளுக்கு இம் மாநாடு வித்திட்ட தென்பர் ஹேசன். அவரது கூற்று முற்றிலும் உண்மை என்பதை 1815-க்குப் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் புலப்படுத்தும்.

இவ்வாறே வியன்னு மாநாடு இத்தாலியர்களையும் ஜெர்மனியர்களையும் பெரிதும் ஏமாற்றியது. மக்கள் உணர்வும் நாட்டுப் பற்றும் மதிக்கப்பெறுத காரணத்தால், அந் நாடுகளில் 1815-க்குப் பின்னரும் அந்நிய ஆதிக்கம் நிலை நிறுத்தப்பெற்றது. நாட்டுப் பற்றுக் காரணமாக, அம் மக்கள் ஒற்றுமையினையும் இணைப்பையும் விரும்பினர். ஒற்றுமைக்காகவும், விடுதலைக்காகவும் அம் மக்கள் பெரும் புரட்சிகள் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. இது வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளில் நிகழ்ந்த தவறெனில் மிகையன்று.

போலந்தும் இவ்வாறே பெரிதும் ஏமாற்றமுற்றது. தாங்கள் ஒன்றுபட்டும், தங்களுக்கு விடுதலை கிடைக்குமென எதிர்பார்த்த அம் மக்கள் பெரிதும் ஏமாந்துபோயினர். அந்நாடு இரக்கமின்றி அந்நிய ஆட்சி புகுத்தப்பட்டது. அதன் பகுதிகள் பிரஷ்யாவிற்கும் ரஷ்யாவிற்கும் வழங்கப்பட்டன. அங்கு ரஷ்ய மேலாண்மையும் நிறுவப்பட்டது. வியன்னு மாநாட்டிற்குப் பின்னர் விடுதலைக்காகப் போராடும் அவல நிலையிலிருந்தது அந் நாடு.

4. **குடியரசுகள் புறக்கணிக்கப்படல்** : இம் மாநாடு மக்களாட்சியினையும், புதிய கொள்கைகளையும் மதிக்கவில்லை. புரட்சிக் கருத்துகள் நல்ல சமுதாய அமைப்புக்கும் ஏற்புடைய கருத்துகள் அல்ல என்பது இம் மாநாட்டின் கருத்தாகும். மக்களாட்சியை வெறுத்த இம் மாநாடு பல குடியரசுகளையும் புறக்கணித்தது. வெனிசில் செயலாற்றி வந்த குடியரசு நீக்கப்பட்டது. ஜெனேவாவும்

தனது குடியாட்சியையிழந்தது. வெனிஸ் அங்கு மீண்டும் குடியரசு நிறுவப்படவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தும் அது நிராகரிக்கப்பட்டது. இம் மாநாடு பழைய அரசகுல நலனைப் பேணியதேயன்றி மக்கள் நலனைப் பற்றிக் கவலையேதும் படவில்லை. இம் மாநாடு செய்த மாபெரும் தவறுகளில் இதுவும் ஒன்றாகும்.

**5. காலத்திற்கொவ்வாத கொள்கைகளின் அடிப்படையில் செயல்பட்டமை :** இம் மாநாடு முறைமைக்கொள்கை, புரட்சிகளைத் தடுத்தல், நாட்டுப் பற்றினைப் புறக்கணித்தல் போன்ற காலத்திற் கொவ்வாத கொள்கைகளின் அடிப்படையில் செயல்பட்டது. நாட்டுப் பற்றுக் காரணமாக, உரிமைக்காகப் போராடும் மக்களை ஒடுக்குவதற்காக முறைமைக் கொள்கையை இம் மாநாடு ஒரு பற்றுக்கோடாகக் கொண்டது. வல்லரசுச் சமநிலையென்ற பெயரில் பெரிய நாடுகள் சிறிய நாடுகளைத் தாங்கள் விரும்பியவண்ணம் துண்டாடின. போரில் வெற்றிபெற்ற திறையினைத் தங்கள் விருப்பம் போல் பகிர்ந்துகொண்டன வல்லரசுகள். வல்லரசுச் சமநிலையை நிறுவி, அமைதியினை நல்க முயன்ற அவை காலத்திற்கொவ்வாத கொள்கைகளைப் பின்பற்றியதால், அமைதியினை நிறுவ முடியவில்லை. இது தனது பிற்போக்குக் கொள்கைகளால் அமைதியினை நிறுவுவதற்கு மாறாக, அமைதியினைக் குலைத்தது எனில் மிகையாகாது.

**6. சிறு நாடுகள் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டமை:** இம் மாநாட்டினைப் பெரும் வல்லரசுகளே ஆட்டிப்படைத்தன. அவை தங்கள் தன்னலத்திற்காக இம் மாநாட்டினை நன்கு பயன்படுத்திக் கொண்டன. இம் மாநாட்டின் நோக்கங்களையும், செயல்களையும், முடிவுகளையும் பெரும் வல்லரசுகளே செய்தன. இதில் சிறு நாடுகளுக்குப் பங்கேதும் தரப்படவில்லை. பெரிய நாடுகளின் முடிவுகள் சிறு நாடுகள்மீது திணிக்கப்பட்டன. வல்லரசுகளின் நலனுக்காக சிறு நாடுகளின் நலன் முற்றிலும் புறக்கணிக்கப் பட்டது. பின்லாந்தின் ஒப்புதலின்றியே அது ரஷ்யாவுக்கு வழங்கப்பட்டது. அவ்வாறே பெல்ஜியமும் ஹாலந்துக்கு வழங்கப் பட்டது. நார்வே ஸ்வீடனுக்கு வழங்கப்பட்டது. இத்தாலியிலும் ஜெர்மெனியிலும் ஆஸ்திரிய ஆதிக்கம் நிறுவப்பட்டது. இவ்வேற் பாடுகளில் சிறு நாடுகளின் நலன்களும், உணர்வுகளும் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டன. சிறு நாடுகள் அம்முடிவுகளை ஏற்கத் தயங்கியபோது அவை அவற்றின்மீது திணிக்கப்பட்டன. இதனால், சிறு நாடுகள் பெரிதும் ஏமாற்றமுற்றதுடன் சீற்றமும் கொண்டன.

**7. முறைமைக் கொள்கையின் தீமை (The Principle of Legitimacy):** இம் மாநாட்டின் மிக முக்கியக் கொள்கைகளில்

ஒன்றான முறைமைக் கொள்கை ஐரோப்பிய வளர்ச்சியைப் பெரிதும் பாதித்தது. இதன் விளைவாக ஐரோப்பிய அரசியல், சமூக வாழ்வில் ஒரு தேக்கநிலை ஏற்பட்டது. அதனால்தான், பலரும் இம் மாநாட்டினை ஒரு பிற்போக்கு மாநாடு என்று குறை கூறுகின்றனர்.

வல்லரசுகள் முறைமைக் கொள்கையினையும்கூட செவ்வையாகச் செயல்படுத்தவில்லை. வல்லரசுகளின் நலன் அதனால் பாதிக்கப்படுமென அறிந்தபோது இக் கொள்கையே முற்றிலும் கைவிடப்பட்டது. முறைமைக் கொள்கையினைச் சுட்டிக் காட்டி சாக்சனி முழுவதும் தனக்கு வழங்கப்படவேண்டுமெனச் சாக்சனியரசன் வேண்டியபோது அது மறுக்கப்பட்டது. ஏனெனில், பிரஷ்யா தனது எல்லைகளை விரிவுபடுத்த சாக்சனி தனக்கு வேண்டுமெனக் கோரியது. சாக்சனியில் 2/5 பகுதிகள் பிரஷ்யாவுக்கு வழங்கப்பட்டன. இதனால், சாக்சனி பெரிதும் ஏமாற்றமுற்றது. ஜெனோவா தனது குடியரசு உரிமையை இழந்ததோடு இது பீட்மாண்டுடன் இணைக்கப்பட்டது. முறைமைக் கொள்கைப்படி தனக்குக் குடியரசு வழங்கப்படவேண்டுமென அது வேண்டியபோது அதன் வேண்டுகோள் புறக்கணிக்கப்பட்டது. ஸ்வீடனுக்குரிய பின்லாந்து ரஷ்யாவுக்கு வழங்கப்பட்டது. பின்லாந்து பின்னர் தனது விடுதலைக்காகப் பல புரட்சிகளில் ஈடுபடும் கட்டாயமேற்பட்டது. வெனிசும் அதற்குரிய குடியரசினைப் பெறவில்லை. வெனிசும் ஆஸ்திரிய ஆதிக்கத்திற்குட்படுத்தப்பட்டது. இவ்வாறு இம் மாநாடு தனது மிக முக்கியக் கொள்கையான முறைமைக் கொள்கையினையே செவ்வையாகச் செயல்படுத்தவில்லை. தன்னலம் காரணமாக, அக் கொள்கையும் செவ்வையாகப் பின்பற்றப்படவில்லை. ஆதலின் மிகக் குறுகிய காலத்திலேயே அதன் ஏற்பாடுகள் சீர்குலைந்தன.

**நிறைகள்**

இம் மாநாட்டேற்பாடுகளில் பல குறைகளிருப்பினும் இதில் நிறைகளே இல்லை எனக் கூறுதலும் பொருந்தாது. இம் மாநாட்டேற்பாடுகளில் பல நிறைகளுமுள்ளன. ஐரோப்பிய வரலாற்றில் பிரச்சினைகளைக் கூடிப்பேசி சுமுகமாகத் தீர்த்துக்கொள்ளலாமென்பதற்கு இம் மாநாடே ஒரு வழிகாட்டியாகும். டேவிட் தாம்ஸன் என்ற வரலாற்று வல்லுநர் இதனை நியாயமான அரசியல் நுணுக்கங்கள் மிக்கதோர் உடன்பாடென்பார்.

இவ்வுடன்பாடு இதற்கு முன்னரும் பின்னரும் செய்துகொள்ளப்பட்ட உடன்பாடுகளிலும் சிறப்புமிக்கதென்பதை நன்கு ஆராயின் நனி விளங்கும். 1713-ல் செய்துகொள்ளப்பட்ட உட்ரக்ட்

உடன்பாடு (The Treaty of Utrecht) ஒருதலைப்பட்ட உடன் பாடாகும். அதனால், ஹாப்ஸ்பர்க் அரச குடும்பம் பெரிதும் பாதிக்கப்பட்டது. முதல் உலகப் போருக்குப் பின்னர், செய்து கொண்ட வெர்சாய் உடன்பாடும் இவ்வாறு குறைபாடுடைய ஒன்றாகும். அதனை ஜெர்மனியர்கள் கட்டாயவமைதி (Dictated Peace) எனக் குறை கூறினர். இத்தகைய உடன்பாடுகள் பலவற் றோடு ஒப்பிடுகையில் வியன்னா உடன்பாடு பாராட்டத்தக்கவல்ல நல்லதோர் உடன்பாடெனலாம். பிற மாநாடுகளைப் போன்று தோல்வியுற்ற நாட்டினைக் கேவலமாக நடத்தாமல், இம் மாநாடு அதனை மிக்க பெருந்தன்மையோடு நடத்தியது. இதன் ஏற்பாடு களால் ஃபிரான்சு பெரும் தொல்லைகளுக்காட்படவில்லை யென்பதை நாம் ஈண்டு நினைவு கூர்தல் வேண்டும். கி.பி. 1790-ல் அது பெற்றிருந்த எல்லைகளே அதற்கு வழங்கப்பட்டன. பழைய அரச குடும்பமான பூர்போன் அரச குடும்பமே அங்கு மீண்டும் நிலை நிறுத்தப்பெற்றது. இதனால், ஃபிரான்சு தனது பழைய எல்லைகளை இழக்கவில்லை.

இது ஒரு நிரந்தர உடன்பாடல்ல எனப் பலரும் இதனைக் குறை கூறுகின்றனர். வரலாற்றில் செய்துகொள்ளப்பட்ட எவ் வுடன்பாடுகளும் நிரந்தரமானவையல்ல என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். 1648-ல் செய்துகொள்ளப்பட்ட வெஸ்ட் பேலியா உடன்பாடும், 1713-ல் செய்துகொள்ளப்பட்ட உட்ரக்ட் உடன்பாடும் 1919-ல் செய்துகொள்ளப்பட்ட வெர்சாய் உடன் பாடும் குறைகள் மலிந்த தாற்காலிக உடன்பாடுகளேயாம். அவ் வுடன்பாடுகள் மிகக் குறுகிய காலத்திலேயே கைவிடப்பட்டன. 1919 ஆம் ஆண்டு செய்துகொள்ளப்பட்ட வெர்சாய் உடன்பாடு 20 ஆண்டுகளுக்குக்கூட ஐரோப்பாவிற்கு அமைதியினை நல்க இயலவில்லை. இவ் வியன்னா மாநாடு, ஒரு நூற்றாண்டுக் காலம் ஐரோப்பாவில் பெரும் போர் நிகழாமல் காத்தது, இதற்குரிய பெருமையாகும். கிரான்ட், டெம்பர்லி (Grant and Temperley) போன்ற வரலாற்று வல்லுநர்கள் இவ் வுடன்பாட்டினைக் குறை கூறுதல் எளிதெனினும், இதனது சிறப்புகளை நாம் நினைவில் வைத்துக் கொள்ளுதல் சிறப்பாகுமெனக் கூறியுள்ளது, இம்மாநாட் டிற்கு அவர்கள் வழங்கிய நல்லதொரு பாராட்டுரையாகும்.

மூன்றாவதாக, வியன்னா மாநாட்டினரால் புதிய கருத்து களும், மக்களாட்சியும் புறக்கணிக்கப்பட்டன என்பது மெய்யே யாம். இதற்காக வியன்னா மாநாட்டினரை நாம் குறை கூறுவது தவறாகும். நாட்டுப் பற்று, மக்களாட்சி, முற்போக்குக் கொள் கைகள் யாவும் ஐரோப்பாவுக்கே புதியன. பல ஐரோப்பிய நாடுகள்

அவற்றை ஏற்கத் தயங்கின. அவை அமைதியையும். நிலையான ஆட்சியினையும் குலைக்கவல்லவை என அக் காலத்து அரசியல் வல்லுநர்கள் உண்மையிலேயே நம்பினர். எப் புதிய கொள்கைக்கும் தொடக்கத்தில் எதிர்ப்பிருத்தல் இயல்பானவொன்றேயாம். இதற்கு வரலாற்றில் பல சான்றுகள் உள்ளன. ஆதலின், ஐரோப்பாவில் புதிதாகத் தோன்றிய மக்களாட்சி போன்ற கருத்துகளை வியன்னு மாநாட்டினர் செவ்வையாகப் புரிந்துகொள்ளாதது அவர்கள் தவறன்று. அவற்றின் செல்வாக்கினை அவர்கள் முற்றிலும் உணரவில்லை. காலத்திற்குச் சற்று முற்பட்ட கருத்துகளுக்கு எதிர்ப்பிருந்ததில் வியப்பேதுமில்லை.

நான்காவதாக, வியன்னு மாநாட்டினர் பல்வேறு சிக்கல்களுக்கிடையில் செயல்பட்டதை நாம் மறந்துவிடக்கூடாது. நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பிறகு, ஐரோப்பா எதிர்நோக்கிய பிரச்சினைகள் மிகப் பல. அதோடுமட்டுமன்றி இம் மாநாடு கூடுவதற்கு முன்னரே பல நிலைகளில் பல நாடுகளும் உடன்பாடுகள் செய்து கொண்டிருந்தன. அவ்வுடன்பாடுகளை இம் மாநாடு முற்றிலும் புறக்கணிக்க இயலவில்லை. இம் மாநாட்டின் சிக்கல், இம் மாநாடு தொடங்குவதற்கு முன்னரே தொடங்கிவிட்டது. அச் சிக்கல்களிலிருந்து இம் மாநாடு முற்றிலும் விடுபட இயலவில்லை. இம் மாநாட்டுக்கு முன்னமே செய்துகொள்ளப்பட்ட பல்வேறு உடன்பாடுகளையும் இம் மாநாடு கருத்திற்கொண்டு, செயல்படவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆதலின், தன் விருப்பப்படி அது இயங்க முடியவில்லை. தனக்கு முந்திய உடன்பாடுகளையும் இது ஏற்றுக் கொள்ள மறுத்திருப்பின் இம் மாநாட்டில் உடன்பாடு என்பதற்கே இடமில்லாமற் போயிருக்கக்கூடும். இத்தகைய மாபெரும் சிக்கல்களுக்கிடையேயும் இம் மாநாடு ஐரோப்பாவுக்குத் தந்த ஏற்பாடுகளையும், அமைதியினைக் காத்த பாங்கினையும் நாம் பாராட்ட வேண்டும்.

மேலும், நெப்போலியப் பேரரசுக்குப் பிறகு, ஒருபொது ஐரோப்பிய முறையை உருவாக்குதல் என்பது எளிதான செயலன்று. இம் மாநாடு நெப்போலியனை வீழ்த்திய வல்லரசுகளைத் திருப்திப் படுத்தவேண்டிய கட்டாய நிலையிலிருந்தது. வல்லரசுச் சமநிலையை நிரந்தர அமைதிக்காக இம் மாநாடு நிறுவ முயன்றது. வல்லரசுச் சமநிலையை நிறுவும்போது, நெப்போலியனால் வீழ்த்தப்பட்டு, பதவியிழந்த பழைய வல்லரசுகளுக்கு இம் மாநாடு உதவவேண்டிய கட்டாயமேற்பட்டது. ஆகவே, முன்னிலை மீட்பு (Restoration), முறைமைக்கொள்கை போன்றவற்றினை இது பின்பற்ற நேரிட்டது. பல இடையூறுகளுக்கிடையேயும் இது புரிந்த சாதனைகள் பல. இது பல சிறு நாடுகளை ஒன்றிணைத்ததைப் பலர் குறை கூறுவர்.

அன்றைய சூழ்நிலையில் பாதுகாப்பாகச் செய்யப்பட்ட ஓர் ஏற்பாடது என்பதனை நாம் மறந்துவிடல் சிறப்பன்று. பெரு நாடுகள் பல சிறு நாடுகளைக் கவர்வதைப் போர் உரிமையாகக் கொண்டிருந்த அந் நாள்களில் சிறு நாடுகளையொன்றிணைத்து அவற்றைக் காப்பாற்றுவதை ஒரு கடமையாக இம் மாநாடு கருதியதில் தவறேதுமில்லை. நாட்டுப் பற்று இவ்விணைப்புகளால் புறக்கணிக்கப் பட்டதென்பது மெய்யே. ஆயினும், பாதுகாப்பு, அமைதி இவற்றின் அடிப்படையில் நோக்கின், இம் மாநாட்டின் ஏற்பாடு தக்கதென்றே புலப்படும்.

இறுதியாக, இம் மாநாடு இதற்கு இருபது ஆண்டுகளுக்கு முன்னரே நிகழ்ந்த நிகழ்ச்சிகளுக்கும் மதிப்பு தந்தது. ரஷ்யா, இம் மாநாடு கூடுவதற்கு முன்னரே போலந்தின் ஒரு பகுதியைக் கவர்ந்துகொண்டது. இதனை இம் மாநாடு ஏற்றுக்கொண்டது. புனித ரோமானியப் பேரரசும் மீண்டும் புதுப்பிக்கப்படவில்லை. நெப்போலியன் ஜெர்மனியில் செய்த ஏற்பாடுகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. இதுபோன்ற நிகழ்ச்சிகளை இம் மாநாடு ஏற்றுக் கொண்டதையும் நாம் பாராட்டவேண்டும். ஆகவே, வியன்னா மாநாடு முற்றிலும் குறைபாடுகள் மிக்க மாநாடென்பதும் தக்க முடிவன்று. அது கெட்டல்பீ என்பார் கூறுவது போல நல்ல அடிப்படையில் ஏற்படுத்தப்பட்ட மாநாடு எனில் மிகையாகாது.[1]

[1] Ketelbey - *A History of Modern Times*, p. 149.

# 2. ஐரோப்பியக் கூட்டணி

ஃபிரெஞ்சுப் புரட்சியும் நெப்போலியனின் படையெடுப்புகளும் ஐரோப்பிய அமைதியைப் பெரிதும் கெடுத்தன. இத்தகைய வேண்டா நிகழ்ச்சிகளிலிருந்து ஐரோப்பாவைப் பாதுகாக்கவே வல்லரசுகள் விரும்பின. மீண்டும் புரட்சிகளும் தனி மனித வெற்றிகளும் ஐரோப்பிய அமைதியினைக் குலைக்கக்கூடாதென்பதே வியன்னு மாநாட்டினரின் பொதுக் கூக்குரலாக இருந்தது. உடன்பாடு செய்துகொள்வதால் மட்டும் ஐரோப்பாவுக்கு நிரந்தர அமைதியினைத் தர இயலாது என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர். ஐரோப்பிய அமைதியினைப் பேண ஒரு கூட்டணி வேண்டுமென்பதையும் அவர்கள் தெளிவாக உணர்ந்திருந்தனர்.

ஐரோப்பியக் கூட்டணிக்கு அடிப்படை 1814-ல் வல்லரசுகள் செய்துகொண்ட சவ்மான்ட் உடன்பாடாகும். இந்த உடன்பாட்டின்மூலம் ஐரோப்பிய அமைதிக்காக நெப்போலியனை எதிர்த்துப் போரிட்ட கூட்டணி நாடுகள் 20 ஆண்டுகள் இணைந்து செயல்படுவதாக உறுதி பூண்டன. நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பிறகும் இந்த உடன்பாட்டினை 20 ஆண்டுகள் கட்டிக் காப்பதாயும் அவை உறுதியளித்தன. ஐரோப்பியக் கூட்டணியே சவ்மான்ட் உடன்பாட்டின் விளைவு என்பர் பலர். ஐரோப்பாவுக்கு ஒரு கழகம் வேண்டுமென்பது ஒரு புதிய கொள்கையன்று. இடைக் காலத்துப் புனித ரோமப் பேரரசும் ஓர் ஐரோப்பியக் கூட்டமைப்பு போன்றே செயல்பட்டது. 1791-ல் ஆஸ்திரிய சான்சலராகப் பணியாற்றிய கான்ட்ஸ் (Kaunitz) என்பாரும் இதனையே வலியுறுத்தியுள்ளார். அதனையே சவ்மான்ட் உடன்பாட்டில் ஐரோப்பியக் கூட்டணிகளும் பின்பற்றின.

**புனிதக் கூட்டணி** (The Holy Alliance)

வியன்னு மாநாட்டின் நோக்கங்களையும் ஏற்பாடுகளையும் செயல்படுத்துதற்கு ஓர் அமைப்பு வேண்டும். அது எத்தகைய அமைப்பாதல் வேண்டுமென்பது பற்றி வல்லரசுகள் ஆராய்ந்தன. வியன்னு மாநாட்டில் மிக்க செல்வாக்குடன் திகழ்ந்த முதலாம் சார் அலெக்ஸாந்தர், ஐரோப்பிய அமைதிக்குப் புனிதக் கூட்டணி ஒன்று வேண்டுமென்ற கருத்தை வெளியிட்டார். கிருத்துவ

சமயத்தில் ஆழ்ந்த நம்பிக்கை மிக்க இப்பேரரசர், சமய அடிப் படையில் கூட்டணி இயங்க வேண்டுமென விரும்பியதில் வியப்பேது மில்லை. இதே கருத்தினை 16-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஃபிரெஞ்சுப் பேரரசரின் அமைச்சராயிருந்த சல்லி (Sully) என் பாரும் வலியுறுத்தியுள்ளார். குருதிவெறி மிக்க அழிவிலிருந்து ஐரோப்பாவைக் காத்தலும் அனைத்து ஐரோப்பிய அரசர்களையும் உடன்பிறப்புகளென வாழச் செய்தலும் இவரது திட்டமாகும். பல் வேறு நாடுகளைச் சேர்ந்த 66 உறுப்பினர்களைக் கொண்ட பொது அவையொன்றை நிறுவவும் அதன்மூலம் ஐரோப்பிய அமைதி யினைப் பேணவும் இவர் திட்டமொன்று தீட்டினுர். கி. பி. 1610-ல் நான்காம் ஹென்றி உயிர் நீத்த காரணத்தால், இத் திட்டம் கைவிடப்பட்டது.

நெப்போலியனை வீழ்த்தியதில் பெரும் பங்கேற்ற முதலாம் சார் அலெக்ஸாந்தரும் தனது மாபெரும் செல்வாக்கினைப் பயன்படுத்தி மீண்டும் இத்தகையதொரு திட்டத்தினை, இம் மாநாட்டின் முன் வைத்தார். இவ்வமைப்பு சமயச் சார்புடையதாயிருத்தல் வேண்டு மெனவும் அவர் வலியுறுத்தினுர். அவர் ஒரு மறைஞானி (Mystic) என்ற காரணத்தால், சமயத்தினை மிகுதியும் வலியுறுத்தி ஞர். இவர் வான் குருடெனர் (Von Krudener) என்ற மெய் யுணர்வு மிக்க அம்மையாரின் உற்ற நண்பரென்ற காரணத்தால், அனைத்தும் சமய அடிப்படையில் நிகழ வேண்டுமென இவர் விழைந்தார். சமய அடிப்படையில் தான் ஐரோப்பாவுக்கு நிரந்தர அமைதியினை நல்க முடியுமென உறுதியாக நம்பினுர். கி. பி. 1804-ல் இத்தகையதொரு திட்டத்தினை "பிட்" (Pitt) என்பவ ரிடம் பரிந்துரைத்தார். கி. பி. 1815-ல் மீண்டுமொரு வாய்ப்புக் கிட்டியவுடன் அதனையே திரும்ப முன்மொழிந்தார்.

இவரது புனிதக் கூட்டணியின் நோக்கங்கள் வருமாறு. (1) ஐரோப்பிய அரசர்கள் அனைவரும் ஒரே குடும்பத்தினைச் சார்ந்த உடன்பிறப்புகள் போன்றோராவர். (2) குடும்பத்தின் தந்தையினை யொத்த அவர்கள் தங்கள் குடிமக்களைத் தங்கள் குழந்தைகள் போன்று பேணிப் போற்றல் வேண்டும். நீதி வழுவாமை, அறம், அமைதி (Justice, Charity and Peace) போன்ற கிருத்துவ சமயக் கொள்கைகள் வழி நிற்றல். (4) இறைவனுல் வழங்கப்பட்ட அரசுரி மையை இறைவழி நின்று நேரிய முறையில் செயல்படுத்துதல். (5) அரசின் தலையாய கடன் ஆளப்படுவோரின் நன்மையைக் கருதுதல்.[1] இவையே புனிதக் கூட்டணியின் உயரிய நோக்கங் களாகும். இக் கொள்கைகளைப் பின்பற்ற விரும்பும் அரசுகள் இதன்

[1] Hazen-p. 11.

உறுப்பினராகச் சேரலாம். இப் புனிதக் கூட்டணியில் ரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய மூன்று நாடுகளும் உடனடியாகச் சேர்ந்துகொண்டன. பின்னர் சார் மன்னர் பிற நாடுகளையும் அதில் சேருமாறு அழைப்பு விடுத்தார். ஐரோப்பாவின் நோயாளியான துருக்கியும், போப்பாண்டவரும் இதில் உறுப்பினராகுமாறு அழைக்கப் பெறவில்லை. பெரும்பாலான நாடுகள் இதில் உறுப்பினராயின. இங்கிலாந்து இதில் சேர மறுத்துவிட்டது.

புனிதக் கூட்டணி தொடக்கத்திலிருந்தே செயல்படவில்லை. சார் மன்னரின் பெரு முயற்சி கைகூடாதுபோனது. வல்லரசுகளில் ஒன்றான இங்கிலாந்து இதில் சேர மறுத்ததால் இது செயல்பட இயலவில்லை. காசல்ரீ இதனைப் புரியாத மெய்ம்மை நிலைக் கொள்கையெனப் புறக்கணித்தார். ("a Piece of shilime mysticism and nonsense"). அவர் இதில் கையொப்பமிட்டால் எதிர்பாராத இடருக்குட்பட நேருமென அஞ்சினர். மெட்டர்னிக்கும் இதனைப் பேரொலி எழுப்பவல்ல பொருளற்ற ஒன்றெனக் கூறினர். ("a oud sounding nothing") சமய உடை போர்த்த பேரார்வமிக்க கொடைப் பண்பெனவும் மெட்டர்னிக் இதனை விவரித்தார். ("a Philanthropic aspiration clothed in religions garb") சார் அலெக்ஸாந்தர் உடலற்ற இவ்வான்மாவுக்கு உடல் கொடுக்க எவ்வளவு முயன்றும் பயன் கிட்டாது போயிற்று. மெட்டர்னிக் புனிதக் கூட்டணியில் கையொப்பமிட்டிருந்தும் அதனை ஆதரிக்கவில்லை. சார் அலெக்ஸாந்தரை மகிழ்விக்கவே அதில் தான் கையொப்பமிட்டதாகவும், தனக்கு அதில் உள்ளார்ந்த நம்பிக்கையில்லையெனவும் அவர் கூறிவிட்டார். பிற நாடுகள் இதனால் தங்களுக்கு எத் தீங்கும் நிகழாது என எண்ணி, இதில் (1815-ல்) கையொப்பமிட்டன. சார் மன்னரைத் தவிர, பிற வல்லரசர்கள் இதனைப் பெரிதாக மதிக்கவில்லை.

**இதன் முக்கியத்துவம்**

புனிதக் கூட்டணி தோல்வியுற்றதெனினும் அது ஐரோப்பியப் பொது நலனுக்கான ஒரு மாபெரும் முயற்சியெனில் மிகையாகாது. 17ஆம் நூற்றாண்டில் 4ஆம் ஹென்றி ஐரோப்பியப் பொது அமைதிக்கான திட்டமொன்றினைத் தீட்டினர். அதற்குப் பின்னர் வந்த மாபெரும் திட்டமிதுதான். அது ஐரோப்பிய மக்கள் பலருக்கு ஒரு புத்துணர்வை நல்கியது. சமயப் பற்று மிக்க நல்லோர்கள் பலர் இதனைப் போற்றி வரவேற்றனர். ஐரோப்பா உய்வதற்கு இதுவே உற்றவழி எனவும் இதனைப் பலர் போற்றினர். மாபெரும் கவிஞரான கதே (Goethe) என்பாரும் இதனை வியந்து பாராட்டியுள்ளார். இதனினும் பெரிய நலன் பயக்கவல்ல வொன்று. இதுகாறும்

கண்டுபிடிக்கப்படவில்லை யென்று கதே (Goethe) உளம் நெகிழ்ந்து இதனைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.[1]

சார் மன்னரின் கற்பனைக் கொள்கை தோல்வியுற்றதில் வியப் பில்லை. நடைமுறைவாதிகளான காசல்ரீயும், மெட்டர்னிக்கும் இதனை ஏற்க மறுத்ததில் வியப்பேதுமில்லை. புனிதக் கூட்டணி சிறப்புமிக்க ஒன்றெனினும், பிற்போக்குக் கூட்டணிகளோடு சேர்த்துக் கருதப்பட்டுப் புறக்கணிக்கப்பட்டது. கெட்டல்பீ கூறுவது போல இது உரிமைக்கு மாறுபட்ட ஒன்றல்ல.[2] நடைமுறைக் கொவ்வாத சமயக் கொள்கைகள் மிகுந்த இப் புனிதக் கூட்டணி தோல்வியுற்றது. ரஷ்ய ஆதிக்கத்தினை விரும்பாத பிற ஐரோப்பிய வல்லரசுகள் இதனை ஏற்க மறுத்ததாலும் இது தோற்றது.

### இதன் தோல்விக்குரிய காரணங்கள்

புனிதக் கூட்டணி ஏன் தோல்வியுற்றதென்பது ஆராயவேண் டியதொன்றாகும். முதலாவதாக, அது ஓர் உடன்பாடன்று. அது ஓர் உறுதிமொழி போன்றது. தெளிவற்ற, சிக்கல் மிக்க, சமயச் சார்புடைய இவ்வுறுதிமொழியினை நாடுகள் புறக்கணித்தன. இரண் டாவதாக, இங்கிலாந்து இதனை ஏற்றுக்கொள்ளவில்லை. காசல்ரீ இதனைப் பொருத்தமற்ற ஒரு வெற்றுரை என இகழ்ந்துரைத்தார். இதனால், இங்கிலாந்து எதிர்பாராத இடர்ப்பாடுகள் பலவற்றை எதிர் நோக்க வேண்டிவருமெனக் கருதி, இதில் கையொப்பமிட மறுத்தது. மிகப் பெரிய வல்லரசான இங்கிலாந்து, இதனை ஏற்காதது இதன் தோல்விக்கு அடிப்படையானது. இங்கிலாந்துதான் ஐரோப்பாவின் வணிக வனிதை. அதுதான் ஐரோப்பிய நாடுகளுக்கு வேண்டும் பொருளை வழங்கிக் கூட்டணியைக் கட்டிக் காத்தது.

இங்கிலாந்தின் துணையும் அதன் பொருள் வளமும் இன்றி ஐரோப்பாவில் எத்தகைய கூட்டணியும் வெற்றிபெறுதல் இயலாத தொன்றாகும். இங்கிலாந்து இதனைப் புறக்கணித்ததால், இது வீழ்ந்தது. மூன்றாவதாக, மெட்டர்னிக்கும் காசல்ரீயும் ரஷ்யாவின் செல்வாக்கினை விரும்பவில்லை. ரஷ்யாவின் செல்வாக்கு வல்லரசுச் சமநிலையைப் பெரிதும் பாதிக்குமென அவர்களஞ்சினர். ஆகவே, புனிதக் கூட்டணிமூலம், ரஷ்யாவுக்குத் தலைமையினைத் தர அவர்கள் ஒருப்படவில்லை. அவர்களின் எதிர்ப்பின் காரணமாக, இது கைவிடப்பட்டது. இறுதியாக, ரஷ்யாவைத் தவிர, பிற நாடுகள் இதில் முழு நம்பிக்கை வைக்கவில்லை. சமயத்தை அரசியலோடு

[1] Quoted by Fisher, *History of Europe.*—p. 875.

[2] Ketelbey — p. 150.

தொடர்புபடுத்தியதை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் அரசியல் தந்திரத்தையும், வல்லமையையும் நம்பினரேயன்றி சமயச் சார்புடைய அரசியலை நம்பவில்லை. அது நடைமுறைக்கொவ்வாத தெனப் புறக்கணித்தனர். ஆதலின், புனிதக் கூட்டணி தோல்வி யுற்றது.

**ஐரோப்பியக் கூட்டணி** (The Concent of Europe)

சார் அலெக்ஸாந்தர் முன்மொழிந்த புனிதக் கூட்டணி, செயல் படவில்லை. மெட்டர்னிக், மாநாட்டுக் கொள்கைகளையும், ஏற்பாடு களையும் நிறைவேற்ற நால்வர் கூட்டணியொன்றினை நிறுவினர். இதில் இங்கிலாந்து, ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா ஆகியவை உறுப்பு நாடுகளாயின. சவ்மான்ட் உடன்பாட்டின்படி, கூட்டணி நாடுகள் ஐரோப்பிய அமைதிக்கு 20 ஆண்டுகள் ஒன்றிணைந்து செயல்படுவதாகக் கையொப்ப மிட்டிருந்தன. மெட்டர்னிக், சவ்மான்ட் உடன்பாட்டினை மேலும் விரிவுபடுத்தி, அதனை நடை முறைக்கேற்றவாறு மாற்றியமைத்தார். 1815ஆம் ஆண்டு, நவம்பர் திங்கள், 15ஆம் நாள் நால்வர் கூட்டணி கையெழுத்தானது.

நால்வர் கூட்டணி, தனது நோக்கங்களைத் திட்டவட்ட மாக அறிவித்தது. முதலாவதாக, இதுகாறும் ஐரோப்பாவை அல்லல்களுக்கு உட்படுத்திய புரட்சிகள், மீண்டும் தலைதூக்காமல் தடுத்தல். இரண்டாவதாக, வியன்னா மாநாட்டு ஏற்பாடுகளைக் காப்பாற்றல். மூன்றாவதாக, ஐரோப்பிய அமைதியைப் பேணல். நான்காவதாக, கூட்டணி நாடுகள் அவ்வப்போது கூடி, ஐரோப்பிய நிலையினை ஆராய்ந்து, அதற்குத் தக்க நடவடிக்கைகளை மேற் கொள்ளல். இவையே அதன் முக்கிய நோக்கங்களாகும். இந் நோக்கங்களை அனைத்து வல்லரசுகளும் ஏற்றுக்கொண்டு நால்வர் கூட்டணியில் சேர்ந்தன.

**கூட்டணியின் பணிகள்**

ஐரோப்பிய நிலையினை ஆராயக் கூட்டணி நாடுகள் பன்முறை கூடின. அம் மாநாடுகள் செய்த பணிகளை இனி ஆராய்வோம்.

1. **ஐக்ஸ்-லா-ஷெபெல் மாநாடு (1818)**: நால்வர் கூட்டணி யின் முதல் மாநாடு (The Quadruple Alliance) 1818ஆம் ஆண்டு, ஐக்ஸ்-லா-ஷெபெல் என்ற இடத்தில் கூடியது. இம் மாநாடு பல்வேறு பிரச்சினைகளை ஆராய்வதற்காக இங்குக் கூடியது. இம் மாநாடு முதற்கண் ஃபிரான்சின் வேண்டுகோளை ஆராய விழைந்தது. பாரிஸ் உடன்பாட்டின்படி தன்மீது சுமத்தப் பட்டிருந்த போரிழப்பீட்டுத் தொகை முழுவதினையும் ஃபிரான்சு செலுத்திவிட்டது. 18ஆம் லூயி மன்னரின் கீழ், ஃபிரான்சும்

அமைதியான ஆட்சியினை ஏற்றுக்கொண்டது. தனது நாட்டி லிருந்த கூட்டணிப் படைகளை விலக்கிக் கொள்ளுமாறும் தன்னையும் நால்வர் கூட்டணியில் சேர்த்துக்கொள்ள வேண்டுமெனவும் ஃபிரான்சு வேண்டுகோள் விடுத்திருந்தது. ஃபிரான்சின் வேண்டு கோளை நன்காராய்ந்த இக் கூட்டணி மாநாடு ஃபிரான்சையும் கூட்டணி உறுப்பினர்களில் ஒருவராகச் சேர்த்துக்கொள்ள இசைவு தெரிவித்தது. இக் கூட்டணியில் ஃபிரான்சும் சேர்த்துக்கொள்ளப் பட்டதால், இதுகாறும் இருந்த நால்வர் கூட்டணி, இப்போது ஐவர் கூட்டணியாக (Quintuple Alliance) மாறியது. ஃபிரான்சிலிருந்து கூட்டணிப் படைகளும் விலக்கிக்கொள்ளப்பட்டன. மெட்டர்னிக் இதனை "ஐவர் அறநெறி அரசு" (Moral Pentarchy) எனப் பெருமையுடன் அழைத்துக்கொண்டார்.

இந்த ஐவர் கூட்டணி, ஐரோப்பிய அமைதிக்குப் பொறுப் பேற்றது. சிறு நாடுகள் பல இதனிடம் தங்களது வழக்குகளைச் சமர்ப்பித்தன. இக் கூட்டணியும் அவற்றை ஆராய்ந்து தீர்ப்பு வழங்கியது. ஸ்வீடன் அரசரான பெர்னடட் என்பார் வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளையும் விதிகளையும் புறக்கணித்துவிட்டதாக நார்வே இதனிடம் விண்ணப்பித்தது. இக் கூட்டணி அம் முறை யீட்டினை ஏற்று அவ்வரசரைத் தக்க வகையில் எச்சரித்தது. மொனுகோ மக்கள் தங்களது அரசரின் கொடுங்கோன்மையி லிருந்து தங்களைப் பாதுகாக்குமாறு இக் கூட்டணியை வேண்டினர். இக் கூட்டணி மாநாடு, அவரையும் எச்சரித்தது. ஜெர்மனியி லுள்ள பேடன் (Baden) என்ற அரசில் மரபு உரிமை (Disputed Succession) சிக்கல் ஏற்பட்டபோது, அதனையும் இது தீர்த்து வைத்தது. ஹெஸ்ஸி (Hesse) அரசின் தேர்வாளர் (The Elector of Hesse) தனக்கு அரசர் என்ற பட்டம் வழங்கப்படவேண்டுமென வேண்டியபோது, இம் மாநாடு அவருக்கு அரசர் பட்டத்தை வழங்கியது. ஆஸ்திரியாவிலும், பிரஷ்யாவிலும் யூதர்கள் நடத்தப் பெறும் முறை பற்றியும் இம் மாநாடு ஆராய்ந்தது. ஸ்பெயினுக் குரிய தென்னமெரிக்கக் குடியேற்றங்கள், தங்களது தாய்நாட்டின் கொடுங்கோன்மையை எதிர்த்துப் புரட்சி செய்தபோது, இம் மாநாடு அப் புரட்சியினை ஒடுக்க விரும்பியது. அக் குடியேற்ற நாடுகளில் தனக்கிருந்த வணிகத் தொடர்பு காரணமாக, அங்குப் புரட்சி ஒடுக்கப்படுவதை இங்கிலாந்து விரும்பவில்லை. அங்கு மீண்டும் ஸ்பெயின் நாட்டின் ஆதிக்கம் நிறுவப்பட்டால், தனது வணிகம் பாதிக்கப்படலாமென இங்கிலாந்து அஞ்சியது. ஆயினும், முதலாம் சார் அலெக்ஸாந்தர் தென்னமெரிக்கப் புரட்சியினை அடக்க ஸ்பெயின் அரசரான 7ஆம் பெர்டினன்டை ஆதரிக்க வேண்டுமென வேண்டினர். மெட்டர்னிக்கும் தென்னமெரிக்காவில்

ஸ்பானிய ஆதிக்கம் மிகுவதை விரும்பவில்லை. இப் பிரச்சினையில் அவர் இங்கிலாந்துடன் ஒத்துழைத்தார். வல்லரசுகளிடையே கருத்து வேறுபாடுகள் மிகுந்த காரணத்தால், இப் பிரச்சினைக்குரிய தீர்வு ஒத்திவைக்கப்பட்டது.

பார்பெரிக் கொள்ளையர்களை அடக்குவதிலும் இக் கூட்டணி உறுப்பினர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றியது. இக் கடற் கொள்ளையர்கள், பன்னாட்டு வணிகத்திற்கு, குறிப்பாக மத்திய தரைக் கடல் வணிகத்திற்குப் பெருந்தடையாய் நின்றனர் மத்திய தரைக் கடலில், இக் கொள்ளையர்களை அடக்குவதற்காக. பன்னாட்டுக் கடற்படையொன்று நிறுத்தப்பட வேண்டுமென்ற ரஷ்யக் கொள்கை ஆராயப்பட்டது. இதனை இங்கிலாந்து ஏற்கத் தயங்கியது. மத்தியதரைக் கடற் பகுதிகளில் ரஷ்ய வீரர்களிருப்பதை இங்கிலாந்து வெறுத்தது. மத்தியதரைக் கடலில் வல்லரசுகளின் ஆதிக்கம் மேலோங்குவதை இங்கிலாந்து விரும்பவில்லை. இங்கிலாந்தின் எதிர்ப்புக் காரணமாக, அத் திட்டம் கைவிடப் பட்டது. இதன் காரணமாகவும் கூட்டணி நாடுகளிடையே கருத்து வேறுபாடுகள் மிகுந்தன.

இம் மாநாட்டில் அடிமை வணிகம் ஒழிக்கப்பட வேண்டுமென இங்கிலாந்து வலியுறுத்தியது. அடிமை வணிகத்தை ஒழிக்கும் பொருட்டு, பிற நாட்டுக் கப்பல்களைச் சோதனையிடும் உரிமையினைத் தனக்கு நல்க வேண்டுமென இங்கிலாந்து கோரியது. பிற நாட்டுக் கப்பல்களில் அடிமைகள் ஏற்றிச் செல்லப்படுவதைத் தடுக்கவே, இவ்வுரிமையைத் தனக்கு நல்க வேண்டுமென இங்கிலாந்து கூறியது. அவ்வுரிமையை இங்கிலாந்திற்குத் தர பிற வல்லரசுகள் மறுத்தன. இங்கிலாந்தின் கடல் வன்மையையும் வணிகச் சிறப்பையும் கண்டு, பொறுமையுற்று அதற்குத் தர பிற நாடுகள் மறுத்தன. இத்தகைய பிரச்சினைகளால் கூட்டணி நாடுகளிடையே கருத்து வேறுபாடுகளும் வெறுப்புணர்ச்சியும் மிகுந்தன. மெட்டர்னிக்கின் அரசியல் நுட்பத்தாலும் அறிவாற்றலாலும் இத்தகைய வேறுபாடுகளை மறைத்து ஒற்றுமையை நிறுவினர். ‘இதைப் போன்ற ஓர் அழகான மாநாட்டினைத் தான் இதுகாறும் கண்டதேயில்லை’ போன்ற புகழுரைகளால் வேற்றுமைகளை மூடி மறைத்தார். கருத்து வேறுபாடுகளிடையேயும் மாநாடு வெற்றிகரமாக முடிந்தது.

**2. டிரப்பாவ் மாநாடு (1820)** : ஐவர் கூட்டணியின் இரண்டாவது மாநாடு டிரப்பாவ் என்ற இடத்தில் 1820-ல் கூடியது. 1818-லிருந்து 1820-க்குள்ளான இவ்விரண்டாண்டுகளில் ஐரோப்பா

வெங்கும் குழப்பங்கள் மிகுந்தன. கொடுங்கோன்மையினை எதிர்த்து ஸ்பெயின், போர்ச்சுக்கல், நேப்பிள்ஸ் போன்ற இடங்களில் கிளர்ச்சிகள் தோன்றின. மக்களது புரட்சிகளுக் கஞ்சி அந் நாட்டு அரசர்கள், உரிமைகள் பலவற்றை மக்களுக்கு வழங்கினர். அம் மக்கள் புதிய அரசியல் அமைப்பினையும் பெற்றனர். ஸ்பானியக் கிளர்ச்சியினைக் கேள்வியுற்ற சார் மன்னர் பெரிதும் அதிர்ச்சியுற்றார். வியன்ன மாநாட்டுக் கொள்கைகளுக்கு எதிராக எழுந்த இப் புரட்சிகளை அவரால் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. அவை வல்லரசுகளுக்கு விடுக்கப் பட்ட அறைகூவலென அவர் கருதினார். சுற்றறிக்கையொன்றினை உடனே பிற வல்லரசுகளுக்கனுப்பி அப் புரட்சிகளை ஒடுக்கு மாறு வேண்டினார். தானே ஒரு பெரும்படையினை அனுப்பி, அப் புரட்சிகளை நசுக்கவும் முன்வந்தார்.

காசல்ரீ, சார் மன்னரின் திட்டத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தார். பிற நாட்டு உள்துறைச் செய்திகளில் தலையிடுவதைத் தனது தாய் நாடு விரும்பாதென அவர் அறிவித்தார். ஸ்பானியப் புரட்சி ஓர் உள்நாட்டுப் பிரச்சினை. அதில் தலையிடுவது தக்கதல்ல. மேலும், அது கூட்டணி நாடுகளுடைய அதிகாரத்திற்கு அப்பாற்பட்ட பிரச்சினை. ஆதலின், அதில் தலையிடுவது முறையன்று எனக் கூட்டணி நாடுகளை எச்சரித்தார். மெட்டர்னிக்கும் காசல்ரீயின் கூற்றினையே ஏற்றுக்கொண்டார். ஏனெனில், ரஷ்யா வலுவுள்ள நாடாக மாறின். அதனால் வல்லரசுச் சமநிலை பாதிக்கப்படுமென அஞ்சினார் அவர். அத்துடன் ரஷ்யா மிக்க வலிமை பெறுவதால், தனது தாயகப் பாதுகாப்பிற்கும் இது ஊறு விளைவிப்பதாயமையு மெனவும் அவர் கருதினார். ஆதலின், சார் திட்டம் ஐரோப்பிய அமைதிக்கேற்ற திட்டமன்று என அறிவித்தார். ரஷ்யப் படைகள் ஸ்பெயின் நாட்டில் ஆதிக்கம் செலுத்துவதைப் பிற வல்லரசுகளும் விரும்பவில்லை. ஆதலின், ஸ்பெயின் பிரச்சினையில் தலையிடுவதை இம் மாநாடு தற்காலிகமாக ஒத்திவைத்தது.

ஸ்பெயினில் தோன்றிய புரட்சி, தென் இத்தாலியிலும், குறிப் பாக நேப்பிள்ஸிலும் பரவியது. நேப்பிள்ஸ் அரசர், 1812ஆம் ஆண்டு வழங்கப்பட்ட அரசியலமைப்பினை ஏற்றுக்கொள்ள வேண்டுமென அச்சுறுத்தப்பட்டார். தனது ஆதிக்கத்தின் கீழ் இருக்கும் இத்தாலியில் தோன்றிய புரட்சியை, மெட்டர்னிக்கால் புறக்கணிக்க முடியவில்லை. இத்தாலியில் பாவியுள்ள இத் தொற்று நோய் படிப்படியாகத் தனது தாயகத்திலும் பரவிவிடக்கூடுமென அஞ்சிய மெட்டர்னிக், அதனை நசுக்கும் அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார். இம் மாநாட்டில் அதன் விளைவுகளைப் பெரிது படுத்தினார்.

டிரப்பாவ் மாநாட்டில் மெட்டர்னிக், புரட்சிகளையும் அது பரவுதலையும் வன்மையாகக் கண்டித்தார். இவர் இம் மாநாட்டில் " டிரப்பாவ் திட்டம் " (Protocol of Troppau) என்ற வரலாற்றுச் சிறப்புமிக்க தனது திட்டத்தினை வெளியிட்டார். இம் மாநாட்டில் இத் திட்டத்தினை ஏற்குமாறு பிற வல்லரசுகளையும் வேண்டினார். மெட்டர்னிக் கூற்றுப்படி, புரட்சியென்பது ஒரு தனிப்பட்ட நாட்டைப் பற்றிய பிரச்சினை மட்டுமன்று, அது ஒரு பன்னாட்டுப் பிரச்சினை. அது ஒரு மாபெரும் பூகம்பம் போன்றது. அதனை முன்னரே விழிப்புடனிருந்து காக்கவேண்டுமென்றாரவர். அனைத்து நாடுகளும் ஒன்றுகூடிச் செயல்பட்டால்தான், அதனை முறியடிக்க முடியுமென்றார். இரண்டாவதாக, மெட்டர்னிக் இம் மாநாட்டில் மற்றுமொரு கருத்தினையும் தெளிவுபடுத்தினார். அரசியலமைப் பென்பது அரசர்களால் உருவாக்கப்படவேண்டிய ஒன்றேயன்றி மக்களால் அது அரசர்கள்மீது திணிக்கப்படக்கூடாது என்றும் இவர் இங்கு வலியுறுத்தினார். இவ்வாறு கட்டாயப்படுத்தப்படும் எதனையும் நாம் ஒருங்கிணைந்து முறியடிக்கவேண்டுமெனவும் இவர் வலியுறுத்தினார். மூன்றாவதாக, புரட்சிமூலம் நிறுவப்பட்ட புதிய அரசுகளை நாம் ஐரோப்பியக் கூட்டணியிலிருந்து விலக்கி வைக்க வேண்டுமெனவும் இவர் வேண்டினார். மேலும், அத்தகைய புரட்சி களால், பிற நாடுகளில் அமைதி குலைந்தால், கூட்டணி நாடுகள் ஒன்றுகூடி இத்தகைய புரட்சிகளிலீடுபட்ட நாடுகளின் உள் நாட்டுத் துறையிலீடுபட்டு அவற்றைக் கூட்டணி நாடுகளின் ஆதிக்கத்திற்குக் கீழ்க் கொணர வேண்டுமெனவும் இவர் கூறினார். இவர் தனது டிரப்பாவ் திட்டத்தின்படி இரண்டு மிக முக்கியக் கருத்துகளைக் கூட்டணி நாடுகள், பன்னாட்டுச் சட்டங்களாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டினார். (1) புரட்சியால் வரும் அரசு செல்லாது. தெய்வீக உரிமைவழி (Divine Right) அமைக்கப்பெற்ற அரசுகளை மாற்றுவதற்கு மக்களுக்கு உரிமை யேதும் கிடையாது. (2) புரட்சியிலீடுபடும் நாடுகளின் உள் நாட்டு விவகாரங்களில் தலையிட்டுப் புரட்சியினை அடக்கி, அமைதி யினை நிறுவ, கூட்டணி நாடுகளுக்கு அதிகாரமுளது. இவ் வதிகாரம் 1815 வியன்னு மாநாட்டால் வழங்கப்பட்டுள்ளதென இவர் அறிவித்தார்.

இந்த டிரப்பாவ் திட்டத்தினை இங்கிலாந்து வன்மையாக எதிர்த்தது. 1820-ல் வெளியிட்ட தனது அறிக்கையில் காசல்ரீ அதனை வன்மையாகக் கண்டித்தார். மேலும், அவர் தனது அறிக் கையில் வல்லரசுச் சமநிலையை நிறுவுதலும், ஐரோப்பியச் சம நிலையைக் காத்தலும்தான், கூட்டணியின் மிக முக்கியப் பணிகள். ஸ்பானிய, இத்தாலியப் புரட்சிகள் யாவும் உள்நாட்டுப் பிரச்சினை

களாகும். அவை ஐரோப்பிய அமைதியினையோ, வியன்னா மாநாட்டு ஏற்பாடுகளையோ எவ்வகையிலும் பாதிக்காதென வலி யுறுத்தினர். மேலும், அதுபற்றி அவர் தனது அறிக்கையில் கூறியது வருமாறு. டிரப்பாவ் திட்டம் ஐரோப்பிய நாடுகளின் உள்துறை விவகாரங்களில் தலையிடுவதை முறையான செயலெனக் கருதுகிறது. இங்கிலாந்து இதனை முறையற்ற செயலெனக் கருதுகிறது. இங்கிலாந்து, தனது அரசியலமைப்பை ஒரு புரட்சி மூலம்தான் பெற்றது. இந்த உரிமையைப் பிற நாடுகள் பெற முனைந்தால், இங்கிலாந்து, அதனை மறுக்காதெனத் தெளிவாகக் குறிப்பிட்டார். மேலும், இத்திட்டம் மக்களது அடிப்படை உரிமை யையே மறுக்கிறது. புரட்சியைத்தடுப்பதற்குப் பதிலாக, இத் திட்டம் புரட்சியினைத் தூண்டுவதாயுளது எனவும் அவ்வறிக்கையில் கூறப் பட்டது. எந் நாடும் மற்றொரு நாட்டின் படைகள் தனது நாட்டில் நுழைவதை விரும்பாது. சான்றாக, ரஷ்யப் படைகள் தேம்ஸ் நதியைக் கடப்பதையோ, ஹைடு பூங்காவில் (Hyde Park) நுழை வதையோ, தங்கள் பாராளுமன்றத்தை நோக்கிச் சுடுவதையோ இங்கிலாந்து ஒருபோதும் விரும்பாது. மக்களாட்சி நாடு என்ற முறையில், இங்கிலாந்து கூட்டணி நாடுகள் பிற நாடுகளின் உள் நாட்டு விவகாரங்களில் தலையிடுவதை ஒருபோதும் அனுமதிக்கா தெனவும் அவ்வறிக்கை கூறியது. இவ்வறிக்கையால் மெட்டர்னிக் பெரிதும் அதிர்ந்துபோனார்.

இங்கிலாந்தின் ஆதரவையிழந்த மெட்டர்னிக், பிற நாடுகளின் ஆதரவினைப் பெற முயன்றார். ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் அவரது திட்டத்தை வரவேற்றன. பெரும் பான்மையான கூட்டணி நாடுகளின் ஆதரவினைப் பெற்ற இத் திட்டம், கூட்டணி நாடுகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. ஃபிரான்சு இத்திட்டத்தினை மறுக்காமல் ஒதுங் கிக்கொண்டது. இதனால், இங்கிலாந்தின் எதிர்ப்பு பயனற்றுப் போனது. டிரப்பாவ் மாநாடு இந்நிலையில் ஒத்திவைக்கப்பட்டு லைபாக் என்ற இடத்தில் கூடுவதாக முடிவு செய்யப்பட்டது.

**3. லைபாக் மாநாடு (1821)**: அடுத்த மாநாடு **1821-ல்** லைபாக் (Laibach) என்ற இடத்தில் முன்னரே திட்டமிட்டபடி கூடியது. நேப்பிள்ஸ் என்ற இடத்தில் தோன்றிய புரட்சியினை இம் மாநாடு உடனே ஆராயத்தலைப்பட்டது. இப்புரட்சி பற்றி நேப்பிள்ஸ் அரசர் பெர்டினன்டை, இக் கூட்டணி மாநாடு விசாரித்தது. இம் மாநாடு, புரட்சியை அடக்கி, மீண்டும் அங்கு வல்லாட்சியை நிறுவ ஆஸ்திரியாவுக்கு அதிகாரம் வழங்கியது. அதன்படி ஆஸ்திரியப் படைகள் நேப்பிள்ஸில் நுழைந்து அப் புரட்சியை அடக்கியது.

இதற்கிடையில் பீட்மாண்ட் என்ற இடத்தில் தோன்றிய புரட்சி யினையும் ஆஸ்திரியப் படைகள் ஒடுக்கின. டிரப்பாவ் திட்டம் இத்தாலி முழுவதும் நடைமுறைக்குக் கொணரப்பட்டது. இங்கிலாந்தின் எதிர்ப்பு பயனற்றுப்போனது. 80,000 வீரர்களைக் கொண்ட மாபெரும் ஆஸ்திரியப் படை இத்தாலியில் மீண்டும் வல்லாட்சியை நிறுவியது.

**4. வெரோனு மாநாடு (1822)**: இந்தக் கூட்டணியின் நான்காவது மாநாடு, வெரோனு என்ற இடத்தில் 1822-ல் கூடியது. இம் மாநாட்டுக்குச் சற்று முன்னர் காசல்ரீ கால மானுர். அவருக்குப் பின்னர் இம் மாநாட்டில் கலந்துகொள்ள கானிங் பிரபு தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருக்கு இம் மாநாடு பற்றி நல்லெண்ணம் ஏதுமில்லை. இம் மாநாடு கிரேக்க விடுதலைப் போரைப்பற்றி ஆராயவேண்டி வந்தது. நாட்டுப் பற்றுக் காரணமாக, கிரேக்கர்கள் துருக்கிய ஆதிக்கத்தினை எதிர்த்துப் புரட்சி செய்யலாயினர். பால்கன் பகுதியில் தமது ஆதிக்கத் தினை நிறுவ முயன்ற சார் மன்னர் கிரேக்கர்களுக்குத் தான் துணை புரிய ஆயத்தமாயிருப்பதாக அறிவித்தார். பால்கன் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் மேலோங்குவதை இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும் விரும்பவில்லை. பால்கன் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் மிகுவதை முற்றிலும் விரும்பாத மெட்டர்னிக், இம் மாநாடு அப் பிரச்சினை குறித்து ஆராய்வதைத் தடுக்க முயன்ருர். முறைமைக் கொள்கை யினை நாம் ஏற்றுக்கொண்ட காரணத்தால், கிரேக்கப் பிரச்சினை யில் இம் மாநாடு தலையிடுவது தக்கதல்லவென அறிவித்தார். கிரேக்கத்தின் சட்டபூர்வமான அரசர் துருக்கிய சுல்தான் என்ற காரணத்தால், முறையான அரசரை எதிர்த்து இம் மாநாடு ஒன்றும் செய்ய இயலாது என மொழிந்தார். சார் மன்னர் முதலாம் சார் அலெக்ஸாந்தரும் முறைமைக் கொள்கையின் ஆதரவாள ரென்ற காரணத்தால், அவரும் இப் பிரச்சினையில் மிகுதியும் தலையிட முடியாமற்போனது. மெட்டர்னிக்கினுடைய வாதத்திறன், அறிவாற்றல், அரசியல் நுட்பம் ஆகியவை சார் மன்னரைச் செயலிழக்கச் செய்தன. இது மாநாட்டுக்கப்பாற்பட்ட பிரச்சினை யாதலின் இதனைத் தவிர்த்தலே தக்கது என இம் மாநாடும் இறுதியில் முடிவு செய்தது.

இம் மாநாடு அடுத்து ஸ்பானியப் புரட்சி பற்றி ஆராய்ந்தது. ஸ்பானிய அரசர் ஸ்பெயினில் வல்லாட்சியை நிறுவ விரும்பினுர். அவ்வரசர் வல்லாட்சியை நிறுவ, தனக்குத் துணைபுரியுமாறு ஃபிரான்சை வேண்டினுர். ஃபிரான்சும் கூட்டணி நாடுகளின் பேரார்வையில் ஸ்பெயினில் தலையிட முன்வந்தது. ஆனுல், கானிங்

பிரபு அச் செயலை வன்மையாக எதிர்த்தார். ஸ்பானியப் புரட்சி உள்நாட்டுப் பிரச்சினை. அதில் தலையிடுவதற்கு ஐவர் கூட்டணிக்கு உரிமையில்லை என்பதை இவர் தெளிவாக்கினார். பிற வல்லரசுகளும் ஸ்பெயினில் ஃபிரான்சு தலையிடுவதை எதிர்த்தன. இங்கிலாந்து இப் பிரச்சினையிலிருந்து முற்றிலும் விலகிக் கொண்டது. அதன் பின்னர் இங்கிலாந்து தன்னை முற்றிலும் இக் கூட்டணியிலிருந்து விலக்கிக்கொண்டது. 1823-ல் இங்கிலாந்து இவ் ஐவர் கூட்டணியிலிருந்து விலகிக்கொண்ட பின்னர், ஃபிரான்சு தனது படையினை ஏவி, ஸ்பானியப் புரட்சியினை அடக்கி பெர்டினன்டை மீண்டும் அங்கு வல்லரசராக்கியது. ஸ்பெயினில் புரட்சி தோல்வியுறவே, அதனைக் கண்டு மகிழ்ந்த பெர்டினன்ட் மீண்டும் தனது ஆதிக்கத்தினைத் தனது தென்னமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் நிறுவ முயன்றார். 1818-லிருந்தே இப் பிரச்சினையில் ஸ்பெயின் மிக்க தீவிர ஈடுபாடு காட்டியது. இங்கிலாந்தின் வன்மையான எதிர்ப்பின் காரணமாக, அப பிரச்சினையை அது தற்காலிகமாகத் தள்ளி வைத்தது. வெரோனா மாநாடு, தென்னமெரிக்கக் குடியேற்றங்கள் மீதான ஸ்பானிய ஆதிக்கத்தினை ஆதரித்ததை இங்கிலாந்து முற்றிலும் விரும்பவில்லை. அம் மாநாட்டுப் போக்கினை எதிர்த்துத் தென்னமெரிக்கக் குடியேற்ற நாடுகளைச் சுதந்திர நாடுகளாக இங்கிலாந்து அங்கீகரிக்குமென கானிங் பிரபு அறிவித்தார். தென்னமெரிக்க நாடுகளின் உரிமையினைக் காக்கும்பொருட்டு, தமது மாபெரும் கடற்படையினையும் அங்கு அனுப்பிவைத்தார். அட்லாண்டிக் கடலில் குவிக்கப்பட்ட ஆங்கிலக் கடற்படை, பிற கூட்டணி நாடுகளுக்கோர் அறைகூவலாய் அமைந்தது. அத்துடன் மட்டும் அமையாது, அதுபோழ்து அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைவராய்த் திகழ்ந்த ஜேம்ஸ் மன்ரோ (James Manroe) என்பாருடன் தொடர்பும் கொண்டார். இங்கிலாந்தின் தூண்டுதலின்பேரில், தனது வரலாற்றுச் சிறப்பு மிக்க மன்ரோ திட்டத்தினை வெளியிட்டார். அத் திட்டப்படி பிற ஐரோப்பிய நாடுகள், அமெரிக்க நாடுகளில் தலையிட்டால் ஐக்கிய அமெரிக்க அரசு அதனை வன்மையாக எதிர்க்குமென அறிவித்தார்.

மன்ரோ திட்டம் இரண்டு மிக முக்கியக் கொள்கைகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்தது. (1) அமெரிக்கத் துறையில் பிற ஐரோப்பிய நாடுகள் தலையிடக்கூடாது. (2) அமெரிக்காவில் பிற அரசுகள் குடியேற்றங்களை அமைக்கக்கூடாது. "அமெரிக்கா அமெரிக்கர்களுக்கே" என்ற திட்டத்தினை முதன் முறையாக வகுதத பெருமை இவரையே சாரும். இதுவே, பின்னர் அமெரிக்க நாட்டின் சிறப்புமிக்க வெளிநாட்டுக் கொள்கையானது. இத் தலையிடாக் கொள்கையின் காரணமாக, அமெரிக்கா பெரிதும்

வளர்ச்சியுற்றது என்பதை யாரும் மறுக்கவியலாது. தென் னமெரிக்கக் குடியேற்றங்களும் விடுதலை பெற இத் திட்டம் பெரிதும் துணை நின்றது.

கானிங் பிரபுவின் இச் செயல், ஐரோப்பியக் கூட்டணி முறிவிற்கு மிக முக்கியக் காரணமானது. இங்கிலாந்தையும் அமெரிக்காவையும் எதிர்த்துத் தமது படைகளைத் தென்ன மெரிக்கக் குடியேற்றங்கள் மீது ஏவ, பிற கூட்டணி நாடுகள் மிகவும் அஞ்சின. பல ஆண்டுகள் ஐரோப்பிய அமைதியைப் பேணிக் காத்த ஐவர் கூட்டணி, அதனால் முறிந்தது. கூட்டணி முறிந் தாலும் அதன் நோக்கம் (Spirit) மறையவில்லை. 1823-ல் ஸ்பானிய அரசர் மாநாடு ஒன்றினைக் கூட்டி, ஐரோப்பியப் பிரச்சினைபற்றி ஆராய முன்வந்தார். இங்கிலாந்தின் எதிர்ப்புக் காரணமாக, அவரது நோக்கம் நிறைவேறவில்லை. 1825-ல் முதலாம் சார் அலெக்ஸாந்தர் கிரேக்கப் பிரச்சினை குறித்து ஆராய்வதற்காக, பீட்டர்ஸ் பர்க்கில் மாநாடு ஒன்றினைக் கூட்டினார். இங்கிலாந்து இதில் பங்கேற்க மறுத்துவிட்டது. கருத்து வேறுபாடுகள் காரணமாக, இம் மாநாடும் தோல்வியில் முடிந்தது. 1825-லேயே கூட்டணி முற்றிலும் முறிந்துவிட்டது. அதன் பின்னர், கானிங் பிரபு, ஐரோப்பியப் பிரச்சினைகள் மீண்டும் பழைய நிலைக்கே செல்கின்றன. அந் நாட்டுப் பிரச்சினைகளுக்கு அந் நாடும், பொதுப் பிரச்சினை களுக்குக் கடவுளும் இருப்பார் எனக் கூறி, நாடுகளுக்கே இவர் முக்கியத்தும் கொடுத்தார். ஐரோப்பியக் கூட்டணியினை இவர் முற்றிலும் புறக்கணித்தார். 1825-க்குப் பின்னர் ஐரோப்பியக் கூட்டணி மாநாடு கூட்டப்படவேயில்லை.

**கூட்டணியின் தோல்விக்குரிய காரணங்கள்**

இதுவே ஐரோப்பிய அமைதியின் முதல் முயற்சியாகும். ஆயினும், தன்னலம், கருத்து வேறுபாடுகள் போன்றவை இம் மாநாடு தோல்வியுறக் காரணமாயின.

(1) ஐரோப்பியக் கூட்டணி தோல்வியுறுவதற்குக் காரணம், வல்லரசுகளிடையே நிலவிய பொறாமை உணர்வேயாகும். நாடுகளிடை ஒற்றுமையென்பது இல்லாதுபோனது. அனைத்து நாடுகளையும் ஒன்றுபடுத்தவல்ல பொதுநலன், ஐரோப்பிய நாடுகளிடையேயில்லை. தன்னலம், குறுகிய நாட்டுப் பற்றுக் காரண மாக, அவற்றிடையே கருத்து வேறுபாடுகளும், பொறாமையுணர்வும் மிகுந்தன. இங்கிலாந்து தனது வணிகத்தையே குறிக்கோளாகக் கொண்டியங்கியது. தனது வணிக நலனுக்காக அது தென் னமெரிக்கக் குடியேற்ற நாடுகளை ஆதரித்தது. ரஷ்யாவுக் கெதிராகத் துருக்கியினையும் இதே காரணத்துக்குத்தான் ஆதரித் தது. இதனால், ஸ்பெயின் நாட்டுடன் அது நட்பு பாராட்ட இயல

வில்லை. அத்துடன் கூட்டணி நாடுகளின் கொள்கைக்கும் பெருத்த ஊறு விளைந்தது. முறைமைக் கொள்கைக்கும், புரட்சிகளை அடக்குதல் போன்ற வியன்னு மாநாட்டுக் கொள்கைக்கும் இங்கிலாந்து பெரும் பகையாய் நின்றது. ரஷ்யா, கிரீஸ் நாட்டில் தலையிடுவதையும் இது வன்மையாக எதிர்த்தது. பார்பெரிக் கடற்கொள்ளைக்காரர்களை அடக்க ரஷ்யா முன்வந்தபோது இங்கிலாந்து அதனையும் எதிர்த்தது. மத்தியதரைக் கடலில் ரஷ்ய ஆதிக்கம் மிகுந்துவிடுமோ என்ற அச்சம் காரணமாக, அதனையும் இங்கிலாந்து வன்மையாகக் கண்டித்தது. இங்கிலாந்தின் தன்னலப் போக்கைப் பிற கூட்டணி நாடுகள் விரும்பவில்லை. கூட்டணி நாடுகளிடையே பகை மிகுந்தது.

ரஷ்யாவும் ஆஸ்திரியாவும் கிழக்கு ஐரோப்பியப் பிரச்சினைகளில் முரண்பட்டன. வளர்ந்துவரும் ரஷ்ய வலிமையைக் கண்டு, ஆஸ்திரியா மிகவும் அஞ்சியது. வியன்னு மாநாட்டுக்குப் பின்னர், அது பெற்ற நிலப் பகுதிகளையும், அதன் பெரும்படையினையும் கண்டு, ஆஸ்திரியா பெரிதும் கலக்கமுற்றது. ஆகவே, சார் மன்னரின் திட்டங்கள் அனைத்தையும் இம் மாநாடுகளில் மெட்டர்னிக் எதிர்த்தார். மெட்டர்னிக்கை தன்னலம் காரணமாக, இங்கிலாந்தும் ஃபிரான்சும் ஆதரித்தன. சார் மன்னர், ஸ்பானியப் புரட்சியை ஒடுக்க தனது பெரும் படையை அனுப்ப முன்வந்தபோது, மெட்டர்னிக்கும் பிறரும் அதனைக் கண்டு கலங்கினர். ரஷ்யப் படைகள் ஸ்பெயின் நாட்டில் புகுந்து, அங்கு அவை ஆதிக்கம் செலுத்துவதை விரும்பாத மெட்டர்னிக், தனது அறிவாற்றலாலும் அரசியல் நுட்பத்தாலும் தடுத்தார். மெட்டர்னிக்கின் உற்ற நண்பரான முதலாம் சார் அலெக்ஸாந்தரும் அவரின் கூற்றுக்குப் பெரிதும் கட்டுப்பட்டவரானர். கிரேக்க நாட்டில் விடுதலைப் புரட்சி தொடங்கியபோது, சார் மன்னர் தனது ஆதிக்கத்தினை அங்கும் நிறுவ முன்வந்தார். வெரோனு மாநாட்டில் மெட்டர்னிக் அதனையும் வெற்றிகரமாக முறியடித்தார். ஒற்றுமையின்மையும், பொதுத் திட்டமின்மையும் ஐரோப்பிய நாடுகளிடையே பிளவை உண்டாக்கின. கெட்டல்பீ கூறுவதுபோல, பொதுநலப் போருக்கு, பொதுத் திட்டமில்லாத எக் கூட்டணியும் வெற்றி பெறுது என்பது உண்மையானது.[1]

டிரப்பாவ் மாநாட்டிலேயே ஐவர் கூட்டணியில் விரிசல் தொடங்கியது. வெரோனு மாநாட்டில் விரிசல் மிகுந்து, கூட்டணியும் உடைந்தது. நெப்போலியன் ஐரோப்பாவின் பொதுப் பகைவராயிருந்தவரை கூட்டணி நாடுகளிடையே ஒற்றுமை நிலவியது. நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பின்னர், ஐரோப்பிய

[1] Ketelbey—p. 185.

நாடுகளிடை பொது நோக்கும், பொதுத் திட்டமும் இல்லாது போயிற்று. இதன் விளைவாக ஐவர் கூட்டணி முறிந்தது.

(2) ஐவர் கூட்டணியிலிருந்து இங்கிலாந்து விலகிக்கொண்டதும் கூட்டணி முறிவுக்கு மற்றுமொரு காரணமாகும். ஐரோப்பாவில் மாபெரும் வல்லரசான இங்கிலாந்து, கூட்டணி நாடுகளின் செயல்களுக்கும், திட்டங்களுக்கும் பெரும் முட்டுக் கட்டையாய் நின்றது. இதற்குக் காரணம், அந் நாடுகளிடையே நிலவிய கருத்து வேறுபாடுகளேயாகும். ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்றவை பிற்போக்கு நாடுகள். அவை வல்லாட்சியில் மிக்க நம்பிக்கைகொண்டு திகழ்ந்தன. இங்கிலாந்தினைப் பொருத்த வரையில் அது மக்களாட்சியில் நம்பிக்கை கொண்ட ஒரு முற்போக்கு நாடாகும். இங்கிலாந்து வல்லரசுச் சமநிலையினையும், அமைதியினையும் பெரிதும் விரும்பியது. காரணம், அவை அதன் வணிக வளர்ச்சிக்கு மிக இன்றியமையாதவை. மக்களாட்சி நாடு என்ற முறையில் இங்கிலாந்து மக்களது உணர்ச்சிகளுக்கு மதிப்பு தரவேண்டும் என மாநாட்டில் வாதிட்டது. இங்கிலாந்தே தனது அரசியலமைப்பு முறையினைப் புரட்சிகள்மூலமே பெற்றது. பிற நாடுகளும் அதனையே பின்பற்றின. இங்கிலாந்து அதனை எதிர்க்காது என்ற கானிங் பிரபுவின் கூற்று பிற கூட்டணி நாடுகளைப் பெரிதும் அதிர்ச்சியுறச் செய்தது. பிற்போக்கு நாடுகள் இங்கிலாந்தின் போக்கைப் பெரிதும் வெறுத்தன. வல்லாட்சியைப் பேணுவதிலும், நாட்டுப் பற்றைப் புறக்கணிப்பதிலும், புரட்சிகளை அடக்குவதிலும் அவை கண்ணுங் கருத்துமாய் இருந்தன. பிற்போக்குத் தன்மை கொண்ட அரசர்களை மீண்டும் பதவியிலமர்த்தி அதன்மூலம் அவர்களின் ஆதரவைத் தேடுவதிலேயே அவை கவனம் செலுத்தின. இப் பிற்போக்குக் கொள்கைகளை இங்கிலாந்து எதிர்த்தது. இங்கிலாந்தின் எதிர்ப்பு புறக்கணிக்கப்படவே அது கூட்டணியிலிருந்து விலகிக்கொண்டது. ஐவர் கூட்டணியும் முறிந்தது.

(3) கூட்டணி நாடுகள், தன்மையிலும வேறுபட்டுக்கிடந்தன. இங்கிலாந்து முற்போக்குக் கொள்கைகளில் நம்பிக்கை மிக்கதொரு மக்களாட்சி நாடு. ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா போன்றவை பிற்போக்குக் கொள்கைகளில் நம்பிக்கை கொண்ட வல்லாட்சி நாடுகள். இவ் விருவகை நாடுகளும் ஒன்று சேர்ந்து செயல்படும் போது, கருத்து வேறுபாடுகள் தோன்றின. மக்களாட்சியும், வல்லாட்சியும் சேர்ந்து செயல்படுதலென்பது இயலாதுபோயிற்று. மக்களாட்சி நாடான இங்கிலாந்து, மக்கள் விருப்பு, வெறுப்புகளுக்கேற்ப செயல்படுதலே முறையென வாதிட்டது. வல்லாட்சி நாடுகள் மக்களுக்கு உரிமைகள் கொடுப்பது ஊறு விளைவிக்குமென

அஞ்சின. மக்களுக்கு உரிமைகள் நல்கினால், அவர்கள் புரட்சியிலீடுபடுவர். அதன் விளைவாகத் தாங்கள் பதவியிழக்க நேருமென வல்லரசுகள் அஞ்சின. ஆதலின், அவர்கள் முற்போக்குக் கொள்கைகளனைத்தையும் தங்கள் தன்னலங் காரணமாக எதிர்த்தனர். இதனால், கூட்டணி நாடுகளிடையே பெரும் பிளவு ஏற்பட்டது. அதன் விளைவாகக் கூட்டணி நாடுகள் ஒன்றிணைந்து செயல்பட முடியவில்லை.

(4) கூட்டணி முறிவுக்குப் பெருநாடுகளே காரணமாயிருந்தன. அவை சிறுநாடுகளை முற்றிலும் மதிக்கவில்லை. சிறு நாடுகளை அவை கூட்டணியில் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளவும் மறுத்தன. அவை பெருநாடுகளின் நலனுக்காகவே செயல்பட்டன. சிறு நாடுகள் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டன. பெரும் வல்லரசுகளின் நலனுக்காக அவை ஈவு இரக்கமின்றித் துண்டாடப் பெற்றன. சிறு நாடுகளின் உணர்வுகளும், நாட்டுப் பற்றும் மதிக்கப்படவேயில்லை. சிறு நாடுகள் இக் கூட்டணியில் நம்பிக்கையிழந்ததில் வியப்பேதுமில்லை. ஆகவே, இக் கூட்டணி ஓர் ஐரோப்பியக் கூட்டணியாகச் செயல்படவில்லை.

(5) மன்றோ கொள்கையும் இதன் வெற்றிக்குத் தடையாய் இருந்தது. ஐரோப்பியக் கூட்டணி, பிற நாடுகளின் விவகாரங்களில் தலையிடுவதை மன்றோ எதிர்த்தார். ஐரோப்பிய நாடுகள் தென்னமெரிக்காவில் குடியேற்றங்களை நிறுவி, அதன் மூலம் ஆதிக்கம் செலுத்த முற்பட்டன. தென்னமெரிக்க நாடுகள் பெரு வல்லரசுகளின் ஆதிக்க வேட்டைக்கிலக்காகும் நிலை ஏற்பட்டது. இதனால், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நலனும் பாதிக்கப்படும் நிலை ஏற்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நலனைக் காக்கும் பொருட்டு, மன்றோ தனது கொள்கையினை வெளியிட்டார். மன்றோ கொள்கை ஐரோப்பியக் கூட்டணிகளுக்கு ஓர் அறைகூவலாக அமைந்தது. மன்றோவின் எதிர்ப்புக் காரணமாக, கூட்டணி செயலிழந்து வீழ்ச்சியுற்றது.

(6) கானிங் கொள்கையும் கூட்டணி வீழ்ச்சிக்கு ஒரு காரணமாயமைந்தது. காசல்ரீ ஐரோப்பியக் கூட்டணிகளில் பங்கு பெற்றவரை பிற ஐரோப்பியத் தலைவர்களோடு நட்பு பாராட்டி, அவர்களது விருப்பு, வெறுப்புகளை நன்கு புரிந்துகொண்டு அதற்குத்தக நடந்துகொண்டார். அவருக்குப் பின் கூட்டணி மாநாட்டில் பங்கேற்ற கானிங் பிரபு, அவருக்கு முற்றிலும் மாறுபட்ட பண்பு நலன் கொண்டவர். அவருக்கும் பிற ஐரோப்பியத் தலைவர்களுக்குமிடையே நெருங்கிய நட்பேதுமில்லை. அவர்களது

பண்பு நலன்கள், தன்மை, விருப்பு, வெறுப்புகளை இவர் அறியார். அவர்கள் மீது கானிங் பிரபுக்கு நல்ல எண்ணமேதுமில்லை. போர்க் காலத்தில் அல்லது நெருக்கடி நேரத்தில், கூட்டணியிருப்பது தக்க செயலாகும். அமைதிக் காலத்தில் கூட்டணியிருப்பது இடர்ப் பாட்டினையே கொடுக்கும் என்பது இவர் தம் கருத்து. தனிப்பட்ட நாடுகளின் இறைமையில் (National Sovereignty) நம்பிக்கை மிக்க இவர், ஐரோப்பியப் பிற்போக்குக் கூட்டணியின் ஆதிக்கத் தினை வெறுத்ததில் வியப்பில்லை. ஆகவே, இங்கிலாந்தினைக் கூட் டணியிலிருந்து பிரித்து, அதன் முறிவுக்கு அடிக்கல் நாட்டியவர் இவரேயெனில் அது மிகையாகாது.

(7) இதன் தோல்விக்கு முதலாம் சார் அலெக்ஸாந்தரும் மெட்டர்னிக்கும் கூட பொறுப்பாவார்கள். ஐவர் கூட்டணியின் மிக முக்கிய நோக்கம், ஐரோப்பாவில் அமைதியினை நிலைநாட்ட லேயாம். ஆயினும், மெட்டர்னிக்கும் முதலாம் சார் அலெக்ஸாந் தரும் பிற்போக்குவாதிகள் என்ற காரணத்தால், கூட்டணியினைத் தவறுகப் பயன்படுத்தத் தலைப்பட்டனர். புதிய கருத்துகளை எதிர்க்கவும், புரட்சிகளையொடுக்கவும், மக்களாட்சியினை வீழ்த் தவும், ஐரோப்பிய நாடுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலை யிட்டுத் தங்களது வலிமையைப் பெருக்கவும் இவர்கள் பெரிதும் முனைந்தனர். ஆகவே, காலப்போக்கில் ஐவர் கூட்டணி என்பதே கொடுங்கோன்மையின் சின்னமாக, நாட்டுப் பற்றின் பகைவனுக, உரிமையின் எதிரியாக மாறிவிட்டது. கூட்டணியென்பதே பிற் போக்குக் கொள்கைகளை நிலைநாட்டவும், வல்லாட்சியைப் புதுப் பிக்கவும், மக்கள் உரிமைகளை எதிர்க்கவும் பெரிதும் பயன்பட்டது. கெட்டல்பீ என்ற வரலாற்று வல்லுநர் இதனைத் “ தன்னலக் குழு ” என்றழைப்பர்.[1] கூட்டணி, பிற்போக்கின் நிலைக்களனுக மாறிய தற்குக் காரணம், மெட்டர்னிக்கும் சார் அலெக்ஸாந்தருமேயாவர். 1815-லிருந்தே அவர்கள் முற்போக்குக் கொள்கைகளின் பகைவர் களாய்த் திகழ்ந்தனர். மக்கள் உரிமைகளைப் பறிப்பதிலும், புரட்சிகளை நசுக்குவதிலும், பிற்போக்காளர்களுக்கு ஆதரவு நல்குவதிலுமே நாட்டம் செலுத்தினர். அவர்களது பிற்போக்குத் தன்மையின் காரணமாக, கூட்டணி, காலம் என்ற மாபெரும் சக்திக்கெதிராகச் செயல்பட்டுத் தோல்வியுற்றது.

மேற் கூறிய காரணங்களால், ஐவர் கூட்டணி தோல்வியுற்றது. ஆயினும், இது குறைபாடுகளை மட்டுமே கொண்டதெனக் கூறு வதும் தவறு. இக் கூட்டணியின் பணிகளால் ஐரோப்பாவுக்குப் பல நன்மைகளுமேற்பட்டன. ஈண்டு அதன் நன்மைகளை ஆய்வதும் தக்கதாகும்.

[1] Ketelbey.— p. 156.

**இதன் தனிச்சிறப்பு**

ஐரோப்பியக் கூட்டணியென்பது, பன்னாட்டு அரசமைக்கும் முயற்சியின் முதற்படியெனில் மிகையன்று. நற்கால வரலாற்றில் முதன் முதலாகப் பல நாட்டுப் பிரச்சினைகளை ஆராய முற்பட்ட முதல் முயற்சி இதுவேயாம். இது மிகக் குறுகிய காலத்துச் சோதனையெனினும் வரலாற்றுச் சிறப்பு மிக்கது. நாட்டுப் பற்றும் பன்னாட்டு நிறுவனமும் ஒருங்கிணைந்து செயல்படுவது கடினமென்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

ஐரோப்பிய அமைதியினையும் வியன்னா மாநாட்டு ஏற்பாடுகளையும் இவ் ஐவர் கூட்டணி குறைந்தது 15 ஆண்டுகளாவது கட்டிக் காத்தது. இக்கூட்டணி இறுதி வரை அமைதிக்காகப் பெரும் பாடுபட்டது. அது முறிந்த பின்னரும்கூட, அதன் சக்தி போரினின்றும் ஐரோப்பாவை அரை நூற்றாண்டு காப்பாற்றியது. இக் கூட்டணியின் அமைதியைப் பேணும் தன்மை அனைத்து ஐரோப்பிய நாடுகளையும் ஆட்கொண்டதுடன் அவை அமைதியில் நாட்டம் கொள்ளவும் துணைபுரிந்தன.

இக் கூட்டணி ஐரோப்பிய வரலாற்றில் மாபெரும் பணியினை நிறைவேற்றியுள்ளது. இதுகாறும் இரு நாடுகளுக்கிடையே சச்சரவெனில் போர்தான் முடிவாக இருந்தது. ஐரோப்பிய அரங்கில் வல்லவன் வெற்றி பெறுவான் என்ற கருத்தே நிலவியது. துப்பாக்கி ஏந்திப் போரிட்டு, அமைதியினை நல்குவதிலும், கூடிப்பேசிப் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ளுதலே சாலச் சிறந்தது என்ற கொள்கையினை இம் மாநாடுகள் வலியுறுத்தின. நெப்போலியன் தோற்கடிக்கப்பட்ட பின்னர், மீண்டும் போரிட்டு அமைதியை நிலை நாட்டுவதிலும் பலரும் ஒன்று கூடி, அமைதியான முறையில் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதே சாலச் சிறந்த முறையென்பது உணரப்பட்டது. அதன் விளைவுதான் 1815-ல் கூடிய, வியன்னா மாநாடாகும். இம் மாநாடும் அதன் பின்னர் கூடிய ஐவர் கூட்டணி மாநாடுகளும் வரலாற்றுச் சிறப்பு மிக்கவையாகும். உலக வரலாற்றில் அமைதியைத் தேட முயன்ற முதல் முயற்சியாகும் இது கூட்டணி மாநாடுகள் அமைதியைக் காக்கப் பெரிதும் முயன்றன. நாடுகள் ஒன்றையொன்று நம்பி மாநாடுகள் நடத்தியதே வரலாற்றுச் சிறப்பு மிக்க முயற்சியென்பர் கிரேண்ட், டெம்பர்லி என்ற வரலாற்று வல்லுநர்கள்.[1]

இக் கூட்டணி மிகக் குறுகிய காலத்தில் நற்பணிகள் பல செய்துள்ளதை நாம் மறக்க இயலாது. ஃபிரான்சு அதற்குரிய இடத்தினைப் பெற்று ஐரோப்பிய அமைதிக்குப் பெரிதும் துணை நின்றது.

[1] Grant and Temperley.—p. 184

அதுவும் ஐரோப்பியக் கூட்டணியில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. இவ் ஐவர் கூட்டணி, ஐரோப்பிய அமைதியினைப் பேணியதுடன் அதன் நீதிமன்றமாகவும் செயல்பட்டது. ஸ்வீடன் அரசர் தவறான வழியில் சென்றபோது, இக் கூட்டணி அவரைக் கண்டித்தது; ஆற்றுப்படுத்தியது. அதுபோன்றே மொனாகோ அரசர், மக்கள் நலனைப் புறக்கணித்தபோது இக்கூட்டணி அவரையும் எச்சரித்து நல்வழிப்படுத்தியது. பேடன் அரசின் மரபுரிமைப் பிரச்சினைக்கும் நல்லதொரு தீர்வு கண்டது. ஹெஸ்ஸி தேர்வாளரையும் (The Elector of Hesse) நல்வழிப்படுத்தியது. பார்பெரிக் கொள்ளையர்களை அடக்கி, ஐரோப்பிய வணிகத்தை இக் கூட்டணி பெரிதும் ஊக்குவித்தது. அடிமை வணிகத்தைத் தடுக்க வேண்டுமென இது எச்சரித்தது. இதன் சாதனைகள் மிக்க கவர்ச்சியூட்டுவனவாய் இல்லையெனினும், அவை ஒரு மாபெரும் நற்பணியின் தொடக்கமெனில் மிகையாகாது. 1825-க்குப் பின்னரும் அதன் வழிமுறைகள் பின்பற்றப்பட்டனவெனில், அதன் சிறப்பு நனிவிளங்கும்.

1825-ல் இதன் உடல் மறைந்துபோயினும், அதன் உயிர் மாளவில்லை. இம் மாநாட்டின் கொள்கைகள் 1825–க்குப் பின்னரும் பின்பற்றப்பட்டன. கருத்து வேறுபாடுகள் இருப்பினும் விட்டுக்கொடுத்துப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணல் இன்றியமையாதது என்பதை, ஐரோப்பிய நாடுகள் இக்கூட்டணி மாநாடுகளிடமிருந்து கற்றன. கி. பி. 1832–ல் பெல்ஜியப் பிரச்சினையை ஆராய்வதற்காக லண்டனில் மாநாடொன்று கூட்டப்பட்டது. இது ஐரோப்பிய நாடுகள் கூட்டணி மாநாடுகளிடமிருந்து கற்றுக்கொண்ட ஒரு படிப்பினையாகும். இவ்வாறே, கிரேக்கப் பிரச்சினையை ஆராயவும் மாநாடு கூட்டப்பெற்றது. கிரிமியப் போருக்குப் பின்னர் 1856-ல் பாரிஸ் மாநாடும் இவ்வடிப்படையிலேயே கூட்டப்பட்டது. இத்தகைய மாநாடுகளே பின்னர் பன்னாட்டுச் சட்ட முறைகளையும் மனித உரிமைகளையும் ஆராய்ந்தன. ஐரோப்பிய வரலாற்றில் கூட்டணி மாநாடுகள் பல திட்டங்களுக்கு முன்னோடியாக விளங்கின.

இதனைச் சர்வதேச சங்கத்தின் முன்னோடி எனக் கூறுதலும் தகுமென்பர் "மெய்ட்டி" என்ற வரலாற்று வல்லுநர்.[1] சர்வ தேசச் சங்கத்தினைப் போன்றே, இதுவும் அமைதியை நிறுவப் பெரும் பாடுபட்டது. இதனது முயற்சி காலத்திற்குச் சற்று முற்பட்டதென்ற காரணத்தால், தோல்வியுற்றது. சுருங்கக் கூறுமிடத்து சர்வ தேசச் சங்கத்தின் செயல் முறைக்கு இக் கூட்டணியே ஒரு வழிகாட்டியாக அமைந்தது எனில் மிகையாகாது.

[1] Maiti—*History af Europe*—p. 226

# 3. ஜூலைப் புரட்சி (1830)

**ஃபிரான்சில் மீண்டும் பூர்போன் ஆட்சி : 18 ஆம் லூயி**

1813 ஆம் ஆண்டே நெப்போலியனின் வீழ்ச்சி தொடங்கி விட்டது. லைப்ஸிக் போர்க்களத்தில் அவர் முற்றிலும் தோற்கடிக்கப்பட்டார். ஃபிரான்சுமீது போர் தொடுக்க ஐரோப்பியக் கூட்டணி நாடுகள் ஆயத்தமாயிருந்தன. உள்நாட்டிலும் மக்கள் போரை விரும்பவில்லை. ஃபிரெஞ்சுப் பொருளாதாரமும் வீழ்ச்சியுற்று விட்டது. நெப்போலியனது படைகளும் சோர்வு மிகுதியால் போரை வெறுத்தன. 1814-இல் நெப்போலியன் தோற்கடிக்கப் பட்டுப் பதவியும் துறந்தார்.

நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பிறகு, ஃபிரெஞ்சு அரியணையில் யாரை அமர்த்துவது என்ற பிரச்சினை யெழுந்தது. வெற்றி பெற்ற நாடுகள் அது குறித்து மிகுதியும் ஆராய்ந்தன. அரசியலறிவு மிக்க தாலிரான் என்பார் மீண்டும் பூர்போன் குடும்பமே நிலைநிறுத்தப்படல் வேண்டுமென அறிவுறுத்தினர். முறைமைக் கொள்கையும் இதனால் நிலைநிறுத்தப் பெறுமெனவும் வாதாடினர் வெற்றி பெற்ற கூட்டணி நாடுகள் அக் கூற்றினை ஏற்றுக்கொண்டு, மீண்டும் 18 ஆம் லூயி மன்னரை ஃபிரான்சின் மன்னராக நியமித்தன. நாடு கடத்தப்பட்டிருந்த 18 ஆம் லூயி மன்னரும் கூட்டணிப் படைகளின் துணையோடு பாரிஸில் பதவி யேற்றார். கூட்டணிப் படைகளோடு மூட்டை முடிச்சுகளுடன் வந்தவரெனப் பாரிஸ் மக்கள் இவரை எள்ளி நகையாடினர்.

18 ஆம் லூயி மன்னர் செவ்வையாக ஆட்சிப் பொறுப்பினை யேற்று நடத்துதற்கு முன்னரே, நெப்போலியன் சிறையிலிருந்து தப்பி வந்து மீண்டும் ஃபிரான்சின் அரியணையேறினர். நெ (Ney) என்ற படைத்தலைவர் அவருக்கு அடைக்கலம் தந்து, பெரிதும் ஆதரித்தார். பின்னர் மக்களும் படைவீரர்களும் அவர் பக்கம் சேர்ந்தனர். இதனையறிந்த 18 ஆம் லூயி மன்னர், நாட்டை விட்டுத் தப்பியோடினர். அதன்பின்னர், நெப்போலியனது வரலாற்றுச் சிறப்புமிக்க 100 நாள்கள் ஆட்சி தொடங்கியது. இதனால், சினங்கொண்ட கூட்டணிப் படைகள் மீண்டும் பாரிஸை முற்றுகை யிட்டன. 1815 ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 18 ஆம் நாள்

வெல்லிங்டன் என்ற ஆங்கிலப் படைத் தலைவர் நெப்போலியனை முற்றிலும் தோற்கடித்தார். தோல்வியுற்ற மாவீரன் நெப்போலியன் செயின்ட் ஹெலினாத் தீவுக்கு அனுப்பப்பட்டார். இரண்டாம் முறையாக 18 ஆம் லூயி மன்னர் பதவியில் அமர்த்தப்பட்டார்.

18 ஆம் லூயி மன்னர், பெரும் கூச்சல், குழப்பம், போர்களுக்குப் பின்னர் பதவியேற்றார். இவர் பதவியேற்ற பின்னர், அரச கட்சியினர் (Royalists) கத்தோலிக்க சமயத்தினர் போன்றோரது கை மிகவும் ஓங்கியது. அவர்கள் நெப்போலியனின் ஆதரவாளர்களைப் பெரிதும் பழிவாங்கினர். போனபார்ட் கட்சியினரைப் பழிவாங்குவதற்காகப் பல நீதி மன்றங்கள் அமைக்கப் பெற்றன. பிராட்டடஸ்டண்டுகள், குடியரசுக் கட்சியினர், போன் பார்ட்டுகள் அனைவரும் வன்மையாகத் தண்டிக்கப்பெற்றனர். நூற்றுக் கணக்கானவர்கள் கொல்லப்பட்டனர். வெண் கொட்டம் (White Terror) தலைவிரித்தாடியது.

### புதுப்பிக்கப்பட்ட அரசின் பல்வேறு பிரச்சினைகள்

வரலாற்று வல்லுநர் ஹேசன் என்பார் கூறுவது போல 1789 முதல் 1815 வரை ஃபிரான்சு கண்ட மாற்றங்களைப்போல, வேறு எந்த நாடும் கண்டதில்லை.[1] 1789, புரட்சிக்குப்பின்னர் ஃபிரான்சு பெரிதும் மாறிவிட்டது. புதிய கருத்துகள் பல வேரூன்றி ஃபிரெஞ்சு சமயத்தில் பல பெரும் மாறுதல்களுக்கு வித்திட்டு இருந்தன. 1815-க்குப் பின்னர், ஃபிரெஞ்சு சமுதாயத்தில் இரு பெரும் பிளவுகள் தோன்றின. செல்வர்களிடையேயும் மக்களிடையேயும் மீண்டும் பெருங்கருத்து வேறுபாடுகள் தோன்றின. ஒரு சாரார் பழையமுறையும், அரசரும், உயர்குடியினரும், சிறப்புரிமைகளும் அவ்வாறே இருக்கவேண்டும் என விரும்பினர். பிறிதொரு சாரார், புதிய கருத்துகளையும், மக்களாட்சியினையும் வரவேற்றனர். 18 ஆம் லூயி மன்னர் அரியணை ஏறியபோது இவ்விரு சாராரையும் ஒன்றிணைத்து அமைதியினை நிலைநாட்டும் பொறுப்பு அவருக்கேற்பட்டது. மன்னராட்சியின் வெற்றியும், தோல்வியும் அவர் பின்பற்றும் கொள்கையினையே பெரிதும் சார்ந்திருந்தது. இதுவே அவரது முதல் பிரச்சினையாகும்.

அடுத்து, புரட்சியின்போது நாட்டைவிட்டு வெளியேறிய செல்வர்கள் மீண்டும் நாடு திரும்பியதும் வந்த பிரச்சினையாகும். புரட்சியின்போது நாட்டை விட்டோடி, பிற நாடுகளோடு சேர்ந்து சதியிலீடுபட்டவர்கள் இவர்கள். இவர்கள்தான் மக்களால் துரோகி

[1] Hezen,—p. 66

களெனப் பழித்துரைக்கப்பட்டவர்கள். பழைய ஆட்சி நிறுவப்பட்டவுடன் பழைய சிறப்புரிமைகளனைத்தும் மீண்டும் தங்களுக்கு வழங்கப்படவேண்டுமெனப் போராடத் தலைப்பட்டனர். புதிய கருத்துகளையும், மக்களாட்சிக் கொள்கைகளையும் முற்றிலும் ஏறக மறுத்தனர். அவர்களது தீவிரத் தன்மையினைக் குறைத்து அவர்களையும் பிறருடன் ஒத்து வாழச் செய்யும் பொறுப்பு இவருக்கேற்பட்டது.

இம் மன்னரது மூன்றுவது பிரச்சினை, நிலத்தினைச் சார்ந்த ஒன்றாகும். 1789 புரட்சியின் விளைவாக, நிலங்களனைத்தும் உயர் குடியினரிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்டன. அவை யாவும் உழவர்களுக்கு வழங்கப்பட்டன. இதன் மூலம், புரட்சியை ஆதரிக்கும் ஒரு புது குடியானவர் வகுப்பை உருவாக்கியது ஃபிரெஞ்சுப் புரட்சி. வியன்னு மாநாட்டால் நிலைநாட்டப் பெற்ற மன்னராட்சி, இப்புது வகுப்பினை முற்றிலும் புறக்கணிக்க இயலவில்லை. அவர்களின் ஆதரவும் அதற்குப் பெரிதும் தேவைப்பட்டது. இதனை உயர்குடியினரும் பிறரும் விரும்பவில்லை. 18 ஆம் லூயி மன்னருக்கு இவ்விரு சாராரையும் ஒன்றுபடுத்தி, அமைதியினை நிலை நாட்டவேண்டிய கட்டாயமேற்பட்டது.

மீண்டும் புதுப்பிக்கப்பட்ட பழைய ஆட்சியின் மற்றுமொரு பிரச்சினை சமயமாகும். புராட்டஸ்டண்டு சமயத்தினருக்கு உரிமை வழங்குவதா ? கத்தோலிக்க சமயத்தைமட்டும் ஆதரிப்பதா ? என்பது இவரது மாபெரும் பிரச்சினையாயிருந்தது.

ஐந்தாவதாக வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளையே ஃபிரெஞ்சு மக்கள் விரும்பவில்லை. மீண்டும் பிற்போக்குக் கூட்டணிகளின் துணையுடன் பழைய மன்னராட்சி நிலைநிறுத்தப் பெற்றதை மக்கள் ஒரு சிறிதும் விரும்பவில்லை வியன்னு மாநாட்டு ஏற்பாட்டின் விளைவாக ஃபிரான்சு தனது பகுதிகள் பலவற்றினை இழந்தது பெரும் தொகையைப் போரிழப்பீடாகக் கொடுக்க வேண்டிய நிலையும் அதற்கேற்பட்டது. இதற்கிடையில் பதவிக்கு வந்த 18ஆம் லூயி மன்னர் மக்களது ஆதரவினைப் பெறுவதே பெரும்பாடாயிருந்தது. ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், மக்களிடையே பரவியிருந்த மக்களாட்சிக் கொள்கையினை இவரால் முற்றிலும் புறக்கணிக்க இயலவில்லை. மக்கள் விரும்பும் வண்ணம் ஆட்சி புரிதலே அவரது மாபெரும் பிரச்சினையாயிருந்தது.

**18 ஆம் லூயி : ஆட்சி (1815—1824)**

1815 ஆம் ஆண்டு, 18 ஆம் லூயி மன்னர் மிக்க பழுத்த வயதில் ஃபிரெஞ்சு அரியணையேறினர். இவர் 16 ஆம் லூயி மன்னரின்

சகோதரராவார். கி. பி. 1791-ல் ஃபிரான்சை விட்டு வெளியேறிய இவர், பிரஸ்ஸல்ஸ், பிரன்ஸ்விக், வார்சா போன்ற இடங்களில் சில ஆண்டுகள் வாழ்ந்தார். அதன் பின்னர் 1807-ல் ஹாம்ஷயரில் (இங்கிலாந்து) குடியேறினர். கி. பி. 1814-ல் கென்ட் நகருக்கு வந்து ஃபிரான்சின் அரசுரிமைக்கான போராட்டத்தில் ஈடுபட்டார். தாலிரான் போன்றோரின் நட்பினைப் பெற்ற பின்னர், ஃபிரெஞ்சு மக்களின் ஆதரவினைப் பெறுதற்காக கென்ட் சாசனம் ஒன்றையும் வெளியிட்டார். ஆயினும், உள்ளூர இவர் வல்லாட்சியினையே பெரிதும் விரும்பினர். பூர்போன்கள் எதனையும் கற்கவுமில்லை; எதனையும் மறந்துவிடவுமில்லை என்பதற்கு இதுவே நல்லதொரு சான்றாகும். இறையுரிமைக் கோட்பாட்டில் இவர் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்தார். நாடு கடத்தப்பட்டு, லண்டனிலிருந்தபோது ஓர் ஏவலர் அவரிடம் " ஐயா தாங்கள், இப்போது ஃபிரெஞ்சரசர் " என்று கூறியபோது " நான் எப்போது ஃபிரெஞ்சரசனாக இல்லை. " என்றாராம். இது அவர் மரபுரிமைக் கொள்கையிலும், இறையுரிமைக் கோட்பாட்டிலும் வைத்திருந்த ஆழ்ந்த நம்பிக்கையினைப் புலப் படுத்தும். அரச பரம்பரை அவருக்கு ஒரு தனிப் பொலிவினைத் தந்தது. அந் நிறைவோடு அவர் அரசரானர்.

இறையுரிமைக் கோட்பாட்டில் அவர் நம்பிக்கை மிக்கவரா யினும், பொது அறிவுமிக்கவர். ஃபிரெஞ்சுப் புரட்சியினையும் அதன் விளைவுகளையும் நேரில் கண்டவர் இவர். ஆதலின், அவர் அரசியல், சமுதாயத் துறைகளில் ஏற்பட்டிருந்த விளைவுகளை நன்கறிந்த வரானர். நாடோடி வாழ்வின் அனைத்து இன்னல்களையும் நுகர்ந்த அவர், மீண்டும் அத்தகைய வாழ்வினை மேற்கொள்ள விரும்பவில்லை. ஆகவே, தீவிர வழிமுறைகளை விடுத்து, நடுவழி நின்று அரசாள முடிவு செய்தார். மக்களிடமிருந்த பெரும் பிளவு உணர்ச்சிகளையும் அவர் மிகவும் வெறுத்தார். ஃபிரெஞ்சு மக்கள் அனைவரும் ஒரே மக்களாக வாழவேண்டுமென இவர் பெரிதும் விரும்பினர். இவ்விரு சாரரையும் ஒன்றிணைத்து ஒன்றுபடுத்துவதே தனது நோக்கம் எனவும் தனது அறிக்கையொன்றில் இவர் அறிவித்தார். ஒருவித சமரச நோக்கோடு செயல்படுவதையே இவர் தம் கொள்கையாகக் கொண்டார்.

" நாடு, நானே நாடு " என்ற கோட்பாடு மலையேறிவிட்டது என்பது இவர் தம் துணிபு. 1814 ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 4 ஆம் நாள் மக்கள் ஆதரவினைப் பெறுவதற்காகச் சாசன மொன்றினை வெளியிட்டார். அச் சாசனம் இறையுரிமை பற்றிய நீண்ட ஒரு முன்னுரையைக் கொண்டிருந்தது. பின்னர் அதில் ஃபிரெஞ்சு மக்களுக்கு வழங்கப்பட்டிருந்த சலுகைகளைப் பற்றிய

விளக்கம் தரப்பட்டிருந்தது. முதலாவது, அரசரே நாட்டின் நிர்வாகத் தலைவர். அவரே படைத்தலைவர். அரசரே, அனைத்து அலுவலர்களையும் நியமிக்கும் சிறப்புரிமை பெற்றவர். போர் அறிவிப்பு செய்யவும், அமைதி உடன்பாடு செய்துகொள்ளவும் மேலாணை (Ordinance) பிறப்பிக்கவும் அவரே உரிமை பெற்றவர். அவசர சட்டங்களைப் பிறப்பிக்கும் உரிமை பெற்றவரும் அவரே. இரண்டாவதாக, இச் சாசனம் பாராளுமன்றத்தினைப் பற்றிய கருத்துகளைக்கொண்டது. அச் சாசனப்படி பாராளுமன்றம் இரு அவைகளைக் கொண்டதாக இருக்கும். அவை: (1) பிரபுக்கள் அவை (Chamber of Peers). (2) பிரதிநிதிகள் அவை (Chamber of Deputies). மேலோரவை உறுப்பினர்களை அரசரே நியமிப்பார். 300 பிராங்குகளுக்கு மேல் வரிகொடுப்போர் மக்களவை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பர். அவர்கள் ஐந்தாண்டுகளுக் கொருமுறை மக்களவை உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் படுவர். பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களனைத்தையும் அரசரே முன்மொழிவார். பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெற்றே அரசர் வரி விதிப்பார். (3) இச் சாசனம் ஃபிரெஞ்சு மக்கள் அனைவரும் சமம் என வலியுறுத்தியது. நெப்போலியனது சட்ட முறைகளும், புரட்சிக் காலத்து நிலத்தீர்வையும் தொடர்ந்து வழக்கிலிருக்க இது அனுமதி யளித்தது. ஆட்சியின் சமயமாக கத்தோலிக்க சமயம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. (4) மக்கள் அனைவருக்கும் சம உரிமை நல்கப்பட்டது. அரசு அலுவல்கள் வகுப்பு வேறுபாடு கருதாது தகுதியின் அடிப்படையில் நல்கப்படுமெனவும் அறிவிக்கப்பட்டது. தக்க ஆதாரமின்றி எவரும் கைது செய்யப்படமாட்டார்களெனவும் இது வலியுறுத்தியது. பேச்சுரிமையும், செய்தித் தாள்களுக்கு உரிமையும் வழங்கப்பட்டன.

**1814**ஆம் ஆண்டுச் சாசனம் (**Constitutional Charter**) வரம்புக் குட்பட்ட முடியாட்சி போன்றவொன்றை ஃபிரெஞ்சு மக்களுக்கு வழங்கியது. நன்கு ஆராயின், அது பழைமையினையும் புதுமை யினையும் இணைக்க முயன்ற முயற்சியென்பது புலனாகும். அது அரசரால் மக்களுக்கு வழங்கப்பட்ட ஒன்றாகும். அரசரது அருளால் மக்களுக்கு அது வழங்கப்பட்டது. ஆதலின், இச் சாசனத்தில் மக்களது பங்கேதுமில்லை. அது இறையுரிமைக் கோட்பாட்டினை அடிப்படையாகக் கொண்ட காரணத்தால், அரச ஆதரவாளர்கள் இதனைப் பெரிதும் வரவேற்றனர். அனைத்து முக்கிய அதிகாரங்களும் அரசரிடமே இருப்பதைக் கண்டு, அவர்கள் பெரிதும் மகிழ்ந்தனர். நிர்வாகத் தலைவரென்பதோடு, அரசரே அமைச்சர்களை நியமிக்கும் உரிமையினையும் பெற்றுத் திகழ்ந்தார். அமைச்சர்களும் அரசருக்குப் பொறுப்பானவர்களே யன்றிப்

பாராளுமன்றத்திற்கல்ல. இதனை முற்போக்காளர்கள் முற்றிலும் வெறுத்ததில் வியப்பில்லை. பெரும்பான்மைக் கட்சி உறுப்பினர்களிடையேயிருந்துதான் அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று இச் சாசனம் வலியுறுத்தவில்லை. ஆகவே, அரசர் பாராளுமன்றத்தின் விருப்பு, வெறுப்புகளைப் புறக்கணித்துவிட்டு, தனக்கு வேண்டியவர்களை மட்டுமே அமைச்சர்களாக நியமித்துக் கொண்டார். அரசரால் நியமிக்கப்பெற்ற அமைச்சர்களும் அரசரது ஆணைவழி இயங்கினரேயன்றிப் பாராளுமன்றத்தினை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. இச் சாசனம் அரசருக்குப் பல சிறப்பதிகாரங்களையும் வழங்கியிருந்தது. அவ்வதிகாரங்களைப் பயன்படுத்திக்கொண்டு, அரசர் தான் விரும்பியவண்ணம் செயல்படுவதற்கும் வாய்ப்பிருந்தது.

இத்தகைய குறைகளிருப்பினும், இச் சாசனம் வரலாற்றுச் சிறப்புமிக்கது. இது புரட்சியின் மிக முக்கியக் கருத்துகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்தது. முதலாவதாக, இச் சாசனத்தை வெளியிட்டமையே அரசர் தான் விரும்பிய வண்ணம் செயல்பட இயலாது என்பதைத் தெளிவுபடுத்தியது. வரம்பு கடந்து அவர் செயல்பட முடியாதென்பதையும், சட்டத்திற்குட்பட்டுத்தான் செயல்பட வேண்டுமென்பதையும் நன்கு அது புலப்படுத்தியது. இரண்டாவதாக, இச் சாசனம் ஹேசன் என்பார் கருதுவதுபோல 1815-லிருந்த ஃபிரான்சு 1789-லிருந்த ஃபிரான்சினும் முற்றிலும் மாறுபட்டதென்பதைத் தெளிவுபடுத்தியது. மூன்றாவதாக, புரட்சியின் மிக முக்கியமான சீர்திருத்தங்களான சட்டத்தொகுப்பு, சட்டத்திற்கு முன் அனைவரும் சமம் போன்ற மாபெரும் மக்களாட்சிக் கொள்கைகளையும் இது ஏற்றுக் கொண்டது. நான்காவதாக, 1789 பூர்போன் அரசுக்கு எதிராக நிகழ்ந்த புரட்சியினையும் இச் சாசனம் மன்னித்தது.

அரசியலமைப்பு வரலாற்று வல்லுநர்கள் 1814 ஆம் ஆண்டுச் சாசனத்தை ஆங்கில அரசியலமைப்போடு ஒப்பிட்டு, அதனை யாத்துள்ளனர். வியன்னு மாநாட்டிற்குப் பின்னர் பூர்போன் அரசு வீழ்ச்சியுறுவதற்கே இச் சாசனந்தான் காரணமென்பாரும் உளர். 18ஆம் லூயி மன்னர் ஆங்கிலப் பாராளுமன்ற முறையை ஏற்க மறுத்தார். ஆங்கில அரசர்கள் ஆட்சி புரிவார்களே தவிர, ஆளமாட்டார்கள். ஆனால், 18ஆம் லூயி மன்னர் ஆளவும் ஆட்சி புரியவும் விழைந்தார். நல்ல பாராளுமன்ற ஆட்சி, நல்ல கட்சி அரசியலை அடிப்படையாகக் கொண்டது. ஆனால், ஃபிரான்சைப் பொருத்தமட்டில் கட்சிகள் செவ்வையாக இயங்கவில்லை. தீவிரவாதிகள், மிதவாதிகள், முற்போக்குவாதிகள் ஆகியோரிடையே

கருத்து வேறுபாடுகள் நிலவிய காரணத்தால், மக்களாட்சியே செயல்படுவதற்கு வாய்ப்பில்லாமற்போய்விட்டது. மேலும், ஆங்கில அரசர்கள் பாராளுமன்ற ஆட்சியில் தலையிடமாட்டார்கள். ஆனால், 18 ஆம் லூயி மன்னர் பாராளுமன்ற ஆட்சியினை முற்றிலும் விரும்பவில்லை. ஐந்தாவதாக, இங்கிலாந்தில் அமைச்சர்களனை வரும் பெரும்பான்மைக் கட்சியுறுப்பினர்களிடையே இருந்துதான் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்களும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பாயிருப்பர். ஆயினும், 18 ஆம் லூயி மன்னர் வழங்கிய சாசனம் இதனை வலியுறுத்தவில்லை. முன்னுக்குப்பின் முரணாக அரசர் செயல்புரிந்ததற்கு இதுவே காரணமாகும்.

நல்லாட்சி நடைபெற அங்குக் கட்சிகளும் ஒத்துழைக்கவில்லை. இது அக் கட்சியின் செயல்களை நன்கு ஆராய்ந்தால், தெள்ளெனப் புலனாகும். வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், நாடு திரும்பிய ஃபிரெஞ்சுச்செல்வர்கள் மீண்டும் பழைய வரம்பற்ற வல்லாட்சியினை நிறுவ முனைந்தனர். புரட்சியால் வந்த மாற்றங்களை முற்றிலும் புறக்கணித்துவிட்டு, மீண்டும் பழைய ஆட்சி முறையினை நிறுவு தலையே தங்களது தலையாயக் கடனாகக் கருதினர். பழைய ஆட்சி முறையினைக் கொண்டு வருவதில் இவர்கள் அரசனைவிடத் தீவிரமா யிருந்தனர். 18ஆம் லூயி மன்னரின் தம்பியான ஆர்ட்டாய் பிரபுவே (Duke of Artois) இக் கட்சிக்குத் தலைமை வகித்தார். அவர்கள் அனைத்து அதிகாரங்களையும் கொண்ட முடியரசு, சிறப் புரிமைகள் மிக்க செல்வர்கள், செல்வாக்கு மிக்க திருச்சபை ஆகியவற்றினையே பெரிதும் விரும்பினர். கத்தோலிக்க சமய வழி நின்று அரசர் கோலோச்சவேண்டுமென்பது அவர்கள்தம் அவா. இவ்வடிப்படையில் தங்களது உரிமைகளைப் போராடிப் பெற "அரச கட்சி" (Royalists) ஒன்றையும் நிறுவினர்.

பிற்போக்குக் கொள்கைகளை அரச கட்சி பெரிதும் ஆதரித்து நின்றது. முற்போக்குவாதிகள் (Radicals) அவர்களை முற்றிலும் வெறுத்தனர். முற்போக்குவாதிகள் குடியாட்சி முறையில் நம்பிக்கை மிக்கவர்கள். அவர்கள் முடியாட்சியினை அகற்றி ஃபிரான்சில் குடியரசு நிறுவுவதில் பேரார்வம் கொண்டிருந்தனர். இவர்களுக்கிடையே அங்கு மிதவாதிகளுமிருந்தனர் (Moderates). அவர்கள் முடியாட்சியினை வெறுக்கவில்லையெனினும், பூர்போன்கள் ஆள்வதை விரும்பவில்லை. அவர்கள் வரம்புக்குட்பட்ட முடியாட்சி யினையே பெரிதும் விரும்பினர் புரட்சியால் விளைந்த நல்ல மாற்றங் களையும் அவர்கள் வரவேற்றனர் ஆயினும், அவர்கள் மீண்டும் புரட்சி ஏற்படுதலை விரும்பவில்லை. அவர்கள் புரட்சியினையும் பழைய ஆட்சியினையும் இணைக்க விரும்பினர். தொடக்கத்தில் 18 ஆம்

லூயி மன்னரை எதிர்த்த இவர்கள், நாளடைவில் அவரது அமைதியில் நாட்டம் மிக்க பண்பு நலனைப் பாராட்டி, அவரைப் போற்றத் தொடங்கினர். 1815-க்குப் பின்னர் ஃபிரான்சு, கருத்து வேறுபாடுகள் நிறைந்த-பிளவுண்ட வீடாகக் காட்சியளித்தது.

இந் நெருக்கடி நேரத்தில் ஃபிரான்சில் பொதுத் தேர்தல் நடத்தப்பெற்றது. 1815-ல் நிகழ்ந்த அப் பொதுத் தேர்தலில் 300 பிராங்களுக்கு மேல் வரி செலுத்துவோரனைவருக்கும் வாக்குரிமை நல்கப்பட்டது. இப் பொதுத் தேர்தலில் மக்களை அச்சுறுத்தி அரச கட்சியினரே (Royalists) பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்றனர். அரசரும் தாலிரான் (Talleyrand) என்பாரைத் தனது முதலமைச்சராக நியமித்தார். அவருக்கு மிக்க எதிர்ப்பிருந்த காரணத்தால், அவர் விரைவில், பதவி விலகினார். அடுத்து, அரசர் ரிச்சல்யூ (Richelieu) என்பாரைத் தன் முதலமைச்சராக நியமித்தார். ரிச்சல்யூ ஒரு நடுநிலையாளர். நிர்வாகத் திறமை மிக்க இவரால் ஓரளவு வெற்றி பெறவும் முடிந்தது. ஆயினும், தீவிர அரசாட்சியினர் அவரது நடுநிலைக் கொள்கையினைப் பெரிதும் எதிர்த்தனர்.

**வெண் கொட்டம் (White Terror)**

தொடக்கத்தில் அரச கட்சியினரே (Royalists) மிகவும் செல்வாக்கு பெற்றுத்திகழ்ந்தனர். நெப்போலியனது நூறு நாள்கள் ஆட்சியும் அதன் பின்னர் அவரது வீழ்ச்சியும் அவர்களை முற்றிலும் வெறியர்களாக்கின. புரட்சியின் ஆதரவாளர்களையும், நெப்போலியனுடைய ஆதரவாளர்களையும் கொல்லத் தொடங்கினர். அவர்களது இக் கொட்டம்தான் வரலாற்றில் ''வெண்கொட்டம்'' (The White Terror) என அழைக்கப்பெறுகிறது. வாட்டர்லூ போர்க்களத்திற்குப் (The Battle of Waterloo) பின்னர், மார்செய்ல்ஸ் (Marseilles) போன்ற இடங்களில் அவர்கள் கலகம் செய்து பலரைக் கொன்று குவித்தனர். இக்கலகம் ஃபிரான்சின் தென்பகுதியில் மிக விரைவாகப் பரவியது. 18ஆம் லூயி மன்னரின் ஆட்சியாலும் அவர்களை அடக்க இயலவில்லை.

பாராளுமன்றத்தின் கீழவையிலும் (The Chamber of Deputies) அவர்களே பெரும்பான்மை பெற்றுத் திகழ்ந்தனர். அவர்களது ஆதரவால் மார்ஷல் நே (Marshall Ney) போன்றவர்கள் கொல்லப்பட்டனர். அரச கட்சியினருக்கு 18 ஆம் லூயி மன்னரின் தம்பியான ஆர்டாய் பிரபுவே (The Count of Artois) தலைவராய்த் திகழ்ந்தார். மீண்டும் பழைய வரம்பற்ற வல்லாட்சியினையும்,

செல்வர்களின் சிறப்புரிமைகளையும், கொணர அவர்கள் அரும்பாடு பட்டனர். தங்கள் கொள்கைகளைக் கொல்லவும் துணிந்தனர். அவர்களது வன்முறைப் போக்கினைக் கண்டு, 18 ஆம் லூயி மன்னர் பெரிதும் அதிர்ந்துபோனூர். அவர்களுக்கஞ்சிய அரசர் பாராளுமன்றத்தையும் கலைத்தார். பாராளுமன்றத்தைக் கலைத்த துடன் அமையாது, அரசர் மிதவாதிகளையே தேர்ந்தெடுத்துப் பாராளுமன்றத்திற்கு அனுப்புமாறு மக்களுக்கு வேண்டுகோளும் விடுத்தார்.

அரசரின் வேண்டுகோளுக்கு ஃபிரெஞ்சு மக்களும் செவி சாய்த்தனர். 1816-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தலில் மிதவாதிகளே மிகுதியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பாராளுமன்றத்தைக் கலைத்தது அரசரது துணிவைக் காட்டி னுலும், முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்தைக் கலைத்தது முறையன்று என்பர் பலர். நல்லாட்சிக்கு மிதவாதி களே தக்கவர்கள் என அரசர் ஐயந்திரிபற உணர்ந்தார். ஆகவே, மிதவாதிகளையே தேர்ந்தெடுக்குமாறு அவர் மக்களை வேண்டினுர். இதன் விளைவாக அத் தேர்தலில் மிதவாதிகள் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றனர். ரிச்சல்யூ மீண்டும் முதலமைச்சராக நியமிக்கப்பெற்றுர். 1815-க்குப் பின்னர், ஃபிரான்சின் நிதிச் சீரமைப்புக்கு இவரே பெரிதும் காரணமாயிருந்தார். மூன்றுண்டு களில் போரிழப்பீட்டுத் தொகை முழுவதையும் திருப்பித் தந்த பெருமை இவரையே சாரும். இவரது பெரு முயற்சியால் ஐக்லா-ஷா-பேல் (1818) மாநாட்டில் ஃபிரான்சும் பங்கு பெற முடிந்தது. இவரது பெரு முயற்சியால் ஃபிரான்சும் நால்வர் கூட்டணியில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. நால்வர் கூட்டணி இதனுல் ஐவர் கூட்டணியானது. இதுகாறும் பாரிஸிலிருந்த கூட்டணிப் படைகளும் திரும்ப அழைத்துக் கொள்ளப்பட்டன. இவர் ஃபிரான்சின் படையினையும் முற்றிலும் திருத்தி அமைத்தார். தேர்தல் சட்டங்களும் மிதவாதிகளுக்குச் சாதகமாக இருக்கும் வகையில் மாற்றியமைக்கப்பட்டது. இதனுல், இவருக்கு எதிர்ப்பு மிகுந்தது. இதனுல், செயல்பட முடியாத நிலையில் இவர் 1818-இல் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

இவருக்குப் பின் டீ காசஸ் (Decazes) என்பார் தலைமையமைச் சராக நியமிக்கப்பட்டார். இவர் முற்போக்குக் கொள்கைகளில் நம்பிக்கை மிக்கவர். பதவிக்கு வந்தவுடன் இவர் தணிக்கை முறையினை அகற்றினர். அவப்பேறு காரணமாக, 1820-ல் ஆர்டாய் பிரபுவின் மகனை பெர்ரி (The Dukc of Berry) என்பவரை ஒரு

வெறியன் கொன்றுவிட்டான். பெர்ரி, ஆர்டாய் பிரபுவின் மைந்த ரென்பதோடு தீவிர அரச ஆதரவாளர்களின் (Ultra-Royalists) வாரிசாயுமிருந்தார். தீவிரவாதிகளின் வற்புறுத்தலால் டீ காசஸ் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். மீண்டும் ரிச்சல்யூ முதலமைச்ச ராகப் பதவியேற்ருர். தீவிரவாதிகளின் தொடர்ந்த எதிர்ப்புக் காரணமாக, 1821-ல் இவரும் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

வில்லேல் (Villele) என்பார் பின்னர் தலைமையமைச்சராகப் பொறுப்பேற்ருர். அரசர் தனது தள்ளாத வயதில் "ஸோ" என்ற இளம் பெண் மீது மையல் கொண்டார். 27 ஆண்டுகளே நிரம்பப் பெற்ற இவ்வழகிய மங்கை, வேந்தரைத் தனது கைப்பாவையாக வைத்து ஆட்டிப்படைத்தாள். வில்லேல் என்பார் தலைமையமைச்ச ரானதுகூட அம்மங்கையின் சித்து விளையாட்டுகளில் ஒன்றென்பர் சிலர். தமது உடலையும் இம் மங்கையையும் பேணுதற்கு நேரமில் லாது தவித்த பேரரசர், 18 ஆம் லூயி நிருவாகத்தை முற்றிலும் புறக்கணித்தார். இதனுல், வில்லேல் நிருவாகத்தில் தனித்தியங்க நல்லதொரு வாய்ப்பேற்பட்டது.

வில்லேல் ஒரு பெரும் பிற்போக்காளர். மீண்டும் பழைய முறையினைப் புதுப்பிப்பதில் மிக்க ஈடுபாடு கொண்டார். புரட்சியின் விளைவாக நிகழ்ந்த அனைத்துச் செயல்களையும் மாற்றத் துணிந்தார். திருச்சபைக்கு மீண்டும் இவர் அதிகாரங்களை வழங் கிஞர். சீர்திருத்தங்கள் பலவற்றினைப் புகுத்தி, நாட்டின் வளமையை மேம்படுத்தி, அதன்மூலம் மக்களது ஆதரவைப் பெறுவது இவரது மாபெரும் திட்டமாகும். திருச்சபையின் துணையோடு இவர் புரட்சியாளர்களின் திட்டத்தினை முறியடிக்க விரும்பினுர். மக்களின் ஆதரவைப் பெற நிதித் துறையில் சில சீர்திருத்தங்களைப் புகுத்தினுர். அரசின் செலவினங்களையும் இவர் பெரிதும் கட்டுப் படுத்தினுர். முறையான வரவு செலவு திட்டங்களைப் புகுத்திச் சீரான நிதி நிலைக்கும் இவர் வித்திட்டார். இவரது மாபெரும் பொருளாதாரத் திட்டங்களின் விளைவாக ஃபிரெஞ்சு வெளிநாட்டு வணிகம் இரு மடங்காகப் பெருகியது. இவர் தனது துணிவான வெளிநாட்டுக் கொள்கையால் நாட்டின் புகழை மீண்டும் ஓங்கச் செய்தார். 1820-ல் ஸ்பெயின் அரசரான பெர்டினன்டை எதிர்த் துக் கிளர்ச்சி எழுந்தபோது, வில்லேல் ஸ்பெயின் நாட்டின் உள் நாட்டுத் துறையிலும் தலையிட்டார். ஐரோப்பியக் கூட்டணியின் துணையோடு 1823-ல் ஒரு பெரும் ஃபிரெஞ்சுப் படையை ஸ்பெயின் மீது ஏவினுர். ஃபிரெஞ்சுப்படைகள், ஸ்பெயினில் மாபெரும் வெற்றி பெற்றன. இதனுல், ஐரோப்பிய அரங்கில் ஃபிரான்சின் புகழ் மீண்டும் ஓங்கியது. தென்னமெரிக்காவிலும் தலையிட்டு

இங்கிலாந்தின் செல்வாக்கினையும் அங்கு முற்றிலும் முறியடிக்க முயன்றார். மன்றோ, கானிங் பிரபு போன்றோரின் செயல் திறனால் இவரது அத் திட்டம் தோல்வியுற்றது.

நாட்டின் வளமைக்கும் வெளிநாட்டுக் கொள்கையில் ஓரளவு வெற்றிக்கும் வித்திட்ட இவர், உள்நாட்டுத் துறையில் அடக்கு முறையைக் கையாண்டார். மக்களது உரிமைகளுக்குப் பெரிதும் அணை போட்டார். செய்தித் தாள்கள் தீவிரமாகத் தணிக்கை செய்யப்பட்டன. திருச்சபைகளுக்கு மிகுதியான உரிமைகள் வழங்கப்பட்டன. கல்வி, திருச்சபையின் மேற்பார்வையின் கீழ் வந்தது. சமயத் தலைவர்களே பல்கலைக்கழக உயர் பதவிகளில் அமர்த்தப்பட்டனர். பள்ளிகளும், கல்லூரிகளும் திருச்சபையின் ஆதிக்கத்தின் கீழ் வந்தன. எதிலும் பிற்போக்குத் தன்மையே போற்றப்பட்டது.

வில்லேலது அறிவுரையின்படி 1824-ல் பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. புதிதாக நடந்த தேர்தலில் அரச கட்சியினரே பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றனர். 430 உறுப்பினர்களைக் கொண்ட கீழவையில் 15 பேர்கள் மட்டுமே முற்போக்குவாதிகள் எனில், இவரது செல்வாக்கு நனி விளங்கும். பிற்போக்கு ஆட்சியினை மேலும் தீவிரப்படுத்த முனைந்த வேளையில் அரசர் 18 ஆம் லூயி மன்னர் காலமானார். இது பிற்போக்காளர்களுக்கு மாபெரும் இழப்பாகும்.

**10-ஆம் சார்லஸ் (1824-1830)**

18 ஆம் லூயி மன்னர் மகப்பேறற்றவர். அவருக்குப் பின் அவர்தம் தம்பியான ஆர்டாய் பிரபு 1824-ல் 10ஆம் சார்லஸ் என்ற பட்டப் பெயரில் அரியணையேறினார். 18 ஆம் லூயி மன்னருடன் நடுநிலைக் கொள்கையும் மறைந்தது. 10 ஆம் சார்லஸ் பிற்போக்கின் சின்னமாகத் திகழ்ந்தார். வரம்பற்ற வல்லாட்சியினை மீண்டும் நிறுவுவதில் பேரார்வம் கொண்டார். புரட்சிகள், மக்களாட்சி, புதிய கருத்துகள் ஆகிய இவற்றிற்கு அவர் முற்றிலும் மாறுபட்டவர். பொது அறிவும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும், பெருந்தன்மையும், தொலைநோக்கும் முற்றிலுமற்றவர். 2 ஆம் ஜேம்ஸ் அரசரைப் போன்று பிடிவாதமும், ஆணவமும் மிக்கவர். 'விறகு வெட்டியேனும் பிழைப்பேனேயன்றி இங்கிலாந்து அரசனைப் போன்று ஓர் அரசனாக ஒருநாளுமிரேன்' என்பது இவர் தம் கூற்றாகும். 67 ஆவது வயதிலும் இளமைப் பொலிவுடன் திகழ்ந்த இவ்வரசர், அனைத்து அதிகாரங்களையும் கொண்டவொரு மாண்புமிகு அரசராகத் திகழ வேண்டுமென விரும்பினார். பட்டத்

துக்கு வந்தவுடன் செல்வர்களுக்கும், சமயவாதிகளுக்கும் அனைத்துச் சிறப்புரிமைகளையும் வழங்கினூர்.

**பிற்போக்குச் சட்டங்கள்**

கி. பி. 1824-ல் அனைத்து ஆடம்பரத்துடனும் சமயச் சடங்குகளுடனும் சார்லஸ் அரசுக் கட்டிலேறினூர். மீண்டும் புரட்சிக்கு முந்திய ஃபிரான்சை உருவாக்குவதே இவரது துணிபாகும். நாடு திரும்பிய உயர்குடியினர் அனைவருக்கும் இழப்பீடு தருதல் வேண்டுமென எண்ணினூர். தேசியக்கடன் மீதான வட்டி விகிதத்தை ஐந்திலிருந்து மூன்று சதமாகக் குறைத்தார் (from 5% to 3%). அதன் மூலம் 3 கோடி பிராங்குகளைச் சேமித்தார். மற்ருெரு சட்டத்தின்மூலம் இவ்வாறு சேமிக்கப்பட்ட தொகையை நாடு திரும்பிய செல்வர்களுக்குப் (Emigres) பகிர்ந்தளித்தார். அவர்கள் புரட்சியினூல் பெரும் இழப்புக்குள்ளானூர்களெனக் காரணம் காட்டி இவ்விழப்பீட்டினை அவர்களுக்கு நல்கினூர். தீவிர அரச கட்சியினர் இதனூல் பெரிதும் ஏமாற்றமுற்றனர். தங்களுக்குத் தரப்பட்ட இக்குறைந்த இழப்பீட்டால் தங்களுக்கு எத்தகைய நன்மையும் விளையாது. பெருந் தொகையை இழப்பீடாகத் தரவேண்டுமென அவர்கள் வேண்டினர். முற்போக்குவாதிகள் இத்தகைய இழப்பீடு உயர் குடியினருக்குத் தேவையற்றதொன்று. நாட்டினது செல்வத்தை இத்தகைய தகாத முறைகளில் செலவிடல் தக்கதன்றென அவர்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். நாட்டை விட்டு வெளியேறிய செல்வர்களிலும் புரட்சியின்போது நாட்டிலிருந்த செல்வர்களே பெரிதும் இன்னலுக்கிரையாயினர். அவர்களுக்கும் இழப்பீடு வழங்கப்பட வேண்டுமென்றனர் பிறிதொரு சாரார். தங்களது தேசியக் கடன் மீதான வட்டி விகிதத்தைக் குறைத்ததை நடுத்தர வகுப்பினர் விரும்பவில்லை. அரசரது இம்முறைகெட்ட செயலை அவர்கள் வன்மையாகக் கண்டித்தனர். மக்களது எதிர்ப்புகளையெல்லாம் புறக்கணித்துவிட்டுச் செல்வர்களுக்கு இழப்பீடு வழங்குதலை ஒரு சட்டத்தின்மூலம் நிறைவேற்றினூர். மக்களது உளப்பாங்கினை அறியாத அரசர், இதன் மூலம் பெரும்பாலான ஃபிரெஞ்சு மக்களின் எதிர்ப்புக்காளானூர்.

வில்லேல் என்பாரே மீண்டும் தலைமையமைச்சராய்ப் பொறுப்பேற்ருர். இவர் பதவிக்கு வந்தவுடன் நெப்போலியனது சட்டங்கள் பலவற்றை மாற்ற முயன்ருர். தந்தையின் சொத்தில் பிள்ளைகள் அனைவருக்கும் சம பங்கு உரிமையுண்டென்ற நெப்போலியனது சட்டத்தினை இவர் மாற்றினூர். அனைத்துச் சொத்துகளும் மூத்த பிள்ளையினையே சாரும் என்ற பழைய சட்டத்தினையும் மீண்டும் புதுப்பிக்க முயன்ருர். ஆயினும், இச்சட்டம் பாராளு

மன்றத்தில் தோற்கடிக்கப்பட்டது. இவரது சீர்திருத்தச் சட்டங்களை நாட்டின் பாதுகாவல் படையினர்கூட விரும்பவில்லை. இதனை அறிந்த வில்லேல் பாதுகாப்புப் படையினையும் கலைத்தார். இவருக்கு எதிர்ப்பு மிகுந்த காரணத்தால், இவர் பதவி விலகும் நிலை ஏற்பட்டது. அவரது பிற்போக்குக் கொள்கைகளால் மன நிறைவு பெறாத முடியரசுக் கட்சியினர் அரசனைத் தூண்டிவிட்டு இவரை 1828-ல் பதவி விலகுமாறு செய்தனர்.

இதன் பின்னர் அரசர் மார்டிக்நக் (Martignac) என்பாரைத் தலைமையமைச்சராக நியமித்தார். இவரது நடுநிலைக் கொள்கையால் அரசர் பெரிதும் ஏமாற்றமுற்றார். 1829-ல் அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு பாலிக்நக் (Polignac) என்பாரை அரசர் தமது முதலமைச்சராக நியமித்தார்.

பாலிக்நக் ஒரு பிற்போக்காளர். புரட்சியின்போது நாட்டை விட்டோடிய செல்வர்களில் இவர் தலையானவர். மிகத் தீவிர முடியரசுக் கட்சியினரான இவரைக்கண்டு மக்கள் பெரிதும் ஆத்திரமுற்றனர். பிற்போக்கின் சின்னமான மெட்டர்னிக்கூட இவரது போக்கினை விரும்பவில்லை. இவரது பிற்போக்குக் காரணமாக மீண்டும் புரட்சி தோன்றுமோ என்றுகூட மெட்டர்னிக் அஞ்சினார்.பாலிக்நக் பதவியேற்றவுடன் சமுதாயத்தில் சமயத்தைச் சார்ந்தோர்களுக்குச் சிறப்பிடம் நல்கப்படுமென அறிவித்தார். இவர் செல்வர்களுக்கும் பல சிறப்புரிமைகளை வழங்கினார். இறையுரிமைக் கோட்பாட்டில் ஆழ்ந்த பற்று கொண்ட இவர், மக்களையும் அவர்களது உரிமைகளையும் பெரிதும் வெறுத்தார். பாராளுமன்றம் செயல்படுதலே இறையுரிமைக் கோட்பாட்டினை மறுப்பதாகுமென்றார். 1830-ல் பாராளுமன்றத்தைக் கலைக்குமாறு அரசனை வேண்டினார். இவரது அறிவுரைப்படி 1830-இல் பாராளுமன்றமும் கலைக்கப்பட்டது 1830-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தலில் முற்போக்காளர்களே பெரும்பான்மை வாக்குகள் பெற்றனர். 10 ஆம் சார்லஸுக்கும் அவர் தம் தலைமையமைச்சரான பாலிக்நக் என்பாருக்கும் இது ஒரு மாபெரும் அறைகூவலாய் அமைந்தது.

செயல் திறனும் சூழ்ச்சித் திறனும் மிக்க பாலிக்நக் மக்களது கவனத்தைத் திசை திருப்ப முயன்றார். செனிகல் (Senegal), மடகாஸ்கர் (Madagascar) போன்ற பகுதிகளில் ஃபிரெஞ்சுக் குடியேற்றங்களை நிறுவி, அதன் மூலம் உள்நாட்டுக் குழப்பங்களை மூடி மறைக்கத் துணிந்தார். இங்கிலாந்துடன் ஒன்றிணைந்து கிழக்குப் பிரச்சினையில் கிரீஸை ஆதரித்தார். இங்கிலாந்தும், ஃபிரான்சும் நெவரீனோ போர்களத்தில் வெற்றிபெற்றன. மேலும்,

ஃபிரெஞ்சுப் படைகள் அல்ஜியர்ஸ் பகுதியினையும் கைப்பற்றின. வட ஆப்பிரிக்க ஃபிரெஞ்சுக் குடியேற்றத்திற்கு இவர்தான் அடிக்கல் நாட்டியவராவார். இவரது வெளிநாட்டுக் கொள்கையின் சிறப்பால் இவர் உள்நாட்டில் பிரச்சினைகளைச் சமாளிக்க முயன்றார்.

கிழக்குப் பிரச்சினையிலும், அல்ஜியர்ஸிலும் கிடைத்த புகழைப் பயன்படுத்தி, உள்நாட்டில் முற்போக்காளர்களை ஒடுக்கத் திட்டமிட்டார். வெளிநாடுகளில் ஈட்டிய வெற்றிகளைக் கொண்டு உள்நாட்டில் அடக்குமுறையைப் புகுத்த விழைந்தார். ஃபிரெஞ்சு மக்களை முற்றிலும் இவர் புரிந்துகொள்ளவில்லை என்பதற்கு இதுவே தக்க சான்றாகும். குடியரசுக் கட்சியினரும் (Republicans) பிறரும் புரட்சியொன்றுக்குத் திட்டம் தீட்டிச் செயல்பட்டுவருவதை மன்னரும் அவரது அமைச்சர் பெருமகனும் அறியாது போயினர். முற்போக்காளர்கள் நிறைந்த பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டுத் தனி வல்லாட்சி புரியவும் அவர்கள் திட்டமிட்டனர். 1830 ஜூலையில் அவசரச் சட்டங்களைப் (July Ordinances) பிறப்பித்துப் பாராளுமன்றத்தையும் கலைத்தனர். மக்களாட்சியென்ற பெயரில் சட்டப்படியமைந்த ஆட்சியினைக் கவிழ்க்கச் சதி செய்யப்படுகிறதெனக் குறை கூறினர் மன்னர். இந்த அவசரகாலச் சட்டங்கள் மூலம் (1) அவர் பாராளுமன்றத்தைக் கலைத்தார். (2) தேர்தல் சட்டத்தினைத் திருத்தி மக்களது வாக்குரிமையினைப் பெரிதும் குறைத்தார். (3) அனைத்துத் துறைகளிலும் தணிக்கை முறையினைத் தீவிரமாகச் செயல்படுத்தினர். (4) மறு தேர்தலொன்று நடத்தவும் இச் சட்டங்கள்மூலம் ஆணை பிறப்பித்தார்.

மக்கள் இந்த அவசரச் சட்டங்களை முற்றிலும் வெறுத்தனர். அவற்றை எதிர்க்கவும் தலைப்பட்டனர். தையர்போன்ற செல்வாக்கு மிக்க எழுத்தாளர்கள் அவற்றை வன்மையாகக் கண்டித்ததுடன் அவற்றை எதிர்த்துப் புரட்சி செய்யவும் மக்களை ஏவினர். இவற்றின்மூலம் மக்களாட்சி மாண்டுபோனது. கொடுங்கோன்மையாட்சி தொடங்கிவிட்டது. மக்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக்கொள்வதில் விழிப்புடனிருத்தல் வேண்டுமெனத் தையர் மக்களை வேண்டினர். தங்கள் உரிமைகள் அனைத்தும் பறிக்கப்பட்டதை உணர்ந்த முற்போக்குக் கொள்கையினரும், குடியரசுக் கட்சியினரும் புரட்சியிலீடுபட்டனர். கலைக்கப்பட்ட தேசியப் பாதுகாப்புப் படையினரும் இப் புரட்சியில் கலந்துகொண்டனர். பாரிஸ் நகர மாணவர்களும் இதில் தீவிரப் பங்கேற்றனர். மன்னரும், அவர் தம் அமைச்சரும் இதனைச் சற்றும் எதிர்பார்க்க

வில்லை என்ற காரணத்தால், இதனையடக்க முடியவில்லை. ஃபிரெஞ்சுப் படைகளில் பெரும் பகுதி அல்ஜியர்ஸ் போன்ற குடியேற்ற நாடுகளிலிருந்தன. தன்னிடமிருந்த மிகக் குறைவான படைகளைக் கொண்டு புரட்சியினையொடுக்க முடியாதென்பதை உணர்ந்த அரசர், தனது அவசரச் சட்டங்களைத் தள்ளுபடி செய்வதாக வாக்களித்தார் காலம் மிகத் தாழ்த்திக் கொடுக்கப் பட்ட இந்த வாக்குறுதியினைப் புரட்சியாளர்கள் ஏற்க மறுத்தனர். 1830ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள், 30 ஆம் நாள் அரசர் முடி துறந்தார். தன் பேரனை அரசராக ஏற்றுக்கொள்ளுமாறு புரட்சியாளர்களைவேண்டினர். அவ்வேண்டுகோளும் புறக்கணிக்கப்படவே 10ஆம் சார்லஸ் இங்கிலாந்துக்குத் தப்பியோடினர். தொடர்ந்து அழுதவாறே அவர் நாட்டைவிட்டகன்றது வரலாற்றில் வரும் அவல நிகழ்ச்சிகளில் ஒன்ருகும்.

புரட்சிக்குப் பின்னர், முற்போக்குக் கொள்கையினருக்கும் தீவிரப் புரட்சியாளர்களுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. அவர்கள் தீவிரமான, நடைமுறைக்கொவ்வாத கொள்கைகள் பலவற்றைச் செயல்படுத்தத் துணிந்தனர். இதனுல், நாட்டில் மேலும் குழப்பம் மிகும் நிலை ஏற்பட்டது. முற்போக்கினர் தீவிரவாதிகளுடன் உடன்பாடொன்று செய்துகொண்டு லூயி பிலிப் என்பாரை அரசராகத் தேர்ந்தெடுத்தனர். சில மாற்றங்களுடன் 1814ஆம் ஆண்டுச் சாசனம் ஏற்றுக்கொள்ளப்பட்டது இவ்வாறு ஜூலைப் புரட்சி பூர்போன் ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

**1830, ஜூலைப் புரட்சிக்குரிய காரணங்கள்**

வரலாற்றில் ஜூலைப் புரட்சிக்குரிய காரணங்கள் ஆராயத் தக்கவை. அவற்றிற்குரிய காரணங்கள் பல. அவை பின் வருவன :

(1) 1815-க்குப் பின்னர் ஃபிரெஞ்சு மக்களிடையே கருத்து வேறுபாடுகள் மிகுந்தன. ஒரு சாரார் வரம்பற்ற வல்லாட்சியினையும், சிறப்புரிமைகளையும் பழைமை காக்கப்படுதலையும் விரும்பினர். மற்ருெரு சாரார் புதிய கருத்துகளையும், மக்களாட்சியினையும், தனி மனித உரிமைகளையும் விரும்பினர். பல்வேறு கருத்து வேறுபாடுகளுக்கிடையே மக்கள் பிளவுண்டுக் கிடந்தனர். அவற்ருேடு தீவிர முடியரசுக்கட்சியினரின் தீவிரப் போக்கும் அவர்களை மேலும் பிளவுபடுத்தியது. செல்வர்கள் புதியன அனைத்தையும் அகற்ற முற்பட்டனர். தீவிரப் புரட்சியாளர்கள் மீண்டும் மன்னராட்சியை அகற்றிவிட்டுக் குடியரசினை நிறுவ விரும்பினர். இவர்களுக்கிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளே 1830 ஜூலைப் புரட்சிக்கு வித்திட்டன.

(2) 1815-ல் மீண்டும் நிறுவப்பட்ட பூர்போன் அரசு, மக்களது ஆதரவைப் பெற்று நிறுவப்பட்ட ஒன்றில்லை. மக்களது ஆதரவைப் பெற்று நிறுவப்படவில்லை யென்பதுடன், நிறுவப்பட்ட பின்னரும் மக்களது ஆதரவை அது பெறவில்லை. 18 ஆம் லூயி மன்னர் கூட்டணிப்படைகளுடன் ஃபிரான்சில் நுழைந்ததை மக்கள் விரும்ப வில்லை. வல்லாட்சி மரபில் வந்த பூர்போன் அரசர்களால் மக்க ளாட்சிக் கொள்கைகளை உளமார ஏற்றுச் செயல்படுத்த முடிய வில்லை. சமத்துவம், உரிமை, மக்களாட்சி போன்ற புதிய கருத்துகளால் பெரிதும் ஈர்க்கப்பட்ட ஃபிரெஞ்சு மக்களால், வல்லாட்சி மரபில் வந்த பூர்போன் அரசர்களை முற்றிலும் ஏற்றுக் கொள்ள இயலவில்லை. நாடோடி வாழ்வினை மேற்கொண்டு பல இடுக்கண்களுக்கிடையே மீண்டும் அரியணையேறிய 18 ஆம் லூயி மன்னர்கூட, இறையுரிமைக்கோட்பாடு வழிவரும் அரசுரிமையைப் புறக்கணிக்க இயலவில்லை. 18 ஆம் லூயி மன்னரும் மக்களைக் கவரவல்ல எத் திட்டத்தினையும் செயல்படுத்தவில்லை. அவருக்குப் பின்னர் அரியணையேறிய அவர்தம் தம்பி 10 ஆம் சார்லஸ் மீண்டும் வல்லாட்சியினை நிறுவ முயன்று தோல்வியுற்றுர். மக்கள் ஆதரவினைப் பெருத அவ்வரசு, புரட்சிக்கு வழிவகுத்ததில் வியப் பேதுமில்லை.

(3) 18 ஆம் லூயி மன்னர் ஒரு நடுநிலையாளர். மீண்டும் நாடோடி வாழ்வினை மேற்கொள்ள விரும்பாதவர். தமது பொது அறிவாலும் நடுநிலைக் கொள்கையாலும் மக்களது ஆதரவைப்பெறு வதில் ஓரளவு வெற்றி பெற்ருர். மக்களிடையே நிலவும் கருத்து வேறுபாட்டினைத் தான் விரும்பவில்லையென்றும், அக் கருத்து வேறுபாடுகளால் மக்கள் இரு கூறுகளாகப் பிரிந்து கிடப்பது தமக்கு வேதனையைத் தருவதாயும், அனைவரையும் ஒன்றுபடுத்து வதே தமது தலையாய நோக்கமெனவும் இவர் பகர்ந்தார். ஆயினும், இவராலும் மக்களை ஒன்றுபடுத்த முடியவில்லை. புரட்சியினை வெறுத்த இவரால் முற்போக்கினரின் கொள்கைகளை ஏற்றுக் கொள்ள இயலவில்லை. மக்களது ஆதரவைப் பெற சாசனம் ஒன்றினை வழங்கிய இவர், தமது உரிமைகளையும் விட்டுக்கொடுக்க மறுத்தார். வல்லாட்சியும் இவரால் புரியமுடியவில்லை; அதே நேரத்தில் மக்களாட்சியினையும் போற்றி அதன் வழி நின்று ஒழுக இவரால் இயலவில்லை. இவரது தயக்கம் தீவிர முடியரசுக் கட்சியினருக்கே (Ultra-Royalists) பெரிதும் துணையாய் நின்றது. அவர்கள் முற்போக்கினரையும், மக்களாட்சியில் நம்பிக்கை மிக்கோரையும் பெரிதும் துன்புறுத்தினர். மீண்டும் பழைய ஆட்சி யினை நிறுவ முயன்ற இவர்கள், அரசரது செல்வாக்கினைப் பெரிதும் குறைத்தனர். 18 ஆம் லூயி மன்னரும் பல தவறுகளைச் செய்தார்,

பாராளுமன்றத்தினை உருவாக்கி, அது செயல்பட இவர் அனுமதிக்க மறுத்தார். இங்கிலாந்தில் பல ஆண்டுகள் வாழ்ந்தும் படிப்பினையேதும் பெறத் தவறிவிட்டார். ஆங்கிலப் பாராளு மன்ற முறையினை இவர் பின்பற்றத் தவறிவிட்டார். பெரும் பான்மைக் கட்சி உறுப்பினர்களது அனுதாபத்தையும் இவர் பெறத் தவறிவிட்டார். பாராளுமன்றம் இவரை முற்றிலும் எதிர்த் தது. 1815-ல் பட்டமேறிய இவர், நல்ல பாராளுமன்ற முறைக்கு வித்திடத் தவறிவிட்டார். பாராளுமன்றத்திற்கு உரிமைகள் வழங்கி, அதன் ஒத்துழைப்பினைப் பெற்று அரசு புரிந்திருப்பின், இவர் பெரிதும் வெற்றி பெற்றிருப்பார். அத்துடன் ஃபிரெஞ்சு அரசியலமைப்பு வரலாற்றிலும் இவர்பெயர் இடம் பெற்றிருக்கும். அத்தகைய முன்னறிவோ, தொலைநோக்கோ, அரசியல் நுட்பமோ அற்ற இவர் பூர்போன் அரசு வீழ்வதற்கே காராணமானார். பாராளு மன்றம் செவ்வையாகச் செயல்படாத காரணத்தால், ஆட்சி சீர்குலைந்தது. 10 ஆம் சார்லஸ் காலத்தில் அது மேலும் சீர் குலைந்தது. இச்சீர்குலைவும் புரட்சிக்குரிய காரணங்களில் ஒன்றாகும்.

(4) 1814 ஆம் ஆண்டுச் சாசனம், மக்களனைவரும் சமம் என்றும் அவர்களுக்கு அடிப்படையுரிமைகள் அனைத்துமுண்டு எனவும் வலியுறுத்தியது. ஆயினும், 18ஆம் லூயி மன்னர் அனைத்து மக்களுக்கும் வாக்குரிமை நல்க மறுத்தார். 1814 ஆம் ஆண்டுச் சாசனமும் 300 பிராங்குகளுக்கு மேல் வரியாகக் கொடுப்போருக்கு மட்டும் வாக்குரிமையினை நல்கியது. ஆகவே, செல்வர்கள் மட்டும் மீண்டும் வாக்குரிமை மூலம் செல்வாக்கு பெற முடிந்தது. எளிய மக்களுக்கு அவ்வுரிமை மறுக்கப்பட்டது. இச் சாசனம் அங்கு மீண்டும் ஏற்றத் தாழ்வுக்கு அடிகோலியது. இவ்வேற்றத் தாழ்வினை மக்கள் பொறுத்துக்கொள்ள மறுத்தனர். இதுவும் இப் புரட்சிக் குரிய காரணங்களில் ஒன்றாகும்.

(5) 18 ஆம் லூயி மன்னர், தமது ஆட்சியின் இறுதி நாள் களில் நிர்வாகத்தில் முற்றிலும் ஆர்வமிழந்தார். தமது ஊனுடலைப் பேணுவதிலும், தமது முதிய பருவத்துக் காதலையுமெண்ணி இறு மாந்து கிடந்தாரேயன்றி, நல்லாட்சியினைப் பற்றி ஒரு சிறிதும் கவலைப்படவில்லை. தம்முடைய குடிமக்களை ஒன்றுபடுத்தும் முயற்சி யினையும் இறுதியில் கைவிட்டார். அவர்தம் தலைமை அமைச்சராக இருந்த வில்லேல் என்பாரே இம் மாற்றங்களுக்கெல்லாம் காரண மென்பர் பலர். வில்லேல் ஆட்சியினைக் கைப்பற்றியவுடன், தமது கொள்கைகளைச் செயல்படுத்தத் துணிந்தார். சமுதாயத்தில் சிறப்பு மிக்கவர்கள், போற்றுதற்குரியவர்கள் செல்வர்களும் சமயவாதி களுமே என்பது இவர்தம் கொள்கை. ஆகவே, பதவியேற்றவுடன்

அவர்களுக்குச் சிறப்புரிமைகள் பல வழங்கினர். கத்தோலிக்கச் சமயத்திற்கு மிகுந்த செல்வாக்கினை வழங்கி, அதன்வழி அரசரின் அதிகாரங்களை மிகுதிப்படுத்த விழைந்தாரிவர். தேசியக் கல்வியினைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தினைத் திருச்சபைகளுக்கே இவர் வழங்கினர். அவரது அரசு, சமயவாதிகளால், சமயவாதிகளுக்காக நடத்தப்பெற்ற அரசு என்பர் வரலாற்று வல்லுநர்கள் பலர். (Goverment of the priests, by the priests, for the priests). சமயச் சார்பற்ற அரசையும் ஃபிரெஞ்சுப் புரட்சியின் கருத்துகளையும் வரவேற்ற மக்கள், இவரது சமய ஆதிக்கமிக்க அரசினை ஏற்க முற்றிலும் மறுத்தனர். அதன் விளைவே இப் புரட்சியாகும்.

(6) கி. பி. 1824-ல் லூயி மன்னர் மறைந்தார். அவர்தம் மறைவு நடுநிலைக் கொள்கைக்கொரு மாபெரும் இழப்பாகும். அவருக்குப் பின் அரியணையேறிய அவர்தம் தம்பியான 10 ஆம் சார்லஸ் பொது அறிவும், பெருந்தன்மையும், சமயச் சமநோக்கும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் முற்றிலும் அற்றவர். அறுபது வயதுக்கும் மேற்பட்ட இவர், ஒரு பழைமையின் சின்னமாகத் திகழ்ந்தார். காலத்திகேற்ப தன்னை ஒருசிறிதும் மாற்றிக் கொள்ளாதவர் இவரெனில் மிகையாகாது. இவர் ஒன்றைக் கற்கவுமில்லை; ஒன்றை மறக்கவுமில்லையென்பது பல்லோரது ஒருமித்த கருத்தாகும். 14 ஆம் லூயி மன்னரெனத் தன்னைக் கருதிக் கொண்ட இம் மன்னர், மீண்டும் வரம்பற்ற வல்லாட்சியினை நிறுவுதலையே தமது தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தார். 1789 புரட்சிக்குப் பின்னர், இவர் பிற்போக்கினரின் தலைவராயிருந்து பணியாற்றினரென்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது. 18 ஆம் லூயி மன்னரின் சமநோக்கையும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையினையும் இவர் முற்றிலும் வெறுத்தார். 18 ஆம் லூயி மன்னரின் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையாலேயே நாடு சீர்கேடுற்றதென்பது இவர்தம் கருத்து. ஆதலின், புதிய கருத்துகளையும், மக்களாட்சியினையும், தனிமனித உரிமைகளையும் இவர் எதிர்த்தார். இவரது தீவிரப் பழைமைப் போக்கும், செயல்களும் 1830 ஜூலைப் புரட்சிக்கு வழிவகுத்தன.

இவரும் தம்முடைய தமையனுரைப் போன்று பாராளுமன்றத்தின் ஒப்புதலின்றி அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், அவர்களைப்பதவிநீக்குவதிலும் நாட்டம் செலுத்தினர். அவரைப்போன்றே இவரும் பாராளுமன்றத்தைக் கலைத்தார். தமது நலனுக்காக வில்லேல் என்பாரைப் பதவியிலிருந்து நீக்கினர். மார்டிக்நக் என்பாரையும் அவரது பரந்த மனப்பான்மைக்காகப் பதவி நீக்கினர். அடுத்து இவர் பாலிக்நக் என்பாரை முதலமைச்சராக நியமித்தார்.

தீவிர முடியரசுக் கட்சியினரான பாலிக்நக் மன்னரது நலனை மட்டுமே கருதிச் செயல்பட்டார். மீண்டும் மக்களது உரிமைகள் அனைத்தையும் புறக்கணித்து, தனி வல்லாட்சி நிறுவ முயன்ற போது, கருத்து வேறுபாடுகள் தோன்றின. இக் கருத்து வேறுபாடு களே பின்னர் புரட்சிக்கு வித்திட்டன.

10 ஆம் சார்லஸுக்கு உள்நாட்டில் எதிர்ப்பு மிகுந்தது. உள் நாட்டுப் பிரச்சினைகளிலிருந்து மக்களது கவனத்தைத் திருப்பு வதற்காகத் தீவிரமாக, வெளிநாட்டுப் போர்களில் பங்கேற்றார் இவர். துருக்கியை எதிர்த்த கிரீஸ் நாட்டை ஆதரித்துப் போற்றினார். கிரீஸின் சார்பாகப் போரிட்டு நெவர்ரினோ போர்க்களத்தில் வெற்றி பெற்றுத் தமது செல்வாக்கினை மிகவும் உயர்த்திக்கொண்டார். அல்ஜியர்ஸ், மடகாஸ்கர், செனிகல் போன்ற இடங்களில் குடியேற் றங்களை நிறுவி, தமது புகழை மேலும் உயர்த்திக்கொண்டார். இவ்வாறு வெளித்துறைச் செய்திகளில் பெற்ற புகழினைக் கொண்டு இவர் உள்நாட்டில் அடக்குமுறை ஆட்சியினைத் தொடங்கினார். பல சட்டங்களை இயற்றி, மீண்டும் இவர் பிற்போக்காட்சியினைப் புகுத்த முயன்றார். பழைய ஆட்சிக்குத் தூண்போன்று நின்ற செல்வர் களை ஆதரிக்கும்பொருட்டு, தேசியக் கடன் மீதான வட்டி விகிதத் தினைக் குறைத்தார். அதன்மூலம் கிட்டிய 30 மில்லியன் பிராங்கு களைச் செல்வர்களுக்கு இழப்பீடாக வழங்கினார் இவர். திருச்சபை யின் ஆதிக்கமும் மிகுந்தது. அவசரச் சட்டங்கள்மூலம் பாராளு மன்றமும் கலைக்கப்பட்டது. மக்களது உரிமைகளும் பறிபோயின. இவ் அவசரச் சட்டங்களை எதிர்த்து மக்கள் புரட்சியிலீடுபட்டனர். 10 ஆம் சார்லஸின் பிற்போக்காட்சியும்,அவரது அவசரச் சட்டங் களுமே 1830 ஜூலைப் புரட்சிக்குப் பெரிதும் காரணமாயின.

**1830 ஜூலைப் புரட்சி பற்றிய மாறுபட்ட கருத்துகள்**

1830 ஜூலைப் புரட்சி தவிர்க்கமுடியாத புரட்சியா என்பது பற்றி வரலாற்று வல்லுநர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. வியன்னா மாநாட்டுக்குப் பின்னர், நிலை நிறுத்தப் பெற்ற பூர்போன் ஆட்சியே இப் புரட்சிக்கு அடிப்படையென்பர் ஒரு சாரார். 18 ஆம் லூயி மன்னரைப் போன்று அவருக்குப் பின் பட்டத்திற்கு வந்த 10 ஆம் சார்லஸ் நடுநிலைக் கொள்கையினைப் பின்பற்றி யிருப்பின், புரட்சியினைத் தவிர்த்திருக்கக்கூடும். புரட்சிக்கு 10 ஆம் சார்லஸே காரணமாவார். அவரது தீவிரப் போக்கும், ஆணவமும். பழைமைப் பற்றுமே இப் புரட்சியைத் தூண்டின. குடியரசை விரும்பியவர்களும், முற்போக்குவாதி களும் மிகுதியும் செல்வாக்கு பெற்றுத் திகழவில்லை. 1814 ஆம்

ஆண்டுச் சாசனத்தைப் பூர்போன் அரசர் செவ்வையாகப் பின்பற்றி ஒழுகியிருப்பின் புரட்சி தோன்றியிராது. மேலும், பாராளுமன்றமும் அங்குச் செவ்வையாக நடைபெற அரசர்கள் துணைபுரியவில்லை. பாராளுமன்ற ஆட்சி தடைப்பட்டதாலும் புரட்சி வெடித்தது. ஆகவே, பூர்போன் அரசர்களும், குறிப்பாக 10ஆம் சார்லஸுமே இப் புரட்சிக்குக் காரணமென்பர் சிலர். அரசர்கள் சற்று தொலை நோக்குடனும், பெருந்தன்மையுடனும் நடந்துகொண்டு, பாராளு மன்ற ஆட்சி செயல்படத் துணை நின்றிருப்பின், புரட்சியினைத் தவிர்த்திருக்கக்கூடுமென்பர் ஒரு சில வரலாற்று வல்லுநர்கள்.

பிறிதொரு சாரார் இப் புரட்சி தவிர்த்திருக்க முடியாத ஒரு புரட்சியென்பர். அவர்கள் கூறும் காரணங்கள் பின்வருமாறு :

(1) முதலாவதாக, 1815-க்குப் பின்னர் பதவியேற்ற பூர்போன் அரசர்களால் ஃபிரெஞ்சு மக்களை ஒன்றுபடுத்த இயலவில்லை. லிப்சன் என்ற வரலாற்றுப் பேராசிரியரது கூற்று இங்கு ஆராயவேண்டிய ஒன்றாகும். பழைமை விரும்பிகள், முற்போக்குவாதிகளிடையே சமரசம் ஏற்பட வழியின்றிப்போய்விட்டது. மக்களிடையே வேற்றுமைகள் மிகுந்து மாபெரும் பிளவேற்பட்டது. இதுவே புரட்சியின் அடிப்படைக் காரணம் என்பர் லிப்சன்.[1] முடியரசுக் கட்சியினரும், குடியரசில் நம்பிக்கை மிக்கோரும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு செயல்பட மறுத்தனர். 10-ஆம் சார்லஸ் பதவி யேற்ற பின்னர், மக்களிடமிருந்த பிளவு மேலும் மிகுந்தது. 1789 ஃபிரெஞ்சுப் புரட்சி, மக்களிடையே மாபெரும் நம்பிக்கையினையும் புத்துணர்ச்சியினையும் உண்டாக்கியிருந்தது. அத்தகைய ஒரு மாபெரும் நம்பிக்கையினை 1814-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட சாசனம் நிறைவுபடுத்தவில்லை. 1789-ல் நிகழ்ந்த புரட்சியினும் மிகுதியான நன்மைகளை மக்கள் எதிர்பார்த்தனர். எதிர்பார்த்த நன்மைகள் கிட்டாத காரணத்தால், மக்கள் பெரிதும் ஏமாற்ற முற்றனர். அந்த ஏமாற்றத்தின் விளைவே, 1830 ஜூலைப் புரட்சி யாகும். 1789-க்குப் பிறகும் மக்களது உள்ளத்திலிருந்த உரிமை வேட்கையும், நம்பிக்கையும் ஒருசிறிதும் குறையவில்லை. வியன்னு மாநாட்டுக்குப் பின்னர் அது மேலும் மிகுந்தது. அதனை அடைதற் பொருட்டு, மீண்டும் அவர்கள் புரட்சி செய்தனர். ஆகவேதான், லிப்சன் என்ற பேராசிரியர் 1830 ஜூலைப் புரட்சியை 1789 புரட்சி யின் நிறைவு (Compliment) என்பர்.[2]

மேலும், குடியரசுக் கட்சியினர் இப் புரட்சிக்கு வித்திடவில்லை என்ற கருத்தைப் பலரும் மறுக்கின்றனர். அவர்கள் வலிமை

[1] Lipson p. 5. [2] Lipson p. 18.

பெற்றுத் திகழவில்லையென்பது உண்மையே எனினும், அவர்கள் மக்களின் ஒரு மாபெரும் சக்தியாய்த் திகழ்ந்தார்கள் என்பதை மறுப்பதற்கில்லை. மாணவர்கள், வேலையற்றோர் மத்தியில் அவர்கள் பெரும் செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தார்கள். இவர்கள் பாராளு மன்ற முறையில் பெரிதும் நம்பிக்கை கொண்டு திகழ்ந்தார்கள். இவர்கள் பாராளுமன்ற முறையில் அரசனைக் கட்டுப்படுத்த முயன்றனர். 1814ஆம் ஆண்டுச் சாசனத்துடன் இவர்கள் நிறைவு பெறவில்லை. மேன்மேலும் உரிமைகள் பெற மக்களைத் தூண்டினர். அதன் விளைவே இப் புரட்சியென்பர் ஒரு சிலர். ஆகவே, இப் புரட்சி குடியாட்சியில் நம்பிக்கை மிக்கோரால் விளைந்ததொன்று என்பது இச் சாராரின் ஒருமித்த கருத்தாகும்.

இப் புரட்சியின் தன்மைபற்றி மற்றுமொரு கருத்தும் நிலவு கிறது. புரட்சி செய்து உரிமை பெறும் அளவிற்கு 10ஆம் சார்லஸ் தகுதியுடையவரல்லர்; அரசரைக் காட்டிலும் இப் புரட்சிக்குத் தீவிர முடியரசுக் கட்சியினரே காரணமாவர். 10ஆம் சார்லஸும் இப் புரட்சிக்கு ஒரு காரணம் என்பதை வலியுறுத்தும் டேவிட் தாம்சன், முடியரசுக் கட்சியினரால் நிலைமை மேலும் சீர்குலைந்ததென்பதைத் தெளிவுபடுத்துகிறார்.[1] இப் புரட்சிக்குத் தீவிர முடியரசுக் கட்சியினரே பெரும் பொறுப் பாவர், என்பதே பல்லோரது கருத்தாகும். அவர்களது தீவிரத் தன்மையும், குறுகிய நோக்கும், பண்பற்ற செயலும் மக்களிடையே எதிர்ப்பையும், வெறுப்பையும் வளர்த்தன. அவர்கள் பாராளுமன்ற ஆட்சியினை எதிர்த்தனர். மக்களின் உரிமைகளைப் பறித்தனர். அவசரச் சட்டங்களை வெளி யிடுமாறு அரசனைத் தூண்டினர். இவற்றால், ஒரு மாபெரும் புரட்சி தோன்றியது. இவை யாவும் ஜூலைப் புரட்சியின் தன்மையினைப் பற்றிய மாறுபட்ட கருத்துகளாகும்.

### 1830 ஜூலைப் புரட்சியின் விளைவுகள்

10ஆம் சார்லஸின் அவசரச் சட்டங்களின் விளைவாக 1830 ஜூலையில் புரட்சி ஏற்பட்டது. பாரிஸ் நகரம் புரட்சியின் மையமாகத் திகழ்ந்தது. பாரிஸ் மாணவர்களும், குடியரசுக் கட்சியினரும், போனபார்ட் கட்சியினரும்கூட, இப் புரட்சியில் கலந்துகொண்டனர். குடியரசுக் கட்சியினர் அங்குக் குடியரசைப் பெரிதும் நிறுவ முயன்றனர். அவர்கள் ஒட்டல்—டீ—வில்லா வினைக் கைப்பற்றி, புரட்சியின் மூவண்ணக் கொடியை அதன் மீது பறக்கவிட்டனர். புரட்சியின் பழம்பெருந் தலைவரான

1 Europe Since Nepoleon p. 125

லபாயத் (Laffette) என்பவரை அக் குடியரசுக் கட்சியின் தலைவராகவும் நியமித்தனர்.

முற்போக்காளர்களில் பலர் இதனை விரும்பவில்லை. புரட்சி, தீவிரவாதிகளால் அவர்களின் தன்னலத்திற்காக நடத்தப் படுவதை முற்போக்கினர் விரும்பவில்லை. உரிமையுடன் கூடிய அமைதியான ஆட்சியினையே அவர்கள் விரும்பினர். அதற்கு வரம்புக்குட்பட்ட முடியாட்சியே தக்கதென அவர்கள் துணிந் தனர். தொழிற் புரட்சியின் விளைவாக, சிறப்புகள் பல எய்தித் திகழ்ந்த நடுத்தர வகுப்பு மக்கள், குடியரசுக் கட்சியினரின் (Republicans) தீவிரக் கொள்கைகளை விரும்ப வில்லை. அவர்கள் தையர் போன்ற முற்போக்குவாதிகளின் கூற்றுன வரம்புக்குட்பட்ட முடியாட்சியே தக்கதென முடிவு செய்தனர். தையர் என்பாரும் தமது சிறப்புமிக்க "நேஷனல்" என்ற செய்தித்தாளில் லூயி பிலிப் (Louis Phillippe) என் பாரே அரசராவதற்கு அனைத்துத் தகுதிகளும் உடையவரெனப் பறைசாற்றினர். குடியரசுக் கட்சியினரும் தங்களுக்கெதிர்ப்பு வளர்வதை உணர்ந்தனர். பிற பிற்போக்கு ஐரோப்பிய நாடுகள், ஃபிரான்சில் குடியரசு நிறுவப்படுதலை விரும்பாது என்பதையும் அவர்கள் தெளிவாக உணர்ந்தனர். அவர்களும் லூயி பிலிப் அரசராவதை எதிர்க்கவில்லை. லூயி பிலிப்பும் அவர்களது தலைமையகமான ஒட்டல்—டி—வில்லாவுக்குச் சென்று குடியரசுத் தலைவர்களைச் சந்தித்து, அவர்களது ஆதரவினையும் பெற்றார். லபாயத் என்ற மாபெரும் குடியரசுக் கட்சித் தலைவர், இவரை முத்தமிட்டுத் தழுவி வரவேற்றார். மக்களின் நல்லாதரவைப் பெற்று, லூயி பிலிப் அரசராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

லூயி பிலிப், பல நிபந்தனைகளின் பேரில் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முற்போக்குக் கொள்கையினரும், பிறரும் அரசரது அதிகாரங்களை ஓர் அரசியலமைப்பின் மூலம் வரை யறுக்க வேண்டுமென விரும்பினர். 1814-ஆம் ஆண்டுச் சாசனம் பல திருத்தங்களோடு ஏற்றுக்கொள்ளப்பட்டது. இத் திருத்தங்கள் வரலாற்றுச் சிறப்புமிக்கவையாகும். முதலாவதாக, இது இறை உரிமைக்கோட்பாட்டின் மூலம் மக்களுக்கு வழங்கப்பட்ட சலுகை யல்ல. அது பாராளுமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, மக்களின் உரிமைச் சாசனம் என வெளியிடப்பட்டது. 1814ஆம் ஆண்டுச் சாசனம் அரசரால் வழங்கப்பட்டவொன்று எனில், 1830ஆம் ஆண்டுச் சாசனம் பாராளுமன்றத்தால் வழங்கப்பட்ட ஒன்றாகும்.

இரண்டாவதாக, அரசரது சிறப்புரிமைகள் யாவும் இச்சாசனம் மூலம் மறுக்கப்பட்டன. அரசர், சட்டங்களை இயற்றவோ மாற்றவோ இயலாது. சட்டங்களை முன்மொழிகின்ற அவரது உரிமையும் பறிக்கப்பட்டது. மூன்றாவதாக, செய்தித்தாள்கள் தணிக்கை முறையும் அகற்றப்பட்டது. நான்காவதாக, தேர்தல் சட்டங்கள் திருத்தப்பட்டு மக்களுக்கு மேலும் பல உரிமைகள் வழங்கப்பட்டன. ஆண்டொன்றுக்கு 200 பிராங்குகளும் அதற்கு மேலும், வரி செலுத்துவோரனைவரும் வாக்குரிமை பெற்றனர். வாக்காளர்களின் வயதும் 40 லிருந்து 30 ஆகக் குறைக்கப்பட்டது. மேலவைக்குப் பரம்பரை உறுப்பினர்களுக்கு மாறாக, ஆயுட்கால உறுப்பினர்கள் நியமிக்கப்பெற்றனர். பிரபுக்களும் அரசரால் தேர்ந்தெடுக்கப் பட்டனர். ஐந்தாவதாக, ரோமன் கத்தோலிக்கச் சமயம் நாட்டின் ஒரே சமயம் என்பது மறுக்கப்பட்டது. அது பெருவாரியான ஃபிரெஞ்சு மக்களின் சமயமென ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவை யனைத்தும் ஜுலைப் புரட்சியின் நேரடி விளைவுகளாகும்.

ஜுலைப் புரட்சியின் முக்கியத்துவம் பற்றி வரலாற்று இயல றிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. சமுதாயத் துறைகளிலும், அரசியல் துறைகளிலும் பெரும் மாற்றங்களை விளை விப்பவையே புரட்சியாகும். ஆனால், ஜுலைப் புரட்சி, அத்தகைய மாற்றங்களைதனையும் ஏற்படுத்தவில்லை. இப் புரட்சி பாராளுமன்ற சீர்திருத்தங்களுக்கோ அல்லது பெரும் பொருளாதாரச் சீர்திருத்தங் களுக்கோ வழி வகுக்கவில்லை. இப் புரட்சி ஒரு புதிய அரசியலமைப் பினைக்கூட உருவாக்கவில்லை. 1814ஆம் ஆண்டுச் சாசனம் சற்றுத் திருத்தப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டது. மேலும், ஆட்சி முறை யிலும்கூட, இப் புரட்சியால் மாற்றமேதும் நிகழவில்லை. ஓர் அரச குடும்பம் பதவியிழந்து, மற்றோர் அரச குடும்பம் பதவியேற்றது. 10ஆம் சார்லஸுக்குப் பின்னர், லூயி பிலிப் அரசரானார். பூர்போன்களுக்கு மாறாக இப்பொழுது ஆர்லியன்ஸ்கள் பதவிக்கு வந்தனர். மேலும், முன்னைவிடச் சிறந்த மக்களாட்சி முறை இப் புரட்சி மூலம் செயலுக்கு வந்தது எனக் கூறுவதற்கில்லை. 1814ஆம் ஆண்டுச் சாசனத்தில் செய்யப்பட்ட திருத்தங்கள் நடுத்தர வகுப்பு மக்களின் நலனுக்காகச் செய்யப்பட்டவையேயன்றி, மக்களனை வருக்கும் செய்யப்பட்டவையல்ல. மக்களாட்சியின் அடிப்படை யெனக் கருதப்படும் வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை யென்ற கொள்கை இப் புரட்சி மூலம் செயல்படுத்தப்படவில்லை. 200 பிராங்குகளுக்குமேல் வரி செலுத்துவோருக்கு மட்டும் வாக்குரிமை நல்கப்பட்டது. ஆகவே, இதனைப் பணக்காரர்களால் பணக்காரர்களுக்காகக் கொண்டுவரப்பட்ட ஆட்சி யென்பர் பலர்.

வணிகர்களும், நடுத்தர வகுப்பு மக்களுமே இதனால், பெரிதும் நன்மை பெற்றனர். இறுதியாக, இப் புரட்சி பாரிஸ் மக்களால் நிகழ்த்தப்பட்ட புரட்சியாகும். ஃபிஷர் (Fisher) என்ற வரலாற்று வல்லுநர் இப் புரட்சியினைப் பாரிஸ் நகரமே நிர்ணயித்ததென்பர்.[1] பிற பகுதிகள் இப் புரட்சியில் பெரிதும் பங்கு பெறவில்லை. குடியரசுக் கட்சியினர், மாணவர்கள், தொழிலாளர்களில் ஒரு சாரார்மட்டுமே இப் புரட்சியினை முன்னின்று நடத்தி வெற்றியுறச் செய்தனர். ஆகவே, இதனைப் பெருவாரியான மக்களின் ஆதரவைப் பெற்று நிகழ்ந்த புரட்சியெனக் கூற இயலாது. இவை யாவும் ஒரு சாராரின் கூற்றுகளாகும்.

மேற்கூறிய கூற்றுகள் அனைத்தும் ஏற்றுக்கொள்ளத் தக்கவையல்ல. இப் புரட்சியும் வரலாற்றுச் சிறப்புமிக்க புரட்சியே என்பர் லிப்சன் என்ற வரலாற்று வல்லுநர்.[2] அது ஃபிரான்சில் ஓரளவுக்கு மாற்றங்களைக் கொணர்ந்தது என்பது அவர்தம் கருத்து. பூர்போன் அரசுக்கும் ஆர்லியன்ஸ் அரசுக்குமிடையே மிகுந்த வேறுபாடுகள் உள்ளன. பூர்போன் அரசு மரபுவழி (Heredity) வந்த அரசாகும். ஆர்லியன்ஸ் அரசு, மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவொன்றாகும். இரண்டாவதாக, லூயி பிலிப் வரம்புக்குட் பட்ட முடியரசர். மக்களுடைய ஒத்துழைப்பின்றி, ஒப்புதலின்றி அவரால் ஆள இயலாது. மூன்றாவதாக, பூர்போன் அரசு சிறப்பதி காரங்கள் பல கொண்டு திகழ்ந்தது. அவ்வாதிகாரங்களனைத்தும் ஆர்லியன்ஸ் அரசுக்கு மறுக்கப்பட்டன. தணிக்கை முறையும் அகற்றப்பட்டது. லூயி பிலிப்புக்கு ஃபிரெஞ்சு அரியணைமீது மரபு வழி உரிமை (Hereditary Right) ஏதும் கிடையாது. பாராளு மன்றம்தான் அரசரைத் தேர்ந்தெடுக்கும் என்ற மரபு, திட்ட வட்டமாக உருவாக்கப்பட்டது. 1830 ஜூலைப் புரட்சி மூலம் மக்களரசு திட்டவட்டமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ஃபிரெஞ்சு சமுதாயத்திலும் இப் புரட்சி மாபெரும் விளைவுகள் சிலவற்றை ஏற்படுத்தியது. தீவிர முடியரசுக் கொள்கை (Ultra-Royalism) முற்றிலும் நீக்கப்பட்டது. சமயச் சார்பற்ற அரசுக்கும், சிந்தனை உரிமைக்கும் தடையாக நின்ற கத்தோலிக்க சமயமும் சமய வாதமும் இப் புரட்சியால் முற்றிலும் அகற்றப்பட்டன. செல்வர்கள் ஆதிக்கமும் முற்றிலும் நிரந்தரமாக நீக்கப்பட்டது. மேலும், இப் புரட்சி ஃபிரெஞ்சு அரசியலில் நடுத்தர வகுப்பு மக்கள் எழுச்சிக்கு வழிவகுத்தது. தொழிற் புரட்சியின் காரணமாக

1 Fisher, *History of Europe*. p. 890.

2 Lipson. p. 16.

செல்வச் சிறப்பெய்திய அவர்கள் இப் புரட்சியின் விளைவாக, அரசியலிலும் செல்வாக்கு பெற்றனர். அடுத்து, இப்புரட்சியின் விளைவாக, சமயச் சார்பற்ற அரசும் அங்கு உருவானது. கல்வியும், பிறவும் திருச்சபை ஆதிக்கத்திலிருந்து விடுபட்டன. மேலும், இது வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது. இப் புரட்சியே ஐரோப்பிய நாடுகளில் தோன்றிய பிற புரட்சிகளுக்கும் அடிப்படையாகும். ஃபிஷர் (Fisher) என்ற வரலாற்று வல்லுநர் இதுபற்றி ஆராய்கையில், பாரிஸ் உலைக்களத்திலிருந்து சிதறிய நெருப்புத் துண்டுகள், வியன்னு மாநாடு உருவாக்கிய ஐரோப்பா என்ற கானகத்தில் விரைவாகப் பரவியது என்று குறிப்பிடுகிறார்.[1] இப் புரட்சி பிற நாடுகளிலும் புரட்சியைத் தூண்டி விட்டது. ஐரோப்பாவில் மாற்றங்கள் பல ஏற்படவும் இப் புரட்சியே அடித்தளமாயிருந்தது. ஆகவேதான், இதனை 1789 புரட்சியின் நிறைவென்பர் (Complement).

## பிற ஐரோப்பியப் புரட்சிகள்

'ஃபிரான்சுக்குச் சளிபிடித்தால் ஐரோப்பா முழுவதும் தும்மும்' என்பது மெட்டர்னிக் என்பவரின் கூற்றாகும். 1830 ஜூலையில் தோன்றிய ஃபிரெஞ்சுப் புரட்சி பிற நாடுகளிலும் புரட்சியை ஊக்குவித்தது. விக்டர் ஹியூகோ (Victor Hugo) என்பார் கூறுவது போல, வீரர்கள் படையெடுப்பைத் தடுத்து நிறுத்தலாம்; கருத்துகள் படையெடுப்பினைத் தடுத்து நிறுத்த இயலாது. ஃபிரெஞ்சுப் புரட்சிக் கருத்துகள் ஐரோப்பாவெங்கும் பரவியது. ஐரோப்பிய அரசியலும், சமுதாயமும், சமயமும் புரட்சியென்ற புயலில் சிக்குண்டு நிலைகுலைந்தன. மக்களாட்சி, நாட்டுப் பற்று இவற்றின் அடிப்படையில் நிகழ்ந்த இப் புரட்சி, பழைய ஐரோப்பாவையே பெரும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது. பழைய ஐரோப்பிய முறைக்கு இது ஒரு பெரும் சோதனையாக அமைந்தது.

## பெல்ஜியப் புரட்சி

1830 ஜூலைப் புரட்சி பெல்ஜியத்திலும் பரவியது. பெல்ஜியம் ஒரு கத்தோலிக்க நாடு. அது மரபுவழி முடியாட்சிக்குட்பட்ட ஒரு நாடாகும். 1815, வியன்னு மாநாட்டிற்கு முன்னர், அது ஆஸ்திரியப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது. வியன்னு மாநாட்டு ஏற்பாட்டின்படி இது ஹாலந்துடன் இணைக்கப்பட்டது. வல்லரசுச் சமநிலையை நிறுவவும், ஃபிரான்சைச் சுற்றி வலுவுள்ள நாடுகளை உருவாக்கவும் இவ்விரு நாடுகளை வியன்னு மாநாடு ஒன்றிணைத்தது. வெஸ்ட்ஃபேலிய உடன்பாட்டிற்கு (1648) முன்னர், இவ்விரண்டும்

1 .:Fisher, p. 891.

நெதர்லாந்து நாடுகளென்ற பெயரில் ஒரே நாடாக ஆஸ்திரிய ஆதிக்கத்தின் கீழிருந்தன. காலப்போக்கில் பல்வேறு வேறு பாடுகள் தோன்றி இவ்விரு நாடுகளையும் பிரித்தன.

நெதர்லாந்து நாடுகள் 17 மாநிலங்களைக் கொண்டிருந்தன. இம் மாநிலங்களனைத்திற்கும் பொதுவாக ஸ்டேட்ஸ் ஜெனரல் என அழைக்கப் பெற்ற ஒரு பாராளுமன்றம் இருந்தது. ஆயினும், ஒவ்வொரு மாநிலமும் சிறப்புரிமைகள் பல பெற்றுத் திகழ்ந்தன. தங்களுக்கென்று தனி சட்டமன்றங்கள், சட்டங்கள், தனி அரசு போன்றவற்றை அவை பெற்றிருந்தன. இவ்வரசியல் வேறுபாடுகளோடு சமய, மொழி, இன வேறுபாடுகளும் அவற்றின் ஒற்றுமையுணர்வை மேலும் குலைத்தன. வட மாநிலங்கள் யாவும் டுடானிக் (Teutonic) இனத்தைச் சார்ந்தவை. அவை ஜெர்மொழி யொன்றினைப் பேசின. தென்மாநிலங்கள் கெலடிக் இனத்தைச் சார்ந்தவை. தென் மாநில மக்கள் ஃபிரெஞ்சு மொழியுடன் நெருங்கிய தொடர்புடையதொரு மொழியினைப் பேசினர். இவ் வேறுபாடுகளுடன் சமய வேறுபாடுகளும் அவற்றை மேலும் பிரித்தன. ஹாலந்து ஒரு புராட்டஸ்டண்டு நாடு. பெல்ஜியம் (தென் மாநிலங்கள்) கத்தோலிக்க சமயத்தையே ஏற்றுக்கொண்டது. இச் சமய வேறுபாடுகளால் அவற்றிடையே வேற்றுமைகள் மிகுந்தன. வட மாநிலங்கள் (ஹாலந்து) இரண்டாம் பிலிப்பின் சமயக் கொள்கையினை எதிர்த்துப் புரட்சி செய்து விடுதலை பெற்றன. (1648) வெஸ்ட்பேலிய உடன்பாட்டின்படி அவை ஹாலந்து என்ற பெயரில் முழு உரிமை பெற்றன. பெல்ஜியம் தொடர்ந்து கத்தோலிக்க சமயத்தினையே ஏற்றுக்கொண்டு ஆஸ்திரிய ஆதிக்கத்தின் கீழ் இருந்துவந்தது.

பல்வேறு காரணங்களை முன்னிட்டு, வியன்னா மாநாடு இவ்விரு நாடுகளையும் மீண்டும் ஒன்றிணைத்தது. ஆஸ்திரியாவும் இவ்வேற்பாட்டினை ஏற்றுக்கொண்டது. ஆஸ்திரியப் பேரரசு வெகு தொலைவிலிருந்த பெல்ஜியத்தைக் கட்டிக் காக்கப் பெரிதும் இடர்ப்பட்டது. இரண்டாம் ஜோஸப் காலத்திலேயே இதனை மாற்றிக்கொள்ளும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அதனை மாற்றிவிட்டு, ஜெர்மனியில் சில பகுதிகளைப் பெற்றுக்கொள்ள 2ஆம் ஜோஸப் முயன்றார். மகா பிரடரிக்கின் எதிர்ப்புக் காரணமாக, அம் முயற்சி கைகூடவில்லை. ஃபிரெஞ்சுப் புரட்சியின்போதும், நெப்போலியனது போர்களின்போதும் ஆஸ்திரியா தனது பரந்த பேரரசின் தொல்லைகளைத் தெளிவாக உணர்ந்தது. ஐரோப்பாவின் மையத்தில் சில பகுதிகளைப் பெற்றுத் தனது ஆதிக்கத்தினை மேலும் விரிவுபடுத்த விரும்பியது. ஆஸ்திரியா நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பின்னர்,

மீண்டும் வலிமை பெற்றுத் திகழ்ந்த ஆஸ்திரியா அத்திட்டத்தினைச் செயல்படுத்த முனைந்தது. வியன்னு மாநாட்டிற்குப் பின்னர் ஆஸ்திரியாவுக்குத் தலைமையேற்ற மெட்டர்னிக், தமது தாயகத்தின் ஆதிக்கத்தினை ஐரோப்பா முழுவதும் நிறுவ முற்பட்டார். அதன் விளைவாக, பெல்ஜியத்தினை ஹாலந்துக்கு வழங்கினுர். அதற்கிழப்பீடாக இத்தாலியில் வெனிஸ், லொம்பார்டி ஆகிய இருபகுதிகளைப் பெற்றுர். அத்துடன் இத்தாலி, ஜெர்மனி முழுவதிலும் ஆஸ்திரிய ஆதிக்கத்தினை இவர் நிறுவினுர். இதன் விளைவாக, ஆஸ்திரிய ஆதிக்கம் ஐரோப்பாவில் மேலோங்கி நின்றது. ஆயினும், இத் திட்டத்தினை பெல்ஜியம் விரும்பவில்லை. வலிமையற்றுக் கிடந்த பெல்ஜியத்தின்மீது அத் திட்டம் புகுத்தப்பட்டது. நாட்டுப் பற்றினை முற்றிலும் புறக்கணித்துவிட்டு, வியன்னு மாநாடு ஹாலந்தையும், பெல்ஜியத்தையும் ஒன்றிணைத்தது.

ஹாலந்து தன்னேடு இணைக்கப்பட்ட பெல்ஜியத்தை ஒரு குடியேற்ற நாட்டினைப் போன்று நடத்தியது. டச்சுக்காரர்கள் தங்கள் நாட்டு நலனிலும், தங்கள் வணிக வளர்ச்சியிலுமே பெரிதும் நாட்டம் செலுத்தினர். பெல்ஜியத்தின் நலனையோ அல்லது அதன் பொருளாதார வளர்ச்சியினைப் பற்றியோ அவர்கள் சிறிதும் கவலைப்படவில்லை. பெல்ஜியம் ஹாலந்தைவிட, மக்கள் தொகையிலும் பரப்பளவிலும் பெரிய நாடு. ஆயினும், இவ்விரு நாடுகளுக்குமான பொதுப் பாராளுமன்றத்தில் அவற்றின் பரப்பளவு, மக்கள் தொகையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை. பாராளுமன்றத்திற்கு இரு நாடுகளும் ஒவ்வொன்றும் 55 உறுப்பினர்களை அனுப்புவதென்று முடிவாயிற்று. பொதுப் பாராளுமன்றம் ஹேக் (Hague) கிலும், பிரஸ்ஸல்ஸிலும் மாறி மாறிக் கூடுவதெனவும் முடிவாயிற்று.

இதனைப் பெல்ஜியச் சட்டமன்றம் ஏற்க மறுத்தது. நிலப் பரப்பிலும், மக்கள் தொகையிலும் மிகுந்த தனக்கு தக்க பிரதி நிதித்துவம் வழங்கப்படவில்லையென பெல்ஜியம் கருதியது அவர்களுடைய எதிர்ப்பு புறக்கணிக்கப்பட்டு, புதிய அரசியலமைப்பும் அவர்கள்மீது திணிக்கப்பட்டது. இவ்விரு நாடுகளுக்கிடையே பகைமை உணர்வு மிகுந்தது. அடுத்து, டச்சுக்காரர்கள் ஃபிரான்சின் நட்பைப் பெரிதும் பாராட்டிப் போற்றினர். பெல்ஜிய மக்கள் ஃபிரெஞ்சுக்காரர்களை வெறுத்தனர். டச்சுக்காரர்கள் தங்கள் வணிக நலனையே பேணிக் காத்தனர். உழவு முறையினைப் போற்றி வளர்க்கவில்லை. வணிகத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்த டச்சுக்காரர்கள், உழவர்களான பெல்ஜியத்தினரைத் தாழ்ந்தவர்களாகக் கருதினர். அதுமட்டுமன்றி டச்சு மொழியும் ஆட்சி மொழி

யாக்கப்பட்டது. அதனால், அது பெல்ஜியத்தினர்மீது திணிக்கப் பட்டது. இத் திணிப்பை உரிமையில் நாட்டம் மிக்க பெல்ஜியத்தினர் விரும்பவில்லை. மேலும், பொதுப் பாராளுமன்றத்தில் 7 அமைச்சர் களிருந்தனர். அவர்களுள் அறுவர் டச்சுக்காரர்கள். தங்களுக்கு வேண்டிய பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லையென பெல்ஜியத் தினர் ஏமாற்றமுற்றனர். பாராளுமன்றமும் எப்போதும் ஹேக்கி லேயே கூடியது. அது பெல்ஜியத்தில் கூட்டப்பெறாதது அம் மக்களுக்குப் பெருங் குறையாய்ப்பட்டது. தங்கள் உரிமைகள் பறிபோயின என அவர்கள் எண்ணினர். டச்சுக்காரர்கள் பெற்ற கடனுக்கு, பெல்ஜிய மக்கள்மீது மிகுதியான வரிகள் சுமத்தப்பட்டன. இது பெல்ஜிய மக்களைப் பெரிதும் பாதித்தது. தங்களது பொருளாதார வளர்ச்சி இதனால் பெரிதும் பாதிக்கப் படுவதை பெல்ஜிய மக்கள் தெளிவாக உணர்ந்தனர். அவர்கள் அவற்றை எதிர்த்தபோது அவர்களது உரிமைகள் பறிக்கப்பட்டன. அவர்களது செய்தித்தாள்கள் டச்சுக்காரர்களைக் குறை கூறிய போது, செய்தித்தாள்கள் தீவிர தணிக்கை முறைக்குட்படுத்தப் பட்டன. இதனால், பெல்ஜிய மக்கள் புரட்சி செய்துதான், தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக்கொள்ள வேண்டுமென முடிவுசெய்தனர்.

1830 ஜூலையில் ஃபிரான்சில் தோன்றிய புரட்சி, பெல்ஜிய மக்களுக்கு மாபெரும் ஊக்கத்தினைத் தந்தது. பிரசல்ஸிலும் பிற பகுதிகளிலும் புரட்சிகள் தோன்றின. மக்கள் படைகள் நாடெங்கும் திரண்டன. ஹாலந்து அரசர் வில்லியம், புரட்சியாளர்களை சமரசப்படுத்த முனைந்து தோல்வியுற்றார். பெல்ஜியப் புரட்சியை அடக்க வலுப்பட்ட டச்சுப் படைகளும் தோற்கடிக்கப்பட்டன. பெல்ஜியம் தன்னையொரு சுதந்திர நாடு என அறிவித்துக் கொண்டது.

இதனை இங்கிலாந்தின் வெளித்துறை அமைச்சராக இருந்த பாமர்ஸ்டன் (Palmerston) பெரிதும் வரவேற்றார். இங்கிலாந் துடன் வணிகத் துறையில் போட்டியாய் நின்ற ஹாலந்தைத் தோற்கடித்துத் தங்களது வணிகத்தை மேலும் சிறப்படையச் செய்ய பாமர்ஸ்டன் விரும்பினார். ஆகவே, பெல்ஜிய சுதந்திரத்தை உடனே இங்கிலாந்து ஆதரித்தது. ஃபிரான்சின் மன்னராக்கப்பட்ட லூயி பிலிப்பும் இதனை வரவேற்றார். மக்களாட்சிக்கு ஆதரவு தருவதே தமது நாட்டின் நோக்கமென அவர் அறிவித்தார். அத்துடன் பிரஷ்யா பெல்ஜியத்தின் சுதந்திரத்தினை எதிர்த்தபோது, லூயி பிலிப் பிரஷ்யாவை அச்சுறுத்தி, அதனை நடு நிலை வகிக்கு மாறு செய்தார். ஆஸ்திரியாவும், ரஷ்யாவும் தங்களை எதிர்த்துத் தோன்றிய புரட்சிகளை அடக்குவதில் ஆர்வம் காட்டினவேயன்றி,

பெல்ஜியத்தைப்பற்றிக் கவலையேதும் படவில்லை. ஆகவே, பெல்ஜிய மக்களுக்கு அன்றைய சூழ்நிலை வெகு சாதகமாகவே இருந்தது.

**லண்டன் மாநாடு (1830)**

1830-ல் இப் பிரச்சினையை ஆராய்வதற்காக இங்கிலாந்து லண்டனில் ஒரு மாநாட்டினைக் கூட்டியது. இங்கிலாந்தும், ஃபிரான்சும் பெல்ஜியத்தினை ஆதரித்தன. ஆஸ்திரியாவும், ரஷ்யாவும் தங்களது உள்நாட்டுப் பிரச்சினைகளில் ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டியிருந்ததால், இதனை எதிர்க்கவில்லை. ஆகவே, பெல்ஜியத்தின் சுதந்திரமும் அங்கீகரிக்கப்பட்டது.

பெல்ஜியத்தின் சுதந்திரத்தினை ஹாலந்து ஏற்க மறுத்தது. ஹாலந்து, போரை மீண்டும் தொடர்ந்தது. இங்கிலாந்தும், ஃபிரான்சும் பெல்ஜியத்தினை ஆதரித்தன. அவற்றின் போர்க் கலங்களும் பெல்ஜியத்தினை ஆதரிக்கும்பொருட்டு, அங்கு ஏவப் பட்டன. அப் படைகள் ஹாலந்துக் கடற்படைகளை ஆண்ட்வர்ப் (Antwerp) என்ற இடத்தில் முற்றுகையிட்டன. அவற்றை எதிர்த்துப் போரிட இயலாத டச்சுப் படைகள் 1832-ல் அவற்றிடம் சரணடைந்தன. ஹாலந்து பெல்ஜியச் சுதந்திரத்தையும் ஏற்றுக் கொள்வதாக வாக்களித்தது. பெல்ஜிய விடுதலைப் போர் இறுதியில் வெற்றியில் முடிந்தது.

பெல்ஜிய விடுதலைக்குப் பின்னர், யாரை அரசராக ஏற்றுக் கொள்வதென்பதில் பெல்ஜிய மக்களிடையே கருத்து வேறுபாடு தோன்றியது. நன்றியுணர்வு மேலிட்டால், அவர்கள் லூயி பிலிப்பின் மகனை நெமூர்க் கோமகனை, (Duke of Nemours) தங்களின் மன்னராகும்படி வேண்டினர். இங்கிலாந்து இதனை விரும்ப வில்லை. ஃபிரெஞ்சுச் செல்வாக்கு பெல்ஜியத்தில் மிகுந்துவிடும் என்ற அச்சத்தின் காரணமாக, இங்கிலாந்து அதனை வன்மையாக எதிர்த்தது. இதனைக் கண்டு லூயி பிலிப் பின்வாங்கிக்கொண்டார். பெல்ஜியம் பின்னர், சாக்சி கோபர்க்கின் கோமகனை லியோபால்டு என்பவரைத்தங்கள் அரசராகும்படி வேண்டியது. அவ் வேண்டு கோளை ஏற்று அவரும் பெல்ஜிய மன்னரானார். 1839-ல் கூடிய லண்டன் மாநாடும் இதனை ஏற்றுக்கொண்டது. பெல்ஜிய உரிமைக்கும், நடுநிலைமைக்கும் 1839-ல் கூடிய லண்டன் மாநாடு உறுதியளித்தது. இதில் இங்கிலாந்து, ஃபிரான்சு, ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா, ஹாலந்து ஆகிய நாடுகள் கையெழுத் திட்டன. பெல்ஜியம் இந் நாடுகளின் வாக்குறுதியினைப் பெற்று ஒரு தனி நாடானது.

**ஜெர்மனியில் புரட்சி**

1830 ஜூலைப் புரட்சி ஜெர்மனியையும் பாதித்தது. ஆஸ்திரிய ஆதிக்கத்தின் விளைவாக ஜெர்மனியில் பிற்போக்கு ஆதிக்கம் மிகுந்து காணப்பட்டது. ஆயினும், மெட்டர்னிக்கோ அல்லது அவரைச் சார்ந்த பிற்போக்குவாதிகளோ புதிய கருத்துகளை முற்றிலும் அழிக்க இயலவில்லை. புதிய கருத்துகளும், புதிய உணர்வுகளும், நாட்டுப் பற்றும் துப்பாக்கி முனைகளையும் விஞ்சி ஜெர்மனியில் விரைவாகப் பரவின. 1817ஆம் ஆண்டில் தோன்றிய மாணவர்கள் இயக்கம் நசுக்கப்பட்டபோதும், புதிய கருத்துகள் பரவுவதைப் பிற்போக்காளர்கள் கையிலிருந்த துப்பாக்கிகளோ அல்லது அவர்களது கொடுஞ்சிறைகளோ தடுத்து நிறுத்தவில்லை. 1830 ஆம் ஆண்டு, ஜூலையில் வெடித்த ஃபிரெஞ்சுப் புரட்சி ஐரோப்பாவெங்கும் புத்துணர்வைப் பரப்பியது. அப் புரட்சியால் உந்தப்பெற்ற முற்போக்காளர்களும். மாணவர்களும் நாட்டுப் பற்று மிகுதியால், தங்களது தாயகத்தை அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுவிக்க புரட்சியிலீடுபட்டனர். பிரான்ஸ்விக், ஹெஸ்ஸா, காசல், சேக்கனி, ஹனோவர், பவேரியா போன்ற பகுதிகளில் புரட்சிகள் ஏற்பட்டன. புரட்சிக்கஞ்சிய அவ் வாட்சியாளர்கள் அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டு மக்களுக்குப் பல உரிமைகளை வழங்கினர். செய்தித் தாள்களுக்கும் உரிமை நல்கப்பட்டது. முற்போக்கு எங்கும் பீடு நடைபோட்டு வெற்றிப் பெருமிதத்தில் களித்திருந்தது. ஆயினும், இந்நிலை நீடிக்கவில்லை. பிற்போக்கு வல்லரசுகள் முற்போக்குச் சக்திகளின் வெற்றியினைக் கண்டு பெரிதும் அஞ்சின. முற்போககினரின் திட்டத்தை முறியடிக்கவும் அவை திட்டம் தீட்டின. ஜெர்மனியில் தோன்றிய இப் புத்துணர்வைக் கண்டு, ஆஸ்திரியா பெரிதும் வியந்தது. முற்போக்கென்ற நோய் ஒரு பகுதியில் வெற்றி பெற்றால், இது பிற்பகுதிகளிலும் விரைவாகப் பரவுமென மெட்டர்னிக் அஞ்சினார். ஆதலின், அவர் 1832-ல் ஜெர்மன் பாராளுமன்றத்தினைக் கூட்டி, புரட்சியால் வரும் விளைவுகளைத் தெள்ளென விளக்கினார். புரட்சி வெற்றி பெற்றால், அதன் விளைவால் முடியாட்சியே வீழ்த்தப்பெறுமென அச்சுறுத்தினார். ஆகவே, புரட்சியினை அடக்குதல் அவர்கள் தம் கடனென இப் பெருமகனார் வேண்டுகோள் விடுத்தார். மெட்டர்னிக்கின் அச்சக் குரலைக் கேட்டுப் பெரிதும் அதிர்ந்துபோன ஜெர்மன் குறுநில மன்னர்கள் புரட்சியினை ஒடுக்குவதையே தக்கதெனக் கருதினர். கார்ல்ஸ்பார்ட் ஆணைகள் மேலும் விரிவுபடுத்தப் பட்டன. பிற்போக்காட்சியின் இரும்புக் கரங்கள் மேலும் இறுக்கப் பட்டன. மக்களது உரிமைகள் முற்றிலும் பறிபோயின. புரட்சியாளர்கள் பெருங் கொடுமைகளுக்கு உட்படுத்தப்பட்டனர்.

வன்முறை, அடக்குமுறை போன்றவற்றால் 1835-ல் புரட்சி முற்றிலும் முறியடிக்கப்பட்டது. மாணவர்கள் இயக்கமும் பிறவும் தடை செய்யப்பட்டன. 1830 ஜூலையில் வழங்கப்பட்ட புது அரசியலமைப்பு முறைகளும் நீக்கப்பட்டன. முற்போக்கு முற்றிலும் நசுக்கப்பட்டது. 1830 ஜூலைப் புரட்சி ஜெர்மனியைப் பொருத்த வரையில் ஒரு தோல்வியேயெனலாம்.

**இத்தாலியில் புரட்சி**

வியன்னு மாநாட்டால் மிகவும் ஏமாற்றமுற்ற நாடுகளில் இத்தாலியும் ஒன்று. இத்தாலி துண்டாடப்பட்டதோடு, பிற்போக்கு மிக்க அந்நிய ஆதிக்கமும் அங்கு நிலை நிறுத்தப்பட்டது. இத்தாலி மீண்டும் ஒரு புவியியல் சொல்லாக (Geographical Expression) மாறியதை அம் மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஐரோப்பிய நாகரிகத்தின் நிலைக்களனாய் நின்ற இத்தாலி, வியன்னு மாநாட்டிற்குப் பின்னர், மேலும் சீர்குலைந்துபோனது. ரோம் நாகரிகத்தையும், மறுமலர்ச்சியினையும் வழங்கி ஐரோப்பிய நாகரிக வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நின்ற அந் நாடு, தாழ்வுற்றுத் தலைகுனிந்து நின்றது. நாட்டுப் பற்று மிக்க இத்தாலிய மக்கள் இதனைக் கண்டு வெகுண்டனர். தங்களது தாயகத்தின் அவல நிலையைப் போக்க இரகசிய இயக்கங்கள் பலவற்றினைத் தொடங்கினர். ஆயினும், வலிவும் பொலிவும் மிக்க ஆஸ்திரியா அவற்றையெல்லாம் எளிதாக அடக்கிவிட்டது ஆயினும், இத்தாலி மக்கள் கொடுங்கோன்மையினையோ, அடக்கு முறையினையோ கண்டு தளர்ந்துவிடவில்லை. போராட்டத்தில் தொடர்ந்து நம்பிக்கை கொண்டிருந்தனர். 1830-ல் ஃபிரான்சில் தோன்றிய புரட்சி, இத்தாலியிலும் எதிரொலித்தது. பார்மா, மொடனு போன்ற பகுதிகளின் பிற்போக்காட்சியாளர்கள் அப்பகுதிகளிலிருந்து விரட்டப்பட்டனர். போப்பரசுகளிலும் பிற்போக்குச் சமய ஆட்சியினை எதிர்த்துப் புரட்சி தோன்றியது. ஆயினும், புரட்சியாளர்கள் ஆஸ்திரிய வலிமையைக் கண்டு அஞ்சி ஃபிரெஞ்சுத் துணையை நாடினர்.

ஃபிரெஞ்சுப் பேரரசரான லூயி பிலிப்பைத் தங்களுக்குத் துணை புரியுமாறு பன் முறை வேண்டினர். அச்சம் நிறைந்த லூயி பிலிப், ஆஸ்திரியாவை எதிர்த்து இத்தாலிக்குத் துணைபுரியத் தயங்கினர். இத்தாலி மக்களுக்கு எவரும் துணைபுரிய முன்வரவில்லை. தனித்து நிறுத்தப்பட்ட இத்தாலியால் வலிமைமிக்க ஆஸ்திரியாவை எதிர்த்துப் போரிட இயலவில்லை. இத்தாலியப் புரட்சி வெகு எளிதாக நசுக்கப்பட்டது. மக்களால் விரட்டப்பட்ட அரசர்கள மீண்டும் ஆஸ்திரியத் துணையுடன் பதவியில் அமர்ந்தனர். மீண்டும் அங்குப் பிற்போக்காட்சி நிலைநிறுத்தப்பெற்றது. இத்தாலியை ஒன்றுக

இணைக்க வேண்டுமென்ற அம் மக்களது கனவு பலிக்கவில்லை. அக் கனவு நனவாகும் வாய்ப்பு அண்மையிலில்லை.

**போலந்தில் புரட்சி**

'ஐரோப்பாவின் எதிர்காலம் போலந்தின் தலை விதியைப் பொருத்தமையும்' என்ற நெப்போலியனின் கூற்று, பொருள் பொதிந்தவொன்றாகும். வல்லரசுச் சமநிலையை நிறுவும்பொருட்டு, ரஷ்யா, ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் போலந்தை 18ஆம் நூற்றாண்டிலேயே மும்முறை (1772, 1793, 1795) பகிர்ந்து கொண்டன. போலந்தைப் பிரிவினை செய்ய முதலில் முனைந்தவர் மகாப் பிரெடெரிக் ஆவார். பிரான்டன்பர்க், கிழக்குப் பிரஷ்யா இவற்றை இணைப்பதற்கும், ரஷ்யா, ஆஸ்திரியாவின் ஆதரவைப் பெறுவதற்கும், ஃபிரான்சை ஐரோப்பிய அரங்கில் தனித்துநிறுத்தவும் போலந்துப் பிரிவினையை அவர் ஓர் அரசியல் கருவியாகப் பயன்படுத்தினர். 1772-ல் அவை மூன்றும் போலந்தைப் பிரிவினை செய்துகொண்டன. இதற்கு அடிப்படைக் காரணம் போலந்தின் பலமின்மையேயாகும்.

போலந்தின் புவியியலமைப்பே அதன் தொல்லைக்கு ஒரு முக்கிய காரணமாயிருந்தது. அதன் வடகிழக்கே ஸ்வீடனும், கிழக்கே ரஷ்யாவும், மேற்கே பிரஷ்யாவும், தென்மேற்கே ஆஸ்திரியாவும், தெற்கே துருக்கியும் அமைந்திருந்தன. பெரு நாடுகளால் சூழப்பட்டிருந்த காரணத்தால், அது விரிவடைய இயலாமற்போனதுடன், அவற்றிற்கு இறுதியில் இரையாகவும் நேரிட்டது. 1763-ல் மூன்றாம் அகஸ்டஸ் (Augustus-III) மறைந்தார். அவரது மறைவுக்குப் பின்னர், அது விரைவாக வீழ்ச்சியுறத் தொடங்கியது. அதன் வீழ்ச்சிக்கு மற்றுமொரு காரணம், அதற்கு இயற்கையரண்கள் ஏதுமில்லாததாகும். அதன் அரசர்களும் வலுவுள்ள அரண்கள் அமைக்கத் தவறிவிட்டனர். ஆதலின், இந் நாட்டை வெற்றி கொள்வதென்பது பிற நாடுகளுக்கு மிக எளிதாயிற்று. அடுத்து, இந் நாட்டு மக்களிடமும் ஒற்றுமையென்பது இல்லாமற் போனது. போலந்தியர்கள் (Polas), கொசக்கியர்கள் (Cossacks), ஜெர்மனியர்கள் (Germans), யூதர்கள் (Jews), உக்ரேனியர்கள் (Ukraineans) போன்ற பல்வேறு மக்கள் அங்கு வாழ்ந்த காரணத்தால், அவர்களிடை நாட்டுப் பற்றும், நாட்டு நலன் பற்றிய நாட்டமுமில்லாது போயிற்று. மேலும், அவர்களிடை ஒற்றுமையை வளர்க்கவல்ல ஒரே சமயமும் அங்கில்லை. அங்கு வாழ்ந்தவர்களில் பெரும்பாலோர் கத்தோலிக்கர்கள் ஆவர். அவர்கள் சமய அடிப்படையில் ஆஸ்திரியாவையும், ரஷ்யாவையும் தங்களது சமயக் காவலர்களாகவே கருதினர். அங்குப் புராட்டஸ்டண்டுகளும் இருந்தனர்.

சிறுபான்மையினரான அவர்கள், பிரஷ்யாமீது மிகுந்த பற்று வைத்திருந்தனர். அவர்களின் சமய நலனைப் பேணுவதாகப் பிரஷ்யாவும் கூறிக்கொண்டது. சமயம் அவர்களை அவர்களின் தாயகத்தையே மறக்குமாறு செய்தது. இதனால், ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா போன்ற நாடுகள் சமயத்தின் பேரால் அந் நாட்டரசியலில் தலையிடுவதும் எளிதானது. அத்துடன், அந் நாடு பின்பற்றிய அரசியல் முறையும் அதன் தொல்லைகளை மிகுதிப்படுத்தியது. அதன் முடியரசு தேர்ந்தெடுக்கப்படுவதாயிருந்தது (Monarchy was Elective). ஓர் அரசரின் மறைவிற்குப் பின்னர் மறு அரசரைத் தேர்ந்தெடுப்பது அந் நாட்டின் மரபாயிருந்தது. பல சமயங்களில் வெளி நாட்டினரும் அதன் அரசராகத் தேர்ந்தெடுக்கப்படுவதும் உண்டு. காட்டாக, சாக்சனித் தேர்வாளர் (The Elector of Saxony) பல சமயங்களில் அதன் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதன் விளைவாக, இதன் உள்துறையில் வெளிநாட்டினர் தலையிடுவது எளிதானது. அங்கு ஒவ்வொரு பிரபுவும் தடுப்பதிகாரங்களைக் (Liberum Veto) கொண்டு திகழ்ந்தார். அதனால், அவர்களிடை போட்டியும், பொறாமையும் மிகுந்து காணப்பட்டன. அரசரின் தேர்வின்போது அவர்கள் மிகுதியும் பூசலிட்டுக்கொண்டனர். தடுப்பதிகாரம் அவர்கள் கையிலிருந்த காரணத்தால், அந் நாட்டின் டயட்டும் (Diet-பாராளுமன்றம்) நன்கு செயல்படுவது அரிதானது. செல்வர்களிடை ஒற்றுமையின்மையும் மிகுந்தது. அங்கு அனைத்துச் சட்டங்களும் ஏகமனதாக நிறைவேற்றப்பட வேண்டுமென்ற நிலையிருந்தது. இது முற்றிலும் இயலாததொரு நிலை. ஆதலின், அதன் முன்னேற்றங்கள், சீர்திருத்தங்கள் அனைத்தும் தடைப்பட்டன. நாடு மிகப் பின்தங்கிப்போனது. நிலமானிய முறையும் அங்குச் செயலிலிருந்த காரணத்தால், அதன் முற்போக்குத் திட்டங்கள், செயல்கள் மேலும் தடைப்பட்டன. அங்கு வறுமையும், மூடப் பழக்கங்களுமே மிகுந்து காணப் பட்டன. நிலமானியச் செல்வர்களும் தன்னலம் காரணமாக, வெளிநாட்டினரின் கைப் பாவையாகவே திகழ்ந்தனர். ஆதலின், போலந்து 18-ஆம் நூற்றாண்டில் மட்டும் மும்முறை துண்டாடப் பட்டதில் வியப்பேதுமில்லை.

போலந்து துண்டாடப்பட்டபோதும் அம் மக்களின் நாட்டுப் பற்று முற்றிலும் துண்டாடப்படவில்லை. ஃபிரெஞ்சுப் புரட்சி, அவர்களது விடுதலை வேட்கையை மிகுதிப்படுத்தியது. நெப்போலியன் அமைத்த வார்சா டச்சிஅரசு (The Grand Duchy of Warsaw) அவர்களது ஒற்றுமையுணர்வை மேலும் தூண்டியது. தங்களது தாயகத்தைஅவர்கள் மீண்டும் ஒன்றிணைக்க விரும்பினர். ஆயினும், 1815-ல் கூடிய வியன்னா மாநாடு, அவர்களின் இவ் வேட்கையை

முற்றிலும் புறக்கணித்தது. வியன்ன மாநாடு, அதனை மீண்டும் துண்டாடியது. அம் மக்கள் இதனல், பெரிதும் ஏமாந்துபோயினர். வார்சா டச்சி அரசு மீண்டும் ரஷ்ய ஆதிக்கத்தின் கீழ் வந்தது.

முதலாம் சார் அலெக்ஸாந்தர் இந்தக் காங்கிரஸ் அரசுக்கு (Congress Kingdom) ஓர் அரசியலமைப்பை வழங்கினர். அவ் அரசியலமைப்புப்படி, போலந்து இரு அவைகளைக்கொண்ட பாராளு மன்றமொன்றையும், சமயப் பொறை உடைமையையும் (Religious Toleration) உரிமைகள் சிலவற்றையும் பெற்றது. போலிஷ் மொழி ஆட்சிமொழியாக்கப்பட்டது. போலந்தில் போலந்து மக்கள் மட்டுமே அரசுப் பணியாளர்களாக இருப்பரெனவும் அவ்வரசியல் அமைப்பு நவின்றது.[1] 1818-ல் அதன் டயட்டை முதலாம் சார் அலெக்ஸாந்தரே திறந்துவைத்துச் சிறப்பித்தார்.

1818-க்குப் பின்னர், மெட்டர்னிக்கிடம் கொண்ட நட்புக் காரணமாக, சார் மன்னர் பெரிதும் மாறிப்போனர். 1815-ல் தங்களுக்கு வழங்கப்பட்ட அரசியலமைப்பால் நிறைவு பெருத போலந்து மக்கள் அதனை எதிர்க்கத்தலைப்பட்டனர். இந் நன்றி கொன்ற செயலைச் சார் மன்னர் மிக வெறுத்தார். ஆயினும், தான் வழங்கிய அவ்வரசியலமைப்பை அவர் அகற்றத் துணியவில்லை. அவரது உளப்பாங்கைப் புரிந்துகொண்ட அவருடைய ஏவலர்கள், போலந்து மக்களைப் பெரிதும் துன்புறுத்தினர், அவர்களது உரிமைகளையும் பறித்தனர். அதனல், அவர்கள் ரஷ்ய ஆளுநரான கான்ஸ்டன்டைனைப் (Constantine) பெரிதும் வெறுத்தனர். 1825-ல் முதலாம் சார் அலெக்ஸாந்தர் மறைவுக்குப் பின்னர், முதலாம் சார் நிக்கலொஸ் (Nicholas-I) அரியணை யேறினர். அவர் மக்களாட்சி, உரிமை, அரசியலமைப்பு போன்றவற்றிற்கு முற்றிலும் மாறுபட்டவர். போலந்து மக்களுக்கு வழங்கப் பட்டிருந்த அரசியலமைப்பை அவர் முற்றிலும் வெறுத்தார். அவரது தன்னுட்சியை விரும்பாத போலந்து மக்கள், பல இரகசிய இயக்கங்கள்மூலம் அதனை அகற்ற விரும்பினர். 1830ஆம் ஆண்டு, ஜூலையில் தோன்றிய ஃபிரெஞ்சுப் புரட்சி, அம் மக்களைப் பெரிதும் கவர்ந்தது. அதனைப் பின்பற்றி அவர்களும் புரட்சி செய்யத் தலைப்பட்டனர். 1830ஆம் ஆண்டு, நவம்பர் திங்களில் வார்சாவில் புரட்சி தொடங்கியது. கான்ஸ்டன்டைனையும் கொல்ல புரட்சியாளர்கள் முயன்றனர். புரட்சியாளர்களிடமிருந்து தப்பிய அவர் 1831-ல் காலரா நோய்க்கு இரையானர்.

1 Craig, gordon, *A.*, *Europe*, - P. 1814,, 1591, 31.

1831–ஆம் ஆண்டு, ஜனவரித் திங்களில் அப் புரட்சியாளர்கள் தங்களது அரியணைக்கும் ரஷ்யாவுக்கும் எத்தகைய தொடர்புமில்லையென அறிவித்தனர். இது ரஷ்ய மேலாண்மைக்கு ஒரு சவாலாக அமைந்தது. போலந்தை மீட்கும்பொருட்டு, 1831, பிப்ரவரித் திங்களில் 200,000 ரஷ்யப் படைவீரர்கள் அங்கு அனுப்பப்பட்டனர். போலந்துப் புரட்சியாளர்கள் மிக வீரத்துடன் போரிட்டும் பயனில்லாற்போனது. 1831ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள், 25-ஆம் நாள் குரோச்சோவ் என்ற இடத்தில் (Grochow) அவர்கள் முற்றிலும் முறியடிக்கப்பட்டனர். அங்குப் பரவிய காலரா நோய்க்கும் பல்லாயிரப் புரட்சி வீரர்கள் பலியாயினர். 1832-ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்களில் அவர்கள் முற்றிலும் சரணடைந்தனர். அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்த அரசியலமைப்பையும் அம் மாதமே நீக்கினார் சார் மன்னர். போலந்தும் ரஷ்யாவுடன் இணைக்கப்பட்டது. போலந்தில் பள்ளிகளும், பல்கலைக்கழகங்களும் மூடப்பட்டன. பல்லாயிரவர்கள் கைது செய்யப்பட்டு, ரஷ்யச் சிறைகளுக்கனுப்பப்பட்டனர். இதனை எதிர்த்து 1833-லும், 1845-லும் தோன்றிய புரட்சிகளும் நசுக்கப்பட்டன. ரஷ்ய அடக்குமுறைக்கு அஞ்சிப் போலிஷ் அறிஞர்கள் பலர் பாரிஸ், லண்டன் போன்ற நகரங்களில் குடியேறினர். அவர்களுடன் பல புரட்சித் தலைவர்களும் போலந்தை விட்டகன்றனர். பாரிஸ், லண்டன் போன்ற நகரங்களிலிருந்தவாறே அவர்கள் தங்கள் மக்களை ஊக்குவித்த வண்ணமிருந்தனர். அத்தகைய தலைவர்களில் ஜோக்கிம் லெலிவெல் (Joachim Lelewel) என்பாரும், ஆடம் மிக்கிவிக்ஸ் என்பாரும் முக்கியமானவர்கள் (Adam M chiewicz). ஆடம் மிக்கிவிக்ஸ் ஒரு மாபெரும் கவிஞர். அவர் தமது ஒப்பற்ற கவிதைகள்மூலம் நாட்டுப் பற்றினைத் தம் மக்களிடையே யூட்டினார். அவரது பாடல்கள் போலந்தில் மட்டுமன்றி ஜெர்மனி, ஃபிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளிலும் பெரிதும் புகழப்பட்டன. ஆயினும், போலந்து வெற்றிபெற முடியவில்லை.

1830 புரட்சி, செல்வர்கள் அறிஞர்களது புரட்சியாகவே இருந்தது. அவர்கள் மக்களின் ஆதரவைப் பெறத் தவறிவிட்டனர். மேலும், அப் புரட்சியாளர்களிடையேயும் ஒற்றுமையில்லை. பயிற்சி அற்ற படைகள், திறமையும், அனுபவமுமற்ற படைத் தலைவர்கள் போன்ற காரணங்களும் அவர்களின் தோல்விக்குரிய பிற காரணங்களாகும். போலந்து மிகச் சிறிய நாடு. மிகப் பெரிய வல்லரசான ரஷ்யாவை எதிர்த்துப் போரிட்டது அது செய்த மாபெரும் தவறாகும். புரட்சியாளர்கள் லூயி பிலிப்பினை நம்பிப் புரட்சியலீடுபட்டதும் ஒரு மாபெரும் தவறாகும். ரஷ்யாவை எதிர்த்து போலந்துக்குத் துணைபுரிய அவர் முன்வரவில்லை.

பிற்போக்கு நாடுகளான ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா ஆகிய நாடுகளைக் கண்டு அவர் பெரிதும் அஞ்சினர். அதனால், அவர் போலந்துக்கு உதவ முன்வரவில்லை. இங்கிலாந்தும் ரஷ்யாவை எதிர்த்து இப் புரட்சியில் தலையிட விரும்பவில்லை. அந்நிய உதவியினை எதிர்பார்த்த போலந்துப் புரட்சியாளர்கள் பெரிதும் ஏமாற்ற முற்றனர். தனித்து நிறுத்தப்பட்ட அவர்கள் எளிதில் தோற்கடிக்கப்பட்டனர். 1815-ல் தங்களுக்கு வழங்கப்பட்ட அரசியல் அமைப்பு, நீக்கப்பட்டது அவர்களைப் பெரிதும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது. போலந்து ரஷ்யாவின் ஒரு பகுதியானது. ரஷ்ய மொழியும், சமயமும் அங்குத் திணிக்கப்பட்டன. போலந்து தனது தனித்தன்மையை முற்றிலுமிழந்தது. அங்கு 19 ஆம் நூற்றாண்டு முழுவதிலுமே இந்த அவல நிலை தொடர்ந்தது.

**ஸ்விட்ஸர்லாந்து**

அமைதியின் இருப்பிடமான ஸ்விட்ஸர்லாந்திலும் இப் புரட்சி எதிரொலித்தது. அந் நாட்டு அரசு, உயர்குடியினர் ஆதிக்கத்திலேயே இருந்தது. 19ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட தொழிற் புரட்சியின் விளைவாக, அங்கும் தொழில் துறையில் முன்னேற்றமேற்பட்டது. தொழிலாளர்களும், நடுத்தர வகுப்பு மக்களும் அங்குச் செல்வாக்கு பெறத் தொடங்கினர். உரிமைக்காக அவர்களும் போராடத் தொடங்கினர். 1830 ஜூலைப் புரட்சியால் பெரிதும் கவரப்பட்ட அவர்கள், சீர்திருத்தங்கள் பலவற்றிற்காகப் போராடத் தொடங்கினர். அப் போராட்டம், 1848 பிப்ரவரிப் புரட்சிக்குப் பின்னரும் தொடர்ந்தது.

**இங்கிலாந்து**

1830 ஜூலைப் புரட்சி இங்கிலாந்திலும் பல்வகை மாற்றங்களுக்கு வழிவகுத்தது. இங்கிலாந்து ஒரு மக்களாட்சி நாடாயினும், உண்மையில் அங்கு உயர்குடியனரின் ஆதிக்கமே மேலோங்கி நின்றது. உடைமை (Property) உள்ளவர்களே வாய்ப்பும் வாக்குரிமையும் பெற்றனர். தொழிலாளர்களுக்கு வாக்குரிமை நல்கப்படவில்லை. புதிதாகத் தோன்றிய நகரங்கள் பலவற்றிற்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை. இதனை எதிர்த்துத் தொழிலாளர்கள் தங்களது போராட்டங்களைத் தொடங்கினர். 1830 ஜூலைப் புரட்சியும் அவர்களுக்கு நல்லதொரு வாய்ப்பினை நல்கியது. தங்களுக்கும் வாக்குரிமை வேண்டும். தேர்தல் முறையில் மாற்றங்கள் வேண்டுமென அவர்கள் போராடத்தலைப்பட்டனர். ஆயினும், அன்றிருந்த கட்சிகளான "விக்"கும், "டோரி"யும் வாக்குரிமையினைப் பரவலாக்கப் பெரிதும் தயங்கின. இப் புரட்சியின் காரணமாக,

"விக்" கட்சி தேர்தல முறையில் சீர்திருத்தங்கள் செய்வதாக வாக்களித்தது. 1830-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தலில் மக்கள் "விக்" கட்சியினையே தேர்ந்தெடுத்தனர். வாக்களித்தபடி "விக்" கட்சியும் சீர்திருத்தங்கள் பலவற்றை நிறைவேற்றிற்று. வரலாற்றுப் புகழ்மிக்க சீர்த்திருத்தச் சட்டமும் 1832-ல் நிறைவேறியது. (The Reform Act of 1832) இச் சட்டம் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வாக்குரிமையினை நல்கியது. உண்மையான மக்களாட்சிக்கும் இச் சட்டம் வித்திட்டது. அதற்கு 1830 ஜூலைப் புரட்சியே ஒரு மாபெரும் தூண்டுகோலெனில் மிகையாகாது.

**ஸ்பெயின் – போர்ச்சுகல்**

இப் புரட்சி ஸ்பெயினையும் போர்ச்சுகலையும் கூட பாதித்தது. அவ்விரு நாடுகளிலும் முற்போக்காளர்களுக்கும் பிற்போக்காளர் களுக்குமிடையே உள்நாட்டுப் போர் மூண்டது. இங்கிலாந்தும், ஃபிரான்சும் முற்போக்கினரைப் பரிவுடன் ஆதரித்தன. அந் நாடு களின் தலையீடு காரணமாக, அவ்விரு நாடுகளிலும் முற்போக்குக் கருத்துகள் காப்பாற்றப்பட்டன. முன்னரே வழங்கப்பட்டிருந்த அரசியலமைப்பும் காப்பாற்றப்பட்டது. பிற்போக்கினர் அதனை வெறுத்தபோதும் அந்நாடுகளில் மக்கள் விரும்பிய அரசியலமைப்பு முறை காப்பாற்றப்பட்டது.

இப் புரட்சியின் விளைவாக, ஐரோப்பாவில் மாபெரும் மாற் றங்கள் பல ஏற்பட்டன. ஐரோப்பாவே முற்போக்கு ஐரோப்பா, பிற்போக்கு ஐரோப்பாவென இரு கூறுகப் பிரிந்தன. ரைன் நதிக்கு மேற்கேயுள்ள ஐரோப்பிய நாடுகள் முற்போக்குக் கொள்கைகளை யும், மக்களாட்சி முறையினையும் ஏற்றுக்கொண்டன. அந் நாடு களில் நடுத்தர வகுப்பு மக்கள் செல்வாக்கு பெறத் தொடங்கினர். அங்கு உயர்குடி மக்களின் செல்வாக்கு மிகக் குறைந்தது. ஃபிரான்சு, ஸ்விட்சர்லாந்து, பெல்ஜியம் போன்றவை அத்தகைய நாடுகளில் சில. ரைன் நதிக்குக் கிழக்கேயுள்ள நாடுகள் பிற் போக்குக் கொள்கைகள் வழி நின்றன. அவை, பழைய அரசியல், பொருளாதார, சமூகக் கொள்கைகளையே சிறந்ததென ஏற்றுக் கொண்டன. அத்துடன், அவை முற்போக்குக் கொள்கைகளை அடக்குவதிலும் ஈடுபட்டன. அவை இத்தாலி, ஜெர்மன், போலந்து போன்ற நாடுகளில் தோன்றிய புரட்சி இயக்கங்களையும் முறியடித்து வெற்றி வாகை சூடிக்கொண்டன. ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்ற இப் பிற்போக்கு நாடுகள், முற்போக்குக் கொள்கை களுக்குப் பெரும் முட்டுக்கட்டையாய் நின்றன.

**1830 ஜூலைப் புரட்சியின் விளைவுகள்**

வியன்னு மாநாடு தனது பிற்போக்கு ஏற்பாட்டினை ஐரோப்பிய நாடுகள்மீது சுமத்திற்று. அதன் முறைமைக் கொள்கை, இழப்பீடு வழங்கல், முன்னிலை மீட்பு போன்ற கொள்கைகள் ஐரோப்பாவின் முன்னேற்றத்திற்குப் பெரும் தடையாய் நின்றன. இறையுரிமைக் கோட்பாட்டிலும், பழைமையிலும் நம்பிக்கை மிக்க பல அரசர்கள் மீண்டும் அரசராயினர். ஃபிரான்சு, ஜெர்மனி, ஸ்பெயின், நேப்பிள்ஸ், ஹாலந்து போன்ற நாடுகளில் மீண்டும் பிற்போக்கு ஆட்சி புகுத்தப்பட்டது. இப் பிற்போக்கு அரசர்கள் மக்களது உரிமைக்கும், புதுக் கருத்துகளுக்கும் பெருந் தடையாய் நின்றனர். இதனுல், ஐரோப்பாவின் முன்னேற்றம் பெரிதும் தடைப்பட்டது. மக்களாட்சி, நாட்டுப் பற்று இவை அனைத்தையும் புறக்கணித்துவிட்டு, வியன்னு மாநாட்டினர் வல்லரசுச் சமநிலையை நிறுவினர். ஹாலந்தும் பெல்ஜியமும் ஒன்றிணைக்கப்பட்டன. இத்தாலியும் ஜெர்மனியும் ஆஸ்திரிய ஆதிக்கத்தின் கீழ் வந்தன. போலந்து மீண்டும் துண்டாடப்பெற்றது. நார்வேயும் ஸ்வீடனும் இணைக்கப்பட்டன. இவ்வேற்பாடுகள் அனைத்திலும் மக்களது உணர்ச்சிகள், நாட்டுப் பற்று யாவும் புறக்கணிக்கப்பட்டன. வியன்னு மாநாடு முற்போக்குக் கொள்கைகளுக்கு ஒரு மாபெரும் அறைகூவலாய் அமைந்தது.

1830 ஜூலைப் புரட்சியின் விளைவாக, பிற்போக்கினரின் கனவு சிதைந்தது. புரட்சியினைத் தடுத்தல், ஃபிரான்சைச் சுற்றி வலுவுள்ள அரண்கள் அமைத்தல், வல்லரசுச் சமநிலை நிறுவுதல், முன்னிலை மீட்பு, முறைமைக் கொள்கை, இழப்பீடு வழங்குதல் போன்ற அனைத்து வியன்னு மாநாட்டுக் கொள்கைகளும் இம் மாபெரும் புரட்சியால் சிதைந்துபோயின. வியன்னு மாநாடு மிகத் தொல்லைப்பட்டு எழுப்பிய மாபெரும் பிற்போக்கு அணி, இப் புரட்சியால் தகர்க்கப்பட்டது. வியன்னு மாநாடு கட்டிய மாபெரும் அணையில் இப் புரட்சி உடைப்புகள் பலவற்றைத் தோற்றுவித்தது. அதன் காரணமாக, அணையின் உடைப்புகளில் வெள்ளம் பெருகி, அவ்வணையினையே இறுதியில் அழித்தது.

வியன்னு மாநாட்டு நோக்கங்களையும் ஏற்பாடுகளையும் எதிர்த்த முதல் நாடு ஃபிரான்சாகும். இம் மாபெரும் புரட்சியின் விளைவாக, வியன்னு மாநாட்டின் கொள்கைகள் அனைத்தும் புறக்கணிக்கப்பட்டன. ஃபிரான்சில் இப் புரட்சியின் விளைவாக முறைமைக்கொள்கை வழி நிலை நிறுத்தப்பெற்றது. பூர்போன் ஆட்சி வீழ்ச்சியுற்றது. முன்னிலை மீட்பு, புரட்சியினைத் தடுத்தல்

போன்ற வியன்னு மாநாட்டின் கொள்கைகளை இப் புரட்சியின் மூலம் ஃபிரெஞ்சு மக்கள் தூக்கி எறிந்தனர். பூர்போன் அரசைப் புரட்சிமூலம் அகற்றிய ஃபிரெஞ்சு மக்கள் ஆர்லியன்ஸ் அரசையும் தேர்ந்தெடுத்தனர். மரபுவழி அரசு (Hereditary Monarachy) அங்கு வீழ்த்தப்பட்டது. அரசென்பதே மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஒன்றாக அங்கு மாறியது. 1814 ஆம் ஆண்டுச் சாசனமும் திருத்தப்பட்டு அரசரது அதிகாரங்கள் பெரிதும் குறைக்கப்பட்டன. 1830 ஜூலைப் புரட்சியின் விளைவாக மீண்டும் முற்போக்கு வென்றது. முடியரசுக் கட்சியினர் இப் புரட்சியின் விளைவாக ஆதரவை இங்கு முற்றிலும் இழந்தனர். தீவிர கத்தோலிக்க சமயமும் முற்றிலும் செல்வாக்கிழந்தது. செல்வர்கள் தங்களது சிறப்புரிமைகளை முற்றிலும் இழந்தனர். இப் புரட்சியின் விளைவாக, நடுத்தர வகுப்பு மக்கள் மிகச் சிறப்பெய்தினர். அவர்கள் ஃபிரான்சின் வணிக வளர்ச்சிக்கும், இலக்கிய அறிவு வளர்ச்சிக்கும் பெரிதும் துணை நின்றனர். அத்துடன் 1830 ஃபிரெஞ்சுப் புரட்சி பிற நாடுகளையும் ஊக்குவித்தது. ஃபிஷர் (Fisher) என்ற வரலாற்று வல்லுநர் கருதுவதுபோல் 1830 ஜூலையில் தோன்றிய ஃபிரெஞ்சுப் புரட்சி ஐரோப்பாவெங்கும் பரவி முற்போக்குக் கொள்கைகளும், புதிய கருத்துகளும், வெற்றி பெறப் பெரிதும் துணை நின்றது.[1]

1830 ஆம் ஆண்டு, ஜூலையில் தோன்றிய புரட்சி வல்லரசுச் சமநிலையினைப் பெரிதும் புறக்கணித்தது. வல்லரசுச் சமநிலையினை நிறுவுவதற்காக இம் மாநாடு பல சிறு நாடுகளை ஒன்றிணைத்தது. ஹாலந்தும், பெல்ஜியமும் இம் மாநாட்டின் ஏற்பாட்டின்படி ஒன்றிணைக்கப்பட்டன. இதனை எதிர்த்து, பெல்ஜிய மக்கள் 1830-ல் புரட்சி செய்து விடுதலை பெற்றனர். பெல்ஜியம் பெற்ற வெற்றி, வியன்னு மாநாட்டின் ஏற்பாட்டிற்குக் கிடைத்த மற்றுமொரு தோல்வியாகும். வல்லரசுச் சமநிலையை அனைத்து நாடுகளின் ஒத்துழைப்பின்றிப் பிற்போக்குக் கூட்டணியே உருவாக்க இயலாதென்பதற்கு அப் புரட்சி மாபெரும் சான்றாக அமைந்துள்ளது.

நாட்டுப் பற்றினை வியன்னு மாநாடு முற்றிலும் புறக்கணித்தது. பெல்ஜியத்தின் விடுதலை, நாட்டுப் பற்றுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். மக்கள் உணர்வுகளையும் நாட்டுப் பற்றினையும் புறக்கணிக்கும் எம்மாநாடும், எவ்வேற்பாடும் வெற்றி பெற இயலாதென்பதற்கு இதுவே நல்ல சான்றாகும். மக்களின் உரிமைக்கும் அரசியலமைப்புக்கும் வியன்னு மாநாடு மதிப்பு தர

[1] Fisher, *A History of Europe*. p. 891.

மறுத்துவிட்டது. பெல்ஜிய மக்களின் உரிமையினை வியன்னு மாநாடு புறக்கணித்தது. அதனை எதிர்த்து 1830 ஜூலையில் பெல்ஜியம் உரிமை பெற்றது. மன்னர் வழி அரசு இயங்க வேண்டுமென்ற வியன்னு மாநாட்டாரின் விருப்பம் இப் புரட்சியால் முற்றிலும் பொய்த்துவிட்டது. 1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், பெல்ஜிய மக்கள் தங்களுக்கு வேண்டிய நல்லதோர் அரசியலமைப்பினைப் பெற்றனர். இதுவே அப்போதைய மிக முற்போக்கு அரசியலமைப்பாகும். பிற்போக்கு முற்றிலும் வீழ்ச்சியுற்று முற்போக்குத் தன்மைகள் அங்கு வெற்றிபெற இப் புரட்சி முற்றிலும் அடிப்படையாய் அமைந்தது.

ஜூலைப் புரட்சி இத்தாலி, ஜெர்மனி, போலந்து போன்ற நாடுகளையும் வெகுவாகப் பாதித்தது. நாட்டுப் பற்றினையும், அம் மக்களின் உண்மையான உணர்ச்சிகளையும் புறக்கணித்து விட்டுப் பிற்போக்காளர்களால் நடத்தப்பெற்ற வியன்னு மாநாடு, அந்நிய ஆதிக்கத்தினை அந் நாடுகளில் புகுத்தியது. வியன்னு மாநாட்டின் ஏற்பாடுகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கவே 1830ல் இந் நாடுகள் கிளர்ந்தெழுந்தன. 1830-ல் இத்தாலியைப் பொருத்த மட்டில் அது வியன்னு மாநாட்டின் ஏற்பாடுகளை எதிர்த்துப் போர்க்கொடியினை உயர்த்தியது. வியன்னு மாநாடு திணித்த பிற்போக்காட்சியாளர்களைப் பார்மாவும் மொடனுவும் தங்கள் பகுதிகளினின்றும் விரட்டின. பிற்போக்கு ஆட்சியின் சின்னமாகத் திகழ்ந்த போப்பரசின் சமய ஆட்சியாளர்களும் அப் பகுதிகளிலிருந்து விரட்டப்பட்டனர். மாஜினி, கரிபால்டி போன்ற தலைவர்களெல்லாம் இத்தாலி மக்களை அந்நிய ஆதிக்கத்தினையெதிர்த்துப் புரட்சிலீடுபடுமாறு வேண்டினர். புரட்சித் தலைவர்களனைவரும் லூயி பிலிப்பைத் துணைக்கு வருமாறு அழைத்தனர். "ஃபிரெஞ்சு இரத்தம் ஃபிரான்சுக்கு மட்டுமே உரியது." எனக்கூறி இப் புரட்சிக்குதவ மறுத்துவிட்டார் லூயி பிலிப். இத்தாலியில் ஆங்காங்கு வெடித்த புரட்சிச் சுடர்கள் ஆஸ்திரியப் படைகள் என்ற பெரும் வெள்ளத்தால் அணைக்கப்பட்டன. வியன்னு மாநாட்டின் அமைப்பினையே முறியடிக்க முயன்ற இத்தாலியர்கள், தங்கள் முயற்சியில் தோல்வியுற்று, தளர்ந்துபோயினர். ஆயினும், 1830-ல் இத்தாலியில் வெடித்த ஜூலைப் புரட்சி வியன்னு மாநாட்டினது ஏற்பாடுகளுக்குக் காரணமாயிருந்த பிற்போக்கு ஆட்சியாளர்களுக்கோர் எச்சரிக்கையாய் அமைந்தது. மக்களது உரிமைகளைப் புறக்கணித்தால் அதன் விளைவுகள் புரட்சிக்கும், போராட்டத்திற்கும் வழி வகுக்கும் என்பதை இப் புரட்சிமூலம் இத்தாலி ஐரோப்பாவினை எச்சரித்தது.

இம் மாபெரும் ஜூலைப் புரட்சி, ஜெர்மனியிலும் தோன்றி அதனைப் பெரிதும் பாதித்தது. பவேரியா, சாக்சனி, ஹனேவர், ஹெஸ்ஸி (Hesse), பேடன் (Baden), பிரன்ஸ்விக் போன்ற பகுதி களில் இப்புரட்சி தீவிரமாகப் பரவியது. அப் பகுதிகளைச் சார்ந்த குறுநில மன்னர்களனைவரும் இப் புரட்சியினுக்கு அஞ்சி நல்ல அரசியலமைப்புகளை மக்களுக்கு வழங்கினர். ஜெர்மனியின் புரட்சிப் போக்கினைக் கண்டு அஞ்சிய மெட்டர்னிக்கும், பிரஷ்ய அரசரும், அதனை நசுக்கத் துணிந்தனர். பிராங்க்பர்ட் என்ற இடத்தில் பாராளுமன்றத்தைக் கூட்டிப் புரட்சியாலேற்படும் விளைவுகளைப் பற்றி ஜெர்மன் சிற்றரசர்களுக்கு எடுத்தியம்பினர். அவர்களது எச்சரிக்கைகளால் பெரிதும் அஞ்சிய ஜெர்மன் குறுநில மன்னர்கள் ஆஸ்திரியத் துணையுடன் தங்கள் பகுதி களில் புரட்சியினை முறியடிக்கவும் ஒப்புதல் தெரிவித்தனர். 1819ல் நிறைவேறிய "கார்ல்ஸ்பாட்" ஆணைகள் இப் பாராளு மன்றத்தில் மேலும் விரிவுபடுத்தப்பட்டன. மேலும், ஆறு புதிய ஷரத்துகள் பழைய கார்ல்ஸ்பாட் ஆணையுடன் சேர்க்கப்பட்டன. இப் புதிய ஷரத்துகள் மேன் மேலும் அடக்கு முறைக்கும். கொடுங்கோன்மைக்குமே வித்திட்டன. அனைத்து அதிகாரங் களையும் பெற்ற ஜெர்மன் குறுநில மன்னர்களனைவரும் இப் புரட்சி யினை நசுக்குவதிலொன்றுபட்டுச் செயலாற்றினர். இப் புரட்சியும் நசுக்கப்பட்டது. ஆயினும், பிற்போக்காட்சியாளர்களுக்கு இது ஓர் எச்சரிக்கையாகவே அமைந்தது.

போலந்தும் வியன்னு மாநாட்டின் ஏற்பாட்டினை 1830-ல் எதிர்த்தது. ஃபிரான்சில் ஏற்பட்ட ஜூலைப் புரட்சியால் ஊக்கம் பெற்ற போலாந்தும் ரஷ்ய ஆதிக்கத்தினை எதிர்த்துப் போர்க் கோலம் பூண்டது. அங்கிருந்த ரஷ்யப் படையினையும் விரட்டி விட்டுப் புரட்சியாளர்கள் "தற்காலிக அரசு" ஒன்றினையும் அங்கு நிறுவினர். தங்களது தற்காலிக அரசினைக் காக்க ஃபிரான்சின் உதவியினை நாடினர். ஃபிரான்சு அவர்களுக்குத் துணைபுரிய மறுத் ததால், அவர்களின் திட்டங்களனைத்தும் விழலுக்கிறைத்த நீராயின. பெரும் ரஷ்யப் படையொன்று அவர்களது தற்காலிக அரசினைக் கலைக்க வந்தபோது, அவர்கள் செயலற்றுப்போயினர். வார்சா பிடிபட்டதுடன் அவர்களது தற்காலிக அரசும் கலைக்கப்பட்டு, அவர்கள் தம் புரட்சியும் நசுக்கப்பட்டது. 1815-ல் அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்த அரசியலமைப்பும் பறிபோனது. அடக்கு முறை ஆட்சி அங்குப் புகுத்தப்பட்டது. 1830 ஜூலைப் புரட்சி போலந்தில் ஒரு மாபெரும் தோல்வியாய் முடிந்தது.

1830-ல் தோன்றிய ஜூலைப் புரட்சி ஸ்பெயினிலும் போர்ச்சுகலிலும்கூட எதிரொலித்தது. இப் புரட்சியால் ஊக்கம் பெற்ற புரட்சியாளர்கள் தங்களது உரிமைகளை நிலைநாட்டிக்கொள்ளும் பொருட்டு, உள்நாட்டுப் போரினைத் தொடங்கினர். இங்கிலாந்தும் ஃபிரான்சும் தன்னலம் காரணமாக, புரட்சியாளர்களை ஆதரித்தன. அதன் விளைவாக அங்குப் புதியதோர் அரசியலமைப்பு முறை நடைமுறைக்கு வந்தது. இந்த ஜூலைப் புரட்சி ஸ்பெயினுக்கும் போர்ச்சுகலுக்கும் ஒரு பெரும் நன்மையாயமைந்தது.

நார்வேயும், ஸ்வீடனும்கூட இப் புரட்சியை வரவேற்றன. வியன்னா மாநாட்டினர் இம் மக்களது மனப் பாங்கினை மதிக்காத காரணத்தால், இப் புரட்சி அங்கு வந்தது. நார்வேயும் ஸ்வீடனும் ஒன்றிணைக்கப்படுவதை அம் மக்கள் விரும்பவில்லை. குறிப்பாக நார்வே மக்கள் ஸ்வீடனுடன் இணைவதை முற்றிலும் வெறுத்தனர். 1830 ஜூலைப் புரட்சியின் விளைவாக, சுயாட்சி தரவல்ல அரசியலமைப்பு தங்களுக்கு வேண்டுமென ஸ்வீடன் மன்னரை அவர்கள் வேண்டினர். 1830 வரை அவர்களது வேண்டுகோளுக்குச் செவி மடுக்காத மன்னர், இப் புரட்சியின் விளைவாகப் பெரிதும் அஞ்சி அம்மக்களின் வேண்டுகோளை ஏற்க முன்வந்தார். நார்வே மக்களுக்கும் அவர் உள்ளமுவந்து சுயாட்சி வழங்கினார். இது வியன்னா மாநாட்டு அமைப்புக்கு முற்றிலும் புறம்பானது. வியன்னா மாநாட்டுக் கொள்கைகளுக்குக் கிடைத்த ஒரு மாபெரும் தோல்வியாகும் இது. புதிய உணர்வு, புதிய கருத்து, நாட்டுப் பற்று போன்றவற்றைப் புறக்கணிக்க இயலாதென்பதற்கு இது ஒரு நல்ல சான்றாகும்.

ஜூலைப் புரட்சி இத்தகையதொரு சூழ்நிலையை ஸ்விட்சர்லாந்திலும் உருவாக்கியது. 1815-க்குப் பின்னரும் இங்கு உயர் குடியினரே மிக்க செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தனர். அனைத்துச் சிறப்புரிமைகளையும் அவர்களே தகர்த்துவந்தனர். புதிய கருத்துகளால் பெரிதும் கவரப்பட்ட நடுத்தர வகுப்பு மக்கள் அத்தகைய நிலைக்கு ஒருப்பட மறுத்தனர். வணிகத்திலும் பிற துறைகளிலும் சிறப்புற்றுத் திகழ்ந்த இப் புதிய நடுத்தர வகுப்பு மக்கள், தங்களுக்கும் அத்தகைய வாய்ப்புகள் வேண்டுமெனப் போராடத் தலைப்பட்டனர். உயர்குடியினருக்கே ஏற்றம் தரும் வகையிலமைந்திருக்கும் அரசியலமைப்பு மாற்றப்பட வேண்டுமென அவர்கள் போராடினர். அதன் விளைவாக, நல்ல முற்போக்கு அரசியலமைப்பு ஒன்றினையும் அவர்கள் பெற்றனர். ஸ்விட்சர்லாந்து உண்மையிலொரு மக்களாட்சி நாடாக மலர்வதற்கு இவ்வரசியலமைப்பே அடிப்படைக் காரணமாகும்.

முற்போக்கின் உறைவிடம், மக்களாட்சியின் தாயகமெனப் போற்றப்படும் இங்கிலாந்திலும் இப் புரட்சி நல்ல பல மாற்றங்களுக்கு வித்திட்டது. இங்கிலாந்திலும் மக்களாட்சியென்ற பெயரில் உயர்குடி மக்களே ஆதிக்கம் செலுத்திவந்தனர். தொழிற் புரட்சிக்குப் பின்னர், புதிதாக உருவாகிய தொழிலாளர் என்ற இனம் தங்களுக்குரிய உரிமைகள் மறுக்கப்படுவதை வன்மையாக எதிர்த்துத் தங்களது அடிப்படைக் குறை, வாக்குரிமை இன்மை என்பதை அவர்கள் எளிதாக உணர்ந்தனர். வாக்குரிமைக்கான போராட்டத்தில் அவர்கள் தீவிரமாக ஈடுபட்டனர். 1830 ஜூலைப் புரட்சி அவர்கள் தங்களது உரிமைகளைப் பெற நல்லதொரு வாய்ப்பினைத் தந்தது. எளிய மக்களுக்கு வாக்குரிமை தருவதை அன்றைய அரசு எதிர்த்தது. 1830-ல் நடந்த பொதுத் தேர்தலில் வாக்குரிமை விரிவுபடுத்துவதை விக் கட்சி வரவேற்றது. அவ்வாண்டு நிகழ்ந்த பாராளுமன்றத் தேர்தலில் விக் கட்சியினரே பெரும்பான்மை வாக்குகள் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் தந்த வாக்குறுதியினை நிறைவேற்ற 1832-ல் சீர்திருத்தச் சட்டத்தினைக் (The Reform Act of 1832) கொணர்ந்தனர். வாக்குரிமை மேலும் விரிவுபடுத்தப்பட்டது. இதற்கு அடிப்படைக் காரணம், ஜூலைப் புரட்சியெனில் மிகையாகாது.

வியன்னு மாநாட்டுக்குப்பின்னர், ஐரோப்பிய அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் மாபெரும் மாற்றங்களுக்கு வித்திட்ட புரட்சி, 1830 புரட்சியேயாகும். இப் புரட்சியின் விளைவாக, வியன்னு மாநாட்டின் கொள்கைகள் பல முற்றிலும் புறக்கணிக்கப்பட்டன. பல நாடுகளில் இம் மாநாட்டின் மிக முக்கியக் கொள்கைகளான முறைமைக் கொள்கை, வல்லரசுச்சமநிலை, புரட்சியினைத் தவிர்த்தல் போன்றவை செயலற்றுப்போயின. அம் மாநாட்டின் விருப்பத்திற்கு முற்றிலும் மாறுக நாட்டுப் பற்றும், முற்போக்குக் கொள்கைகளும் ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் வெற்றி பெற்றன. இது வியன்னு மாநாட்டுத் தோல்விக்குரிய முதற் படியாகும். அடுத்து இத்தாலி, ஜெர்மனி, போலந்து போன்ற நாடுகளில் புரட்சிகள் தோன்றின. புரட்சிகளைத் தடுத்தல், என்ற வியன்னு மாநாட்டின் மாபெரும் நோக்கம் அந் நாடுகளில் நிறைவேறவில்லை. ஐரோப்பாவுக்கு நிரந்தர அமைதியை வழங்குதல் என்ற இம் மாநாட்டின் மிக உயரிய நோக்கம் இந் நாடுகளில் தோன்றிய புரட்சிகளின் காரணமாய் ஒரு முற்றுப் பெறுத கனவானது. அந் நாடுகளில் புரட்சி அடக்கப்பட்டாலும், அம் மக்களின் உணர்ச்சிகளும், நாட்டுப் பற்றும் முற்றிலும் முறியடிக்கப்படவில்லை. அடக்கு முறையும், கொடுங்கோன்மையும் மக்களது உரிமைகளை நிரந்தரமாகப் பறிக்க இயலாதென்பதற்கு இப் புரட்சியே ஒரு சான்றாய் நிற்கும்.

மேலும், இந்த ஜூலைப் புரட்சியின் விளைவாக, ஐரோப்பாவே இரு பெரும் கூறுகளாகப்பிரிந்தன. ஐரோப்பிய வல்லரசுகளனைத்தையும் ஒன்றுபடுத்தி ஐரோப்பிய இணைப்பிற்கு வியன்னு மாநாடும் அதன் பின்னர் நிறுவப்பட்ட ஐவர் கூட்டணியும் முயன்றன. வியன்னு மாநாட்டிற்குப் பின்னர் தோன்றிய கருத்து வேறுபாடுகள் அவ் விணைப்பு நடைமுறைக்கொவ்வாத ஒன்று என்பதனைத் தெளி வாக்கின. 1815-க்குப் பின்னர் ஐரோப்பா இரண்டு அணிகளாகப் பிரிந்தன. நாட்டுப்பற்று, முற்போக்குக் கொள்கைகளை ஆதரிக்கும் முற்போக்கணி, அவற்றை எதிர்க்கும் பிற்போக்கி அணியென இரு அணிகள் அங்குத் தோன்றின. இதன் விளைவாக ஐவர் கூட்டணியே முறிந்தது என்பது ஈண்டு நினைவு கூர வேண்டிய ஒன்றாகும். இங்கிலாந்து, ஃபிரான்சு போன்ற நாடுகள் புதிய கருத்துகளை வரவேற்றன. நாட்டுப் பற்றை அவை ஆதரித்தன. ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்ற நாடுகள், புதிய கருத்துகளையும், நாட்டுப்பற்றினையும், மக்கள் உரிமைகளையும், மக்களாட்சியினையும் வெறுத்தன. அவை அவற்றை முறியடிக்கவும் முனைந்தன. இதன் விளைவாக ஐரோப்பாவே இரு கூறுகளாகப் பிரிந்தன. 1830 ஜூலைப் புரட்சி, அப் பிளவுகளை மேலும் விரிவுபடுத்தியது. இப் பிளவு, கருத்து வேறுபாடுகள் காரணமாக, ஐரோப்பா இரண்டாயிற்று. ஐரோப்பா ஓர் உடைபட்ட வீடாகத் தோன்றியது. நாட்டுப் பற்று, முற்போக்குச் சக்திகள், புதிய கருத்துகள் இவ்வேறு பாடுகள் காரணமாக, வளர்ந்தன. ஒருவகையில் ஐரோப்பிய முன்னேற்றத்திற்கே இப் பிளவு வழிவகுத்தது எனில் மிகை யாகாது.

# 4. ஃபிரான்சில் ஜூலை முடியரசும், 1848 பிப்ரவரிப் புரட்சியும்

**லூயி பிலிப்**

1830 ஜூலைப் புரட்சியின் விளைவாகப் பூர்போன் ஆட்சி ஃபிரான்சில் முடிவுற்றது. 10ஆம் சார்லஸ் முடி துறந்து இங்கிலாந்திற்குத் தப்பியோடினார். இப்புரட்சிக்குப் பின்னர், குடியரசு ஒன்றினை நிறுவ, குடியரசுக் கட்சியினர் திட்டமிட்டனர். அவர்கள் லபாயத் என்பார் தலைமையில் குடியரசினை அங்கு அமைக்கத் துணிந்தனர். பிற்போக்குக் கொள்கையினர் 10ஆம் சார்லஸின் பேரரான போர்டக்ஸ் கோமகனை (Duke of Bourdeaux) மீண்டும் மன்னராக்கத் திட்டமிட்டனர். பூர்போன் குடும்பமே கோலோச்சுவது நியாயமானது என அவர்கள் வலியுறுத்தினர். மரபுவழி தொடர்வதையும் இறையுரிமைக் கோட்பாட்டரசு செயல்படுவதையுமே அவர்கள் வரவேற்றனர். குடியரசு (Republic) நிறுவப்படுதலையோ மீண்டும் பூர்போன்கள் ஆட்சிபுரிதலையோ மிதவாதிகள் (Moderates) விரும்பவில்லை. வரம்புக்குட்பட்ட முடியாட்சியினை நிறுவுவதையே மிதவாதிகள் விரும்பினர். குடியரசு நிறுவப்படுதலை அவர்கள் வரவேற்கவில்லையெனினும், பாராளுமன்ற முறை ஆட்சி செயல்படுதலையே அவர்கள் பெரிதும் விரும்பினர். ஆகவே, அவர்கள் ஆர்லியன்ஸ் கோமகனை லூயி பிலிப்பை வரம்புக்குட்பட்ட முடியரசராக்க விரும்பினர். இவர் 14ஆம் லூயி மன்னரின் தம்பியான ஆர்லியன்ஸ் கோமகனை லூயி பிலிப் என்பாரின் பேரராவார். இவர் தந்தை (Senior Philippe) புரட்சியின்போது 16ஆம் லூயி மன்னரை எதிர்த்துப் போராடியவர். தந்தையைப் போன்றே இவரும் புரட்சியின் பகைவர்களை எதிர்த்துப் போரிட்டவர். புரட்சியின்போது ஃபிரான்சில் செயல்பட்ட சிறப்புமிக்க ஜெகோபின் கிளப்பின் (Jacobin Club) உறுப்பினராக இவர் சிறப்பாகப் பணியாற்றினார். முற்போக்குக் கொள்கைகளையே இவர் எப்போதும் ஆதரித்து நின்றார். ஆகவே, மிதவாதிகள் இவரைப் பெரிதும் விரும்பினர். லபாயத்தும், தாலிரானும் இவரையே வரம்புக்குட்பட்ட முடியரசராக்க முனைந்தனர். இவர் அரசரானால், மக்களாட்சியும், மக்களாட்சியின் மரபுகளும் காப்பாற்றப்படுமென அவர்கள் உறுதி கூறினர். இவ்வாறு மிதவாதிகளின் முழு ஆதரவினைப் பெற்று

இவர் ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், பாராளுமன்றக் கீழவையால் (The Chamber of Deputies) அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### ஜூலை முடியரசு—லூயி பிலிப்

லூயி பிலிப் அரியணையேறியவுடன் மக்களது ஆதரவினைப் பெறுவதில் பெரிதும் நாட்டம் செலுத்தினர். மக்களின் ஆதரவைப் பெறும்பொருட்டு, முற்போக்குக் கொள்கைகள் சிலவற்றைச் செயல் படுத்தினர். (1) இறைவனின் அருளால் ஃபிரான்சின் அரசர் (King of France by the Grace of God) என்ற சொற்றொடரைக் கைவிட்டு, நாட்டின் ஆதரவினைப்பெற்ற ஃபிரெஞ்சு மக்களின் அரசர் (King of the French by the will of the Nation) என்ற பட்டத்தினைச் சூட்டிக்கொண்டார். (2) பூர்போன் அரசனின் வெண்கொடியை விடுத்துப் புரட்சிக் காலத்து மூவண்ணக் கொடியை இவர் ஏற்றுக் கொண்டார். (3) செய்தித்தாள்களின் தணிக்கை முறையினையும் இவர் தளர்த்தினர். (4) ஆணைகள் பிறப்பிக்கும் அரச அதிகாரங் களையும் பெரிதும் கட்டுப்படுத்திக்கொண்டார். (5) வாக்குரிமை மேலும் விரிவுபடுத்தப்பட்டது. (6) மிகுந்த அதிகாரங்களோடு விளங்கினும், பாராளுமன்றம் செயல்படத் துணை நின்றார். (7) மக்களின் ஆதரவினைப் பெறும்பொருட்டு தொழில் முன்னேற் றத்திற்கும், வணிக முன்னேற்றத்திற்கும் இவர் பெரும் உறு துணையாய் நின்றார். (8) மக்களது ஆதரவினைப் பெறும்பொருட்டு, பிற நாடுகளிலும் இவர் முற்போக்குக் கொள்கையினரைப் பெரிதும் ஆதரித்தார். (9) அல்ஜிரியாவை வென்று அங்கு ஃபிரெஞ்சு வணிகம் வளர வழி வகுத்தார்.

### இவரது பிரச்சினைகள்

இவரது பதவியேற்பு பல்வகைச் சட்ட அரசியலமைப்புப் பிரச்சினைகளுக்கு வித்திட்டது. ஃபிரெஞ்சு அரியணைமீது இவருக்கு மரபு வழியுரிமை ஏதுமில்லை. அது சட்டப்படி 10ஆம் சார்லஸின் வழித் தோன்றல்களுக்கே உரியது. லூயி பிலிப், பூர்போன் குடும்பத்தினரின் நெருங்கிய உறவினர் என்பது தவிர, அவருக்கு அரியணைமீது உரிமையேதுமில்லை. பாராளுமன்றம் புரட்சிக்குப் பின்னர், அவரைத் தேர்ந்தெடுத்திருப்பின் அவரது அரியணை மீதான உரிமை வலுப்பட்டிருக்கும். 10ஆம் சார்லஸே பாராளு மன்றத்தைக் கலைத்துவிட்ட காரணத்தால், பாராளுமன்றமும் இவரை முறையாகத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பினை இழந்தது. இரண்டவதாக, கலைக்கப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர்கள் அனைவரும் இவரை ஆதரிக்கவில்லை. 430 உறுப்பினர்களில் 252 உறுப்பினர்களே இவருக்கு வாக்களித்தனர். அந்த 252 உறுப்பினர்

களுள்ளும் 219 பேர்களே இவர் அரசராக வேண்டுமென இவருக்கு வாக்களித்தனர். வாக்களித்த 252 பேர்களிலும் 33 உறுப்பினர்கள் இவரை எதிர்த்து வாக்களித்தனர். முறைப்படி தேர்ந்தெடுக்கப் படாத காரணத்தால், பலர் அவரை எதிர்க்க வாய்ப்பேற்பட்டது. மூன்ருவதாக, பதவியேற்ற பின்னர், இவர் மக்களது ஆதரவினைப் பெறத் தவறிவிட்டார். தேர்தல் மூலம், மக்களின் ஆதரவைப் பெற்றிருப்பின் இவர் நிலை சிறப்பாக இருந்திருக்கும். மக்களால் முறைப்படி தேர்ந்தெடுக்கப்படாததும் இவரை எதிர்ப்பதற்கு நல்லதொரு வாய்ப்பினை நல்கியது. தொடக்கத்திலிருந்தே இவரது நிலை ஐயத்திற்குரிய ஒன்ருனது.

மக்களது ஆதரவினைப் பெறுவதற்காக இவர் தன்னை மக்களது அரசர் என அறிவித்துக்கொண்டார். ஆயினும், இறையருளால் ஃபிரெஞ்சு அரசன் என இவர் தன்னை அழைத்துக்கொண்டதைக் குடியரசுக் கட்சியினர் முற்றிலும் விரும்பவில்லை. இறைமை மக்களுக்கு வழங்கப்படாததை இவர்கள் வன்மையாக எதிர்த்தனர். நன்கு ஆராயின், ஜூலை அரசு மக்களுக்கும் அரசுக்கும் ஏற்பட்ட ஒருவகை ஒப்பந்தம். அதில் மக்களுக்கோ அல்லது அரசருக்கோ இறையுரிமையில்லை. அவ்விரு சாராரும் இறையுரிமையினைப் பகிர்ந்துகொள்ளும் நிலை ஏற்பட்டது. ஆதலின், அவ்விருசாராரும் இறையுரிமைக்காகப் போராடும் நிலையேற்பட்டது. ஆதலின், ஜூலைப் பேரரசு தொடக்கத்திலிருந்தே நல்ல அடிப்படையில் அமையவில்லையென்பது தெளிவு.

### லூயி பிலிப்

அரியணை ஏறியபோது லூயி பிலிப்பின் வயது 57. அவர்தம் தந்தை மூத்த பிலிப்பும் (Senior Philippe) சமத்துவக் கொள்கையில் மிக்க நம்பிக்கை கொண்டவர். 16ஆம் லூயி மன்னருக்குப் பின்னர், இவரே அரசராகவும் முனைந்தார். ஆதலின், நேஷனல் கன்வென்சனல் இவர் கொல்லப்பட்டார். அவருக்குப்பின் அவர் மகனை லூயி பிலிப், புரட்சியினைப் பெரிதும் ஆதரித்தார். புரட்சிப் பணிகளிலும் அவர் மிகத் தீவிரமாக ஈடுபட்டார். நாடு கடத்தப்பட்ட இவர் ஸ்விட்சர்லாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் பல ஆண்டுகள் வாழ்ந்தார். இங்கிலாந்திலும் இவர் ஓய்வு ஊதியம் பெற்றுப் பல ஆண்டுகள் தங்கினர். வியன்னு மாநாட்டிற்குப் பின்னர், இவரும் தாயகம் திரும்பினர். புரட்சியிலும், மக்களாட்சியிலும் இவர் காட்டிய ஆர்வம் காரணமாக, இவர் ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், ஃபிரெஞ்சு மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காண்போரைத் தன்பால் ஈர்க்கும் கவர்ச்சிமிகு தோற்றமோ அல்லது நல்ல பண்பு நலனே கொண்டவரல்லர் இவர். நல்ல நிலையான கொள்கையென்பதும் இவர்பால் இல்லை. நல்ல படைத் தலைவரோ அல்லது நல்ல மதி நுட்பம் மிக்க நல்ல அறிஞரோ அல்லர். சாதாரண திறமைகளைக் கொண்ட மிக சாதாண மனிதர் இவர். ஆயினும், நல்ல குடிமகனுக்குரிய அனைத்துப் பண்பு நலன்களும் மிக்கவர். நல்ல தொண்டருக்குரிய அனைத்துத் தன்மை களையும் கொண்ட இவர், நல்ல தலைவருக்குரிய தலைமைப் பண்பு களற்று விளங்கினர். அரசருக்குரிய தகுதிகள் பல இவரிடம் இல்லாதது வருந்தத்தக்க ஒன்றாகும். ஆடம்பரமற்றவர். காட்சிக்கு மிக எளியவர். பொது உணவு விடுதிகளில் எளிய மக்களுடன் தேநீர் அருந்துவார். பச்சைக் குடையுடன் தானே பொருள்கள் வாங்க அங்காடிக்கும் செல்வார். தம்முடைய குழந்தைகளையும் பொதுப் பள்ளிகளுக்கே அனுப்பினர். அதனால், சமத்துவத்தில் தனக்கிருந்த ஆழ்ந்த பற்றைக் கூறாமலே கூறினர். இவை யாவும் மக்களின் நன்மதிப்பைப் பெற பெரிதும் துணை நின்றன.

உரிமையிலும் சமத்துவத்திலும் நம்பிக்கை மிக்கவர் போன்று இவர் நடித்தாலும், உண்மையில் இவருக்கு அதிகாரத்திலும் செல்வம் திரட்டுவதிலுமே ஆர்வமிருந்தது. வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் இந் நோக்கத்தினை இவர் நிறைவேற்றிக்கொள்ளத் தவறியதில்லை. அரசர் ஆட்சிபுரிதல் வேண்டுமேயன்றி ஆளக் கூடாது எனக் கூறிய அமைச்சர்கள் எவரையும் இவர் விரும்ப வில்லை. அவர்களைப் பதவி விலக்கவும் இவர் தயங்கியதில்லை. அமைச்சரவைக் கூட்டங்களிலும் கலந்துகொண்டு அமைச்சர் களையும் வழிநடத்த முற்பட்டார். எளியவராயும், நல்லவராயும் தோன்றிய இவர், உண்மையில் அதிகாரங்களையும், செல்வாக் கினையும் பெறவே பெரிதும் முயன்றார்.

### 1814ஆம் ஆண்டுச் சாசனத்தில் திருத்தங்கள்

லூயி பிலிப்பை அரசராக்கிய பாராளுமன்றம் 1814ஆம் ஆண்டுச் சாசனத்திலும் சில திருத்தங்களைச் செய்தது. இவ்வாறு திருத்தப்பட்ட சாசனத்தின் மீதுதான் லூயி பிலிப் அரசருக்குரிய உறுதிமொழியினை எடுத்துக்கொண்டார். இச் சாசனத் திருத்தம் அவரது அதிகாரங்கள் பலவற்றைக் குறைத்தது. அரசருக்குச் சட்டங்களை முன்மொழியும் அதிகாரங்கள் நீக்கப்பட்டன. சட்டங்களை மறுக்கவோ மாற்றவோ உள்ள அரசருக்குரிய அதிகாரங்களும் மறுக்கப்பட்டன. சட்டமியற்றும் அதிகாரமும் பாராளுமன்றத்திற்கே வழங்கப்பட்டது. ஆண்டு ஒன்றுக்கு

200 பிராங்குகளும் அதற்கு மேலும் வரிகொடுப்போர் அனைவருக்கும் வாக்குரிமை நல்கப்பட்டது.

இத் திருத்தங்களால் ஜூலையரசு மக்களுக்காக மாறியதா என்பதனை நாம் ஈண்டு ஆராய்தல் கடனாகும். 1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், பலரும் அங்குக் குடியரசினை நிறுவப் பெரு முயற்சி செய்தனர். லபாயத் போன்ற குடியரசுத் தலைவர்கள் அங்குக் குடியரசு ஒன்றினை நிறுவுவதையே தங்களது தலையாயப் பணியாகக் கருதினர். ஆயினும், மக்கள் அத் தீவிரப் போக்கினை விரும்பவில்லையென்பதையும் இவர்கள் விரைவில் உணர்ந்தனர். மக்கள் விரும்பும் வரம்புக்குட்பட்ட முடியாட்சியினை நிறுவுதலே தக்கதென்பதையும் இவர்கள் விரைவில் உணர்ந்தனர். வரம்புக் குட்பட்ட மன்னராட்சியினை நிறுவ முயன்ற மிதவாதிகளை இவர்கள் ஆதரிக்கத் துணிந்தனர். அத் துணிவின் விளைவாக, 1814ஆம் ஆண்டுச் சாசனமும் திருத்தப்பட்டு, லூயி பிலிப்பும் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆயினும், பெருவாரியான மக்கள் விரும்பிய அரசு அங்கு அமையவில்லை. திருத்தப்பட்ட சாசனப்படி ஆண்டொன்றுக்கு 200 பிராங்குகளுக்கு மேல் வரி கொடுப்போருக்கு மட்டுமே வாக்குரிமை நல்கப்பட்டது. அப்போது ஆண்டொன்றுக்கு 200 பிராங்குகளுக்கு மேல் வரி செலுத்திய வர்கள், செல்வர்கள் மட்டுமேயென்பது ஈண்டு நினைவுகூரவேண்டிய ஒன்றாகும். அதனால், நாட்டில் மிகக் குறைவான மக்களே வாக்குரிமை பெற்றனர். ஃபிரான்சின் மொத்த மக்கள் தொகையில் 2·8 சத மக்களே வாக்குரிமை பெற்றனர். மீதமுள்ள 97·2 சத மக்களுக்கு வாக்குரிமை வழங்கப்படவில்லை. இதனால், மக்கள் பெரிதும் ஆத்திரமுற்றனர். சிலருக்கு மட்டும் கொடுக்கப்பட்ட உரிமையினைப் பலரும் பெற முயன்றனர். அதன் விளைவாக, ஒரு மாபெரும் போராட்டம் அங்கு உருவானது, அதன் விளைவே 1848 பிப்ரவரிப் புரட்சியாகும்.

**லூயி பிலிப்பின் உள்நாட்டுக் கொள்கை**

லூயி பிலிப் நடுநிலைக் கொள்கையில் நம்பிக்கை மிக்கவர். மக்கள் மீதும் மக்களாட்சி மீதும் நம்பிக்கை மிக்கவர் போன்று தோன்றினர். குடியரசுக்கு மிகப் பகைவரான தாலிரான் போன்றோரின் ஆதரவில், இவர் முடியரசரானர். இவரைப் பெரிதும் ஆதரித்தவர்கள் மிதவாதிகளும், நடுத்தர வகுப்பு மக்களுமே ஆவார். ஆதலின், இவரும் அவர்களையே ஆதரிப்பவரானர். இவரது ஆட்சியினையும் நடுத்தர வகுப்பினராட்சியென்பர் பலர். நடுத்தர வகுப்பினரும், வணிகர்களும், பெரும் வங்கி உரிமையாளர்களும்

சுரங்க முதலாளிகளும், புகை வண்டி உரிமையாளர்களும், இவரது ஆட்சியில் பெரிதும் பயனுற்றனர். இவரும் தன்னை ஆதரித்த அவர்களுக்கே உரிமைகளும், சலுகைகளும் வழங்கினர். அரசாங்க ஆதரவினைப் பெற்ற அவர்கள் சிறப்புடன் திகழ்ந்ததில் வியப்பேது மில்லை. நடுத்தர வகுப்பினர், இவரது ஆட்சியில் பெரிய அரசுப் பணிகளுக்குச் சென்று, பெரும் செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தனர். இவர் தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் ஆதரவு காட்டினர். அதனால், புதுத் தொழில்கள் பல தொடங்கப்பட்டன. அதன் விளைவாக, செல்வர்கள் மேலும் செல்வர்களாயினர். எல் லோரையும் மகிழ்விக்க வேண்டுமென்பதே மன்னரின் கொள்கை. ஆயினும், இவரால் அனைவரையும் மகிழ்விக்க இயலவில்லை. இவரால் பெரிதும் நன்மையுற்ற நடுத்தர வகுப்பினைச் சார்ந்த சிறுபான்மையினரே இவரைப் பெரிதும் ஆதரித்தனர். பிறர் இவரை எதிர்க்கத் தலைப்பட்டனர்.

**உள் நாட்டில் குழப்பம்**

லூயி பிலிப் பதவியேற்றவுடன் பல கிளர்ச்சிகள் தோன்றின. இவர் அரசுக் கட்டிலேறுவதை விரும்பாத பலரும் குழப்பம் விளைவிக்கத் தொடங்கினர். 1830-லிருந்து 1836 வரை தொடர்ந்து கலகங்கள் பல தோன்றின. லூயி பிலிப், தொலை நோக்கோ அல்லது திறமை மிக்கவரோ அல்லர். அயினும், தொடர்ந்து இவர் 18 ஆண்டுகள் அரசராயிருந்தது வியப்புக்குரிய ஒன்றே யாகும். 1830-லிருந்து 1836 வரை ஏற்பட்ட கலகங்களை அடக்கி, ஆட்சியைச் செம்மைப்படுத்தியவர், இவருக்கு முதலமைச்சரா யிருந்த காசிமர் பெர்ரியர் என்பவராவார். தொடக்க கால இன்னல் களிலிருந்து இவரது ஆட்சியைக் காப்பாற்றிய பெருமை இவரையே சாரும்.

**லியான்ஸ் தொழிலாளர்களின் கிளர்ச்சி**

1831-ல் இவரது ஆட்சியை எதிர்த்து லியான்ஸ் நகரப் பட்டு நெசவாளர்கள் புரட்சி செய்தனர். மிகவும் குறைந்த ஊதியமே பெற்ற அவர்கள், ஊதிய உயர்வினுக்காகப் போராட் டத்தினைத் தொடங்கினர். அவர்களின் உழைப்பில் பெருஞ் செல்வத்தினை ஈட்டிய வணிகர்களும், செல்வர்களும், முதலாளி களும் அவர்களுக்கு ஊதிய உயர்வு தர மறுத்தனர். நடுத்தர வகுப்பினர் நன்மையினையே பெரிதாகக் கருதிய இவர் இவ்வேழைத் தொழிலாளர்களின் பிரச்சினைகளைப் பற்றிக் கவலைப்படவில்லை. அவர்கள் புரட்சி செய்தபோது, செல்வர்களின் ஆதரவினைப் பெறும்பொருட்டு, அதனை அடக்கவும் ஆணை பிறப்பித்தார்.

கிளர்ச்சி செய்த ஏழை நெசவாளர்கள் ஈவு இரக்கமின்றிச் சுட்டுக் கொல்லப்பட்டனர். மக்களது குறைகளைச் செவ்வையாகப் புரிந்து கொண்டு அதனைப் போக்காதது இவரது ஆட்சியின் மாபெரும் குறையாகும்.

**சமயவாதிகளை எதிர்த்துக் கிளர்ச்சி**

1789 ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், கத்தோலிக்க சமயத்திற்கு எதிர்ப்பு மிகுந்தது.

பூர்போன் ஆட்சியின் மீட்சிக்குப் பின்னர், கத்தோலிக்கர்கள் வெற்றிக் களிப்பில் வெறியராயினர். மீண்டும் தனி வல்லாட்சியை நிறுவவும், பிற சமயக் கொள்கையினரைத் தாழ்த்தவும், துன்புறுத்தவும் தலைப்பட்டனர். சமயத்தில் பெருந்தன்மையும், பொறுமையும் இன்றியமையாதது என்பதை அவர்கள் முற்றிலும் மறந்தனர். அவர்களது வெறிப் போக்கினைப் பலரும் விரும்பவில்லை. 1831-ல் கத்தோலிக்க சமய வெறியர்களை எதிர்த்துக் கிளர்ச்சியொன்று ஏற்பட்டது. ஜூலைப் புரட்சிக்குக் காரணமாயிருந்த குடியரசுக் கட்சியினரும், முற்போக்குக் கொள்கையினரும் ஒன்று கூடி, அவர்களை எதிர்த்தனர். சமயச் சார்பற்ற நிலையினையே பலரும் விரும்பினர். அவர்களது வெறிப்போக்கினால், பலர் துன்புற்றனர். எளிய மககள்கூட சமயத்தைத் திறனாய்வு செய்யவும் வெற்றுச் சமயச் சடங்குகளை எள்ளி நகையாடவும் தொடங்கினர். இது ஃபிரெஞ்சுப் புரட்சியின் மிக முக்கிய விளைவுகளில் ஒன்று. தீவிர கத்தோலிக்க சமயத்தினர் இதனை விரும்பவில்லை. இதனை எதிர்த்துக் கத்தோலிக்க சமயத்தை உயர்த்தவும் அதன் கொள்கைகளைப் பரப்பவும் லே அவெனிர் (L' Avenir) என்ற செய்தித்தாள் ஒன்றினையும் தொடங்கினர். இது ஒருவகைப் போராட்டத்திற்கு வழி வகுத்தது. தீவிர கத்தோலிக்க சமயத்தினை எதிர்த்து, 1831 பிப்ரவரியில் கிளர்ச்சியொன்று ஏற்பட்டது. 1831ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்களில் மறைந்த பெர்ரி பிரபுவின் நினைவு வழிபாட்டுக் கூட்டமொன்று நார்டிரி டேம் (Nortre Dame) என்ற திருச்சபையில் கூட்டப்பெற்றது. இதனை விரும்பாத கத்தோலிக்க சமய எதிர்ப்பாளர்கள், அக் கூட்டத்தினைத் தாக்கினர். 13ஆம் நூற்றாண்டு முதல் சிறப்பாகப் போற்றப்பட்டு வந்த அத் திருச்சபை, பெரிதும் சேதப்படுத்தப்பட்டது. அதன் தொன்மைமிக்க நூலகமும் எரிக்கப்பட்டது. இக் கிளர்ச்சியினை அறிந்த அரசர் படை ஒன்றினையனுப்பி அதனை அடக்கினார்.

அடுத்த கிளர்ச்சியை 1832-ல் முறைமைக் கொள்கையினர் (Legitimists) தொடங்கினர். அவர்கள் லூயி பிலிப்பை வெறுத்ததில்

வியப்பேதுமில்லை. அவர் தவறான முறையில் பதவிக்கு வந்தவரென்று அவரை அவர்கள் தூற்றினர். 10 ஆம் சார்லஸின் பேரரான போர்டியக்ஸ் கோமகனே பிரபுவழிக் கொள்கைப்படி அரசராவதற்கு உரியவரென அவர்கள் வாதாடினர். அவரை அரசராக்கும்பொருட்டு, புரட்சி செய்யவும் முற்பட்டனர். அப்போது போர்டியக்ஸ் பிரபுவின் தாயார், தன் மகனை அரசராக்கும் பொருட்டு, பாரிஸுக்கு வந்தார். பாரிஸுக்கு வந்த அவர் உடன் கைது செய்யப்பட்டார். விசாரணையின்போது அவர் இத்தாலிய உயர்குடி மகன் ஒருவரை இரகசியமாக மணந்திருந்ததும், கருவுற்றிருப்பதும் தெரியவந்தது. இதனைக் கேள்விப்பட்ட முறைமைக் கொள்கையினர் மிகவும் வெறுப்புற்று, போர்டியக்ஸ் பிரபுவை ஆதரிக்கத் தயங்கினர். அத் தயக்கம் காரணமாக, அவர்கள் புரட்சியும் எளிதில் நசுக்கப்பட்டது.

அடுத்து, குடியரசுக் கட்சியினரும் புரட்சியைத் தூண்டினர். 1832-ல் நெப்போலியனது படைத் தலைவர்களில் ஒருவரான லாமார்க்யு (Lamarque) என்பார் காலமானார். அவர்தம் இறுதிச் சடங்குகளில் கலந்துகொண்ட குடியரசுக் கட்சியினர் அச் சடங்கிற்குப் பின்னர், புரட்சி செய்யத் தலைப்பட்டனர். ஆயினும், மக்களிடம் அவர்களுக்கு ஆதரவில்லை. இது காலத்திற்கு முற்பட்ட முயற்சியென்பது இவ்வாதரவின்மையிலிருந்து நன்கு புலப்படுகிறது. தக்க முன்னேற்பாடோ, தக்க திட்டமோ இல்லாத காரணத்தால், இப் புரட்சி எளிதில் நசுக்கப்பட்டது. குடியரசுக் கட்சியினரிடையேயும் ஒற்றுமையும், ஒருங்கிணைந்து திட்டமிட்டுச் செயலாற்றும் திறமையுமில்லாத காரணத்தால், அவர்களது புரட்சி தோல்வியுற்றது. பல குடியரசுக் கட்சித் தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர்; பலர் கொல்லப்பட்டனர். அதன் பின்னர், செய்தித் தாள்கள்மீதும் தீவிரத் தணிக்கை முறை புகுத்தப்பட்டது. அடக்குமுறை ஆட்சி ஃபிரான்சில் தொடங்கிவிட்டது.

லூயி பிலிப்பின் அடக்குமுறைக்குத் தீவிர எதிர்ப்பேற்பட்டது. எதிர்ப்பு மிக, அடக்குமுறையும் மிகுந்தது. தொழிலாளர்களின் உரிமைகள் பலவும் பறிபோயின. இதனை எதிர்த்து லியான்ஸ் நகரப் பட்டுத் தொழிலாளர்கள் இரண்டாம் முறையாகப் புரட்சி செய்தனர். 1834-ல் தங்களுக்கு வழங்கப்படும் ஊதியம் மிகக் குறைவானது என்ற காரணத்தைக் காட்டி, புரட்சியிலீடுபட்டனர். இப்புரட்சி, விரைவாகப் பிற நகரங்களிலும் பரவியது. பாரிஸ் இப் புரட்சிக்குத் தலைமையேற்றது முடியரசை அகற்ற வேண்டுமெனத் துணிந்த குடியரசுக் கட்சியினரும் இப்புரட்சியில்

மிக்க தீவிரமாய் ஈடுபட்டனர். லூயி பிலிப் பெரும்படை ஒன்றினை ஏவி, இப்புரட்சியை அடக்கினார். இப்புரட்சிக்கு அரசியல் காரணங்களோடு பொருளாதாரக் காரணங்களும் இருந்தன. பொருளாதாரத் துறையில் அடிப்படை மாற்றம் தேவைப்பட்டது. இதனை லூயி பிலிப், குடியரசுக் கட்சியினரின் அரசியல் விளையாட்டெனப் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. இவையே அவரது தொலை நோக்கின்மைக்கும், திறமையின்மைக்கும் தக்க சான்றுகளாகும்.

அடக்கு முறையாட்சியின் விளைவாக, நாடெங்கும் இரகசிய இயக்கங்கள் தோன்றின. அவ்வாறு தோன்றிய இயக்கங்களில் மிக முக்கியமானது மனித உரிமைக்கழகம் (Society for the Right of Man) என்பதும் ஒன்றாகும். இக் கழகம் வன்முறையில் ஈடுபட்டால்தான், நல்ல சமுதாய முறையை அமைக்க முடியுமென நம்பியது. இக்கழகம் வன்முறையில் ஈடுபட்டதோடு மக்களிடம் வன்முறையினையும் தூண்டிவிட்டது. 1835ஆம் ஆண்டு, ஜூலைத் திங்களில் இக்கழக உறுப்பினர்களில் ஒருவரான பெய்ச்சி (Fieschi) என்பார் அரசரைக் கொல்லும் சதியில் ஈடுபட்டார். அச்சதித் திட்டம் வெற்றி பெறாத காரணத்தால், இக்கழக உறுப்பினர்கள் கொடுந் தண்டனைகளுக்குள்ளாயினர். மக்களது உரிமைகள் பல பறிக்கப்பட்டன. பேச்சுரிமை, எழுத்துரிமை மறுக்கப்பட்டன. கொடுங்கோன்மை மிகுந்தது. மீண்டும் பூர்போன் ஆட்சியோ என மக்கள் மருண்டனர். ஜூலை முடியரசின் செல்வாக்கு குன்றத் தொடங்கிவிட்டது. பல்வேறு கட்சிகளும் அதனை எதிர்க்கத் தலைப்பட்டன.

**பல்வேறு கட்சிகள்**

1830 புரட்சிக்குப் பின்னர், ஃபிரான்சில் மிக்க செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தவர்கள் மரபுவழிக் கட்சியினராவர் (Legitimists). அவர்கள் லூயி பிலிப்பின் ஆட்சியை முற்றிலும் வெறுத்தனர். தெய்வீக உரிமைக் கோட்பாட்டில் நம்பிக்கையற்ற மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அரசை அவர்களால் ஆதரிக்க முடியவில்லை. சட்டப்படி பூர்போன்களே ஆளவேண்டுமென நினைத்த அவர்கள், ஆர்லியன்ஸ் குடும்பத்தைச் சார்ந்த லூயி பிலிப்பை ஆதரிக்க இயலவில்லை.

ஃபிரான்சிலிருந்த பெருவாரியான கத்தோலிக்கர்களும் இவரை எதிர்த்தனர். கத்தோலிக்க சமயத்தை மட்டும் போற்றாத, சமயத் துறையில் சமநோக்கு கொண்ட இவரது அரசை அவர்களால் போற்றி வரவேற்க இயலவில்லை. சமயப் பொறையுடைமைக்

கொள்கையினைப் போற்றும் இவ்வரசை அவர்கள் தூற்றத் தொடங்கினர். கத்தோலிக்க சமயத் தலைவர்களும் இவ்வரசை எதிர்ப்பதைத் தங்களது புனிதக் கடமையாகக் கருதினர். இதனால், இவ்வரசு பெருவாரியான மக்களின் ஆதரவை இழந்து நின்றது.

மரபுவழிக் கட்சினரைப் போன்றே குடியரசுக் கட்சியினரும் (The Republicans) அங்கு மிக்க செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தனர். அவர்களும் ஜூலை முடியரசைத் தூற்றத் தொடங்கினர். மக்களாட்சி என்ற பெயரில் தன்னாட்சி (Personal Rule) நடைபெறுவதை அவர்கள் ஏற்க மறுத்தனர். அரசர் மாறிய பின்னரும் ஆட்சி முறை மாறாதது கண்டு, அவர்கள் பெரிதும் ஆத்திரமுற்றனர். அவ்வாட்சியை அகற்றி, மீண்டும் மக்களாட்சி நிறுவுவதையே அவர்கள் தங்கள் பணியாகக் கொண்டனர்.

சோசலிஸ்டுகளும் நடுத்தர வகுப்பு மக்களின் நலனை மட்டுமே கருதிய இப் பூர்ஷ்வா ஆட்சியினை ஆதரிக்கவில்லை. ஏழைப் பாட்டாளிகள் சுரண்டப்படுவதையும், அவர்கள் வறுமையில் வாடுவதையும் கண்டு, அவர்கள் பெரிதும் ஆத்திரமுற்றனர். அரசு, தொழிலாளர்களின் நலனைப் புறக்கணிப்பதை அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. சமூகப் புரட்சியொன்றின் மூலம், இவ்வாட்சியைக் கவிழ்க்கவும் அவர்கள் திட்டமிட்டனர்.

1830-க்குப் பின்னர், மிக விரைவாகச் செல்வாக்கு பெற்ற கட்சிகளில் போனபார்ட் கட்சியும் ஒன்றாகும் (The Bonapartists). இவர்களும் லூயி பிலிப்பின் ஆட்சியை வன்மையாக எதிர்த்தனர். முதலாம் நெப்போலியனின் புகழைப் பரப்பி, லூயி பிலிப்பின் ஆட்சியைச் செல்வாக்கிழக்கச் செய்ய அவர்கள் பெரிதும் முயன்றனர். நெப்போலியனின் புகழும் மக்களிடையே மிக விரைவாகப் பரவியது. அவரது ஆட்சியே ஒப்பற்ற ஆட்சியென மக்களும் நம்பினர். லூயி பிலிப்பின் ஆட்சியும், செல்வாக்கு குன்றத் தொடங்கியது. சிறப்பற்ற லூயி பிலிப்பின் ஆட்சியில் அவர்கள் பெரிதும் சோர்ந்துபோயினர். மீண்டுமொரு புரட்சியின் மூலம், ஜூலை முடியரசைக் கவிழ்க்கவும் அவர்கள் துணிந்தனர்.

சட்டப்படி தேர்ந்தெடுக்கப்படாத அரசு என்ற காரணத்தால், அது அனைத்து மக்களின் ஆதரவையும் பெற்றுத் திகழவில்லை. அத்துடன் புரட்சிக்குப் பின்னர், உடனடியாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட காரணத்தால், அது பல்வேறு பிரச்சினைகளை எதிர்நோக்க நேரிட்டது. ஃபிரெஞ்சு மண்ணில் அது ஆழமாக வேரூன்றுவதற்கு முன்னரே, பல்லோரது எதிர்ப்புக்கும் ஆட்பட்டது. பல்லோரது எதிர்ப்பு என்ற மாபெரும் புயலில் சிக்கி அது இறுதியில் வீழ்ந்தும் பட்டது. அரசியல் நுட்பமிக்க மெட்டர்னிக்கின் கூற்று இதனை

தனி விளக்கும். லூயி பிலிப்பின் அரசு, வெற்றுக் கொள்கையின் அடிப்படையில் அமைந்த ஒன்றாகும். 1792-லிருந்து 1801 வரை செயல்பட்ட அரசுகள் அனைத்தும் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவை. லூயி பிலிப்பின் அரியணை அத்தகைய ஆதரவைப் பெறவில்லை. மீண்டும் புகுத்தப்பட்ட பூர்போன்கள் போன்று, பல உரிமைகளை அது பெற்றிருக்கவில்லை. அவப்பேறு காரணமாக, அது ஒரு மக்களாட்சியாகவும் இல்லை. நெப்போலியனது ஆட்சியைப் போன்று, அது இராணுவப் புகழையும் பெற்றுத் திகழவில்லை. அதனுடைய தொடர்ச்சி உண்மையிலேயே வியப்புக்குரிய ஒன்றாகும்.

அது தொடர்ந்து செயலாற்றியதற்குக் காரணம், அதனுடைய பகைவர்கள் பெரிதும் வேறுபட்டு நின்றதேயாம். லபாயத் (Lafayette) போன்ற குடியரசுத் தலைவர்கள் (Republicans) புரட்சிக்குப் பின்னர், தங்கள் பணி முடிந்துவிட்டதாகக் கருத வில்லை. மக்களாட்சியின் அடிப்படையில் பல சீர்திருத்தங்களைப் புகுத்த அவர்கள் பெரிதும் விழைந்தனர். ஆயினும், மிதவாதி களும், பிற்போக்குவாதிகளும் (Moderates and Conservatives) இருப்பதைப் பேணிக் காப்பதே தக்கதெனக் கருதினர். மாற்றங்கள் ஏதும் வேண்டுவதில்லையென்பது அவர்கள் தம் கருத் தாகும். காசிமிர்-பெர்ரியர் (Casimir-Perrier), குய்சோ (Guizot), புரோக்லி (Broglie) போன்றவர்கள் இக்கொள்கையினைக் கொண்டி ருந்தனர். லூயி பிலிப்பும் அவர்களையே பெரிதும் வரவேற்றார். ஆயினும், குடியரசுக் கட்சியினரையும் அவரால் முற்றிலும் ஒதுக்க முடியவில்லை. இரு சாராரையும் தமது அமைச்சரவையில் சேர்த்துக்கொண்டார் அவர். அவர்களால் ஒன்று சேர்ந்து செயல்பட முடியவில்லை. அது எவ்வாறென்பதை அமைச்சரவை களின் செயல்களை ஆராய்ந்தால் நன்கு புலனாகும்.

### அரசரும் அவரது அமைச்சரவைகளும்

1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், பல அமைச்சரவைகள் பதவியேற்றன. தமது நோக்கத்தினை நிறைவேற்றத் தவறிய அனைத்து அமைச்சரவைகளையும் அரசர் கலைத்துவிட்டார். இதன் விளைவாக நிர்வாகம் மிகச் சீர்குலைந்துபோனது. இங்கிலாந்தில் செயல்பட்டது போன்ற நல்ல வரம்புக்குட்பட்ட குடியரசுக்கோ அல்லது சிறப்பு மிக்க நல்ல பாராளுமன்ற ஆட்சிக்கோ இவர் வழி வகுத்தாரில்லை. பூர்போன் அரசர்களிடமிருந்து எத்தகைய படிப்பினையையும் இவர் பெற்றாரில்லை என்பதை இவரது செயல்களே உறுதிப்படுத்தின. ஆதலின், ஃபிரான்சின் நல்லாட்சிக்கு இவரே தடையாய் நின்றார் எனில் மிகையாகாது.

**லபிதே அமைச்சரவை (Ministry of Lafitte)**

லபிதே (Lafitte) என்பார் தலைமையில் முதல் அமைச்சரவை பதவியேற்றது. இவர் வணிகராயினும் முற்போக்கு உள்ளம் கொண்டவர். இடது சாரிக் கட்சியினருக்கு இவர் சற்று மிகுதியான ஆதரவு காட்டினர். ஆயினும், சற்று செயல் திறமையற்ற இவரால் நிலைமையினைச் சமாளிக்க இயலவில்லை. அரசரும், பிற்போக்காளர்கள் நிறைந்த பாராளுமன்றமும் இவரை விரும்பவில்லை. பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெற்று அரசர் அவரைப் பதவியில் இருந்து அகற்றினர்.

**காசிமிர்-பெர்ரியர் அமைச்சரவை**

ஜூலை அரசின் இரண்டாவது அமைச்சரவைக்குத் தலைமை ஏற்றவர் பெரும் செல்வரான காசிமிர்-பெர்ரியர் (Casimir-Perrier) என்பவராவார். இவர் பதவியேற்றவுடன் கட்டுப்பாடான ஆட்சியை நிறுவுவதாக வாக்களித்தார். இவர் கட்டுப்பாட்டினையும் (Order), உரிமையினையும் (Order) ஒருங்கிணைக்க முனைந்தார். ஆயினும், நாளடைவில் உரிமையினை மறந்து கட்டுப்பாட்டில் மட்டும் நாட்டம் செலுத்தினர். ஜூலைப் புரட்சியின் கொள்கைகளை நிறைவேற்றப் போவதாக வாக்களித்த இவர், அதனைத் தவறுகச் செயல்படுத்தத் தொடங்கினர். ஜூலைப் புரட்சியில் அரசரின் மாற்றத்தையே இவர் பெரிதாக மதித்தார். மக்களுக்கு அளிக்கப் பெற்ற வாக்குறுதிகளையும் மறந்தார். கட்டுப்பாடுதான் ஜூலைப் புரட்சியின் மிக முக்கியக் கொள்கையென இவர் நம்பினர். ஆகவே, இவர் ஒழுங்கினையும் கட்டுப்பாட்டினையும் நிறுவ, மிகத் தீவிரமான முயற்சியில் ஈடுபட்டார். லியான்ஸ் நகரப் புரட்சியினையும், குடியரசுக் கட்சியினரது புரட்சியினையும் ஈவு இரக்கமின்றி நசுக்கினர். இவர் ஒழுங்கினையும், கட்டுப்பாட்டினையும் நிறுவினர் என்பதில் ஐயமில்லை. ஆயினும், இவரது தீவிரக் கட்டுப்பாட்டு முறைகளால் இவர் செல்வாக்கிழந்தார். நிர்வாகத்திற்குத் தாமும் தமது அமைச்சரவையுமே பொறுப்பென எண்ணி அரசரையும் புறக்கணித்தார். அதனால், அரசரும் அவரது கொள்கையில் பெரிதும் ஏமாற்றமுற்றார். 1832-ல் காலரா நோயினல் இவர் உயிர் நீத்த காரணத்தால், அரசர் இவர் பிடியிலிருந்து விடுபட்டார்.

**சோல்ட் அமைச்சரவை (Soult)**

காசிமிர்-பெர்ரியரின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்ட அரசர் தமது அமைச்சரவையைத் தாமே தேர்ந்தெடுத்துக்கொண்டார். சோல்ட் என்பாரைத் தமது அமைச்சரவையின் தலைவராக நியமித்தார். குய்சோ, தையர் போன்றோரும் இவ்வமைச்சரவையில்

இருந்தனர். இவ்வமைச்சரவையில் குய்சோவும், தையரும் மிக வேறுபட்டு நின்றனர். அவர்களின் வேறுபாட்டினை அரசர் தமது நலனிற்குப் பெரிதும் பயன்படுத்திக்கொண்டார். பிளவுபட்ட அமைச்சரவை என்ற காரணத்தால், அது செம்மையாக இயங்க வில்லை. நிர்வாகம் மிகச் சீர்குலைந்துபோனது மக்களிடம் அது செல்வாக்கினை முற்றிலும் இழந்தது. இவ்வமைச்சரவையும் கலைக்கப்பட்டது.

**தையர் அமைச்சரவை**

சோல்ட் பதவி விலகிய பிறகு, தையர் என்பார் அமைச்சரவைக்குத் தலைமையேற்றார். தையர் அதிகாரத்தினையும் புகழையும் பெரிதும் விரும்பினார். தையர் எதிலும் தீவிரப் பற்று மிக்கவர். அரசர், ஆட்சிபுரியவேண்டுமேயன்றி ஆளக்கூடாதென்பது இவர் தம் கருத்து. பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்றுத் திகழும் கட்சியே அமைச்சரவையை அமைக்கவேண்டுமென்றும் அரசர் அமைச்சரவைப் பிரச்சினைகளில் தலையிடக் கூடாதென்றும் இவர் திட்டவட்டமாக நம்பினார். அரசரைக் கலந்தாலோசியாமலேயே இவர் தம் அமைச்சரவையைக் கூட்டினார். நிர்வாகத்தினையும் அரசரது ஆலோசனையின்றியே நிர்வகித்தார் இப்பெருமகன். வெளிநாட்டுக் கொள்கையிலும் இவர் தீவிர ஈடுபாடு காட்டினார். ஃபிரான்சின் செல்வாக்கையும், புகழையும் பாரெங்கும் பரப்ப வேண்டுமென்பதே இவர் தம் நோக்கமாகும். கிழக்குப் பிரச்சினையிலும் தலையிட்டு ஃபிரான்சின் செல்வாக்கினை மிக உயர்த்த இவர் பெரு விருப்பம் கொண்டார். ரஷ்யாவையும் இங்கிலாந்தையும் எதிர்த்து, கிழக்குப் பிரச்சினையில் தாம் செல்வாக்கு மிகப் பெற விழைந்தார். எகிப்திய சுல்தானை முகமது அலி துருக்கியை எதிர்த்துப் போர் செய்தபோது, அவரை ஆதரிக்கவும் இவர் துணிந்தார். துருக்கியை வீழ்த்திய பின்னர், எகிப்தில் தமது செல்வாக்கினை நிறுவவே இவர் பெரிதும் விரும்பினார், ஆப்பிரிக்காவில் மாபெரும் ஃபிரெஞ்சுக் குடியேற்றமொன்றினை நிறுவவும் இவர் திட்டமிட்டார். ஃபிரான்சு கிழக்குப் பிரச்சினையிலீபட்டுச் செல்வாக்கு பெறுவதை விரும்பாத இங்கிலாந்து ஃபிரான்சை எதிர்த்துத் துருக்கியை ஆதரித்தது. இதனால், இங்கிலாந்துக்கும் ஃபிரான்சுக்கும் போர் ஏற்படும் நிலை உருவானது. இங்கிலாந்துடன் போரிட்டேனும் கிழக்குப் பிரச்சினையில் தமது செல்வாக்கினை உயர்த்த விரும்பிய இவர், இங்கிலாந்துடன் போரிடவும் துணிந்தார். இவரது தீவிரத் தன்மையினை விரும்பாத அரசர் இவரைப் பதவி விலகுமாறு செய்தார். எவ்வாறேனும் அமைதி வேண்டுமென விரும்பிய லூயி பிலிப், இவரைப் பதவி விலகச் செய்ததில் வியப்பேதுமில்லை. ஆறே மாதங்களில் தையர் பதவி துறந்தார்.

**மோல் அமைச்சரவை**

தையர் பதவியிலிருந்து விலகியதும் மன்னர் மோல் (Mole) என்பாரைத் தம் முதலமைச்சராக நியமித்தார். மோல் உயர் அரசு பதவியில் பணியாற்றி அனுபவம் பெற்றவர். ஆகவே, தனக்கு மேலுள்ள உயர் அதிகாரிகளுக்குப் பணிந்து பணியாற்றியே பழக்கப்பட்டவர். இவரது தாழ்ந்துபோகும் பாங்கினை அரசர் பெரிதும் விரும்பினர். இவர் காலத்தில் அரசரின் செல்வாக்கு நிர்வாகத்தில் மிக உயர்ந்து காணப்பட்டது. அதிகாரங்கள் அனைத்தும் அவரிடமே இருந்தன. இவரும் அரசரின் கைப்பாவை போன்றே செயலாற்றினர். அமைச்சரவையையும் அரசரே ஆட்டிப்படைத்தார். அரசருக்கு அமைச்சரவை கைகட்டி, வாய்பொத்தி பணி புரிவதைப் பாராளுமன்றம் விரும்பவில்லை. அரசவைக் கொள்கையினை (Court poticy) செயல்படுத்தும் இவ்வமைச்சரவையை அனைவரும் எள்ளி நகையாடினர். 1839-ல் மிக்க எதிர்ப்புக் கிடையில் இது பதவி விலகியது.

**மீண்டும் சோல்ட் அமைச்சரவை**

ஆதிக்கம் செலுத்த விரும்புபவர்களையும், செல்வாக்கு மிக்கவர்களையும் அரசர் என்றும் விரும்பியதில்லை. தமது கருத்தினை ஏற்றுப் பணிந்து நடப்பவர்களுக்கே அமைச்சரவைத் தலைமையினை இவர் தந்தார். மோல் பதவி விலகிய பின்னர், சோல்ட் என்பார் மீண்டும் தலைமை அமைச்சரானர். இவரும் பணிந்து பணியாற்றும் பண்புமிக்கவர். இது அரசரின் ஐந்தாவது அமைச்சரவை. இதனும் நீண்ட நாள்கள் பணியாற்ற இயலவில்லை. அரசரின் ஒற்றர், முதுகெலும்பற்றவர், திறமையற்றவர், என்றெல்லாம் இவர் தூற்றப்பட்டார். அரசரும் செல்வாக்கினைப் படிப்படியாக இழந்து கொண்டிருந்தார். அரசரது தன்னலத்தையும், இவரது திறமையின்மையையும் மக்கள் பெரிதும் வெறுத்தனர். பாராளுமன்றத்திலும் சோல்ட் மிக வெறுக்கப்பட்டார். பாராளுமன்றத்தால் தனித்து நிறுத்தப்பட்ட நிலையில் இவர் பதவி விலகினர்.

**மீண்டும் தையர் அமைச்சரவை**

சோல்ட்டைப் பதவி நீக்கிய அரசர் பெரிதும் துயரில் மூழ்கினர். தமது விருப்பத்தினை நிறைவேற்றவல்ல பாராளுமன்ற உறுப்பினர்கள் யாருமிலர் என்பதை அறிந்த அரசர் பெரிதும் வருத்தப்பட்டார். தையர் என்பாரே பாராளுமன்றத்தில் மிக்க செல்வாக்கு பெற்றுத் திகழ்வதைக் கண்ட அரசர், பெரிதும் அதிர்ந்து போனர். தையரின் கொள்கைகளை முற்றிலும் விரும்பாத அரசர், அவரை முதலமைச்சராக ஏற்க மிகவும் தயங்கினர். வேறு வழி

ஏதும் புலப்படாத காரணத்தால், மீண்டும் அவரையே தம் முதலமைச்சராக ஏற்றுக்கொண்டார். தையர் முதலமைச்சராகப் பதவியேற்றவுடன் கிழக்குப் பிரச்சினையில் தலையிட்டு இங்கிலாந்துடன் போர் செய்யவும் துணிந்தார். இத் தலைமையமைச்சரின் போர்க் குரலைக் கேட்டு அரசர் பெரிதும் அஞ்சினர். போரை முற்றிலும் விரும்பாத இவ்வரசர் தமது செல்வாக்கை முழுவதும் பயன்படுத்தி 1840-ல் இவரைப் பதவிலிருந்து விலக்கினர்.

**குய்சோ அமைச்சரவை** (Guizot)

தையர் என்பாருக்குப் பின்னர், மீண்டும் சோல்ட் என்பாரே தலைமையமைச்சரானர். இது அரசரின் ஏழாவது அமைச்சரவையாகும். 1830-லிருந்து, 1840-க்குட்பட்ட இப் பத்தாண்டுகளில் ஏழு அமைச்சரவைகள் பதவியேற்றுவிட்டன. அமைச்சரவைகளுக்கு அதிகாரங்களைக் கொடுக்கத் தயங்கியே அவற்றைக் கலைத்த வண்ணமிருந்தார் அரசர். பணிவும், தாழ்ந்துபோகும் தன்மையுமிக்க சோல்ட்டால் பாராளுமன்றத்தினைக் கட்டுப்படுத்த முடியவில்லை. நிர்வாக இயந்திரத்தினையும் இவரால் செவ்வையாக இயக்க இயலவில்லை. ஆகவே, அவரது அமைச்சரவையில் வெளித்துறை அமைச்சராக இருந்த குய்சோ (Guizot) 1840-ல் தலைமையமைச்சரானர். 1848 வரை ஃபிரான்சின் தலைமையமைச்சராக இருந்தவர் இவர்தான்.

லூயி பிலிப்புக்கும் குய்சோவுக்குமிடையே நல்லதோர் உறவு நிலவியது. "அரியணையென்பது வெற்று நாற்காலி அல்ல" (Throne is not an empty chair) என்பது இவர்தம் துணிவு. அரசர் அதிகாரங்கள் மிக்கவர். அவர் வலிவோடும் பொலிவோடும் திகழவேண்டுமாயின் அவ்வதிகாரங்களை அவர் பயன்படுத்த வேண்டுமென்பது இவர்தம் கூற்று. மோல், சோல்ட் போன்றோருக்கு முற்றிலும் மாறுபட்டவர் குய்சோ. இவர் ஓர் அறிஞர். இவர் ஒரு வரலாற்று வல்லுநரும்கூட. திறமைகள் மிகக்கொண்ட இவர் ஒரு பிடிவாதக்காரர். தாம் கொண்டதே "கோலம்" என்ற எண்ணமுடையவர். பிறரிடம் ஒத்துப்போகும் பழக்கமற்றவர். அரசருக்குப் பணிந்துபோக இவர் விரும்பாவிடினும், அரசர் சிறப்புடனிருக்கவேண்டும் என்ற கருத்தினர். 1830-ல் திருத்தப்பட்ட சாசனமே அனைத்து உரிமைகளையும் தன்னகத்தே கொண்டது. அதுவே போதுமானது. அதனை மாற்றவோ மீறவோ கூடாது. அதனை மாற்றினுல் நாட்டு நலன் பாதிக்கப்படும் என்பது இவரது கருத்தாகும். வாக்குரிமையினை மேலும் விரிவுபடுத்த இவர் ஒருப்படவில்லை. அரசருக்கேற்ற நல்ல மதிமந்திரியார் இவரெனில் அது மிகையாகாது.

தவறான முறைகளையெல்லாம் பின்பற்றி இவர் 1840-லிருந்து, 1848 வரை தலைமை அமைச்சராக இருந்தார். கையூட்டு வழங்கியே இவர் பாராளுமன்றத்தில் தமக்குப் பெரும்பான்மையினை நிலைநாட்டிக்கொண்டார். தன்னை எதிர்த்த பாராளுமன்ற உறுப்பினர்களுக்குக் கையூட்டோ அல்லது பதவியோ வழங்கி அவர்களைத் தம் வழிக்குக் கொணர்ந்தார். தேர்தலையும் தாம் விரும்பிய வண்ணம் கையூட்டு வழங்கியே நடத்தினர். வாக்காளர்கள் தொகை மிகக் குறைவாக இருந்த காரணத்தால், கையூட்டு மூலம் அவர்களையும் தமக்கு வாக்களிக்குமாறு செய்தார். ஆதலின், வாக்குரிமை பரவலாக்கப்படுவதை இவர் வன்மையாக எதிர்த்தார். தொழிலாளர்கள் வாக்குரிமைக்குப் போராடியபோது, அதனை முற்றிலும் மறுத்தார். வாக்குரிமைப் போராட்டமே இறுதியில் இவரையும், லூயி பிலிப்பையும் வீழ்த்தியது.

இவரது கல்விச் சீர்திருத்தங்களும், இவருக்கு எதிர்ப்பை வளர்த்தன. சமயச் சார்பற்ற கல்வி வேண்டுமெனப் பலர் வேண்டினர். இவர் அவர்கள் வேண்டுகோளுக்குச் செவிமடுக்க மறுத்தார். ஒவ்வொரு கம்யூனிலும் பள்ளியொன்றைத் திறந்தார். நாடெங்கிலும் பள்ளிகள் திறக்கப்பட்டன. ஆசிரியர்களை அரசின் கட்டுப்பாட்டின் கீழ் கொணர்ந்தார். ஆயினும், அவர்களுக்கு ஊதிய உயர்வு தர மறுத்தார். இதனை ஆசிரியர்கள் எதிர்த்தபோது அவர்களின் உரிமைகள் பலவற்றினைப் பறித்தார். இதன் விளைவாக அவர்களின் ஆதரவினை இவர் இழக்க நேரிட்டது. திருச்சபை, கல்வியின்மீது ஆதிக்கம் செலுத்துவதை வரவேற்றார். சமயச் சார்பற்ற கல்விக்கு மாறாக, திருச்சபையினர் கொணர்ந்த கல்வி முறை பின்பற்றப்பட்டது. இதனைப் பலரும் எதிர்த்தனர்.

ஜூலை முடியரசுக் காலத்தில் ஃபிரான்சில் பல புதிய தொழில்கள் தொடங்கப்பட்டன. தேசிய வருவாயும் மிகுந்தது. ஆயினும், முறையான பொருளாதாரக் கொள்கை இவர் காலத்தில் பின்பற்றப்படவில்லை. தங்கு தடையற்ற வணிகக்கொள்கை (Laisse Faire) பின்பற்றப்பட்ட காரணத்தால், வணிகர்களிடமும் பெரும் முதலாளிகளிடமும் செல்வம் குவிந்தது. தொழிலாளர்கள் நலன் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டதோடு, அவர்கள் மிகுதியும் சுரண்டப்பட்டனர். குறைந்த ஊதியமே அவர்களுக்கு வழங்கப் பட்டது. அவர்கள் ஏழ்மை காரணமாக, நகர ஒதுக்குப்புறங்களிலும் துப்புரவற்ற இடங்களிலும் விலங்குகளைப் போன்று வாழும் நிலையேற்பட்டது. பசியாலும் பிணியாலும் பெரிதும் வாடினர். அவர்கள் நலனைப் பேண அரசு முன்வரவில்லை. ஏழையரின் நலன் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டது.

ஏழை எளியவரை அரசு முற்றிலும் புறக்கணித்தாலும் நல்ல அறிஞர் பலர் அவர்கள்பால் அனுதாபம் காட்டினர். 18ஆம் லூயி மன்னர் காலத்திலேயே சிஸ்மோண்டி (Sismondi) போன்ருேர் பாராளுமன்றத்திலேயே தங்கு தடையற்ற வணிகக் கொள்கையை எதிர்த்ததுடன், தொழிலாளர் நலன் பேணப்பட வேண்டுமெனவும் வலியுறுத்தினர். அகஸ்ட் காம்டே, செயின்ட் சைமன் (St. Simon), லூயி பிளாங்க் (Louis Blanc), போரியர் (Fourier) போன்ற சோசலிஸ்ட் அறிஞர்கள் எளிய பாட்டாளி மக்களின் நலனில் பெரிதும் நாட்டம் செலுத்தினர். உழைக்கும் மக்களுக்கு உரிமைகள் நல்கப்பட வேண்டுமென அவர்கள் வலியுறுத்தினர். அவர்களுக்கும் வாக்குரிமை கொடுக்கப்படவேண்டும்; அவர்களின் உறுப்பினர்களும் பாராளுமன்றத்திற்கு வரவேண்டும். அப்போதுதான். அவர்கள் பாட்டாளிகளுக்காகப் போராடமுடியும் என இவர்கள் வாதாடினர். லூயி பிலிப்பின் ஆட்சியும் பிற்போக்கு ஆட்சியே. அதனை மாற்றி உண்மையான மக்களாட்சி அமையுங்கள் என இவர்கள் தொழிலாளர்களை வேண்டினர். அத்துடன் லூயி பிளாங்க் போன்றவர்கள் அரசே தொழிற்சாலையை அமைக்க வேண்டும்; உழைக்கும் திறனுள்ள அனைத்து ஆடவர்க்கும், மகளிர்க்கும் அரசே வேலை வாய்ப்பினை நல்கவேண்டும். முதியோரையும், சிருரையும், குழந்தைகளையும் அரசே காக்கவேண்டுமெனவும் இவர்கள் வாதாடினர். அத்தகைய அரசினை அமைப்போம். சுரண்டலைத் தவிர்ப்போம். தொழிலாளரைக் காக்க பல சட்டங்களை இயற்றுவோம் என இவர் முழங்கினர். மேலும், இவர்கள் தொழிலாளர் இயக்கங்களையும், வேலை நிறுத்தம் செய்வதையும் அரசு சட்ட ரீதியாக ஏற்கவேண்டுமெனவும் வேண்டினர். இதனல், குய்சோவின் பிற்போக்காட்சிக்கு எதிர்ப்பு மிகுந்தது. லூயி பிலிப்பும் சோசலிஸ்டுகளை ஒருசிறிதும் விரும்பவில்லை. இவர்களின் போராட்டத்தை அடக்க முயன்று அரசர் தோல்வியுற்ருர்.

**லூயி பிலிப்பின் உள்நாட்டுச் சீர்திருத்தங்கள்**

லூயி பிலிப்பின் ஆட்சி நன்மையேதுமற்ற ஆட்சியெனப் புறக்கணிக்கவும் இயலாது. பல நல்ல செயல்கள் இவர் காலத்தில் நிகழ்ந்துள்ளதை நாம் நினைவிலிருத்த வேண்டும். ஓரளவு முற்போக்குக் கருத்துகளும், பெருந்தன்மையும் மிக்கவர் இவர். இவர் காலத்தில் உழவும் தொழிலும் சிறப்பெய்தின. அவற்றின் வளர்ச்சிக்குச் சலுகைகள் பல தரப்பட்டன. செய்தித்தாள்களுக்கும் ஓரளவு உரிமை நல்கப்பட்டது. வாக்கு முறையிலும் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டுப் பல்லாயிரக் கணக்கான மக்கள் வாக்குரிமை

பெற்றனர். 1814ஆம் ஆண்டுச் சாசனமும் திருத்தப்பட்டுப் பல உரிமைகள் மக்களுக்கு வழங்கப்பட்டன. வணிக வளர்ச்சிக்கும் உள்நாட்டில் செவ்வையான போக்குவரத்துக்கும் சாலைகள் பல அமைக்கப்பட்டன. பல புதிய பொறிகள் இங்கிலாந்து போன்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுப் புதிய தொழிற்சாலைகள் பல தொடங்கப்பட்டன. வணிக வளர்ச்சிக்கும், தனியார் தொழில் வளர்ச்சிக்கும் ஊக்கம் கொடுக்கப்பட்டது. அவற்றிற்குச் சிறப் புரிமைகள் பல நல்கப்பட்டன. அதனால், உள்நாட்டு வணிகமும் தொழிலும் மிகவும் வளர்ந்தன. நாட்டு வருவாயும் மிகுந்தது. தடையற்ற வணிகக் கொள்கை போற்றப்பட்டதால், வணிகம் பெருமளவில் வளர்ச்சியுற்றது.

தொழிலாளர்களின் நலன் பேணவும் பல சட்டங்கள் இயற்றப் பட்டன. 1846-ல் இயற்றப்பட்ட சட்டத்தின் மூலம் 12 வயதுக் குட்பட்ட குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வி அளிக்கப்பட்டது. 16 வயதுக்குட்பட்ட சிறுவர், சிறுமியர்கள் நாளொன்றுக்கு 12 மணி நேரத்திற்குமேல் வேலை செய்யக்கூடாது எனவும் இச்சட்டம் வலியுறுத்தியது. 8 வயதிற்குட்பட்ட சிறுவர்கள் தொழிற்சாலை களில் வேலை செய்தல் கூடாது எனவும் இச் சட்டம் கூறியது. இச் சட்டம் முழுமையாகப் பின்பற்றப்படாவிடினும் இது தொழி லாளர்களுக்கும் அவர்களின் குழந்தைகளுக்கும் ஒரு முன் னோடித் திட்டமாக இருந்து பயன்பட்டது.

இவர் காலத்தில் கல்விக்கும் பெரும் ஊக்கமளிக்கப்பட்டது. பள்ளிகள் யாவும் அரசின் தீவிரமான கண்காணிப்பின் கீழ் வந்தன. கம்யூன்கள் தோறும் பள்ளிகள் திறக்கப்பட்டன. தனியார் பள்ளிகளும் பெரிதும் ஆதரிக்கப்பட்டன.

சமயத் துறையிலும் சீர்திருத்தங்கள் பல புகுத்தப்பட்டன. போப்பாண்டவருடன் இவர் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, சமயப் பொறையுடைமைக் கொள்கையினை வலியுறுத்தினர். அனைத்து அரசுத் துறைகளிலும் அனைவருக்கும் சமவாய்ப்புகள் நல்கப்பட்டன. 1831-ல் யூத சமயமும், பிற சமயங்களும் சமமாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. போப்பாண்டவரே சமயத் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்டாலும், அரச சமய குருமார்களுக்கு ஊதியம் வழங்கும் உரிமையினைப் பெற்றார். இதனால், சமயத் துறையில் இவரது செல்வாக்கு மிக உயர்ந்தது.

நெப்போலியனின் புகழ் மீண்டும் பரப்பப்பட்டது. தெருக்கள் பலவற்றிற்கு நெப்போலியனது போர்க்களங்களின் பெயர்கள்

சூட்டப்பட்டன. நெப்போலியனது எலும்புத் துண்டுகளும் செயின்ட் ஹெலினாவிலிருந்து பாரிஸுக்குக் கொண்டுவரப்பட்டு, மிக்க அரசு மரியாதைகளுடன் புதைக்கப்பட்டன. வெர்சாய் அரண்மனையில் புகழ்மிக்க புரட்சி நிகழ்ச்சிகள் பல தீட்டப் பட்டன. கலைக்கும் பேராதரவு நல்கப்பட்டது. இலக்கியத் துறையும் இவர் காலத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்தது. பல சிறந்த அறிஞர்கள் தோன்றி ஃபிரெஞ்சு இலக்கியத்தைச் சிறப்பித்தனர்.

இவரது ஆட்சியினை ஃபிரெஞ்சு மக்கள் வெறுக்கத் தொடங்கினர். நடுத்தர வகுப்பினர் ஆட்சியென்றும், முதுகெலும்பற்ற ஆட்சியென்றும் இவரது ஆட்சி தூற்றப்பட்டது. சோசலிஸ்டுகளும் இவரது ஆட்சியினை வன்மையாக எதிர்த்தனர். மக்கள் நலன் புறக்கணிக்கப்பட்டதைச் சுட்டிக் காட்டி, இவரது ஆட்சியில் அவர்கள் குழப்பம் விளைவித்தனர். முதலாம் நெப்போலியனின் ஆதரவாளர்கள் போனபார்ட் கட்சியென்ற ஒரு புதுக் கட்சியினை நிறுவி, மீண்டும் அத்தகைய புகழ் மிக்கதொரு ஆட்சியைக் கொண்டு வர வேண்டுமென்று போராடினர். முடியரசுக் கட்சியினரும் இவரது ஆட்சியை எதிர்த்தனர். அவர்கள் மீண்டும் பூர்போன் அரசை நிறுவ முயன்றுவந்தனர். கத்தோலிக்க சமயத்தினரும் அவரது சமயப் பொறையுடைமைக் கொள்கையை விரும்பவில்லை. இவரது ஆட்சியில் மக்கள் சோர்வுற்றுப்போயினர்.

**லூயி பிலிப்பின் வெளிநாட்டுக் கொள்கை**

முடியரசின் வெளிநாட்டுக் கொள்கையும் ஃபிரெஞ்சு மக்களைப் பெரிதும் கவரவில்லை. **1815**-க்குப்பின்னர், ஃபிரெஞ்சு வெளிநாட்டுக் கொள்கை சிறப்பாக அமையவில்லை. வாட்டர்லூ தோல்வி, அவர்களைப் பெரிதும் ஏமாற்றத்தில் ஆழ்த்தியது. வியன்னா மாநாட்டு ஏற்பாடுகள் அவர்களைப் பெரிதும் இழிவுபடுத்தியதாக நம்பினர். கூட்டணி நாட்டுப் படைகள் **1815**-க்குப் பின்னர், பாரிஸில் நிலைநிறுத்தப்பெற்றதை அவர்கள் ஓர் இழிவாய்க் கருதினர். மீண்டும் தங்கள் தாயகம் வெற்றிகள் பல பெற்றுச் சிறப்புற வேண்டுமென ஃபிரெஞ்சு மக்கள் பெரிதும் விரும்பினர். ஃபிரெஞ்சு மக்களை நன்கு புரிந்துகொண்டவர் நெப்போலியன் ஒருவர் மட்டுமே. 'அவர்களுக்குப் புகழைக் கொடுங்கள். உரிமையை அவர்கள் விரும்பமாட்டார்கள்' (Give them glory they wont want liberty) என்பது முதலாம் நெப்போலியனது கூற்று. **1815**-லிருந்தே ஃபிரெஞ்சு மக்கள் புகழுக்காக ஏங்கினர்.

**1830** ஜூலைப் புரட்சி பல நாடுகளில் புரட்சிக் கனலைக் கிளறி விட்டது. இத்தாலி, ஜெர்மனி, போலந்து, பெல்ஜியம் போன்ற

நாடுகள் புரட்சியிலீடுபட்டன. அவை தங்கள் புரட்சி வெற்றி பெற ஃபிரெஞ்சுத் துணையையும் நாடினர். தங்களைப் பின்பற்றிப் புரட்சியிலீடுபட்ட அந் நாடுகளுக்கு உதவுவதே தங்களது தலையாய கடமையாய்ப் போற்றினர் ஃபிரெஞ்சு முற்போக்குவாதிகள். போனபார்ட் கட்சியினரும் பிற நாடுகளுக்கு உதவி, தங்களது புகழை மீண்டும் ஐரோப்பிய அரங்கில் நிலைநாட்ட விரும்பினர். தையர் போன்ற தேசியவாதிகளும் ஃபிரான்சின் புகழ் பாரெங்கும் பரவ வேண்டுமென எண்ணினர். மக்களும் தங்கள் நாடு மீண்டும் புகழ் பெறுவதையே விரும்பினர். இதுவே ஃபிரெஞ்சு மக்களின் பண்பு நலனுமாகும்.

லூயி பிலிப்பின் நிலையினையும் நாம் புரிந்துகொள்ளுதல் வேண்டும். அவரது அமைதியான போக்கை மக்கள் விரும்பவில்லை என்பதை அவர் நன்கறிவார். ஐரோப்பிய அரசியலும் அவருக்கு நன்கு தெரிந்திருந்தது. பிற்போக்குக் கூட்டணிகள் மக்களிடம் செல்வாக்கிழந்து வருவதும் அவர் அறிந்ததே. ஆயினும், முற்போக்குக் கொள்கைவழி நிற்றலும், இடர்ப்பாடு மிக்கது என இவர் எண்ணியதில் தவறில்லை. முற்போக்குக் கொள்கைகளை ஆதரித்து மக்கள் வழி நின்றால், பிற ஐரோப்பியப் பிற்போக்கு நாடுகள் தம்மை எதிர்க்கும் என்பதை இவர் ஐயந்திரிபர உணர்ந்தார். பிறநாட்டுப் புரட்சிகளில் தலையிடுவதால், வரும் விளைவுகளையும் இவர் நன்குணர்ந்திருந்தார். ஐரோப்பிய வல்லரசுகள் பலவும் இவரை எதிர்த்தன. ' நான் ஓர் ஆர்லியன்ஸ் என்ற காரணத்தால், அவர்கள் (ஐரோப்பிய வல்லரசுகள்) என்னை வெறுக்கின்றனர் , என்ற இவரது கூற்று இவரது நிலையை நன்குணர்த்தும். மேலும், இவர் புரட்சிக்குப் பின்னர், மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட காரணத்தால், பிற பிற்போக்கு ஐரோப்பிய வல்லரசர்கள் இவரை வெறுத்து ஒதுக்கினர். பல பெருநாடுகளை எதிர்த்துத் தம்மால் ஒன்றும் செய்ய இயலாது என்பது இவர்தம் கருத்து. உள்நாட்டிலேயே முழு ஆதரவில்லாதபோது, வெளிநாட்டில் தாம் வெற்றிபெற இயலாது என்ற இவரது கணிப்பு முற்றிலும் சரியான வொன்றேயாம். அமைதிக் கொள்கையினைத் தவிர, வேறு வழியில்லை என்ற முடிவுக்கு இவர் வந்தது பல்வேறு சூழ்நிலைகளால் என்பதை நாம் ஈண்டு உணரவேண்டும். அவரது வலுவின்மைக்கு இதுவே அடிப்படைக் காரணமாகும்.

**பெல்ஜியப் புரட்சியும், ஃபிரான்சும்**

வியன்னு மாநாட்டேற்பாட்டினை எதிர்த்துப் பெல்ஜிய மக்கள் புரட்சி செய்தனர். அவர்கள் **1830** ஆம் ஆண்டு, ஃபிரெஞ்சுப் புரட்சியால் பெரிதும் ஊக்கம் பெற்று அந்நிய ஆதிக்கத்தினை

எதிர்த்துப் புரட்சி செய்யத் தலைப்பட்டனர். ஃபிரான்சினையும் தங்களுக்குத் துணைபுரிய வேண்டுமென வேண்டினர். லூயி பிலிப்பும் அம் மக்களுக்குத் துணை புரிதலே தக்கதெனவும் துணிந்தார். ஆஸ்திரியாவும், பிரஷ்யாவும், ரஷ்யாவும் இவர் பெல்ஜியத்துக்குத் துணைபுரிவதை வன்மையாக எதிர்த்தன. ஃபிரெஞ்சின் செல்வாக்கு அங்கு மிகுந்துவிடும் என அவை அச்சம் தெரிவித்தன. புரட்சியில் ஈடுபட்ட பெல்ஜிய மக்கள் தங்கள் அரியணையைப் பிலிப்பின் மகனை நெமூர்க் கோமகனுக்கு (**Duke of Nemours**) வழங்கவும் துணிந்தனர். ஆயினும், தாம் வெற்றிபெற வேண்டுமாயின் இங்கிலாந்தின் துணை வேண்டுமென்பதை, பிலிப் தெளிவாக உணர்ந்தார். ஆகவே, இங்கிலாந்தின் ஆதரவினைப் பெறும்பொருட்டு, தம் தூதரான தாலிரானை அங்கு அனுப்பிவைத்தார். இச் சிறப்பு மிக்க அமைச்சரான தாலிரானும் இங்கிலாந்தின் ஆதரவினைப் பெற்றுப் பெல்ஜிய விடுதலைக்கு வழிவகுத்தார். இங்கிலாந்தும், ஃபிரான்சும் ஒன்றுகூடவே, பிற பிற்போக்கு வல்லரசுகள் வாயடைத்துப் போயின. லண்டன் மாநாடும் கூட்டப்பெற்றது. பெல்ஜிய விடுதலையை, அனைத்து வல்லரசுகளும் ஏற்றுக் கொண்டன. இதனால், ஃபிரான்சுக்கு மிகுதியும் நன்மையேற்படவில்லை. நெமூர்க் கோமகன் பெல்ஜியத்தின் மன்னராவதை இங்கிலாந்து விரும்பவில்லை. இங்கிலாந்தின் எதிர்ப்புக் காரணமாக, பெல்ஜியம் சாக்சிகோபர்க்கின் குறுநில மன்னரான லியோபால்டு (**Leopold of Saxecoburg**) என்பாரைத் தன் மன்னராகத் தேர்ந்தெடுத்துக் கொண்டது. இதனால், பிலிப் பெல்ஜியத்தில் தமது செல்வாக்கினை நிலைநாட்டிக் கொள்ள இயலவில்லை. இதனால், ஃபிரெஞ்சு மக்கள் பெரிதும் அதிருப்தியுற்றனர்.

ஆயினும், லூயி பிலிப்பின் பெல்ஜியக் கொள்கை சிறப்புமிக்கதாகும். மீண்டும் அண்டை நாடுகளின்மீது தங்கள் ஆதிக்கத்தினை நிறுவமுடியும் என்பதற்கு இது ஒரு காட்டானது. பெல்ஜியம், ஹாலந்து இணைப்பினை உடைத்ததே லூயி பிலிப் ஃபிரான்சுக்குச் செய்த மாபெரும் பணியாகும். இதன் காரணத்தால், ஃபிரான்சுக்கெதிராக உருவாக்கப்பட்ட மாபெரும் அரண் ஒன்று தகர்க்கப்பட்டது. அத்துடன் பெல்ஜியமும் அவரது நட்பு நாடானது. வெளித்துறைக் கொள்கைகளில் இதனால் ஃபிரான்சுக்குப் பெரிதும் நன்மை ஏற்பட்டது. இத்துடன் ஃபிரான்சு இதன்மூலம் இங்கிலாந்தின் நட்பையும் பெற முடிந்தது. இதுவரை தனித்து நிறுத்தப்பட்டிருந்த ஃபிரான்சு, இதன்மூலம் முற்போக்கு நாடுகளுடன் கூட்டணி அமைத்துக்கொள்ளும் வாய்ப்பினையும் பெற்றது. அந்நாட்டின் சிறப்பு மீண்டும் மிகுந்தது.

## 1830-இல் இத்தாலியப் புரட்சியும், ஃபிரான்சும்

வியன்னு மாநாட்டின் ஏற்பாட்டினுல் இத்தாலியர்கள் பெரிதும் ஏமாற்றமுற்றனர். அது ஒரு புவியியல் சொல்லாக மாறியது. 1830 ஃபிரெஞ்சுப் புரட்சி அதற்கு ஓர் ஒளிர்விடும் நம்பிக்கைத் தாரகையாகப்பட்டது. அப் புரட்சியினுல் ஊக்கம் மிகப் பெற்ற இத்தாலியும் தனது புரட்சிக் கொடியை அந்நிய ஆதிக்கத்தினை எதிர்த்து உயர்த்தியது. புரட்சிகளின் தலைநகரான பாரிஸின் துணையை இவர்களும் எதிர்பார்த்தனர். ஆயினும், லூயி பிலிப், பல்வேறு காரணங்களால் இத்தாலிக்கு உதவ மிகத் தயங்கினுர். ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்ற கூட்டணி நாடுகளை மீண்டும் எதிர்த்துச் செயல்பட இவர் துணியவில்லை. ஆகவே, 1832-ல் போப்பரசுகளும் (Popal States) பிறவும் புரட்சியில் ஈடுபட்டபோது வல்லரசுச் சமநிலையை நிலைநாட்டும்பொருட்டு, இவர் தமது படைகளை அன்கோனு (Ancona) என்ற இடத்திற்கனுப்பி, போப்பரசுகளுக்குப் பாதுகாப்பாய் நின்ருர். ஆஸ்திரியா, போப்பரசுகளைப் பழிவாங்காமல் காக்கும்பொருட்டே அவ்வாறு செய்தார். ஆயினும், புரட்சியிலீடுபட்ட மக்களுக்கு இவரால் எத்தகைய பயனுமேற்படவில்லை. ஆகவே, இத்தாலியப் புரட்சி வெகு எளிதாக அடக்கப்பட்டது. ஃபிரெஞ்சு முற்போக்குவாதிகள் இவரது தலையாய கொள்கையினைப் பெரிதும் வெறுத்தனர். இத்தாலியப் புரட்சி ஈவு இரக்கமின்றி ஒடுக்கப்பட்டதைக் கண்டு பெரிதும் ஆத்திரமுற்றனர். இவரது தலையிடாக் கொள்கையினைக் கண்டு அவர்கள் வெகுண்டனர். இவரது அமைதிக் கொள்கையில் அவர்கள் பெரிதும் சோர்ந்துபோயினர்.

## அல்ஜியர்ஸ் மீது ஆதிக்கம்

17, 18-ம் நூற்ருண்டுகளில் ஐரோப்பிய நாடுகளிடையே குடியேற்றங்களை அமைப்பதில் கடும் போட்டி ஏற்பட்டது. இந்தியா, ஆப்கானிஸ்தானம், பார்மா, மேற்காசியா, ஆப்பிரிக்கா போன்ற இடங்களில் குடியேற்றங்களை நிறுவ வல்லரசுகள் கடுமையாகப் போட்டியிட்டுக்கொண்டன. வியன்னு மாநாட்டிற்குப் பின்னரும் இப் போட்டி தொடர்ந்தது. 10ஆம் சார்லஸ் காலத்தில் ஃபிரான்சு வட ஆப்பிரிக்காவிலுள்ள அல்ஜியர்ஸ் (1830) என்ற இடத்தைக் கவர்ந்து குடியேற்றத்தை அமைத்தது. லூயி பிலிப் காலத்தில் அல்ஜியர்ஸ், அப்துல் காதிர் (Abdul Kadir) என்பார் தலைமையில் புரட்சிக் கொடியினை உயர்த்தியது. அதனை விரும்பாத லூயி பிலிப், பூகௌடு (Bugoud) என்பார் தலைமையில் ஒரு பெரும் படையினை அங்கு ஏவினுர். அங்குப் புரட்சியும் ஒடுக்கப்பட்டு, அப்துல் காதிரும் (1834) பிடிபட்டார். அல்ஜியர்ஸ்,

ஃபிரான்சின் நிரந்தரக் குடியேற்ற நாடாகியது. 40,000-க்கும் மேற்பட்ட ஃபிரெஞ்சுக்காரர்கள் அங்குக் குடியேறினர். ஃபிரெஞ்சு வணிகமும் பெரிதும் வளர்ந்தது. இதனுல், ஊக்கம் பெற்ற ஃபிரான்சு, மடகாஸ்கரிலும், தென்னுப்பிரிக்காவில் சில இடங்களிலும் தனது குடியேற்றங்களை நிறுவியது.

**கிழக்குப் பிரச்சினையில் தலையீடு**

ஆப்பிரிக்காவில் அல்ஜியர்ஸ், மடகாஸ்கர் போன்ற இடங்களில் குடியேற்றங்களை நிறுவி, அதனுல், பெரும் நன்மையுற்ற ஃபிரான்சு, ஆப்பிரிக்காவின் பிற பகுதிகளிலும் தனது குடியேற்றங்களை நிறுவ முனைந்தது. எகிப்தின்மீதும் தனது ஆதிக்கத்தினை நிறுவ ஃபிரான்சு விருப்பங் கொண்டது. இதனுல், எகிப்துடன் மிக்க நட்பு பாராட்டியது. எகிப்திய சுல்தானுன முகமது அலியும் ஃபிரான்சுடன் நெருங்கி உறவாடினுர். ஃபிரான்சு, அவரது படைகளுக்குப் பயிற்சியும் அளித்தது. ஃபிரெஞ்சு வணிகர்களும், ஆசிரியர்களும் பிறரும் அங்குச் சென்று குடியேறினர். ஃபிரெஞ்சு வணிகர்களும் பெரும் செல்வத்தை அங்கு முதலீடும் செய்தனர். இவ்விரு நாடுகளிடையே நல்லவணிகமும்நடைபெற்றது.

ஃபிரெஞ்சு-எகிப்திய நல்லுறவினுல் பெரிதும் ஊக்கம் பெற்ற எகிப்திய சுல்தானுன முகமது அலி, துருக்கி வசமிருந்த சிரியாவைக் கைப்பற்றத் துணிந்தார். கிரேக்க விடுதலைப் போரின்போது. எகிப்து செய்த உதவிக்காகத் துருக்கி சிரியாவை அதற்குத் தருவதாக வாக்களித்திருந்தது. ஆயினும், துருக்கி, கிரேக்க விடுதலைப் போருக்குப் பின்னர், அவ் வாக்குறுதியினை நிறைவேற்றவில்லை. இதனை ஒரு காரணமாகக் கொண்டு, 1839-ல் முகமது அலி, சிரியாமீது போர் தொடுத்தார். நெப்போலியனின் காலத்திலிருந்தே எகிப்துமீது ஆதிக்கம் செலுத்த விரும்பிய ஃபிரான்சு, அப்பொழுது முகமது அலியை ஆதரித்ததில் வியப்பொன்றுமில்லை. ஃபிரான்சில் முதல் அமைச்சராக இருந்த தையர் என்பார், முகமது அலியைப் பெரிதும் ஆதரித்தார். ஐரோப்பாவுக்கு மீண்டும் ஃபிரான்சே தலைமையேற்க வேண்டுமென்று பேரவாக் கொண்ட ஆதிக்கம் மிக்க தையர், எகிப்தைத் துருக்கிக் கெதிராகத் தூண்டிவிட்டார். இதனுல், பெரிதும் ஊக்கம் பெற்ற முகமது அலி, சிரியாவை முற்றுகையிட்டு வென்றதோடு, துருக்கியின் தலைநகரான கான்ஸ்டாண்டிநோபிளையும் கைப்பற்றப் போவதாக அச்சுறுத்தினுர். இதனைக் கண்டு அஞ்சிய துருக்கி, இங்கிலாந்தின் துணையை நாடியது. ஐரோப்பிய நோயாளியான துருக்கியை இங்கிலாந்து, ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய நாடுகள் ஆதரித்தன. எகிப்தில் ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை விரும்பாத அவை கூட்டணி யொன்றையும் நிறுவி, ஃபிரான்சை

எதிர்த்தன. இப் பிரச்சினையை ஆராய்வதற்காக இங்கிலாந்து, லண்டனில் ஒரு மாநாட்டினையும் கூட்டியது. ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்ற நாடுகளுக்கு அழைப்பு விடுத்த இங்கிலாந்து, ஃபிரான்சினை இம் மாநாட்டிற்கு அழைக்கவில்லை. லண்டனில் கூடிய இந்நான்கு நாடுகளும் முகமது அலியை, சிரியாவை விட்டு வெளியேறுமாறு எச்சரித்தன. இவ்வெச்சரிக்கை தையருக்கு ஒரு சவாலாக அமைந்தது. தையரும் போருக்குத் தயாரானார். போர் மூண்டுவிடுமோ என்ற அச்சமும் நிலவியது. இதனைக் கண்டு அஞ்சிய பிலிப், தம் முதலமைச்சரான தையரை (1840-ல்) பதவியிலிருந்து விலக்கினார். இங்கிலாந்தின் கொள்கையினையும் இவர் ஏற்றுக்கொண்டார். எகிப்தும் சிரியாவை விட்டு வெளியேறியது. இதன் விளைவாக எகிப்திலும், மத்திய கிழக்கிலும் ஃபிரான்சின் செல்வாக்கு மிகவும் குன்றியது. இவர் இங்கிலாந்துடன் நட்பு பாராட்டியும் இங்கிலாந்து தனது தன்னலக் கொள்கையினைக் கைவிடவில்லை. இங்கிலாந்தின் வெளித்துறை அமைச்சராக இருந்த பாமர்ஸ்டன் இங்கிலாந்தின் நலனிலேயே பெரிதும் நாட்டம் செலுத்தினார். அரசியல் நுட்பமிக்க அவரது கூற்று, இங்கிலாந்தின் நிலையை நன்கு புலப்படுத்தும். ' நாங்கள் நிரந்தரப் பகைவர்களையோ, நண்பர்களையோ கொண்டவர்கள் அல்லர். பிரிட்டனின் நலன்தான் எங்களுக்கு நிரந்தரமானது '. இத்தகைய தன்னலமிக்க இங்கிலாந்தின் நட்பினால், பிலிப் முற்றிலும் தமது செல்வாக்கினை இழந்தார். தையர் போன்ற ஆதிக்க வெறியர்களும், தேசியவாதிகளும் இவரது வெளிநாட்டுக் கொள்கையை வன்மையாக எதிர்த்தனர். நாட்டுப்பற்று மிக்க ஃபிரெஞ்சு மக்கள் இவரது முதுகெலும்பற்ற வெளிநாட்டுக் கொள்கையினைக் கண்டு பெரிதும் ஆத்திரமுற்றனர்.

### ஸ்பெயினுடன் திருமணத் தொடர்பு

பலமுறை இங்கிலாந்தினால் பெரிதும் இழிவுபடுத்தப்பட்ட லூயி பிலிப், இங்கிலாந்தின் நட்பை முற்றிலும் கைவிட விரும்பவில்லை. மீண்டும் இங்கிலாந்துடன் நட்புறவு பாராட்டவே விரும்பினார். இங்கிலாந்தின் அரசியான விக்டோரியா மகாராணியாரைத் தமது நாட்டிற்கு வருமாறு அழைப்பு விடுத்தார். விக்டோரியா மகாராணியாரும் 1843-லும், 1845-லும் ஃபிரான்சுக்கு விஜயம் செய்து, இவ்விரு நாடுகளின் நட்பினை மேலும் வளர்த்தார். 1844-ல் லூயி பிலிப்பும் இங்கிலாந்து சென்று தமது நட்பினை உறுதிப் படுத்தினார். இவ்விரு நாடுகளும் ஆங்கில-ஃபிரெஞ்சு நட்பு உடன்பாடும் (Anglo-French Entente) செய்துகொண்டன. இதனால், இவ்விரு நாடுகளின் உறவும் மிக்க சீர்பட்டது. ஆயினும், இங்கிலாந்து தனது தன்னலம் பேணும் போக்கினைக் கைவிடவில்லை.

உள்நாட்டில் தமது செல்வாக்கினை உயர்த்திக்கொள்ள லூயி பிலிப் பெரிதும் முயன்ருர். உள்நாட்டுக் குழப்பத்திலிருந்து மக்களது கவனத்தைக் கவர, புகழ் மிக்க வெளிநாட்டுக் கொள்கை யொன்றைப் பின்பற்ற இவர் துணிந்தார். தமது பதவியை மேலும் சிறப்புடையச் செய்யும்பொருட்டு, இவர் பிற ஐரோப்பிய அரச குடும்பங்களுடன் மண உறவு கொள்ள பெரிதும் விரும்பினுர். ஸ்பானிய இளவரசியரான இசெபெல்லாவும், லூசியாவும் மணப் பருவத்தை எய்தியிருந்தனர். இவ்விளவரசியரின் தாயாரான கிறிஸ்டியானுவும் இவ்விரு இளவரசியரையும் ஃபிரெஞ்சு இளவரசர் களுக்கு மணம் முடிக்கப் பெரிதும் விரும்பினுர். லூயி பிலிப்பும் இதனைப் பெரிதும் வரவேற்ருர். ஸ்பானிய இளவரசியைத் தம் மகன் மணந்துகொண்டால் ஸ்பானிய அரியணை தம் மகனுக்குக் கிட்டுமென இவர் கருதியதில் வியப்பேதுமில்லை. அதனுல், இவ்விரு நாடுகளும் ஒன்றுபடும். தமது புகழும் ஓங்குமென இவர் நம்பினுர். திருமண ஏற்பாடுகளிலும் தீவிரமாக இவர் இறங் கினுர். திருமண உறவு காரணமாக, இவ்விரு நாடுகளும் ஒன்று படுவதை இங்கிலாந்து விரும்பவில்லை. இதனுல், வல்லரசுச் சமநிலை பாதிக்கப்படுமென இங்கிலாந்து அச்சம் தெரிவித்தது. 1713-ல் ஏற்பட்ட உட்ரக்ட் உடன்பாட்டினைச் சான்று காட்டி, அதனை வன்மையாக எதிர்த்தது இங்கிலாந்து. இங்கிலாந்தின் எதிர்ப்பையும் புறக்கணித்துவிட்டு, இத் திருமண வேலைகளில் ஈடு பட்டார் மன்னர் லூயி பிலிப். ஸ்பானிய இளவரசி லூசியாவைத் தம் மகன் மாண்ட்பென்சியர் கோமகனுக்குத் திருமணமும் செய்து வைத்தார். இத்துடன் இங்கிலாந்துடனுன இவரது உறவு முற்றிலும் முறிந்தது. ஆயினும், ஃபிரெஞ்சு மக்கள் இதனுல், மகிழ்ச்சியுறவில்லை. ஸ்பானிய மூத்த இளவரசியான இசெபெல்லாவை அரசர் தம் மூத்த மகனுக்குத் திருமணம் செய்து வைக்கவில்லையே என அவர்கள் வருந்தினர். பிலிப் இசெபெல்லாவை ஸ்பானிய பூர்போன் இளவரசரான ஃபிரான்சிஸ் டி அசிஸ்சி என்பாருக்கு மணமுடித்தார். இதனுல், ஃபிரெஞ்சு இளவரசர் ஸ்பானிய அரியணை ஏறும் வாய்ப்பு போய்விட்டது. இதனைக் கண்ட ஃபிரெஞ்சு மக்கள் தங்கள் அரசரின் திறமை யின்மையைக் கண்டு எள்ளி நகையாடினர். லூயி பிலிப் தம் மக்களின் ஆதரவை முற்றிலும் இழந்தார்.

**ஸ்விட்சர்லாந்தில் தலையீடு**

லூயி பிலிப், தமது செல்வாக்கினை மீண்டும் நிலைநாட்டும் பொருட்டு, ஸ்விட்சர்லாந்தின் உள்துறையிலும் தலையிட்டார். வியன்னு மாநாடு ஸ்விஸ் கூட்டமைப்பை உருவாக்கியது ஈண்டு நினைவுகூரத்தக்கது. வியன்னு மாநாட்டுக்குப் பின்னர், அங்கு

உள்நாட்டில் குழப்பம் மிகுந்தது. முற்போக்குவாதிகளுக்கும் பிற்போக்குவாதிகளுக்குமிடையே அங்குக் கருத்து வேறுபாடுகள் மிகுந்தன. இக் கருத்து வேறுபாடுகள் இறுதியில் உள்நாட்டுப் போருக்கு வித்திட்டன. ஏழு கத்தோலிக்க கன்டோன்களும் ஒன்று கூடி, "சொன்டர்பன்ட்" (Sonderbund) என்ற கூட்டணியை நிறுவிக்கொண்டு, அனைத்துச் சீர்திருத்தங்களையும் எதிர்த்தன. 1847-ல் ஸ்விட்ஸர்லாந்தின் கூட்டுச் சட்டமன்றம் (Federal Assembly) 'சொன்டர்பன்ட்' கலைக்கப்பட வேண்டுமென்ற தீர்மானத்தை நிறைவேற்றியது. அதனால், அச்சம் அடைந்த சொன்டர்பன்ட் பிற கத்தோலிக்க நாடுகளை உதவுமாறு வேண்டியது. லூயி பிலிப் மீண்டும் புகழ்பெற வேண்டி பிற்போக்கு கத்தோலிக்க சொன்டர்பன்டை ஆதரித்ததுடன், அப் பிரச்சினைக்குத் தீர்வு காண ஐரோப்பிய மாநாடொன்றும் நடத்தப்படல் வேண்டுமெனவும் வேண்டுகோள் விடுத்தார். உள்நாட்டில் தமது ஆதரவைப் பெருக்கிக்கொள்ளவே இதனைச் செய்தார் லூயி பிலிப். உள் நாட்டில் பெருவாரியானோர் கத்தோலிக்கர்கள். ஆகவே, ஸ்விட்ஸர்லாந்தில் கத்தோலிக்கர்களை ஆதரித்தால், மக்கள் தம்மைப் பெரிதும் ஆதரிப்பாரென்பது இவர்தம் கருத்து.

தொலைநோக்கும், அரசியல் நுட்பமும் அறியாத இம் மன்னர், இங்கிலாந்தின் ஆதரவைப் பெறத் தவறிவிட்டார். செயல்திறனும் அரசியல் சூழ்ச்சியும் மிகுந்த பாமர்ஸ்டன், பிலிப்பின் கொள்கையினை எதிர்த்தார். ஸ்விட்ஸர்லாந்து தனது உள்நாட்டுப் பிரச்சினையைத் தானே தீர்த்துக்கொள்ள வேண்டும்; அதில் அந்நியர் தலையீடு கூடாதெனவும் இவர் எச்சரித்தார். அதே சமயத்தில் அங்குள்ள புராட்டஸ்டண்டுகளுக்கு மறைமுகமாக உதவியதோடு அவர்களை விரைந்து செயலாற்றி வெற்றிபெறவும் தூண்டினார். ஐரோப்பியக் கூட்டணியொன்று அமைவதற்கு முன்னரே அவர்கள் சொன்டர்பன்டினைத் தோற்கடித்தனர். அங்குக் கத்தோலிக்கர்களின் தோல்வி பிலிப்பின் செல்வாக்கினை முற்றிலும் சீர்குலைத்தது. லூயி பிலிப் தமது செல்வாக்கினை முற்றிலும் இழந்து நின்றார். இவரது வீழ்ச்சிக்கு இவரது சிறப்பற்ற வெளிநாட்டுக் கொள்கையும் ஒரு காரணமாகும்.

### இவரது வீழ்ச்சிக்குரிய காரணங்கள்

1848 பிப்ரவரிப் புரட்சியின் விளைவாக, ஜூலை முடியரசு வீழ்த்தப்பட்டது. 18 ஆண்டுகள் பதவியிலிருந்த லூயி பிலிப்பும் பிப்ரவரிப் புரட்சியின் விளைவாகப் பதவி துறந்தார். பல துறைகளில் ஃபிரான்சு சிறப்பெய்தியும், ஜூலை முடியரசின் வீழ்ச்சி, தவிர்க்க

முடியாத ஒன்றானது. அரசரும் கடின உழைப்பாளி; நற்பண்புகள் பல நிறைந்தவர்; பல்வேறு கட்சிகளிருந்த ஃபிரான்சுக்கு இவரது நடுநிலைக் கொள்கையே மிகவும் ஏற்றதாகும். பிலிப்பிற்கு, தையர், குய்சோ (Guizot) போன்ற சிறப்புமிக்க முதலமைச்சர்களும் துணையாய் நின்று பணியாற்றினர். ஃபிரான்சும் பல குடியேற்றங்களைப் பெற்றுச் சிறப்புடன் திகழ்ந்தது. உழவும், தொழிலும் இவர் காலத்தில் சிறப்புற்று விளங்கின. இலக்கியத் துறையிலும் ஃபிரான்சு மிகச் சிறந்து விளங்கியது. ஆயினும், ஜுலை முடியரசு வீழ்ந்தது. அதற்குரிய காரணங்கள் யாவை?

**பிற்போக்கு ஜுலைப் புரட்சி-அதன் செல்வாக்கின்மை**

1830 ஜுலைப் புரட்சியின் விளைவாக, லூயி பிலிப் பதவி யேற்றார். மெய்டி என்ற வரலாற்று வல்லுநர் ஜுலைப் புரட்சியினையே ஒரு பிற்போக்குப் புரட்சி யென்பர்.[1] 1814, 1830 ஆகிய ஆண்டுகளில் வெளியிடப்பட்ட சாசனங்கள் பிற்போக்குச் சாசனங்களாகும். அவை நடுத்தர வகுப்பு மக்களின் நன்மைக்காக ஏற்பட்ட சாசனங்களேயன்றி அனைத்து மக்களின் நலனுக்காக ஏற்பட்டவையல்ல. மக்களாட்சி நிறுவப்படுமென எதிர்பார்த்த குடியரசுக் கட்சியினர், இப்புரட்சியின் விளைவுகளால் பெரிதும் ஏமாந்தனர். 1830 சாசனத்தையும் அவர்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. பொருளாதாரத் துறையில் ஏற்றத் தாழ்வற்ற ஆட்சி கிட்டும் என எதிர்பார்த்த சோசலிஸ்டுகளும் இப்புரட்சியால் பெரிதும் அதிருப்தியடைந்தனர். ஆகவே, அவர்கள் இப்புரட்சிக்குப் பின்னர், பதவிக்கு வந்த லூயி பிலிப்பின் ஆட்சிக் காலத்தில் அமைதியாக இருக்க இயலவில்லை. 1830 ஜுலைப் புரட்சியும் எத்தகைய நல்ல பொருளாதாரக் கொள்கையினையும் கொண்டிருக்க வில்லை. 1830 சாசனமும் நல்ல பொருளாதாரக் கொள்கையை மக்களுக்கு வழங்கவில்லை. 1830 ஜுலைப் புரட்சிக்குப் பின்னரும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்படவில்லை. செல்வர்களின் ஆதிக்கமே அதற்குப் பின்னரும் மேலோங்கி நின்றது. முதலாளி, தொழிலாளிகளுக்கிடையே வேறுபாடுகள், ஏற்றத் தாழ்வுகள் மேலும் மிகுந்தன. தொழிற் சங்கங்கள் மூலம் தொழிலாளர்கள் தங்களுக்குச் சம்பள உயர்வு வேண்டுமெனப் போராடத் தொடங்கினர். தொழிலாளர்கள் தங்கள் பொருளாதார வாழ்வின் காரணமாக, வறுமையில் வாடினர். அவர்களது வறுமையைக் கண்டிரங்கிய பல சோசலிஸ்டு அறிஞர்கள், அவர்களை மாபெரும் ஆற்றல் மிக்க சக்தியாக மாற்றினர். லூயி பிளாங்க் அனைவருக்கும் வேலை வாய்ப்புகள் அளிக்கப்படவேண்டும்,

[1] Maiti—*History of Europe*—p. 295

அனைவருக்கும் வேலை தர தேசியத் தொழிற்சாலைகள் நிறுவப்பட வேண்டுமெனவும் வலியுறுத்தினர். புரௌதன் (Proudhon) போன்றவர்கள் சொத்துரிமையே தவறென வாதாடினர். புரௌதன் என்பார் "சொத்தே ஒரு திருட்டு" (Property in theft) என்றார். அவர்களது வன்முறைப் போக்கினையும், போராட்டத்தையும் தவிர்க்க அரசரும் அவரைச் சார்ந்த உயர்குடியினரும் அடக்குமுறையிலிறங்கினர். பாரிஸ், லியான்ஸ் போன்ற இடங்களில் புரட்சிகள் தோன்றின. தொழிலாளர்களின் உண்மையான தேவைகளைப் புரிந்துகொண்டு அதனை நிறைவேற்ற அரசு தவறி விட்டது. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை அரசு போக்க முனையவில்லை. ஆதலின், பல்லாயிரக் கணக்கான ஏழைத் தொழிலாளர்கள் லூயி பிலிப்பின் ஊழல் மிக்க, ஏற்றத்தாழ்வுகள் மிகுந்த ஆட்சியினை எதிர்த்தனர். சோசலிஸ வளர்ச்சி ஜூலை முடியரசைப் பெரிதும் சீர்குலையச் செய்தது. தொழிலாளர், தங்களுக்கும் வாக்குரிமை வேண்டுமென்று ஒரு பெரும் போராட்டத்தினைத் தொடங்கினர். 1848-ல் நிகழ்ந்த வாக்குரிமைப் போராட்டத்தில் தொழிலாளர்கள் பெருவாரியாகக் கலந்து கொண்டு ஜூலை முடியரசை வீழ்த்தினர்.

முடியரசுக் கட்சியினரும் லூயி பிலிப்பை விரும்பவில்லை. இவர் உரிமையேதுமின்றியே அரசரானவர் (Usurper) என அவர்கள் கருதினர். அவர்கள் 10ஆம் சார்லஸின் பேரனை சேம்போர்டு கோமகனையே முறையான மரபுவழி அரசரெனப் போற்றினர். லூயி பிலிப்பை முறையற்ற அரசரெனத் தூற்றினர். 1848 பிப்ரவரிப் புரட்சியில் இவர்களும் கலந்துகொண்டு லூயி பிலிப்பை வீழ்த்தினர். முடியரசுக் கட்சியினரைப் போன்று, குடியரசுக் கட்சியினரும் லூயி பிலிப்பின் ஆட்சியினை அகற்ற விரும்பினர். 1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், குடியரசை நிறுவ முயன்று தோல்வியுற்ற காரணத்தால், லூயி பிலிப்பின் அரசாட்சியினை வெறுத்தனர். வயது வந்தோரனைவர்க்கும் வாக்குரிமை வேண்டுமென்ற போராட்டத்திற்கு இவர்கள் தலைமை யேற்றனர். 1848 பிப்ரவரிப் புரட்சியே வயது வந்தோரனைவர்க்கும் வாக்குரிமை வேண்டுமென்ற அடிப்படையிலெழுந்த ஒன்றாகும்.

ஃபிரெஞ்சு மக்கள் பெரும்பான்மையோர் கத்தோலிக்கர்கள். அவர்களும் லூயி பிலிப்பின் முற்போக்குக் கொள்கைகளையும் சமயப் பொறையுடைமைக் கொள்கையினையும் விரும்பவில்லை. அரசரின் முறையற்ற, ஊழல் மலிந்த ஆட்சியினைக் கண்டு இவர்களும் வெகுண்டனர். 1840-க்குப் பிறகு, அரசரின் மிக முக்கிய அமைச்சர் குய்சோ என்பவராவார். அவர் ஒரு யூகனோ

என்ற காரணத்தால், மக்கள் அவரை வெறுத்தனர். கத்தோலிக்க மக்களும் அரசரின் வல்லாட்சியினை எதிர்த்தனர். பாராளு மன்றத்திற்கு மிகுதியான அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டு மென்ற போராட்டத்தில் இவர்களும் தீவிரமாகப் பங்கேற்றனர். தேசியவாதிகளும் இவரது ஆட்சியில் மிகவும் சலிப்புற்றனர். தன்மானம் மிக்க அத்தேசியவாதிகள் அரசரின் முதுகெலும்பற்ற வெளிநாட்டுக் கொள்கையினை விரும்பவில்லை. ஒவ்வொரு முறையும் பிலிப் இங்கிலாந்துக்குப் பணிந்துபோவதைக் கண்டு இவர்கள் மிகவும் ஆத்திரமுற்றனர். தங்கள் தாயகம் மீண்டும் ஐரோப்பிய அரங்கில் சிறப்புற்றுத் திகழவேண்டுமென அவர்க்ள் பெரிதும் விரும்பினர். 1839-ல் அரசர், தையரைப் பதவியிலிருந்து விலக்கி இங்கிலாந்துடன் அமைதி உடன்பாடொன்று செய்துகொண்ட தையும் கண்டு, இவர்கள் சீற்றம் மிகக் கொண்டனர். தையர், தேசியவாதிகளுக்குத் தலைமையேற்று 1848-ல் புரட்சி செய்து முடியரசை அகற்றி, குடியரசை நிறுவினர். ஜூலை முடியரசின் வீழ்ச்சிக்குத் தேசியவாதிகளும் காரணமாவர்.

அடுத்து, ஃபிரெஞ்சு அரசியலில் மிக்க செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தவர்கள் சீர்திருத்தவாதிகளாவர். அவர்களும் பிலிப்பின் ஆட்சியினைத் தூற்றினர். அவர்கள் வேண்டிய மிகச் சாதாரண சீர்திருத்தங்களுக்குக்கூட, அரசர் செவிசாய்க்க மறுத்தார். குய்சோ அவர்களை ஒருபொருட்டாகவே மதிக்கவில்லை. அவர்கள் வேண்டிய வாக்குரிமை, சீர்திருத்தம், ஊழல் ஒழிப்பு, நேர்மையான நிர்வாகம் போன்றவற்றைக்கூட, குய்சோ ஏற்க மறுத்தார். குய்சோவின் பிடிவாதமும், ஊழலும், பிற்போக்குத் தன்மையும் சீர்திருத்தவாதிகளின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைநின்றன. அரசரும் நிர்வாகத்தின் திறமையையோ மாற்றத்தையோ புகுத்த முன்வரவில்லை. அவர்கள் நல்லாட்சி வேண்டுமெனப் போராடிய போது அவர்கள்மீது படையினரை ஏவினர் அரசரும் அவரது அமைச்சரும். இப்போராட்டமே பெரிய முறையில் வளர்ந்து புரட்சியாக மாறியது.

**நெப்போலியனின் புகழ் பரவுதல்**

தமது புகழையும் செல்வாக்கினையும் பெருக்கிக்கொள்வதற்காக லூயி பிலிப், நெப்போலியனின் புகழ் பரவுவதைப் பெரிதும் ஆதரித்தார். முதலாம் நெப்போலியன், ஃபிரான்சின் தலைசிறந்த தலைவர், மாபெரும் படைத்தலைவர், மாபெரும் கட்சியாளர் என் றெல்லாம் போற்றப்பட்டார் அவரது குற்றங்களும், குறைகளும் மறைக்கப்பட்டன. அவரது வெற்றிகளும், சீர்திருத்தங்களும்

மிகவும் பெரிதுபடுத்தப்பட்டுப் பாராட்டப்பட்டன. விக்டர் யூகோ போன்ற அறிஞர்களும், புலவர்களும், பிறரும் இவரது புகழைப் பெரிதும் பரப்பினர். பாரிஸ் நகரத் தெருக்கள் பலவற்றுக்கும் இவரது சிறப்புமிக்க போர்க்களங்களின் பெயர்கள் சூட்டப்பட்டன 1840-ல் இவரது அஸ்தியும் செயின்ட் ஹெலினுவிலிருந்து அரசு மரியாதைகளுடன் ஃபிரான்சுக்குக் கொண்டுவரப்பட்டு ஹோட்டல்-டி-இன்வேலிடே (Hotel-de-Invalides) என்ற இடத்தில் அடக்கம் செய்யப்பட்டது. அவரது வெற்றிகளின் நினைவாக "ஆர்ச்-டி-டிரிம்பே" என்ற நினைவாலயமும் நிறுவப்பட்டது. அவரது வீரம் செறிந்த போர்க்களங்களின் காட்சிகள் பல, வெர்சாய் அரண்மனையிலும் தீட்டப்பெற்றன. இவற்றுல் முதலாம் நெப்போலியனின் புகழ் நாடெங்கும் பரவியது.

முதலாம் நெப்போலியனின் புகழைப் பரப்பியது லூயி பிலிப் செய்த மாபெரும் தவருகும். இதன் விளைவாக இவரே இவரது ஆட்சிக்கு எதிர்ப்பு வளரத் துணை நின்றுர். முதலாம் நெப்போலியனின் ஒன்றுவிட்ட சகோதரரான லூயி நெப்போலியன், மக்களிடையே மிகுதியும் செல்வாக்கு பெற இவரது செயல்கள பெரிதும் துணையாய் நின்றன. லூயி நெப்போலியன் மீண்டும் முதலாம் நெப்போலியன் போன்று ஒரு பெரும் பேரரசை அமைக்கவேண்டுமெனக் கனவு கண்டுகொண்டிருந்தபோது, பிலிப்பின் செயல்கள் அனைத்தும் அவருக்கு ஊக்கமளிப்பனவாய் அமைந்தன. 1836-லும் 1840-லும் லூயி பிலிப்பின் ஆட்சியினை எதிர்த்து இவர் புரட்சியிலீடுபட்டார். அதற்காகக் கைது செய்யப்பட்டு, சிறையிலும் அடைக்கப்பட்டார். சிறையிலிருந்து தப்பியோடிய இவர் லண்டனுக்குச் சென்று அங்கு மீண்டும் முதலாம் நெப்போலியனின் புகழைப் பரப்பி, அதன்மூலம் ஃபிரெஞ்சு அரசைக் கவரும் பெருமுயற்சியிலும் ஈடுபடலானுர். மக்களும் முதலாம் நெப்போலியனின் சிறப்பான ஆட்சியினையும் அவரது சிறப்பு மிக்க வெற்றிகளையும் நினைந்து அவர் புகழ்பாடத் தொடங்கினர். அவர் போன்ற பேரரசர் மீண்டும் ஃபிரெஞ்சு அரியணையிலேற வேண்டும் என மக்கள் பெரிதும் விரும்பினர். அதனை நன்கு பயன்படுத்தி லூயி நெப்போலியனும் ஃபிரான்சின் பேரரசரானுர். முதலாம் நெப்போலியனின் புகழைப் பரப்பியதும் இவர் செய்த தவறுகளில் ஒன்ருகும். இதுவே, அவரது வீழ்ச்சிக்கும் வழிவகுத்ததெனில் மிகையாகாது.

**இவரது சிறப்பற்ற வெளிநாட்டுக் கொள்கை**

லூயி பிலிப், அமைதியில் மிக்க நாட்டம் கொண்டவர். எவ்வாறேனும் அமைதியை நிலைநாட்ட வேண்டும் என்பதே இவர் தம் கொள்கையாகும். இதனுல், இவரது வெளிநாட்டுக் கொள்கையில்

வீர, தீரத்திற்கோ, சிறப்பிற்கோ வாய்ப்பில்லாமற் போய்விட்டது. 1830-ல் பெல்ஜிய மக்கள் புரட்சி செய்தபோது, லூயி பிலிப், அவர்களுக்குத் தக்க துணையாய் நின்றுதவினர். அம்மக்கள் விடுதலை பெற்றபோது இவர் அகமகிழ்ந்தார். பெல்ஜிய அரியணையும் தன் மகனுக்குக் கிட்டும் வாய்ப்பினைக் கண்டு இறும்பூதெய்தினர். இவர் மகன் நெமோர்க் கோமகன் பெல்ஜிய அரியணையைப் பெறும் வாய்ப்பினைப் பெறுந் தருவாயில், இங்கிலாந்து அதனை எதிர்த்தது. இங்கிலாந்தினைக் கண்டஞ்சிய இவரும் அவ்வாய்ப்பினை நழுவ விட்டார். இங்கிலாந்துக்குப் பணிந்து போனதால், இவரது செல்வாக்கும், புகழும் வெகுவாகக் குன்றியது.

கிழக்குப் பிரச்சினையில் இவரது செல்வாக்கு மேலும் குன்றியது. அல்ஜியர்ஸ், மடகாஸ்கர் போன்ற இடங்களில் குடியேற்றங்களை நிறுவுவதில் வெற்றிகண்ட மன்னர், தமது செல்வாக்கினை எகிப்திலும் நிலைநாட்ட விரும்பினர். எகிப்திய சுல்தான் முகமது அலி துருக்கிக்கு உட்பட்ட சிரியாவைக் கைப் பற்றியபோது, பிலிப் மன்னர் அவரை ஆதரித்தார். எகிப்தில் ஃபிரெஞ்சு ஆதிக்கத்தினை விரும்பாத இங்கிலாந்தும், ரஷ்யாவும் பிரஷ்யாவும் கூட்டணியொன்றை நிறுவி, இவரை எச்சரித்தபோது இவர் மிக அஞ்சினர். இக்கூட்டணி நாடுகள் லண்டன் மாநாடு ஒன்றினைக் கூட்டி, முகமது அலி, சிரியாவை விட்டு வெளியேற வேண்டும் என எச்சரித்தபோது முகமது அலி ஃபிரெஞ்சுத் துணையை நாடினர். பிலிப் மன்னர், முகமது அலிக்குத் துணை புரியவும் மறுத்தார். இதனல், முகமது அலி சிரியாவை விட்டு, வெளியேற நேர்ந்தது. கிழக்குப் பிரச்சினையில் தங்களது இழந்த செல்வாக்கினை மீண்டும் நிலைநாட்ட விரும்பிய தேசியவாதிகள் அரசரின் செயலால் பெரிதும் அதிருப்தியும் ஏமாற்றமும் உற்றனர். இங்கிலாந்துக்கு அஞ்சி ஒவ்வொரு முறையும் தங்களது அரசர் பணிந்துபோவது தன்மானம் மிக்க ஃபிரெஞ்சு மக்களுக்கு அவமானமாகப்பட்டது. அரசரின் செயல்களால் அவர்கள பெரிதும் குனறிப்போயினர். ஜூலை முடியரசு தொடர்ந்து பதவியிலிருந்தால் தங்களது நாடு மீண்டும ஐரோப்பிய அரங்கில் புகழ்பெறுவது அரிதென நன்குணர்ந்த அம்மக்கள், 1848-ல் அவ் வரசைக் கவிழ்த்தனர்.

போலந்து, இத்தாலி, ஸ்விட்ஸர்லாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில் 1830-ல் புரட்சியேற்பட்டபோது இவர் அப்புரட்சிகளில் ஆர்வம் காட்டவில்லை. அப்புரட்சிகளின்போது இவர் நடுநிலைக் கொள்கையைப் பின்பற்றியதால், அந்நாடுகளில் புரட்சிகள் ஒடுக்கப்பட்டன. புகழ் மிக்க வெளிநாட்டுக் கொள்கையினை எதிர்

பார்த்த ஃபிரெஞ்சு மக்கள், இவரது முதுகெலும்பற்ற வெளிநாட்டுக் கொள்கையில் பெரிதும் ஏமாற்றமுற்றனர். அமைதியைக் காப்பதற்காகப் பாராளுமன்றங்கள் பலவற்றையும் இவர் கலைத்தார். இவரது ஆட்சியில் மக்கள் ஊக்கமிழந்தனர். தொழிலாளர்கள் பெரிதும் ஏமாற்றமடைந்தனர். லாமார்டின் கூறுவதுபோல இவரது வெளிநாட்டுக் கொள்கையும் மக்களைப் பெரிதும் சலிப்படையச் செய்தது. அனைவர்க்கும் வாக்குரிமை யென்ற அடிப்படையில் போராடிப் புரட்சி செய்து மக்கள் இவரது ஆட்சியை வீழ்த்தினர்.

**தன்னாட்சி நிறுவும் முயற்சி**

வெளித்தோற்றத்தில் லூயி பிலிப், மக்களாட்சியினையும் மக்கள் உரிமைகளையும் பெரிதும் மதிப்பவராய்த் தோன்றினார். ஆயினும், உள்ளத்தில் இவர் அதிகாரங்களையும், தன்னாட்சியினையும் பெரிதும் விரும்பினார். இவர் அரசியலமைப்பு என்ற போர்வையில் வல்லாட்சியாளராய்த் திகழ்ந்தார். ஆகவேதான், இவர் தம்முடைய அமைச்சர்களனைவரும் தம் விருப்பப்படியே இயங்கவேண்டுமென எதிர்பார்த்தார். இவருடைய அமைச்சர்கள் தம்மைக் கட்டுப் படுத்துவதைப் பெரிதும் வெறுத்தார்.

அமைச்சரவைக் கூட்டங்களனைத்திற்கும் இவரே தலைமையும் ஏற்று நடத்தினார். வரம்புக்குட்பட்ட மக்களாட்சி என்ற பெயரில் தன்னாட்சியே புரிந்தார் இவர். தமது விருப்பத்திற்கு மாறாக இயங்கிய அனைத்து அமைச்சர்களையும் இவர் தயங்காது நீக்கினார். 1839-ல் கிழக்குப் பிரச்சினையில் தம்மை எதிர்த்துச் செயலாற்றிய தம்முடைய தலைமையமைச்சரான தையரைப் பதவியிலிருந்து நீக்கினார். இவர் 1830-லிருந்து 1840-க்குட்பட்ட 10 ஆண்டுகளில் பத்து அமைச்சரவைகளைக் கலைத்தார். இவரது தன்னாட்சிக்கு இதுவே நல்ல சான்று பகரும். தையர் விலக்கப்பட்ட பின்னர், குய்சோ என்பார் 1840-ல் இவர்தம் தலைமையமைச்சரானார். குய்சோ, புரட்சியால் அரச உரிமைகள் பறிபோய்விடவில்லை என இயம்பினார். அரசர் சிறப்புற்றுத் திகழ இவர் அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார். அவர்களே இவர் காலத்தில் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். இவர்தம் பாராளுமன்றமும் இவரது கைப்பாவையாகவே திகழ்ந்தது. பாராளுமன்ற ஆட்சியென்பதே நகைப்பிற்கிடமானது. ஊழல் மிக்க பாராளுமன்றமும் மக்களுக்காகச் செயல்படவில்லை. கீழவை உறுப்பினர்கள் 200 பேர்களில் 100 பேருக்கு மேல் பல பதவிகளைப் பெற்றனர். ஆகவே, வரலாற்று வல்லுநர்கள பலர் கருதுவது போன்று பராளுமன்றமென்பதே ஒரு கடைத்தெருவாக மாறியது. ஒவ்வொருவரும் தனக்குத் தேவையான பதவியினைப் பெறும் சந்தையாகப் பாராளுமன்றம்

மாறிவிட்டதென்பர் ஹேசன் என்ற வரலாற்று வல்லுநர்.[1] நுண்ணுணர்வும், தன்மானமும் மிக்க ஃபிரெஞ்சு மக்கள் இவ் ஆழலாட்சியினை வெறுத்ததில் வியப்பேதுமில்லை.

**ஜூலைப் புரட்சி கொண்டிருந்த சில குறைபாடுகள்**

ஜூலை முடியரசு குழப்பமிக்க ஒன்றாகும். அது திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட ஒன்றல்ல. அது பூர்போன் அரசு போன்று வரம்பற்ற முடியரசல்ல. அதே போன்று, இங்கிலாந்தரசு போன்ற வரம்புக்குட்பட்ட முடியரசுமல்ல. ஏனெனில், இம்முடியரசில் பாராளுமன்றம் முழு அதிகாரங்களையும் பெற்றுத் திகழவில்லை. முழு அதிகாரங்களும் இவ் வரசியலமைப்புப்படி பாராளு மன்றத்திற்கு வழங்கப்படவில்லை. இவ்வரசியலமைப்புப்படி அனை வருக்கும் வாக்குரிமை நல்கப்படவில்லை. அதனால், அங்கு உண்மையான மக்களாட்சி செயல்பட்டதெனக் கூறுவதற்கில்லை. ஆகவே, ஜூலை முடியரசு வரம்பற்ற வல்லாட்சிக்கும் அரசிய லமைப்புக்குட்பட்ட முடியரசிற்கும் இடைப்பட்ட ஒன்றாகும். அது அவ்விரண்டின் கூட்டுக் கலவையெனினும் மிகையாகாது[2]. இறைமை மக்களுக்கோ அல்லது அரசருக்கோ வழங்கப்பட வில்லை. அவ்விரு சாராருமே அதனைப் பெற முயன்றதால், குழப்பம் விளைந்தது. மரபுவழிக் கட்சியினர் (Legitimists) இதனைத் தவறான முறையில் வந்த அரசு என்றும், குடியரசுக் கட்சியினர் இதனை மக்களாட்சிக்கு மாறுபட்டவொன்று என்றும் பழித்துரைத்தனர்.

ஜூலை முடியரசு 97·2 சத மக்களுக்கு வாக்குரிமை வழங்க மறுத்தது. இவ்வடிப்படையில் நோக்கினால், 97·2 சத மக்களுக்கும் ஜூலை முடியரசுக்கும் எத்தகைய தொடர்புமில்லை என்பது நன்கு புலனாகும். மக்களிடையே ஆதரவைப் பெறாதது போலவே இம் முடியரசு பாராளுமன்றத்தின் முழு ஆதரவையும் பெறவில்லை. இவர் தேர்ந்து எடுக்கப்பட்டபோது, 430 உறுப்பினர்களில் 252 பேர்களே வந்திருந்தனர். வந்திருந்த 252 உறுப்பினர்களில் (Deputies) 219 பேர்களே இவருக்கு வாக்களித்தனர். ஆகவே, லூயி பிலிப், பெருவாரியான பாராளுமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரென்றும் கூறுவதற்கில்லை. இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், வாக்கெடுப்பு மூலம் மக்களின் ஒப்புதலைப் பெறவும் இவர் தவறிவிட்டார். ஆதலின், இவரது முடியரசு சட்ட ரீதிக்குட்பட்டதன்று எனபர் பலர். இவ்வளவு

[1] Hazen–P. 125.

[2] Fisher—*History of Europe.* p. 904.

குறைகளையும் இவர் திறமை மிக்கவராய், அரசியல் நுட்பமிக்கவராய், இருந்திருப்பின் நிறைவு செய்திருக்கமுடியும். ஆயினும், இவர் பல்லோரையும் கவர்ந்தீர்க்கவல்ல தோற்றமுடையவரோ, ஆழ்ந்து கற்றவரோ, ஆற்றல் மிகு படைத் தலைவரோ அல்லர். மக்களைக் கவரும் எவ்விதப் பண்பு நலனும் இவர் பெற்றிருக்கவில்லை. "வெற்று வேதாந்தங்களின் அடிப்படையில் இவரது அதிகாரங்கள் அடங்கியுள்ளன. இவரது அரியணையும் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட வலுவுள்ள ஒன்றல்ல. அது மரபு வழி வந்த இறையுரிமைக் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்ததுமல்ல. அது மக்கள் ஆதரவும் இராணுவப் புகழுமற்றது" என்பது இவரது அரசுபற்றி மெட்டர்னிக்கின் கூற்றாகும். இது நடுத்தர மக்களின் ஆதரவைப் பெற்றது. பிற மக்களின் ஆதரவைப் பெறாத இவ்வரசு 1848-ல் எளிதாக வீழ்ந்துபட்டதில் வியப்பேதுமில்லை.

**சீர்திருத்தங்களுக்கான போராட்டங்கள்**

நடுத்தர வகுப்பினர், மிதவாதிகள் போன்றோரின் ஆதரவில் பிலிப் பதவிக்கு வந்தார். உயர்குடியினரும், நடுத்தர வகுப்பைச் சார்ந்த செல்வ வணிகர்களும் தங்களது செல்வத்தைக் கொண்டு தேர்தலைத் தங்களுக்கேற்ப மாற்றிக்கொண்டு, வெற்றி பெற்றனர். எங்கும் ஊழலும், திறமையின்மையும், பதவிக்காக அனைத்தையும் விட்டுக்கொடுக்கும் தன்மையும் மலிந்துகிடந்தன. இவற்றை யெல்லாம் கண்ட லாமார்ட்டின் (Lamartine), பராட் (Barrot) போன்ற முற்போக்கினர் பாராளுமன்றச் சீர்திருத்தங்களுக்காகப் போராடத் தலைப்பட்டனர். தொழிற் புரட்சியின் விளைவாக சமுதாயத்தில் தொழிலாளர்கள் மிகச் சுரண்டப்பட்டு இவர்கள் வறுமையிலும் வாடினர். அவர்கள் நகர்ப்புறச் சேரிகளில் விலங்கு களைப் போன்று இரங்கற்குரிய வாழ்வு நடத்தினர். மனித உளங் கொண்ட பல சீர்திருத்தவாதிகள் அவர்கள்பால் பெரிதும் இரக்கம் கொண்டனர். வறுமை, நோய், சாக்காடு இம் மூன்றினையும் தவிர, வேறெதையுமறியாத அவ்வறிய மக்களுக்குத் துணைபுரியவும் அவர்கள் முன்வந்தனர். லூயி செயின்ட் சைமன், லூயி பிளாங்க், போரியர் போன்ற சோசலிஸ்டுத் தலைவர்கள் அவர்களுக்கும் வாக்குரிமை நல்கப்படல் வேண்டும். அவர்களும் பாராளுமன்றத்திற்கு வந்து தங்கள் உரிமைகளுக்காகப் போராடும் உரிமை பெற வேண்டும் என்றியம்பினர். பிற்போக்கு மிக்க முதலமைச்சரான குய்சோ, பதவி விலக வேண்டுமெனவும் அவர்கள் வலியுறுத்தினர். அரண்மனையாள்கள் (Palace men) அரசியலில் தலையிடக்கூடாது. வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை தரவேண்டுமெனவும் அவர்கள் போராடினர். சீர்திருத்தக் கூட்டங்கள் மூலமும்

விருந்துகள் மூலமும் அவர்கள் தங்கள் கருத்துகளை மக்களிடையே பரப்பினர்.

பிடிவாதப் போக்கும் ஆணவமும் செருக்கும் மிகுந்த குய்சோ, சீர்திருத்த கூட்டங்களனைத்திற்கும் தடை விதித்தார். இதனைத் தொழிலாளர்களும். சீர்திருத்தவாதிகளும் மீறியதால், நிலைமை மோசமடைந்தது. 1848 பிப்ரவரி மாதம், 22ஆம் நாளில் நிகழவிருந்த சீர்திருத்தக் கூட்டமொன்றை அரசு தடை செய்தது. தொழிலாளர்களும், மாணவர்களும் அதனை மீறி, கூட்டங்கள் கூட்டினர். தடையுத்தரவை மீறியவர்களைப் படைவீரர்கள் சுட்ட போது புரட்சி தொடங்கியது.

### 1848 பிப்ரவரிப் புரட்சி

அனைவர்க்கும் வாக்குரிமை அளிக்கப்பட வேண்டுமென்று எளிய முறையில் தொடங்கப்பட்ட கிளர்ச்சி, பெரும் புரட்சியாக மாறியது. 1848ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள், 22ஆம் நாள் முற்போக்குவாதிகள் தேர்தல் விருந்தொன்றை நடத்த முடிவு செய்தனர் அதில் பாராளுமன்றக் கீழவை உறுப்பினர்கள் பலர் கலந்துகொள்ள ஒப்புதலளித்திருந்தனர். லூயி பிலிப் அக்கூட்டத்திற்குத் தடை செய்திருந்தார். பாரிஸ் தெருக்களிலெல்லாம் படை வீரர்கள் நிறுத்தப்பட்டிருந்தனர். தேர்தல் விருந்துக்கான ஆயத்தங்களும் செய்யப்பட்டன. அவர்களைத் தடுப்பதற்காக அனுப்பப்பட்ட தேசியப் பாதுகாப்புப் படை அவர்களுடன் சேர்ந்து கொண்டு "சீர்திருத்தம் நீடூழி வாழ்க" என முழக்கமிட்டது. முற்போக்குவாதிகளும், தேசியப் படைகளும் குய்சோ பதவி விலக வேண்டுமெனக் கூக்குரலிட்டனர். அரசரும் நிலைமையைப் புரிந்து கொண்டு குய்சோவைப் பதவி விலக்கினுர். குய்சோ, பதவி நீக்கம் செய்யப்பட்டதை அறிந்த பாரிஸ் மக்கள் பெரிதும் மகிழ்ந்தனர். அந்நகரமே விழாக் கோலம் பூண்டது.

குடியரசினர் இவ்வாய்ப்பினை ஒரு புரட்சிக்காகப் பயன் படுத்திக்கொள்ளப் பெரிதும் விழைந்தனர். 1848 பிப்ரவரித் திங்கள், 23ஆம் நாள் பாரிஸ் நகர மக்களுடன் சேர்ந்துகொண்டு குழப்பம் விளைவித்தனர். முடியரசை அகற்றிக் குடியரசை நிறுவுமாறு மக்களைத் தூண்டினர். பிப்ரவரித் திங்கள் 23ஆம் நாள் பெருங் கூட்டமொன்று குய்சோவின் இல்லத்தினைத் தாக்கியது அவ்வில்லத்தின் பாதுகாப்புக்காக நிறுத்தப்பட்டிருந்த படை, கூட்டத்தை நோக்கிச் சுட்டது. நிலைமையைக் கட்டுப்படுத்துவதற்காக வீரர்கள் சுட நேரிட்டது. அதன் விளைவாக 23 பேர்கள் இறந்ததோடு 630 பேருக்குமேல் காயமுற்றனர். முற்போக்கினரும்

குடியரசுக் கட்சியினரும் இறந்தோரை வண்டியில் வைத்து அலங்கரித்து ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். 10ஆம் சார்லஸ் போன்று லூயி பிலிப்பும் எங்களைக் கொன்று குவிக்கிறார் இவரும் 10ஆம் சார்லஸிடம் போய்ச் சேரட்டும் எனக் கூக்குர லிட்டனர். இக்கூக்குரல் மாபெரும் புரட்சியாக உருவெடுத்தது.

குடியரசுக் கட்சியினர் அனைவரும் ஒன்று திரண்டு "குடியரசு நீடூழி வாழ்க" எனப் பாரிஸ் நகரெங்கும் கூவி, குழப்பம் விளை வித்தனர். பிப்ரவரி 24ஆம் நாள் பெரும் புரட்சியொன்று ஏற்பட்டது. புரட்சியை அடக்க ஏவப்பட்ட படையும் அவர்களுடன் சேர்ந்துகொண்டது. 75 வயது நிரம்பிய அரசர் புரட்சியாளர் களுடன் போராடத் துணியவில்லை. மீண்டும் தையர் என்பாரை முதலமைச்சராக்கினார். காலங்கடந்த இந்நிகழ்ச்சியால் பயன் ஏதும் விளையவில்லை. பிப்ரவரி 24ஆம் நாள் தம்முடைய பேரனிடம் அரசை ஒப்புவித்துவிட்டு, இவர் முடி துறந்தார். பின்னர், தம்முடைய குடும்பத்துடன் இங்கிலாந்து சென்றார்.

பிலிப், முடி துறந்தவுடன் அவருடைய மருமகளான ஆர்லியன்ஸ் கோமகள் தம்முடைய மகனுடன் பாராளுமன்றத் திற்கு வந்து தம் மகனை (பிலிப்பின் பேரன்) அரசராக அங்கீ கரிக்கும்படி வேண்டினார். பாராளுமன்றத்திலிருந்த பெரும் பாலான உறுப்பினர்கள் முற்போக்குவாதிகளாயினும் அவரது வேண்டுகோளை ஏற்று, பிலிப்பின் பேரனை அரசராக அங்கீகரித் தனர். அதன் பின்னர், குடியரசுக் கட்சியினர் பாராளுமன்றத்தில் நுழைந்து, வன்முறையில் ஈடுபட்டு அதனைக் கைப்பற்றினர். முடியரசு அகற்றப்பட்டதென அறிவித்தனர். எழுவர் தலைமையில் தாற்காலிக அரசு ஒன்றினையும் நிறுவினர். ஃபிரான்சில் இரண் டாவது குடியரசும் நிறுவப்பட்டது.

குடியரசுக் கட்சியினரின் வெற்றியை, சோசலிஸ்டுகள் விரும்ப வில்லை. அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து பாராளுமன்றத் தைக் கைப்பற்ற முனைந்தனர். ஆயினும், பாராளுமன்றத்தை அவர்களால் கைப்பற்ற முடியவில்லை. அருகிலிருந்த தங்களது தலைமைச் செயலகமான ஹோட்டல்-டி-வில்லா (Hotel-De-Villa) என்ற இடத்தில் கூடி, தங்களது திட்டம்பற்றி விவாதித்தனர். அவர்களும் ஃபிரான்சு ஒரு குடியரசாக இருப்பதையே விரும்பினர். ஃபிரான்சை ஒரு குடியரசெனப் பிரகடனப்படுத்தினர். அதனை ஆள்வதற்கும் 10 பேர்கள் கொண்ட ஆட்சிக் குழு ஒன்றினையும் அமைத்தனர். அதில் குடியரசுக் கட்சியினர் நியமித்திருந்த எழுவருமிருந்தனர். அதனையறிந்த குடியரசுக்

கட்சியினர் மகிழ்ந்து சோசலிஸ்டுக் கட்சியுடன் இணைந்து செயலாற்ற முன்வந்தனர். இரண்டாவது குடியரசும் இவர்களின் ஒத்துழைப்பால் 1848-லிருந்து, 1852 வரை பணியாற்றியது. 1852-ல் லூயி நெப்போலியன் இரண்டாவது குடியரசினைக் கவிழ்த்து விட்டு, முடியரசையும் நிறுவினர். முற்போக்கினர் பிப்ரவரிப் புரட்சிக்கான விதைகளை விதைத்தனர். குடியரசுக் கட்சியினரும், சோசலிஸ்டுகளும் அந்த விதையை நீரூற்றி வளர்த்தனர். போனபார்ட்டுகள் அதனை அறுவடை செய்து பயனுற்றனர்.

இப் புரட்சியினை ஹேசன் என்ற வரலாற்று வல்லுநர் இது ஓர் எதிர்பாராத புரட்சியென்பர். சீர்திருத்தம் வேண்டுமென்று தொடங்கப்பட்ட இப் போராட்டம் தற்செயலாகப் புரட்சியாக மாறியது. இதனை யாரும் எதிர்பார்க்கவுமில்லை. அரசரோ அல்லது அவர்தம் தலைமையமைச்சரான குய்சோவோ சற்று தொலைநோக்குடனும், பெருந் தன்மையுடனும் செயல்பட்டிருந் தால், இப் புரட்சியினைத் தவிர்த்திருக்கலாம். தன்னலமும், வல்லாட்சியில் நம்பிக்கையும் மிக்க அரசர், மக்கள் குறையினைப் புரிந்துகொள்ளுதல் எளிதன்று. மக்கள் போராட்டம் மூன்றே நாள்களில் மாபெரும் புரட்சியாக மாறி முடியரசையும் அகற்றியது. ஃபிரான்சும் ஒரு சோசலிஸக் குடியரசாக மாறியது.

**இப் புரட்சியின் விளைவுகள்**

1848ஆம் ஆண்டு, பிப்ரவரிப் புரட்சியின் விளைவுகள் ஆராயத் தக்கன. இதன் விளைவுகள் புரட்சித் தன்மை மிக்கவை, (1) வயது வந்த அனைவர்க்கும் வாக்குரிமை, சீர்திருத்தமெனத் தொடங்கிய இம் மக்கள் போராட்டம் இறுதியில் ஃபிரான்சில் ஒரு சோசலிஸக் குடியரசை நிறுவியது. உயர்குடி மக்கள், நடுத்தர வகுப்பு மக்கள் ஆதரவை மட்டும் நம்பி ஓர் அரசு செயல்பட முடியாதென்பதற்கு இப் புரட்சியே நல்லதொரு சான்றாகும். நடுத்தர வகுப்பினராட்சி இப் புரட்சியால் அகற்றப்பட்டது. (2) இப் புரட்சி வாக்குரிமையை மேலும் சற்று பரவலாக்கியது. இதுகாறும் 2½ லட்சம் மக்கள் மட்டுமே வாக்குரிமை பெற்றிருந் தனர். இப் புரட்சியின் விளைவாக 90 லட்சம் மக்கள் வாக்குரிமை பெற்றனர். இது அங்கு உண்மையான மக்களாட்சிக்கு வித்திட்டது. (3) இப் புரட்சி அடிமை முறையினையும் அகற்றியது. 5 லட்சத் துக்கும் மேற்பட்ட அடிமைகள் இப் புரட்சியால் விடுதலை பெற்றனர். அவ்வடிமைகள் இப் புரட்சியால் தங்கள் வாழ்வில் ஒரு மறு மலர்ச்சியினையும் புத்துணர்வையும் பெற்றனர். (4) இப் புரட்சி ஃபிரான்சில் சோசலிஸக் குடியரசொன்றினை நிறுவியது. தேசியத் தொழிற்சாலைகள் பலவும் நிறுவப்பட்டு வேலையற்றோர்க்கு வேலை

வாய்ப்புகள் நல்கப்பட்டன. இப் புரட்சி சோசலிஸத்தினை நடைமுறைக்குக் கொணர பெரு முயற்சி எடுத்துக்கொண்டது. தனது செயல்களால் இது தன்னை ஓர் உண்மையான சோசலிஸக் குடியரசெனவும் நிருபித்தது. (5) இப் புரட்சி உயர்குடி மக்கள், வணிகர்கள், நடுத்தர வகுப்பினர் அனைவரின் சிறப்புரிமைகளை அகற்றி ஏழைப் பாட்டாளி மக்களுக்கு அரசியலில் நல்லதொரு வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தது. உண்மையான குடியரசு மலர இப் புரட்சி வித்திட்டதெனில் மிகையாகாது. (6) இப் புரட்சி பிற நாடுகளிலும் புரட்சியினை ஊக்குவித்தது. அதன் மூலம் ஐரோப்பிய அரசியல், சமூக, பொருளாதார வாழ்வில் மாபெரும் மாற்றங்களுக்கு வழிவகுத்தது. 1815-ல் மெட்டர்னிக்கும் பிறரும் உருவாக்கிய வியன்னு முறை இப் புரட்சியால் முற்றிலும் தகர்ந்தது. சுருங்கக் கூறின், புதிய ஐரோப்பா ஒன்று உருவாவதற்கு இப் புரட்சியே அடிப்படையாய் அமைந்தது.

**1848-ல் பிற நாடுகளில் புரட்சி**

1815-லிருந்து, 1848 வரைக்குட்பட்ட காலம் ஐரோப்பிய வரலாற்றில் சிறப்புமிக்கது. இக் கால கட்டத்தில் புதிய கருத்துகளும் பழைய கருத்துகளும் மோதிக்கொண்டன. அம்மோதல் காரணமாக, ஐரோப்பா அமைதியிழந்து காட்சி தந்தது. அம் மோதல்கள் காரணமாகவும் புரட்சிகள் பல ஏற்பட்டன. அம் மோதல்களுக்குரிய காரணங்கள் பல.

பத்தொன்பதாம் நூற்றுண்டில் ஐரோப்பாவில் பல மாறுதல்கள் தோன்றின. அங்குத் தோன்றிய தொழிற் புரட்சியும், உழவுப் புரட்சியும் ஐரோப்பிய சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் பெரும் மாறுதல்களை ஏற்படுத்தின. புதிய தொழிற் சாலைகள், இருப்புப்பாதைகள், மக்கள் தொகைப் பெருக்கம் போன்றவை நிலமானிய ஐரோப்பிய சமுதாயத்தை மாற்றி, மூலதன ஐரோப்பாவாக ஆக்கின. இதனுல், நடுத்தர வகுப்பினரும், வணிகர்களும் சிறப்பு பெறத் தொடங்கினர். அவர்களுடன் தொழிலாளர்களும், தங்களுக்கும் அத்தகைய உரிமைகள் வேண்டுமெனப் போராடத் தொடங்கினர். உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் போன்ற கொள்கைகளை அப் பாட்டாளி மக்கள் பெரிதும் வரவேற்றனர். இதனுல், ஐரோப்பாவில் ஒரு தொழிலாளர் இயக்கம் வலுப்பெற்றது.

17, 18 ஆம் நூற்றுண்டுகளில் அரசியல் என்பதே உயர்குடியினரின் பொழுது போக்காக இருந்தது. சாதாரண மக்களுக்கு அரசியலில் வாய்ப்பே இல்லாமலிருந்தது. தங்களது குறைகளைக்

கூறுவதற்குக்கூட இவ்வெளிய மக்களுக்கு உரிமை தரப்படவில்லை. இந் நிலையை முதன்முறையாக மாற்றியமைத்த பெருமை ஃபிரெஞ்சுப் புரட்சியினையே சாரும். எளிய மக்களுக்கும் அரசியலில் பெரும் வாய்ப்பேற்படுத்தித் தந்தது இப் புரட்சியேயாகும். அரச அவையிலும், உயர்குடி மன்றத்திலுமிருந்த அரசியலை, மக்கள் வாழும் பகுதிக்கு இப் புரட்சி கொணர்ந்தது. அரசியலும் மக்களுடைய பிறப்புரிமையானது. 1815-க்குப் பின்னர், இவை யாவும் மறுக்கப்பட்டன. மீண்டும், பழைய ஆட்சியே ஐரோப்பா முழுதும் நிலைநாட்டப்பெற்றது. முன்னிலை மீட்பு, முறைமைக் கொள்கை, வல்லரசுச் சமநிலை போன்ற கொள்கைகளால் மீண்டும் பிற்போக்காட்சி ஐரோப்பாவெங்கும் புகுத்தப்பட்டது அடக்கு முறையும், கொடுங்கோன்மையும் மீண்டும் மிகுந்தன. மக்களும் கொடுமையாக அடக்கப்பட்டனர். இந்த அடக்குமுறையினையும் மீறி, மக்கள் உரிமைக்கும் வாக்குரிமைக்கும் போராடினர். பல நாடுகளில் நாட்டுப்பற்றுக்கெதிரான நடவடிக்கைகள் பல மேற் கொள்ளப்பட்டிருந்தன. நாட்டுப்பற்றுக் காரணமாக, அந் நாடுகளிலும் மோதல்கள் தோன்றின. 1815-க்குப் பின்னர், புதிய கொள்கைகளுக்கும், பழைய கொள்கைகளுக்கும் இடையே பெரும் மோதல்கள் ஏற்பட்டன. அவையே 1830 புரட்சிகளாகவும், 1848 புரட்சிகளாகவும் வெளிப்பட்டன.

### 1848 ஆஸ்திரியாவில் புரட்சி

1848-க்கு முன்பே, ஆஸ்திரியாவில் புரட்சிக்குரிய தன்மைகள் தொடங்கிவிட்டன. 1848 பிப்ரவரிப் புரட்சி அதற்கு ஓர் ஊக்கம் தந்தது எனலாம். ஆஸ்திரியப் பேரரசர் இறையுரிமைக் கோட்பாட்டிலும், வல்லாட்சியிலும் நம்பிக்கை மிக்கவர். ஆகவே, அவர் ஒரு வல்லாட்சியாளராய்த் திகழ்ந்தார். செல்வர்கள் வரிகளி லிருந்து விலக்கப்பட்டிருந்ததுடன் சிறப்புரிமைகள் பலவும் நுகர்ந்தனர். எளிய மக்கள் மீது அனைத்து வரிகளும் சுமத்தப் பட்டு, அவர்கள் வரிச்சுமை தாங்காது தவித்தனர். அங்குத் தொழிற் புரட்சியுமேற்படவில்லை. அதன் விளைவாக உழவும், தொழிலும் மிகப் பின்தங்கிக் கிடந்தன. மக்கள் அங்கு ஏழ்மை யிலும், அறியாமையிலும், மூட நம்பிக்கையிலும் மூழ்கிக் கிடந் தனர். பண்ணை அடிமை முறையும் செயலிலிருந்தது. நிலமானிய முறையே எங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. மக்களாட்சி என்பதையே மக்கள் அறியார். முற்போக்குள்ளம் கொண்ட, மிகச் சிறுபான்மையினர் மட்டும் தங்கள் நாட்டு நிலைக்குப் பெரிதும் வருந்தினர். தங்களுக்கும் நல்லதோர் அரசியலமைப்பு வேண்டு மென விரும்பினர். மெட்டர்னிக்கே அரசியலில் சிறப்புற்றுத்

திகழ்ந்த காரணத்தால், முற்போக்கினர் விருப்பம் நிறைவேறு தற்கு வாய்ப்பே இன்றிப் போய்விட்டது.

இந் நிலை நெடுநாள்கள் தொடரவில்லை. புதிய கருத்துகளும், முற்போக்கு வாதங்களும் அம் மக்களிடையேயும் பரவின. கற்றோரும், மற்றோரும் உரிமை வேண்டுமெனப் போராடத் தலைப் பட்டனர். அவர்களைப் ஃபிரெஞ்சுப் புரட்சியும் அதன் கருத்து களும் வெகுவாகக் கவர்ந்தன. பல்வேறு அரசியல், பொருளா தார முன்னேற்றங்கள் அவர்களிடையே மாபெரும் மாற்றங்களை ஏற்படுத்தி இருந்தன. நடுத்தர வகுப்பினரும், வணிகர்களும், அறிஞர்களும் புரட்சியின் மையமாகத் திகழ்ந்தனர். 1848 பிப்ரவரிப் புரட்சிக்கு முன்னரே, ஆஸ்திரியாவில் பலவிடங்களில் கிளர்ச்சிகள் தோன்றின.

1845-லேயே பொஹிமியாவில் கிளர்ச்சியொன்று எழுந்தது. செக் (Czechs) மக்கள் தங்களுக்குப் பொறுப்புள்ள அரசு வேண்டு மெனவும், தங்களுக்கு மிகுதியான உரிமைகள் வேண்டுமெனவும் போராடினர். பாராளுமன்றத்தில் இன்னும் மிகுதியான பிரதிநிதித் துவம் தங்களுக்கு வழங்கப்பட வேண்டுமெனவும் வேண்டினர். 1846-ல் கிரகோ (Cracow) என்ற இடத்திலும் அத்தகையதொரு புரட்சி ஏற்பட்டது. ஹங்கேரிய முற்போக்காளர்களும், ஃபிரான்சிஸ் டீக் (Francis Deak) என்பார் தலைமையில் அத்தகைய உரிமைகள் தங்களுக்கும் வேண்டுமெனவும் கிளர்ச்சி செய்தனர்.

மெட்டர்னிக் வலிவோடும் பொலிவோடும் திகழ்ந்த காலமான தால், அப்புரட்சிகள் யாவும் நசுக்கப்பட்டன. ஆயினும், அவரால் புரட்சிக் கனலை முற்றிலும் அணைக்க முடியவில்லை. 1848 பிப்ரவரிப் புரட்சி என்ற புயலில் மீண்டும் அக்கனல் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. மெட்டர்னிக் அதனை அணைக்க முயன்று தோல்வியுற்று, அதன் விளைவாக அதற்கஞ்சி இங்கிலாந் துக்குத் தப்பியோடினர்.

ஆஸ்திரியாவில் புரட்சி வெடித்தபோது, அதன் அரசரா யிருந்து கோலோச்சியவர் முதலாம் பெர்டினென்ட் ஆவார் (1835—1848) அவர் தொலைநோக்கோ, நிர்வாகத் திறமையோ முற்றிலும் அற்றவர். மெட்டர்னிக்கின் கைப்பாவையாகவே செயல்பட்ட இவர் மக்களிடம் செல்வாக்கு பெற்றுத் திகழவில்லை. இவரும் இவர்தம் தலைமையமைச்சரான மெட்டர்னிக்கும் மிகப் பிற்போக்குவாதிகள். இருவருக்கும் வயது மிகுந்த காரணத்தால், நிர்வாகத்தில் அவர்களது பிடிப்பும் தளர்ந்தது. ஆயினும்,

அவர்கள் பிற்போக்குச் செயல்முறைகளில் எத்தகைய மாற்றங்களும் நிகழவில்லை. ஆயினும், அமைதியாகத் தோற்றமளித்த ஆஸ்திரியா என்ற ஆற்றின் உட்பகுதியில் கொந்தளிப்பு மிகுந்தது.

**1845**-க்குப் பிறகு, ஆஸ்திரியப் பேரரசில் மாபெரும் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. விலைவாசி உயர்வு, பொருளாதார ஏற்றத் தாழ்வு, குறைந்த ஊதியம் போன்றவற்றின் காரணமாக, மாபெரும் நெருக்கடி நிலையேற்பட்டது, அங்கிருந்த முற்போக்காளர்கள் அனைவரும் வரம்புக்குட்பட்ட முடியாட்சியினையும், உரிமைகள் பலவும் வேண்டி, புரட்சியில் ஈடுபட்டனர். **1848**ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் அது மாபெரும் புரட்சியாக மாறியது. மாணவர்களும், தொழிலாளர்களும் கூட, அதில் பங்கேற்றனர். தெருக்களிலெல்லாம் தடுப்புகளை நிறுவிப் போரிட்டனர், அவர்களை அடக்க அனுப்பப்பட்ட படைவீரர்களும் அவர்களைச் சுட மறுத்தனர். இதனைக்கண்டு அஞ்சிய மெட்டர்னிக்கும் பதவி விலகி இங்கிலாந்துக்குத் தப்பியோடியதையும் முன்னரே கண்டோம்.

மெட்டர்னிக்கின் பதவித் துறப்பு, வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. ஐரோப்பிய வரலாற்றில் ஒரு சகாப்தம் முடிவுற்றது. அடக்குமுறை ஆட்சியும் பிற்போக்குக் கொள்கைகளும் சற்று வலுவிழந்தன. ஐரோப்பாவும் அவரது வெளியேற்றத்தால், பெரிதும் மகிழ்வுற்றது. ஆஸ்திரியப் பேரரசு முழுவதிலும் புரட்சியாளர்களின் கையோங்கியது.

பேரரசர் முதலாம் பெர்டினண்டும் மக்கள் விருப்பத்திற்கு ஏற்ப அரசியலமைப்பொன்றை நல்கி இரு அவைகளைக்கொண்ட பாராளுமன்றத்தையும் கூட்ட ஒப்புதல் அளித்தார். தேசியப்படையொன்றும் நிறுவப்பட்டது. செய்தித்தாள் தணிக்கை முறையும் அகற்றப்பட்டது. ஆயினும், முற்போக்காளர்கள் இவற்றால் நிறைவெய்தவில்லை. வாக்குரிமை வெகு சிலருக்கே வழங்கப்பட்டிருந்தது. வயதுவந்த அனைவருக்கும் வாக்குரிமை நல்கப்பட வேண்டுமென அவர்கள் வேண்டினர், இரண்டாவதாக, அரசர் வழங்கிய அரசியலமைப்பினை ஏற்க மறுத்தனர். அது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்தால் வழங்கப்பட வேண்டுமென விரும்பினர். அவர்கள் விருப்பத்திற்கேற்ப அரசியல் அமைப்புப் பாராளுமன்றமும் கூட்டப்பெற்றது. புரட்சியாளர்களின் செயலால் பெரிதும் வெறுப்புற்ற பேரரசர், உடல்நலக் குறைவெனக் கூறி இன்ஸ்பர்க் என்ற இடத்திற்கு ஓய்வெடுக்கச் சென்றுவிட்டார்.

1848ஆம் ஆண்டு, ஜூலைத் திங்களில் அரசியல் அமைப்புப் பாராளுமன்றமும் கூடியது. அதில் செக் உறுப்பினர்களும் ஜெர்மன் உறுப்பினர்களும் மிகுந்து காணப்பட்டதால், அவர்கள் இடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டுப் பாராளுமன்றம் செயல் படுவது பெரிதும் தடைப்பட்டது. ஆயினும், இப் பாராளுமன்றம் அடிமை முறையினை ஆஸ்திரியப் பேரரசிலிருந்து அகற்றியது.

இதற்கிடையில், ஹங்கேரியிலும் புரட்சி வெடித்தது. அப் புரட்சியை அடக்க பெரும்படையொன்றும் உடனடியாக அனுப் பப்பட்டது. லாட்டூர் (Latour) என்ற பேரமைச்சரும் கொல்லப் பட்டார். பேரரசர் மிக்க வெறுப்புற்று நல்மட்ஸ் என்ற இடத் திற்குச் சென்றுவிட்டார். உள்ளும், புறமும் புரட்சிகள் ஆஸ்திரியப் பேரரசை அலைக்கழித்தன.

ஆஸ்திரியப் பேரரசில் ஒருவகைச் சோகம் குடிகொண்டது. இறுதியில் அவர்களின் உரிமை வேட்கையினை நாட்டுப் பற்று வென்றது. புரட்சியாளர்கள் தங்களது புரட்சிகளும், கிளர்ச்சி களும் பேரரசைப் பலவீனப்படுத்துகின்றன என்பதைத் தெளிவாக உணர்ந்தனர். நாட்டுப் பற்றுக் காரணமாகத் தங்களது பேரரசைக் காப்பாற்றுவதும் தங்கள் கடனெனத் தெளிவாக உணர்ந்தனர். உடனே எதிர்ப் புரட்சியொன்றினையும் (Counter Revolution) அவர்கள் தொடங்கினர். அனைவரும் நாட்டுக்கு நேர்ந்த ஊறினையுணர்ந்து ஒன்றுபட்டுச் செயலாற்றத் துணிந்தனர். இதற்கிடையில் பொஹிமியாவில் ஜெர்மானியர் களுக்கும் செக் இன மக்களுக்குமிடையே கருத்து வேறுபாடு மிகுந்தது. இதனை நன்கு பயன்படுத்திக்கொண்டார் ஆஸ்திரியப் படைத் தலைவரான வின்டிச்கிரேட்ஸ் (Windichgratz) என்பார். அங்கு அவசர சட்டமும் உடனடியாகப் பிறப்பிக்கப்பட்டது. வின்டிச்கிரேட்ஸ் என்ற இப் படைத்தலைவர் ஜெர்மனியர்களின் துணையுடன் செக் மக்களின் புரட்சியினை ஈவு இரக்கமின்றி ஒடுக்கினர். இவ்வாறு பொஹிமியப் புரட்சி எளிதாக அடக்கப் பட்டது. ஆஸ்திரியப் படைத் தலைவர்களனைவரும் இதனால் பெரிதும் ஊக்கம் பெற்றனர். இத்தாலியப் புரட்சியினையும் படைத் தலைவர்கள் எளிதாக அடக்கினர். வெளி நாடுகளில் புரட்சிகளை வெற்றிகரமாக அடக்கி வெற்றி வாகை சூடிய ஆஸ்திரியப் படைகள், உள் நாட்டுப் புரட்சியினை அடக்குவதிலும் ஈடுபட்டன. வின்டிச் கிரேட்ஸும் பிற படைத் தலைவர்களும் ஒன்றிணைந்து வியன்னாவினை முற்றுகையிட்டனர். வியன்னாப் புரட்சியாளர்களுக்கு உதவ வந்த ஹங்கேரியப் புரட்சிப் படை 1848ஆம் ஆண்டு, அக்டோபர் திங்களில் ஷ்வெச்ட் (Schwecht) என்ற இடத்தில் தோற்றோடியது.

அதன்பின்னர், வியன்னுப் புரட்சியாளர்களும் சரணடைந்தனர். இளவரசர் ஷ்வர்சென்பர்க் (Schwarzenberg) என்பார் புதிய சான்சலராக நியமிக்கப்பட்டார். பேரரசர் முதலாம் பெர்டினுன்டும் விலகிக்கொண்டார். அவருக்குப் பின் ஃபிரான்சிஸ் ஜோசப் (Francis Joseph) என்பார் ஆஸ்திரியப் பேரரசராகப் பதவி யேற்ருர். முன்பு வழங்கப்பட்டிருந்த அரசியலமைப்பும் நிராகரிக் கப்பட்டது. மீண்டும் பழைய ஆட்சியே புகுத்தப்பட்டது. ஆஸ்திரியப் புரட்சி விழலுக்கு இறைத்த நீராயிற்று.

**ஹங்கேரியப் புரட்சி**

ஹங்கேரியிலும் உயர்குடியினர், உழவர்களென இரு பிரிவின ரிருந்தனர். பிற ஐரோப்பியச் செல்வர்களைப் போன்றே இங்குள்ள செல்வர்களும் ஆடம்பரத்திலும் வீண் களியாட்டங்களிலும் ஈடு பட்டிருந்தனர். மிகுந்த செல்வத்தில் பிறந்த அவ்வுயர் குடியினர் வரியிலிருந்து முற்றிலும் விலக்கப்பட்டிருந்தனர். அங்கு உழவர்கள் பெரும்பாலும் அடிமைகளாக இருந்த காரணத்தால், வறுமை யிலும் ஏழ்மையிலும் உழன்றனர். அவர்களே வறுமையிலும் அனைத்து வரிகளையும் செலுத்தவேண்டிய நிலையேற்பட்டது. உழவும், தொழிலும் மிகப் பின்னடைந்து காணப்பட்டன. நற்பேறு காரணமாக செச்சன்யி (Szechenyi) என்ற சமூக, பொருளாதார அறிஞர் அந்நாட்டின் முன்னேற்றத்தில் பெரிதும் நாட்டம் செலுத்தினுர். அவரது மாபெரும் முயற்சியின் காரண மாக, சதுப்பு நிலங்கள் திருத்தப்பட்டுக் கழனிகளாயின. சாலைகள் பலவும் செப்பனிடப்பட்டன. போக்குவரத்து சீரமைக்கப்பட்டது. டான்யூப் நதியும் திருத்தப்பெற்றுப் போக்குவரத்திற்கேற்றதாக அமைக்கப்பட்டது. புதிய தொழிற்சாலைகள் பலவும் தொடங்கப் பட்டன. புதிய கல்வி முறையும் ஆதரிக்கப்பட்டது. ஹங்கேரியினை நவீன மயமாக்கிய பெருமை இவரையே சாரும்.

ஹங்கேரியில் பல இன மக்கள் வாழ்ந்த காரணத்தால், அங்கு ஒற்றுமை மிகக் குறைந்து காணப்பட்டது. அங்குள்ள பெரு வாரியான மக்கள் "மாஹியா" என்ற இனத்தைச் சார்ந்தவர்கள். "குரோட்ஸ்கள்" சிறுபான்மை இனத்தினராவார். மாகியர்கள் சிறுபான்மையினரான குரோட்ஸ்களுக்கு உரிமைகள் வழங்க மறுத்தனர். 1844-ல் குரோட்ஸ் மொழியினை ஒரு மாநில மொழியாகவும் ஏற்க மாகியர்கள் மறுத்தனர். இதனுல், அங்குப் பிளவேற்பட்டது.

**லூயி கொசூத்**

இவ்வாறு அனைத்துத் துறைகளிலும் மிகப் பின்தங்கிக் கிடந்த ஹங்கேரியைப் பெரிதும் முன்னேற்றியவர் லூயி கொசூத்

என்பவராவார். மாபெரும் எழுத்தாளரும், பேச்சாளருமான இவர் மக்களிடையே விழிப்புணர்ச்சியை உண்டாக்கினர். மாபெரும் முற்போக்காளர் என்ற முறையில் மக்களாட்சியும் அங்கு ஏற்படப் பெரிதும் பாடுபட்டார். அனைத்து வேறுபாடுகளும் அகற்றப்பட வேண்டுமென்பதும், செல்வர்களின் சிறப்புரிமைகள் அகற்றப்பட வேண்டுமென்பதும் இவர்தம் கோட்பாடு. மக்கள் அனைவரும் சமம். அனைவருக்கும் சம உரிமைகள் தரப்பட வேண்டும். நீதி நிர்வாகத் துறையில் சீர்திருத்தங்கள் வேண்டும் என்பன போன்ற கருத்துகளையும் இவர் வலியுறுத்தினர். ஆஸ்திரியர்களுக்கிணையான அரசியல் சமத்துவமும் வேண்டுமென்றார். இவர் தமது புதிய கருத்துகளாலும், பேச்சாற்றலாலும் மக்களிடையே புரட்சியுணர்வைத் தூண்டினர்.

1848 பிப்ரவரிப் புரட்சியினைக் கேள்வியுற்ற ஹங்கேரி மக்களும் கொசூத் தலைமையில் புரட்சி செய்யத் தலைப்பட்டனர். ஹங்கேரி முழுவதும் புரட்சி பரவியது. 1848-ல் கூடிய ஹங்கேரிப் பாராளுமன்றத்தில் ஆஸ்திரிய ஆதிக்கத்தினை இவர் வன்மையாகக் கண்டித்தார். தாங்கள் உரிமையிழந்து இரண்டாந்தரக் குடிமக்களாக வாழ்வதையும் அவர் சுட்டிக்காட்டினர். ஹங்கேரிக்கு நல்ல அரசியலமைப்பொன்றும் வேண்டுமென்றார். பேரரசர் முதலாம் ஃபிரான்சிஸும் இவரது அறைகூவலுக்கஞ்சி இவர் வேண்டிய அரசியலமைப்பைத் தருவதாகவும் வாக்களித்தார்.

### 1848 மார்ச் சட்டங்கள் (The March Laws-1848)

1848ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் பிரெஸ்பர்க்கில் கூடிய ஹங்கேரியப் பாராளுமன்றம் வரலாற்றுச் சிறப்பு மிக்க பல சட்டங்களை இயற்றியது. (1) இனி புடாபெஸ்டில் கூடும் பாராளுமன்றம் சட்டங்களை இயற்றவும், வரிகளை வசூலிக்கவும் அதிகாரம் பெற்றதாகும். (2) அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவர்கள். (3) ஹங்கேரி சுயாட்சி பெற்ற ஒரு நாடு ஆஸ்திரியப் பேரரசரே இதற்கும் அரசராயிருப்பார். (4) செல்வர்கள் சிறப்புரிமைகள் அகற்றப்பட்டன. (5) அடிமை முறை நீக்கப்பட்டது. உழவர்கள், செல்வர்களின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டனர். உழவர்களே நிலத்திற்குரிமையாளர்கள். அவர்களே நிலத்தை வாங்கவும் விற்கவும் உரிமை பெற்றவர்கள். அவர்கள் இதுகாறும் செய்துவந்த நிலமானியப் பணிகள் அனைத்தும் அகற்றப்பட்டன. (6) சமய உரிமை வழங்கப்பட்டது. (7) தண்டனைக்கு முன் தீர விசாரணை பெறும் உரிமை வழங்கப்பட்டது. (Trial by Jury). (8) செய்தித்தாள்களுக்கு உரிமை நல்கப்பட்டது. (9) தேசியப் படையொன்று நிறுவப்பட்டது. (10) தேசியக் கொடியொன்றும்

ஏற்றுக்கொள்ளப்பட்டது. 1848ஆம் ஆண்டு, மார்ச் திங்கள், 31ஆம் நாள் ஆஸ்திரியப் பேரரசரும் இச் சட்டங்களுக்கு ஒப்புதலளித்தார். இது ஹங்கேரியப் புரட்சியாளர்களுக்கு மாபெரும் வெற்றியாகும். அவப்பேறு காரணமாக, இவ்வெற்றி சில காலமே நீடித்தது.

மாகியர்களுக்கும் குரோட்ஸ்களுக்கும் இடையே ஏற்பட்ட மோதல்கள் புரட்சியைப் பெரிதும் பலவீனப்படுத்தின. குரோட்ஸ்களது மொழிக்கு சமவாய்ப்பு நல்கப்படவில்லை. அவர்களுக்குச் சமவாய்ப்புகளும் கொடுக்கப்படவில்லை. இதனுல், ஹங்கேரியில் புரட்சியாளர்களிடையே பிளவேற்பட்டது. மாகியர்களின் குறுகிய நோக்கும், பிடிவாதமும் ஆஸ்திரியப் பேரரசுக்குப் பெரும் நன்மையாய் அமைந்தது. ஆஸ்திரிப் படைகள் பிளவுபட்ட ஹங்கேரியை வெகு எளிதாக அடக்கின.

ஜெல்லசிக் (Jellacic) என்ற குரோட்ஸ்டியத் தலைவர் குரோட்டியா (Croatia) ஆளுநராக நியமிக்கப்பட்டார். பிற ஹங்கேரியர்கள் இதனை வன்மையாக எதிர்த்தனர். குரோட்டியப் பாராளுமன்றமும் குரோட்டியாவை ஹங்கேரியிலிருந்து பிரிப்பதென முடிவு செய்தது. ஜெல்லசிக்கும் ஆஸ்திரியாவால் ஆதரிக்கப்பட்ட காரணத்தால், ஆஸ்திரியாவுக்கும் ஹங்கேரிக்குமிடையே வேற்றுமை மிகுந்தது. ஆஸ்திரியாவிலிருந்து முற்றிலும் பிரிந்து செல்லவும் துணிந்தனர்.

ஆஸ்திரியா மிக ஆத்திரமுற்று 1848ஆம் ஆண்டு, அக்டோபரில் ஹங்கேரியப் பாராளுமன்றத்தைக் கலைத்தது. ஹங்கேரியப் பாராளுமன்றம் நிறைவேற்றிய மார்ச் சட்டங்களனைத்தும் ரத்து செய்யப்பட்டன. 1849ஆம் ஆண்டு, ஜனவரியில் ஆஸ்திரியப் படைகள் ஹங்கேரியைத் தோற்கடித்துப் புடாபெஸ்டையும் கைப்பற்றின. ஆயினும், ஹங்கேரியர்கள் ஜார்ஜி (Gorgei) என்பார் தலைமையில் மிகத் தீவிரமாகப் போராடி 1849ஆம் ஆண்டு, ஏப்ரலில் புடாபெஸ்டை ஆஸ்திரியப் பிடியிலிருந்து விடுவித்தனர். புடாபெஸ்ட்டிலிருந்து ஆஸ்திரியர்களையும் விரட்டினர். அது அவர்கள் நாட்டுப் பற்றுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். ஹங்கேரி, கொசூத் என்பார் தலைமையில் ஒரு குடியரசென அறிவிக்கப்பட்டது.

ஹங்கேரி ஒரு குடியரசு என்ற செய்தியைக் கேட்ட முதலாம் சார் நிக்கலொஸ் பெரிதும் அதிர்ந்துபோனுர். ஆஸ்திரியப் பேரரசர் முதலாம் பெர்னுன்டும் பதவியிலிருந்து விலகினுர்.

அவருக்குப் பின் பட்டத்திற்கு வந்த ஃபிரான்சிஸ் ஜோசப் தமது பேரரசினைக் காப்பாற்ற ரஷ்யாவின் துணையை நாடினர். ரஷ்யாவும் பெரும்படை ஒன்றினை அனுப்பியது. ரஷ்யத் துணையினைப் பெற்ற ஆஸ்திரியாவும், ஹங்கேரிப் புரட்சியினை வெகு எளிதாக அடக்கியது. கொசூத்தும் துருக்கிக்குத் தப்பி ஓடினர். ஹங்கேரியப் பாராளுமன்றமும் கலைக்கப்பட்டது. அனைத்து மாநிலச் சட்ட மன்றங்களும் அகற்றப்பட்டன. குரோட்டியாவும் டிரான்சில்வேனியாவும் ஹங்கேரியிலிருந்து பிரிக்கப்பட்டன. ஹங்கேரி மீண்டும் ஓர் ஆஸ்திரிய மாநிலமானது. மீண்டுமெங்கும் பழைய ஆட்சியே அங்குப் புகுத்தப்பட்டது. ஆயினும், இப் புரட்சியால் சில நன்மைகளும் விளைந்தன. (1) அடிமை முறை அங்கு அகற்றப்பட்டது. (2) நிலமானியச் சிறப்புரிமைகள் யாவும் அகற்றப்பட்டன. (3) மக்களின் சமூகப் பொருளாதார நலனில் அரசு மிக அக்கறை காட்டத் தொடங்கியது. எனினும், 1848 புரட்சி ஹங்கேரி வரலாற்றில் ஒரு சோக நிகழ்ச்சியெனில் மிகையாகாது.

**பொஹிமியாவில் புரட்சி**

பொஹிமியாவும் ஹங்கேரியைப் போன்றே அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் மிகவும் பின்தங்கிக் கிடந்தது. அறியாமையிலும், மூட நம்பிக்கையிலும் மூழ்கிக் கிடந்தனர் அம் மக்கள். உழவும் தொழிலும் மிகப் பின்தங்கிக் கிடந்தன. 1848 புரட்சியால் பெரிதும் கவரப்பட்ட செக் இன மக்களும் தங்களுக்கும் உரிமை வேண்டுமெனக் கோரி புரட்சியில் ஈடுபட்டனர். 1848ஆம் ஆண்டு, மார்ச் திங்கள், 11ஆம் நாள் செக் இளைஞர்கள் (Young Czechs), பிரேக் (Prague) நகரில் ஒன்றுகூடி மனு ஒன்றினைத் தயாரித்து அதனை ஆஸ்திரியப் பேரரசருக்கு அனுப்பி வைத்தனர். அதில் தங்களுக்கு நல்லதோர் அரசியல் அமைப்பு வேண்டுமென ஆஸ்திரியப் பேரரசனை வேண்டி நின்றனர். ஜெர்மனியர்களும் செக் மக்களும் ஒன்றிணைந்து தங்களுக்கு அரசியலமைப்பு ஒன்று வேண்டுமென வேண்டியதால், பேரரசரும் அவர்களது வேண்டுகோளினை ஏற்று, 1848ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களில் அவர்களுக்கொரு பாராளுமன்றத்தினை வழங்கினர். இன வேறுபாடு எல்லா நாடுகளுக்கும் உரிய ஒரு பொதுப் பிரச்சினை போலும். இதற்கு பொஹிமியா ஒரு விதிவிலக்கல்ல. அங்கே ஜெர்மனியர்களுக்கும், செக் மக்களுக்கும் இடையே இன அடிப்படையில் கருத்து வேறுபாடுகள் தோன்றின. அங்குள்ள ஜெர்மனியர்கள், ஜெர்மன் கூட்டரசில் இணைந்து பிராங்க்பர்ட் பாராளுமன்றத்திற்குத் தங்களுடைய உறுப்பினர்களை அனுப்ப வேண்டுமென விரும்பினர். இதனைச் செக் மக்கள்

வன்மையாக எதிர்த்தனர். அவர்கள் தனித்த உரிமை மிக்க பொஹிமியா வேண்டுமென்றனர். வேறுபட்டு நின்ற பொஹிமியா வால் ஒன்றுபட்டுப் புரட்சியில் ஈடுபட முடியவில்லை. அவர்களை அடக்குவதும் ஆஸ்திரியாவுக்கு எளிதாயிற்று. வின்டிஸ்கிரேட்ஸ் என்ற ஆஸ்திரியப் படைத் தலைவர் பொஹிமியப் புரட்சியினை வெகு எளிதாக அடக்கினார். பொஹிமியா மீண்டும் ஆஸ்திரிய ஆதிக்கத்தின் கீழ் வந்தது. பொஹிமியப் புரட்சியும் நீறு பூத்த நெருப்பாயிற்று.

### இத்தாலியப் புரட்சி

1815-ல் நிறைவேறிய வியன்னா மாநாட்டு ஏற்பாடுகளால், பெரிதும் ஏமாற்றமுற்ற நாடுகளில் இத்தாலியும் ஒன்று. இத்தாலி பலவாறு பிரிக்கப்பட்டு, அந்நிய ஆதிக்கமும் அங்கு நிலைநிறுத் தப்பெற்றது. இத்தாலி, ஒரு " புவியியல் சொல் "லாக மாறியது. இதனால், இத்தாலியர்கள் பெரிதும் ஆத்திரமுற்றனர்.

இத்தாலியின் பல பகுதிகளில் ஆஸ்திரிய ஆதிக்கம் நிறுவப் பட்டது. லொம்பார்டியும், வெனிஷியாவும் ஆஸ்திரியாவின் நேரடி ஆட்சியின் கீழ் வந்தன. டங்கனி, லக்கா (Lucca), மொடனா, பார்மா போன்ற இடங்களில் ஹாப்ஸ்பர்க் இளவரசர்கள் அர சோச்சும் அதிகாரம் பெற்றனர். இத்தாலி முழுவதிலும் ஆஸ்திரிய ஆதிக்கம் நிறுவப்பட்டது. வியன்னா மாநாட்டு நோக்கப்படி இத்தாலியைப் புரட்சிப் புயலிலிருந்து காப்பாற்றும் பொறுப்பை ஆஸ்திரியா ஏற்றுக்கொண்டது. 1848 வரை ஐரோப்பியக் கூட்டணி நாடுகளின் துணைகொண்டு, மெட்டர்னிக் இத்தாலியப் புரட்சிகள் அனைத்தையும் அடக்குவதில் வெற்றிபெற்றார். இவரால் இத்தாலியத் தேசியவாதிகளின் உடல்களைத்தான் பறிக்கமுடிந்ததே தவிர, அவர்களது லட்சியத்தினைப் பறிக்க முடியவில்லை. " இளம் இத்தாலி "யின் உறுப்பினர்கள் உடல், பொருள், ஆவி அனைத் தையும் தியாகம் செய்யச் சித்தமாயிருந்தனர். 1848-ல் மெட்டர் னிக்கின் வீழ்ச்சியினைக் கேள்வியுற்ற " இளம் இத்தாலி " உறுப் பினர்கள் நாடெங்கிலும் புரட்சி செய்யத் தலைப்பட்டனர். அவர் களது புரட்சியின் விளைவாக, (1) இரண்டு சிசிலிகளும் அரசியல் அமைப்பைப் பெற்றன. (2) சார்லஸ் ஆல்பர்ட் சார்டினிய பீட்மாண்டிற்கும் அரசியல் அமைப்பொன்றை வழங்கினார். (3) வெனிசிலும், லொம்பார்டியிலும் புரட்சி ஏற்பட்டதன் விளைவாக, ஆஸ்திரியப் படைத் தலைவரான ரெடெட்ஸ்கி என்பார் துரத்தப் பட்டதோடு, லொம்பார்டியும் சார்டினியாவுடன் இணைந்து விட்டதாக அறிவிக்கப்பட்டது. (4) டேனியல் மேனின் (Daniele

Manin) என்பாரால் வெனிஷியாவும் சுதந்திரக் குடியரசெனப் பிரகடனப்படுத்தப்பட்டது.

இத்தாலி யெங்கும் நாட்டுப்பற்று கரைபுரண்டோடியது. நாட்டுப்பற்றுள்ள அனைத்து இத்தாலியரும் ஆஸ்திரிய ஆதிக்கத்தினை எதிர்த்துக் கூக்குரலெழுப்பினர். ஆஸ்திரிய ஆதிக்கமென்ற ஆதவன் அந்திச் செவ்வானத்தில் அஸ்தமிக்கும் நிலையும் ஏற்பட்டது. இத்தாலியை இழந்துவிடும் நிலைக்கு ஆஸ்திரியா வந்துவிட்டது. ஹங்கேரியும், பொஹிமியாவும் சுயாட்சி கேட்டுப் போரில் இறங்கின. ஆனால், இத்தாலி முழு விடுதலை பெற போரிடத் துணிந்தது. ஆயினும், ஆஸ்திரியப் படையினைக் கண்டு இத்தாலி சற்று அஞ்சியது. ஆஸ்திரியப் பேரரசின் ஒரே நம்பிக்கை அப்பெரும் படையேயாகும். ஆயினும், ஆஸ்திரியாவில் ஏற்பட்ட புரட்சிகள் காரணமாக, ஆஸ்திரியப் படைகள் இத்தாலியில் செயலிழந்து நின்றன. வியன்னாவே புரட்சித் தீயில் தத்தளித்த போது இத்தாலியிலும் அப் புரட்சித் தீ விரைவாகப் பரவியதில் வியப்பேதுமில்லை. நாட்டுப்பற்று மிக்க “இளம் இத்தாலி” உறுப்பினர்கள் தங்கள் தாயகம் ஒன்றுபடுவதும், விடுதலை அடைவதும் உறுதியென நம்பினர். அவர்களது நம்பிக்கை பொருளற்றது என்பதை அவ்விளைஞர்கள் அறியாது போயினர். இத்தாலி மொழி பேசி, ஒரே இத்தாலிய அரசாக இத்தாலியிலிருந்த பீட்மாண்ட் அரசரான சார்லஸ் ஆல்பர்ட்டும் தமது நாட்டு விடுதலைப் போரில் பெரிதும் ஈடுபட்டார். இத்தாலியின் மாபெரும் ஞானியும் அதன் ஒற்றுமையின் சின்னமுமான மாஜினியும் (Mazzini) அவரைப் பெரிதும் ஊக்குவித்தார். இதனால், சார்லஸ் ஆல்பர்ட்டும் ஆஸ்திரிய ஆதிக்கத்தினை எதிர்த்துப் போர்க்கோலம் பூண்டார். அப்போது போப்பாண்டவராயிருந்த 9ஆம் பயஸ் என்பாரும் சார்லஸ் ஆல்பர்ட்டின் வெற்றிக்கு ஆசி வழங்கினார். தமது தாயகத்தைக் காக்கும்பொருட்டு, 1848ஆம் ஆண்டு, மார்ச் திங்கள் ஆஸ்திரியப் படைகளை எதிர்த்துப் போரில் இறங்கினார். இதனால், சார்லஸ் ஆல்பர்ட் இத்தாலிய விடுதலையின் சின்னமாகக் கருதப்பட்டார். ஆஸ்திரியப் படைத் தலைவரான ரெடெட்ஸ்கி செயல் திறனும், சூழ்ச்சியும் மிக்கவர். இத்தாலியர்களிடையே பிளவு ஏற்படும் என அவர் உறுதியாய் நம்பினார். அதனை நன்கு பயன்படுத்தி அவர்களைப் புறமுதுகிட்டோடச் செய்யலாம் என்ற அவரது கணிப்பு வீண்போகவில்லை.

ஆஸ்திரியாவும் தனது போராயத்தங்களைத் தீவிரப்படுத்தியது. இத்தாலியில் தோற்றால் தங்களது பேரரசு சிதைவுறுமென்பதை ஆஸ்திரியப் படை வீரர்கள் நன்குணர்ந்தனர். எப் பாடு

பட்டேனும் ஆஸ்திரியப் பேரரசைக் காப்பதென அவர்கள் முடிவு செய்தனர். ரெடெட்ஸ்கி போன்ற படைத் தலைவர்கள் எதிர் பார்த்து நின்ற கருத்துவேறுபாடுகளும் இத்தாலியர்களைப் பெரிதும் பிளவுபடுத்தின. இத்தாலியை ஒன்றுபடுத்துவதில் அவர்கள் இடையே பெரும் கருத்து வேறுபாடு தோன்றியது- கியொபெர்டி (Gioberti) போன்றோர் போப்பாண்டவரின் தலைமையில் ஒரு கூட்டரசு அமையவேண்டுமென விரும்பினர். மாஜினி போன்றோர் புரட்சிக்குப் பின்னர், இத்தாலியில் குடியரசு அமைய வேண்டும் எ னவிழைந்தனர் தேசியவாதிகள் பலர் சார்டினியத் தலைமையில் இத்தாலி ஒன்றுபட வேண்டுமெனக் கருதினர். இதன் விளைவாகப் புரட்சியாளர்களிடையே பெரும் பிளவேற்பட்டது. இதுவரை இத்தாலியை ஆதரித்த போப்பாண்டவரும் (9 ஆம் பயஸ்) அதனை எதிர்க்க ஆரம்பித்தார். புரட்சியாளர்களின் தீவிரப் போக்கினையும் நாட்டு வெறியினையும் போப்பாண்டவர் எதிர்த்தார். கத்தோலிக்க நாடான ஆஸ்திரியாவுக்கெதிராகப் புரட்சியைத் தூண்டுவது முறையற்ற வொன்று எனவும் அவர் கருதினார். ஆகவே, 1848ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள், 29ஆம் நாள் வெளியிட்ட அறிக்கை யொன்றில் தான் (பொப்பாண்டவர்) விடுதலைப் போரிலிருந்து விலகிவிட்டதாக அறிவித்தார். (Allocution of 29 April 1848) போப்பாண்டவரின் ஆசியால், பெரிதும் ஊக்கம் பெற்ற புரட்சிப் படையினர். அவரது இவ்வறிக்கையால், பெரிதும் ஏமாற்றமுற்றனர். போப்பாண்டவரது தலைமையில் இத்தாலி ஒன்றுபடுவது இயலாது என்பதை இது தெளிவாக்கியது.

போப்பாண்டவர் விலகியதை அறிந்த இரண்டு சிசிலிகளும் போர் முயற்சியைக் கைவிட்டுவிட்டன. இதனால், சார்லஸ் ஆல்பர்ட் பெரிதும் அதிர்ச்சியுற்றார். இணைப்புக்கான ஆதரவும் அந்நிய ஆதிக்கத்திற்கான எதிர்ப்பும் பெருமளவு குறைந்து போனதை யெண்ணி, சார்லஸ் ஆல்பர்ட் பெரிதும் வருந்தினார். ஆயினும், அவர் மனம் தளர்ந்துவிடவில்லை. புரட்சிப் போரை முன்னின்று நடத்தினார். ஆயினும், ரெடெட்ஸ்கி (Radetzky) என்ற ஆஸ்திரியப் படைத் தலைவர் ஆல்பர்ட்டை கஸ்டோசா (Custozza) என்ற போர்க்களத்தில் (1848, ஜூலை) தோற்கடித்தார்.

போப்பாண்டவரின் செயலை இத்தாலிய முற்போக்காளர்கள் முற்றிலும் வெறுத்தனர். மாஜினியின் தலைமையில் ஒன்றுகூடி, போப்பரசுகள்மீது அவர்கள் போர் தொடுத்தனர். ரோம் நகரில் தோன்றிய புரட்சியில் ரோஸ்ஸீ (Rossi) என்ற போப்பாண்டவரின் அமைச்சரும் கொல்லப்பட்டார். போப்பாண்டவரும் புரட்சிக்கஞ்சி கெயிடா (Gaeta) வுக்குத் தப்பியோடினார். (பிப்ரவரி 1849).

ரிஸ்சூர்ஜிமெண்டோ படைகள் ரோமில் பெரும்வெற்றிபெற்றன. ரோமில் சட்டமன்ற மொன்றும் கூட்டப்பட்டது. ரோமும் ஒரு குடியரசென அறிவிக்கப்பட்டது. ஆட்சிப் பொறுப்பும் மூவரடங்கிய குழுவிடம் ஒப்புவிக்கப்பட்டது. மாஜினியும் அதன் தலைவரானார். அவப்பேறு காரணமாக இக்குடியரசு நீண்டகாலம் நிலைக்கவில்லை. போப்பாண்டவரைப் பதவியிலிருந்து விலக்கியதைக் கத்தோலிக்க உலகம் முற்றிலும் வெறுத்தது. ஆஸ்திரியப் படைகளும், ஃபிரெஞ்சுப் படைகளும் அவரை மீண்டும் ஜூன் திங்களில் (1849) பதவியிலமர்த்தின. தமது சிறப்புமிக்க செஞ்சட்டை வீரர்களுடன் திறம்படப் போரிட்டும் கரிபால்டியால் ரோமைக் காக்க இயலவில்லை. சரணடைய விரும்பாமல் அவர் தமது வீரர்களுடன் இத்தாலியை விட்டே வெளியேறினார். மாஜினியாலும் ரோமைக் காக்க இயலவில்லை. அவரது காலத்திற்கு முற்பட்ட செயல்களே அவரது தோல்விக்கு வழிவகுத்தன. அவர் விதைத்த விதை 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பயிராக வளர்ந்து, காய்த்துக் குலுங்கியது. அதனை இத்தாலிய மக்களின் நன்மைக்காக அறுவடை செய்தவர்கள் இரண்டாம் விக்டர் இமானுவேலும், கவூருமாவர்.

டஸ்கனியிலும், இரு சிசிலிகளிலும் மீண்டும் புரட்சிகள் தோன்றின. அங்கு அவ்விடங்களில் குடியரசுகள் நிறுவப்பட்டன. அதனைக் கண்ணுற்று மகிழ்ந்த சார்லஸ் ஆல்பர்ட், மீண்டும் ஆஸ்திரியர்கள்மீது போர் தொடுத்தார். ஆஸ்திரியப் படைத் தலைவரான ரெடெட்ஸ்கி அவரை மீண்டும் 1849-ல் நவாரா என்ற இடத்தில் தோற்கடித்தார். இதனால், உள்ளம் நொந்துபோன சார்லஸ் ஆல்பர்ட், தம்முடைய மகனை இரண்டாம் விக்டர் இமானுவேலை அரசராக்கி, தாம் அரசியலிலிருந்து விலகிக் கொண்டார்.

நவாரா வெற்றி மீண்டும் ஆஸ்திரிய ஆதிக்கத்தை இத்தாலியில் நிறுவியது. லொம்பார்டியும் வெனிஷியாவும் மீண்டும் ஆஸ்திரிய ஆதிக்கத்தின்கீழ் வந்தன. டஸ்கனி, நேப்பிள்ஸ் போன்ற பகுதிகளில் மீண்டும் பழைய அரசர்கள் பதவிலமர்த்தப்பட்டனர்.

1848 இத்தாலியப் புரட்சி தோல்வியுற்றது. இது காலத்துக்கு முந்திய முயற்சி யென்ற காரணத்தால், தோல்வியில் முடிந்தது. இத்தாலிய ஐக்கியம் போப்பாண்டவர் தலைமையிலமைவது அரிது என்ற படிப்பினையை இத்தாலியர்கள் இதன்மூலம் கற்றனர். குடியரசை அமைப்பதும் இயலாததொன்று என்பதை அம்மக்கள் தெளிவாக உணர்ந்தனர். இத்தாலிய ஐக்கியத்திற்கு வலுவுள்ள

அரசும், பெரும்படையுமே தேவை என்பதை அவர்கள் நன்குணர்ந்தனர். 1848 பிப்ரவரிப் புரட்சி இத்தாலிய மக்களைப் பொருத்தவரையில் நல்லதொரு படிப்பினையினை வழங்கியது. 1848-ல் அவர்கள் தோற்றாலும், இத்தாலிய ஐக்கியத்தினை அவர்கள் மறந்துவிடவில்லை. நாட்டுப்பற்றே இறுதியில் வெல்லும் என்பதற்கு இத்தாலிய இணைப்பு வரலாறு நல்லதொரு சான்றாகும்.

### ஜெர்மனியில் புரட்சி

வியன்னா மாநாட்டால் ஜெர்மனியும் பெரிதும் ஏமாற்ற முற்றது. தங்களது தந்தை நாடு ஒன்றுபடும் அந்நிய ஆதிக்கத்தி லிருந்து முற்றிலும் விடுபடும் என எதிர்பார்த்த அவர்களுக்கு வியன்னா மாநாடு பேரதிர்ச்சியைத் தந்தது. 39 அரசுகளைக் கொண்ட ஜெர்மன் கூட்டரசு நிறுவப்பட்டு அது ஆஸ்திரிய ஆதிக்கத்தின்கீழ் கொணரப்பட்டது. இதனைக் கண்டு ஜெர்மன் தேசியவாதிகள் பெரிதும் ஆத்திரமுற்றனர். மெட்டர்னிக் முறையினையும் அவரது பிற்போக்காட்சியினையும் அவர்கள் பணிவுடன் ஏற்கும் அவலநிலை யேற்பட்டது. 1830 வரை அங்கு பலவிடங்களில் தோன்றிய முற்போக்கு இயக்கங்களனைத்தும் மெட்டர்னிக்கின் வலுக் கரத்தால் முளையிலேயே கிள்ளி யெறியப்பட்டன. நாட்டுப்பற்று மிக்க அனைவரும் அங்கு மிகவும் சோர்ந்து போயினர். அவர்கள் தங்களது ஆற்றலிலும் கொள்கையிலுமே நம்பிக்கையிழந்தனர்.

### ஜெர்மன் இணைப்புக்குரிய சில பிரச்சினைகள்

ஜெர்மன் ஐக்கியத்தின் முன்னோடியாகத் திகழ்ந்த அரசு பிரஷ்யாவாகும். தங்கள் தந்தை நாட்டின் ஐக்கியத்திற்கு ஜெர்மனி யர்கள் பிரஷ்யாவையே பெரிதும் நம்பியிருந்தனர். ஆயினும், பிரஷ்யாவும் ஆஸ்திரியாவுக்குப் பெரிதும் பணிந்துபோனது. கிழக்குப் பிரஷ்யாவென்றும் மேற்குப் பிரஷ்யாவென்றும் பிரிந்து கிடந்த பிரஷ்யா, அரசியல், பொருளாதாரத் துறையில் பின் தங்கியே கிடந்தது. ஜெர்மன் முற்போக்குவாதிகள் பிரஷ்யாமீது நம்பிக்கை வைத்தாலும், பிரஷ்யா அப்பொறுப்பை ஏற்கவல்ல நிலையிலில்லை.

### சால்வரைன் அல்லது சுங்க ஐக்கியம்

பொருளாதாரத் துறையில் தன்னை உயர்த்திக்கொள்ளும் முயற்சியில் பிரஷ்யா பெரிதும் ஈடுபட்டது. (1) தனது வணிகத்தை முன்னேற்றத் தேவையற்ற சுங்கச் சாவடிகளை அகற்றியது. அவை வணிக முன்னேற்றத்திற்குப் பெரும் தடையாய் நின்றன.

அதனால், அங்குத் தடையிலா வணிகம் பேணப்பட்டுப் பொருளாதார வளர்ச்சியுற்றது. (2) உள்நாட்டு வணிகத்திற்கு அடுத்து தடையாயிருந்தது கடத்தலாகும். வரியைக் குறைத்து கடத்தலைத் தடுத்தது பிரஷ்யா. (3) கடல்வழிப் பொருள்கள்மீது மிகுதியாக வரி விதித்தது. அதனால், துறைமுகங்கள் வளர்ச்சியுற்றதோடு உள்நாட்டு வணிகமும் பெரிதும் வளர்ந்தது. (4) ஒரு பொது வரியை (Common tarift) விதித்தது. பிரஷ்யா வணிக வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது. இத்தகைய வணிக முறையைப் பின்பற்றுமாறு ஜெர்மன் அரசுக்கும் அழைப்பு விடுத்தது.

சுங்க ஐக்கியத்தின் இன்றியமையாமையைப் பல ஜெர்மன் அரசுகள் உணர்ந்தன. பல அரசுகளும் பிரஷ்யா அமைத்திருந்த சுங்க ஐக்கியத்தில் சேர்ந்தன. இதனால், இதில் பங்குகொண்ட அனைத்து நாடுகளும் பெரிதும் முன்னேறின. (1) இதனால், உள்நாட்டு வணிகம் பெரிதும் வளர்ச்சியுற்றது. (2) இது ஜெர்மன் சிற்றரசர்களுக்கு நல்லதொரு படிப்பினையைத் தந்தது. அவை ஒன்றோடொன்று ஒத்துழைக்கவும், சேர்ந்து செயல்படவும் கற்றுக் கொண்டன. இவ்வியக்கத்திற்குப் பிரஷ்யா தலைமையேற்ற காரணத்தால், பல சிற்றரசுகள் பிரஷ்யாவின் தலைமையை யேற்க முன்வந்தன. (3) சுங்க ஐக்கியம் பிரஷ்யாவையும் ஒன்றிணைத்தது. (4) நாட்டுப்பற்றினையும் இவ்வியக்கம் அங்குப் பெரிதும் வளர்த்தது. இதுவே ஜெர்மன் ஐக்கியத்தின் முதற்படியாகும்.

சுங்க ஐக்கியம் பல பிரச்சினைகளையும் உருவாக்கியது. பிரஷ்ய ஆதிக்கத்தைப் பல ஜெர்மன் சிற்றரசுகள் விரும்பவில்லை. பவேரியா, சாக்சனி போன்ற சிற்றரசுகள் பிரஷ்யாவை எதிர்த்துத் தங்களுடைய சுங்க ஐக்கியத்தினையும் நிறுவின. ஆகவே, அவற்றிற்கும் பிரஷ்யாவுக்குமிடையே பகைமை வளர்ந்தது. பிரஷ்யா அமைத்த சுங்க ஐக்கியத்தில் ஆஸ்திரியா சேர முன்வந்தது. ஆயினும், ஆஸ்திரிய வேண்டுகோளைப் பிரஷ்யா நிராகரித்தது. இதனால், பெரிதும் ஆத்திரமுற்ற ஆஸ்திரியா பல சிற்றரசுகளைப் பிரஷ்யாவுக்கெதிராகத் தூண்டிவிட்டது. பிரஷ்யாவை எதிர்த்துப் பல சுங்க ஐக்கியங்கள் நிறுவவும் ஆஸ்திரியா துணை நின்றது. இதனால், ஜெர்மனியில் வேற்றுமையுணர்வும் வளர்ந்தது. சால்வரைன் இயக்கத்தில் பல நன்மைகள் ஏற்பட்டாலும் பல தீமைகளும் விளைந்தன. ஜெர்மன் ஐக்கியத்திற்குப் பெரிதும் வித்திட்ட அவ்வியக்கம் 1848 வரை அதற்குத் தடையாகவும் இருந்தது. இதுவும் ஜெர்மன் ஐக்கியத்திலிருந்த மாபெரும் பிரச்சினைகளில் ஒன்றாகும்.

**4ஆம் பிரடெரிக் வில்லியம்**

பிரஷ்ய அரசர் 3ஆம் பிரடெரிக் வில்லியம் காலத்தில் (1797-1840) அரசியலில் எத்தகைய மாற்றமும் ஏற்படவில்லை. அவருக்குப் பின் அரியணையேறிய 4ஆம் பிரடெரிக் வில்லியம் (1840-1861) ஒரு முற்போக்காளர். அவர் அரியணைக்கு வந்தவுடன் மக்களிடையே பெரும் ஆர்வம் ஏற்பட்டது. அவர் பலருக்கு அரசியல் மன்னிப்பு (Amnesty) வழங்கியதோடு செய்தித் தாள்களுக்கு உரிமையும் கொடுத்தார். நல்ல அரசியலமைப்பினைத் தங்கள் வேந்தர் நல்குவாரென மக்களும் எதிர்பார்த்தனர்.

1847ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்களில் இணைந்த பாராளு மன்றமொன்று கூட்டப்படுமென்றும் அதற்கு மாநிலச் சட்ட மன்றங்களும் அழைக்கப்பெறும் என்றும் அறிவிக்கப்பட்டது. பாராளுமன்றத்தின் பரிந்துரையின் பேரில்தான், வரிகள் வசூலிக்கப் படுமெனவும் அறிவிக்கப்பட்டது. முற்போக்காளர்கள் இதனால் நிறைவுபெறவில்லை. ஏனெனில், (1) பாராளுமன்றம் மன்னரின் அழைப்பின் பேரில்தான் கூடும். மக்களோ அல்லது மக்கள்தம் உறுப்பினர்களோ அதனைக் கூட்டுவதற்கு உரிமை பெற்றிருக்க வில்லை. (2) அது மக்கள்தம் உறுப்பினர்களைக் கொண்டதல்ல. வகுப்புகளுக்காக அங்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. (3) அதற்குச் சட்டங்களை முன்மொழியும் அதிகாரம் நல்கப் படவில்லை. வரி விதிப்புத் துறையிலும்கூட, அதன் அதிகாரங்கள் பெரிதும் கட்டுப்படுத்தப்பட்டன. சுருங்கக் கூறின் அது ஒரு பாராளுமன்றமாகத் திகழவில்லை. ஆகவே, முற்போக்கினர் அதனைப் பெரிதும் எதிர்த்தனர்.

1847ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களில் 4ஆம் பிரடரிக் வில்லியம், தாம் முற்போக்கினர் விருப்பப்படி இயங்கவியலாதென்பதை மிக்க தெளிவாக அறிவித்துவிட்டார். அவர்கள் கூற்றும், விருப்பமும் தன்னை ஒரு சிறிதும் கட்டுப்படுத்தாது என்பதையும் தெளிவாகப் பகர்ந்தார். முற்போக்கினரும் அதனைக் கண்டு அஞ்சவில்லை. 1847-ல் அரசர் வேண்டிய கடனைப் பாராளுமன்றம் வழங்க மறுத்துவிட்டது. அதனால், பெருங்குழப்பம் விளைந்தது இதனால் மிக்க வெறுப்பும் சினமும் கொண்ட அரசர் 1848-ல் பாராளு மன்றத்தைக் கலைத்தார். அரசர்க்கும் பாராளுமன்றத்திற்கும் இடையே பகைமை வளர்ந்தது.

**1848 புரட்சி—பிரஷ்யா**

1848 ஃபிரெஞ்சுப் புரட்சி பிரஷ்யாவிலும் எதிரொலித்தது. பெர்லின் நகரிலும் அதன் விளைவாகப் பெருங்குழப்பம் ஏற்பட்டது.

4ஆம் பிரடரிக் வில்லியத்தின் போக்கினல் பெரிதும் ஏமாந்த மக்கள் புரட்சியிலீடுபட்டனர். நாடெங்கும் நல்ல அரசியலமைப்பும் சீர்திருத்தங்களும் வேண்டுமென்ற கூக்குரல்கள் மிகுந்தன. பெர்லின் நகரில் மட்டும் 200-க்கு மேற்பட்டோர் மாண்டனர். முற்போக்கு, பிற்போக்கு ஆகியவற்றின் கலவையான 4ஆம் பிரடரிக் வில்லியம் புரட்சியாளர்களின் வேண்டுகோளை யேற்க முன்வந்தார். அடக்குமுறையினை விடுத்து மக்கள் வேண்டிய அரசியலமைப்பு முறையினைத் தருவதாக வாக்களித்தார். பிரஷ்யாவுக்கு வேண்டும் அரசியலமைப்பைத் தயாரிப்பதற்காக, சட்டமன்றம் ஒன்றினையும் கூட்டினர். சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவை ஒன்றினையும் நியமித்தார். செய்தித் தாள்களுக்கு உரிமையும் வழங்கப்பட்டது. இதனை முற்போக்கினர் பெரிதும் வரவேற்றனர். ரஷ்ய மன்னர் முதலாம் சார் நிக்கலொஸ் இவற்றைக் கேள்வியுற்றுப் பெரிதும் அதிர்ந்து போனர். அவரது முற்போக்கு, வல்லாட்சிக்கு மிக ஊறுவிளைக்கு மெனவும் அவர் வில்லியத்தினையும் எச்சரித்தார். அவ்வெச்சரிக்கையை 4ஆம் பிரடரிக் வில்லியம் புறக்கணித்ததோடு, ஜெர்மனியை ஒன்றுபடுத்தும் பெருமுயற்சியிலும் ஈடுபட்டார். புனித ரோமானியப் பேரரசர் போன்று உடையணிந்து, அவர் முற்போக்கினரின் ஊர்வலத்திற்குத் தலைமையேற்றும் அதனை வழி நடத்திச் சென்றார். அப்போது ஜெர்மனியின் நன்மைக்காக ஆஸ்திரியாவுடனும், ஆஸ்திரியா இன்றியும் அவசியமேற்பட்டால் ஆஸ்திரியாவினை யெதிர்த்தும் போரிடுவேனென அறிவித்தார். **(I would fight for the cause of Germany with Austria, without Austria, if necessary against Austria ).**

சிறு ஜெர்மன் அரசுகளும் அதனைப் பெரிதும் வரவேற்றன. புரட்சியென்ற தொற்றுநோய் அவற்றையும் பற்றிக்கொண்டது. பவேரியா, பேடன், உர்டம்பர்க், சாக்சனி, ஹெஸ்ஸி-காசல், பிரன்ஸ்விக் போன்ற இடங்களில் புரட்சித் தீ விரைவாகப் பரவியது. இக்குறுநில மன்னர்கள் புரட்சிக்கஞ்சி, நல்ல அரசியலமைப்புகளை மக்களுக்கு வழங்கினர். அங்கெல்லாம் சட்டமன்றங்களும், சட்டமன்றங்களுக்குப் பொறுப்புள்ள அமைச்சரவைகளும் நிறுவப்பட்டன. இவற்றை முன்னின்று நடத்திய முற்போக்கினரும், நடுத்தர வகுப்பினரும் பெரிதும் மகிழ்வுற்றனர்.

இப் புரட்சி ஜெர்மன் உழவர்களையும் நாளடைவில் பெரிதும் கவர்ந்தது. ஜெர்மனியின் வனப் பகுதிகளிலும், பிற பகுதிகளிலும் மிக்க துன்பத்திலும், வறுமையிலும் வாடிய உழ்வர்கள் பெருநிலக் கிழார்களை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தினர்.

ஜெர்மன் தேசியவாதிகள் இதற்கிடையில் ஜெர்மன் ஒற்றுமைக்கு வழிவகை காண முன்வந்தனர். ஜெர்மனியை இணைக்கும் முயற்சியில் அவர்கள் பெரிதும் ஈடுபட்டனர். 1848ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் பிராங்க்பர்ட் பாராளுமன்றத்தில் அவர்கள் அனைவரும் கூடினர். இணைந்த ஜெர்மனிக்கு அரசியல் அமைப்பொன்றினைத் தயாரிக்கும் முயற்சியிலும் இப் பாராளுமன்றம் ஈடுபட்டது. இதனைப் புரட்சிமிகு நாட்டுப்பற்று ஈந்த நறுமண மலரென்பர் கெட்டல்பீ என்ற வரலாற்றியல் வல்லுநர்.[1]

**இப் பாராளுமன்றத்தை எதிர்நோக்கிய பிரச்சினைகள்**

பிராங்க்பர்ட் பாராளுமன்றம் இரு பிரச்சினைகளை எதிர்நோக்க வேண்டி நேரிட்டது. (1) எப் பகுதிகளை ஜெர்மனியுடன் இணைப்பது? (2) இணைந்த ஜெர்மனியின் தலைவர் யார்? இவையே அப் பாராளுமன்றத்தின் மாபெரும் பிரச்சினைகளாகும்.

இணைந்த ஜெர்மனியில் ஆஸ்திரியாவைச் சேர்த்துக் கொள்வதா அல்லது அதனுடைய ஜெர்மன் மாநிலங்களை மட்டும் சேர்த்துக்கொள்வதா என்பதும் இதற்கொரு பிரச்சினையாயிருந்தது. ஆஸ்திரியாவைச் சேர்த்துக்கொண்டால், ஜெர்மன் அல்லாத பிற பகுதிகளும் இதில் சேர்ந்துவிடும். அதனால், இது ஒரு ஜெர்மன் கூட்டரசாக வராது. மேலும், பிற நாட்டு மக்களும் ஜெர்மனிக்குச் சட்டமியற்றும் நிலை ஏற்படும். அதன் விளைவாக ஆஸ்திரியாவும் அப் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்று, ஜெர்மனியை ஆட்டிப் படைக்க முயலக்கூடும். ஆதலின், இதனைப் பெருவாரியான உறுப்பினர்கள் எதிர்த்தனர். ஜெர்மன் இளவரசர்களை மட்டும் சேர்த்துக்கொண்டால், ஆஸ்திரியா முற்றிலும் விலக்கப்படும். ஆனால், அதனை ஆஸ்திரியா எதிர்க்கக்கூடும். ஆயினும், பெரும் வாக்கு வாதத்திற்குப் பின்னர், ஜெர்மன் மாநிலங்களை மட்டும் சேர்த்துக்கொள்வது என்று முடிவு செய்யப்பட்டது.

இணைந்த ஜெர்மனிக்கு யாரைத் தலைவராக நியமிப்பது என்பதிலும் பெரும் பிரச்சினையெழுந்தது. இதுகாறும் ஜெர்மன் கூட்டரசின் தலைவராக ஆஸ்திரியாவே திகழ்ந்தது. அதனைப் பெருவாரியான ஜெர்மன் சிற்றரசுகள் எதிர்த்தன. ஆகவே, தலைமையைப் பிரஷ்யாவுக்கு வழங்குவதென அவர்கள் முடிவு செய்தனர். இணைந்த ஜெர்மனியின் மணிமுடியைப் பிரஷ்ய அரசர் 4ஆம் பிரடெரிக் வில்லியத்திற்கு வழங்குவதெனவும்

[1] **Ketelbey, p. 177.**

முடிவு செய்யப்பட்டது (1849 மார்ச்) ஜெர்மன். ஐக்கியத்தினைப் பெரிதும் எதிர்த்தது. பிராங்க்பர்ட் பாராளுமன்றத் தீர்மானங்களையும் அது வன்மையாகக் கண்டித்தது. ஆஸ்திரியாவின் எதிர்ப்பைக் கண்டு, 4ஆம் பிரடெரிக் வில்லியம் பெரிதும் அஞ்சினர். மாபெரும் வல்லரசான ஆஸ்திரியாவை எதிர்த்துப் போரிடுவதென்பது அவரால் இயலாததொன்று. பிற பிற்போக்கு வல்லரசுகளும் ஆஸ்திரியாவையே ஆதரித்தன. ரஷ்ய அரசர் முதலாம் சார் நிக்கலொஸ், ஜெர்மனியின் அனைத்துச் செயல்களையும் வன்மையாகக் கண்டித்தார். ஜெர்மன் புரட்சியினை அடக்க ஆஸ்திரியாவுக்குத் துணைபுரியவும் ரஷ்யா தயாராய் நின்றது. 4ஆம் பிரடெரிக் வில்லியம் அனைத்துப் பிற்போக்கு வல்லரசுகளின் கண்டனத்திற்குள்ளானர்.

4ஆம் பிரடெரிக் வில்லியத்தினைச் சந்தித்துப் பாராளுமன்ற முடிவைக் கூற, குழு ஒன்று அனுப்பப்பட்டது. அக் குழு ஜெர்மனியின் இணைந்த மணிமுடியை அவருக்கு வழங்கியபோது, அரசர் அதனை ஏற்க மறுத்தார் (28, ஏப்ரல் 1849). 'நான் புரட்சியின் அடிமையாக இருக்க விரும்பவில்லை. நீங்கள் வழங்கும் மணிமுடி சேற்றிலிருந்து வருவது. அது அவமானத்தின் சின்னம்' எனக் கூறி, அம் மணிமுடியினை ஏற்க மறுத்தார். புரட்சியினை முற்றிலும் வெறுத்த அம் மன்னர், புரட்சியாளர்கள் வழங்கிய மணிமுடியினை யேற்க மறுத்ததில் வியப்பேதுமில்லை. அடுத்து வில்லியம், ஆஸ்திரியாவை எதிர்க்கவும் துணியவில்லை. மேலும், சுங்க ஐக்கியத்தால் தமக்கு எதிர்ப்பு மிகுந்ததையும் உணர்ந்தார் இவ்வரசர். பவேரியா, சாக்சனி, ஹனேவர் போன்ற சிற்றரசுகள் அதனை விரும்பாது ஆஸ்திரியாவின் பக்கம் சாய்ந்து விடலாமெனவும் இவர் அஞ்சினர். அதனல், ஜெர்மன் இணைப்பிற்குத் தலைமையேற்க, பெரிதும் தயங்கினர். 1849-ல் ஜெர்மனியை ஒன்றிணைக்கும் மகத்தான வாய்ப்பினை 4ஆம் பிரடெரிக் வில்லியம் இழந்தார்.

இணைந்த ஜெர்மனியின் மணிமுடியை இவர் ஏற்க மறுத்தது ஜெர்மன் ஐக்கியத்திற்குக் கிடைத்த மாபெரும் இழப்பாகும். பிராங்க்பர்ட் பாராளுமன்ற முயற்சி தோல்வியில் முடிந்தது. ஆஸ்திரிய உறுப்பினர்கள் அதிலிருந்து முன்னரே வெளியேறி விட்டனர். மற்றோரும் வெளியேறிய வண்ணமிருந்தனர். அம் மன்றமும் படிப்படியாகக் குறைந்து கலைந்தது.

இப் பாராளுமன்ற முயற்சியின் தோல்வியைக் கண்டு பெரிதும் ஏமாற்றமுற்ற மக்கள் மீண்டும் புரட்சி செய்யத் தலைப்பட்டனர்.

1849, மேத் திங்களில் பாலாடினேட், சாக்சனி, பேடன், சைலீசியா போன்ற இடங்களில் புரட்சியின் விளைவாக அப் பகுதிகளின் சிற்றரசர்கள் பதவியிலிருந்து அகற்றப்பட்டனர். பிரஷ்யப் படைகள் அப் புரட்சிகளை அடக்கி அவ்வரசர்களை மீண்டும் பதவியில் அமர்த்தின. பிரஷ்யாவும் புரட்சியில் ஈடுபட்டது. அதுவும் பிரஷ்யப் படைகளால் அடக்கப்பட்டது. பிரஷ்யப் பாராளுமன்றமும் கலைக்கப்பட்டது. 1848 புரட்சி ஜெர்மனியில் எங்கும் தோல்வியில் முடிந்தது.

### 4ஆம் பிரடெரிக் வில்லியத்தின் இணைப்பு முயற்சி

4ஆம் பிரடெரிக் வில்லியம் பிற்போக்காளராயினும் ஜெர்மன் இணைப்பில் நம்பிக்கைமிக்கவர். தம்முடைய இறையுரிமைக் கோட்பாட்டின் அடிப்படையில் ஜெர்மனியை ஒன்றிணைக்க முனைந்தார். பாராளுமன்ற முறையில் நம்பிக்கையற்ற அவர் பாராளுமன்றம் ஜெர்மனியை இணைப்பதை வெறுத்தார். 'அரசர்கள் குழு' (The College of Kings) ஒன்றினையமைத்து, அதன்மூலம் இவர் ஜெர்மனியை இணைக்க முயன்றார். ஆஸ்திரியா அதனை ஏற்பதுபோல் நடித்தாலும் அதனை மறைமுகமாக எதிர்த்தது. 1849ஆம் ஆண்டு, மேத் திங்கள், 17ஆம் நாள் ஜெர்மன் அரசர் மாநாடு ஒன்றினைக் கூட்டி, ஜெர்மனிக்கு அரசியல் அமைப்பொன்றினைத் தயாரிக்குமாறு வேண்டினார். ஆஸ்திரியா முதல் கூட்டத்திற்கு வந்தது. பின்னர் நடந்த கூட்டங்களை அது முற்றிலும் புறக்கணித்தது. ஆயினும், மே மாதம், 26ஆம் நாள் (1849) ஜெர்மனியை இணைக்கும்பொருட்டு, இவர் மூன்று அரசர்கள் குழு ஒன்றினை நிறுவினார். அனைத்து ஜெர்மன் மாநிலங்களும் ஜெர்மனியில் இணைய வேண்டுமெனவும், அனைவரும் பிரஷ்யத் தலைமையை ஏற்கவேண்டுமெனவும் 4ஆம் பிரடெரிக் வில்லியம் வேண்டுகோள் விடுத்தார். அனைத்து ஜெர்மன் அரசுகளும் இதனைப் பெரிதும் வரவேற்றன. 17 சிற்றரசுகள் உடனே இதில் சேர்ந்தன. பெரிய மாநிலங்களான பவேரியாவும், விட்டன்பர்க்கும் இதில் சேர மறுத்தன. ஹனோவரும், சாக்சனியும் மூன்று அரசர்கள் குழுவிலிருந்து (League of the Three Kings) விலகிக்கொண்டு பவேரியா, விட்டன்பர்க் போன்ற அரசுகளோடு இணைந்து, நான்கு அரசுகள் கூட்டணியை நிறுவின. இது பிரஷ்யாவை எதிர்த்துக் கூட்டப்பெற்ற கூட்டணியாகும். இதனைக் கண்டு ஒருசிறிதும் அஞ்சாத 4ஆம் பிரடெரிக் வில்லியம், பிரஷ்யத் தலைமையில் அமைந்த ஜெர்மன் குழுவின் கூட்டமொன்றை எர்படர் என்ற இடத்தில் 1850ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் கூட்டினார். ஆஸ்திரியா இதனைப் பெரிதும்

எதிர்த்தது. ஜெர்மன் கூட்டமைப்பிலிருந்து ஆஸ்திரியா விலக்கப் பட்டதே இதற்குக் காரணம். பழைய ஜெர்மன் கூட்டமைப்பை மீண்டும் நிறுவுமாறு அது பிரஷ்யாவை வேண்டியது. ஹங்கேரியில் தோன்றிய புரட்சியை அடக்குவதில் ஆஸ்திரியா தீவிர கவனம் செலுத்த நேரிட்டதால், பிரஷ்யாவை மேலும் வற்புறுத்த இயல வில்லை. ஆகவே, ஆஸ்திரிய எச்சரிக்கையினையும் பிரஷ்யா புறக்கணித்தது.

**ஹெஸ்ஸி-கேசல் சிக்கல்** (The Hesse–Cassel Crisis, 1850)

பிரஷ்யா, பிரச்சினைகளைத் துணிவுடனும், தொலைநோக் குடனும் எதிர்நோக்கிச் செயல்பட்டபோது ஹெஸ்ஸி-காசல் பகுதி யில் ஒரு பெரும் அரசியல் குழப்பம் விளைந்தது. ஹெஸ்ஸி-காசல் தேர்வாளர் பிரஷ்யக் கூட்டணியிலிருந்து விலகிக்கொண்டதோடு, தாம் முன்னர் மக்களுக்கு வழங்கியிருந்த அரசியல் அமைப் பினையும் நிராகரித்தார். அம் மக்கள் புரட்சி செய்ததுடன் 4ஆம் பிரடெரிக் வில்லியத்தையும் தங்களுக்கு உதவுமாறு வேண்டினர். ஹெஸ்ஸி தேர்வாளர் பிரஷ்யக் கூட்டணிக்கு எதிராகச் செயல் பட்டது ஜெர்மன் வரலாற்றில் ஒரு பெரும் களங்கமாகும். அவர் பழைய ஜெர்மன் கூட்டரசையும், பழைய பாராளுமன்றத்தையும் தம்மை ஆதரிக்குமாறு வேண்டினர். பவேரியாவும் உட்டன் பர்க்கும் ஆஸ்திரியாவுடன் கூடி, பிரஷ்யாவை எதிர்த்தன. இதனைக் கண்ட பல ஜெர்மன் சிற்றரசுகளும் பிரஷ்யாவை எதிர்த்தன. ஆஸ்திரியா அத்தகைய அரசுகளைத் தூண்டிவிட்டது. நாட்டுப்பற்று சிறிதுமில்லாத, தன்னல ஜெர்மன் சிற்றரசுகள் பல ஆஸ்திரியாவுடன் சேர்ந்துகொண்டு ஜெர்மன் இணைப்பையும் எதிர்த்தன. இதனால், ஆஸ்திரியாவும், பிரஷ்யாவும் நேரடியாக மோதிக்கொள்ளும் சூழ்நிலை ஏற்பட்டது. ரஷ்ய அரசர் முதலாம் சார் நிக்கொலஸ் ஆஸ்திரியாவையே பெரிதும் ஆதரித்தார். ‘ஆஸ்திரியா உடன்பாட்டுவழி நிற்கிறது. பிரஷ்யா புரட்சிவழி நிற்கிறது. உடன்பாட்டு வழியினை ரஷ்யா என்றும் ஆதரிக்கும்’ எனவும் அவர் அறிவித்தார். இப் பிரச்சினைக்கு முடிவொன்று காண முதலாம் சார் நிக்கொலஸ் தலைமையில் வார்சாவில் (1850, அக்டோபர்) கூட்டமொன்றும் கூட்டப்பெற்றது. அதில் நிக்கொலஸ் ஆஸ்திரியாவையே பெரிதும் ஆதரித்தார். பிரஷ்யாவைப் பெரிதும் இம் மாநாட்டில் கண்டித்தார்,

ஹங்கேரியப் புரட்சியும் இதற்கிடையில் அடக்கப்பட்டது. அங்கு ஆஸ்திரியப்படைகள் புரட்சியினை வெற்றிகரமாக முறியடித்து விட்டுத் திரும்பியிருந்தன. ஆகவே, ஆஸ்திரியா பெரும் மிடுக்குடன் தனது ஆதிக்கம் மீண்டும் ஜெர்மனியில் நிறுவப்பட

வேண்டுமென உறுதியாய் நின்றது. 4ஆம் பிரடெரிக் வில்லியமும் போரை விரும்பாது அமைதியில் செல்ல விரும்பினர்.

**ஒல்மட்ஸ் கன்வென்ஷன் (1850, நவம்பர்)**

ஜெர்மன் பிரச்சினையை ஆய்வதற்காக மீண்டும் ஒல்மட்ஸ் என்ற இடத்திலொரு கன்வென்ஷன் கூட்டப்பெற்றது. இது வரலாற்றுச் சிறப்புமிக்க ஒன்ருகும். இதன்மூலம் ஆஸ்திரிய ஆதிக்கம் மீண்டும் ஜெர்மனியில் நிறுவப்பட்டது. ஜெர்மன் கூட்டரசுக்கு மீண்டும் ஆஸ்திரியா தலைமையேற்றது. 4ஆம் பிரடெரிக் வில்லியமும் இதன் கோட்பாடுகளனைத்தையும் ஏற்றுக் கொண்டார். அதன்படி (1) 4ஆம் பிரடெரிக் வில்லியம் ரஷ்யக் கூட்டணியைக் கலைத்தார். (2) மீண்டும் பழைய ஜெர்மன் கூட்டரசு நிறுவப்பட்டது. (3) ஹெஸ்ஸியின் உரிமையைப் பேண ஆஸ்திரியாவுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

ஜெர்மன் இணைப்பு ஒரு கனவானது. பிரஷ்யா தனது முயற்சியில் தோற்றது. ஆஸ்திரியா வெற்றிபெற்றுச் சிறப்புற்றது. ஜெர்மன் ஐக்கியம் நிறைவேருதோ என்ற ஐயமும் பலருக்கு இதனல் ஏற்பட்டது. ஜெர்மன் மக்கள் இதனல் பெரிதும் ஏமாற்ற மெய்தினர். ஆயினும், இத் தோல்வி அவர்களை மேலும் ஒன்று படுத்தியது. அவர்களிடையே நாட்டுப்பற்றும் மிகுந்தது. தங்கள் தந்தை நாட்டை எவ்வாறேனும் ஒன்றுபடுத்துவதெனவும் அவர்கள் உறுதிபூண்டனர்.

**இப் புரட்சி தோல்வியுறக் காரணங்கள்**

1. **ஆஸ்திரியப் படையின் விசுவாசம்:** புரட்சியின்போது ஆஸ்திரியப் படைகள் பல்வேறு சமயங்களில் தோற்கடிக்கப்பட்டது உண்மையேயாகும். ஆயினும், இறுதியில் ஆஸ்திரியப் படைகள் வென்றன. இதற்குக் காரணம், ஆஸ்திரியப் படைகளிடமிருந்த ஒற்றுமையும், துணிவும், அவற்றிற்கு அரசரிடமிருந்த விசுவாச முமேயாகும். பேரரசு தலைமைக்குக் கட்டுப்பட்டு ஒழுங்காக முறைப்படி, துணிவுடன் செயலாற்றியதால், ஆஸ்திரியப் படைகள் இறுதியில் புரட்சிகளை அடக்கின. வின்டிஸ்கிரேட்ஸ், ரடெட்ஸ்கி போன்ற படைத் தலைவர்களின் திறமையும், தியாகமும் இறுதியில் ஆஸ்திரியா வெற்றிபெற உதவின. ஆஸ்திரியப் படைகளிடமிருந்த நாட்டுப்பற்றும் அவை வெற்றிபெறப் பெரிதும் துணை நின்றன.

2. **பல்வேறு இனங்களிடைய ஒற்றுமையின்மை:** ஆஸ்திரியப் பேரரசு, பல்வேறு இனங்களைக்கொண்ட பேரரசு. அங்கு மொழி, சமயம், பண்பாடு போன்ற வேற்றுமைகள் மிகுந்து கிடந்தன,

ஆதலின், அப் பேரரசினைப் பல இனப் பொருட்காட்சி சாலை என்பர் பலர். ஆதலின், ஒற்றுமையுணர்வு அம் மக்களிடையே இல்லாது போயிற்று. அவர்களுடைய நோக்கம், அரசியல் கோட்பாடுகள் போன்று அவை மாறுபட்டிருந்த காரணத்தால், அவர்கள் ஒன்றுபட்டுச் செயல்பட முடியவில்லை. ஹங்கேரி, இத்தாலி, ஜெர்மனி, பொஹிமியா போன்ற பல்வேறு நாட்டு மக்கள் ஒன்றுபட்டுச் செயலாற்றி வெற்றிபெறுவதென்பது இயலாதுபோயிற்று. ஹங்கேரி போன்ற அப் பேரரசுக்குட்பட்ட பகுதிகளில் பல்வேறு இன மக்கள் வாழ்ந்தனர். அம் மக்களிடையே இருந்த இன வேறுபாடும் அவர்கள் தோல்வியுறக் காரணமானது.

3. **திறமையற்ற தலைமை:** பல்வேறு நாடுகளிலும் புரட்சி தோல்வியுறக் காரணம், அந்நாடுகளின் திறமையற்ற தலைமையே யாகும். சான்றாக, இத்தாலியில் புரட்சிப் படைகளுக்குத் தலைமை யேற்றுச் செயலாற்றியவர் புகழ்மிகு சார்லஸ் ஆல்பர்ட்டாவார். நேர்மையும், நாட்டுப்பற்றும் மிக்க இவரும் பல தவறுகளைச் செய்தார். தொடக்கத்தில் ஆஸ்திரியர்கள் பலவிடங்களில் தோற்கடிக்கப்பட்டதை இவர் தமது வெற்றிக்குப் பயன்படுத்திக் கொள்ளத் தவறிவிட்டார். ரெடட்ஸ்கி போன்ற படைத் தலைவர்கள் இந்நிலையைத் தங்களது வெற்றிக்குப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டார்கள். இதனால், இத்தாலியர்கள் வெகு எளிதாகத் தோற்கடிக்கப்பட்டனர். மாஜினியைப் பொறுத்தமட்டில் அவர் ஒரு படைத் தலைவரன்று. அவர் கனவுலகில் நின்று நடைமுறை யறியாது, குடியரசு நிறுவ முயன்று தோல்வியுற்றார். கரிபால்டியும் ஓர் ஒப்பற்ற தலைவரென்பதில் ஐயமில்லை. நாட்டுப்பற்று மிக்க அவரும் நடைமுறையை அறியாது போனார். தமது சிறிய செஞ்சட்டைப் படை மாபெரும் வல்லரசை எதிர்த்தும் போரிட்டு வெற்றி பெறுமா என்பதை அவர் ஆராயத் தவறினார். மாஜினியும், கரிபால்டியும் இளம் இத்தாலிய உறுப்பினர்களே. எவ்வகை வெளித் துணையுமன்றித் தங்களது தாயகத்தைக் காக்க முடியுமென இவர்கள் உறுதியாய் நம்பினர். இது அவர்களது முறையான திட்ட மின்மைக்கு நல்லதொரு சான்றாகும். நாட்டுப்பற்றையும் மாபெரும் கொள்கையினையும் கொண்ட அவர்கள் கூட தோல்வியுற நேர்ந்தது. அவ்வாறே ஹங்கேரியத் தலைவர்களும் நல்ல முன்நோக்குடன் செயல்படவில்லை. தங்களது வெற்றிக்கு ஒற்றுமை மிக முக்கிய மானதொன்று என்பதைப் புரிந்துகொள்ளத் தவறிவிட்டனர். குரோட் இன மக்களின் உரிமைகளையும் உணர்ச்சிகளையும் அத் தலைவர்கள் முற்றிலும் புறக்கணித்தது ஒரு விந்தையேயாகும். வரலாற்றுச் சிறப்புமிக்க கொசூத் என்பார்கூட, இதனையறியாதது வியப்புக்குரியதே. கருத்து வேறுபாடும், நல்ல தலைமையின்மையும்,

ஒற்றுமையின்மையும் அவர்களது தோல்விக்கும் வழிவகுத்தன. ஜெர்மனியிலும் நல்ல தலைமையின்மையால் புரட்சி தோல்வியுற்றது.

4. **பிற்போக்குவாதிகளின் எதிர்ப்பு :** முற்போக்கினர் மக்களது ஆதரவைப் பெற பெரிதும் தவறிவிட்டனர். அவர்கள் வாழ்ந்த காலத்துக்குச் சற்று முற்பட்டு அவர்கள் செயலாற்றிய காரணத்தால், மக்களும் அவர்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ள இயலவில்லை. நடுத்தர வகுப்பினரும், அறிஞர்களும், வணிகர்களும் அவர்களை ஆதரித்தனர். பிறர் அவர்கள் வழிநடக்கப் பெரிதும் தயங்கினர். மன்னராட்சியிலும், பழைமையிலும் ஊறித் திளைத்த மக்கள் புரட்சியினையும், தீவிரக் கொள்கைகளையும ஏற்க மறுத் தனர். அவர்களின் ஆதரவு புரட்சியாளர்களுக்குக் கிட்டவில்லை. அனைத்து நாடுகளிலும் பெருவாரியான மக்கள் உழவர்களே. அக் காலத்து ஐரோப்பிய உழவர்களனைவரும் பழைமையில் நாட்டம் மிக்கவர்களாகவே திகழ்ந்தனர். புரட்சியாளர்களாலும், தீவிர வாதிகளாலும் தங்களுக்கு நன்மையேற்படும் என்பதை அவர்கள் நம்ப மறுத்தனர். ஆதலின், அவர்கள் புரட்சியை ஆதரிக்க மறுத்ததுடன் பலவிடங்களில் பிற்போக்கினருடன் இணைந்து புரட்சியினை எதிர்த்தும் செயல்பட்டனர். மக்களது உண்மையான ஆதரவைப் பெறாத எப் புரட்சியும் வெற்றிபெறாது என்பதற்கு இப் புரட்சியே நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

5. **ரஷ்யத் தலையீடு :** ஆஸ்திரியாவுக்கு ரஷ்யா பெரிதும் துணையாய் நின்றது. ரஷ்யாவும் ஒரு பிற்போக்கு நாடுதான். ரஷ்யா ஒரு பிற்போக்கு நாடென்ற முறையில் பிற பிற்போக்கு நாடு களுடன் இணைந்து புரட்சிகளை நசுக்க முனைந்தது. மெட்டர்னிக்கின் சமகாலத்தவர்களில் ரஷ்ய அரசர் முதலாம் சார் நிக்கொலஸும் ஒருவர். இவரும் ஒரு தீவிர பிற்போக்குவாதி. பழைமையின் சின்னமாகவே இவர் திகழ்ந்தார். ஹங்கேரியில் புரட்சியேற்பட்டு அதன் விளைவாகக் குடியரசு அங்கு நிறுவப்பட்டதைக் கண்டு, இவர் பெரிதும் சினமுற்றார். மன்னருக்கெதிராகக் குடிமக்கள் சதி செய்வதை இவர் ஒரு மாபெரும் குற்றமென நம்பினார். ஹங்கேரிப் புரட்சியினை அடக்க ஆஸ்திரியா இவரது துணையை நாடியவுடன், இவரும் மனமுவந்து பெரும்படை யொன்றினை அங்கு அனுப்பி வைத்தார். அங்குப் புரட்சி நசுக்கப்பட்டதைக் கண்டு, பெரிதும் மகிழ்ந்தார். புரட்சியை அடக்குவதில் இவர் ஆஸ்திரியாவுக்குப் பெரும் துணையாய் நின்றார். அதுபோன்றே ஜெர்மனியிலும் இப் புரட்சி இவராலேதான் தோல்வியுற்றது. வார்சா மாநாட்டில் இவர் 4ஆம் பிரடெரிக் வில்லியத்தினைப் பெரிதும் அச்சுறுத்தினார். இவருக்கஞ்சியே 4ஆம் பிரடெரிக் வில்லியம் புரட்சியினை ஆதரிக்க

மறுத்தார். ஆதலின், ஜெர்மனியிலும் புரட்சி வெகு எளிதாக நசுக்கப்பட்டது. நாட்டுப் பற்றும் கொள்கை வெறியும்மிக்க புரட்சித் தலைவர்கள் நடையறியாது புரட்சிசெய்து தோல்வியுற்றனர். 1848 புரட்சி, புரட்சியாளர்களுக்கு நல்லதொரு படிப்பினையாகும்.

**இப் புரட்சியின் விளைவுகள்**

1815-லிருந்து 1850 வரையிலான காலம் ஐரோப்பிய அரசியலில் ஒரு சோதனைக் காலமே தவிர, சாதனைக் காலமல்ல.[1] முற்போக்குவாதிகளும். புரட்சியாளர்களும் 1815-லிருந்து 1850 வரையிலான காலத்தில் பெரும் சோதனைக்குட்படுத்தப்பட்டனர். பெரும் சோதனைகளுக்கும் போராட்டங்களுக்கும் இடையில் அவர்களது சாதனை தோல்வியில் முடிந்தது. ஆயினும், ஒரு இதை பயனற்ற புரட்சியெனக் கூறவுமியலாது. சிறப்பு மிக்க விளைவுகள் பலவற்றை இது விட்டுச் சென்றுள்ளது.

1. **ஃபிரான்சு :** ஃபிரான்சைப் பெறுத்தமட்டில் இப் புரட்சியின் விளைவாகக் குடியரசுக் கொள்கைகளும், சோசலிஸக் கொள்கைகளும் மிகவும் செல்வாக்கு பெற்றன. (1) இரண்டாவது குடியரசு அகற்றப்பட்டு, இரண்டாவது முடியரசு நிறுவப்பட்ட பின்னரும் குடியரசுக் கொள்கைகள் அங்கு முற்றிலும் அழிந்து படவில்லை. அது மீண்டும் வலிவும் பொலிவும் பெற்று இரண்டாவது முடியரசினையுமகற்றி அது மூன்றுவது குடியரசையும் நிறுவியது. மூன்றும் நெப்போலியனின் வீழ்ச்சிக்கும் அதுவே காரணம் மானது. (2) தொழிலாளர்களுடைய வறுமை மறுக்கமுடியாத மாபெரும் பிரச்சினையானது. மூன்றும் நெப்போலியன் அதனை உணர்ந்து செயல்பட்டும் வறுமையை முற்றிலும் ஒழிக்கமுடியவில்லை. அதுவே, அவரது வீழ்ச்சிக்கும் காரணமானது. (3) 1848 புரட்சி தோல்வியுற்றுலும், வயதுவந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை என்பது ஃபிரான்சின் நிலையான கொள்கையானது. (4) அடிமை முறை ஃபிரான்சிலும் அதன் குடியேற்ற நாடுகளிலும் முற்றிலும் அகற்றப்பட்டது. (5) இப் புரட்சியின் விளைவான முற்போக்குக் கொள்கைகளும், மக்களாட்சியும் வெற்றி பெற்றன; மக்களாட்சியும் நிலைத்து நின்றுவிட்டது. இரண்டாவது முடியரசு மூன்றும் நெப்போலியனின் தலைமையில் மீண்டும் நிறுவப்பட்ட போதும், மக்களாட்சியினையும், மக்களது உரிமைகளையும்

[1] In the realm of politics, the Period of 1815 to 1850 was one rather of aspiration than of achievement. Ketelbey—p.159.

அவரால் முற்றிலும் புறக்கணிக்க இயலவில்லை. ஃபிரான்சின் நிரந்தர செல்வாக்கு, மக்கள் கைக்கு வந்துவிட்டது.

2. **ஆஸ்திரியா :** ஆஸ்திரியப் பேரரசிலும் இப் புரட்சி சில நிலையான மாற்றங்களுக்கு வித்திட்டது. (1) நிலமானிய முறை இங்குப் பெரிதும் அகற்றப்பட்டது. உழவு, அடிமை முறை (Serfdom) இங்கு முற்றிலும் அகற்றப்பட்டது. (2) இப் புரட்சியால் நாட்டுப் பற்றினை ஹங்கேரியிலிருந்து முற்றிலும் அகற்ற முடியவில்லை. 1848 புரட்சிக்குப் பின்னரும் அது அங்குத் தொடர்ந்து மக்களை ஊக்குவித்தது. (3) பிற்போக்கின் சின்னமான மெட்டர்னிக்கும் அங்கு வீழ்ச்சியுற்ருர். அவரது வீழ்ச்சிக்குப் பின்னர், மக்களாட்சி போன்ற புதிய சக்திகள் அங்கும் குடியேறின.

3. **இத்தாலி :** புரட்சியின்போது சார்டினியா – பீட்மாண்டு அரசரான சார்லஸ் ஆல்பர்ட் வழங்கிய அரசியலமைப்பு அவரது வீழ்ச்சிக்குப் பின்னரும் பின்பற்றப்பட்டது. அவரது தோல்விக்குப் பின்னர், அரியணையேறிய அவருடைய மகன் இரண்டாம் விக்டர் இமானுவேலும் அதனைப் போற்றிப் பின்பற்றினுர். ஆஸ்திரியா இதனை வன்மையாக எதிர்த்தும் பயனில்லை. இத்தாலியென்ற பாலை நிலத்தில் சார்டினியா மட்டும் ஒரு வளமிக்க விளை நிலமாகத் தென்பட்டது. இத்தாலியில் அது நாட்டுப்பற்றின் நிலைக்களனுக மாறியது. பிற்கால இத்தாலிக்கு அது மாபெரும் கலங்கரை விளக்கமாய்த் திகழ்ந்தது. இத்தாலியப் புரட்சி 1848-ல் தோல்வியுற்ருலும், அது ஐக்கியத்தின் இன்றியமையாமையை மக்களுக்குத் தெளிவாக உணர்த்தியது. ஆஸ்திரிய ஆதிக்கத்தை எதிர்த்து ஒன்றுபட மக்களுக்கு அது பெரிதும் வழிகாட்டியது.

4. **ஜெர்மனி :** ஜெர்மனியைப் பொறுத்தமட்டில் இப் புரட்சி தோல்வியுற்றது என்பது மெய்யே. ஆயினும், அதனுல் ஜெர்மனி பெரிதும் நன்மை பெற்றது. பிரஷ்யாவைப் பொறுத்தமட்டில் வரம்பற்ற முடியாட்சி தனது பல அதிகாரங்களை இழந்தது. 4ஆம் பிரடெரிக் வில்லியம் ஓர் அரசியலமைப்பை வழங்கியதன்மூலம், பல கட்டுப்பாடுகளுக்குள்ளானுர். வரி செலுத்துவோர் அனைவர்க்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. பிரஷ்ய அரசியலமைப்பைப் பிற ஜெர்மன் மாநிலங்களும் பின்பற்றின. பிராங்க்பர்ட் பாராளுமன்றம் 1848-லேயே ஜெர்மனியை இணைக்க பெரிதும் முயன்றது. அம் முயற்சியில் அப்போது அது தோல்வியுற்ருலும் ஜெர்மனியர்களுக்கு அது ஐக்கியத்தின் இன்றியமையாமையைத் தெளிவாக உணர்த்தியது. பிரஷ்யாவும் தலைமை ஏற்க, இப் புரட்சி பெரிதும் உதவியது. பிரஷ்யா தனது முயற்சியில் தோல்வியுற்ருலும், இப்

புரட்சியின்மூலம் ஜெர்மனிக்குத் தலைமை ஏற்கும் தகுதியினை அது முற்றிலும் பெற்றது.

**பிற நாடுகள்**

இப் புரட்சியால் பெரிதும் நன்மையுற்ற நாடுகள் ஹாலந்து, பெல்ஜியம், டென்மார்க், ஸ்விட்சர்லாந்து போன்றவையாகும். இப் புரட்சியின் விளைவாக, பெல்ஜியத்தில் பலர் வாக்குரிமை பெற்றனர். அங்கு வாக்குரிமைக்கான சொத்தின் மதிப்பு பெரிதும் குறைக்கப்பட்டது. பல நல்ல சீர்திருத்தங்களும் அங்குப் புகுத்தப்பட்டன. ஹாலந்தும் இப் புரட்சியின் மூலம் நல்ல அரசியல் அமைப்பு ஒன்றினைப் பெற்றது. பாராளுமன்றம், அங்கு மேலும் பல உரிமைகளைப் பெற்றது, அங்கு மாநிலங்கள் சுயாட்சி பெற்றன. டென்மார்க்கும் 1849-ல் ஓர் அரசியல் அமைப்பைப் பெற்றது. ஸ்விட்சர்லாந்தும் மக்களாட்சியின் அடிப்படையில் கூட்டமைப்பு ஒன்றை நிறுவிக்கொண்டது. அங்குப் புராட்டஸ்டன்ட் கன்டோன்களும் கத்தோலிக்க கன்டோன்களுக்கு இணையாகப் பல உரிமைகளைப் பெற்றன.

**சமூக விளைவுகள்**

சமுதாயத் துறையிலும் இப் புரட்சி பல மாபெரும் மாற்றங்களுக்கு வித்திட்டது. ஃபிரான்சைப் பொறுத்தமட்டில் சோசலிச அடிப்படையில் அமைந்த இரண்டாவது குடியரசு தோல்வியுற்றாலும் தொழிலாளர்களின் நலனை எவரும் புறக்கணிக்க இயலாது என்பதற்கு இப் புரட்சி ஒரு படிப்பினையாய் அமைந்தது. இப் புரட்சி ஐரோப்பாவெங்குமிருந்த தொழிலாளர்களுக்குப் பெரும் ஊக்கத்தினைத் தந்தது. அவர்களது வறுமையினை அகற்றும் முயற்சிகள் பலவும் மேற்கொள்ளப்பட்டன. 1850-ல் இங்கிலாந்தில் தொழிலாளர்கள் 10 மணிகளுக்கு மேல் வேலை செய்யக் கூடாதென்ற சட்டம் நிறைவேறியது (Ten Hours Bill). அதனால், அவர்கள் வேலை நேரம் 10 மணிகளாகக் குறைக்கப்பட்டது. ஃபிரான்சிலும் தொழிலாளர்களின் முன்னேற்றத்திற்காகப் பல சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. பாட்டாளிகளின் நலனில் பலரும் அக்கறை காட்டினர். அவர்களுக்கும் வாக்குரிமை கொடுக்க வேண்டுமென்ற போராட்டம் ஏற்பட்டது. அவர்களும் வாக்குரிமை பெற்றனர். வாக்குரிமை பெற்ற தொழிலாளர்கள் ஒரு மாபெரும் அரசியல் சக்தியாக மாறினர். இதற்கு 1848 பிப்ரவரிப் புரட்சியே வித்திட்டதெனலாம்.

உழவுத் துறையிலும் இப் புரட்சி நல்ல பல மாற்றங்களுக்கு வித்திட்டது. ஐரோப்பாவில் பல இடங்களில் நிலமானிய

முறை அகற்றப்பட்டது. கட்டாய வேலையும் (Forced Labour), உழவு, அடிமை முறையும் அகற்றப்பட்டன. தனி மனித உரிமை வலியுறுத்தப்பெற்றது. 1789 ஃபிரெஞ்சுப் புரட்சி ஃபிரான்சுக்கு என்ன செய்ததோ, அதனை 1848 பிப்ரவரிப் புரட்சி ஐரோப்பா விற்குச் செய்தது. ஹெய்ஸ் என்பார் கூறுவதுபோன்று குழப்பமும் கூச்சலுமே இப் புரட்சியில் மிகுந்து காணப்பட்டாலும், நாட்டுப்பற்றும், முற்போக்கும் இதனுல் பெரிதும் வலியுறுத்தப் பட்டன [1] என்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

[1] Hayes—p. 680.

# 5. மெட்டர்னிக்
## (Metternich)

கவுன்ட் கிளமென்ஸ் மெட்டர்னிக் என்பார் ஐரோப்பிய வரலாற்றில் தலைசிறந்த அரசியல் வல்லுநராகக் கருதப்படுகிருர். கி. பி. 1815-லிருந்து 1848வரையிலான காலமே 'மெட்டர்னிக் காலம்' என அழைக்கப்பெறுகிறது. இவர் தமது அறநெறி ஆட்சியினை (Moral Dictatorship) ஆஸ்திரியாவில் மட்டும் நிறுவியதுடன் அமையாது, ஐரோப்பா முழுவதும் அமைத்து வெற்றி கண்டவர். இவர் காலத்து அரசியல் நாயகனே இவர்தான். 1815-லிருந்து 1848 வரையிலான காலத்தில் நிகழ்ந்த அத்துணை நிகழ்ச்சிகளிலும் இவர் தமது முத்திரையினை விட்டுச் சென்றுள்ளார்.

**இவரது இளமை வாழ்க்கை**

இவர் 1773-ல் செல்வக் குடும்பமொன்றில் ரைன்லாந்துக்கு அருகில் பிறந்தார். இளமையில் ஸ்டரஸ்பர்க் (Strassbourg) பல்கலைக்கழகத்தில் சிலகாலம் பயின்ருர். ஃபிரெஞ்சுப் புரட்சியால் அங்கு நிகழ்ந்த குழப்பம் காரணமாக, அப் பல்கலைக்கழகத்தை விட்டு வெளியேறி மெயின்ஸ் (Mainz) பல்கலைக்கழகத்தில் மீண்டும் சேர்ந்து தமது பல்கலைக்கழகப் படிப்பினை வெற்றிகரமாக முடித்தார். மெரியா தரிசாவின் தலைசிறந்த அமைச்சர்களில் ஒருவரான கானிட்ஸ் என்பாரது பேத்தியைத் திருமணம் செய்துகொண்டு, அரசியல் துறையில் இவர் மிக்க புகழுக்கு வந்தார். இவர் ஆஸ்திரியத் தூதராகவும் பல நாடுகளில் வெற்றிகரமாகப் பணியாற்றினர். பாரிஸிலும், பீட்டர்ஸ்பர்க்கிலும் பணிபுரிந்து, அந் நாடுகளின் நிலைமையினையும் இவர் நன்கு புரிந்துகொண்டார். நெப்போலியனுக்கு நான்காண்டுகளே இளையவரான இவர், பாரிஸில் பணிபுரிந்தபோது நெப்போலியனையும், அவரது நாட்டினையும், மக்களையும் கூர்ந்து நோக்கி, பலவற்றை நன்கு தெரிந்துகொண்டார். இவரது அரசியல் சிறப்புக்கு இவரது தூதரகப்பணி பெரிதும் துணையாயிருந்தது. 1809ஆம் ஆண்டில் பேரரசர் முதலாம் ஃபிரான்ஸிஸால் இவர் ஆஸ்திரியப் பேரரசின் தலைமையமைச்சராக நியமிக்கப்பட்டார். இவர் தொடக்கத்திலிருந்தே நெப்போலியனைப் பெரிதும் வெறுத்தார். 1813-ல்

நெப்போலியனின் தோல்விக்கு இவரே பெருங் காரணமாவார். நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின்னர், வியன்னு மாநாட்டிற்குத் தலைமையேற்று, அதனைச் சிறப்புற நடத்தியவரும் இவரே. தமது தலைசிறந்த 'மெட்டர்னிக் முறை' யை (Metternich system) வியன்னு மாநாட்டிற்குப் பின்னர், ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் புகுத்தி வெற்றிகண்டார். மிகப் பிற்போக்குவாதியான இவர் முற்போக்குக் கருத்துகளைக் களைவதில் பெரிதும் நாட்டம் செலுத்தினர். அடக்குமுறை ஒன்றினையே கையாண்டு, சிறிது காலம் வெற்றிபெற்று, இறுதியில் இவர் தோல்வியுற்ருர்.

மிக்க அழகும், பேச்சுத் திறனும், அறிவும், செல்வச் சிறப்பும் மிக்க இவர், ஐரோப்பிய அரசியலில் பெரிதும் சிறப்புற்றுத் திகழ்ந்தார். இவர் தமது நகைச்சுவையால் அனைவரையும் கவர்ந் தார். இவரது அறிவாற்றலையும், அரசியல் நுட்பத்தையுங் கண்டு வியந்த பலர், இவரை அரசியல் அறிஞர்களுள் இளவரசர் (Prince of the diplomatists) எனப் போற்றினர். ஐரோப்பிய மொழிகள் பலவற்றினைக் கற்றுத்தேர்ந்திருந்த இவர் ஐரோப்பிய அரசியலுக்குத் தலைமையேற்றதில் வியப்பேதுமில்லை. இவர் தம்மை ஐரோப்பாவின் 'மெசைய்யா' எனவும் எண்ணிக்கொண்டார். உலகமே தமது தலையின் மீதுதான் சுழல்கிறதெனவும் இவர் கருதினர். 'எல்லாக் கண்களும் என்னையே உற்று நோக்குகின்றன. அனைவரும் அனைத் திற்கும் என்னையே எதிர்பார்த்து நிற்கின்றனர்' என்பது இவர் தம் கூற்று. இவர் தாம் மட்டும் சிந்திப்பதாகவும், தாம் மட்டும் அனைவருக்கும் செயலாற்றுவதாகவும், தாம் இல்லையெனில் உலகே இயங்காதெனவும் பெருமிதப்பட்டுக்கொள்வார். வீழ்ச்சிக்குப் பின்னரும் கூட, இவர் தமது தோல்வியை ஒப்புக்கொள்ள மறுத்தார். 'இவ்வுலகுக்கு நான் சற்று முன்னரோ அல்லது சற்று பின்னரோ வந்துவிட்டேன்' அதுதான் எனது தோல்விக்குக் காரணமெனச் சொல்லிக்கொண்டார். இவர்தம் முறை தோல்வியே யெனினும், இவர் ஐரோப்பிய வரலாறு கண்ட மாமனிதர்களில் ஒருவராவார்.

**இவரது தன்மைகள்**

**1. பிற்போக்குத் தன்மை :** மெட்டர்னிக் ஒரு மாபெரும் பிற் போக்குவாதியாவார். பழைய முறையினைக் கட்டிக் காப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தார். இவர் வரம்பற்ற வல்லாட்சியின் மாபெரும் பாதுகாவலராயும், செல்வர்கள், சமய குருமார்களின் உரிமைகளைப் பேணுவதில் நாட்டமிக்கவராயும் இருந்தார். எளிய, மக்களையோ அல்லது அவர்களின் உரிமைகளையோ இவர் ஒரு

பொருட்டாகவே மதிக்கவில்லை. உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் போன்ற கொள்கைகளின் மாபெரும் பகைவராயும் இவர் திகழ்ந்தார்.

**2. முற்போக்கு இயக்கங்களை விரும்பாதவர் :** இவர் முற்போக்குக் கொள்கைகளையும், மக்களாட்சியினையும், புரட்சியினையும் தீவிரமாக வெறுத்தார். அவற்றால் பழைய முறையும், பழைய ஆட்சியும் அழியுமென அஞ்சினார். அவற்றால், குழப்பமே மிகும் எனவும் இவர் கருதினார். ஆகவே, புரட்சியினை அடக்கப் பெரிதும் துணிந்தார்.

முற்போக்குக் கொள்கைகளை முறியடிப்பதற்காக இவர் தமது சிறப்புமிக்க 'மெட்டர்னிக் முறை' யினையும் தொடங்கினார். இம் முறையின் மூலம் பல நாடுகளில் தோன்றிய புரட்சியினை வன்முறையில் ஈடுபட்டு அடக்கினார். ஐரோப்பா முழுவதிலும் தமது முறையினைத் திறம்படச் செயல்படுத்த ஐவர் கூட்டணி ஒன்றினையும் நிறுவினார். அக் கூட்டணியின் நோக்கமே புரட்சியினைத் தடுத்தலேயாம். ஐரோப்பியக் கூட்டணியின் தலைவராயிருந்து 30 ஆண்டுகளுக்குமேல் தமது அடக்குமுறை ஆட்சியினைத் திறம்பட நடத்தினார்.

**3. நாட்டுப்பற்றின் பகைவர் :** இவர் நாட்டுப்பற்றின் பெரும் பகைவராயிருந்தார். ஏனெனில், நாட்டுப்பற்று தமது பேரரசினையே அழிக்குமோவென இவர் அஞ்சினார். ஆஸ்திரியப் பேரரசு என்பது பல நாடுகளை, பல இன மக்களை, பல மொழியினரை, பல சமயத்தினரைக் கொண்ட ஒரு பொருட்காட்சிச்சாலை என்பது முன்னரே விவரிக்கப்பட்டுள்ளது. 1789 ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், நாட்டுப்பற்று மிகுந்த பல்வேறு நாட்டு மக்களும் புரட்சியில் ஈடுபட்டனர். ஆஸ்திரியப் பேரரசின் கீழிருந்த பல்வேறு நாட்டு மக்களும் நாட்டுப்பற்றின் காரணமாகப் புரட்சி செய்தனர். நாட்டுப் பற்றினை வளரவிட்டால், தமது பேரரசு சிதைவுறும் என்பதை நன்குணர்ந்த மெட்டர்னிக், அதன் சக்தியினை முறியடிப்பதில் முழுக் கவனம் செலுத்தினார். நாட்டுப் பற்றினை முறியடிப்பதிலேயே இவர் தமது முழுக் கவனத்தையும் செலுத்தினார்.

**ஆஸ்திரியப் பேரரசின் நிலை**

**1. ஒற்றுமை இன்மை :** வியன்னா மாநாட்டுக்கு முன்னர், ஆஸ்திரியப் பேரரசு பரந்து விரிந்து கிடந்தது. பல்வேறு துறைகளிலும் அப் பேரரசு பெரிதும் மாறுபட்டுக் கிடந்தது. வியன்னா

மாநாட்டிற்குப் பின்னர், அப் பேரரசு பெரிதும் சிறப்புற்றது. ஆயினும், அப் பேரரசில் காணப்பட்ட வேற்றுமைகளை வியன்னு மாநாட்டால் போக்க முடியவில்லை. ஜெர்மனியர்கள், மாகியர்கள் (Magyars), செக் இனத்தினர் (Czechs), ஸ்லாவினர் (Slavs), இத்தாலியர்கள் போன்ற பல்வேறு இனத்தினரும், நாட்டினரும் அங்கு வாழ்ந்த காரணத்தால், அவர்களிடையே ஒற்றுமை என்பது இல்லாமலிருந்தது. நாட்டுப்பற்றும் அப் பேரரசில் பரவியது. அப் பேரரசிலிருந்த பல்வேறு நாட்டு மக்களும் நாட்டுப் பற்றுக் காரணமாகத் தனி அரசுகள் நியமிக்கப் பெரிதும் விழைந்தனர். இதுவே ஆஸ்திரியப் பேரரசின் சிதைவுக்குக் காரணமாகும்.

2. **வல்லரசு** : ஆஸ்திரியப் பேரரசு ஒரு வரம்பற்ற வல்லரசாகும். அங்குப் பாராளுமன்றம் செயல்படவில்லை. வேறு மக்கள் மன்றங்களும் ஆங்கில்லை. ஆதலால், அரசால் மக்களின் உணர்வுகளைப் புரிந்துகொள்ளுவதற்கு வாய்ப்பேதும் இல்லாமற்போய் விட்டது. மக்களது நலன் குறித்தும் அரசு கவலைப்படவில்லை. சீர்திருத்தங்கள் எதுவும் அப் பேரரசில் புகுத்தப்படவில்லை. நல்ல பொருளாதாரத் திட்டம் எதனையும் அரசு கொண்டிருக்கவில்லை. அதனால், மக்களுக்கும் அரசுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லாமற்போயிற்று.

**சமூகப் பொருளாதார நிலை**

செல்வர்கள், நடுத்தர வகுப்பினர், உழவர்கள் எனும் முப்பெரும் பிரிவுகள் அங்குக் காணப்பட்டன. 1789-க்கு முந்திய ஃபிரெஞ்சுச் செல்வர்களைப்போன்று இச் செல்வர்களும் அனைத்துச் சீர்மைகளையும் கொண்டு சிறப்பாக வாழ்ந்தனர். ஆடம்பரத்திலும், பகட்டான உடைகளிலும், தேவையற்ற போர்களிலும் ஈடுபட்டுச் செல்வர்கள் நாட்டின் செல்வத்தை வீணடித்தனர். பெரும்பாலும் அவர்கள் வரிகளிலிருந்து விலக்களிக்கப்பட்டிருந்தனர். ஆகவே, அவர்களிடமே செல்வம் குவிந்ததால், அதனைத் தவறான முறையில் செலவுசெய்தனர். நடுத்தர வகுப்பு மக்கள் மிகச் சிறுபான்மையினர் என்ற காரணத்தால், அவர்கள் பேரரசில் எத்தகைய செல்வாக்குமின்றி வாழ்ந்தனர். அப் பேரரசிலிருந்த பெரும்பான்மையான மக்கள் உழவர்களே. அவர்களுக்கு எத்தகைய உரிமையும் வழங்கப்படவில்லை. கடனில் பிறந்து, கடனில் வாழ்ந்து, கடனிலேயே மறைந்த மக்கள் அம் மக்கள். வறுமை, பிணி இவற்றினைத் தவிர, பிறவற்றை அம் மக்கள் கண்டிலர். உழவினை முன்னேற்ற, அரசு எத்தகைய நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவில்லை. உழவர்களுள் பெரும்பாலோர் அடிமைகள்

என்ற காரணத்தால், அவர்களும் தங்களது உரிமைகளை மறந்து, மூட நம்பிக்கைகளில் திளைத்திருந்தனர். அவர்களது அறியாமையைப் போக்கவல்ல நல்ல கல்வித் திட்டத்தினை அரசு மேற்கொள்ளவில்லை. சமய அடிப்படையிலமைந்த கல்வி, மூட நம்பிக்கைகளுக்கே மேலும் தூபமிட்டது. பிற நாடுகளைப்போன்று இப் பேரரசு, தொழில் துறை முன்னேற்றத்திலும் ஆர்வம் காட்டவில்லை. வல்லாட்சியும், வறுமையும், நிலமானிய முறைகளுமே அப் பேரரசின் சிறப்பியல்புகளாக இருந்தன. இத்தகைய பேரரசின் தலைமைப் பொறுப்பையே1809-ல் மெட்டர்னிக் ஏற்றார்.

## இவரது வெளிநாட்டுக் கொள்கை

1809ஆம் ஆண்டு, ஆஸ்திரியச் சான்சலராகப் பதவியேற்ற இவர், பல பிரச்சினைகளை எதிர்நோக்க நேரிட்டது. ஃபிரான்சும் ரஷ்யாவுமே தமது பேரரசின் எதிர்காலத்தைப் பாதிக்கவல்ல வல்லரசுகள் என்பதை இவர் தெளிவாக உணர்ந்தார். மேற்கே ஃபிரான்சும், கிழக்கே ரஷ்யாவும் தமது நாட்டின்மீது ஆதிக்கம் செலுத்தும் வாய்ப்பினை எதிர்நோக்கி நிற்கின்றன என்பதை இவர் தெளிவாக உணர்ந்தார். இந்த இக்கட்டான சூழலிலிருந்து தமது பேரரசினைக் காப்பதே இவரது பெரு முயற்சியானது. இந்த இக்கட்டான சூழ்நிலையிலும் இவர் தமது மன உறுதியை இழக்காதது இவரது தனிச் சிறப்பாகும். தமது பகை நாடுகளான ஃபிரான்சையும் ரஷ்யாவையும் மோதவிட்டு, அதிலிருந்து நன்மை பெறவே இவர் பெரிதும் விழைந்தார்.

## ஃபிரான்சுக்கெதிரான இவரது கொள்கை

ஃபிரான்சில் தமது ஆதிக்கத்தினை நிலைநாட்ட விழைந்த இப் பெருமகனார் அதற்கொரு வழியினையும் கண்டார். போர் மூலமோ அல்லது அரசியல் சூழ்ச்சி மூலமோ மாவீரன் நெப்போலியனை வீழ்த்த முடியாது என்பதனைத் தெளிவாக உணர்ந்து அதனைத் தம் அழகுமிகு இளவரசி மூலம் சாதிக்கத் துணிந்தார். மமதைமிகு நெப்போலியனும் அதற்கு உட்பட்டார். ஆஸ்திரிய இளவரசியான மேரி லூசியாவை இவர் நெப்போலியனுக்குத் திருமணம் செய்துவைத்தார். இதன்மூலம் ஆஸ்திரிய வாரிசொன்று ஃபிரெஞ்சு அரியணை ஏறும் எனவும் இவர் நம்பினார். ஆயினும், அம்முறையால் பயனேதும் இல்லாது போயிற்று. அதன் பின்னர், நெப்போலியனை வீழ்த்த ரஷ்யாவை ஒரு கருவியாகப் பயன்படுத்த இவர் துணிந்தார். கி.பி. 1806-ல் கண்ட திட்டத்தால் பெரிதும் அவதியுற்ற முதலாம் சார் அலெக்ஸாந்தர் நெப்போலியனை வன்மையாக எதிர்க்க முனைந்தார். அதனால், சார்

அலெக்ஸாந்தருக்கும் நெப்போலியனுக்குமிடையே பெரும் பகை வளர்வதாயிற்று. மெட்டர்னிக், தமது சூழ்ச்சித் திறனால் அவர்களுக்கிடையே இருந்த பகையை மேலும் வளர்த்தார். இதுதான் அவரது அரசியல் சூழ்ச்சித் திறனின் சிறப்பாகும். ரஷ்யப் படையெடுப்புக்கு முன்னர் நெப்போலியன் ஆஸ்திரியத்தின் துணையை நாடியபோது, 30 ஆயிரம் வீரர்கள் கொண்ட படையொன்றினைத் தருவதாக இவர் நெப்போலியனுக்கு வாக்களித்தார். ரஷ்ய அரசர் முதலாம் சார் இவரது துணையை நாடியபோது தாம் நடுநிலை வகிக்கப் போவதாக அவருக்கு வாக்களித்தார். நெப்போலியன் ரஷ்யாமீது படையெடுத்தபோது இவர் போராயத்த நடுநிலைமை (Armed neutrality) வகித்தார். ஆஸ்திரியாவின் நலனுக்காக, எப்பக்கம் வெற்றி போகிறதோ, அப் பக்கம் சாய்வதற்காக இவர் ஆயத்தமாய் நின்றார்.

நெப்போலியனது ரஷ்யப் படையெடுப்பு தோல்வியில் முடிந்தது. அதன் பின்னர், மெட்டர்னிக் நெப்போலியனைத் தீவிரமாக எதிர்க்கத் தலைப்பட்டார். 1813-ல் நிகழ்ந்த லிப்ஸிக் போர்க்களத்தில் நெப்போலியனுக்கெதிராகப் போரிட்டு, வெற்றி பெற்று, இதன்மூலம் இவர் நிலையான புகழ் எய்தினார். லிப்ஸிக் போருக்குப் பின்னர், அறிவு சார்ந்த உடன்பாடொன்றினை நெப்போலியனும் செய்துகொள்ளலாமெனக் கூட்டணி நாடுகளுக்கு இவர் வேண்டுகோள் விடுத்தார். தாம் வென்ற பகுதிகளை நெப்போலியன் திருப்பித் தர வேண்டுமெனவும், ஃபிரான்சின் பழைய இயற்கை எல்லைகளையே அவர் ஏற்கவேண்டுமெனவும் இவர் வற்புறுத்தினார். நெப்போலியன் அவ் வேண்டுகோளை ஏற்க மறுத்தார்.

ஆஸ்திரியா, இங்கிலாந்து, ரஷ்யா, பிரஷ்யா ஆகிய நான்கு நாடுகளும் 1814ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் சவ்மான்ட் உடன்பாடு செய்துகொண்டு நெப்போலியனை எதிர்த்து 20 ஆண்டுகள் ஒன்றிணைந்து செயல்படுவதாக வாக்குறுதி எடுத்துக் கொண்டன. நெப்போலியனும் தோற்கடிக்கப்பட்டு எல்பா தீவினுக்கு அனுப்பப்பட்டார். நெப்போலியனைத் தோற்கடித்ததால் இவர் பெரும் புகழ்பெற்றார். ரஷ்யாவும், பிரஷ்யாவும் அவரைப் பெரிதும் புகழ்ந்தன. ஆஸ்திரியப் பேரரசர் இதனால், பெரிதும் மகிழ்வுற்று 'ஆஸ்திரியப் பேரரசின் பரம்பரை இளவரசர்' (Hereditary Prince of the Austrian Empire) என்ற பட்டத்தையும் இவருக்குச் சூட்டினார்.

**நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பின்னர் மெட்டர்னிக்**

நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பின்னர், பல புதுப் பிரச்சினைகள் உருவாயின. ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், செல்வாக்கு

பெற்ற பல புதிய கருத்துகள் ஐரோப்பாவைப் பெரும் மாற்றத்திற்கு உள்ளாக்கியிருந்தன. அவை பழைய கருத்துகளுக்கு முற்றிலும் மாறுபட்டிருந்ததோடு, வெற்றிபெற்ற பழைய அரசர்களது நலனையும் பெரிதும் பாதிப்பனவாயிருந்தன. வெற்றி பெற்ற நாடுகளும் தன்னலங் காரணமாகப் போரிழப்பீடு பெறுவதில் ஒன்றோடொன்று போட்டியிடத் தொடங்கின. ரஷ்யா அத்தகைய இழப்பீடு பெறுவதில் பேரார்வம் காட்டியது. ரஷ்யாவின் பேராசை ஆஸ்திரியாவின் நன்மைக்கு ஊறுவிளைவிப்பதாயிருந்தது. சார் மன்னரிடம் பெரும் படையொன்று இருந்தது. நெப்போலியனிடம் அவர் பெற்ற மாபெரும் வெற்றியும் அவரது செருக்கினை மிகுதிப்படுத்தியது. இதனைக் கண்டு மெட்டர்னிக் பெரிதும் அஞ்சினர். இதற்கிடையில் பிரஷ்யாவும் மாபெரும் சக்தியாக வளர்ந்து ஆஸ்திரிய ஆதிக்கத்தினை எதிர்க்கத் தலைப்பட்டது. ஜெர்மனியில் ஆஸ்திரிய ஆதிக்கத்தினைப் பிரஷ்யா வன்மையாக எதிர்த்தது. ஹெய்ஸ்[1] என்பார் கூறுவது போன்று ஐரோப்பாவே முற்போக்கு ஐரோப்பா, பிற்போக்கு ஐரோப்பாவென இரு கூறுகளாகப் பிரிந்தன. இத்தகைய ஐரோப்பாவில் தமது பேரரசின் நலனைக் காப்பதே மெட்டர்னிக்கின் பெரும் பணியாக இருந்தது.

பழைய கொள்கைகளைத் தமது நாட்டின் நலன் கருதி, இவர் பெரிதும் வலியுறுத்தத் தொடங்கினர். புதிய கருத்துகளையும், புரட்சிகளையும், மக்களாட்சியினையும் அவர் வெறுத்ததற்குக் காரணம், இவை குழப்பத்தை விளைவிக்கும் என்பதோடு ஆஸ்திரியப் பேரரசையும் அவை குலைக்குமென அவர் பெரிதும் அஞ்சினர். ஐரோப்பாவில் ஆஸ்திரிய ஆதிக்கம் மிக வேண்டுமாயின் பழைய முறைவழிக் கொள்கையினைப் பின்பற்றுதலே தக்கதென இவர் துணிந்தார். ஆஸ்திரியப் பேரரசின் நலனைக் காக்கும்பொருட்டு, வல்லரசுச் சமநிலையையும் இவர் பெரிதும் போற்றினர். ஆகவே, பழைய கொள்கைகளே தக்கதென இவர் அவற்றைப் போற்றி ஏற்ருர்.

### வியன்னு மாநாடு

நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பின்னர், இவர் வியன்னுவில் மாநாடு ஒன்றினையும் கூட்டி, அதற்குத் தலைமையேற்ருர். இதன் மூலம் ஐரோப்பிய அரங்கில் இவர் தமது பெருமையை நிலை நாட்டிக்கொண்டார். இவர் தமது அறிவு, அழகு, சொல்லாற்றல், வாதத் திறமை, நகைச்சுவை போன்றவற்ருல், மாநாட்டில்

[1] Hayes— p. 585.

அனைவரினும் மேம்பட்டு நின்றார். இவர் தமது கூர்த்த மதியாலும், வாதத் திறத்தாலும் இம் மாநாடு தமது கொள்கைகளையே ஏற்கு மாறு செய்தார். பிற்போக்குக் கொள்கைகளைப் போற்றி அவற்றை இம் மாநாடு ஏற்றுக்கொண்டதற்கு இவரே பெரிதும் காரண மாவார். இம் மாநாட்டில் இவர் தமது நாட்டின் நலனை ஒரு போதும் மறக்கவில்லை. ரஷ்யாவும், பிரஷ்யாவும் ஒன்றுகூடி, தமது நாட்டிற்கு ஊறு விளைவிக்க முனைந்தபோதெல்லாம், அதனைத் தமது நுண்ணறிவால் உணர்ந்து தடுத்து நிறுத்தினார். ரஷ்யா, போலந்து முழுவதையும் கவர்ந்து தமது செல்வாக்கினை உயர்த்திக்கொள்ள விரும்பியது. அதுபோன்றே, பிரஷ்யா சாக்சனி முழுவதையும் பெற விரும்பியது. இதனை உணர்ந்த நுண்மாண் நுழைபுலம் மிக்க மெட்டர்னிக், இங்கிலாந் துடன் இணைந்து அதனை எதிர்த்ததோடு, போலந்தின் ஒரு பகுதியே ரஷ்யாவுக்கும், சாக்சனியின் ஒரு பகுதியே பிரஷ்யா வுக்கும் கிடைக்குமாறு செய்தார். இது அவரது சூழ்ச்சித் திறனுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும்.

முதலாம் சார் அலெக்ஸாந்தரின் புனிதக் கூட்டமைப்பையும் (Holy Alliance) இவ்வாறே எதிர்த்து, அதனைச் சமயப் போர்வை யில் இருக்கும் அரசியல் நோக்கம் எனப் புறக்கணித்தார். தமது பெரு முயற்சியால், வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், ஐரோப் பியக் கூட்டணி ஒன்றினையும் இவர் நிறுவினார். அதில் இங்கிலாந் தையும் சேர்த்தது இவரது செயல் திறனுக்கு நல்ல சான்றாகும். அந்த ஐரோப்பியக் கூட்டணி முற்போக்குக் கருத்துகளையும், புரட்சிகளையும் தடுக்கும் என்பதையும் அனைவர்க்கும் தெளிவாக் கினாரிவர். ஃபிரான்சைச் சுற்றிலும் வலுவுள்ள நாடுகளை அரணாக அமைத்தல் ஐரோப்பிய அமைதிக்கு நல்லதெனக்கூறி, அவற்றை ஒன்றிணைத்தார். இதனால், பிரஷ்யா, ஃபிரான்சு, ரஷ்யா போன்ற வல்லரசுகளின் பிடியினின்றும் அவற்றைக் காப்பாற்றிய பெருமைக் குரியவரானார். அதன்மூலம் அவ் வல்லரசுகளின் வலிமையை ஒடுக்கி, ஆஸ்திரியாவின் நிலையை இவர் பெரிதும் உயர்த்தினார். பிரஷ்யாவை எதிர்த்து ஜெர்மனியில் ஆஸ்திரிய ஆதிக்கத்தினை நிறுவுவதிலும் வெற்றிபெற்றார். எவ்வாறு ?

**மெட்டர்னிக்கும் ஜெர்மனியும்**

ஜெர்மன் பிரச்சினை வியன்னா மாநாட்டினைப் பெரிதும் குழப் பத்தில் ஆழ்த்தியது. நெப்போலியனால் பதவி துறந்த அனைத்து ஜெர்மன் சிற்றரசுகளையும் மீண்டும் பதவியில் அமர்த்துவ தென்பது இயலாததொன்றானது. புனித ரோமானியப் பேரரசை மீண்டும் புதுப்பித்தலும், அவ்வாறே இயலாததொன்றானது. ரைன்

கூட்டரசை அவ்வாறே ஏற்றுக்கொள்வது என முடிவானது. ரைன் கூட்டரசு, ஜெர்மன் கூட்டரசென மாற்றி அழைக்கப்பட்டது.

ஜெர்மனியைப் பொருத்தமட்டில் வியன்னு மாநாடு அதனை ஒன்றிணைக்க முயலவில்லை. ஜெர்மனிக்கு யார் தலைமை ஏற்பது என்பது குறித்து ஆஸ்திரியாவுக்கும் பிரஷ்யாவுக்கும் இடையே கருத்து வேறுபாடு மிகுந்தது. இதனுல், ஜெர்மனி ஒன்றுபடுவது பெரிதும் தடைப்பட்டது. மெட்டர்னிக், ஜெர்மன் இணைவதை முற்றிலும் விரும்பவில்லை. இதற்குக் காரணங்கள் மூன்று. (1) பல அரசுகள் கொண்ட கூட்டமைப்பை இவர் அங்கு அமைக்க விரும்பவில்லை. காரணம், அவை நாட்டுப் பற்றுக் காரணமாக விடுதலை பெற முனையக்கூடும். அவ்வாறெனில், ஆஸ்திரியப் பேரரசு சிதைவுறும். (2) பிரஷ்யா ஜெர்மனிக்குத் தலைமையேற்பதையும் ஆஸ்திரியா எதிர்த்தது. பிரஷ்யா ஜெர்மனிக்குத் தலைமையேற்ருல், அங்குத் தனது ஆதிக்கம் குறையு மென ஆஸ்திரியா அஞ்சியது. இணைந்த ஜெர்மனி வலிமை மிக்குப் பெற்று ஆஸ்திரிய ஆதிக்கத்தினையே எதிர்க்கக் கூடுமெனவும் மெட்டர்னிக் அஞ்சினுர். இணைந்த ஜெர்மனி உருவானுல், அது தமது பேரரசின் உறுதியைக் குலைக்குமெனவும் அவர் அஞ்சினுர். (3) ஆஸ்திரியத் தலைமையில் ஜெர்மன் இளவரசர்கள் தங்களது உரிமைகளை இழக்க வேண்டுவதில்லையென மெட்டர்னிக் வலியுறுத்தினுர். ஆதலின், அவர்களும் ஜெர்மன் ஒன்றுபடுவதை விரும்பவில்லை. ஆஸ்திரியத் தலைமையில் ஜெர்மன் கூட்டரசு ஒன்றும் நிறுவப்பட்டது.

**இக் கூட்டரசின் சிறப்பியல்புகள்**

அனைத்துத் துறைகளிலும் ஜெர்மனியின் 39 கூட்டரசுகளும் உரிமை பெற்றவை. ஆயினும், அவை ஒன்ருேடொன்று போரிட இயலாது. வெளிநாடுகளுடன் போர் ஏற்படின், அவை கூட்டரசின் சார்பாகவே போரிட வேண்டும். ஆயினும், இக் கூட்டரசு ஒரு நாடல்ல. அங்கு ஜெர்மன் பேரரசர் என்ற ஒருவர் இரார். ஜெர்மனிக்கென்று ஒரு கொடியோ அல்லது குடியுரிமையோ இராது. இது நாட்டுப்பற்று மிக்கோரைப் பெரிதும் ஏமாற்றியது.

அங்கு வெளி ஆதிக்கமும் மிகுந்து காணப்பட்டது. ஹனேவர் இங்கிலாந்தின் பகுதியாக இருந்தது. லக்சம்பர்க் ஹாலந்தின் ஆதிக்கத்தில் இருந்தது. ஹோல்ஸ்டீன் மீது டென்மார்க் ஆதிக்கம் செலுத்தியது. இப் பகுதிகள்மீது ஆதிக்கம் கொண் டாடிய, இங்கிலாந்து, ஹாலந்து, டென்மார்க் போன்ற நாடுகள் ஜெர்மனியின் உள்துறையிலும் தலையிட்டன. ஜெர்மன் பாராளு

மன்றத்திலும் அவை அங்கம் வகித்தன. ஜெர்மன் பாராளுமன்றம் என்பதே பல நாடுகளின் கலவையாக இருந்தது. ஆகவே, ஜெர்மனியில் ஒற்றுமைக்கு மாறாக வேற்றுமையே மிகுந்து காணப் பட்டது. தன்னலமிக்க ஜெர்மன் குறுநில மன்னர்களும் ஒற்றுமையிலும் வேற்றுமையினையே பெரிதும் பாராட்டினர். வியன்னா மாநாட்டின் விளைவாக, ஜெர்மனி ஒரு பிளவுண்ட வீடாகக் காட்சியளித்தது. அவற்றின் வேற்றுமையில் பெரிதும் நன்மையுற முனைந்தது ஆஸ்திரியா.

**ஜெர்மன் புரட்சிகளும் மெட்டர்னிக்கும்**

வியன்னா மாநாடு ஜெர்மனியர்களுக்குப் பெரும் ஏமாற்றத் தினையே தந்தது. மெட்டர்னிக்கின் ஆதிக்கத்தினை அவர்கள் ஒரு சிறிதும் விரும்பவில்லை. முற்போக்குவாதிகளும், மாணவர் களும் தங்கள் தந்தை நாட்டின் நிலையினைக்கண்டு பெரிதும் வருந்தினர், தங்கள் தந்தை நாட்டை ஒன்றுபடுத்தும் முயற்சி யில் மாணவர்கள் பேரார்வம் காட்டினர். ஜெர்மன் பல்கலைக் கழகங்களும் வியன்னா மாநாட்டிற்குப் பின்னர். நாட்டுப்பற்றின் நிலைக்களன்களாகத் திகழ்ந்தன. மாணவர்களது வலிமை மிக்க இயக்கங்களான "Tugendband", "Burschenschaft" போன்றவை மாணவர்களிடையேயும் மற்றவர்களிடையேயும் நாட்டுப் பற்றினை வளர்த்தன.

1817ஆம் ஆண்டு, அக்டோபர் திங்களில் மாணவர்கள் மார்ட்டின் லூதரின் 300-வது ஆண்டு விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடினர். அதுபோழ்து மாணவத் தலைவர்கள் ஆஸ்திரிய ஆதிக்கத்தினை வன்மையாகக் கண்டித்தனர். ஆஸ்திரிய இராணுவச் சின்னமும், நெப்போலியனின் சட்டத் தொகுப்புப் பிரதியொன்றும் எரிக்கப்பட்டன. 1819-ல் கார்ல் சாண்ட் என்ற மாணவர் கொட்சிபூ (Kotzebue) என்ற ரஷ்ய ஒற்றர் ஒருவரைக் கொன்று விட்டார். இவையனைத்தும் மெட்டர்னிக்கைத் துன்பத்தில் ஆழ்த்தின.

**கார்ல்ஸ்பாட் மாநாடு (1819)**

ஜெர்மன் நிலையை ஆராய்வதற்காக 1819-ல் கார்ல்ஸ்பாட் (Carlsbad) என்ற இடத்தில் மாநாடொன்றினைக் கூட்டினார் மெட்டர்னிக். அதற்கு அனைத்து ஜெர்மன் அரசுகளும் அழைக் கப்பட்டன. புரட்சி இயக்கங்களைத் தடுப்பதற்காக அம் மாநாடு பல தீர்மானங்களை நிறைவேற்றியது. அதனை ஜெர்மன் பாராளு மன்றமும் ஏற்றுக்கொண்டது. அவையே கார்ல்ஸ்பாட் ஆணைகள் என வெளியிடப்பட்டது.

அக் கார்ல்ஸ்பாட் ஆணைகளின்படி ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் மாணவர்களின் செயலை ஆராய ஒற்றர்கள் நியமிக் கப்பட்டனர். முற்போக்குக் கொள்கைகளைக் கொண்ட பேராசிரி யர்களும், மாணவர்களும் நன்கு கண்காணிக்கப்பட்டனர். பல்கலைக்கழகப் பாடப் புத்தகங்களும் நன்கு தணிக்கை செய்யப் பட்டன. மாணவ இயக்கங்களும் தடை செய்யப்பட்டன. செய்தித் தாள்கள் கடுமையாகத் தணிக்கை செய்யப்பட்டன. "மெயின்ஸ்" (Mainz) என்ற குழு ஒன்று முற்போக்கு இயக் கங்களை ஆராய நிறுவப்பட்டது. புரட்சியாளர்களென ஐயுற்றோர் அனைவரும் காவலில் வைக்கப்பட்டனர். அரசியலமைப்பும் மறுக்கப்பட்டது.

இவ்வாணையின் விளைவாக, அனைத்து முற்போக்கு இயக்கங் களும் களையப்பட்டுப் பிற்போக்கு ஆட்சி மீண்டும் புகுத்தப் பட்டது. மெட்டர்னிக், தமது பிற்போக்கு ஆட்சியினை ஜெர்மனி முழுவதிலும் புகுத்தினார். ஜெர்மன் ஐக்கியமே இதனால், முற்றிலும் குலைக்கப்பட்டது.

## 1830 ஜூலைப் புரட்சியும், மெட்டர்னிக்கும்

மெட்டர்னிக்கின் அடக்குமுறை ஆட்சியின் விளைவாக, ஜெர்மனியில் முற்போக்குக் கருத்துகளுக்கு முற்றிலும் முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது. அடக்குமுறையும் மிகுந்தது. 1830 ஜூலையில் ஃபிரான்சில் தோன்றிய புரட்சி, ஜெர்மனியிலும் ஆங்காங்கு எதிரொலித்தது. சாக்சனி, ஹனோவர், ஹெஸ்ஸி போன்ற பகுதிகளில் அனைத்து அடக்குமுறைகளையும் மீறி, கிளர்ச்சிகள் தோன்றின. அவ்வரசர்களும் பெரிதும் அச்சுறுத் தப்பட்டதால், தங்கள் மக்களுக்கு அரசியலமைப்பினை வழங்கினர். இதனையறிந்த மெட்டர்னிக், ஆஸ்திரியப் படைகளை அப் பகுதி களுக்கு ஏவி, அப் புரட்சிகளை அடக்கினார். மீண்டும் பழைய ஆட்சி அங்கு நிறுவப்பட்டது. ஜெர்மனி முழுவதும் மீண்டும் மெட்டர்னிக் முறை நிறுவப்பட்டது. அங்கு அடக்குமுறை மிகுந்தது. அரசியல் கூட்டங்கள் தடை செய்யப்பட்டன. உரிமைகள் பலவும் பறிக்கப்பட்டன. தணிக்கை முறை தீவிரப்படுத்தப்பட்டது. புரட்சியாளர்கள் அனைவரும் சிறையில் அடைக்கப்பட்டனர். ஜெர்மனி மீண்டும் தாழ்வுற்றுச் சோர்வுற்றது. 1848 பிப்ரவரிப் புரட்சி வரை இந் நிலையே அங்கு நீடித்தது. நாட்டுப் பற்றும் அங்குச் செயலிழந்து போயிற்று. மெட்டர்னிக் முறையே வென்றது.

## மெட்டர்னிக்கும் இத்தாலியும்

இத்தாலியிலும் மெட்டர்னிக் தமது முறையினைப் புகுத்து வதில் பெரும் வெற்றிபெற்றார். இந் நாட்டில் ஆஸ்திரிய ஆதிக்

கத்தினையும் நிறுவினர். இத்தாலியிலுள்ள லொம்பார்டியிலும், வெனிஸியாவிலும் தமது ஆட்சி முறையினை அவ்வாறே புகுத்தினர் மெட்டர்னிக். மேலும், ஹாப்ஸ்பர்க்குகளின் ஆதிக்கத்திலிருந்து மைய இத்தாலியிலும், பூர்போன்களது ஆதிக்கத்திலிருந்த தென் இத்தாலியிலும மெட்டர்னிக், தமது முறையினை வெற்றிகரமாகப் புகுத்தினர். பிற பகுதிகளிலும் தமது வலுவுள்ள ஒற்றர் படை மூலமும், காவல் துறையினர் மூலமும் தமது முறையை இவர் செயல்படுத்தினர்.

இத்தாலியில் நிலவிய ஒற்றுமையின்மை இவருக்கு நல்லதொரு வாய்ப்பினைத் தந்தது. ஒருவரை ஒருவர் தூண்டிவிட்டு, அக் குழப்பத்தில் தமது செல்வாக்கினை நிலைநாட்ட முயன்றார் இவர். ஆயினும், இவரது முயற்சி முழு வெற்றியினைத் தரவில்லை. இத்தாலி பல இரகசிய இயக்கங்கள் மூலம் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்ள முனைந்தது. முற்போக்கினர் பலரும் ஒன்றுகூடி, "கார்பொனரி" போன்ற அரசியல் இயக்கங்கள் பலவற்றினைத் தொடங்கி, தங்களது நாட்டு விடுதலைக்குப் பாடுபட்டார். இவ் வியக்கங்களின் பெருந் தூண்டுதலால், 1820-ல் நேப்பிள்ஸ் போன்ற இடங்களில் புரட்சி வெடித்தது. ஆயினும், அம் முயற்சி வெற்றிபெறவில்லை. மெட்டர்னிக்கின் வலுவுள்ள படைகள் அப் புரட்சியினை வெகு எளிதாக நசுக்கின. நாட்டுப் பற்று மிக்க இத்தாலியர்கள் தங்கள் தாயக ஒற்றுமைக்காக 1830 ல் மீண்டும் புரட்சி செய்தனர். மாஜினி, கரிபால்டி போன்ற தன்னலமற்ற, ஒப்பற்ற தலைவர்கள் பலரும் இப் புரட்சியில் பங்கேற்று மக்களைப் பெரிதும் ஊக்குவித்தனர். இப் புரட்சியால் பெரிதும சினமுற்ற மெட்டர்னிக், அதனை அடக்க பெரும் படையொன்றை ஏவினர். புரட்சியென்ற தொற்று நோயும் அடக்கப்பட்டது. 1830-லும் இத்தாலியர்களின் நாட்டுப்பற்றால் அதனை ஒன்றுபடுத்த முடியவில்லை. அந்நிய ஆதிக்கத்தினை நீக்க பெரும் முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டும் அது தோல்வியில் முடிந்தது. இத்தாலியர்கள் இத் தோல்வியால் பெரிதும் சோர்ந்துபோயினர். மெட்டர்னிக் மட்டும் வெற்றிக் களிப்பில் மிதந்தார்.

**இவரது போலந்துக் கொள்கை**

போலந்திலும் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டுவதில் மெட்டர்னிக் பெரிதும் வெற்றிபெற்றார். போலந்து உயர்குடி மக்களும் அந்நிய ஆதிக்கத்தினை வெறுத்தனர். நாட்டுப் பற்றுக் காரணமாக அவர்களும் அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுபட விரும்பினர். 1830-லும், 1846-லும் அவர்கள் அந்நிய ஆதிக்கத்தை எதிர்த்துப் புரட்சி செய்தனர். மெட்டர்னிக் தமது பிரித்தாளும்

கொள்கையினைக் கையாண்டு, அங்கிருந்த பல்வேறு வகை மக்களையும் பிரிப்பதில் வெற்றிபெற்றார். அங்கிருந்த உழவர்களைச் செல்வர்களுக்கு எதிராகத் தூண்டிவிட்டுப் புரட்சியின் போக்கையே மாற்றினார். அதனால், அங்குக் குழப்பம் மிகவே, ஆஸ்திரியப் படையை அனுப்பி, அப் புரட்சியினை எளிதில் அடக்கினார்.

## கிழக்குப் பிரச்சினை

கிழக்குப் பிரச்சினையிலும் ரஷ்யா மிக்க ஆர்வம் காட்டியது. துருக்கியின் மீதும், அதன் ஐரோப்பியப் பகுதிகளின் மீதும் தனது ஆதிக்கத்தினை நிறுவ ரஷ்யா பெரிதும் முயன்றது. அண்டை நாடான ரஷ்யா மாபெரும் வல்லரசாக வளர்வதை மெட்டர்னிக் விரும்பவில்லை. ரஷ்யாவின் வளர்ச்சி தமது பேரரசினைப் பாதிக்குமென இவர் அஞ்சினார். ஆகவே, ரஷ்ய ஆதிக்கத்தினை முறியடிப்பதில் இவர் பேரார்வம் காட்டினார். கிரேக்க நாடு (Greece) துருக்கிய ஆதிக்கத்தினை எதிர்த்து, விடுதலைப் போரைத் தொடங்கியபோது, ரஷ்யா அதற்கு உதவ முன்வந்தது. ஐரோப்பியக் கூட்டணி நாடுகளையும் தன்னை உதவ அனுமதிக்குமாறு வேண்டினார் சார் மன்னர். ரஷ்யாவின் உள்நோக்கத்தை நன்கு புரிந்துகொண்ட மெட்டர்னிக்கும் அதனைத் தடுத்து நிறுத்தவே பெரிதும் விரும்பினார். அவ்வாறே, பால்கன் பகுதியிலும் ரஷ்ய ஆதிக்கம் மிகுவதை எதிர்த்துப் போராடினார். ரஷ்யா கிரேக்கத்தில் தலையிடுவதை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தினார். ஆயினும், கிரேக்கம் விடுதலை பெறுவதை இவரால் தடுத்து நிறுத்த முடியவில்லை. நாட்டுப்பற்று என்ற மாபெரும் காட்டாற்றுக்கு அணை போட விரும்பினார். அக் காட்டாறு இவரது அணையினைத் தகர்த்தெறிந்து, விடுதலை என்ற பெருங்கடலில் கலந்தது. புரட்சிகளைத் தடுப்பதில் இவரால் வெற்றிபெற இயலவில்லை. தாம் வாழ்ந்த காலத்தின் தன்மையை இவர் உணரத் தவறிவிட்டார். நாட்டுப் பற்று, மக்களாட்சி போன்ற உயரியக் கருத்துகளைத் தடையிட முடியாது என்பதை இவர் உணராதது வியப்பேயாகும். இவர் கட்டிக் காத்த பூர்போன் அரசு, 1830 ஜூலைப் புரட்சியின் விளைவாக ஃபிரான்சில் வீழ்ந்தது. இவரது கொள்கையினை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தி 1830-ல் பெல்ஜியமும் வெற்றிபெற்றது. முன்னிலை மீட்பு, முறைமைக் கொள்கை, மரபு வழியாட்சி போன்ற இவரது கொள்கைகள் தோல்வியுற்றன. இவரது இடையறு அடக்குமுறைக்குப் பின்னரும், புரட்சிகளும், நாட்டுப்பற்றும் மேலும் வளர்ந்தன. அவை தொடர்ந்து வளர்ந்ததுடன் அவரது முறையே தோல்வியுறவும் காரணமாயின.

**மெட்டர்னிக்கின் உள்நாட்டுக் கொள்கை**

புதிய கருத்துகளைப் பரவாமல் தடுத்தலையும் புரட்சிகளை ஒடுக்குதலையுமே மெட்டர்னிக் தமது மாபெரும் பணிகளாகக் கொண்டார். இவர் பின்பற்றிய முறையே "மெட்டர்னிக் முறை" என அழைக்கப்படுகிறது. ஃபிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக ஐரோப்பாவில் குழப்பமும், கொந்தளிப்பும் மிகுந்தன. கலையும், இலக்கியமும்கூட புதிய கருத்துகளால் பெரிதும் பாதிக்கப் பட்டன. அரசியல், சமூகக் கருத்துகள் பலவும் பெரிதும் மாற்ற முற்றன. அறிஞர்களும், நடுத்தர வகுப்பினரும் இப்புதிய கருத்து களின் நிலைக்களனாய்த் திகழ்ந்தனர். பழைய வல்லாட்சியும், நிலமானிய முறைகளும் கத்தோலிக்க சமயமும் இப்புதிய கருத்து களால் பெரிதும் அலைக்கழிக்கப்பட்டன. ஐரோப்பாவெங்கும், புதிய கருத்துகளும், சமத்துவமும், மக்களாட்சியும் பெரிதும் போற்றப்பட்டன.

புதிய கருத்துகளை மெட்டர்னிக் முற்றிலும் வெறுத்தார். அவற்றால், ஐரோப்பாவின் அமைதி முற்றிலும் குலைவதாக நம்பினார். அவை ஒரு தொற்று நோய் போன்று பரவி, நிலையான ஆட்சியினைச் சீர்குலையச் செய்யுமெனவும் அஞ்சினார். "இருப்பதை அவ்வாறே காப்போம்" (Keep the thing as it is) என்பதே இவர்தம் கோட்பாடாகும். மக்களது உரிமைகளிலும் அரசியல் அமைப்பிலும் இவருக்கு ஒரு சிறிதும் நம்பிக்கையில்லை. இறை உரிமை வழி இயங்கும் முடியாட்சியினைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் மக்களுக்குக் கிடையாதென்பதே அவரது திட்டவட்ட மான கருத்தாகும்.

ஆஸ்திரியப் பேரரசின் நிலையும், அவரது கொள்கையை உறுதிப்படுத்துவதாயிருந்தது. ஆஸ்திரியப் பேரரசு ஓர் இயந்திரம் போன்றது. திறமையான அரசர், பதவியில் இருக்கும் வரை அது செவ்வையாய்ப் பழுது பார்க்கப்பட்டு, திறமையாக இயங்கியது. அரசரென்ற நிர்வாகப் பொறியாளர் சற்று திறமையற்றிருப்பின் அப்பொறி பழுதுபட்டு முறையாக இயங்குவதும் தடைப்படும். ஆஸ்திரியப் பேரரசு திறமையாகவும், முறையாகவும் இயங்க ஒரு வலுவுள்ள வல்லரசர் தேவைப்பட்டார். மெட்டர்னிக்கும் தமது பேரரசைக் கட்டிக் காக்க தனி வல்லரசே ஏற்ற சாதனமெனக் கருதினார். நாட்டுப் பற்றினையும் மக்களாட்சி முறையினையும் அனுமதித்தால் ஆஸ்திரியப் பேரரசே இல்லாது போய்விடுமென மெட்டர்னிக் அஞ்சியதில் வியப்பில்லை. இவர் தமது பேரரசைக் காக்கவே முறைமைக் கொள்கை, மரபு வழி ஆட்சி, வல்லாட்சி. முன்னிலை மீட்பு போன்ற பழைய கோட்பாடுகள் வழி நின்றார்.

உள்நாட்டில் மட்டுமன்றி, வெளி நாடுகளிலும் புரட்சிகளையும், முற்போக்குகளையும் இவர் வன்மையாக எதிர்த்தார். இது நன்கு ஆராயப்படவேண்டிய ஒன்ருகும். விக்டர் யூகோ கூறியதுபோல படை வீரர்களின் படையெடுப்பினைத் தடுத்து நிறுத்தலாம்; கொள்கைப் படையெடுப்பினைத் தடுத்து நிறுத்த இயலாது. புதிய கருத்துகள் 1815-க்கு முன்னரும், பின்னரும் ஐரோப்பாவில் விரைவாகப் பரவின. இப் புதிய சக்திகள் பழைய ஐரோப்பிய முறைகளையே முற்றிலும் மாற்ற முயன்றன. புதிய கருத்துகளைத் தமது பேரரசில் மட்டும் முறியடித்தால் போதாது என்பது மெட்டர்னிக்கின் கருத்து. அனைத்து நாடுகளிலும் அவை முறியடிக்கப்பட்டால்தான், தமது பேரரசிலும் அமைதி நிலவும் வாய்ப் பேற்படும் என்பதை இவர் நன்குணர்ந்தார் புரட்சி என்பது ஒரு தொற்று நோய் அது மிக விரைவாய்ப் பரவும். அது அழிக்கப்பட வேண்டிய ஒன்று என்ற இவர்தம் கூற்று, இதனை நன்கு புலப் படுத்தும். தமது பேரரசைக் காக்க இதுவே தக்க முறையென்பது அவர்தம் கொள்கை. சீர்திருத்தங்களும், சலுகைகளும் அரசரது அதிகாரங்களைப் பெரிதும் குறைக்கும். அதனால், நிர்வாகத்தில் திறமை குறையும் எனவும், இவர் அஞ்சினர். ஆகவே, இவரது நேரடி ஆட்சியில் ஆஸ்திரியா பழைய ஆட்சியின் சின்னமாகத் திகழ்ந்தது.

**அடக்குமுறை ஆட்சி**

மெட்டர்னிக், தமது கொள்கைகளை நிறைவேற்ற ஒரு பெரும் பிற்போக்குவாதியாகவே மாறினர். அவர் முறையும் "மெட்டர்னிக் முறை" என அழைக்கப்படுகிறது. அம் முறையின்மூலம் ஆஸ்திரியப் பேரரசின் ஆதிக்கத்தினை உள்ளும் புறமும் நிலை நாட்ட இவர் பெரிதும் விரும்பினர். அதற்கு இவர் கையாண்ட முறைகள் வருமாறு :

(1) புதிய கருத்துகளும், புரட்சிப் போக்கும், இளைஞர்களின் மனத்தைக் கவராதிருக்க, இவர் பல நடவடிக்கைகளை மேற் கொண்டார். அதற்காக, கல்வி முறையில் பலவகைக் கட்டுப்பாடு களையும் புகுத்தினர். அனைத்து மேற் கல்விமுறையும் தீவிரமாக மேற்பார்வையிடப்பட்டுக் கட்டுப்படுத்தப்பட்டது. பாட நூல்கள் தீவிரமாகத் தணிக்கை செய்யப்பட்டன. பேராசிரியர்களும் விழிப்புடன் கண்காணிக்கப்பட்டனர். மாணவர்கள் இயக்கங்களை ஆராய ஒற்றர் படையொன்றும் நிறுவப்பட்டது. மாணவர்களிடை அரசியல் கூட்டங்கள் அனைத்தும் தடை செய்யப்பட்டன. ஒற்றர்கள், கல்வி நிலையங்கள் அனைத்திலும் விரவி நின்றனர். அவரின் வகுப்புகளுக்கும் சென்று ஆசிரியர்களின் விரிவுரைகளை

உற்றுக் கேட்டனர். முற்போக்குக் கருத்துகள் முற்றிலும் தடை செய்யப்பட்டன. அரசியலும், அறிவியலும் (Political and Scince) வரலாறும் பாடத் திட்டத்திலிருந்து நீக்கப்பட்டன.

(2) செய்தித் தாள்கள் தீவிரமாகத் தணிக்கை செய்யப் பட்டன. புரட்சிக் கருத்துகள், புதிய கருத்துகள் போன்றவற்றை அவை வெளியிட அனுமதிக்கப்படவில்லை. முற்போக்குச் செய்தித் தாள்கள் அனைத்தும் தடை செய்யப்பட்டன.

(3) ஆஸ்திரியப் பேரரசின் எல்லைகளனைத்தும் தீவிரமாகக் கண்காணிக்கப்பட்டன. அங்குப் பாதுகாப்பும் மிகுந்தது. புதிய கருத்துகள் பேரரசின் எல்லையை அணுகாவண்ணம் இருக்க தக்க நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. புரட்சி நூல்கள் தடை செய்யப்பட்டன. பிற புரட்சியாளர்களும் பேரரசில் நுழைய அனுமதிக்கப்படவில்லை.

(4) ஆசிரியர்களும், மாணவர்களும் வெளிநாட்டில் பயணம் மேற்கொள்வது பெரிதும் தடை செய்யப்பட்டது. இதனால், வெளி உலகப் புரட்சிக் கருத்துகள் என்ற தொற்றுநோய் அவர்களைப் பற்றுவது பெரிதும் தடுக்கப்பட்டது.

(5) புரட்சியாளர்கள் அனைவரும் காவலில் வைக்கப்பட் டனர். அவர்கள் விசாரணை ஏதுமின்றிச் சிறையில் அடைக்கப் பட்டனர். அவர்களைக் காக்க காவல் துறையும் தீவிரப்படுத்தப் பட்டது. அடக்குமுறையும் தீவிரப்படுத்தப்பட்டது.

(6) ஆஸ்திரியப் படையில் பல நாட்டினரும், பல இனத் தினரும் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பல நாட்டினரின் படை யென்ற காரணத்தால், அவர்களிடையே நாட்டுப்பற்று பரவாமல் காக்கப்பட்டது. நாட்டுப்பற்றுக் காரணமாக அவர்கள ஒன்றுபடு வதும் இயலாது போயிற்று. வியன்னுப் புரட்சியினை அடக்க செக் வீரர்களும், ஹங்கேரியப் புரட்சியை அடக்க ஸ்லாவ் படை களும், பொஹிமியப் புரட்சியை ஒடுக்க மாகியப் படைகளும் ஏவப் பட்டன. அப் படையினரும் புரட்சியினை ஒடுக்குவதில் வெற்றி பெற்றனர். மெட்டர்னிக் இம் முறையினைப் பின்பற்றி முப்பதாண்டு களுக்குமேல் தமது பேரரசை அழிவிலிருந்து காப்பாற்றினர்.

**இம் முறையின் விளைவுகள்**

1. **அறிவில் தேக்க நிலை :** அளவுக்கு மீறிய கட்டுப்பாடு, தணிக்கை முறை, அடக்கு முறை காரணமாக, கற்றோர்களும், மற்றோர்களும் துணிந்து செயல்பட முடியவில்லை. அதனால்,

அறிவில் ஒரு தேக்கநிலை ஏற்பட்டது. தொடக்கத்தில் ஆஸ்திரியாவில் மட்டும் அடக்குமுறையைக் கையாண்ட மெட்டர்னிக், இத்தாலி, ஜெர்மனி போன்ற பேரரசின் பிற பகுதிகளிலும் ஆட்சி முறையினைப் புகுத்தினர். அடக்கு முறை ஒரு சிறிது காலம்தான் வெற்றிகரமாகச் செயல்படுமென்பதையே மமதை காரணமாக மறந்தார் மெட்டர்னிக். அடக்குமுறையினையும் கடந்து புதிய கருத்துகள் பரவின. இறுதியில், அவரே அக் கருத்துகளுக்கு இரையானதுதான் வரலாறு சுட்டிக்காட்டும் சுவையான நிகழ்ச்சியாகும்.

**2. பொருளாதாரத் தேக்க நிலை :** நிலமானிய முறையினையும், பண்ணை அடிமை முறையினையும் மெட்டர்னிக் பெரிதும் ஆதரித்தார். காலத்திற்கு ஒவ்வாத கருத்துகளைப் பேணிக் காப்பதில் இவர் பெரிதும் ஆர்வம் காட்டினர். அவை அப்பேரரசின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் ஊறு விளைவிப்பனவாய் அமைந்தன. உழவுத் துறையில் புதிய முறைகள் ஊக்குவிக்கப் படவில்லை. அதன் காரணமாக, அது பெரிதும் பின்னடைந்து காணப்பட்டது புதிய தொழில்களுக்கும் ஊக்கம் தரப்படாததால் அவையும் வளர்ச்சியின்றித் தேங்கிக் கிடந்தன. ஆஸ்திரிய வணிகர்கள் வெளிநாடுகளுக்குச் செல்வதும் வெளிநாட்டு வணிகர்கள் ஆஸ்திரியாவுக்கு வருவதும் பெரிதும் தடை செய்யப்பட்டன. இதன் காரணமாக, வெளிநாட்டு வணிகம் பெரிதும் குன்றிப் போயிற்று. வெளிநாட்டுத் தொழிலாளர்களும் கைவினைஞர்களும் ஆஸ்திரியப் பேரரசுக்கு வர அனுமதிக்கப்படவில்லை. இதனால், தொழில் வளர்ச்சியும் பெரிதும் தடைப்பட்டது. இது ஆஸ்திரியப் பேரரசின் பொருளாதார மாற்றத்திற்கு வழிவகுத்தது. புரட்சிக் கருத்துகளுக்கு அஞ்சிய மெட்டர்னிக், பொருளாதார வளர்ச்சியினையும் புறக்கணித்து விட்டு, அடக்கு முறையிலேயே பேரார்வம் காட்டினர். அதனால், அங்கு அவர் பொருளாதார வீழ்ச்சிக்கு வித்திட்டார்.

**3. புதிய கருத்துகள் அடக்கப்படல் :** பல்வேறு இன மக்களைக்கொண்ட ஆஸ்திரியப் பேரரசு, பல இனங்களின் பொருட்காட்சி சாலையாகத் திகழ்ந்தது. ஜெர்மனியர்களும், மாகியர்களும், செக் இனத்தாரும், பிறரும் இப் பேரரசில் வேற்று உணர்வு மிகுந்து வாழ்ந்தனர். அடக்கு முறை மூலம் அவர்கள் அனைவரும் ஒன்றுபடுத்தப்பட்டனர். அவர்கள் அனைவரும் ஆஸ்திரியப் பேரரசு என்ற சிறைச்சாலையில் நாட்டுப்பற்றென்ற எரிமலை உள்ளத்தில் குமுறிக்கொண்டிருக்க அடங்கி வாழ்ந்தனர். 1820, 1830 ஆகிய ஆண்டுகளில் நாட்டுப்பற்று மேலீட்டால் விடுதலை

பெற விழைந்து போராடி வெற்றி பெற இயலாது மீண்டும் அவர்கள் அடிமைகளாய்க் கட்டுண்டனர். 1848-ல் அவர்கள் மீண்டும் புரட்சியில் ஈடுபட்டனர். வேறுபாடுகள், ஒற்றுமையின்மை நல்ல தலைமையின்மை காரணமாக, அவர்கள் மீண்டும் தோல்வியுற்றாலும் தாங்கள் கொண்ட சீரிய நோக்கினை அவர்கள் கைவிட்டார்களில்லை. 1848 வரை வெற்றிக் களிப்பில் இறுமாந்திருந்த மெட்டர்னிக்கும் இறுதியில் அப் புரட்சிக்கே இரையானார் நாட்டுப் பற்றென்ற ஒரு மாபெரும் சக்தியினை அவர் முறியடிக்க முயன்று இறுதியில் அம் முயற்சியில் தோல்வி கண்டார்.

## இவரது முறை தோல்வியுறக் காரணங்கள்

**1. புரட்சிக் கருத்துகளை நசுக்க இயலாமை :** புரட்சியாளர்களை ஒடுக்குவதில் பெரும் வெற்றி கண்டார் மெட்டர்னிக் ஆயினும், புரட்சிக் கருத்துகளை அடக்குவதில் அவர் பெருந்தோல்வி கண்டார். அவருடைய அடக்குமுறைக்குப் பின்னரும், உரிமை சமத்துவம், சகோதரத்துவம் போன்ற உயரிய கருத்துகள் ஐரோப்பாவெங்கும் பரவின. மெட்டர்னிக்கின் படைகள் அவற்றை நசுக்க முயன்றும் முடியாதுபோயிற்று. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மாஜினி, கரிபால்டி, கவூர், கொசூத் போன்ற தன்னலமற்ற தாரகைகள் இருண்ட ஐரோப்பிய வானில் தோன்றி மக்களை முன்னின்று நடத்திச் சென்று வெற்றி பெறத் துணை நின்றன. மெட்டர்னிக்கும் அம் மாபெரும் சக்தியினை எதிர்த்துப் போரிட்டுச் செயலாற்ற முடியாமல் தோல்வியுற்றார்.

**2. இங்கிலாந்தின் எதிர்ப்பு :** மெட்டர்னிக் முறையைத் தொடக்கத்திலிருந்தே எதிர்த்து அதனைச் செயலற்றதாக்கிய பெருமை இங்கிலாந்தினையே சாரும். அடக்குமுறையின் கொடுமையினையும் நாட்டுப்பற்றுக்கெதிராக எடுக்கப்பட்ட நடவடிக்கைகளின் கொடுமையினையும் கண்டு இங்கிலாந்து பெரிதும் ஆத்திரமுற்று, மெட்டர்னிக் முறைக்கு ஆதரவு நல்க மறுத்தது. தன்னலம் காரணமாகவும், தமது வணிக நலன் பேணவும் இங்கிலாந்து அதனை எதிர்த்தது என்பது மெய்யே. ஆயினும், அது உரிமைக்கும், மக்களாட்சிக்கும் என்றும் போராடிய ஒரு மாபெரும் நாடு என்பதை நாம் மறுக்க இயலாது. 10ஆம் சார்லஸ், லூயி பிலிப், மெட்டர்னிக் போன்ற பிற்போக்காளர்களுக்கும் அடைக்கலம் தந்து அவர்களை வாழ வைத்ததே அதன் பெருமைக்கு நல்ல சான்று பகரும். அது போன்றே புரட்சிக்கும் தஞ்சம் தந்து புரட்சியாளர்களையும் ஊக்குவித்த பெருநாடு அது. ஆதலின், மக்களுக்கு எதிராக மெட்டர்னிக் முறையினை அது ஏற்க மறுத்தது. பெல்ஜிய விடுதலைப் போரை ஊக்குவித்து

மெட்டர்னிக் முறைக்கு முதலில் சாவுமணி அடித்த நாடு இதுவேயாகும். லத்தீன் அமெரிக்க நாடுகளும், கிரேக்கமும் விடுதலைக்காகப் புரட்சி செய்தபோது அவற்றுக்கும் உறுதுணையாய் நின்று வெற்றிவாகை சூட வழிவகுத்தது இங்கிலாந்தேயாகும். பிற்போக்குக் கூட்டணிகள் தன்னை எதிர்த்தபோதும் இங்கிலாந்து அதனைப் பொருட்படுத்தாது முற்போக்குக் கொள்கைகளுக்கே பெரிதும் ஆதரவாய் நின்றது. இதனால், மெட்டர்னிக் முறை செயலிழந்து தோல்வியில் முடிந்தது.

**4. மன்ரோ கொள்கை :** மெட்டர்னிக் முறை தோல்விக்கு மன்ரோ கொள்கையும் ஒரு காரணமாகும். 1823இல் லத்தீன் அமெரிக்க நாடுகளில் ஃபிரான்சும், மெட்டர்னிக்கும் தலையிட விரும்பியது. அதனை காசல்ரீயும் மன்ரோவும் வன்மையாக எதிர்த்தனர். அமெரிக்க நாடுகளின் உள்துறையில் ஐரோப்பிய நாடுகள் தலையிடுவதை அமெரிக்கா அனுமதிக்காது. அவ்வாறு தலையிட்டால், அதன் விளைவுகள் கடுமையாக இருக்குமென மன்ரோ எச்சரித்தார். இவ்வெச்சரிக்கை மெட்டர்னிக் முறைக்கு விடுத்த அறைகூவலாகும். புரட்சியினைத் தடுத்ததோடு நிறைவு பெறாத மெட்டர்னிக், நாடுகளின் உள்துறையில் தலையிடுவதையும் தமது உரிமையாகக் கருதினார். டிரப்பாவில் கூடிய ஐவர் கூட்டணியும் இதற்கு இசைவு தெரிவித்தது. அதன்பின்னர், இத்தாலி போன்ற நாடுகளின் உள்துறையிலும் தலையிட்டு அவற்றின் உரிமைகளையும் பறித்தார். தங்களது தாயகமான ஸ்பெயினை எதிர்த்து லத்தீன் அமெரிக்க நாடுகள் விடுதலைப் போரைத் தொடங்கியபோது மெட்டர்னிக் அவற்றை வன்மையாகக் கண்டித்தார். ஃபிரான்சுடன் இணைந்து அதனை ஒடுக்கவும் முற்பட்டார். மன்ரோவின் அறைகூவல் அவரைப் பெரிதும் செயலிழக்கச் செய்தது. 1848-ல் தன்னை எதிர்த்து, மாபெரும் புரட்சியொன்று வெடித்தபோது, அதனை எதிர்க்கத் துணிவின்றி வியன்னாவை விட்டு வெளியேறினார். இவர் மாறுவேடத்தில் இங்கிலாந்துக்குத் தப்பியோடினார். அவரது வீழ்ச்சியோடு ஐரோப்பாவில் மாபெரும் பிற்போக்கு சகாப்தமொன்று முடிவுற்றது. புதிய, எழுச்சி மிக்க முற்போக்குக் கொள்கைகளைக் கொண்ட புதிய சகாப்தமொன்று மலர்ந்தது. அம் மலர்ச்சியின் நறுமணம் ஐரோப்பாவெங்கும் பரவி மக்களுக்குப் பரவசமூட்டியது.

**இவரது பண்பு நலன் பற்றியதொரு திறனாய்வு**

மெட்டர்னிக் பற்றிய முறையான அல்லது சரியான மதிப்பீடென்பது சற்று கடினமான ஒன்றாகும். அவரது சொல்லும் செயலும் அவர் ஒரு பிற்போக்குவாதியென எடுத்தியம்புகின்றன.

அவர் வாழ்ந்த காலமும், அன்றைய அவரது பேரரசின் காலமும் அவரது அத்தகைய சொல்லுக்கும் செயலுக்கும் காரணமாயின. அவரது அரசியல் வாழ்வுபற்றிய கருத்து வேறுபாடுகள் மிகுந்து காணப்படுவதால், அவரைப் பற்றிய ஒரு முறையான ஆய்வு ஈண்டு வேண்டப்படுகிறது.

**மெட்டர்னிக் பற்றிய பல்வேறு கருத்துகள்**

மெட்டர்னிக் பற்றிய மதிப்பீட்டில் வரலாற்று வல்லுநர்கள் இடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஒரு சாரார் அவரைப் பிற்போக்குவாதி என்பர். கெட்டல்பீ என்பார் அவரைப் பற்றிக் குறிப்பிடுகையில் பிடிவாதம் மிக்கவராயும், மக்களாட்சிக்கு மாறு பட்டவராயும் திகழ்ந்தவர் என்பார்.[1] அவர் அடக்குமுறையில் நம்பிக்கை மிக்கவர். மக்கள் உரிமைகளை மறுத்தவர் என்பனவும் அவர்மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுகளில் சில. உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் போன்ற உயரிய கொள்கைகளை வெறுத்ததுடன் அவற்றைக் களையவும் இவர் பெரிதும் முயன்றார். காலப்போக்கில் உருவாகும் புதிய கருத்துகளைப் புறக்கணிக்க இயலாதென்பதை இவர் முற்றிலும் மறுத்தார். அவரது பிடிவாதம் அவரை முற்றிலும் குருடாக்கியது. புரட்சியையும் இவர் முற்றிலும் வெறுத்தார். "அது ஒரு நோய், ஆற்றப்பட வேண்டும். அது ஓர் எரிமலை, அணைக்கப்படவேண்டும். அது ஒரு நச்சுப் பாம்பு, அது சமுதாய அமைப்பைக் குலைக்கும்" இவை அவரது புரட்சி பற்றிய கருத்துகளாகும். இவை அவரது பிற்போக்குத் தன்மையை நன்கு புலப்படுத்தும் என்பர் பிறிதொரு சாரார். மக்களாட்சியை அவர் வெறுத்தார் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. மக்களாட்சி நாகரிகத்தினை அழிக்கவல்ல ஒரு சக்தி எனவும் இவர் தூற்றினார். பாராளுமன்றங்களைக் கொண்ட நாடுகளை அரசாங்கங்கள் இல்லாத நாடுகளெனவும் இவர் தூற்றினார்.[2] இவை நன்கு ஆராயப்படவேண்டிய கூற்றுகளாகும்.

**இவரது கொள்கையும் ஆஸ்திரிய நிலையும்**

ஆஸ்திரியப் பேரரசு ஒற்றுமையற்றுப் பிளவுண்டுக் கிடந்த ஒரு மாபெரும் பேரரசாகும். மெட்டர்னிக்கைப் பொருத்தமட்டில் அப் பேரரசினை ஒன்றிணைக்கவல்ல நல்ல திட்டமேதும் அவர் பெற்றிருக்கவில்லை. மக்களிடை நிலவிய வேற்றுமைகளை நன்கு பயன்படுத்தி, அவர்களிடையே இனவெறியினையும் மூட்டிப் பிரித் தாண்டார் என்பதே மெய்யாகும்.

[1] Ketelbey—p. 144.
Hazen,—p. 17

ஆஸ்திரியப் பேரரசின் எல்லைகளுக்கப்பாலும் இவர் இக் கொள்கையினையே செயல்படுத்தினர். பிற நாடுகளில் தலையிட்ட தாலேயே இவரும் வீழ்ந்துபட்டார் எனில் மிகையாகாது. ஒரு தாற் காலிக ஆஸ்திரிய மேலாண்மையை ஐரோப்பாவில் நிறுவினர் என்பது அவரது ஒரு சாதனைதான் எனினும், அதனுல் ஆஸ்தியா வுக்கு வேதனைதான் மிஞ்சியது. ஐரோப்பாமீது இவர் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியதிலிருந்து இவரது வீழ்ச்சியும் தொடங்கி விட்டது. தமது பேரரசின் வலிமையை அறியாது பேராசையால் இவர் செய்த செயல் இறுதியில் ஆஸ்திரியப் பேரரசின் சிதை வுக்கே வழிவகுத்தது. தாற்காலிகமாக ஆஸ்திரியா என்ற விண் மீன் ஐரோப்பா என்ற வானில் சிலகாலம் சுடர்விட்டுப் பிரகாசித் தது என்பது மெய்யே எனினும், அதுவும் மெட்டர்னிக் வீழ்ச்சி யுடன் தனது ஒளியினை முற்றிலும் இழந்து வீழ்ந்துபட்டது.

மெட்டர்னிக், ஐரோப்பியச் சூழ்நிலை அறியாது செயல்பட்டார் என்பது மிகையான கூற்றன்று. புரட்சியினை முற்றிலும் அடக்க முடியுமென இவர் நம்பியது இவரது தோல்விக்கே வித்திட்டது. அத்துடன் ஐரோப்பிய அரசியல் உலகில் இவர் புரிந்துகொள்ள இயலாத ஒரு புதிராகவே திகழ்ந்தார். முதலாம் சார் அலெக் ஸாந்தர் இவரை ஒரு "பொய்யர்" எனக் குறை கூறினர். மேலும், இவர் ஒரு சந்தர்ப்பவாதி எனவும் மெருகூட்டப்பெற்ற குப்பை (Polished Dust) என்றும் பழித்துரைக்கப்பட்டார். இவர் ஒரு சமய வெறியரெனவும் போப்பாண்டவரின் அடியாள் எனவும் இடித்துரைக்கப்பட்டார். ஆஸ்திரிய அரசின் நிதியைத் தவருகப் பயன்படுத்தியவர் எனவும் இவர் குறை கூறப்பட்டார். ஆகவே, இவரை அரசியல் ஞானி என்றழைப்பதிலும் சந்தர்ப்பவாதியென அழைத்தலே தகும் என்பர் பலர். இவையும் ஆராயப்படவேண்டிய கருத்துகளாகும்.

மெட்டர்னிக் முறை மிகவும் பிற்போக்கானது. காலத்திற்கு மிகவும் பிற்பட்டதென்பதை யாரும் மறுக்க இயலாது. ஆயினும், அவர் வாழ்ந்த காலத்தையும் அவர் பணியாற்றிய நாட்டின் நிலை யையும் நாம் கருத்திற்கொள்ளவேண்டும். ஆயினும், ஆஸ்திரிய அமைச்சரென்ற முறையில் அந் நாட்டின் நலனைப் பேணுவது அவரது தலையாய கடமையாக இருந்தது. ஆஸ்திரியப் பேரரசைக் கட்டிக்காக்கவும் அதன் ஒற்றுமையினைப் பேணவும் இவர் பிற் போக்கு முறையினைப் பின்பற்றவேண்டி ஏற்பட்டது. நாட்டுப் பற்றும், புரட்சிகளும், முற்போக்குக் கருத்துகளும் செயல்பட அனுமதித்தால், ஆஸ்திரியப் பேரரசு சிதைவுறும் என இவர் கருதினர். பல இனங்களையும், பல நாடுகளையும் கொண்ட இப்

பேரரசில் நாட்டுப் பற்றினையும், புரட்சிகளையும் அனுமதித்தால், ஆஸ்திரியப் பேரரசின் ஐக்கியம் பெரிதும் பாதிக்கப்படுமென இவர் அஞ்சியதில் தவறேதுமில்லை. ஆகவே, தமது பேரரசின் ஒற்றுமையைப் பேணுதற்காக இவர் பிற்போக்கு வழியில் நின்றார்.

அவரது பிற்போக்குத் தன்மையில் மேலும் பல உண்மைகள் பொதிந்து கிடக்கின்றன. ஃபிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக, ஐரோப்பாவில் அமைதியின்மை மிகுந்தது. புரட்சியாளர்கள் பழையன அனைத்தையும் அகற்ற விரும்பினர். புதுமைக்கும், பழமைக்கும் இடையே பூசல்கள் மிகுந்தன. அதன் விளைவாக, ஐரோப்பாவெங்கும் குழப்பம் மிகுந்தது.

இக் குழப்பத்தையும், அமைதியின்மையினையும் மெட்டர்னிக் விரும்பவில்லை. நெப்போலியனை வீழ்த்துவதில் பெரும் பங்கேற்ற நாடுகளில் ஆஸ்திரியாவும் ஒன்று. ஃபிரான்சுக்கு மிக நெருங்கிய உறவு பூண்ட நாடும் இதுவேயாகும். அங்குப் புரட்சியினையும், குழப்பத்தையும் தவிர்த்து, மீண்டும் பூர்போன் ஆட்சியினை நிலை நிறுத்த ஆஸ்திரியா பெரிதும் விரும்பியது. ஆகவே, பழைய முறையினைப் பேணுவதன் மூலம் பழைய ஐரோப்பிய அரசுகள் அனைத்தையும் பேண விரும்பினர் மெட்டர்னிக். ஆகவே, மெட்டர்னிக் முறைமைக் கொள்கை, முன்னிலை மீட்பு போன்ற கொள்கைகளைப் பெரிதும் ஆதரித்துப் போற்றினார். அக் கொள்கைகள் மூலம் இவர் ஐரோப்பிய அரசுகளைக் காப்பாற்ற முயன்றார். தானும் ஓர் உயர் குடியினன் என்ற முறையில் தன்னையொத்த அனைத்து உயர் குடியினரையும் இவர் காப்பாற்ற நினைத்தார். அதன் விளைவே இவரது பிற்போக்குக் கொள்கைகளாகும்.

அவர் நிலையான கொள்கை எதனையும் பின்பற்றவில்லை. புரட்சிக் கருத்துகளும், அழிவுச் சக்திகளின் ஆதிக்கமும் மிக்க ஒரு நாட்டில் ஒரு நிலையான கொள்கையினைப் பின்பற்றாதது இவரது மாபெரும் தவறாகும். அவருடைய கூற்றிலும் உண்மையில்லாமலில்லை. 19ஆம் நூற்றாண்டில் ஆஸ்திரியா பல பிரச்சினைகளின் தாயகம் என்பது ஈண்டு நினைவுகூரவேண்டிய ஒன்றாகும். வேற்றுமை மிகுந்த அப் பேரரசினைக் கட்டிக் காத்தலென்பது சிக்கலான ஒன்றாகும். அப் பேரரசினைக் கட்டிக் காத்தலே அன்றைய தலையாய பணியாக இருந்தது, மக்களாட்சி முறையில் அதனைக் காத்தலென்பது இயலாத ஒன்றாகும். நாட்டுப்பற்றின் அடிப்படையில் அமையும் மக்களாட்சியில் அப் பேரரசு சிதையுமேயன்றிச் சிறப்புறாது என்பதை அனைவரும் அறிவோம். நாட்டுப்பற்றுதான் அப் பேரரசின் தலையாய பிரச்சினையாக

இருந்தது. அவ்வுணர்வே அப்பேரரசிலேற்பட்ட பல புரட்சிகளுக்கும் காரணமாகும். நிலையான ஒரு கொள்கையினைப் பின்பற்றி அப் பேரரசைக் கட்டிக்காத்தல் என்பது இயலாத ஒன்ருகும். மாறி வரும் சூழலுக்கேற்ப கொள்கைகளையும் மாற்றிக்கொள்ளுதல் ஆள்வோரின் கடனுகும். அவரது கொள்கைகள் யாவும் அவரது பேரரசின் பிரச்சினைகளால் உருவானவை என்பர் பலர். இதில் ஓரளவு உண்மையிருப்பதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மெட்டர்னிக், அரசியல் துறையிலும் நேர்மையான முறையைக் கையாளவில்லை. தன்னலமே அவரது கொள்கையாக இருந்தது என்பதும் அவர்மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுகளில் ஒன்ருகும். 19ஆம் நூற்ருண்டு வரலாற்றை நாம் நன்கு ஆராயின், நாம் இதனை ஒரு பெருங் குற்றமாகக் கருத இயலாது. நேர்மை யென்பது அன்றைய அரசியலில் இல்லாத ஒன்று என்பது நாம் உணரவேண்டிய ஒன்ருகும். மெட்டர்னிக்கை மட்டும் நாம் இதற்காகக் குறைகூறுவது முறையன்று. இங்கிலாந்து போன்ற நாடுகளும் முற்றிலும் நேர்மையைக் கடைப்பிடித்தொழுகவில்லை. இவர் நேர்மையற்றவர் என்ற கருத்தை மக்களிடையே பெரிதும் பரப்பியவர் தாலிரான் ஆவார். அவரும் ஒரு நேர்மையற்றவர் என்பதை வரலாறு காட்டுகிறது. ஆகவே, மெட்டர்னிக்கும் பிறரைப் போன்றே குறைகள் மிக்கவர் எனக் கருதுவதே நடுநிலையாளரின் நற்பண்பாகும்.

மெட்டர்னிக்கும் பல நற்பண்புகள் மிக்கவர். நல்ல அரசியல் தலைவர்க்குரிய அனைத்துப் பண்பு நலன்களும் அவரிடமிருந்தன. அவர் அழகு மிக்கவர். அரசியல் நுட்பமும் மிக்கவர். ஐரோப்பிய அரசியலை ஐயந்திரிபற அறிந்தவர். திடச் சிந்தையும், நாட்டுப் பற்றும் மிக்கவர். இவை ஃபிஷர் என்ற வரலாற்று வல்லுநர் இவரைப்பற்றி வழங்கிய புகழுரைகளாகும்.[1] நெப்போலியனின் இராணுவ ஆட்சியிலிருந்தும் இவர் ஐரோப்பாவைக் காப்பாற்றினுர். தமது அரசு நிதியை இவர் ஒருபோதும் தவருகப் பயன்படுத்தினுரில்லை. இவர் ஒரு சமய வெறியருமல்லர். புதிய கருத்துகளை இவர் புறக்கணிக்கவும் இல்லை என்பது ஒரு சாரார் கருத்து. புதிய கருத்துகளின் இன்றியமையாமையினை இவர் நன்குணர்ந்திருந்தார். "பழைய ஐரோப்பா அழியத் தொடங்கிவிட்டது. அழிந்து வரும் அதற்கு என் வாழ்வையே அளிக்கிறேன்" என்ற இவரது கூற்று இவர் புதிய கருத்துகளின் முக்கியத்துவத்தினை நன்கு உணர்ந்திருந்தார் என்பதை நன்கு புலப்படுத்தும்.

[1] Fisher—p. 929.

இவர்மீது வீண் பழிகள் பல சுமத்தப்பட்டுள்ளன என்பதை இன்று பலரும் ஏற்றுக்கொள்கின்றனர். அவர்கள் மெட்டர்னிக் முறை என்பதே இவரது முறையன்று. அது பேரரசர் ஃபிரான்சிஸின் முறையாகும். அவர் ஒரு மாபெரும் பிற்போக்காளர். அடக்குமுறையில் நம்பிக்கை மிக்கவர். அவரது அமைச்சரென்ற முறையில் அவர் முறையினை அவரது ஆணைப்படி மெட்டர்னிக் நிறைவேற்றினர். ஆதலின், இவரைக் குறைகூறுதல் தக்கதன்று என்பர். மேலும், மெட்டர்னிக் தம்முடைய பேரரசரை மக்கள் நலன் கருதி, ஆட்சி புரியுமாறு பலமுறை வேண்டினர். பாராளுமன்ற முறையே ஏற்றதென்பதையும் அவருக்கு எடுத்துரைத்தார். ஹங்கேரிக்கு அரசியலமைப்பை வழங்குமாறும் இவர் பேரரசரை வேண்டினர். ஆயினும், பேரரசர் இவர் கூறியதை ஏற்கவில்லை. அது இவரது தவருகாது எனவும் பலர் சுட்டிக் காட்டி இவர் குற்றமற்றவர் எனக் கருதுகின்றனர். இவ்வாறு மெட்டர்னிக்கைப் பற்றி இருவகை கருத்துகள் நிலவுகின்றன. ஆகவே, இவர் குறைகள் மிகுந்தும் நிறைகள் குறைந்தும் காணப்பட்ட ஒரு வரலாற்று மாமனிதர் எனில் தகும்.

# 6. இரண்டாவது ஃபிரெஞ்சுக் குடியரசு

**லூயி நெப்போலியன்**

1848 பிப்ரவரிப் புரட்சியின் விளைவாக லூயி பிலிப் பதவி துறந்தார். குடியரசுக் கட்சியினரும் சோசலிஸ்டுகளும் கொண்ட தாற்காலிக அரசு ஒன்று ஃபிரான்சில் நிறுவப்பட்டது. இவ்வரசு தன்னை ஒரு குடியரசென அறிவித்துக்கொண்டது. இவ்வரசினைக் குடியரசுத் தலைவரான லாமார்டினும் (Lamartine) சோசலிஸ்டுக் கட்சித் தலைவரான லூயி பிளாங்கும் (Louis Blanc) முன்னின்று நடத்தினர். இக் குடியரசு பல பிரச்சினைகளை எதிர்நோக்கி நின்றது.

**இரண்டாவது குடியரசின் பிரச்சினைகள்**

1. **பெருவாரியான மக்களின் ஆதரவின்மை :** 1848 பிப்ரவரிப் புரட்சியினை ஓர் எதிர்பாராத புரட்சி என்பர் (A revolution by accident). இது பாரிசு மக்களது அதிருப்தியினால் நிகழ்ந்த ஒரு புரட்சியாகும். பிற மாநிலங்கள் அதில் மிகுதியான பங்கேற்க வில்லை. ஆகவே, பெருவாரியான ஃபிரெஞ்சு மக்கள் இப்புரட்சியினை விரும்பவில்லை. 1848-ல் உருவாக்கப்பட்ட இரண்டாவது குடியரசுக்கு மிகுதியான மக்களின் ஆதரவில்லாமற்போய்விட்டது. பெருவாரி யான மக்களின் ஆதரவினைப் பெறுவதே இக் குடியரசின் முதல் பிரச்சினையாகும்.

2. **கொள்கை வேறுபாடுகள் :** லூயி பிலிப்பின் நடுத்தர வகுப்பினரின் ஆட்சியை விரும்பாத அனைத்துக் கட்சியினரும் ஒன்றுகூடி, நிகழ்த்திய புரட்சியே 1848 புரட்சியாகும். பல்வேறு கட்சியினரும், சீர்திருத்தவாதிகளும் ஒன்றுகூடிப் புரட்சி செய்து இரண்டாவது குடியரசினை நிறுவினர். புரட்சியின்போது ஒன்று பட்டுச் செயல்பட அவர்கள் புரட்சிக்குப் பின்னர் வேறுபட்டு நின்றனர். குடியரசுக் கட்சியினரும், சோசலிஸ்டுகளும் இரு வேறு துருவங்களாகத் திகழ்ந்தனர். குடியரசுக் கட்சியினரும் அவர்களுடைய தலைவரான லாமார்டினும் 1848 புரட்சி ஓர் அரசியல் புரட்சியே யன்றி சமூகப் புரட்சியன்று. முடியரசை அகற்றிக் குடியரசை நிறுவியதோடு, அப் புரட்சி முடிவுற்றது. அதற்கு மேலும் மாற்றங்கள் வேண்டுவதில்லை என அவர்கள் அறிவித்தனர்.

சோசலிஸ்டுகளும், அவர்களுடைய தலைவரான லூயி பிளாங்க்கும் அதனை முற்றிலும் மறுத்தனர். லூயி பிளாங்க், இப் புரட்சியின் விளைவாக மாபெரும் சமூக மாற்றங்கள் பல நிகழவேண்டுமென விரும்பினார். இப் புரட்சி ஒரு பெரும் சமூக மாற்றத்தின் தொடக்கமேயன்றி முடிவல்ல என்பது அவர்தம் கோட்பாடு. அனைவர்க்கும் வேலை, பொருளாதார ஏற்றத் தாழ்வின்மை, முதியோர்களுக்கும், குழந்தைகளுக்கும் சமூகப் பாதுகாப்பு போன்ற கொள்கைகளை அது நிறைவேற்ற வேண்டுமென்று விரும்பினர் சோசலிஸ்டுகள். தனியார் தொழிற்சாலைகள் யாவையும் அரசு மேற்கொண்டு, பாட்டாளிகள் நலனைப் பேண வேண்டு மென்றனர் அவர்கள். லூயி பிளாங்க் சோசலிஸ, சமுதாயத்தை அமைப்பதையே நோக்கமாகக் கொண்டார்.

சோசலிஸ்டுகளின் இத் தீவிரக் கொள்கைகளைக் குடியரசுக் கட்சியினர் ஏற்க மறுத்தனர். அவர்களுள் பெருவாரியானோர் சொத்துகளின் உடைமையாளர்கள் என்ற காரணத்தால், சோச லிஸ்டுகளை வன்மையாக எதிர்த்தனர். பெருஞ் செல்வர்களும் தங்களது உடைமைகள் தேசியமயமாக்கப்படுவதை விரும்பவில்லை. உழைப்பாளிகளுக்கே அனைத்தும் என்பதைப் பலர் ஏற்றுக் கொள்ள மறுத்தனர். சோசலிஸ்டுகளின் தீவிரப் போக்கினால் குடியரசுக்கு எதிர்ப்பே மிகுந்தது.

லூயி பிளாங்க் போன்ற தலைவர்கள் தங்களை எதிர்ப்பவர்களைப் பற்றி மிகுதியும் கவலைப்படவில்லை. உழைப்போர் அனைவர்க்கும் வேலையும், பாதுகாப்பும் நல்கப்படவேண்டும் எனவும் அதனைச் செயல்படுத்த முற்போக்கு அமைச்சரவையொன்று அமைக்கப்பட வேண்டுமெனவும் பிளாங்க் வலியுறுத்தினார். இதனைக் குடியரசுக் கட்சியினர் முற்றிலும் புறக்கணித்தனர். தொழிலாளர்கள் அமைச்சரவை ஒன்றை நிறுவ அவர்கள் மறுத்தனர். அதற்கு மாறாக, லூயி பிளாங்க் தலைமையில் தொழிலாளர் குழு ஒன்றினை (Labour Commission) அவர்கள் நிறுவினர். அக் குழுவின் பரிந் துரைகளை ஆராய்ந்து அதற்குத் தக்க நடவடிக்கைகள் மேற் கொள்ளப்படுமெனக் குடியரசுக் கட்சியினர் அறிவித்தனர். இதனால், அமைச்சரவையில் லூயி பிளாங்க் போன்றோர்களுக்கு இடம் தரப் படவில்லை. இதனால், சோசலிஸ்டுகள் நிர்வாகத்தில் பெரும் பங் கேற்க முடியாது போயிற்று. ஆயினும், அவர்களது செல்வாக்கினை ஈண்டு புறக்கணிக்க இயலாது.

**தேசியத் தொழிற்சாலைகள்**

தொழிலாளர் குழு பல பரிந்துரைகளை வெளியிட்டது. அப் பரிந்துரைகளின்படி தொழிற்சாலைகளில் வேலை செய்யும் நேரம்

11 மணியிலிருந்து 10 மணியாகக் குறைக்கப்பட்டது. ஆயினும், அதனை முதலாளிகள் பின்பற்றுகிறார்களா என்பதை இரண்டாவது குடியரசு கண்காணிக்கத் தவறிவிட்டது. அதனுடைய சட்டம் ஏட்டளவிலேயே நின்றுவிட்டது. லூயி பிளாங்க் தேசியத் தொழிற் சாலைகளை நிறுவி, அரசே நடத்தவேண்டுமெனப் பரிந்துரைத்தார். அதில் திறமை மிக்க தொழிலாளர்களையே நியமிக்க வேண்டு மெனவும் அவர்களே உற்பத்திக்குப் பொறுப்பேற்பரெனவும் அவர் பரிந்துரை செய்தார். அதன் அடிப்படையில் நாடெங்கும் தேசியத் தொழிற்சாலைகள் தொடங்கப்பட்டன. பல்லாயிரம் தொழிலாளர் களும் வேலையிலமர்த்தப்பட்டனர். ஆயினும், இத் தொழிற்சாலை களில் உற்பத்தி மிகக் குறைந்தது. இதற்குக் காரணம், புரட்சி உணர்வும், கட்டுப்பாடுமற்ற தொழிலாளர்களை அரசு மிகுதியும் கட்டுப்படுத்த முடியவில்லை. தொழிலாளர்களுள் பெரும்பாலோர் திறமையற்றவர்களாயுமிருந்தனர். ஆதலின், உற்பத்தி குறைந்ததில் வியப்பில்லை. 25,000-த்திலிருந்து 100,000 மாகத் தொழிலாளர் களின் தொகையும் உயர்ந்தது. அவர்களுக்கு நாளொன்றுக்கு 2 பிராங்க்குகளே கூலியாக வழங்கப்பட்டது. அதனால், அவர்கள் பெரிதும் ஏமாற்றமுற்றனர். ஆகவே, தொழிற்சாலைகள் செவ்வை யாக இயங்க வழியில்லாதுபோயிற்று. நாட்டின் பொருளில் ஒரு பெரும்பகுதி அதற்கே செலவிடப்பட்டும் போதிய முன்னேற்றம் ஏற்படவில்லை. இதன் காரணமாக, இரண்டாவது குடியரசு பொருளாதார நெருக்கடிக்கு வித்திட்டது.

### பொதுத் தேர்தலும், சட்டமன்றமும்

இரண்டாவது குடியரசு, ஃபிரான்சுக்கு நல்லதோர் அரசியல் அமைப்பினை நல்க விரும்பியது. பொதுத்தேர்தல் ஒன்று நடத்தி, அதன் விளைவாக வரும் சட்டமன்றம் அப்பொறுப்பினை ஏற்கு மெனவும், இது அறிவித்தது. 1848ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள் பொதுத் தேர்தலும் நடந்தது. இத் தேர்தலில் வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை நல்கப்பட்டது. நகர வாக்காளர்களை விட, நாட்டுப்புற வாக்காளர்களே மிகுதியாக இருந்த காரணத் தால், இத் தேர்தல் சோசலிஸ்டுகளுக்கு ஒரு மாபெரும் இழப்பாக அமைந்தது. பாரிசு மக்களின் தீவிரக் கொள்கையினையும், சோசலிசக் கொள்கையினையும் விரும்பாத நாட்டுப்புற மக்கள் அவர்களுக்கு வாக்களிக்க மறுத்தனர். இத் தேர்தலில் மொத்தம் 900 உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களுள் 700 உறுப்பினர்களுக்கு மேல் சொத்துடையவர்கள். புரட்சியினையும் குழப்பத்தையும் விரும்பாத நாட்டுப்புற மக்கள் அமைதி, நல்லாட்சி வேண்டி சொத்துடையவர்களைத் தேர்ந்தெடுத்தனர்.

இத் தேர்தலில் நிலக்கிழார்களும், சமய குருமார்களும் பெரும் பங்கேற்று சோசலிஸ்டுகளைத் தோற்கடித்தனர்.

### சட்டமன்றப் பணிகள்

1848-ல் பதவிக்கு வந்த சட்டமன்றம், சோசலிஸ்டுகளின் தீவிரப் பொருளாதாரக் கொள்கையினை முற்றிலும் வெறுத்து ஒதுக்கியது. தேசியத் தொழிற்சாலைகளால் நேர்ந்த பொருளிழப்பினைக் கண்டு அவற்றை மூடவும் துணிந்தது. அவற்றின் பணிகளையும் பொருளாதாரப் பிரச்சினைகளை ஆராய ஒரு குழுவினையும் இம் மன்றம் நியமித்தது. தொழிற்சாலைகளால் பயனேதுமில்லை என இக் குழுவும் பரிந்துரைத்தது. 1848ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் இக் குழுவின் பரிந்துரைப்படி இத் தொழிற்சாலைகள் அனைத்தும் மூடப்பட்டன. மணமாகாத தொழிலாளர்கள் படையில் சேரலாமென்றும், விருப்பமில்லையெனில் தொழிற்சாலைகளைவிட்டு வெளியேறலாமென்றும் இச் சட்டம் கூறியது. பிற தொழிலாளர்கள் பொதுப் பணித்துறை அலுவல்களில் சேரலாம் எனவும் இச் சட்டமன்றம் அறிவித்தது. தேசியத் தொழிற்சாலைகளனைத்தும் முடப்பெற்றன. ஏழைத் தொழிலாளர்கள் இதுகாறும் 2 பிராங்க்குகளையேனும் ஊதியமாகப் பெற்றனர். இத் தொழிற்சாலைகள் மூடப்பட்ட காரணத்தால், அவர்கள் அனைவரும் வேலை இழந்து வறுமையில் வாடும் நிலையேற்பட்டது.

### ஜூன் உள்நாட்டுப் போர் (1848)

குடியரசுக் கட்சியினரின் இப் பிற்போக்குத் தன்மையும் அவர்களது கொள்கைகளும் சோசலிஸ்டுகளையும், தொழிலாளர்களையும் ஆத்திரமூட்டின. இதன் விளைவாக, 1848ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் உள்நாட்டுப் போர் மூண்டது. நாடெங்குமிருந்த, தொழிலாளர்களும், சோசலிஸ்டுகளும் கொதித்தெழுந்தனர். பாரிசு நகரத் தெருக்களில் போரிடுவதற்குச் சாதகமாக இருக்க தடுப்புச் சுவர்கள் எழுப்பப்பட்டன. தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றுகூடி, சட்டமன்றத்தைத் தாக்கினர். அதனைக் கைப்பற்றும் முயற்சியில் அவர்கள் முற்றிலும் தோல்வியுற்றனர். பாதுகாப்புப் படையினர் அவர்களை முறியடித்தனர். ஜூன் 23-லிருந்து 26 வரையிலான நான்கு நாள்களில் பாரிசெங்கும் குருதியாறு பெருக்கெடுத்தோடியது. கேவிக்னக் என்ற படைத்தலைவர் தொழிலாளர் புரட்சியினை முற்றிலும் முறியடித்தார். பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் இப் போரில் மாண்டு போயினர். இப் போரில் 10,000-க்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் மாண்டு போயிருக்கக் கூடுமென்பர், ஹேசன் என்ற வரலாற்று

வல்லுநர்.[1] பல்லாயிரவர் நாட்டைவிட்டு ஓடினர். லூயி பிளாங்க்கும் இங்கிலாந்திற்குத் தப்பியோடினர். சோசலிஸ்டுப் புரட்சி தோல்வியுற்றதால் சட்டமன்றத்தில் அவர்கள் முற்றிலும் செல்வாக்கிழந்தனர். பிற்போக்கு மீண்டும் வெற்றிபெற்றது.

1848 உள்நாட்டுப் போரைப்பற்றிப் பல்வகைக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஒரு சாரார் அதனை ஒரு வர்க்கப் போராட்டமாகக் கருதுவதில்லை. இப் போராட்டம் தொழிலாளர் களது போராட்டமன்று. அதில் தொழிலாளர்கள் மிகுதியும் பங்கேற்கவில்லை. ஏமாற்றமுற்ற அரசியல்வாதிகளும், தொழி லாளர்களும், சோசலிஸ்டுகளும் பங்கேற்று அரசியல் அரங்கில் செல்வாக்கு பெற விரும்பினர். தொழிலாளர்கள் மிகுதியும் பங்கேற்காத அதனை ஒரு தொழிலாளர் புரட்சியென ஏற்க பலர் மறுக்கின்றனர். அப்போரின்போது வாழ்ந்த De. Tocqueville என்ற வரலாற்று வல்லுநர் இதனை ஒரு தொழிலாளர் புரட்சியென அழைத்துள்ளதும் ஈண்டு ஆராயவேண்டிய ஒன்றாகும். இதன் மூலம் பாட்டாளிகள் தங்கள் உரிமைகளைப் பெரிதும் நிலைநாட்ட முயன்றனர். ஆயினும், அம் முயற்சியில் அவர்கள் தோல்வி யுற்றனர். இது ஒரு வர்க்கப் போராட்டம் என்பதைப் பலரும் ஏற்கத் தயங்குகின்றனர். ஆயினும், இது ஒரு பெரும் தொழிலாளர் உரிமைப் போராட்டமென்பதை யாரும் மறுக்க இயலாது.

**இந்த உள்நாட்டுப் போரின் விளைவுகள்**

(1) 1848 உள்நாட்டுப் போர் இரண்டாவது குடியரசினை வெகுவாகப் பாதித்தது. தொழிலாளர்களின் உண்மையான பல வேண்டுகோள்களையும், தேவைகளையும் இக்குடியரசு முற்றிலும் புறக்கணித்தது. சோசலிஸ்டுகளின் ஆதரவில் பதவிக்கு வந்த குடியரசுக் கட்சியினர், வெற்றிக்குப் பின்னர், சோசலிஸ்டுகளின் தேவைகளைப் புரிந்துகொள்ள மறுத்தனர். இத் துரோகம் சோச லிஸ்டுகளைப் பெரிதும் ஆத்திரமுறச் செய்தது. உள்நாட்டுப் போரில் அவர்கள் தோல்வியுற்றாலும், குடியரசுக் கட்சியினரை அவர்கள் பெரிதும் வெறுத்தனர். நாள்கள் செல்லச் செல்ல அவர்களிடையே பகைமை மிகுந்தது. அப் பகைமை இறுதியில் இரண்டாவது குடியரசின் வீழ்ச்சிக்கே காரணமானது.

(2) சோசலிஸ்டுகளின் தோல்வி மீண்டும் பிற்போக்கு ஆட்சிக்கு வித்திட்டது. இரண்டாவது குடியரசின் முற்போக்குத் திட்டங்கள் யாவும் கைவிடப்பட்டன. ஏழையரின் நலன் பேணும்

[1] Hazen-p. 172.

கடமையையும் வெற்றிபெற்ற குடியரசுக் கட்சியினர் மறந்தனர். மீண்டும் அடக்குமுறை ஆட்சி தாண்டவமாடியது. மக்களாட்சி என்பதே அடக்குமுறை ஆட்சியோவென ஐயுறுமளவிற்கு அவ்வாட்சி செயல்பட்டது. மீண்டும் வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்தது. மீண்டும் வேலை நேரம் உயர்த்தப்பட்டது. சுரண்டலும், ஏமாற்றுதலும் தலைவிரித்தாடின. உரிமைகள் பெரிதும் தடை செய்யப்பட்டன. பிற்போக்காட்சியே நடைபெற்றது.

(3) குடியரசுக் கட்சியினரின் வன்முறைக்குக் கிடைத்த வெற்றியாகும். லாமார்டின் கூறியதைப் போன்று குடியாட்சியே இப் புரட்சியின் விளைவாக இறந்துவிட்டது, இதனால், மீண்டும் வல்லாட்சி ஏற்படுவதற்கு ஏதுவானது.

(4) உள்நாட்டுப் போரின் விளைவாகப் பல்லாயிரக் கணக்கான மக்கள் மாண்டு போயினர். இது மக்கள் உள்ளத்தில் ஒருவகை அச்சத்தை உருவாக்கியது. குடியாட்சி என்றாலே வன்முறை, குழப்பம், உள்நாட்டுப் போர் என்ற நிலையேற்பட்டது. இது முடியாட்சியினும் மோசமான ஆட்சியோ எனக் கருதுமளவிற்கு விளங்கியது.

(5) உள்நாட்டுப் போருக்குப் பின்னர், சிறையிலடைக்கப் பட்ட தொழிலாளர்களும், அவர்கள் தலைவர்களும் ஈவு இரக்கம் இன்றி நடத்தப்பெற்றனர். விக்டர் யூகோ (Victor Hugo), ஃபிள்ாபர்ட் (Flaubert) போன்ற நாவலாசிரியர்கள், அவர்கள் சிறை யில் நடத்தப்பெற்ற முறையினைக் கண்டு பெரிதும் வருந்தினர். காட்டுமிராண்டித் தனத்தினிடமிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்ள நாகரிகம் போரிட நேரிட்டது என விக்டர் யூகோ வருந்தி எழுதியுள்ளார். இதனால், குடியரசுக் கட்சியினர் முற்றிலும் செல்வாக்கிழந்தனர்.

(6) உள்நாட்டுப் போரின் விளைவாகக் குழப்பம், வன்முறை, நிர்வாகச் சீர்கேடுகள் மிகுந்தன. இதனால், உள்நாட்டில் பொருளா தாரம் சீர்குலைந்தது. உழவு, வணிகம் அனைத்தும் பின்னடைந் தன. பொருளாதார நெருக்கடி காரணமாக, மக்களது துன்பமும் மிகுந்தது. விலைவாசிகள் உயர்ந்து எளியோர் வாழ்வு மிகவும் சிக்கலானது. பற்றுக் குறையின் காரணமாக, மக்கள் பெரிதும் அவதியுற்றனர். அரசுப் பத்திரங்கள் (Bond) 116 பிராங்க்குகளி லிருந்து சரிந்தன. மக்கள் குடியரசை முற்றிலும் வெறுத்தனர்.

(7) குடியரசுக்கு எதிர்ப்பு மிகுந்தது. தங்களை எதிர்த்தோரைக் குடியரசு அடக்க முயன்றது. அச்சுறுத்தி அமைதியை நிலை

நாட்டும் அளவுக்குக் குடியரசு செல்வாக்கு இழந்துவிட்டது. அடக்குமுறை ஆட்சிக்கு அனைவரும் அஞ்சினர். தங்களையும், தங்களது சொத்துகளையும் பேணிக் காக்கவல்ல நல்ல அரசு ஒன்று வேண்டுமென மக்கள் எதிர்பார்த்திருந்தனர். லூயி நெப்போலியன் அவற்றைத் தருவதாக வாக்களித்தபோது, மக்கள் அவருக்கு வாக்களித்தனர். குடியரசினை அகற்றி, முடியரசினை அவர் நிறுவ முயன்றபோது, மக்களும் அவரைப் பெரிதும் ஆதரித்தனர். குடியரசு, தான் செய்த தவறுகளால் இறுதியில் வீழ்த்தப்பட்டது.

### புதிய அரசியல் அமைப்பு

உள்நாட்டுப் போருக்குப் பின்னர், சட்டமன்றம் கூடி, குடியரசுக்குப் புதிய அரசியலமைப்பை உருவாக்கும் பணியில் ஈடுபட்டது. அவ்வரசியல் அமைப்பின் சிறப்புத் தன்மைகள் (Special features) வருமாறு :

(1) ஓரவையினைக் கொண்ட பாராளுமன்றம் வயதுவந்தோர் அனைவராலும் மூன்று ஆண்டுகளுக்கொரு முறை தேர்ந்தெடுக்கப்படும்.

(2) குடியரசுத் தலைவரும் வயது வந்தோர் அனைவராலும் நான்காண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படுவார். அடுத்து வரும் தேர்தலில் அவர் போட்டியிடத் தகுதியற்றவர்.

(3) அமைச்சரவை குடியரசுத் தலைவர்க்கே பொறுப்பாயிருக்கும். அதனைக் கூட்டவும், கலைக்கவும் அவரே அதிகாரம் பெற்றவர்.

(4) குடியரசுத் தலைவர் மட்டுமே சட்டங்களை முன்மொழியும் அதிகாரம் படைத்தவர். வெளிநாடுகளுடன் உடன்பாடு செய்துகொள்ளுதல், போர் தடுத்தல் போன்றவையும் அவரது அதிகாரத்திற்குட்பட்டவை. இவையே அதன் சில சிறப்புத் தன்மைகளாகும்.

### இவ்வரசியல் அமைப்பு பற்றிய ஒரு திறனாய்வு

இப்புதிய அரசியல் அமைப்புப்படி பாராளுமன்றமும் குடியரசுத் தலைவரும் வயது வந்தோர் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவ்வரசியலமைப்பு பல்வகை அரசியல் சிக்கல்களுக்கு வழி வகுத்தது. (1) குடியரசுத் தலைவரை மக்களே தேர்ந்தெடுத்ததால், பாராளுமன்ற உறுப்பினர்கள் அவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையினை இழந்தனர். பாராளுமன்றத்திற்கு அவர் கட்டுப்பட்டவர்

அல்லர் என்பதாக இது அமைந்தது. அதிகாரங்கள் அனைத்தும் அவருக்கே வழங்கப்பட்டன. அவர் கொடுங்கோலர் ஆவதற்கும் இதனால் வழியேற்பட்டது. பாராளுமன்றத்திற்கும், குடியரசுத் தலைவர்க்கும் கருத்து வேறுபாடு தோன்றின. பாராளுமன்றத்தைக் கலைக்கவும் அவர் உரிமை பெற்றிருந்தார். இது பாராளுமன்ற முறைக்கே மாறுபட்டதாகும். (2) குடியரசினையே அகற்றிவிட்டு முடியரசு நிறுவுதலும் எளிது என்ற முறையில் இவ்வரசியல் அமைப்பு அமைந்தது. இவ்வரசியல் அமைப்பின் குறைபாடுகள் காரணமாகவே, இரண்டாவது குடியரசும் நீக்கப்பட்டு இரண்டாவது பேரரசும் நிறுவப்பட்டது.

### இரண்டாவது குடியரசின் பணிகள்

1848 உள்நாட்டுப் போருக்குப் பின்னரும், குடியரசு நான்கு ஆண்டுகள் செயல்பட்டது. மக்களது ஆதரவை இழந்த இக் குடியரசு, படையினரின் ஆதரவில் நான்கு ஆண்டுகள் செயல்பட்டது. படைத் தலைவர் கேவிக்னக் என்பாரே இதனை ஆட்டிப் படைத்தார். நான்கு ஆண்டுகள் பணியாற்றிய இக் குடியரசு பல தவறுகளைச் செய்தது. அதனுடைய மாபெரும் பிரச்சினை பொருளாதாரப் பிரச்சினையேயாகும். இது நாட்டின் பொருளாதாரப் பிரச்சினையை எவ்வாறு தீர்ப்பது என்பதை அறியாது மயங்கியது. பொருளாதாரத் துறையில் அது மாபெரும் தவறுகள் பலவற்றைத் தொடர்ந்து செய்தது. அது, சிலரின் நலனுக்காகப் பலரது நலனைப் புறக்கணித்தது. லூயி பிலிப்பின் வெளிநாட்டுப் போர்கள் காரணமாகவும், முறையற்ற பொருளாதாரக் கோட்பாடுகள் காரணமாகவும், வீண் செலவு, ஆடம்பரம் காரணமாகவும் அரசாங்கக் கடன்கள் மிகுந்திருந்தன. அவற்றைச் சரிக்கட்ட புதிய வரிகள் பல விதிப்பது அவசியமானது. ஏழை மக்களின் வரிச்சுமை மிகுந்தது. ஏழை மக்கள் இதன்மீது முற்றிலும் நம்பிக்கை இழந்தனர்.

இரண்டாவது குடியரசுக்கான அரசியலமைப்பு ஒன்றைத் தீட்டும் முயற்சியிலும் இச் சட்டமன்றம் ஈடுபட்டது. இச் சட்டமன்ற உறுப்பினர்கள் உண்மை அறியாது செயல்பட்டனர். நடைமுறைக்கேற்றதை அவர்கள் செய்யவில்லை. மக்களுக்கே மிகுதியான அதிகாரங்களைக் கொடுக்க வேண்டுமென இவர்கள் விரும்பினர். மக்களாட்சியில் இவர்களுக்கு நல்ல பயிற்சியில்லாத காரணத்தால், கொள்கைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து நடைமுறைப் பிரச்சினைகளை முற்றிலும் மறந்தனர். கொள்கை வழி நின்று அதிகாரப் பிரிவுக்கும், மக்களது இறைமைக்குமே (Sovereignty of the people) இவர்கள் மிக முக்கியத்துவம்

கொடுத்தனர். அனைத்து அதிகாரங்களும் மக்களுக்கே என்றனர். மக்களுக்கு அதிகாரங்களை வழங்கிய இவர்கள் பாராளுமன்ற உறுப்பினர்களின் அதிகாரங்களை மறந்தனர்.

750 உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பாராளுமன்றம் உருவாக்க முடிவு செய்யப்பட்டது. அப் பாராளுமன்றத்தில் ஓர் அவையே இருக்கும். அப் பாராளுமன்ற உறுப்பினர்கள் மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை வயது வந்தோர் அனைவராலும் தேர்ந் தெடுக்கப்படுவரென முடிவு செய்யப்பட்டது. குடியரசுத் தலைவரைச் சட்டமன்றம் தேர்ந்தெடுப்பதா அல்லது மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுப்பதா என்பதை இம் மன்றம் ஆராய்ந்தது. குடியரசுத் தலைவர்க்கு அதிகாரங்கள் வழங்கப்பட வேண்டுமா அல்லது அவர் ஓர் அலங்காரத் தலைவராய் மட்டும் திகழ்ந்தால் போதுமா என்பதையும் இம் மன்றம் ஆராய்ந்தது. கிரேவி (Grevy) என்ற சட்டமன்ற உறுப்பினர் குடியரசுத் தலைவர்க்கு மிகுதியான அதிகாரங்களை அளிப்பது தவறென எச்சரித்தார். பெரும் பாலோர் அவரது எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. மக்களிடமே இறைமை அதிகாரம் இருத்தல் வேண்டும். ஆதலின், அவர்களே நேரடியாகக் குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமெனவும், அவர்கள் விரும்பினர். இறுதியில் குடியரசுத் தலைவர் சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுவதில்லை என முடிவு செய்யப்பட்டது. குடியரசுத் தலைவருக்கு அனைத்து அதிகாரங்களும் வழங்கப்பட்டன. இச் செயலால் குடியரசு தனது வீழ்ச்சிக்குத் தானே வழிவகுத்துக்கொண்டது.

1848ஆம் ஆண்டு, டிசம்பரில் நிகழ்ந்த குடியரசுத் தலைவர்க் கான தேர்தலில் லாமார்டின், கேவிக்னக் (Cavignac), லூயி நெப்போலியன் ஆகிய மூவரும் போட்டியிட்டனர். குடியரசுக் கட்சியின் வேட்பாளரான கேவிக்னக் என்பார் 15 லட்சம் வாக்கு களைப் பெற்றார். லூயி நெப்போலியன் 54 லட்சம் வாக்குகளைப் பெற்றுக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். லூயி நெப்போலியனுடைய வெற்றி குடியரசினது தோல்வியின் முதற் படியாகும். அனைத்து அதிகாங்களும் தன்னிடமே இருக்க வேண்டுமென விரும்பிய லூயி நெப்போலியனுக்கு இது நல்ல தொரு வாய்ப்பினைத் தந்தது. குடியரசில் நம்பிக்கையற்ற அவர் குடியரசை அகற்றும் முயற்சியிலும் ஈடுபட்டார். அம் முயற்சியில் அவர் இறுதியில் வெற்றியும் பெற்றார்.

### லூயி நெப்போலியனின் வெற்றிக்குக் காரணங்கள்

(1) லூயி நெப்போலியன் தேர்தலுக்கு முன்னர் மக்களுக்குப் பல வாக்குறுதிகளை அளித்தார். முதலாம் நெப்போலியனின்

நெருங்கிய உறவினர் என்ற முறையில் இவர் வெகு விரைவில் செல்வாக்கினைப் பெற்றார். புரட்சிகளாலும், அவற்றால் விளைந்த குழப்பங்களாலும் சோர்வுற்றிருந்த மக்கள் இவரது வாக்குறுதி களைப் பெரிதும் நம்பினர். அவரைத் தங்களுடைய தலைவராயும் ஏற்றுக்கொண்டனர்.

(2) 1848 தேர்தலுக்குப் பின்னர், குடியரசுக் கட்சியினர் முற்றிலும் செல்வாக்கிழக்கத் தொடங்கினர். நாட்டை எதிர்நோக்கி நின்ற பல்வேறு பிரச்சினைகளை அக் கட்சியினரால் தீர்த்து வைக்க முடியவில்லை. 1848 உள்நாட்டுப் போருக்குப் பின்னர், அவர்கள் தொழிலாளர்களின் ஆதரவினை முற்றிலும் இழந்தனர். நாட்டில் குழப்பம் மிகுந்தது. சோசலிஸ்டுகளுடன் சேர்ந்துகொண்டு குடியரசை அவர்கள் நிறுவியதால், உழவர்களும் பிறரும் அவர்களை வெறுத்தனர். கட்சிப் பூசல்களினின்றும் விலகி நின்ற லூயி நெப்போலியனை மக்கள் பெரிதும் வரவேற்றனர்.

(3) சோசலிஸ்டுகளின் தீவிரப் போக்கினை மக்கள் விரும்பவில்லை. 1848 உள் நாட்டுப் போரின்போது அவர்கள் கையாண்ட வன்முறைகளை மக்கள் முற்றிலும் வெறுத்தனர். அவர்களின் புரட்சிகரமான திட்டங்களையும் மக்கள் வரவேற்கவில்லை. வணிகர்களும், செல்வர்களும், நிலமுடைய உழவர்களும் அவர்களுடைய பொதுவுடைமைக் கொள்கைகளைக் கண்டஞ்சினர். சோசலிஸ்டுகளின் தலைமையில் தொடங்கப்பட்ட அனைத்து தேசியப் பணிமனைகளும் (National Workshops) செவ்வையாகச் செயல் படவில்லை அவற்றில் பல்லாயிரக்கணக்கான பிராங்குகள் முதலீடு செய்யப்பட்டிருந்தன. அவற்றால், உற்பத்திக் குறைந்து பொருளா தாரச் சிக்கல்கள் மிகுந்தன. தொழிலாளர்கள் என்ற பெயரில் சமூக விரோதிகளும், கயவர்களும் அரசியலில் மிக்க ஆதிக்கம் செலுத்தத் தொடங்கினர். விலைவாசிகள் ஏற்றம், பொருளாதார நெருக்கடி, வன்முறைச் செயல்கள், ஊழல், கையூட்டு, திறமை யின்மை, நேர்மையின்மை இவையே குடியாட்சியால் மக்கள் அறிந்தவை. மக்களாட்சியே செயலிழந்து காணப்பட்டது. லூயி நெப்போலியன் நல்லாட்சியை வழங்குவதாக வாக்களித்தபோது, மக்கள் அவரை ஆதரித்தனர்.

### புதிய சட்டமன்றமும் அதன் பணிகளும்

1848ஆம் ஆண்டு, டிசம்பர் திங்களில் நடந்த பொதுத் தேர்தலின் விளைவாகப் புதிய சட்டமன்றம் ஒன்று தேர்ந்தெடுக்கப் பட்டது. அப் புதிய அரசியலமைப்புபடி லூயி நெப்போலியன் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றத்தில்

முடியாட்சி வேண்டுவோர் மிகுந்து காணப்பட்டனர். சோசலிஸமும், மக்களாட்சியும் மக்களிடம் செல்வாக்கை இழந்து விட்டன என்பதையே இத் தேர்தல் தெளிவாக்கியது. புதிய சட்ட மன்றத்தில் 2/3 உறுப்பினர்களுக்கு மேல் முடியாட்சி மீண்டும் நிறுவப்படவேண்டுமென விரும்பினர். குடியாட்சியால் தேர்ந்தெடுக்கப்பட்ட இச் சட்ட மன்றம் அக் குடியரசிலேயே நம்பிக்கையிழந்து காணப்பட்டது ஒரு விந்தையே. ஃபிரெஞ்சுக் குடியரசு வரலாற்றில் இது ஒரு மாபெரும் சோதனைக் காலமாகும். குடியரசின் காவலராகத் திகழவேண்டியவர்களே, அதன் பகைவர்களாகத் திகழ்ந்தனர். குடியரசு செயல்படுவதும் அரிதானது. இது முற்றிலும் புதிய நிலை.

மீண்டும் புரட்சி உருவாகும் நிலை ஏற்பட்டது. குடியரசுக் கட்சியினர் மீண்டும் குழப்பம் விளைவிக்கக் கூடுமென முடியரசு ஆதரவாளர்கள் அஞ்சினர். ஆகவே, அக் கட்சியினைச் சேர்ந்த 33 உறுப்பினர்களும் வெளியேற்றப்பட்டனர். செய்தித் தாள்கள் தொடர்பான சட்டங்களையும் திருத்தி, செய்தித் தாள்களின் உரிமையினையும் பறித்தனர். முடியரசின் ஆதரவாளர்கள். பேச்சுரிமையும் தடை செய்யப்பட்டது. தேர்தல் சட்டமும் திருத்தப்பட்டது. வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை என்ற நிலையும் மாற்றப்பட்டது. இதன் விளைவாக 30 லட்சம் வாக்காளர்கள் வாக்குரிமை இழந்தனர். மீண்டும் கல்வி திருச்சபையின் ஆதிக்கத்தின் கீழ் கொணரப்பட்டது. ஏனெனில், ஆசிரியப் பெருமக்களில் பெரும்பாலோர் குடியரசின் ஆதரவாளர்கள். அவர்கள் குடியாட்சி முறையினையே வரவேற்றனர். ஆகவே, அவர்களிடம் கல்வியின் ஆதிக்கமிருத்தல் தங்கள் நிலைக்கே ஊறு விளைவிக்குமென உணர்ந்த குடியரசின் ஆதரவாளர்கள், கல்வியினைத் திருச்சபையின் ஆதிக்கத்தின் கீழ் கொணர்ந்தனர். திருச்சபை எப்போதும் குடியரசின் பகை என்ற காரணத்தால், இந்நிலை ஏற்பட்டது. பாரிசு முதலான மிக முக்கிய நகரங்களில் அவசர சட்டமும் பிறப்பிக்கப்பட்டது.

### 1851 சதித் திட்டம் (Coup of 1851)

குடியரசில் ஒருசிறிதும் நம்பிக்கையற்ற லூயி நெப்போலியன், இச் சூழ்நிலையினைக் கண்டு மிக மகிழ்ந்தார். முடியரசு வேண்டுவோரை மறைமுகமாக ஆதரித்து அவர்களைத் தம்பால் ஈர்த்துக்கொண்டார். மக்களது ஆதரவைப் பெறவும் இவர் தவறவில்லை. 1848 பிப்ரவரிப் புரட்சியின் விளைவாக, ரோமில் குடியரசு நிறுவப்பட்டது. போப்பாண்டவரும் ரோமிலிருந்து விரட்டப்பட்டார். இதனால், கத்தோலிக்க மக்கள் பெரிதும்

அதிர்ச்சியுற்றனர். மக்களது ஆதரவைப் பெற விழைந்த லூயி நெப்போலியனுக்கு இது நல்லதொரு வாய்ப்பாக அமைந்தது. ஃபிரெஞ்சுப் படையொன்றினை அங்கு அனுப்பி, மாஜினியைத் தோற்கடித்துவிட்டு, ரோமில் மீண்டும் போப்பாண்டவரை நிலைநிறுத்தினர். இதனால், ஃபிரெஞ்சு மக்கள் அவரைப் பெரிதும் ஆதரித்தனர். அத்துடன் அமையாது மக்களையும் நேரில் சந்தித்தார். ஃபிரான்சு முழுவதிலும் தீவிரமாகச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டு மக்கள் ஆதரவையும் திரட்டினர். மக்களிடம் அன்போடும் பரிவோடும் பழகி அவர்களது ஆதரவினைத் திரட்டினர் லூயி நெப்போலியன். இவர் வாக்குறுதிகள் பலவற்றையும் அவர்களுக்கு வழங்கினர். அனைவரது நலனிலும் இவர் மிக்க அக்கறை காட்டினர். இவரது நடுநிலைமையை மக்கள் பெரிதும் போற்றினர். முதலாம் நெப்போலியனைப் போன்றவர் இவர். இவரே தங்களுக்கு, தலைமை ஏற்க முற்றிலும் தகுதியுடையவர் எனவும் மக்கள் எண்ணத் தலைப்பட்டனர்.

1851ஆம் ஆண்டு இறுதியில் குடியரசுத் தலைவரது பதவிக் காலம் முடிவடையவிருந்தது. அரசியலமைப்புப்படி லூயி நெப்போலியன் மீண்டும்;குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிட இயலாது. அதனையுணர்ந்த லூயி நெப்போலியன், அச் சட்டத்தினை மாற்ற விரும்பினர். ஆயினும், சட்டமன்றம் அரசியல் சட்டத்தைத் திருத்த மறுத்துவிட்டது. இதனால், வெறுப்புற்ற லூயி நெப்போலியன் சட்டமன்றத்தையே கலைக்கத் துணிந்தார். 1851ஆம் ஆண்டு, டிசம்பர் திங்கள், 20ஆம் நாள் சட்டமன்றத்திற்கெதிரான சதியில் ஈடுபட்டார். அன்றுதான் முதலாம் நெப்போலியனது ஆஸ்டர் லிட்ஸ் போர்க்களத்தின் ஆண்டு விழா நாளாகும். அவ் விழாவிற்கு அடுத்து லூயி நெப்போலின் ஒருவருமறியா வண்ணம், சதியிலீடுபட்டு வெற்றியும் பெற்றார். அனைத்து இன்றியமையா இடங்களிலும் படைவீரர்களை நிறுத்தினர். பாரிசு முழுவதும் படைவீரர்கள் நிறைந்து நின்று காத்தனர். சட்டமன்றமும் கலைக்கப்பட்டது. அதனை மக்கள் பொருட்படுத்தவில்லை. ஆங்காங்கு குடியரசுக் கட்சியினர் விளைவித்த குழப்பமும் வெகு எளிதில் அடக்கப்பட்டது.

**இரண்டாவது பேரரசு**

சட்டமன்றம் கலைக்கப்பட்டது. மீண்டும் வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை நல்கப்பட்டது. உரிமையின் பாதுகாவலர் என லூயி நெப்போலியன் நாடெங்கும் போற்றப்பட்டார். அவரே மக்களாட்சியின் காவலரெனவும் வரவேற்கப்பட்டார். அச் சூழ்நிலையைத் தனக்கேற்றவாறு அமைத்துக்கொள்ள லூயி நெப்போலியன் தன்னையே மீண்டும் 10 ஆண்டுகளுக்குத்

தலைவராகத் தேர்ந்தெடுக்குமாறு மக்களை வேண்டினர். அவரே அனைத்து அதிகாரங்களையும் கொண்ட குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதனாலும், அவர் நிறைவு பெறவில்லை. அவரது நோக்கம் பேரரசராகப் பதவி ஏற்க வேண்டுமென்பதே. 1852ல் இவர் மீண்டும் தன்னையே பேரரசராகத் தேர்ந்தெடுக்குமாறு மக்களை வேண்டினர். முதலாம் நெப்போலியனது வெற்றிகளாலும் சாதனைகளாலும் பெரிதும் கவரப்பட்ட மக்கள், அத்தகைய நிலை மீண்டும் உருவாகுமென நம்பி 1852ல் நிகழ்ந்த பொதுத் தேர்தலில் அவரையே பேரரசராகவும் தேர்ந்தெடுத்தனர். 7,82,400 வாக்காளர்கள் இவரை ஆதரித்தும் 2,53,000 பேர்கள் இவரை எதிர்த்தும் வாக்காளித்தனர். பெருவாரியான வாக்காளர் களால், இவர் மீண்டும் இரண்டாவது பேரரசின் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். குடியரசு வீழ்ந்தது. முடியரசு மீண்டும் அமைந்தது.

### இரண்டாவது குடியரசின் வீழ்ச்சிக்குரிய காரணங்கள்

இரண்டாவது குடியரசின் வீழ்ச்சி ஆராய வேண்டிய ஒன்றாகும். ஹேசன், கெட்டல்பீ, ஹெய்ஸ் போன்ற வரலாற்று வல்லுநர்கள் இதனை ஆராய்ந்து அவர்களது கருத்துகளை வெளியிட்டுள்ளனர். இதன் வீழ்ச்சிக்குரிய காரணம், இது பிப்ரவரிப் புரட்சியின் குழந்தையென்ற காரணமேயாகும் என்பதையே பலரும் வலியுறுத்தியுள்ளனர். புரட்சி, குழப்பம், திறமையின்மை, நேர்மை யின்மை, வன்முறைகள் நிறைந்த நேரத்தில் பிறந்தது இக்குழவி. அச் சூழ்நிலைகளால், இக் குழந்தை நன்கு வளர வாய்ப்பில்லாமற் போய்விட்டது. அதனால், அக் குழவி துன்பத்தில் சுழன்று மாண்டு போய்விட்டது.

1. **ஆதரவின்மை :** 1848 பிப்ரவரிப் புரட்சியின் **விளைவுதான்,** இரண்டாவது குடியரசாகும். இரண்டாவது குடியரசு முற்றிலும் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியாகும். திட்டமிடப்படாத ஒரு நிகழ்ச்சி என்ற காரணத்தால், யாரும் இதன் தன்மையினை முன் கூட்டியே அறிய இயலவில்லை. சோசலிஸ்டுகளும் குடியரசுக் கட்சியினரும் முனைந்து முன்னின்று நடத்திய புரட்சி என்ற காரணத்தால், சோசலிஸ அடிப்படையில் இது அமைந்தது. புரட்சிக்குப் பின்னர், குடியரசுக் கட்சினருக்கும், சோசலிஸ்டு களுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் மிகுந்தன. சோலிஸக் கொள்கைகளைச் செயல்படுத்த வேண்டுமென சோசலிஸ்டுகள் வலியுறுத்தினர். ஆகவே, இரண்டாவது குடியரசு சோசலிஸக் கொள்கைகளைச் செயல்படுத்தவேண்டிய கட்டாயத்திற்கு உட் பட்டது. அதன் விளைவாகப் பல தீவிர சோசலிஸத் திட்டங்கள்

செயல்படுத்தப்பட்டன. இத் தீவிர சோசலிஸத் திட்டங்களுக்கு எதிர்ப்பு மிகுந்தது. அதன் விளைவாக அது வீழ்ந்துபட்டது.

**2. குடியரசுக் கட்சியினருக்கும், சோசலிஸ்டுகளுக்குமிடையே நிலவிய கருத்து வேறுபாடுகள் :** பல்வேறு கட்சிகளின் கிளர்ச்சியால் விளைந்ததுதான் 1848 பிப்ரவரிப் புரட்சியாகும். புரட்சிக்குப் பின்னர், குடியரசு எவ்வகையில் இயங்கவேண்டும் என்பதில் கருத்து வேறுபாடுகள் தோன்றின. குடியரசுத் தலைவர்களான லாமார்டின் போன்றவர்கள் அரசியல் துறையில் வயது வந்த அனைத்து மக்களுக்கும் வாக்குரிமை நல்குதலே தங்களது நோக்கமெனப் பறைசாற்றினர். 1789 ஃபிரெஞ்சுப் புரட்சியின் நோக்கங்கள் யாவும் இப் புரட்சியால் நிறைவு பெற்றன என அவர்கள் அகமகிழ்ந்தனர். இத்துடன் புரட்சி நிறைவு பெற்றது எனவும் அவர்கள் கருதினர். இதற்கு முற்றிலும் வேறுபட்டு நின்றனர் சோசலிஸ்டுகள். 1848 புரட்சி முற்றுப்பெற்ற ஒன்றன்று. அது ஒரு தொடக்கமே என்றனர் சோசலிஸ்டுகள். மாபெரும் சமூக, பொருளாதார, அரசியல், சீர்திருத்தங்கள் தொடங்கப்பட வேண்டுமென அவர்கள் வலியுறுத்தினர். தொழிலாளர்களுக்கு வேலை செய்யும் உரிமையை நல்குதல், தொழிற்சாலைகளின் வேலை நேரத்தைக் குறைத்தல், தொழிலாளர்களின் நலனைப் பேணும் சட்டங்களைக் கொணர்தல், தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பினை நல்க தேசியப் பணிமனைகளைத் தொடங்குதல், பொருளாதார ஏற்றத் தாழ்வினைப் போக்குதல், பொருளாதாரச் சம பங்கீடு போன்ற கொள்கைகளை நிறைவேற்றி, புதிய சமுதாயமொன்றினை உருவாக்குதலையே தங்களது நோக்கமாகக் கொண்டு திகழ்ந்தனர் சோசலிஸ்டுகள். பொருளாதாரத் துறையில் நிலவும் ஏற்றத் தாழ்வினைப் போக்குதலே தங்களது தலையாய கடனென லூயி பிளாங்க் போன்ற சோசலிஸ்டுத் தலைவர்கள் இயம்பினர். இதனால், இவ்விரு சாராரிடையேயும் கருத்து வேறுபாடு மிகுந்தது. இவ் வேறுபாடு காரணமாக, இரண்டாவது குடியரசு என்ற கப்பல் மூழ்கத் தொடங்கியது.

கொள்கைகளில் மட்டுமன்றிச் செயல் திட்டத்திலும் இவ்விரு கட்சிகளும் மாறுபட்டு நின்றன. தாற்காலிக அரசினை எவ்வாறு நிறுவவது என்பதிலும் இவ்விரு கட்சிகளுக்கும் இடையே மிகுந்த கருத்து வேறுபாடுகள் தோன்றின. அமைச்சரவையை எவ்வாறு அமைப்பது என்பதிலும் கருத்து வேறுபாடுகள் மிகுந்தன. அமைச்சரவையில் மிகுதியான பங்கு தங்களுக்கு வேண்டுமெனக் குடியரசுக் கட்சியினர் விரும்பினர். சோசலிஸ்டுகள் அதனை ஏற்கத் தயங்கினர். இறுதியில் தாற்காலிக அரசு நிறுவப்பட்டு,

அதில் ஒன்பது அமைச்சர்கள் நியமிக்கப்பட்டனர். அவர்களுள் எழுவர் குடியரசுக் கட்சியினர். இருவர் மட்டுமே சோசலிஸ்டுகள். இதனால், சோசலிஸ்டுகள் பெரிதும் ஏமாற்றமுற்றனர். தொழிலாளர்கள் நலனைப் பேண, தனி அமைச்சர் ஒருவர் நியமிக்கப்பட வேண்டுமென சோசலிஸ்டுகள் வேண்டினர். அதனைக் குடியரசுக் கட்சியினர் ஏற்க மறுத்தனர். அதற்கு மாறாகத் தொழிலாளர் குழு (Labour Commission) ஒன்று நிறுவப்பட்டது. அக் குழுவின் பரிந்துரைகளை அமைச்சரவை ஆய்ந்து செயல்படும் எனவும் அறிவிக்கப்பட்டது. இதனால், சோசலிஸ்டுகள் நம்பிக்கை இழந்தனர். தனக்கும் அமைச்சர் பதவி கிட்டுமென நம்பிய லூயி பிளாங்க், அது கிட்டாததால், பெரிதும் வெறுப்புற்றார். தீவிரக் குடியரசுக் கட்சியினரான மேரியா என்பார் பொதுப் பணித்துறை அமைச்சராக நியமிக்கப்பட்டார். அவரே தொழிலாளர்கள் பிரச்சினைகளுக்கும் பொறுப்பேற்றார். சோசலிஸத்தில் நம்பிக்கையற்ற அவருக்கும், தொழிலாளர் குழுவின் தலைவரான லூயி பிளாங்க்குக்கும் இடையே கருத்து வேறுபாடு மிகுந்தன. உழைக்க வல்ல தொழிலாளர்கள் அனைவர்க்கும் வேலை வாய்ப்பினை நல்க தேசியப் பணிமனைகள் தொடங்கவேண்டும். படிப் படியாகத் தனியார் தொழிற்சாலைகளை அகற்றவேண்டும் எனக் கூறிய லூயி பிளாங்க், அதற்கான திட்டமொன்றினையும் அமைச்சரவைக்குச் சமர்ப்பித்தார். அவற்றில் கைதேர்ந்த நல்ல கைவினைஞர்களையே வேலைக்கு அமர்த்தவேண்டும். அதனால், தேசியப் பணிமனைகள் வெற்றிகரமாகச் செயல்பட்டுப் பெரும் பொருள் ஈட்டுமென அவர் பரிந்துரைத்தார். அத்துடன் தொழிலாளர்களின் நலனைப் பேண கூட்டுறவுச் சங்கங்களும் நிறுவப்பட வேண்டுமெனவும் லூயி பிளாங்க் தமது அறிக்கையில் பரிந்துரைத்திருந்தார்.

இத்திட்டங்கள் அனைத்தையும் குடியரசுக் கட்சியினர் ஏற்க மறுத்தனர். ஆயினும், அவர்களின் ஆதரவைப் பெறுவதற்காக, தேசியப் பணிமனைகளை நாடெங்கும் நிறுவினர். தொழிலாளர்கள் என்ற பெயரில் உழைக்கும் திறனுள்ள அனைவரும் இப் பணிமனைகளில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். திறமை மிக்கவர்களும், திறமை அற்றவர்களும் இத் தொழிற்சாலைகளில் சேர்த்துக்கொள்ளப் பட்டனர். வேறுபாடின்றி அனைவரும் சாலை அமைத்தல், மலைகளை அகற்றுதல், சாலைகளின் இரு மருங்கிலும் கழிவுநீர்ப் பாதைகள் தோண்டுதல் போன்ற வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டனர். அனைவர்க்கும் வேறுபாடின்றி 2 பிராங்குகளே ஊதியமாக வழங்கப் பட்டன. வேலையற்ற நாள்களில் அனைவர்க்கும் ஒரு பிராங்க் ஊதியமாக வழங்கப்பட்டது. இதனால், தொழிலாளர்கள் பெரிதும் அதிருப்தி அடைந்தனர். குடியரசுக் கட்சியினை அவர்கள் வெறுத்

தனர். நாட்டின் பெருஞ் செல்வமும் இதுபோன்ற செயல்களால் வீணடிக்கப்பட்டது. உற்பத்தி குறைந்தது. குழப்பமும் மிகுந்தது. இக் குழப்பம் காரணமாக, உள்நாட்டுப் போரும் ஏற்பட்டு, இரண்டாவது குடியரசும் வீழ்ந்துபட்டது.

**3. உள்நாட்டுப் போரும் அதனால் விளைந்த குழப்பங்களும் :** இரண்டாவது குடியரசு, வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை என்ற அடிப்படையில் பொதுத் தேர்தல் ஒன்றிற்கு ஆணையிட்டது. அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றம், இரண்டாவது குடியரசுக்கான அரசியலமைப்பை உருவாக்குமெனவும் தீர்மானிக்கப்பட்டது. இத் தேர்தலில் சோசலிஸ்டுகளும், குடியரசுக் கட்சியினரும் தோற்கடிக்கப்பட்டனர். இதனை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. வாக்குகளைப் பெறத் தவறிய அவர்கள் வன்முறையில் ஈடுபட்டனர். நாடெங்கும், குழப்பம், கிளர்ச்சி போன்றவற்றை அவர்கள் தூண்டினர். சட்டமன்றத்தையும் கலைக்க முற்பட்டனர். இதை விரும்பாத சட்டமன்றம் தேசியப் பணிமனைகளை மூடியது. வேலையிழந்த பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஒன்றுகூடி புரட்சியில் ஈடுபட்டனர். 1848ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் ஏற்பட்ட இவ் உள்நாட்டுப் போரினை அடக்க சட்டமன்றம் பெரும் பாடுபட்டது. இறுதியில், அதனை அடக்கும் பொறுப்பினைக் கேவிக்னக் என்ற படைத் தலைவரிடம் ஒப்படைத்தது. புரட்சியாளர்களும் தோற்கடிக்கப்பட்டனர். இப் புரட்சி குடியரசுக்கு மகத்தான தீங்கினை விளைவித்தது. (1) தொழிலாளர்கள் இதனை வெறுக்கத் தொடங்கினர். இப் புரட்சிமூலம் குடியரசு என்பது முடியாட்சியினைவிட மோசமானது என்று தொழிலாளர்கள் கருதியதில் தவறில்லை. (2) சோசலிஸ்டுகளும் குடியரசின் நிரந்தரப் பகைவர்களாயினர். (3) உள் நாட்டுப் போரும், அதன் அடக்குமுறையும் குடியரசைப் பெரிதும் செல்வாக்கிழக்கச் செய்தன. (4) மக்கள் ஆதரவை இழந்து, படையினர் ஆதரவில் செயல்படும் அவல நிலைக்குக் குடியரசு தாழ்ந்துவிட்டது. (5) பெரும் பொருளாதார நெருக்கடி உள்நாட்டுப் போரின் விளைவாக ஏற்பட்டது. உழவு, வணிகம், உற்பத்தி அனைத்தும் உள்நாட்டுப் போரின் விளைவாகப் பெரிதும் பாதிக்கப்பட்டன. விலைவாசிகள் உயர்ந்தன. வறுமை மிஞ்சியது. வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்தது. குடியரசு தனது செல்வாக்கினை முற்றிலும் இழந்தது. பலரும் இதனை வெறுத்த காரணத்தால், இது எளிதாக நீக்கப்பட்டது.

**குடியரசு உருவாக்கிய அரசியலமைப்புச் சட்டத்தின் குறைகள்**

ஆழ்ந்த சர்ச்சைக்குப் பிறகு, சட்டமன்றம் குடியரசுக்கு ஓர் அரசியல் அமைப்பை உருவாக்கியது. அவ்வரசியலமைப்பு நடை

முறைக்கேற்றதாய் அமையவில்லே. மான்டெஸ்க்யூவின் கொள்கையான "அதிகாரப் பிரிவினை" என்ற அடிப்படையில் அமைந்த காரணத்தால், அது செயல்முறைக்கு ஏற்றதாய் அமையவில்லே. அனைத்து அதிகாரங்களும் இவ்வரசியலமைப்புப்படி மக்களுக்கே வழங்கப்பட்டன. இறைமை மக்களுக்கே வழங்கப்பட்டது. மக்களே குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையினைப் பெற்றனர். பாராளுமன்றம் குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரததினைப் பெறவில்லை. அதனால், பாராளுமன்றம் அவரைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தினை இழந்தது. குடியரசுத் தலைவர்க்கு அனைத்து அதிகாரங்களும் வழங்கப்பட்டன. இதனால், அவர் கொடுங்கோலர் ஆவதற்கும் குடியரசினையே புறக்கணிப்பதற்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இக் குறையே அக் குடியரசு அகற்றப் படுவதற்கும் வழிவகுத்தது.

லூயி நெப்போலியன் என்பாரும், இரண்டாவது குடியரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அனைத்து அதிகாரங்களுடன் குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். "அதிகாரம் கெடுக்கும்; மிகுதியான அதிகாரம் மிகுதியாகக் கெடுக்கும்" என்ற லார்ட் ஏக்டனின் (Lord Acton) கூற்று ஃபிரான்சைப் பொருத்த வரையில் முற்றிலும் மெய்யானது. அனைத்து அதிகாரங்களையும் பெற்ற லூயி நெப்போலியன், குடியரசினையே அகற்றிவிட்டு முடியரசினை நிறுவ முயன்றார். கிரேவி (Grevy) போன்றோரின் எச்சரிக்கையை மக்கள் புறக்கணித்தது பெரும் தவருகப் போய் விட்டது. அனைவர்க்கும் அனைத்தையும் செய்வதாக வாக்களித்த பின்னர், செல்வாக்கு பெற்றுக் குடியரசுத் தலைவருமானர் லூயி நெப்போலியன். முதலாம் நெப்போலியனின் புகழினைப் பாடி இவரும் மிக்க புகழ்பெற்றார். மீண்டும் முதலாம் நெப்போலியன் காலத்தைப் போன்ற ஒப்பற்ற காலத்தை இவர் உருவாக்குவாரென மக்கள் எண்ணி, இவரை ஆதரித்தனர். இவ்வரசியலமைப்புப்படி இவர் மிகுதியான அதிகாரங்களைப் பெற்றதால்தான் சட்ட மன்றத்தைப் புறக்கணித்துவிட்டு, இவர் அதிகாரம் பெற முடிந்தது. அவர் தேர்வுடன் குடியரசின் அழிவும் தொடங்கிவிட்டது.

புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்தில் பிற்போக்காளர்களே நிறைந்து காணப்பட்டனர். அப் பாராளுமன்றத்தில் சோசலிஸ்டுகளும், குடியரசுக் கட்சியினரும் முற்றிலும் செல்வாக்கிழந்து காணப்பட்டனர். மக்களாட்சியில் நம்பிக்கை அற்ற அம் மன்றம் அனைவர்க்கும் வாக்குரிமையென்ற சட்டத்தை மாற்றியது. லூயி நெப்போலியன் இரண்டாம் முறையும் தேர்தலில் போட்டியிட விரும்பியபோது அச் சட்டத்தினை மாற்றி

வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை தர முன்வந்தார். அவரது வேண்டுகோளைச் சட்டமன்றம் முற்றிலும் புறக்கணித்தது. வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை என்ற புனித உரிமையினைச் சட்டமன்றம் புறக்கணித்தது தவறு என்றும், அவ்வாறு புறக்கணிப்பதற்கு அதற்கு அதிகாரம் ஏதுமில்லை எனவும் கூறி, சட்டமன்றத்தினைக் கலைத்தார். மக்களுக்கு அத்தகைய உரிமைகளை வழங்க மீண்டும் தன்னையே குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்குமாறும் வேண்டினர். 1851-ல் நிகழ்ந்த பொதுத் தேர்தலில் அவரே மீண்டும் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1852-ல் மக்களது பெருவாரியான வாக்குகளைப் பெற்றுப் பேரரசராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இரண்டாவது குடியரசும் அகற்றப்பட்டது. புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தின் குறைபாடுகளே இவர் பேரரசர் ஆவதற்குப் பெரிதும் துணை நின்றன.

# 7. ஃபிரான்சில் இரண்டாவது பேரரசு

**மூன்றும் நெப்போலியன்**

லூயி நெப்போலியன் மூன்றும் நெப்போலியன் என்ற பட்டப் பெயரில் 1852ல் மக்களது பெருவாரியான வாக்குகளைப் பெற்றுப் பேரரசரானுர். பெருவாரியான மக்களின் ஆதரவைப் பெற்றுப் பேரரசரானபோதிலும், அவரது நிலை சிக்கல் மிக்கதாகவே இருந்தது. 1848 புரட்சிக்குப் பின்னர், ஃபிரான்சில் மீண்டும் பூர்போன் குடும்பத்தினையோ அல்லது ஆர்லியன்ஸ் குடும்பத்தினையோ பதவியிலமர்த்த பலர் பேரார்வம் கொண்டனர். லூயி நெப்போலியன் பேரரசரென அரியணையிலமர்ந்ததை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவர்கள் அவரை வெறுத்ததுடன் அவரைப் பதவியிலிருந்து அகற்றும் முயற்சியிலும் ஈடுபட்டனர். குடியரசுக் கட்சியினர் அவரைத் துரோகியெனத் தூற்றினர். மாபெரும் புரட்சிக்குப் பின்னர், நிறுவப்பட்ட குடியரசை இவர் கவிழ்த்து முடியரசை நிறுவியதை அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. முடியரசை நீக்கிவிட்டு, மீண்டும் குடியரசை நிறுவும் மாபெரும் பணியில் அவர்கள் ஈடுபடலாயினர். சோசலிஸ்டுகளும் இவரை விரும்பவில்லை. அவரது சதியினை அவர்கள் இன்னும் மறந்துவிடவில்லை. அவர்களும் இவருக்குப் பாடம் கற்பிக்கவல்ல நல்லதொரு வாய்ப்புக்காகக் காத்துக் கிடந்தனர். மூன்றும் நெப்போலியன், இவ் வெதிர்ப்புகளையெல்லாம் சமாளித்துத் தமது பேரரசைக் கட்டிக் காப்பதில் ஓரளவுக்கு வெற்றியும் பெற்றுர். முதலாம் நெப்போலியனது புகழே இவரது வெற்றிக்குப் பெரும் காரணமாக அமைந்தது. முதலாம் நெப்போலியனைப் போன்று ஒரு பேரரசினை நிறுவுவதாகவும், அவரைப் போன்று ஃபிரெஞ்சு மக்களின் நலனைப் பேணுவதாகவும் இவர் மக்களுக்கு வாக்களித்து, அவர்கள் ஆதரவினையும் பெற்று, தமது பேரரசைச் சிதைவினின்றும் காப்பாற்றினுர்.

மூன்றும் நெப்போலியன் வெற்றிக்கு அன்றைய ஐரோப்பியச் சூழ்நிலையும் துணைநின்றது. அவர், புகழ் பெறுவதற்கும், அவர், மக்கள் ஆதரவைப் பெறுவதற்கும், 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியே காரணமாகும். 1815 வியன்ன மாநாட்டிற்குப் பின்னர், ஃபிரான்சு மிகத் தாழ்வுற்றுக் கிடந்தது. ஃபிரான்சு

தோல்வியுற்று மிகவும் நிலைகுலைந்து நின்றது. 18ஆம் லூயி மன்னராலோ, 10ஆம் சார்லஸாலோ, அல்லது லூயி பிலிப்பினாலோ ஐரோப்பிய அரங்கில் அதன் நிலையை உயர்த்த இயலவில்லை. தங்கள் அரசர்களின் திறமையின்மையைக் கண்டு, ஃபிரெஞ்சு மக்களே பெரிதும் வெகுண்டனர். தங்களது நாட்டுக்கு நேர்ந்த இந்த அவப்பேற்றினைத் துடைக்கவே 1830லும் 1848லும் புரட்சி செய்து, மன்னர்களையும் ஆட்சியினையும் மாற்றினர். 1852ல் மூன்றும் நெப்போலியனையும், தங்கள் நாட்டின் நிலையினையும் உயர்த்தவே பேரரசராகத் தேர்ந்தெடுத்தனர்.

மக்களது உளப்பாங்கை நன்குணர்ந்த இவர், அவர்களது உள்ளங்களை ஈர்க்கும் செயல்களில் ஈடுபட்டுத் தன்னையும் உயர்த்திக் கொண்டு நாட்டையும் உயர்த்த முயன்றார். வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், இவர் காலத்தில்தான் மீண்டும் சிறப்பெய்தியது. வியன்னாத் திட்டத்தையும் அத் திட்டத்தால் சிறப்புற்றுத் திகழ்ந்த ஆஸ்திரிய-ரஷ்ய பிற்போக்குக் கூட்டணியினையும் இவர் வெற்றி கரமாக முறியடித்தார். ஃபிரான்சு மீண்டும் புகழ்பெற்றுத் தரணி போற்றத் தலைநிமிர்ந்து, பீடு நடை போடவேண்டுமாயின், வியன்னா மாநாட்டுக்குப் பின்னர், ஐரோப்பாவைப் பிற்போக்கு வழியில் நடத்திச் செல்லும் ஆஸ்திரிய-ரஷ்ய பிற்போக்கணியினை முறியடிக்க வேண்டுமென உணர்ந்து, அப் பணியில் ஈடுபட்டு, அதில் ஓரளவு வெற்றியும் கண்டார். இவரது வெளிநாட்டுக் கொள்கை, இவரது புகழைச் சற்று உயர்த்தியது. வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், ஆஸ்திரிய-ரஷ்ய பிற்போக்கணியினை முறியடித்த பெருமை இவரையே சாரும் முதலாம் நெப்போலியனுக்குப் பின்னர், ரஷ்யாவைத் தோற்கடித்த பெருமையும் இவருக்குண்டு. ஃபிரான்சு மீண்டும் ஐரோப்பிய அரங்கில் சிறப்பெய்தியது. அதுபோன்றே இங்கிலாந்தின் நட்பைப் பாராட்டி இவர் ஆங்கில-ஃபிரெஞ்சு உறவினை மேம்படுத்தினார். முதலாம் நெப்போலியன், இங்கிலாந்து மீது பகைமை பாராட்டியது தவறு என்பது இவர்தம் கொள்கை. இங்கிலாந்துடன் இவர் நட்பு பாராட்டி, புதிய உறவை நிலை நாட்டியது வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சியேயாகும். இந் நட்பின் விளைவாக இங்கிலாந்து பிற்போக்குக் கூட்டணியிலிருந்து முற்றிலும் விலகி, ஃபிரான்சுடன் இணைந்து, முற்போக்குச் செயல்களுக்கு ஆதரவு நல்க முடிந்தது. இதனால், ஒரு புதிய சகாப்தம் உருவானது. இதனால், ஃபிரான்சின் இழிநிலையும் முற்றிலும் அகன்றது. மேலும், இவர் ஒரு புரட்சியாளர் அல்லர் எனினும், ஐரோப்பாவில் பல புரட்சிகளுக்குத் துணைபுரிந்தார். நாட்டுப் பற்றினையும் இவர் பெரிதும் ஆதரித்தார். இந் நாட்டுப்பற்றுக் காரணமாகவே இவர் கார்பொனெரி இயக்கத்தில் சேர்ந்து, இத்தாலிய விடுதலைக்கும்

(1830) பாடுபட்டார். போலந்து, ருமேனியா போன்ற நாடுகளும் விடுதலை பெற முனைந்தபோது, இம் மன்னர் நாட்டுப் பற்றினை மதித்து அவர்களுக்கும் பெரிதும் துணைபுரிந்தார். இதனால், இவர் ஐரோப்பாவில் முற்போக்காளர்கள் அனைவர்க்கும் ஒரு பெரும் பாதுகாவலராய்த் திகழ்ந்தார். அத்துடன் இவர் பல சீர்திருத்தங்களுக்கும் முன்னோடியாக நின்றார். புதிய தொழிற்சாலைகளால் விளைந்த பல்வேறு பிரச்சினைகள், மக்கள் தொகைப் பெருக்கம், நகர வளர்ச்சி பொருளாதார நெருக்கடி, வேலையில்லாத் திண்டாட்டம், பொருளாதார ஏற்றத் தாழ்வுகள், முதலாளி, தொழிலாளி வேறுபாடுகள் போன்ற பல பிரச்சினைகள் இவர் காலத்தில் தோன்றின. இத்தகைய பிரச்சினைகளைத் தீர்க்க, பல்வேறு சீர்திருத்தங்கள் தேவைப்பட்டன. இத்தகைய சிக்கலான நேரத்தில் பேரரசரான மூன்றும் நெப்போலியன், பல்வேறு சீர்திருத்தங்களைப் புகுத்தி ஒரு முன்னோடியாகத் திகழ்ந்தார். 1852லிருந்து 1860 வரை இவர் மிகுந்த எதிர்ப்பின்றி சிறப்பாகத் திகழ்ந்தார். அதற்குக் காரணம், அவரது சிறப்புமிக்க வெளிநாட்டுக் கொள்கைகளும், உள்நாட்டுச் சீர்திருத்தங்களும், அன்றைய சூழ்நிலைகளுமே காரணமெனில் மிகையாகாது.

**இவரது இளமை வாழ்க்கை**

சார்லஸ் லூயி நெப்போலியன் போனபார்ட் (1808—1873) 1808ஆம் ஆண்டு பாரிசில் பிறந்தார். இவர் முதலாம் நெப்போலியனின் உடன்பிறப்பான லூயி போனபார்ட்டின் மகனாவார். பெயர்சூட்டு விழாவின்போது (Baptism) போனபார்ட் குடும்பப் பதிவேட்டில் முதலாம் நெப்போலியனுலேயே இவர் பெயரும் பதிவு செய்யப்பட்டது குறிப்பிடப்பட வேண்டிய மிக முக்கிய நிழ்ச்சியாகும். 1815க்குப் பின்னர், இவரது குடும்பமே நாடு கடத்தப்பட்டது. இவரும் இவருடைய தாயாரான ஹார்டென்ஸ் போஹார்னே (Hortense Beauharnis) என்பாரும் ஸ்விட்ஸர்லாந்திற்குச் சென்று குடியேறினர். இவரது பள்ளி வாழ்வும் இங்குத்தான் தொடங்கியது. இங்குச் சில ஆண்டுகள் வாழ்ந்த பின்னர், இவர்கள் தென் ஜெர்மனியிலுள்ள ஆக்ஸ்பர்க் நகருக்கு வந்தனர். இங்குத்தான் இவரது முறையான கல்வி தொடங்கியது. பின்னர், இவர் ஃபிரெஞ்சு மொழியினை ஜெர்மன் உச்சரிப்புடன் பேசியதற்கு இதுவே காரணம். அவர் பழக்க வழக்கங்களில் ஒரு ஜெர்மனியராய்த் தோன்றியதற்கும் இதுவே காரணமாகும். பின்னர், இவர் ஆக்ஸ்பர்க்கிலிருந்து குடிபெயர்ந்து ரோமில் குடியேறினர். 1830 ஜூலைப் புரட்சியின்போது இவர், கார்பொனெரி இயக்கத்தில் உறுப்பினராகி, இத்தாலிய விடுதலைக்காகப் புரட்சியும் செய்தார். அப் புரட்சி அடக்கப்பட்ட காரணத்தால், இவர் கைது

செய்யப்பட்டு ஆஸ்திரியக் கொடுஞ்சிறையொன்றில் அடைக்கப் பட்டார். அதன்பின்னர், விடுதலை செய்யப்பட்ட இவர், போலந்து மக்களின் சார்பாக மீண்டும் புரட்சியிலீடுபட்டார். அப் புரட்சியும் அடக்கப்பட்ட காரணத்தால், இவரது முயற்சியும் தோல்வி யுற்றது. இவருடைய அண்ணனும் இவர் இத்தாலியிலிருந்தபோதே காலமானார். 1811ல் முதலாம் நெப்போலியனுக்கும் ஆஸ்திரிய இளவரசிக்கும் பிறந்த இரண்டாம் நெப்போலியனும் 1832ல் இறந்து போனார். தம்முடைய தந்தையான முதலாம் நெப்போலியனால், ரோமப் பேரரசரெனச் செல்லமாக அழைக்கப்பட்ட இரண்டாம் நெப்போலியனின் மறைவுக்குப் பின்னர், இவரே போனபார்ட் குடும்பத்தின் ஒரே வாரிசாய்த் திகழ்ந்தார். தமது 24ஆம் வயதில் போனபார்ட் குடும்பத்தின் ஒரே வாரிசான இவர், அக் குடும்பத்தின இழந்த புகழை மீண்டும் ஈட்டுவதையே தமது வாழ்வின் பெருங் குறிகோளாகக் கொண்டார்.

1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், இவர் பெரிதும் மன முடைந்துபோனார். ரோமில் வாழ விரும்பாது இவர் இங்கிலாந்தில் குடியேறினார். இவர் இளமை முதற்கொண்டே தம்முடைய சிறிய தந்தையான முதலாம் நெப்போலியனின் வெற்றிகளாலும், சாதனைகளாலும், பெரிதும் கவரப்பட்டார். அவரது அறிவும், செயலாற்றலும், நெஞ்சுறுதியும் இவரைப் பெரிதும் கவர்ந்தன. முதலாம் நெப்போலியனின் நினைவுக் குறிப்புகளும் (Memoirs) இவரைப் பெரிதும் கவர்ந்தன. முதலாம் நெப்போலியன் தமது நினைவுக் குறிப்புகளில் தமது நோக்கங்களையும், அவை நிறைவேறா மைக்குரிய காரணங்களையும் விளக்கியுள்ளார். தாம் சமத்துவம், மக்களாட்சி, நாட்டுப்பற்று போன்றவற்றில் ஆழ்ந்த நம்பிக்கை வைத்திருந்ததாகத் தமது நினைவுக் குறிப்புகளில், முதலாம் நெப்போலியன் விவரித்துள்ளார். ஐரோப்பா முழுவதையும் பிற்போக்காட்சியிலிருந்து விடுவித்து ஒரு புதிய ஐரோப்பாவை உருவாக்கும் கனவு நனவாகவில்லை. காரணம், பிற்போக்குக் கூட்டணிகள், தமது நோக்கத்தை நிறைவேற்ற இயலாதவாறு தடுத்து நிறுத்திவிட்டன என இவர் அதில் கூறியுள்ளார். அவரது நினைவுக் குறிப்புகளில் பெரிதும் கட்டுண்டுபோன லூயி நெப்போலியனும் அவர் தமது கொள்கை வழியினில் நின்று அத்தகைய ஐரோப்பா ஒன்றினை உருவாக்கத் திட்டமிட்டார். தம்முடைய சிற்றப்பாவின் பெருமைகளனைத்தையும் மிகைப் படுத்தி, மக்களது உள்ளத்தில் ஓர் உயர்ந்த இடத்தை அவருக்கு உருவாக்கினார். தமது எழுத்தாற்றலால் அவரது குறைகள் யாவையும் மறைத்து நிறைகளனைத்தையும் அழகு மிளிர எடுத்தியம்பினார். நெப்போலியனது குறைகளை மறந்து,

மக்களும் அவரைப் போற்றத் தொடங்கினர். முதலாம் நெப்போலியனது புகழிலும் சாதனைகளிலும் கட்டுண்ட பல்லாயிரக் கணக்கானோர் அவரது நினைவாக போனபார்ட் கட்சி என்ற ஒன்றினையும் தொடங்கினர். அக் கட்சியின் ஒப்பற்ற தலைவராக லூயி நெப்போலியனே தேர்ந்தெடுக்கப்பட்டார். லூயி நெப்போலியனும் தமது கொள்கைகளையும், திட்டங்களையும் விளக்கிப் பல நூல்களை எழுதினார். அத்தகைய நூல்களில் "நெப்போலியனின் கருத்துகள்" (The Napoleonic ideas) என்ற நூல் சிறப்புமிக்கது. தம்முடைய சிற்றப்பாவின் மாபெரும் கொள்கைகளை இதில் எடுத்தியம்பியுள்ளார் இப் பெரு மகனார். "ஃபிரெஞ்சுப் புரட்சியின் நிறைவே நெப்பொலியப் பேரரசாகும். அது மக்களுக்கே இறைமை அதிகாரத்தினை வழங்கிய ஓர் ஒப்பற்ற பேரரசாகும். அது மக்களின் ஒப்புதலையும் பெற்று நிறுவப்பட்டதாகும். ஐரோப்பிய நாடுகளின் கூட்டரசு ஒன்றினை நிறுவ அது பெரிதும் முயன்றது. அது மாபெரும் வீரத்தின் சின்னமாய்த் திகழ்ந்தது" என அதனைப்பற்றி இவர் தமது "வறுமையின் மறைவு" (The Extinction of Pauperism) என்ற அடுத்த நூலினையும் வெளியிட்டார். அந் நூலில் வறுமைக்குரிய காரணங்களை விளக்கியதோடு நில்லாது, அவற்றைப் போக்குதற்குரிய வழிகளையும் எடுத்தியம்பியுள்ளார். வேலையின்மையைப் போக்குதல், நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்குரிய வழிமுறைகள், நாட்டின் வணிக முன்னேற்றத்திற்கான சில நடைமுறை வழிகள் போன்றவற்றை இவர் தெளிவாக விளக்கியுள்ளார். முதலாளிகளை ஊக்குவித்துப் புதிய தொழில்கள் பல நிறுவுவதைத் தமது மாபெரும் திட்டமென இதில் இவர் விளக்கியுள்ளார். உழவு, தொழில் அனைத்தையும் ஊக்குவித்து, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழிவகைகள் செய்யப் போவதாக இதில் அவர் அறிவித்துள்ளார். தாம் நிறுவப்போகும் மக்களாட்சியின் அடிப்படையிலமைந்த பேரரசில் அனைவர்க்கும் சம வாய்ப்புகள் நல்கப்படுமென்பதையும் இவர் நயம்பட எடுத்தியம்பியுள்ளார். வறுமை முற்றிலும் அகற்றப்படுமென உறுதியும் கூறினார். "கிருத்துவ சமய வெற்றி அடிமை முறையைப் போக்கியது. ஃபிரெஞ்சுப் புரட்சி உழவு அடிமை முறையினைப் (Serfdom) போக்கியது. மக்களாட்சி வெற்றி, வறுமையைப் போக்கும்" என இவர் இந் நூலில் தமது திட்டத்தை வெளியிட்டுள்ளார்.[1] இவரது நூல்களால், முதலாம் நெப்போலியனது புகழ் பரவியதுபோல, இவரது புகழும் பரவியது. இவரது கட்சியான போனபார்ட் கட்சியும் செல்வாக்கு பெறலானது.

[1] "The triumph of christianity abolished slavery, the triumph of the French Revolution abolished serfdom, the triumph of democracy will abolish pauperism." Louis Napolean.

இங்கிலாந்தில் வாழ்ந்து வந்த லூயி நெப்போலியன் தமது நோக்கத்தினை ஒருபோதும் மறந்ததில்லை லூயி பிலிப் படிப் படியாகச் செல்வாக்கிழந்து வருவதையும் கணிக்கத் தவறவில்லை. 1836, 1840 ஆகிய ஆண்டுகளில் ஃபிரெஞ்சரியணையைக் கைப்பற்றும் முயற்சியிலீடுபட்டார். அம் முயற்சியில் இவர் தோல்வியுற்றார். கைது செய்யப்பட்டு விசாரணைக்காகப் பாராளு மன்ற மேலவைக்கும் இவர் கொணரப்பட்டார். இவ்வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக்கொள்ள இவர் தவறவில்லை. அவரது உணர்ச்சி மிக்க சிறந்த பேச்சால் பல்லோரது கவனத்தையும் இவர் கவர்ந்தார். இதனைத் தமது விளம்பரத்திற்கு நன்கு பயன்படுத்திக் கொண்டார் இவர். "ஒரு கொள்கை, ஒரு காரணம், ஒரு தோல்வி ஆகிய மூன்றினை உங்கள் முன் வைக்கிறேன். அக் கொள்கை மக்களது இறைமை பற்றியது. அக் காரணம் பேரரசு பற்றியது. அத் தோல்வி வாட்டர்லூ பற்றியது."[1] அவரது இவ் வார்த்தைகள் ஃபிரெஞ்சு மக்களது உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்தன. அவ் வரலாற்றுச் சிறப்புமிக்க அவ் வார்த்தைகள் புதிய வரலாறு ஒன்றினைப் படைக்கப்போவதை அன்று பலரும் அறிந்திலர். மேலவையும் அவருக்கு ஆயுள் தண்டனை வழங்கியது. ஹெம் (Hem) என்ற சிறைச்சாலையில் காவலில் வைக்கப்பட்டார் இவர். 1846ல் சிறையிலிருந்து தப்பி இங்கிலாந்து சென்றார். அங்கு மீண்டும் ஃபிரெஞ்சரியணையைக் கைப்பற்றும் முயற்சியிலீடு பட்டார்.

1848 பிப்ரவரிப் புரட்சியின்போது பாரிசு நகருக்கு வந்து இரண்டாவது குடியரசுக்குத் தாம் பணியாற்றுதற்குக் காத்துக் கிடப்பதாகப் பகர்ந்தார். அவரது வேண்டுகோள் நிராகரிக்கப் பட்டதோடு, 24 மணி நேரத்தில் நாட்டைவிட்டகலுமாறும் இவர் வேண்டப்பட்டார். 1848, ஏப்ரலில் நிகழ்ந்த தேசிய மன்றத் திற்கான தேர்தலில் இவர் போட்டியிடவில்லை. 1848, ஜூன் திங்களில் நடந்த இடைத் தேர்தலில் நான்கிடங்களில் இவர் போட்டியிடுவாரென இவரது ஆதரவாளர்கள் அறிவித்தனர். அதுபோழ்து அவர் ஃபிரான்சிலேயே இல்லை. அவரின்றியே அந்நான்கு இடங்களிலிருந்தும் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். இது அவரது செல்வாக்கினை நன்கு பறைசாற்றுவதாய் அமைந்தது. "எனது பெயர், அமைதி, நாட்டுப்பற்று, புகழ் ஆகியவற்றின் சின்னம். அது எனது நாட்டின் துன்பம் மிகுவதற்குப் பயன் படுத்தப்படுவதைக் கண்டு நான் மிகவும் வருந்துகிறேன்"

[1] "I represent three things, before you, a principle. a cause, a defeat, the principle is the sovereignty of the people, the cause is that of the empire, the defeat is waterloo." Louis Napolean.

என லண்டனிலிருந்து தேசிய மன்றத்திற்கு தமது குறிப்பு ஒன்றினை இவர் அனுப்பிவைத்தார். "மக்கள் என்மீது கடமைகளைச் சுமத்தினால் அவற்றை நான் எவ்வாறு நிறைவேற்றுவது என்பதையும் அறிவேன்" எனவும் இவர் அறிவித்தார். தேசிய மன்ற உறுப்பினர் பதவியைத் துறந்ததால், இவரது செல்வாக்கு மேலும் மிகுந்தது. தேசிய மன்றமும் ஒரு மாபெரும் சிக்கலிலிருந்து விடுபட்டது. 1848ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் உள்நாட்டுப் போரின்போது இவர் அதிலிருந்து முற்றிலும் விலகியே நின்றார். அதனால், மக்கள் அவரை வெறுப்பதற்கு வாய்ப்பில்லாமற் போய்விட்டது. இது அவரது சூழ்ச்சித்திறனுக்கும் நல்லதொரு சான்றாகும். 1848ஆம் ஆண்டு, செப்டம்பரில் நிகழ்ந்த இடைத் தேர்தலில் போட்டியிட்டு வென்று சட்டமன்ற உறுப்பினராயும் அமர்ந்தார் இவர். 1848ஆம் ஆண்டு, டிசம்பரில் நிகழ்ந்த குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டுப் பெருவாரியான வாக்குகளால் இவர் குடியரசுத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

## குடியரசுத் தலைவராக லூயி நெப்போலியன்

இரண்டாவது குடியரசின் தலைவராகப் பதவியேற்ற இவர் தமது செல்வாக்கும், புகழும் பரவுவதற்கான வழிவகைகள் அனைத்தையும் மேற்கொண்டார். தொழிலாளர்களின் நன்மதிப்பைப் பெறுவதற்காக அவர்களிடம் அவ்வப்போது அளவளாவி அகமகிழ்ந்தார். அவர்களது நற்பணிகள் பலவற்றையும் பாராட்டிப் புகழ்ந்தார். தொழிலாளர்களின் நலனுக்காகப பல சட்டங்களையும் இவர் கொணர்ந்தார். 1850ல் இவர் முதியோர் காப்பீட்டுத் திட்டமொன்றினை (Old Age Insurance) சட்டமாக்கினார். ஃபிரெஞ்சு மக்களில் பெரும்பாலோர் கத்தோலிக்கர்கள் என்ற காரணத்தால், அவர்களது நன்மதிப்பையும் பெற, பெரிதும் முனைந்தார் இத் தலைவர். 1848, பிப்ரவரிப் புரட்சியின் விளைவாகப் போப் பாண்டவர் ரோமிலிருந்து விரட்டப்பட்டார். இதனைக் கத்தோலிக்கர்கள் விரும்பவில்லை. அவர்களது ஆதரவைப் பெறுவதற்காக ஒரு பெரும் ஃபிரெஞ்சுப் படையை ரோமுக்கனுப்பி, மீண்டும் போப்பாண்டவரைச் சமயச் சடங்குகளுடன் பதவியிலமர்த்தினார். இதனால், கத்தோலிக்கர்கள் பெரிதும் மகிழ்ந்து இவரைப் பாராட்டினர். கத்தோலிக்க சமய குருமார்களின் ஆதரவினைப் பெறவும் இவர் தவறவில்லை. 1850ல் 10ஆம் சார்லஸ் காலத்தில் நிறைவேற்றப் பட்ட சட்டத்தினை மீண்டும் நடைமுறைக்குக் கொணர்ந்தார் (The Falloux Law of 1850). அச்சட்டப்படி, கல்வி மீண்டும் கத்தோலிக்க குருமார்களிடமே ஒப்படைக்கப்பட்டது.

பாராளுமன்றத்தில் இவரது கட்சியினரான போனபார்ட்டினர் மிகக் குறைந்தே காணப்பட்டனர். ஆயினும், அங்கு முடியாட்சி வேண்டுவோர் மிகுந்து காணப்பட்டனர். மொத்த உறுப்பினர்களான 750 பேர்களில் 500க்கும் மேற்பட்டோர் முடியாட்சியே வேண்டுமென விரும்பினர். சோசலிஸக் கொள்கைகளேயோ அல்லது குடியரசினேயோ அவர்கள் முற்றிலும் விரும்பவில்லே. உள்நாட்டுப் போருக்குப் பின்னர், அவர்கள் முற்றிலும் செல்வாக் கிழந்தனர். ஃபிரெஞ்சு உழவர்களும், மற்றேரும் நல்லாட்சி யெனில் முடியாட்சியே என நம்பி, அவ்வாட்சியில் நம்பிக்கை மிக்கோரையே தேர்ந்தெடுத்தனர். பாராளுமன்றத்தின் நிலே அவருக்குப் பெரும் துணேயாய் அமைந்தது. நற்பேறு காரணமாகப் பாராளுமன்றத்தில் கட்சி முறையும் நடைமுறையிலில்லே. ஆதலின், பாராளுமன்றத்திலும் இவருக்குக் கட்சிக்குள் எதிர்ப்பேது மில்லாமற் போனது. பிற்போக்கில் நம்பிக்கைமிக்க இப்பாராளு மன்றம், இவரது கைப்பாவையாகவே மாறி, இவரது இசைக்கேற்ப களிநடம் புரிந்தது. அவரது விருப்பத்திற்கிணங்க பொதுக் கூட்டங்களேயும் அது தடை செய்தது. பேச்சுரிமை மறுக்கப் பட்டது. தணிக்கைமுறை செயலுக்கு வந்தது. மூன்ருண்டுகள் ஒரே இடத்தில் வாழ்ந்து வரி கொடாதவர்கள் அனேவர்க்கும் வாக்குரிமை மறுக்கப்பட்டதன் விளேவாக, வேலே தேடிப் பலவிடங்களுக்குச் செல்லும் தொழிலாளர்கள் அனேவரும் வாக்குரிமை இழந்தனர். இதன் விளேவாக 9 மில்லியன் வாக்காளர்களுள் 3 மில்லியன் வாக்காளர்கள் வாக்குரிமை இழந்தனர். இதைப் பாரிசு போன்ற நகர மக்கள் பெரிதும் எதிர்த்தனர். நாடெங்கும் குழப்பம் மிகுந்தது. அக் குழப்பத்தை இவர் தமது செல்வாக்கினேப் பெருக்கிக்கொள்ளப் பயன் படுத்திக்கொண்டார். ஃபிரெஞ்சு மக்களின் வாக்குரிமையினே மறுக்க, பாராளுமன்றத்திற்கு உரிமையேதுமில்லேயெனவும் இவர் அறிவித்தார். ஆனல், பாராளுமன்றத்திற்கும் இவருக்கும் மோதல் ஏற்பட்டது. குடியரசின் புகழ் மங்கத் தொடங்கியது. லூயி நெப்போலியனின் புகழோங்கியது. குடியரசின் திறமையின்மை நன்கு வெளிப்பட்டது. மக்களும் நல்லாட்சியெனில், முடியாட்சியே என்ற முடிவுக்கு வந்தனர்.

இதற்கிடையில் பாராளுமன்றம் இவரது அமைச்சரவை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தினேக் கொணர்ந்து அதனேப் பதவி விலகவும் செய்தது. ஆயினும், குடியரசுத் தலேவர் மீண்டுமோர் அமைச்சரவையை அமைக்க மறுத்துவிட்டார். இதனேக் கண்டு வெகுண்ட பாராளுமன்றம், அவருக்குரிய ஊதியத்தினேத் தர மறுத்துவிட்டது. அரசியல் அமைப்பைத் திருத்தும் மசோதா

ஒன்றும் பாராளுமன்றத்தில் கொணரப்பட்டது. ஆயினும், அது வெற்றி பெறவில்லை. அரசியலமைப்பு திருத்தப்பட வேண்டு மென்ற கோரிக்கை, நாள்கள் செல்லச் செல்ல செல்வாக்கு பெற்றது. இதனைக் குடியரசுத் தலைவரும் நன்குணர்ந்தார். உறுமீன் வரும்வரை காத்திருக்கும் நாரையினைப் போன்று நல்ல தொரு வாய்ப்பிற்காகக் காத்து நின்றார் குடியரசுத் தலைவர்.

**1851** ஆம் ஆண்டு, நவம்பர் திங்களில் பாராளுமன்றம் வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமையினை நல்கவேண்டுமென இவர் வேண்டினார். பாராளுமன்றம் இதனை ஏற்க மறுத்தது. ஃபிரான்சுக்கு அமைதி, வளமை, பொருளாதார முன்னேற்றம் போன்றவற்றை நல்கவல்ல நல்ல மனிதர் இவர்தாம் என்ற எண்ணம் மேலோங்கி நின்ற காரணத்தால், இவரும் துணிந்து பாராளுமன்றத்தைக் கவிழ்க்க திட்டமிட்டார். மக்களும் அவரைப் பெரிதும் ஆதரித்தனர். இவர் செயின்ட் ஆர்னால்டு, மோர்னி, பெர்சிக்னி போன்ற தலைவர்களின் துணையுடன் பாராளு மன்றத்தையே கலைத்துவிட்டுப் பேரரசை நிறுவவும் திட்டமிட்டார். 1851ஆம் ஆண்டு, டிசம்பர் திங்கள், 2ஆம் நாள் அத் திட்டத்தினை நிறைவேற்றினார். பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. பாராளுமன்ற உறுப்பினர்கள் அதிகாலையிலேயே - அவர்கள் படுக்கையை விட்டு எழுமுன்னரே கைது செய்யப்பட்டனர். பாராளுமன்றம் கலைக்கப் பட்ட செய்தியும் மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. மக்கள் அனைவர்க்கும் வாக்குரிமை நல்கப்படுமெனவும், பாராளுமன்றம் கலைக்கப்பட்டது சரியா, தவறா என்பதை வாக்கெடுப்பு மூலம் அறியப்படும் எனவும் அறிவிக்கப்பட்டது. அனைத்து இடங்களில் படை வீரர்களும் நிறுத்தப்பட்டனர். ஆங்காங்கு விளைந்த சிறு குழப்பங்கள் எளிதில் அடக்கப்பட்டன. சதித்திட்டமும் பெரும் வெற்றிபெற்றது. மக்களும் அதனை வரவேற்றனர் எனில் மிகை யாகாது. 1851ஆம் ஆண்டு, டிசம்பர் திங்கள், 20ஆம் நாள் வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. அதன்படி, குடியரசுத் தலைவர் இரண்டாவது குடியரசுக்குப் புதிய அரசியல் அமைப்பை உருவாக்கும் அதிகாரத்தினைப் பெற்றார். இது லூயி நெப்போலிய னுக்கு ஒரு பெரும் வெற்றியாகும்.

### புதிய அரசியலமைப்பு (1852)

குடியரசுத் தலைவர் தமது புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தினை 1852ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 14ஆம் நாள் வெளியிட்டார். அப்புதிய அரசியல் அமைப்புப்படி, குடியரசுத் தலைவரின் பதவிக்காலம், 10 ஆண்டுகள் என அறிவிக்கப்பட்டது. சட்டம் இயற்றுதல், அவற்றை முன்மொழிதல், அவசர நிலைக்கு

ஆணையிடுதல் போன்ற அனைத்திற்கும் அவரே உரிமை பெற்றவர். அமைச்சரவைக்கும் அவரே பொறுப்பேற்பார். பாராளுமன்றம் இரு அவைகளைக் கொண்டதாக இருக்கும் மேலவையில் (செனட்) படைத் தலைவர்களும், சமயத் தலைவர்களும், உயர்குடியினரும், பிற உறுப்பினர்களுமாக மொத்தம் 150 உறுப்பினர்கள் இருப்பர். அவர்களைக் குடியரசுத் தலைவரே நியமிப்பார். கீழவையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களிருப்பர். கீழவைக்குத் தடுப் பதிகாரமும் தரப்பட்டது. ஆயினும், சட்டத்தை இயற்றவும், அதனைத் திருத்தவும் அதற்கு அதிகாரம் தரப்படவில்லை. வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை தரப்பட்டது. மக்களின் நலனைப் பேணுவதற்காகக் கொணரப்பட்ட அரசியல் அமைப்பென இது அறிவிக்கப்பட்டது.

### பேரரசராதல்

1852 அரசியலமைப்பு ஃபிரான்சை ஒரு குடியரசென அறிவித்தபோதும், குடியரசுக்கான கொள்கைகள் அனைத்தும் அதில் புறக்கணிக்கப்பட்டிருந்தன. பாராளுமன்றத்திற்கு அரசரைக் கட்டுப்படுத்தும் அதிகாரமில்லை. மேலவை உறுப்பினர்கள் அனைவரும் குடியரசுத் தலைவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட காரணத் தால், அவர் தம் ஆணைப்படியே இயங்கினர். பாராளுமன்றக் கீழ் அவைக்கும் சட்டமியற்றுதல் போன்ற அதிகாரங்கள் வழங்கப் படாத காரணத்தால், அதுவும் குடியரசுத் தலைவரது விருப்பப் படியே இயங்க நேரிட்டது. முதலாம் நெப்போலியனைப் போன்று பேரரசராக விரும்பிய இவர், அந் நோக்கம் நிறைவேறும் வாய்ப்பு ஒவ்வொன்றையும் உருவாக்கிக்கொண்டு வந்தார். 1852-ல் குடியரசுத் தலைவராகப் பதவியேற்றவுடன் ஒரு பேரரசரைப் போன்று தமது உருவங்களை நாணயங்களில் பொறித்து வெளி யிட்டார். படையையும் தமது ஆதரவாளர்கள் தலைமையில் திருத்தி அமைத்தார். தமக்கு வேண்டுவோரை உயர் பதவிகளில் அமர்த்தினர்.

இவரும் நாட்டில் நிலவிய குழப்பத்தினையும், நிலையற்ற தன்மையினையும், குடியரசு ஆட்சியின் திறமையின்மையினையும் நன்கு பயன்படுத்திக்கொண்டார். இவர் நாடெங்கும் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டு மக்களை நேரில் சந்தித்து, தனது திட்டத்தினை விளக்கினர். முதலாம் நெப்போலியனது பேரரசு தான் ஃபிரெஞ்சு வரலாற்றில் சிறப்புமிக்க பேரரசு. அதுதான், ஃபிரெஞ்சுப் புரட்சியின் கொள்கைகளை நிறைவேற்ற வந்த பேரரசு. அத்தகைய பேரரசு ஒன்றினையமைக்க தனக்கு வாய்ப்பு தருமாறு இவர் மக்களை வேண்டினர். அத்தகைய பேரரசில் வறுமை

இராது. உழவும் தொழிலும் நன்கு பேணிப் போற்றப்படும். தங்கு தடையற்ற வணிகம் நடைபெறும். வணிகம் வளரும். அனைவரும் வேலை பெறுவர். வளமை மிகும். மக்கள் வாழ்வு சிறக்கும் என இவர் உரையாற்றினர். மக்களும் இவரது வாக்குத் திறத்தில் கட்டுண்டனர். முதலாம் நெப்போலியனையே நேரில் கண்டது போன்று அனைவரும் மகிழ்ந்தனர். 1852ஆம் ஆண்டு, நவம்பர் திங்களில் நடந்த வாக்கெடுப்பில் அவரையே பெருவாரி யான மக்கள் பேரரசராகத் தேர்ந்தெடுத்தனர். அவரும் தன்னை ஃபிரெஞ்சு மக்களின் பேரசர் (Emperor of the French) என அழைத்துக்கொண்டார். குடியரசும் அகற்றப்பட்டது. 1852-ல் இரண்டாவது பேரரசும் நிறுவப்பட்டது. லூயி நெப்போலியனும் மூன்றும் நெட்போலியன் என்ற பட்டப்பெயரில் ஃபிரெஞ்சு அரியணை ஏறினர். பேரரசர் என்ற பெயரில் இவர் 1852-லிருந்து 1870 வரை ஃபிரான்சை ஆண்டார்.

**மூன்றும் நெப்போலியன் (1852-1870)**

பேரரசர் மூன்றும் நெப்போலியனின் ஆட்சி ஃபிரெஞ்சு வரலாற்றில் சிறப்பு மிக்க ஆட்சி எனப் போற்றப்படுகிறது. அவரது வெளிநாட்டுக் கொள்கையினை ஆராய்ந்த பலர் அவரது ஆட்சியைச் சிறப்பற்ற ஆட்சியென்பர். அவரது உள்நாட்டு ஆட்சியும் திறமை அற்றது எனப் பலர் கருதுகின்றனர். இது நாணயத்தின் ஒரு பக்கமே. அந் நாணயத்தின் மறு பகுதியினையும் நாம் காண வேண்டும். அவரது ஆட்சியில் பல முன்னேற்றங்கள் ஏற்பட் டுள்ளதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். 1852-லிருந்த ஃபிரான்சுக்கும், 1870-லிருந்த ஃபிரான்சுக்கும் இடையே மிகுந்த வேறுபாடு இருந்ததென, வரலாறு அறிந்த யாராலும் மறுக்க இயலாது.

1852-ல் இவர் பேரரசராகப் பட்டம் சூட்டிக்கொண்டபோது, நாட்டில் குழப்பமும், நிலையற்ற தன்மையும், பொருளாதாரச் சீர்கேடும் நிலவின. சமுதாயமும் தேங்கிக் கிடந்தது. தொழிலும், உழவும், வணிகமும் மிகவும் சீர்குலைந்து கிடந்தன. போக்கு வரத்து முறைகளும் சீர்கெட்டுக் கிடந்தன. சாலைகளும் கால்வாய் களும், துறைமுகங்களும சீர்கெட்டுக் கிடந்தன. நாட்டில் அது போழ்து இருப்புப்பாதைகள் ஏதுமில்லை பெரிய தொழிற்சாலைகளை நிறுவ முதலாளிகள் பெரிதும் அஞ்சினர். இத்தகைய நிலையில் இருந்த ஃபிரான்சை முற்றிலும் மாற்றியமைத்த பெருமை இவரையே சாரும். வெளிநாட்டுக் கொள்கையிலும், ஃபிரான்சு சிறப்பிழந்து கிடந்தது. இவர் பதவி ஏற்றவுடன் ரஷ்ய-ஆஸ்திரியப் பிற்போக்குக் கூட்டணியை முற்றிலும் முறியடித்து, ஃபிரான்சு

இழந்த பெருமையை மீண்டும் மீட்டார். எல்லாத் துறைகளும் இவர் காலத்தில் மிகவும் முன்னேறின. ஆயினும், முதலாம் நெப்போலியனைப் போன்று எல்லாத் திறமைகளையும் கொண்டவர் அல்லர் இவர். முதலாம் நெப்போலியனைப் போன்ற திறமை, இவரிடமில்லாததால், இவரால் பிஸ்மார்க்கினை நன்கு புரிந்து கொள்ள இயலவில்லை. செயல் திறனும், தொலைநோக்கும் இல்லாத காரணத்தால், இவரால் தொடர்ந்து வெற்றிகரமாகப் பணியாற்ற முடியவில்லை. தொடர்ந்து 18 ஆண்டுகள் இவரே பேரரசராக இருந்த காரணத்தால், மக்களுக்கு இவர் மீது ஒருவகைச்சோர்வும் வெறுப்பும் ஏற்பட்டது. இச் சூழ்நிலை இவருக்கு மட்டும் ஏற்பட்ட ஒன்றில்லை. வரலாற்றில் இவரைப்போன்று பலரும் இச்சூழ்நிலைக்கு இரையாகியுள்ளனர். மக்கள் இவர் மீது கொண்ட ஒருவகைச் சோர்வே இவரது ஆட்சி வீழ்வதற்கு ஒருவகையில் காரணமானது.

**இவரது உள்நாட்டுக் கொள்கை**

மூன்றும் நெப்போலியன் ஒரு புதுமை உணர்வு மிக்க தேசிய வாதியாவார். (Romantic Nationalist) நாட்டுப் பற்று, உரிமை, சமத்துவம் போன்ற ஃபிரெஞ்சுப் புரட்சிக் கொள்கைகளில் நம்பிக்கை மிக்கவர் இவர். அக் கொள்கைகளில் நம்பிக்கை கொண்டிருந்த காரணத்தால்தான், இவரால் மக்களிடம் மிக்க செல்வாக்கும் பெற முடிந்தது. முதலாம் நெப்போலியனைப் போன்றே இவரும் ஃபிரெஞ்சு மக்களின் பொருளாதார முன்னேற்றத்திற்காக ஒரு பேரரசினை அமைக்க விரும்பினர். இதனை இவர் தமது நூலான "நெப்போலியனது கருத்துகள்" என்ற நூலில் விளக்கியுள்ளார். இந் நூலில் இவர் முதலாம் நெப்போலியனுக்கு இரு நோக்கங்கள் இருந்ததெனவும் விளக்கியுள்ளார். முதலாவதாக, அவர் ஃபிரெஞ்சுப் புரட்சியின் கொள்கைகளைச் செயல்படுத்த விரும்பினர். பல சீர்திருத்தங்களின்மூலம் அவர் நல்ல நிலையான அரசு ஒன்றினை நிறுவி, அக் கொள்கைகளை நிறைவேற்ற முயன்றார். ஃபிரெஞ்சுப் புரட்சியின் கொள்கைகளை நிறைவேற்ற வல்லாட்சியால்தான் முடியுமென நம்பி, முதலாம் நெப்போலியன் வல்லரசினையும் அதன்பொருட்டு நிறுவினர். பல்வேறு கருத்துகளையும், கொள்கைகளையும் கொண்ட மக்களை ஒரு வலுவுள்ள வல்லரசால்தான், கட்டிக்காக்க முடியுமென்பது அவர்தம் கருத்து.

இரண்டாவதாக, இவரது கருத்துப்படி முதலாம் நெப்போலியன் மக்களுக்கு உண்மையான உரிமையினையும் கொடுக்க விழைந்தார். வல்லாட்சிமூலம் நல்ல வலுவான ஆட்சியை நிறுவிய பின்னர், அதனை அகற்றிவிட்டு மக்களுக்கு அனைத்து உரிமைகளையும்

வழங்கத் திட்டமிட்டிருந்ததாக இவர், தம் நூலில் கூறியுள்ளார். மக்களுக்கு முதலில் நல்லாட்சியில் பயிற்சி நல்கவேண்டும். அப் பயிற்சியினை முறையாக வல்லாட்சியால்தான் வழங்க முடியும். அப் பயிற்சியினைப் பெற்றால்தான் அவர்கள் உரிமையினை நுகர முடியும் என்றார் இவர். ஆகவே, வல்லாட்சியில் பயிற்சி பெற்ற பின்னரே மக்களுக்கு உரிமை வழங்குவது தக்கது என்பது இவர்தம் துணிபு. பிற்போக்குக் கூட்டணிகளால் முதலாம் நெப்போலியனின் கனவு நிறைவேறவில்லை. வல்லாட்சியினை நிறுவிய அவரால் மக்களுக்கு உரிமையினை நல்க முடியவில்லை. அதற்குள் பிற்போக்கு நாடுகள் அதனைச் சிதைத்துவிட்டன. இது ஐரோப்பாவுக்கே மாபெரும் இழப்பாகும் என இவர் தமது "நெப்போலியனது கருத்துகள்" என்ற நூலில் கூறியுள்ளார். இவரது கூற்றினை ஃபிரெஞ்சு மக்களும் மெய்யென நம்பினர். முதலாம் நெப்போலியனின் கொள்கைகளையே தாம் கடைப் பிடிக்கப்போவதாகவும் இவர் அறிவித்தார்.

1852-ல் இவர் தம்முடைய மக்களுக்கு விடுத்த அறைகூவலில், தமது பேரரசின் நோக்கத்தினைத் தெளிவாக எடுத்தியம்பியுள்ளார். அவர் தமது உரையில், "இங்கு ஒருவகை அச்சம் நிலவுகிறது. அதற்கு நான் மறுமொழி கூறியாகவேண்டும். ஐயம் காரணமாக, சிலர் பேரரசு எனில் போர் என்பர். பேரரசு எனில் நான் அமைதியென்பேன். ஆயினும், (முதலாம் நெப்போலியன்) பேரரசர் போன்று பல வெற்றிகளைப் பெறுவேன். மிகப்பெரிய அளவில் தரிசாகக் கிடக்கும் நிலங்களை நாம் விளைநிலங்களாக்க வேண்டியுளது. சாலைகளை அமைக்கவும், துறைமுகங்களை ஆழப் படுத்தவும், கால்வாய்களை வெட்டவும், நதிகளைப் போக்கு வரத்திற்கேற்ப அமைக்கவும், இருப்புப் பாதைகளை அமைக்கவும் நாம் பாடுபடுதல் வேண்டும். நம்மைச் சுற்றியுள்ள அழிவுகளைப் போக்குதலும், பொய்க்கடவுளர்களை அகற்றுதலும், உண்மையினை வெற்றியடையச் செய்தலும் நமது தலையாய பணிகளாகும். இதுதான் நான் புரிந்துகொண்ட பேரரசு. இவையே நாம் வெற்றி கொள்ள விரும்புபவை. என்னைச் சுற்றியுள்ள என் நன்மக்களே இதனை நீங்களும் விரும்புவீர்கள் என்பதில் ஐயமில்லை. நமது நாட்டின் நலனே நமது பணி. நீங்களே என் வீரர்கள்" எனக் கூறியுள்ளார். இவையே அவரது உள்நாட்டுத் திட்டங்களாகும். இவரது கருத்துப்படி அமைதியே உரிமையினும் மேம்பட்டது (Order precedes Liberty) நாம் முதலில் கீழ்ப்படியத் தெரிந்து கொள்ளவேண்டும். ஒழுங்கையும், கீழ்ப்படிதலையும் அறிந்தால் தான், உரிமையை நுகரமுடியும் என்பது இவர் தம் கருத்து. கிப்சன் என்ற வரலாற்று வல்லுநர், இவரது கொள்கையை

முற்றிலும் ஏற்றுக்கொண்டு இவரைப் பாராட்டுகிருர். ஃபிரான்சு ஒரு பெரும் மக்களாட்சி நாடு அங்கு ஒழுங்கும் கட்டுப்பாடும் இன்றியமையாதவை என்பர் அவர். [1]

**இரண்டாவது பேரரசின் அரசியலமைப்பு**

இரண்டாவது பேரரசின் அரசியலமைப்புப்படி அரசரே நாட்டிற்குப் பொறுப்பாளர். அனைத்து அதிகாரங்களும் அவரது கையிலேயே இருந்தன. அவரே அனைத்துப் படைகளுக்கும் தலைவர். அவரே போர் அறிவிப்பு செய்ய வல்லவர். அவரே அமைதியை நிலைநாட்ட வல்லவர். சட்டங்களை அவர் மட்டுமே முன்மொழிய இயலும். அமைச்சர்கள் அனைவரும் அவரால் நியமிக்கப்படுவர். அது அவருக்கு மட்டுமே பொறுப்பானது. அனைத்து அலுவலர்களும் அவராலேயே நியமிக்கப்படுவர். நகராட்சி மேயர்களும்கூட, அவராலேயே நியமிக்கப்பட்டனர். அனைத்து அதிகாரங்களையும் கொண்ட வல்லரசராய்த் திகழ்ந்தார் பேரரசர்.

பாராளுமன்றமும் அரசரது கைப் பாவையாகவேயிருந்தது. ஃபிரெஞ்சுப் பாராளுமன்றத்தைப் பொருத்தவரை மூன்று அவைகள் இருந்தன. (1) சட்ட மன்றம் (Legislative body), (2) செனட் (Senate), கவுன்சில் (Council of State) என்பவையே அவை. சட்ட மன்றத்தைப் பொருத்தவரை, 251 உறுப்பினர்களிருந்தனர். அவர்கள் அனைவரும் ஆறு ஆண்டுகளுக் கொருமுறை தேர்ந்தெடுக்கப்படுவர். வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமையென்ற அடிப்படையில் அவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படினும், அவர்கள் பேரரசருக்குக் கட்டுப் பட்டவர்கள். சட்டமன்றத் தலைவரையும் மன்னரே தேர்ந்தெடுப்பார். சட்டமியற்றவோ, இதனை முன்மொழியவோ இதற்கு அதிகாரமில்லை. மன்னர் முன்மொழியும் சட்டங்களை ஏற்கும் அல்லது நிராகரிக்கும் அதிகாரம் மட்டும் அதற்கு இருந்தது. ஆண்டு வரவு-செலவு திட்டத்தை ஏற்கவோ அல்லது மறுக்கவோ அதற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. ஆயினும், அரசர் பாராளுமன்றத்தின் ஒப்புதலின்றியே வரிகளை வசூலிக்கும் அதிகாரத்தைப் பெற்றிருந்தார். சுருங்கக் கூறின், பாராளு மன்றத்தின் மிக முக்கிய அவையான இச் சட்டமன்றம், அரசர் வழியே இயங்கியது.

பாராளு மன்றத்தின் அடுத்த மிக முக்கிய அவை, செனட் அவையாகும். செனட் அவை உறுப்பினர்கள் அனைவரையும்

[1] Lipson. p. 31.

அரசரே தேர்ந்தெடுத்தார். சட்ட மன்றங்கள் நிறைவேற்றிய சட்டங்களனைத்தையும் இது ஆராயும். இறுதி முடிவு இதன் கையிலேயே இருநதது. அரசரால் நியமிக்கப்பட்ட அவை என்ற காரணத்தால், அவரது ஒப்புதல் பெற்ற இது சட்டங்களை நிறைவேற்றியது.

சட்டமன்றம், செனட் அவை போன்றே கவுன்சிலும் அரசருக்கு அடிபணிந்து பணியாற்றியது. இக் கவுன்சில்தான் சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்படும் மசோதாக்களைத் தயாரிக்கும். இதன் உறுப்பினர்களனைவரும் அரசரால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களே. ஆதலின், இவர்களும் அரசரது விருப்பு வெறுப்புகளை அறிந்து அதற்குத்தக சட்டங்களை இயற்றினர். 1860 வரை இந்நிலையே நீடித்தது. 1960-க்குப் பின்னர், இந்நிலை சற்று மாறியது. ஆகவே, 1860 வரை பாராளுமன்ற நிறுவனங் களனைத்துமே அரசரது விருப்பங்களை ஒலிக்கும் வாரியங்களாகவே இருந்தன. பாராளுமன்றத் தேர்தல்களிலும் அரசர் மிகுதியும் தலையிட்டார். அரசு வேட்பாளர்கள் (Official Candidates) தேர்தலில் நிறுத்தப்பட்டனர். அவர்களது தேர்தல் செலவுகளை அரசே ஏற்றது. அவர்கள் தேர்தலில் வெற்றிபெற பிரிபெக்ட்ஸ் (Prefects) போன்ற அரசு அலுவலர்கள் பெரிதும் துணை நின்றனர். வெற்றி பெற்றபின் அவர்கள் பேரரசருக்கு நன்றிக் கடப்பா டுடையராயிருப்போம் என வாக்குறுதியும் எடுத்துக்கொண்டனர். ஆகவே, தேர்தலிலும் பேரரசர் தலையிட்டுத் தனக்கு வேண்டு வோரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார் ஆகவே, மக்களாட்சி யென்ற பெயரில் அங்குத் தன்னுட்சியே (Personal Rule) நிலவியது. ஆகவே, லிப்சன் என்ற வரலாற்று வல்லுநர் அவ்வாட்சி பற்றிக் குறிப்பிடுகையில் மக்கள் ஆதரவில் நடைபெற்ற "சீசரிஸம்" என்பர். [1]

## அடக்கு முறைகள்

பேரரசரை எதிர்ப்போர்கள் அனைவரும் பலவகையிலும் அடக்கப்பட்டனர். செய்தித் தாள்கள் பெரிதும் தணிக்கை செய்யப்பட்டன. அரசுக்கேற்ப செய்திகளை வெளியிடும் தாள்களே இயங்க அனுமதிக்கப்பட்டன. அரசரின் முன் ஒப்புதலின்றிச் செய்தித் தாள்கள் வெளியிட அனுமதிக்கப்படவில்லை. செய்தித் தாள்களின் ஆசிரியர் அல்லது மேலாளர் (Manager) பற்றிய குறிப்புகள் அனைத்தும் அரசுக்கு அனுப்பப்பட்டன. இருப்புத் தொகையாக (Deposit) பெருந்தொகையைச் செய்தித் தாள்களின் உரிமையாளர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டன. அதனல், பலரும்

[1] Caesarism Founded upon a popular basis. Lipson-P. 32

செய்தித் தாள்களை வெளியிட முடியவில்லை. எந்தச் செய்தித் தாளையும் வெளியிடும் உரிமையை அரசு மறுக்கலாம். அரசரின் ஒப்புதலின்றிச் செய்திகளை வெளியிடும் தாள்களின் உரிமையாளர்கள் வன்மையாகத் தண்டிக்கப்பட்டனர். மக்களாட்சியின் மிக முக்கிய உரிமையான பேச்சுரிமையும் மறுக்கப்பட்டது. அரசின் பகைவர்களெனக் கருதப்பட்டோர் அனைவரும் ஒற்றர்களால் கண்காணிக்கப்பட்டனர். மக்களது உரிமைகள் பெரிதும் கட்டுப்படுத்தப்பட்டன. மக்களாட்சியென்ற பெயரில் அடக்குமுறை ஆட்சியே நிலவியது என்பர் ஃபிஷர் என்ற வரலாற்று வல்லுநர்.

மக்களது செயல்களை நன்கு கவனிக்கவும், அரசுக்கெதிராகப் பணிபுரிபவர்களை ஒடுக்கவும் காவல்படை (Police force) ஒன்றும் நிறுவப்பட்டது. பேரரசரை எதிர்த்த பலரும் நாடு கடத்தப்பட்டனர். பேரரசரே அனைத்துக்கும் தலைவராகத் திகழ்ந்தார். அது மூன்றும் நெப்போலியன் என்ற நாணயத்தின் ஒரு பகுதியே. அவரது நல்லியல்புகள் என்ற அந் நாணயத்தின் மறு பகுதியினையும் நாம் காணுதல் வேண்டும். அவர் நல்ல பல சீர்த்தங்களையும் புகுத்தத் தவறவில்லை.

### பொருளாதாரச் சீர்திருத்தங்கள்

மூன்றும் நெப்போலியன் நல்ல மாண்புடையவர் எனப் பலர் அவரைப் பாராட்டுகின்றனர். அதற்குக் காரணம், அவரது நல்ல பொருளாதாரச் சீர்திருத்தங்களேயாகும். தமது "வறுமையின் மறைவு" (The Extinction of Pauperism) என்ற நூலில் தமது பொருளாதாரக் கொள்கைகளை இவர் நன்கு விளக்கியுள்ளார். வறுமையை ஒழித்தலையும், உழவுக்கும், தொழிலுக்கும் வந்தனை செய்தலையுமே தமது தலையாய பணியாகக் கொண்டார் இவர். ஃபிரெஞ்சு மக்கள் அனைவரது நலனிலும் இவர் அக்கறை கொண்டது இவரது சிறப்பியல்பாகும். செயின்ட் சைமன் என்பாரின் சோசலிஸக் கொள்கைகளை இவர் ஏற்றுக்கொண்டார். அவற்றை நிறைவேற்றவும் இவர் துணிந்தார்.

### வேலைவாய்ப்பும் புதுத் தொழிற்சாலைகளும்

வேலையற்றோர்க்கு வேலை வாய்ப்பினை நல்குதலையும், புதிய தொழிற்சாலைகள் பல தொடங்குதலையும் இவர் தமது முதற்பணியாகக்கொண்டார். பல புதுத்தொழிற்சாலைகளை நிறுவுவதன் மூலம், பொருளாதாரம் மேம்படும் எனக் கருதி, புதுத் தொழிற்சாலைகள் பல தொடங்க இவர் பெரும் ஊக்கம் தந்தார். லூயி பிலிப் காலத்திலும், இரண்டாவது குடியரசுக் காலத்திலும் அரசுக்குக்

கடன் கொடுக்க மறுத்த பலரும் இப்போது முன் வந்து அரசுக்குக் கடன் வழங்கினர். பலருடைய ஒத்துழைப்பைப் பெற்று இவர் பல புதிய தொழிற்சாலைகளைத் தொடங்கி, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு வழிவகுத்ததுடன், பலருக்கும் வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தார்.

தொழிற் புரட்சியினை இவர் பெரிதும் வரவேற்றார். தொழிற் சாலைகள் பலவும் நிறுவப்பட்டன. பெரைரா சகோதரர்களும், அச்சிலிபோல்டு என்பாரும் புதிய தொழிற்சாலைகள் பல நிறுவ, பெருங் கடன் கொடுத்து உதவினர். அவர்கள் துணையுடன் இவர் பல வங்கிகளை நிறுவி, அவற்றின்மூலம் பெரும் தொழிற்சாலைகள் பலவற்றிற்கு உதவினார். தொழில்களை நிறுவ, கடனுதவி வழங்கும் பொருட்டு, ஃபிரெஞ்சு வங்கியொன்றும் (The Bank of France) நிறுவப்பட்டது. ஃபிரெஞ்சு வங்கி, தனது கிளைகளை நாடெங்கும் தொடங்கித் திறமைமிக்க அனைவர்க்கும் கடன் கொடுத்து ஊக்கு வித்தது. "தி கிரடிட் போன்சியர்" (The Credit Foncier) என்ற நிறுவனம் மிகக குறைந்த வட்டிக்குப் பொருளுதவி செய்து, பல பெரும் தொழிற்சாலைகளை ஊக்குவித்தது. ஃபிரான்சும் தொழிற் புரட்சியில் பங்கேற்றுப் பெரிதும் முன்னேறியது.

### உழவு

உழவுக்கும் இவர் பெரும் ஊக்கம் தந்தார். உழவு வளர பெருமளவில் பொருளுதவி செய்யப்பட்டது. நாடெங்கும் நிறைந்து காணப்பட்ட சதுப்பு நிலங்கள் யாவையும் கழனிகளாக மாற்றப் பட்டன. குடியானவர்கள் பலர் கடனில் மூழ்கிக் கிடந்தனர். அவர்களால், தங்களுக்கு வேண்டும் உழவுக் கருவிகளையும் விதை களையும் கூட, வாங்க முடியவில்லை. அவர்களை ஊக்குவிக்க நிலவள வங்கிகள் நாடெங்கும் தொடங்கப்பட்டன (The Credit Foncier, The Credit Mobilier) போன்ற மாபெரும் நடுவண் வங்கிகள் தொடங்கப்பட்டுத் தொழிலும், உழவும் பெரிதும் ஊக்கு விக்கப்பட்டன. உழவு பெருமளவில் ஆதரிக்கப்பட்டதால், உணவு உற்பத்தி மிகுந்தது. உணவு உற்பத்திப் பெருக்கத்தின் காரணமாக, பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டது; நாட்டில் வளமை மிகுந்தது; அமைதி குடிகொண்டது.

### போக்குவரத்துத் துறையில் முன்னேற்றம்

உழவும், தொழிலும், வணிகமும் வளர நல்ல போக்குவரத்து முறை தேவைப்பட்டது. பேரரசர் தங்கு தடையற்ற வணிகக் கொள்கையினைப் பெரிதும் போற்றினார். தடையற்ற வணிகத்திற்கும்

போக்குவரத்துத் துறையில் பெரும் மாற்றம் தேவைப்பட்டது. நல்ல போக்குவரத்துக்கு நல்ல சாலைகள் தேவைப்பட்டன. நாடெங்கும் சாலைகள் அமைக்கப்பட்டன. புதிய கால்வாய்களும், துறைமுகங்களும், தொழில், வணிக முன்னேற்றத்திற்காக அமைக்கப்பட்டன. இருப்புப் பாதைகளும் நாடெங்கும் அமைக்கப்பட்டன. நீராவிப் படகுகளும் பெருவாரியாகச் செய்யப்பட்டன. இதனால், உள்நாட்டுப் போக்குவரத்தில் பெரும் முன்னேற்றம் ஏற்பட்டது. புகை வண்டிகளும், நீராவிக் கப்பல்களும் சிறக்க, இரும்பும், நிலக்கரியும் இன்றியமையாத் தேவைகளாயின. இரும்பு, நிலக்கரிச் சுரங்கங்கள் பல தோண்டப்பட்டன. இவற்றால் வேலை வாய்ப்புகளும் மிகுந்தன. பொருளாதார முன்னேற்றமும் ஏற்பட்டது.

**பொருளாதார நலன் பேணப்படல்**

தனது ஆட்சி நிலைக்க வேண்டுமாயின், தொழிலாளர்களது ஆதரவு வேண்டுமென்பதைத் தெளிவாய் உணர்ந்தார் பேரரசர். அவர்களை மகிழ்விப்பதைத் தமது நோக்கமாகவும் கொண்டார். தானும் அவர்களுள் ஒருவன் என்பதை மெய்ப்பிக்க அவர்களுடன் புகைவண்டிகளில் அப் பொறியாளர்களுடன் பயணம் செய்தார். சாலைகளிலும், பொதுவிடங்களிலும் தொழிலாளர்களையும் கை வினைஞர்களையும் சந்தித்து அளவளாவி மகிழ்ந்தார் பேரரசர். அவர்கள் நலனைப் பேணும் நிறுவனங்கள் பலவற்றிற்கும் இவர் பொருளுதவி செய்தார். உணவு விடுதிகளில் குறைந்த விலையில் உணவு வழங்க அரசு ஆவன செய்தது. அத்தகைய உணவு விடுதிகளுக்கு அரசு மானியமும் வழங்கியது. தொழிலாளர்களுக்கு இலவசமாக மனைகளும் கட்டித் தரப்பட்டன. தொழிலாளர்களுககு எதிர்பாராத இடர் (Accident) ஏதேனும் ஏற்பட்டால், அதறகு இழப்பீடும் வழங்கப்பட்டது. அதற்காகக் காப்பீட்டு முறையும் (Insurance) கொண்டுவரப்பட்டது. தொழிலாளர் சங்கங்களும் சட்ட பூர்வமானவையென அங்கீகரிக்கப்பட்டன. சட்டப்படி அவர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்கும் 1861ஆம் ஆண்டு உரிமை வழங்கப்பட்டது. 1858-ல் இயற்றப்பட்ட சட்டப்படி அவர்களுக்கு இறப்பு, எதிர்பாராத இடர் போன்றவற்றிற்கும் இழப்பீடு வழங்கப்பட்டது. தொழிலாளர்கள் ஓய்வெடுக்க ஓய்வு மனைகளும் கட்டப்பட்டன. அவர்களது நலனைப் பேண மருத்துவர்கள் பலரும் நியமிக்கப்பட்டனர். மகப்பேறு நிலையங்கள் பல நிறுவப்பட்டன. தொழிலாளி - முதலாளி இவர்களின் நல்லுறவு வளர நற்பணி மன்றங்கள் (Conciliation Boards) பலவும் தொடங்கப்பட்டன. இதனால், தொழிலாளர் நிலையில் முன்னேற்றமேற்பட்டது. அடக்கு முறையோடு நல்ல பொருளாதாரக் கொள்கையினையும் இவர்

கடைப்பிடித்தார் என்பதற்கு இவையே சான்று பகரும். இவை பிற ஐரோப்பிய நாடுகளுக்கும் ஒரு முன்னோடித் திட்டமாகவும் திகழ்ந்தது.

**தடையற்ற வணிகம்**

மூன்றும் நெப்போலியன் தடையற்ற வணிகத்தைப் பெரிதும் ஆதரித்தார். ரிச்சர்டு கோப்டன் (Richard Cobden) என்ற ஆங்கிலப் பொருளியல் வல்லுநரின் கொள்கையினை இவர் கடைப் பிடித்தார். பொருளாதார முன்னேற்றத்திற்குத் தங்கு தடையற்ற வணிகமே சிறந்ததென்பது கோப்டன் என்பாரின் கோட்பாடு. ஃபிரெஞ்சுப் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையற்ற வணிகமே சிறந்ததென இவரும் அதனை ஆதரித்தார். இங்கிலாந்துடனும் தடையற்ற வணிகத்தைப் பேண, 1860-ல் ஓர் உடன்பாடும் இவர் செய்துகொண்டார். அதன் பின்னர், பெல்ஜியம், இத்தாலி, ஸ்விட்ஸர்லாந்து, பிரஷ்யா போன்ற நாடுகளுடனும் இத்தகைய உடன்பாடுகளை இவர் செய்துகொண்டார். அது இவர் பொருளா தாரத் துறையில் செய்த தவறாகும். இதனால், நாளடைவில் ஃபிரெஞ்சு வணிகம் சீர்குலையத் தொடங்கியது. தொழில் துறையில் பெரிதும் முன்னேறிய இங்கிலாந்து போன்ற நாடுகளுடன் ஃபிரான்சால் போட்டியிட முடியவில்லை. பாதுகாப்பு அளிக்கப் படாத பல புதிய தொழிற்சாலைகள் பிற நாடுகளுடன் போட்டியிட முடியாமற் சீர்குலைந்தன. உள்நாட்டு வணிகம் சிறப்பிழந்தது. உற்பத்தித் திறன் குறைந்த, ஃபிரான்சில் பொருளாதார மந்தம் ஏற்பட்டது. அவரது செல்வாக்கு குறையத் தொடங்கியதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

**குடியேற்றக் கொள்கை**

முதலாம் நெப்போலியன் போன்று சிறப்புறத் திகழவேண்டு மாயின், குடியேற்றங்கள் அமைத்தல் இன்றியமையாதது என்பதை இவர் தெளிவாக உணர்ந்தார். குடியேற்றங்களை அமைப்பதன் மூலம், நாட்டுப்பற்று மிக்கோரை மகிழ்விப்பதுடன் பொருளாதார வளர்ச்சியினையும் இது ஊக்குவிக்குமெனக் கருதி, இவர் குடியேற்றங்களை நிறுவுவதிலும் ஆர்வம் காட்டினார். பழைய குடியேற்றங்களின் நிர்வாகத்தினைச் சீர்ப்படுத்தியதுடன் புதிய குடியேற்றங்களை நிறுவுவதிலும் இவர் ஆர்வம் காட்டினார். லூயி பிலிப் காலத்தில் அல்ஜிரியாவில் ஃபிரெஞ்சுக் குடியேற்றம் நிறுவப்பட்டது. இவர் அல்ஜிரியா முழுவதையும் கைப்பற்றி, அதனை ஒரு தலைசிறந்த ஃபிரெஞ்சுக் குடியேற்றமாக மாற்றினார். அது தலைசிறந்த ஃபிரெஞ்சு வணிக இடமாக மாறியது. மேற்கு

ஆப்பிரிக்காவிலுள்ள செனிகல் என்ற இடமும் கைப்பற்றப்பட்டு, அது ஃபிரெஞ்சுக் குடியேற்றமாக்கப்பட்டது. தூரக் கிழக்கிலும் இவர் தமது ஆர்வத்தினைக் காட்டினர். 1853 ல் கலிபோர்னியா என்ற இடத்தையும் இவர் கைப்பற்றினர், பிற ஐரோப்பிய நாடுகளுடன் கூடி, சீனுவிலும் பல வணிகச் சலுகைகளைப் பெற்ருர். 1860-ல் கையெழுத்தான பீகிங் உடன்பாட்டுப்படி பல வணிக உரிமைகளையும் அங்கு இவர் பெற்ருர்.

ஃபிரெஞ்சுப் படையொன்று இந்தோ-சீனுவுக்கும் அனுப்பப் பெற்று, அதுவும் கைப்பற்றப்பட்டது. இந்தோ-சீனுவும் ஃபிரெஞ்சுக் குடியேற்றமாக மாறியது. கம்போடியாவிலும் ஃபிரெஞ்சாதிக்கம் நிறுவப்பட்டது. தூரக் கிழக்கில் தமது குடியேற்றங்களை நிறுவுவதில் வெற்றி கண்ட பேரரசர், மத்திய கிழக்கிலும் தமது குடியேற்றத் திட்டத்தைச் செயல்படுத்த முனைந்தார். எகிப்திலும் ஃபிரெஞ் சாதிக்கம் நிறுவப்பட்டது. 1860-ல் சிரியாவிலும் தமது ஆதிக்கத்தை நிறுவ, படையொன்றை ஏவினர். இவரது தீவிரக் குடியேற்றக் கொள்கையின் விளைவாக, இங்கிலாந்துடன் இணைந்து செய லாற்றுதல் இயலாததானது. இதனல், இவர் இங்கிலாந்தின் நட்பை இழக்க நேரிட்டது. இந்நட்பின் முறிவால் இவர் தோற்கவும் நேரிட்டது. 1870 ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போரின்போது, இங்கிலாந்து இவரை ஆதரித்திருப்பின், இவர் வெற்றி பெற்றிருக்கக்கூடும். இவரது குடியேற்றக் கொள்கையால், ஃபிரான்சுக்குத் துன்பமே மிகுந்தது.

**பிற திட்டங்கள்**

மூன்றும் நெப்போலியன் பொதுப்பணித்துறையின் மூலம், பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தார். பாரிசு நகரம் புதுப்பிக்கப்பட்டு, நவீனமயமாக்கப்பட்டது. பாரிசு மிக்க அழகுபடுத்தப்பெற்றது. அது அலங்கார வளைவு களாலும் வண்ணப் பூங்காக்களாலும், எழில்மிகு சாலைகளாலும், பொருட்காட்சி சாலைகளாலும் அழகுபடுத்தப்பட்டு, "ஐரோப் பாவின் ராணி" எனத் திகழ்ந்தது. அங்கு அகழ்வடிகால்கள் நிறுவப்பட்டன. பாரிசில் அழகுமிகு கலையரங்கமொன்றும் நிறுவப்பட்டது. அது இன்றும் அவர் காலத்துக் கலைச்சின்னமாகத் திகழ்கிறது.

இவரது உள்நாட்டுக் கொள்கையினை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1852லிருந்து 1860 வரையில் ஒரு பிரிவு. 1860லிருந்து 1870 வரையிலான மற்றொரு பிரிவென இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1852-லிருந்து 1860 வரையிலான காலத்தில்

அடக்குமுறை ஆட்சி நிலவியது. ஆயினும், இவர் செல்வாக்கு பெற்றே திகழ்ந்தார். அதற்குரிய காரணங்கள் பல. (1) அடக்கு முறை எனினும், அது மக்கள் நன்மைக்கே எனப் பலரும் எண்ணினர். (2) வயது வந்தோர் அனைவரும் வாக்குரிமை பெற்றிருந்தனர். இதனால், வழங்கப்பட்டதாகப் பலரும் நினைத்தனர். (3) இவரது பொருளாதாரக் கொள்கைகளால் நடுத்தர வகுப்பினர் பெரிதும் நன்மையடைந்தனர். அவர்கள் மிகவும் வளம் பெற்றனர். தொழிற்சாலைகள் பலவும் தொடங்கப்பட்ட காரணத்தால், செல்வர்களும், இவரது ஆட்சியில் பெரிதும் நன்மை பெற்றுத் திகழ்ந்தனர். (4) ஃபிரெஞ்சு மக்களில் பெரும்பாலோர் கத்தோலிகர்கள் அவர்களும் இவரது கொள்கையினைப் பெரிதும் போற்றினர். இவர் போப்பாண்டவரை மீண்டும் பதவியில் அமர்த்தியதால், அவர்கள் பெரிதும் மகிழ்ந்தனர். (5) ஃபிரெஞ்சு மக்களுள் பலர் முடியரசை விரும்பினர். அவரது ஆடம்பரமிக்க அரசவையினைக் கண்டு அவர்கள் பெருமிதம் கொண்டு இவரை ஆதரித்தனர். (6) உழவர்களும், பிறரும் இவரது முடியரசைப் பெரிதும் வரவேற்றனர். சோசலிஸ்டுகளால் விளைந்த குழப்பங்களை அவர்கள் விரும்பவில்லை. குடியரசின் நிலையற்ற தன்மையும், குழப்பமும் நீக்கப்பட்டு, அமைதி நிலைநாட்டப்பெற்றதால், அவர்கள் இம் மன்னராட்சியினைப் பெரிதும் வரவேற்றனர். (7) கிரிமியப்போர், குடியேற்றங்கள் பல அமைத்தல் போன்றவற்றில் இவர் வெற்றி பெற்றுச் சிறப்போடு திகழ்ந்த காரணத்தால், தேசிய வாதிகளும் இவரது ஆட்சியைப் பெரிதும் புகழ்ந்தனர். ஆகவே, 1860 வரையிலான முதற் பருவத்தில் இவர் சிறப்புடன் திகழ்ந்தார்.

**உள்நாட்டில் எதிர்ப்பு**

1860க்குப் பின்னர், ஃபிரான்சில் மாபெரும் மாறுதல் ஏற்பட்டது. மூன்றும் நெப்போலியனுக்கும் எதிர்ப்பு மிகுந்தது. அவரது அடக்குமுறைகள், செய்தித்தாள்கள் தணிக்கைமுறை, அவரது தன்னாட்சி போன்ற மக்களாட்சி முறைக்கு அப்பாற் பட்டவைகளால் அவரது செல்வாக்கு குறையத் தொடங்கியது. அவரது தன்னாட்சியில் மக்கள் மிகவும் சோர்வுற்றனர். உரிமைக் கெதிரான அவரது பாராளுமன்ற முறையை மக்கள் புரிந்து கொள்ளத் தொடங்கினர். 1863 பொதுத் தேர்தலுக்குப் பின்னர், அவரது செல்வாக்கு மிகவும் குறையத் தொடங்கியது. அத் தேர்தலில் குடியரசுக் கட்சியினர் பலர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தையர், பெர்ரி, காம்பெட்டா போன்றோர் பாராளுமன்றத்திற்குத் தேர்ந் தெடுக்கப்பட்டனர். அவர்கள் அவரைப் பாராளுமன்றத்தில் வன்மையாக எதிர்க்கத் தலைப்பட்டனர். தான் பதவியிலிருப்பது

மக்களது ஆதரவில்தான் என்பதை நன்குணர்ந்த பேரரசரும் தன்னுடைய அடக்குமுறை ஆட்சியை மாற்றி முற்போக்குக் கொள்கைகளைச் செயல்படுத்த முனைந்தார்.

1860ஆம் ஆண்டு அரசிலமைப்பும் திருத்தப்பட்டது. சட்ட மன்றத்திற்கும், செனட்டிற்கும் உரிமைகள் பல வழங்கப்பட்டன. அவை மன்னரது ஆண்டறிக்கையை ஆராய்ந்து வாக்களிக்கவும் உரிமை பெற்றன. பாராளுமன்ற விவாதங்களையும், சர்ச்சைகளையும் வெளியிடச் செய்தித்தாள்களுக்கு உரிமைகள் வழங்கப் பட்டன. பேரரசரும் தமது செயல்களை அவ்வப்போது பாராளு மன்றத்திற்கு அறிவிக்க வேண்டுமென்ற நிபந்தனையை ஏற்றுக் கொண்டார்.

1866ல் ஒலிவியர் (Ollivier) என்பார் முற்போக்குத் திட்டங்களைச் செயல்படுத்தும் வகையில் புதுக் கட்சியொன்றினைத் தொடங்கினர். அதன் விளைவாகச் செய்தித்தாள்கள் தணிக்கை முறை தளர்த்தப்பட்டது. அமைச்சர்களும் சட்டமன்றத்தில் அமர்ந்து உறுப்பினர்கள் கேட்கும் வினுக்களுக்கு விடை கூறவும் அனுமதிக்கப்பட்டார்.

1869ல் நடந்த பொதுத் தேர்தலின் விளைவாக, ஒலிவியர் பெரும் செல்வாக்கு பெற்றுர். பேரரசர் அவரையே அமைச்சரவையை அமைக்குமாறும் வேண்டினர். முற்போக்குக் கொள்கை மிக்க ஓர் அமைச்சரவையாகும். அது முற்றிலும் பாராளுமன்றத்திற்கே பொறுப்பானது. பாராளுமன்றத்திற்கு அனைத்துரிமைகளும் வழக்கப்பட்டன. நிதித்துறைக்கும் பாராளுமன்றமே பொறுப் பேற்றது. 1789க்குப் பின்னர், ஃபிரான்சு பெற்ற மிக முற்போக்கு அரசியலமைப்பென இதனை ஒலிவியர் அழைத்ததிலிருந்து இதன் தன்மை நன்கு புலனுகும்.[1]

மூன்றும் நெப்போலியனும் தனக்கு எதிராக உருவாகிவரும் எதிர்ப்பை நன்குணர்ந்து, இம் முற்போக்குக் கொளகைகளைச் செயல்படுத்த முன்வந்தார். "நாட்டின் ஒற்றுமையே இன்றியமையாதது. வயது வந்தோர் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்பட்ட இப் பேரரசு ஒற்றுமையுடனும் வலிவுடனும் திகழவேண்டுமென்பதே தனது பேரவா எனத் தமது 1869 ஆம் ஆண்டின் உரையொன்றில் குறிப்பிட்டுள்ளார். அவர் மேலும், "ஃபிரான்சு உரிமையை நாடுகிறது. அவ்வுரிமை கட்டுப்பாட்டுடன் இணைய வேண்டும்.

[1] The most truly liberal constitution which France has enjoyed since 1789. 'Ollivier'

(Liberty Combined with Order) நான் கட்டுப்பாட்டினையும் அமைதியினையும் விரும்புகிறேன். உரிமையைக் காப்பாற்ற என் நன்மக்களே எனக்குத் துணை புரியுங்கள் " என வேண்டினார்.

1869 பொதுத் தேர்தலுக்குப் பின்னர், மேலும் பல முற்போக்கு சீர்திருத்தங்களைச் செயல்படுத்தத் துணிந்தார் பேரரசர். அதிகாரத்தினையும் பன்முகப்படுத்த (Decentralisation of authority) இவர் பெரிதும் முன்வந்தார். மேயர்களை மக்களே தேர்ந்தெடுக்கும் திட்டத்தினையும் இவர் கொணர்ந்தார். இலவசத் தொடக்கக் கல்விக்கும் திட்டமொன்று தீட்டினார் இவர். இவர் தொழிற்சாலைகளையும் தொழிலாளர்கள் நலனுக்கேற்ப மாற்றியமைக்கவும் நினைத்தார். தமது பேரரசைத் தொழிலாளர் பேரரசெனவும் இவர் பெருமையோடு அழைத்துக்கொண்டார். மக்களின் நலனைக் கருதி, நாடெங்கும் சேமிப்பு வங்கிகளையும் நிறுவ இவர் பேரவாக் கொண்டார். இத்திட்டங்களனைத்தையும் பாராளு மன்றமும் ஏற்றுக்கொண்டது. அவப்பேறு காரணமாக, 1870ல் நடந்த ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போரில் இவர் தோற்கடிக்கப்பட்டார்; பதவியிலிருந்து அகற்றப்பட்டார். இரண்டாவது பேரரசும் அகற்றப் பட்டது. அவரது திட்டங்களும் முற்றுப் பெறாது ஏட்டளவிலேயே நின்றுவிட்டன. 1870ல் மூன்றாவது குடியரசும் நிறுவப்பட்டது. ஃபிரெஞ்சு வரலாற்றில் ஒரு பெரும் சகாப்தம் முடிவுற்றது.

### இவரது வெளிநாட்டுக் கொள்கை

மூன்றாம் நெப்போலியனது வெளிநாட்டுக் கொள்கைபற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. பேரரசு என்றால், அமைதி என்று கூறிய அவர் பல்வேறு வெளிநாட்டுப் போர்களில் ஏன் ஈடுபட வேண்டும் என்ற குழப்பம் நிலவுகிறது. இவர் முன்னுக்குப்பின் முரணான பல கொள்கைகளைக் கொண்டிருந்ததால் இக் குழப்பமேற் படுகிறது. பேரரசு என்றால், அமைதி என்றவர், முதலாம் நெப்போலியனைப் போன்று பேரரசொன்றையும் அமைப்பேனென மக்களுக்கு வாக்களித்தார். அதனடிப்படையில் பெருவாரியான வாக்குகளைப் பெற்றுப் பேரரசராகவும் பதவி ஏற்றார். பேரரசு என்றாலே அமைதி என்றவர், பதவி ஏற்றவுடன் பல வெளிநாட்டுப் போர்களில் தீவிரப் பங்கேற்றார். இவர் பேரரசு என்றாலே அமைதி யென ஏன் கூறினார் என்று பலரும் ஐயுறுவதில் வியப்பேதுமில்லை. அமைதியில் நாட்டம் மிக்கவரெனினும், மூன்றாம் நெப்போலியன் தமது புகழையும் தமது நாட்டினது புகழையும், பெரிதும் உயர்த்தவே விரும்பினார். குடியேற்றங்கள் பல நிறுவி தமது நாட்டின் பொருளாதார நிலையைப் பெரிதும் மேம்படுத்த விரும்பினார் இவர். குடியேற்றங்களை நிறுவுதல் என்றாலே போர் செய்தலாகும்,

அத்துடன் நாட்டுப்பற்றினையும், முற்போக்குக் கொள்கைகளையும் இவர் ஆதரித்தார். முற்போக்குக் கொள்கைகளையும், நாட்டுப் பற்றினையும் ஆதரித்த இவரைப் பல பிற்போக்கு நாடுகள் எதிர்த்தன. ஆகவே, பிற்போக்கு நாடுகளுடன் போரிடுவது அவரது கடமை யானது. ஆகவே, லிப்ஸன் என்ற வரலாற்று வல்லுநர் இவரது வெளி நாட்டுக் கொள்கைகளை, அன்று ஐரோப்பாவில் நிலவிய சூழ்நிலை களே உருவாக்கின என்பர்.[1] இக் கூற்றினைப் பலர் ஏற்பதில்லை. நாட்டுப்பற்று மிக்க ஃபிரெஞ்சு மக்கள் தீவிர வெளிநாட்டுக் கொள்கையினையே விரும்பினர். தீவிரமாக வெளிநாட்டுப் போர் ளில் ஈடுபடாத காரணத்தால்தான், பூர்போன் அரசும், ஆர்லியன்ஸ் அரசும் புரட்சிகளால் அகற்றப்பட்டன. ஆகவே, தமது தாயகத்தில் ஆதரவைப் பெருக்கிக்கொள்ளவே இவர் பல வெளிநாட்டுப் போர்களில் ஈடுபட்டார் எனப் பலர் பகர்ந்துள்ளனர். இக் கருத்தும் ஏற்புடையதல்ல என்பர் கோப்பன் (Cobban) என்ற வரலாற்றறிஞர். அவர் ஃபிரெஞ்சு மக்கள் போரை விரும்பவில்லை. அவர்கள் அமைதியினையே விரும்பினர். ஆகவேதான், 1848 புரட்சியின்போது, இரண்டாவது குடியரசு பிறநாடுகளுக்கு உதவ மறுத்தது. அவர்கள் "ஃபிரெஞ்சு இரத்தம், ஃபிரெஞ்சு மக்களுக்கு மட்டுமே உரியது" எனக் கூறினர். ஆகவேதான், அதனை உணர்ந்த பேரரசர் மூன்றும் நெப்போலியனும் பேரரசு எனில், அமைதி என்றார் என்று குறிப்பிடுகிறார். ஆயின், இவர் ஏன் பல போர்களில் ஈடுபட வேண்டும்? இதனை ஆராயும்போது இவர் திட்டவட்டமான நோக்கமேதுமின்றி அவ்வப்போது தேவைக்கு ஏற்ப தமது கொள்கையை வகுத்துக்கொண்டார் என முடிவு செய்ய வேண்டி யுள்ளது. கீழ்க்காணும் அடிப்படையில் இவர் வெளிநாட்டுப் போர்களில் ஈடுபட்டார்.

**1. நாட்டுப் பற்று:** மூன்றும் நெப்போலியன் இளவயது முதற்கொண்டே நாட்டுப் பற்று மிக்கவராய் இருந்தார். நாட்டுப் பற்றுக் காரணமாக, வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், அனைத்துப் போராட்டங்கள் மீதும் மிக்க பரிவு கொண்டார். நாட்டுப் பற்றென்ற ஒரு பெருஞ் சூறாவளி ஐரோப்பாவெங்கும் வீசியபோது, அதனைப் பெரிதும் வரவேற்று அப் பெருங்காற்றால் ஐரோப்பா முழுவதும் மாறவேண்டுமென உண்மையில் விரும்பினார். அதனால்தான், இவர் கார்பொனெரி இயக்கத்தின் உறுப்பினரானார். போலந்து, ருமேனியா போன்ற நாடுகளை இவர் ஆதரித்ததும் அவ்வடிப்படையில்தான். ஐரோப்பாவெங்குமிருந்த தேசியவாதிகளனைவரும் இவரையே தங்களுடைய தலைவரெனப் போற்றினர். பல போர்களும் இதனாலேயே ஏற்பட்டன.

[1] Lipson p. 35.

**2. பிற நாடுகளின் பகுதிகளைப் பெற விழைதல் :** நாட்டுப் பற்று மிக்க இவர், தமது தாயகம் சிறப்படைய வேண்டுமெனப் பெரிதும் விரும்பினர். முதலாம் நெப்போலியன் காலத்துச் சிறப்பினை ஃபிரான்சு மீண்டும் பெற வேண்டுமென இவர் பெரிதும் பாடுபட்டார். இத்தாலி, ஜெர்மனி போன்ற நாடுகள் ஒன்றுபட இவர் பெரிதும் துணை நின்றார். அந் நாடுகளுக்குத் துணை புரிந்து அவற்றிடமிருந்து இழப்பீடாகப் பல பகுதிகளைப் பெற வேண்டுமென்பதே இவர் தம் கொள்கை. இந் நோக்கத்தினை நிறைவேற்றவே இவர் பல போர்களில் ஈடுபட்டார். தமது நாட்டிற்குக் குடியேற்றங்கள் வேண்டுமென்ற காரணத்தால்தான், சீனு போன்ற தூரக்கிழக்கு நாடுகள்மீதும் தமது படையை ஏவினர். இந்தோ-சீனு, சிரியா, எகிப்து போன்ற நாடுகளிலும் தமது ஆதிக்கத்தினை நிறுவினர். பல நாடுகளின் பகுதிகளைப் பெறவே இவர் பல வெளிநாட்டுப் போர்களில் ஈடுபட்டார்.

**3. இழந்த புகழை மீண்டும் ஈட்டல் :** முதலாம் நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பின்னர், ஃபிரான்சு தனது புகழை முற்றிலும் இழந்துவிட்டது. 1815 பூர்போன் மீட்சிக்குப் பின்னரும்கூட, ஃபிரான்சு இழந்த தனது புகழை மீண்டும் பெற முடியவில்லை. 1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், பதவியேற்ற ஆர்லியன்ஸ் அரசும் அதனை நிறைவேற்றவில்லை. வியன்னு மாநாட்டுக் கொள்கைகளைப் புறக்கணித்துவிட்டு, மீண்டும் ஐரோப்பிய அரங்கில் புகழ்பெற வெளிநாட்டுப் போர்களில் ஈடுபடுவது இவரது இன்றியமையாத பணியானது.

**4. முதலாம் நெப்போலியனைப் பின்பற்ற விழைதல் :** முதலாம் நெப்போலியனது வீரமும், அவரது தீரமிக்க செயல்களும், அவரது புகழ்மிக்க வெற்றிகளும், அவரது உள்நாட்டுச் சீர்திருத்தங்களும், சொல்லும், செயலும் இவரைப் பெரிதும் கவர்ந்தன. முதலாம் நெப்போலியனைப் போன்று இவரும் வெற்றிகள் பல பெற விழைந்தார். முதலாம் நெப்போலியனின் பணிகள் ஐரோப்பியப் பிற்போக்குக் கூட்டணிகளால் முற்றுப் பெறவில்லையெனவும், தான் அப்பணியினைத் தொடரப் போவதாகவும் இவர் அறிவித்தார். இதனல், போர் செய்தல் இவரது தவிர்க்க முடியாத கொள்கையானது.

**5. இங்கிலாந்துடன் நட்பு :** இவர் வெளிநாட்டுக் கொள்கையில் இங்கிலாந்துடன் நட்பு பாராட்ட விரும்பினர். முதலாம் நெப்போலியன் செய்த தவற்றைத் தான் மீண்டும் செய்யப் போவதில்லையென அறிவித்தார். அவரது வீழ்ச்சிக்கும் இதுவே

காரணமென இவர் கருதினர். இங்கிலாந்துடன் கூடிப் பிற்போக்குக் கூட்டணிகளை முறியடிப்பது இவர் கடமையானது.

**6. ரஷ்யாவுடனும் ஆஸ்திரியாவுடனும் பகைமை:** வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், ஐரோப்பாவில் முற்போக்குக் கருத்துகளை வளரவொட்டாமல் தடுத்த நாடுகள் ரஷ்யாவும், ஆஸ்திரியாவு மாகும். அப் பிற்போக்கு நாடுகள் ஃபிரான்சின் பல பகுதிகளைக் கவர்ந்துகொண்டதுடன் அது வளராமலும் இருந்தன. மூன்றாம் நெப்போலியன் பதவிக்கு வந்தவுடன் இப் பிற்போக்குக் கூட்டணியை முறியடிக்க முனைந்தார். 1855-ல் கிரிமியப் போரில் ரஷ்யாவையும் 1859-ல் ஆஸ்திரிய-இத்தாலியப் போரில் இத்தாலியையும் முறியடித்தார். இப் பகையும் இவரது போர்களுக்கு வித்திட்டது.

**வெளிநாட்டுப் போர்கள்**

**1. இங்கிலாந்துடன் உடன்பாடு:** முதலாம் நெப்போலியனின் கொள்கைகள் அனைத்தையும் ஏற்றுக்கொண்ட இவர், அவரது இங்கிலாந்து பற்றிய கொள்கையினை மட்டும் ஏற்கத் தயங்கினர். காரணம், அவரது வீழ்ச்சிக்கு இதுவே காரணமென இவர் கருதினர். கடல் இராணியான இங்கிலாந்தினைப் பகைத்துக் கொண்டால், தமது திட்டம் நிறைவேறாது என இவர் நம்பினர். பிற்போக்குக் கூட்டணியிலிருந்து இங்கிலாந்து விலகியதையும் இவர் வரவேற்றார். நாட்டுப் பற்றினையும், முற்போக்குக் கொள்கைகளையும் இங்கிலாந்து ஆதரித்துவருவதையும் இவர் காணத் தவறவில்லை. 1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னர், இங்கிலாந்தும் ஃபிரான்சும் முற்போக்குக் கொள்கைகளை ஒன்றுகூடி ஆதரித்தன. ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் ஒன்றுகூடி, ஃபிரான்சை எதிர்த்ததால், ஃபிரான்சு ஐரோப்பாவில் தனித்து நிறுத்தப்பட்டது. தனித்து நின்று அப் பிற்போக்கு நாடுகளை முறியடிக்க முடியாதெனக் கருதிய இவர், இங்கிலாந்தின் நட்பை நாடியதில் வியப்பேதுமில்லை. இங்கிலாந்தின நட்பையும் இவர் பெரிதும் வரவேற்றார். தொடக்கத்தில் இங்கிலாந்து இவரது நட்பை முற்றிலும் புரிந்து கொள்ளவில்லை. இவருக்கஞ்சி, தனது கடற்கரைப் பகுதிகளில் படைகளையும் குவித்தது. இவரது உண்மையான நோக்கத்தைப் புரிந்துகொண்ட இங்கிலாந்தும் அதனை வரவேற்றது. 1852-ல் இவ்விரு நாடுகளும் நட்பு உடன்பாடு ஒன்றைச் செய்துகொண்டன. கிழக்குப் பிரச்சினையில் ரஷ்யா இவர்களது பொதுப் பகையாய் இருந்தது, இவற்றின் உறவை மேலும் வலுப்படுத்தியது.

தொடக்கத்தில் இங்கிலாந்தின் நட்பு இவருக்கு நன்மையாகவே அமைந்தது. இங்கிலாந்துடன் நட்புகொண்ட காரணத்தால், ஆஸ்திரிய-ரஷ்யப் பிற்போக்கணியை இவர் வெற்றிகரமாக முறியடிக்க முடிந்தது. முதலாம் நெப்போலியனைப் போன்று ஆஸ்திரியாவையும் (1859), ரஷ்யாவையும் (1855) தோற்கடித்தது இவரது மகத்தான சாதனையாகும். இது முற்போக்கினுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். குடியேற்றங்களை அமைப்பதில் இவ்விரு நாடுகளுக்கும் கருத்து வேறுபாடுகள் மிகுந்ததால், இந்த நட்பு முறிந்தது. அந் நட்பு முறிந்தபின்னர், இவரும் தனித்து நிறுத்தப்பட்டார். தனித்து நிறுத்தப்பட்ட இவர், 1870-ல் தோற்கடிக்கப்பட்டார்.

2. **கிரிமியப் போர்: (1854–56)** கிரிமியப் போர், மூன்றும் நெப்போலியன் காலத்தில் நிகழ்ந்த மிக முக்கியப் போர்களில் ஒன்றாகும். இப் போருக்கு மூன்றும் நெப்போலியனே காரணம் என்பர் ஒரு சாரார். அதனை மறுப்பாரும் உளர். கிரிமியப் போருக்கு இவர் குறைந்தளவே பொறுப்பாவார் எனவும் பலர் கருதுகின்றனர்.

வாட்டர்லூ (Waterloo) போருக்குப் பின்னர், நிகழ்ந்த மாபெரும் ஐரோப்பியப் போராகுமிது. இதில் பிரஷ்யா நீங்கலாக அனைத்து ஐரோப்பிய நாடுகளும் பங்கேற்றன. 40 ஆண்டுகளாக ஐரோப்பா நுகர்ந்து வந்த அமைதியைக் குலைத்துப் பகையையும், பூசலையும் உண்டாக்கி அங்கு மாபெரும் மாற்றங்களுக்கு வித்திட்ட போராகுமிது. இத்தாலி-ஜெர்மனி ஐயக்கியத்திற்கும், ஐரோப்பாவில் மீண்டும் கூட்டணிகள் அமைவதற்கும் இப் போரே காரணமாகும்.

(1) மேலோட்டமாக நோக்குமிடத்து இது மிகச் சாதாரணக் காரணத்திற்காக ஏற்பட்டது போன்று தோன்றும். ஜெருசலத்திலிருந்த புனித இடங்கள் மீது யார் ஆதிக்கம் செலுத்துவது என்பது ஒரு பிரச்சினையாக மாறியது. அப் புனிதத் திருச்சபைகள் மீது இலத்தீன் திருச்சபை ஆதிக்கம் செலுத்துவதா அல்லது கிரேக்கத் திருச்சபை ஆதிக்கம் செலுத்துவதா என்ற பிரச்சினையின் அடிப்படையில் இப்போர் ஏற்பட்டது. ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு முன்னர், இத் திருச்சபைகள் மீது ஃபிரான்சு ஆதிக்கம் செலுத்திவந்தது. புரட்சியின்போது ஏற்பட்ட குழப்பத்தால் ஃபிரான்சு அவ்விடங்களைச் செவ்வையாகக் கண்காணிக்கவில்லை. புரட்சியின்போது இத் திருச்சபைகள் முற்றிலும் புறக்கணிக்கப்பட்டன. நேஷனல் கன்வென்ஷன் காலத்தில் பகுத்தறிவுச் சமயம் ஃபிரான்சில் புகுத்தப்பட்ட காரணத்தால், இலத்தீன் திருச்சபைகள் ஜெருசலத்திலும்

புறக்கணிக்கப்பட்டன. ஆகவே, இத் திருச்சபைகளை நிர்வகிக்கும் பொறுப்பினை ரஷ்யா ஏற்றது. துருக்கியச் சுல்தான் அவ்வுரிமையினை ரஷ்யாவுக்கு வழங்கினர். 1852 வரை இத்திருச்சபைகள் ரஷ்ய ஆதிக்கத்தின் கீழ் இருந்தன.

1852-ல் பேரரசரான மூன்றும் நெப்போலியன் அவ்வுரிமைகளை மீண்டும் ஃபிரான்சுக்கே வழங்குமாறு துருக்கியச் சுல்தானை வேண்டினர். சுல்தானும் அவ் வேண்டுகோளை ஏற்று அவ்வுரிமைகளை ஃபிரான்சுக்கே தர இசைந்தார். அதனை விரும்பாது முதலாம் சார் நிக்கொலஸ் அவ் வுரிமையினை ஃபிரான்சுக்கு வழங்குவதை எதிர்த்தார். அவ் வுரிமை ரஷ்யாவிடமே இருக்கும் எனவும் அவர் அறிவித்தார். அத்துடன் துருக்கியின் ஆதிக்கத்தில் இருக்கும் கிருத்துவக் குடிமக்களின் நலனைப் பாதுகாக்கும் பொறுப்பினை ரஷ்யாவுக்கே வழங்குமாறு ரஷ்ய அரசர் வேண்டினர். தனது வேண்டுகோளைத் துருக்கி ஏற்கும்படி செய்ய அதன் பகுதிகளான வாலச்சியா, மால்டேவியா போன்ற இடங்களையும் ரஷ்யா கைப்பற்றிக்கொண்டது. அவ்விடங்களிலிருந்து ரஷ்யப் படைகளை வெளியேற்றுமாறு துருக்கி வேண்டியது. ரஷ்யா அவ் வேண்டுகோளை ஏற்க மறுத்ததால், துருக்கி ரஷ்யாமீது போர் தொடுத்தது. கிரிமியப் போரும் தொடங்கியது. ரஷ்யாவின் இப் போக்கே கிரிமியப் போருக்கு மிக முக்கியக் காரணமாகும்.

(2) இங்கிலாந்தும் இப் போருக்குப் பெருங் காரணமாய் இருந்தது. இங்கிலாந்துடன் ஒன்று சேர்ந்து துருக்கியப் பேரரசைப் பகிர்ந்துகொள்ள விரும்பினர் முதலாம் சார் நிக்கொலஸ். “இங்கிலாந்தும் நானும் ஒப்புக்கொண்டால் பிறரைப் பற்றிக் கவலைப்படேன்” என்றர் இம்மன்னர். ஃபிரான்சைப் புறக்கணித்துவிட்டு, இங்கிலாந்துடன் நட்பு உடன்பாடு ஒன்று செய்து கொள்ளவும் முன்வந்தது ரஷ்யா. ஆனல், இங்கிலாந்து நோயாளியின் பகுதிகளைப் பகிர்ந்துகொள்ள விரும்பவில்லை அது நோயாளிக்கு மீண்டும் புத்துயிர் கொடுக்கவே விரும்பியது. 1844ஆம் ஆண்டு, முதலாம் சார் நிக்கொலஸ் இங்கிலாந்து சென்றிருந்தபோது, அதுகுறித்து அபர்டீன் என்ற அந் நாட்டுத் தலைமை அமைச்சரிடம் உரையாடினர். இங்கிலாந்து, அப்போதும் தனது கருத்தைத் திட்டவட்டமாக வெளியிட மறுத்துவிட்டது. இதனைத் தவருகப் புரிந்துகொண்டார் சார் மன்னர். இங்கிலாந்து தனது கருத்தை ஏற்றுக்கொண்டதாகக் கருதினர் அவர், 1853-ல் மீண்டும் நோயாளியின் பகுதிகளைப் பகிர்ந்துகொள்ளலாமென இங்கிலாந்தை வேண்டியது ரஷ்யா. 1853-லும் இங்கிலாந்து தனது கொள்கையைத் தெளிவாகக் கூறவில்லை.

இங்கிலாந்தின் வெளித்துறை அமைச்சராகப் பதவியேற்ற பாமர்ஸ்டன் என்பார் ரஷ்ய அச்சம் மிக்கவர். ரஷ்யா, துருக்கியை விழுங்கிவிடக் கூடுமென அவர் அஞ்சினர். அவர் அச்சத்தின் காரணமாகவே ரஷ்யாவைத் தோற்கடிக்க வேண்டுமென்றார். இங்கிலாந்தின் செய்தித் தாள்களும் இப் போரைத் தூண்டி விட்டன. ஆங்கிலேயர்களும் ரஷ்யப் போக்கினை விரும்பவில்லை. ரஷ்யப் பிடியிலிருந்து துருக்கியைக் காப்பாற்ற வேண்டுமென அவர்களும் விரும்பினர். ஆங்கில முற்போக்காளர்களும் ரஷ்யா தோற்கடிக்கப் படுதலையே விரும்பினர். பிற்போக்கு நாடான ரஷ்யா தோற்கடிக்கப்பட்டால்தான், ஐரோப்பாவில் முற்போக்கு வெற்றி பெற வாய்ப்பேற்படுமென அவர்கள் கருதினர். ஆகவே, இப் போருக்கு இங்கிலாந்தும் பெருமளவில் வழிவகுத்தது.

(3) ஆஸ்திரியாவும் இப் போருக்கு ஒருவகையில் காரணமாயிருந்தது. ரஷ்யாவின் ஆதிக்கப் போக்கினை அது விரும்பவில்லை. மால்டேவியா, வாலச்சியா ஆகிய இவ்விரு பகுதிகளும் ஆஸ்திரியாவுக்கு அருகில் அமைந்துள்ள பகுதிகள். அப்பகுதிகளை ரஷ்யா வென்றதை ஆஸ்திரியா முற்றிலும் வெறுத்தது. தனது நுழைவாயிலில் பகைவன் இருப்பதை அது பெரிதும் வெறுத்தது. பிற நாடுகளுடன் கூடி ரஷ்யாவை எதிர்த்தது.

(4) சார்டினியாவும் இப்போரில் கலந்துகொண்டது. சார்டினியாவின் தலைமை அமைச்சரான கவூர் இத்தாலியை ஒன்றுபடுத்தும் பொருட்டு, இப் போரில் கலந்தகொண்டார். மூன்றும் நெப்போலியனுக்கு உதவி, அவர்மூலம் இத்தாலியை ஒன்றுபடுத்த முனைத்தார் கவூர். கிரிமிய மண்ணிலிருந்து ஒரு புது இத்தாலியை உருவாக்கும் நோக்கத்தில் இப் போரில் பங்குகொண்டார் கவூர்.

(5) ஃபிரான்சும் இப் போருக்குக் காரணமாய் இருந்தது என்பதை மறுப்பதற்கு இல்லை. மூன்றும் நெப்போலியனுக்கும், முதலாம் நிக்கொலஸுக்கும் மிகுந்த கருத்து வேறுபாடுகள் இருந்தன. 1852-ல் மூன்றும் நெப்போலியன் பேரரசராகப் பதவி ஏற்றதை ரஷ்யா விரும்பவில்லை. மிக்க தயக்கத்திற்குப் பின்னர், முதலாம் சார் நிக்கொலஸ் இவரைப் பேரரசர் என ஏற்றுக் கொண்டார் இதனால், பெரிதும் வருந்திய மூன்றும் நெப்போலியன் ரஷ்யாவைத் தோற்கடித்து அதற்கொரு படிப்பினையைக் கற்பிக்க விரும்பினர். ஃபிரெஞ்சு கத்தோலிக்கர்களும் தங்களது பேரரசரின் செயலைப் பெரிதும் வரவேற்றனர். பேரரசரின் கட்சியான போனபார்ட் கட்சியும் இப் போரைப் பெரிதும் வரவேற்றது. 1812-ல் நிகழ்ந்த முதலாம் நெப்போலியனின் ரஷ்யப் படையெடுப்பினை

அவர் இன்னும் மறக்கவில்லை. அதற்காக ரஷ்யாவை அவர்கள் பழிவாங்க விரும்பினர். ரஷ்யாவைத் தோற்கடித்து, தங்களது இழந்த புகழை மீண்டும் பெற அவர்கள் துடித்தனர். முதலாம் நெப்போலியனைப் போன்று பேரரசு ஒன்றை அமைக்க முயன்ற இந்தச் சிறிய நெப்போலியனும் ரஷ்யப் போரை விரும்பினர். புகழ் வேட்கைமிக்க இப் பேரரசர் இப் போரில் பங்கேற்றார். தமது புகழையும் இவர் இதன்மூலம் நிலைநாட்டிக்கொண்டார்.

இங்கிலாந்து, ஃபிரான்சு, இத்தாலி, துருக்கி ஆகிய நாடுகள் ஒன்றுகூடி, ரஷ்யாவை எதிர்த்தன. மால்டேவியா, வாலச்சியா போன்ற பகுதிகளை ரஷ்யாவிடமிருந்து மீட்கவே இப் போர் ஏற்பட்டது. இப் புகழ்மிக்க கிரிமியப் போரில் இங்கிலாந்தும் ஃபிரான்சும் ஒன்றிணைந்து போரிட்டுத் தங்களது நட்பைப் பறை சாற்றிக்கொண்டின. பல இன்னல்களுக்குப் பின்னர், இங்கிலாந்தும் ஃபிரான்சும் இப் போரில் வென்றன. ரஷ்யா இப்போரில் தனது செல்வாக்கினைப் பெரிதும் இழந்தது. ரஷ்யாவின் பிற்போக்குத் தன்மையும், திறமையின்மையும், இப் போரில் நன்கு வெளிப்பட்டன. 1856-ல் இப் போருக்குப் பின்னர், பாரிசு மாநாடு கூட்டப்பெற்றது. மூன்றாம் நெப்போலியன் இம் நாட்டிற்குத் தலைமையேற்றுப் பாரிஸ் உடன்பாடும் செய்து வைத்தார். அவரது புகழ் மிகுந்தது.

**கிரிமியப் போரின் விளைவுகள்**

மூன்றாம் நெப்போலியனுக்குப் புகழீட்டித் தந்த முதல் மாபெரும் போர் கிரிமியப் போராகும். கிரிமியப் போருக்குப் பின்னர். ஃபிரான்சு ஒரு மாபெரும் வல்லரசு என்பதை ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் ஏற்றன. 1812ல் ரஷ்யாவிடம் தோற்றுப் பின்னடைந்த ஃபிரான்சு, 1856ல் ரஷ்யாவை வென்று மீண்டும் முன்னுக்கு வந்தது. இப்போரில் வென்றதோடு மட்டுமல்லாது ஃபிரான்சு ஐரோப்பிய நாடுகளின் நடுவராகவும் திகழ்ந்தது. 4) ஆண்டுகளுக்குப் பின்னர், பாரிசு மீண்டும் தலைமை ஏற்றது. (2) இப்போரின் விளைவாக ஆங்கில-ஃபிரெஞ்சு உறவு வலுப்பட்டது. அவ்விரு நாடுகளும் ஒன்றுகூடிச் செயல்பட இது ஒரு வாய்ப்பினை நல்கியது. முன்னேற்றப் பாதையில் இவ்விரு நாடுகளும் இப் போரின் விளைவாகப் பீடுநடை போட்டன. தனித்து நின்ற ஃபிரான்சும் இப் போரினால் இங்கிலாந்தின் நல்ல நட்பினைப் பெற்றது. (3) மூன்றாம் நெப்போலியனின் செல்வாக்கு இப் போரினால் மிக உயர்ந்தது. கத்தோலிகர்கள் அவரைப் பெரிதும் போற்றினர். இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த நாடாக ஃபிரான்சு மாறியது. ஃபிரான்சின் இராணுவக் கருவிகளின் உற்பத்தியும்

பெருகிற்று. இதனால், தொழிலும், வணிகமும் பெருக வாய்ப்பேற்பட்டது. (4) இப் போரினால் ரஷ்யா தோல்வியுற்றுப் பின்னடைந்தது. அதன் புகழும் குன்றியது. இப் போரின்மூலம் பிற்போக்கணி தகர்த்தெறியப்பட்டது ரஷ்யாவின் திறமையின்மை இதனால், நன்கு வெளிப்பட்டது. (5) கிழக்குப் பிரசசினையிலும் இப் போர் மாபெரும் மாற்றத்திற்கு வழிவகுத்தது. ஐரோப்பாவின் நோயாளியான துருக்கி, இப்போரினால் மீண்டும் புத்துயிர் பெற்றது. இதனால், கிழக்குப் பிரச்சினையில் ஃபிரான்சின் செல்வாக்கு உயர்ந்தது. (6) மூன்றும் நெப்போலியன் இப்போரினால் எப்பகுதியினையும் பெறவில்லை. இவரது செல்வாக்கு மிகுந்ததேயன்றி அதனால் ஃபிரான்சுக்குப் பொருளாதாரத் துறையில் நன்மை ஏதும் ஏற்படவில்லை. பேரரசு என்றால், அமைதி என்ற மூன்றும் நெப்போலியனது கொள்கைக்கு இப்போர் முற்றுப்புள்ளி வைத்தது. இப் போர் மூன்றும் நெப்போலியனை ஒரு போர் வெறியராக்கியது. போரில் ஏற்பட்ட இவரது ஆர்வம் இறுதியில் இவரது வீழ்ச்சிக்கும் வழிவகுத்தது.

**இவரது இத்தாலியக் கொள்கை**

நெப்போலியனது இத்தாலியக் கொள்கை வரலாற்றுச் சிறப்பு மிக்கது. இவர் இத்தாலிமீது ஆர்வங் காட்டியதற்குப் பல காரணங்கள் உள்ளன. (1) மூன்றும் நெப்போலியனின் முன்னோர்கள் இத்தாலியர்கள். அவர்கள் இத்தாலியிலிருந்து கார்சிகாத் தீவுக்குக் குடியேறினர். கார்சிகாத் தீவை ஃபிரான்சு விலைக்கு வாங்கிய பின்னர், முதலாம் நெப்போலியனும் அவர்தம் உறவினர்களும் ஃபிரெஞ்சுக் குடிமக்களாயினர். மூன்றும் நெப்போலியனது உடலிலும் இத்தாலிய இரத்தமே ஓடியது. இத்தாலி என்ற சொல்லே அவரைப் பெரிதும் கவர்ந்தது. தம்முடைய மூதாதையர்களின் தாயக நலனில் இவர் அக்கறை காட்டியதில் வியப்பேதுமில்லை.

(2) பத்தொன்பதாம் நூற்றாண்டில் இவர் நாட்டுப்பற்றின் சின்னமாகத் திகழ்ந்தார். ஐரோப்பாவெங்குமிருந்த தேசியவாதிகள் இவரையே தங்களுடைய வழிகாட்டியாக ஏற்றுப் போற்றினர். ஏனெனில், 1789க்குப் பிறகு ஃபிரான்சே நாட்டுப்பற்றின் தாயமாகத் திகழ்ந்தது. வியன்னா மாநாட்டுக்குப் பின்னர், நலிவுற்ற அனைத்து நாடுகளும் இவரையே தங்கள் நலனைப் பேணவல்ல நல்ல மனிதரெனப் போற்றின. ஃபிரான்சின் தேசியவாதிகளும் இவரையே நாட்டுப்பற்றின் விடிவெள்ளியெனப் புகழ்ந்தனர். அவர்களை மகிழ்விக்க இவர் நாட்டுப்பற்றுக் காரணமாகப் போராடும் அனைத்து மக்களுக்கும் உதவ வேண்டி நேரிட்டது. குறிப்பாக

இவர் இத்தாலியை அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப் பெரிதும் விரும்பினர். ஆயினும், 1848 பிப்ரவரிப் புரட்சியின்போது, இத்தாலிக்கு உதவ இவரால் முடியவில்லை. மாஜினியும் பிறரும் போப்பாண்டவரை இத்தாலியிலிருந்து வெளியேற்றியதைப் பெரும்பாலான ஃபிரெஞ்சு மக்கள் விரும்பவில்லை. தனது தாயக மக்களின் விருப்பத்திற்கு மாருக இவராலும் செயல்பட முடியவில்லை. ஆயினும், ஆர்சினி (Orsini) என்ற இத்தாலியரின் வேண்டுகோள் இவரைப் பெரிதும் கவர்ந்தது. இவர் தனது தாயக விடுதலைக்கு உதவவில்லையே எனப் பெரிதும் ஏமாற்றமுற்ற ஆர்சினி, இவரைக் கொலை செய்ய முயற்சித்தபோது கைது செய்யப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டார். சிறையிலிருந்து அந் நாட்டுப்பற்றுளர் வரைந்த கடிதம் இவரைப் பெரிதும் ஈர்த்தது. தனது தாயகத்தைக் காக்குமாறு ஆர்சினி இவரை இறைஞ்சி வேண்டி நின்ருர். அக்கடிதத்தால், பெரிதும் கவரப்பட்ட இப் பேரரசர் இத்தாலிக்கு எவ்வாறேனும் உதவ முடிவு செய்தார்.

(3) தனது இரண்டாவது தாயகமான இத்தாலிக்கு இவர் துணைபுரியப் பிற காரணங்களும் இருந்தன. டெயிலர் (A. J. P. Taylor) என்பார் இத்தாலியில் தன்னுடைய நிலையை வலுப்படுத்திக் கொள்ளவே பெரிதும் விரும்பினர். அதன்பொருட்டே அந் நாட்டின்மீது ஆர்வம் காட்டினுரென்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். இத்தாலியைப் பொருத்தவரையில் வியன்னு மாநாட்டின் ஏற்பாடுகளைக் குலைத்து, அங்குத் தனது ஆதிக்கத்தினை நிறுவ இப் பேரரசர் பெரிதும் அவாக் கொண்டார். முதலாம் நெப்போலியனைப் போன்று அந் நாட்டினை வென்று அங்குத் தமது வெண்கொற்றக் கொடியினைப் பறக்கவிடத் திட்டமிட்டார். இவர் இத்தாலியை மைய ஐரோப்பாவின் புறக்கடை வழி (It was the backdoor into Central Europe) ஐரோப்பாவை வெல்ல நினைப்போர் இத்தாலியை வெல்ல வேண்டும். அதற்கு முன்வழியைக் காட்டிலும் பின்வழியே (backdoor) சாலச் சிறந்தது என இவர் கருதினர். உள்நாட்டிலும் இவருக்கு எதிர்ப்பு மிகுந்தது. அதனைத் திசை திருப்பவும் இவர் விரும்பி இப் போரில் ஈடுபட்டார்.

(4) இத்தாலியை வென்று அதன்மூலம் இழப்பீடு பெறவும் இவர் விரும்பினர். இதுவும் இவர் இத்தாலியில தலையிட மற்றுமொரு காரணமாகும்.

**பிளாம்பியர்ஸ் உடன்பாடு**

19ஆம் நூற்றாண்டில் பிஸ்மார்க்குடன் ஒப்பிடக்கூடிய ஒரே அரசியல் வல்லுநரான கவூர், தமது தாயகமான இத்தாலியை

எவ்வாறேனும் ஒன்றுபடுத்த வேண்டுமெனத் துணிந்தார். அதன் பொருட்டு, கிரிமியப் போரிலும் பங்கேற்று மூன்றும் நெப்போலியனின் நட்பையும் ஆதரவையும் பெற்றார். பாரிசு மாநாட்டிலும் கவூர் கலந்துகொண்டு தமது தாயகப் பிரச்சினைகளைப் பிற ஐரோப்பிய நாடுகளுக்கும் விளக்கினார். இதனால், பல ஐரோப்பிய நாடுகள் இத்தாலிமீது மிக்க பரிவு காட்டின. குறிப்பாக, மூன்றும் நெப்போலியன் இத்தாலிமீது மிக்க அனுதாபம் காட்டினார். அவரது அன்பையும் ஆதரவையும் பெற்ற கவூர் அதனை நன்கு பயன்படுத்திக்கொள்ளத் தவறினாரில்லை. 1858ல் கவூர், மூன்றும் நெப்போலியனைப் பிளாம்பியர்ஸ் என்ற இடத்தில் மீண்டும் சந்தித்தார். அதன் விளைவாக அவ்விருவரும் இரகசிய உடன்பாடொன்றுக்கு வந்தனர்.

(1) ஆஸ்திரியாவுக்கும் சார்டினியாவுக்குமிடையே போர் ஏற்பட்டால், ஃபிரான்சு சார்டினியாவை ஆதரிக்கும். ஆனால், சார்டினியா ஆஸ்திரிய ஆக்கிரமிப்பில் ஈடுபட்டுள்ளது எனப் பிற நாடுகள் நம்புமாறு செய்யவேண்டும்.

(2) இத்தாலியில் போப்பாண்டவரின் தலைமையிலான கூட்டரசொன்று அமையும். அதில் கீழ்க்காணும் பகுதிகள் அமையும்.

(i) சார்டினியா-பீட்மாண்ட், லொம்பார்டி, வெனிஷியா, பார்மா, மொடனா இவற்றைக் கொண்ட ஒரு வட இத்தாலிய அரசு இரண்டாம் விக்டர் இமானுவேல் தலைமையில் அமையும்.

(ii) டஸ்கனியும், போப்பரசும் கொண்ட மைய அரசு ஒன்று அமையும்.

(iii) ரோம் போப்பாண்டவரின் நேரடியாட்சியில் இருக்கும்.

(iv) நேப்பிள்சும் சிசிலியும் பழைய முறையிலேயே இயங்கும்.

(3) இதற்கு இழப்பீடாக ஃபிரான்சு செவாய், நீஸ் பகுதிகளைப் பெறும்.

(4) ஃபிரெஞ்சு இளவரசர் ஜெரோம் நெப்போலியனுக்கும் குளோதில்டா இளவரசிக்குமிடையே (இரண்டாம் விக்டர் இமானுவேலின் மகன்) திருமணம் செய்யப்பெறும். இதுவே அவர்களிடையேற்பட்ட இரகசிய உடன்பாடாகும். இதனை மூன்றும் நெப்போலியன் தம்முடைய அமைச்சர்களுக்குக்கூட, கூறவில்லை. இவ்வுடன்பாட்டின் மூலம் தமது ஆதிக்கத்தை இத்தாலிமீது நிறுவ இவர் உறுதி பூண்டார்.

மூன்றும் நெப்போலியனது வாக்குறுதியைப் பெற்ற கவூர், இராணுவ ஏற்பாடுகளில் இறங்கினர், மாபெரும் படையொன்று விரைவில் தயாரானது. ஆஸ்திரிய ஆதிக்கத்தினை எதிர்த்து நாடெங்கும் இராணுவ அணிவகுப்புகள் நிகழ்ந்தன. இதனால், ஆத்திரமுற்ற ஆஸ்திரியா, படையைக் கலைக்குமாறு பீட்மாண்டை எச்சரித்தது. அதன் எச்சரிக்கையைக் கவூர் புறக்கணித்தார். கவூர் எதிர்பார்த்தபடி ஆஸ்திரியாவும் பீட்மாண்ட் மீது போர்தொடுத்தது, மூன்றும் நெப்போலியனும் வாக்களித்தபடி பெரும் ஃபிரெஞ்சுப் படையொன்றைப் பீட்மாண்டிற்கு உதவுமாறு அனுப்பினர், ஃபிரெஞ்சு-பீட்மாண்ட் படைகள் ஆஸ்திரியாவை எதிர்த்துக் கடுமையாகப் போரிட்டன. அப் படைகள் ஆஸ்திரியாவை மெகின்டா, சொல் பெரினே போன்ற இடங்களில் தோற்கடித்தன. லொம்பார்டி முழுவதையும் ஃபிரெஞ்சு பீட்மாண்ட் படைகள் கைப்பற்றின. இவ்வளவு விரைவில் ஃபிரெஞ்சு-பீட்மாண்ட் படைகள் ஒரு மாபெரும் வல்லரசுப் படையான ஆஸ்திரியப் படையை முறியடிக்குமென ஐரோப்பா எதிர்பார்க்கவில்லை. மூன்றும் நெப்போலியன் இவ்வெற்றியால் பெரிதும் அதிர்ச்சியுற்றார். தமது தலையீட்டால் போப்பாண்டவரின் ஆதிக்கம் மிகும் என எதிர்பார்த்த இப் பேரரசர், அதனால் போப்பாண்டவரின் ஆதிக்கம் குன்றுமென்பதை நன்குணர்ந்தார். ஃபிரெஞ்சுக் கத்தோலிகப் பெருமக்கள் இவரது கொள்கையை எள்ளி நகையாடத் தொடங்கினர், அவர்கள் போப்பாண்டவரின் நிலைக்குப் பெரிதும் இரங்கினர், மக்கள் ஆதரவு குறைவெனக் கண்ட மூன்றும் நெப்போலியன் உளமுடைந்துபோனர். இதற்கிடையில் பிரஷ்யாவும் தனது படைகளை ரைன் பகுதிகளிற் குவித்தது பிரஷ்யாவும், ஆஸ்திரியாவும் தன்னை எதிர்க்குமோவென மருண்டார் இப் பேரரசர். மருட்சியும், அச்சமும் மிக்க ஃபிரெஞ்சுப் பேரரசர், போரை நிறுத்துமாறு தமது படைகளுக்கு ஆணையிட்டார்.

**வில்லா பிராங்கா உடன்பாடு (1859)**

போர் நிறுத்தத்திற்குப் பின்னர், மூன்றும் நெப்போலியன் ஆஸ்திரியப் பேரரசரான ஃபிரான்சிஸ் ஜோசப்பை வில்லா பிராங்கா என்ற இடத்தில் சந்தித்தார். பீட்மாண்டினைக் கலந்து ஆலோசிக்காமலேயே இவர் ஆஸ்திரியாவுடன் வில்லா பிராங்கா உடன்பாட்டினைச் செய்துகொண்டார். அவ்வுடன் பாட்டின்படி :

(i) லொம்பார்டி பீட்மாண்டுடன் இணைக்கப்பெறும்.

(ii) வெனிஷியா ஆஸ்திரியா வசமேயிருக்கும்.

(iii) தேசிய இபக்கங்கள் காரணமாகப் பதவியிழந்த இளவரசர்கள் அனைவரும் மீண்டும் பதவியில் அமர்த்தப் பெறுவர்.

(iv) போப்பாண்டவர் இத்தாலியக் கூட்டரசின் தலைவரா யிருப்பார்.

இவ்வுடன்பாட்டிற்குப் பின்னர், ஃபிரெஞ்சுப் படைகள் போரிலிருந்து விலகிக் கொண்டன. இவ்வுடன்பாடு இத்தாலிக்குப் பெரும் ஏமாற்றத்தினைத் தந்தது. அவர்கள் இதனைத் துரோகமெனத் தூற்றினர். இத்தாலியும் போரிலிருந்து விலகிக் கொண்டது. இரண்டாம் விக்டர் இமானுவேலும் இதனால், பெரிதும் வருந்தி, அவ்வுடன்பாட்டிற்கும் உடன்பட்டார். கவூர் போரைத் தொடர்ந்து நடத்த விழைந்தார். அரசர் அவரது வேண்டுகோளை ஏற்க மறுத்ததால். அவர் மனமுடைந்து பதவி துறந்தார். இரண்டாம் விக்டர் இமானுவேல் ஆஸ்திரியாவுடன் சூரிச் (Zurich) உடன்பாடு செய்துகொண்டு லொம்பார்டியைப் பீட்மாண்டுடன் இணைத்துக் கொண்டார். மூன்றும் நெப்போலியன், இதனால் தமது செல்வாக்கினை மிகுதியும் இழந்தார்.

**மூன்றும் நெப்போலியனும் இத்தாலி ஐக்கியமும்**

மைய இத்தாலிய அரசுகள் (Central Duchies) வில்லா பிராங்கா உடன்பாட்டினை ஏற்க மறுத்தன. அவை தங்களது முந்திய அரசர்களை ஏற்க மறுத்ததோடு, தங்களுக்குச் சுய நிர்ணய உரிமை (The right of self-determination) வேண்டு மெனவும் போராடின. இங்கிலாந்தும் அவற்றை ஆதரித்தது, வேறு வழியின்றி அவர்களது முடிவை அறிய வாக்கெடுப்பிற்குப் பேரரசர் மூன்றும் நெப்போலியனும் இசைவு தெரிவித்தார். டஸ்கனி, ரோமக்னு, பார்மா, மொடனு போன்ற பகுதிகள் வாக்கெடுப்பில் பீட்மாண்டுடன் இணைய இசைவு தெரிவித்தன. மக்களது விருப்பத்தை உணர்ந்த மூன்றும் நெப்போலியனும் அவை பீட்மாண்டுடன் இணைவதை ஏற்றுக்கொண்டார். அதற்கு இழப்பீடாக இவர் 1860ல் ஏற்பட்ட டூரின் உடன்பாட்டின்படி செவாய், நீஸ் பகுதிகளைப் பெற்றுக்கொண்டார். வில்லா பிராங்கா உடன்பாடும் புறக்கணிக்கப்பட்டது. பல பகுதிகள் பீட்மாண்டுடன் இணைந்தன. இத்தாலி ஐக்கியமும் தொடங்கி விட்டது.

**1859** இத்தாலிய-ஆஸ்திரியப் போருக்குப் பின்னர், நீஸ், செவாய் பகுதிகளில் பூர்போன் அரசு நிறுவப்பட்டது. டஸ்கனி, மொடனு போன்ற இத்தாலிய அரசுகள் பீட்மாண்டுடன்

இணைந்ததைக் கண்டு விழிப்புற்ற நீஸ், செவாய் பகுதிகளும் ஃபிரெஞ்சாட்சியினை எதிர்த்தன. அவை தங்களை விடுவிக்குமாறு கரிபால்டியை வேண்டின. அவற்றின் அழைப்பினை ஏற்றுக் கொண்டு தாயகம் திரும்பிய கரிபால்டியும் அவற்றைப் பூர்போன் அரசர்களிடமிருந்து எளிதாகக் கைப்பற்றினர். அவையும் பீட்மாண்டுடன் இணைய விரும்பியபோது மூன்றும் நெப்போலியன் அதனையும் ஏற்க வேண்டியதானது. 1860-இல் நீஸ், செவாய் பகுதிகளும் பீட்மாண்டுடன் இணைந்தன. வெனிஷியாவும், ரோமும் மட்டும் இத்தாலியுடன் இணையவேண்டிய நிலையிலிருந்தன. அவையும் இணையும் காலம் அண்மையிலேயே இருந்தது. 1866-ல் ஆஸ்திரிய-பிரஷ்யப் போரில், இத்தாலி பிரஷ்யாவை ஆதரித்தது. பிரஷ்யாவும் வெற்றி பெற மூன்றும் நெப்போலியனும் தமது செல்வாக்கினைப் பயன்படுத்தி வெனிஷியாவை இத்தாலி பெறுவதற்குப் பெரிதும் துணை நின்றார். ரோம் மட்டுமே இன்னும் இத்தாலியுடன் இணையவேண்டிய நிலையிலிருந்தது. 1870-இல் ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போரின் (The Franco-Prussian War, 1870) விளைவாக இத்தாலி பெரிதும் பயனடைந்தது. அது போழ்து, போப்பாண்டவரது நிலையில் எத்தகைய மாறுதலும் ஏற்படாது என்ற வாக்குறுதியை இரண்டாம் விக்டர் இமானுவேலிடமிருந்து இவர் பெற்ற பின்னர், 1848-லிருந்து போப்பாண்டவருக்குக் காவலாக நிறுத்தப்பட்டிருந்த ஃபிரெஞ்சுப் படையைத் திரும்ப அழைத்துக் கொண்டார். 1870-ல் ஏற்பட்ட ஃபிரெஞ்சு பிரஷ்யப் போரில் மூன்றும் நெப்போலியன் தோற்கடிக்கப்பட்டார். ரோமும் இத்தாலி ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இத்தாலியும் ஐக்கியமுற்றது. நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ இவர் இத்தாலி ஐக்கியத்திற்குப் பெரிதும் துணை நின்றார் என்பதை யாராலும், மறுக்க இயலாது.

**அவரது இத்தாலியக் கொள்கையின் விளைவுகள்**

1859 ஆஸ்திரிய-இத்தாலியப் போருக்குப் பின்னர், மூன்றும் நெப்போலியனின் கொள்கையில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. (1) இத்தாலியைப் பொருத்தமட்டில் அவர் நிலையான ஒரே கொள்கையினைப் பின்பற்றவில்லை. அவர் இத்தாலிமீது ஆழ்ந்த அனுதாபம் கொண்டிருந்தது மெய்யே ஆயினும், முறையாகத் தொடர்ந்து அவர் இத்தாலிக்கு உதவவில்லை. போப்பாண்டவரின் தலைமையில் கூட்டரசொன்றினை அமைப்பதாகப் பிளாம்பியர்ஸ் உடன்பாட்டில் அவர் உறுதியளித்தார். ஆயினும், 1859-ல் ஏற்பட்ட வில்லா பிராங்கா உடன்பாட்டில் அதனை முற்றிலும் புறக்கணித்துவிட்டார். இதனால், அவர் இத்தாலி

யர்களின் கண்டனத்திற்காளானார். இத்தாலியர்களின் அன்பையும் ஆதரவையும் இவர் முற்றிலுமிழந்தார். (2) ஃபிரான்சிலும் இதன் விளைவாக, மூன்றும் நெபபோலியனுக்கு எதிர்ப்பு மிகுந்தது. இவரது இத்தாலியக் கொள்கையை ஃபிரெஞ்சுக் கத்தோலிகர்கள் பெரிதும் எதிர்த்தனர். போப்பாண்டவரும் அவரது இத்தாலியக் கொள்கையைக் கண்டித்தார். இதனால், பெருவாரியான கத்தோலிகர்கள் இவரைப் பெரிதும் தூற்றினர். ஃபிரெஞ்சு தேசியவாதிகளும் இவாது முறையற்ற வெளிநாட்டுக் கொள்கையைக் கண்டித்தனர். 1859-ல் இவர் இத்தாலியர்களைக் கைவிட்டுவிட்டு, ஆஸ்திரியாவுடன் உடன்பாடு செய்துகொண்டதை அவர்கள் வன்மையாக எதிர்த்தனர். இதனால், அவரது செல்வாக்குப் பெரிதும் குன்றியது. (3) செவாய், நீஸ் பகுதிகளை இவர் இழப்பீடாகப் பெற்றது மாபெரும் தவறாகும். இதனை இவரது வரலாற்றில் ஒரு திருப்புமுனை யென்பதும் தகும். ஐரோப்பா வெங்கும் இவரை ஆதரித்து நின்ற முற்போக்காளர்களும் இவரது இந்த இழிசெயலால் தலைகுனிந்து நின்றனர். இவரது புகழ் என்ற ஆதவன் மறையத் தொடங்கினான். (4) இங்கிலாந்தும் இவரது கொள்கையைப் பெரிதும் கண்டித்தது. இத்தாலிய இணைப்பையும் நாட்டுப் பற்றையும் பெரிதும் ஆதரித்த இங்கிலாந்து, இவரது முன்னுக்குப்பின் முரணான கொள்கைகளால் பெரிதும் ஆத்திர முற்றது. நீஸ், செவாய்ப் பகுதிகளை இவர் இழப்பீடாகப் பெற்றதை இங்கிலாந்து கண்டித்தது. இவ்விழப்பீட்டால், இவர் இத்தாலியில் தனது ஆதிக்கத்தை நிறுவ முயல்கிறார் என இங்கிலாந்து ஐயமுற்றது. அதன் விளைவாக, இங்கிலாந்து அவருடனான நட்பை முற்றிலும் முறித்துக்கொண்டது. (5) இத்தாலியக் கொள்கையால் தமது செல்வாக்கினை இழந்த இவர் அதனை மீண்டும் பெற, பெரிதும் விழைந்தார். அதற்காக அவர் ஜெர்மனி, மெக்ஸிகோ போன்ற நாடுகளில் தீவிரமாகத் தலையிட்டார். அதன் விளைவாக, இவர் வீழ்ச்சியுமுற்றார். (6) உள்நாட்டிலும் இவருக்கு எதிர்ப்பு மிகுந்தது. அதன் விளைவாக இவர் உள்நாட்டில் தமது அடக்குமுறையைத் தளர்த்த வேண்டி நேரிட்டது. இவரும் முற்போக்குக் கொள்கைகளை ஏற்று, அவற்றின்படி ஆட்சிபுரியும் கட்டாயம் ஏற்பட்டது. இவரது பேரரசும் முற்போக்குப் பேரரசு என அழைக்கப்பெற்றது. பாராளுமன்றத்திற்கும் பல உரிமைகள் வழங்கப்பட்டன. தணிக்கை முறை தளர்த்தப்பட்டது. ஓரளவு பேச்சுரிமையும் நல்கப்பட்டது. சீர்திருத்தங்கள் பலவும் புகுத்தப்பட்டன. தொடக்கக் கல்வியும் கட்டாயமாக்கப்பட்டது. தொழிலாளர் நலனைப் பேணும் பல சட்டங்களும் கொண்டுவரப்பட்டன. இவர் தமது பேரரசைத் தொழிலாளர் பேரரசெனவும் அழைத்துக்

கொண்டார். அரசியலமைப்பும் மாற்றப்பட்டு மக்களுக்கு உரிமைகள் பல வழங்கப்பட்டன. இங்கு யாவும் 1860-க்குப் பின்னர் நிகழ்ந்த மாற்றங்களாகும், அவற்றை, இத்தாலியக் கொள்கையால் ஏற்பட்ட நன்மைகள் என்றாலும் மிகையாகாது.

**ருமேனியா**

ஆஸ்திரிய-இத்தாலியப் போருக்குப் பின்னர், (1859), உள்நாட்டில் மூன்றாம் நெப்போலியனுக்கு எதிர்ப்பு மிகுந்தது, இவரது ஏழு ஆண்டுகள் பேரரசு ஆட்சியில் மக்கள் நம்பிக்கையிழக்கத் தொடங்கினர். இவரது அடக்குமுறைகளுக்கு எதிர்ப்பு மிகுந்தது. இவரது இத்தாலியக் கொள்கையும் இவரது சிறப்பு குன்றுவதற்குக் காரணமானது. இவரது நெப்போலியப் புராணம் (The Nepoleonic Legend) ஒரு கட்டுக்கதை என்பதை மக்கள் உணரத் தொடங்கினர். ஆகவே, தனக்கு வளர்ந்து வரும் எதிர்ப்பைச் சமாளிப்பது இவரது கடமையானது. அதன் பொருட்டு, இவரது வெளிநாட்டுக் கொள்கைகளில் முற்போக்குக் கொள்கைகளை இவர் ஆதரிக்கத் துணிந்தார். 1860-க்குப் பின்னர், கத்தோலிகர்களினும், முற்போக்காளர்களே நாட்டில் ஆதிக்கம் மிகுந்து விளங்குகிறார்களென்பதையும் உணர்ந்தார். அவர்கள் ஆதரவை வேண்டுவதும் கூடாதென இவர் தெளிந்தார். ருமேனியா போலந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில் கிளர்ச்சிகள் தோன்றிய போது அவற்றை முன்னின்று இவர் ஊக்குவித்தார்.

ருமேனியா விடுதலைப் போராட்டத்தினைத் தொடங்கிய போது, இவர் அதனைப் பெரிதும் ஆதரித்தார். இதனால், ஐரோப்பிய அரங்கில் இவர் மீண்டும் செல்வாக்கு பெற முனைந்தார். லத்தீன் மொழியினைச் சார்ந்த ருமேனிய மொழியினை மால்டேவியா, வாலச்சியா, பெசரேபியா போன்ற பகுதிகளில் வாழ்ந்த மக்கள் பேசி வந்தனர். மால்டேவியாவும், வாலச்சியாவும் துருக்கியினது ஆதிக்கத்தின் கீழிருந்தன. டிரேசில்வேனியா ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தின் கீழிருந்தது. பெசரேபியா ரஷ்ய ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. இப் பகுதிகளிலும் நாட்டுப்பற்று மிகுந்தது. நாட்டுப்பற்று, மொழிப்பற்று காரணமாக, ருமேனிய மொழியைப் பேசிய அனைத்து மக்களும் ஒன்றிணைய முயன்றனர். 1856-இல் கூடிய பாரிசு மாநாடு மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளுக்குச் சுயாட்சியினை வழங்கியது. அவை சுயாட்சி பெறப் பெரிதும் துணை நின்றவர் மூன்றாம் நெப்போலியனாவார். அத்துடன் ரஷ்யாவிடமிருந்து பெசரேபியாவின் ஒரு பகுதியினையும் பெற்று, அதனை மால்டேவியாவுக்கு வழங்கினர். அவை துருக்கிய ஆதிக்கத்தின் கீழ்

இயங்க வேண்டுமெனவும் முடிவாயிற்று. சுயாட்சி பெற்ற அம்மக்கள் பாராளுமன்ற முறையிலும் நாட்டம் செலுத்தினர். மூன்றும் நெப்போலியனும் அப் பகுதிகளுக்குப் பாராளுமன்ற ஆட்சியினை நல்குமாறு வல்லரசுகளையும் வேண்டினர். அவரது வேண்டுகோளின்படி அவற்றிற்குப் பாராளுமன்ற ஆட்சியும் வழங்கப்பட்டது. அப்பகுதிகள் தங்களுக்கு வேண்டும் அரசரையும் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் என வல்லரசுகள் அறிவித்தன. அப் பகுதிகள் அலெக்ஸாந்தர் குஸா (Alexander Cuza) என்பாரையே தங்களது அரசராகத் தேர்ந்தெடுத்தன. மூன்றும் நெப்போலியனும் அப் பகுதிகள் ருமேனியா என்ற பெயரில் இணைவதை ஆதரித்தார். பிற வல்லரசுகளும் அதனை ஏற்குமாறு இவர் வேண்டினர். இவரது முயற்சியால் 1861-ல் ருமேனியா என்ற நாடு உருவானது. ருமேனியா அவருக்குப் பெரிதும் கட்டுப்பட்ட நாடானது.

**போலந்து**

ஐரோப்பிய வரலாற்றில் அவப்பேற்றின் சின்னமாகத் திகழ்ந்த ஒரு நாடுதான் போலந்தாகும். அந் நாட்டினது புவியியலமைப்பும், அரசியலமைப்புமே அந் நாட்டின் துன்பத்திற்குக் காரணமாகும். வல்லரசுகளுக்கிடையே அமைந்த சிறு நாடு என்ற காரணத்தால், அது வல்லரசுகளின் ஆதிக்கப் போருக்கு இரையானது. அந் நாட்டின் அரசியலமைப்பு இந் நாட்டின் ஒற்றுமைக்கு மாருக, வேற்றுமையை வளர்த்தது. அந் நாட்டு அரசியலமைப்புப்படி அந் நாட்டரசர் தேர்ந்தெடுக்கப் படுவார். ஒவ்வொரு தேர்வின்போதும் பூசல் மிகுந்ததால், அவர்களிடையே ஒற்றுமை குலைந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட அரசரை விரும்பா அந் நாட்டு உயர் குடியினர், வல்லரசுகளைப் பலமுறை தங்களது நாட்டின்மீது படையெடுத்து வருமாறு வேண்டினர். அதனல், அந் நாடு அந்நிய ஆதிக்கத்தின் வேட்டை நிலமானது. ஆஸ்திரியாவும், ரஷ்யாவுமே இதனைப் பலமுறை துண்டாடின. வியன்னு மாநாடு இதனை நான்காவது முறையாகத் துண்டாடியது.

வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளால், இந் நாடு பெரிதும் ஏமாற்றமுற்றது. இந்நிய ஆதிக்கத்தின் கீழ் வந்த அந் நாடு அதிலிருந்து விடுபட விரும்பியது. ரஷ்யாவின் ஆதிக்கத்தினை எதிர்த்து, இம் மக்களும் புரட்சிக் கொடியேந்தினர். மூன்றும் நெப்போலியனைத் தங்களுக்குத் துணைபுரியுமாறும் இம் மக்கள் வேண்டினர் போலந்து மக்களும் கத்தோலிகர்களென்ற முறையில் ஃபிரெஞ்சு மக்களும் அவர்களை ஆதரித்தனர். ஆயினும்,

மூன்றும் நெப்போலியன் போலந்துக்கு நேரடியாக உதவத் தயங்கினர். முதலாம் நெப்போலியன் போன்று இவரும் வார்சா அரசொன்றினை (The K ngdom of Warsaw) அங்கு நிறுவ விரும்பினும், அச்சம் காரணமாக, அதைச் செய்ய இவர் பெரிதும் தயங்கினர். போலந்து, ரஷ்யாவின் ஆதிக்கத்திலிருந்த காரணத்தால். இவர் அதில் தலையிடப் பெரிதும் அஞ்சினர். ரஷ்யாவை, ஆஸ்திரியாவும், பிரஷ்யாவும் ஆதரித்தன. அவற்றை எதிர்த்து, போலந்து மக்களுக்கு ஆதரவு நல்க இவர் துணியவில்லை. ஆயினும், தம்முடைய மக்களை மகிழ்விக்கும்பொருட்டு, ரஷ்ய மன்னருக்குத் தமது எதிர்ப்பினைத் தெரிவித்தார் இப் பேரரசர். இதனால், வெகுண்ட ரஷ்யப் பேரரசர், தமது அடக்குமுறையை அங்கு மேலும் தீவிரப்படுத்தினர். போலந்து மக்கள் ஒடுக்கப் பட்டனர். அவர்களது புரட்சியும் ஓய்ந்தது.

**போலந்துப் புரட்சியின் விளைவுகள்**

போலந்துப் புரட்சியின் விளைவாகப் பேரரசர் மூன்றும் நெப்போலியன் தமது செல்வாக்கினைப் பெரிதும் இழந்தார். (1) அவர்தம் தாயக மக்கள் அவரது கோழைத்தனத்தை எள்ளி நகையாடினர். உள்நாட்டில் அவரது செல்வாக்கு குறைந்தது. (2) போலந்து மக்கள் இவரது கொள்கையால் பெரும் துன்பத்திற் குள்ளாயினர். அவர்கள் தீவிரமாக ஒடுக்கப்பட்டனர். (3) ரஷ்யாவும் இவரது கொள்கையை எதிர்த்தது. ரஷ்ய உள்நாட்டுத் துறையில் தலையிட்டார் என இவர் பழித்துரைக்கப்பெற்றார். வியன்ன மாநாட்டு ஏற்பாடுகளுக்கேற்ப இவர் ஒழுகவில்லை என ரஷ்யா இவரை இடித்துரைத்தது. ரஷ்யாவின் நட்பை முற்றிலும் இழந்தார் மூன்றும் நெப்போலியன். (4) இவர் ஆஸ்திரியாவையும், ரஷ்யாவையும் பகைத்துக்கொண்டது இவர்தம் பகைவர் பிஸ்மார்க்குக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போன்ற தானது. இவர் அனைத்து நாடுகளின் பகைவராக, பிஸ்மார்க் அனைத்து நாடுகளின் நண்பரானர். போலந்துப் புரட்சிக்குப்பின் இவர் ரஷ்யாவின் நட்பை இழந்ததால், பிஸ்மார்க் அங்கு மிகச் செல்வாக்கு பெற முடிந்தது. தொலைநோக்கும், அரசியலறிவு மற்ற இவர் தனித்து நிறுத்தப்பெற்றார். முடிவில் அனைத்து நாடுகளின் நட்பையிழந்து தோல்வியுற்றார் இப் பேரரசர்.

**இவரது மெக்ஸிகோ கொள்கை**

1860-க்குப் பின்னர், மூன்றும் நெப்போலியனுக்குப் பல வகையிலும் எதிர்ப்பு மிகுந்தது. அவருக்கு உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பகைமை மிகுந்தது. அவர்களைக் கவர ஏதேனும் ஒன்றில் சிறப்பாக ஈடுபட வேண்டுமென இவர் விரும்பின

மெக்ஸிகோவில் நிலவிய அரசியல் குழப்பம் அவருக்கு நல்லதொரு வாய்ப்பினை நல்கியது. அங்குக் குடியேற்றப் பேரரசு ஒன்றினை நிறுவி, தம்முடைய நாட்டு மக்கள மனத்தை மகிழ்விக்க விரும்பினர் இவர்.

**அத் தலையீட்டுக்குரிய காரணங்கள்**

(1) மெக்ஸிகோவில் சமயப் பூசல்கள் மிகுந்து காணப் பட்டன. அக் குழப்பம் காரணமாக, நிகழ்ந்த உள்நாட்டுப் பூசலில் பெனிட்டோ ஜ்வரேஜ் என்பார் குடியரசொன்றினை அங்கு நிறுவினர். அவர் நிறுவிய குடியரசினைக் கத்தோலிகத் திருச்சபைகள் ஏற்றுக்கொள்ள மறுத்தன. ஆதலின், அவற்றின் சொத்துகளைப் பறிமுதல் செய்ய, குடியரசு முடிவு செய்தது. கத்தோலிக சமயத் தலைவர்கள்மீதும் அக் குடியரசு கடும் நடவடிக்கைகளை யெடுத்தது. மூன்றும் நெப்போலியன் அங்குள்ள கத்தோலிகர்களை ஆதரிப்பதன்மூலம், ஃபிரெஞ்சுக் கத்தோ லிகர்களது ஆதரவைப் பெற முடியுமென நம்பினர்.

(2) ஃபிரெஞ்சு முற்போக்கினர் இவரது முதுகெலும்பற்ற வெளிநாட்டுக் கொள்கைகளைப் பெரிதும் எதிர்த்தனர். இவரது அரசுமீது அவர்கள் வசைமாரி பொழியத் தொடங்கினர். அடக்குமுறை அரசு, திறமையற்ற அரசு, ஊழலரசு என இவரது அரசை அவர்கள் அழைத்தனர். அவர்களைக் கவரும் பொருட்டு, இவர் மெக்ஸிகோவில் தமது பேரரசொன்றினை அமைக்கும் திட்டத்தினை வெளியிட்டார். முதலாம் நெப்போலியன் லூசியானுவை அமெரிக்காவுக்கு விற்றது மாபெரும் தவறு என்பது இவரது கருத்தாகும். அமெரிக்காவில் ஃபிரெஞ்சுக் குடியேற்றமொன்றினை அவர் நிறுவாதது பெரும் தவறு என்பதை இவர் தெளிவுபடுத்தினர். அதற்கீடாக, இவர் மெக்ஸிகோவில் ஒரு மாபெரும் ஃபிரெஞ்சுக் குடியேற்றத்தை நிறுவி, அதன்மூலம் ஃபிரெஞ்சு வணிகத்தைப் பெருக்க விரும்பினர்.

மெக்ஸிகோவில் அழகிய நகரொன்றினையும் நிறுவி, அதன் மூலம் அழியாப் புகழைத் தேடிக்கொள்ள விரும்பினர் ஃபிரெஞ்சுப் பேரரசர். வட அமெரிக்கா, ஆங்கிலோ-சேர்ஸன் இன நாகரிகத்திற்கெதிராக லத்தீன் நாகரிகத்தினை இங்குப் புகுத்த விரும்பினர். இத் திட்டம் பலரையும் கவர்ந்தது.

(3) இதற்கு அரசியல், பொருளாதாரக் காரணங்களும் இருந்தன. அங்குத் தமது அரசியல் செல்வாக்கினை நிலைநாட்ட விரும்பினர் இவர். மேலும், இதனுல் ஃபிரெஞ்சு வணிகமும்

ஊக்கம் பெறுமென இவர் நம்பினர். ஃபிரெஞ்சு வணிகர்கள், அறிஞர்கள், பொறியாளர்கள், அனைவரும் இக் குடியேற்றத்தின் மூலம் வேலைவாய்ப்பினைப் பெறுவர். இதனல், வேலையில்லாத் திண்டாட்டமும் நீங்கும் என இவர் திட்டமிட்டார். ஃபிரெஞ்சு வணிகமும் நாகரிகமும் அங்கு வளர்ந்து, தமது நினைவுச் சின்னங்களாக அங்குத் திகழுமென அவர் நம்பினர். இக் கனவினை நனவாக்க மெக்ஸிகோவில் தலையிட்டார்.

(4) மெக்ஸிகோ அரசு ஃபிரான்சு ஸ்பெயின், இங்கிலாந்து போன்ற நாடுகளுக்குக் கடன்பட்டிருந்தது. 1861-இல் மெக்ஸிகோவில் அமைந்த குடியரசு, அக் கடனைத் திருப்பிக் கொடுக்க மறுத்தது. அதனல், ஃபிரான்சு, ஸ்பெயின், இங்கிலாந்து, ஆகிய நாடுகள் மெக்ஸிகோமீது நடவடிக்கை யெடுக்க முடிவு செய்தன.

**லண்டன் உடன்பாடு, (1861)**

மெக்ஸிகோவில் வாழும் ஐரோப்பியக் குடிமக்களுக்குப் பாதுகாப்பு தரவும், தாங்கள் கொடுத்த கடனைத் திரும்பப் பெறவும், இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின் ஆகிய மூன்று நாடுகளும் 1861-ல் லண்டனில் கூடி, ஓர் உடன்பாடு செய்து கொண்டன. அவ்வுடன்பாட்டின்படி இம் மூன்று நாடுகளும் தங்களது கடனைப் பெறும்பொருட்டு, தங்களது கூட்டுப் படையொன்றினை மெக்ஸிகோமீது அனுப்ப முடிவு செய்தன. அக் கூட்டுப் படைகளும் மெக்ஸிகோவுக்கு வந்து அந் நாட்டின் சுங்கச் சாவடிகளைக் கைப்பற்றின. வட அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் நடந்துகொண்டிருந்த காரணத்தால், வட அமெரிக்காவும் இதுபற்றிக் கவலைப்பட முடியவில்லை. கூட்டணிப் படைகளும் அந் நாட்டைக் கவர்வது தங்கள் நோக்கமல்ல எனவும், தாங்கள் கொடுத்த கடனைப் பெறுவதே தங்கள் நோக்கமெனவும் அறிவித்தன.

மெக்ஸிகோ தலைவர் ஜ்வரேஜ் என்பாரும் தமது அரசு பெற்ற கடனைத் திருப்பித் தந்துவிடுவதாக வாக்களித்தார். மூன்றும் நெப்போலியன் அவரிடம் உடன்பாடு செய்துகொள்ள மறுத்து விட்டார். தான் ஒரு குடியரசுத் தலைவரிடம் பேச்சு வார்த்தை நடத்த இயலாதெனவும் ஒரு முடியரசரிடம்தான் பேச்சு வார்த்தை நடத்த முடியுமெனவும் இவர் அறிவித்தார். இங்கிலாந்தும், ஸ்பெயினும் மூன்றும் நெப்போலியனின் உள்நோக்கத்தைப் புரிந்து கொண்டு போரிலிருந்து விலகிக்கொண்டன.

மூன்றும் நெப்போலியன் மெக்ஸிகோவைக் கைப்பற்ற உறுதி பூண்டார். 40,000 ஃபிரெஞ்சு வீரர்களையும் அங்கேயே இருக்குமாறு இவர் ஆணையிட்டார். மாதம் ஒன்றிற்குச் சுமார் 40 லட்சம் பிராங்க்குகளைத் தமது போருக்காக மூன்றும் நெப்போலியன் செலவிட்டார். 1863ல் ஜ்வரேஜும் நாட்டைவிட்டு விரட்டப்பட்டார். 1864ல் மெக்ஸிகோ ஒரு முடியரசென அறிவிக்கப்பட்டது. ஆஸ்திரியப் பேரரசரின் தம்பியான மேக்ஸிமிலன் (Maximillan) என்பார் மெக்ஸிகோவின் முடியரசராக்கப்பட்டார். இதன்மூலம் மூன்றும் நெப்போலியன் ஆஸ்திரியாவின் நட்பைப் பெற முனைந்தார்.

மெக்ஸிகோ மக்கள் மேக்ஸிமிலனைத் தங்கள் அரசரென, ஏற்றுக்கொள்ளவில்லை. அவரை எதிர்த்து அம்மக்கள் உள்நாட்டுப் போரையும தொடங்கினர். இதற்கிடையில் அமெரிக்க உள்நாட்டுப் போரும் முடிந்தது. அமெரிக்கா மன்ரோ கொள்கையினை நினைவு படுத்தி, அமெரிக்கக் கண்டத்தில் பிற நாடுகளின் தலையீட்டினை அது ஒருபோதும் அனுமதிக்காதெனவும் எச்சரித்தது. இதனைக் கண்டஞ்சிய ஃபிரான்சும் தனது படையினை 1867ல் மெக்ஸிகோவி லிருந்து திரும்ப அழைத்துக்கொள்ள முடிவு செய்தது. ஃபிரெஞ்சுப் படைகளும் திரும்ப அழைத்துக்கொள்ளப்பெற்றதால், மெக்ஸி கோவில் மேக்ஸிமிலன் தனித்து நின்றார். அவர்தம் துணைவியார் கார்லோட்டா என்பார் தம் கணவரைக் காப்பாற்றுமாறு மூன்றும் நெப்போலியனைப் பலமுறை வேண்டியும் பயனில்லாதுபோயிற்று. மேக்ஸிமிலனும் அங்குச் சுட்டுக் கொல்லப்பட்டார். கார்லோட்டா, பைத்தியம் பிடித்தவரானர். இச்சோக நிகழ்ச்சி ஐரோப்பா வெங்கும் பரவி, இவரது செல்வாக்கினைப் பெரிதும் குறைத்தது.

**இதன் விளைவுகள்**

பேரரசர் மூன்றும் நெப்போலியனின் மெக்ஸிகோப் போர், பெரும் தோல்வியில் முடிந்தது. (1) இதனல், இவரது செல்வாக்கு முற்றிலும் குறைந்தது. இது முற்றிலும் தேவையற்ற போராகும். முதலாம் நெப்போலியனின் அழிவிற்கு எவ்வாறு ஸ்பானியப் போர் அமைந்ததோ, அவ்வாறே இவரது அழிவிற்கும் மெக்ஸிகோப் போர் அமைந்தது. (2) இப்போர் ஃபிரான்சுக்கு மாபெரும் பொருளாதார இழப்பாக அமைந்தது பெரும் பொருளையும் இங்குச் செலவிட்டது. அதனல், பயனேதும் விளையவில்லை. பெரும் படையினையும் ஃபிரான்சு இங்கு இழந்தது. நாற்பதாயிரம் வீரர்களைக் கொண்ட பெரும்படை 6 ஆண்டுகளுக்குமேல் தேவையற்ற, ஒரு வீணன போரில் ஈடுபட்டிருந்தது. அப்பெரும் படைக்கு மாதம் ஒன்றுக்கு 40 லட்சம் பிராங்குகளுக்குமேல் செலவிடப்பட்டது. ஆறு ஆண்டு

களாகப் பெருந்தொகையொன்றினை இவர் வீணுகச் செலவிட்டார். செல்வம், செல்வாக்கு இரண்டினையும் இழந்தார் ஃபிரெஞ்சுப் பேரரசர். இவரது திறமையின்மையும் நன்கு புலனுனது. ஹெய்ஸ் (Hayes) என்பார் இவரது படை மாண்பைப்பற்றி ஆராய்கையில் "இவர் தமது படை வன்மையைக் காட்ட விரும்பினுர். ஆயினும், அதனைப் பயன்படுத்தத் தயங்கினுர்" என்று கூறினுர். இதனுல், அவர்மீது மிக்க மாசு படிந்தது. (3) வெளிநாடுகளிலும் இவரது திறமையின்மை நன்கு புரிந்துகொள்ளப்பட்டது. இவரது தெளிவற்ற போக்கு, இவரது முன்னுக்குப்பின் முரணுன கொள்கைகள், எதனையும் திறம்படச் செய்யும் ஆற்றலின்மை போன்ற இவரது பண்புநலன்களை அனைவரும் புரிந்துகொண்டனர். இவரது மெக்ஸிகோப் போர் இவரது கோழைத்தனத்தின் சின்னமாய் விளங்கியது. இதனுல், இவர் 1866ல் நடந்த ஆஸ்திரிய-பிரஷ்யப் போரில் செவ்வையாகக் கவனம் செலுத்த இயலவில்லை. அதுபோன்றே 1862ல் நடந்த டேனிஷ் போரிலும் இவர் கவனம் செலுத்தவில்லை. இங்கிலாந்து டென்மார்க்கைக் காப்பாற்றவே முயன்றது. ஆயினும், மூன்றும் நெப்போலியன் அதனைப் பொருட்படுத்தவில்லை. இதன் விளைவாக, பிஸ்மார்க்கின் செல்வாக்கு மிகுந்தது. தையர் போன்ற ஃபிரெஞ்சு அரசியல் அறிஞர்கள் 1866 சடோவாப் போர்க்களத்தில் (The Battle of Sadowa) ஆஸ்திரியா தோற்கவில்லை. ஃபிரான்சு தோற்றது என முழங்கினர். தேவையற்ற மெக்ஸிகோப் போரில் ஒன்றிப்போன மூன்றும் நெப்போலியன் தமது வீழ்ச்சிக்கே வழிவகுத்துக்கொண்டார். (4) இப்போரின் விளைவாக, உள்நாட்டில் இவருக்கு எதிர்ப்பு மிருந்தது. இதன் விளைவாக, இவர் தமது அடக்குமுறை ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கும் நிலை உருவானது. 1869ல் நிகழ்ந்த பொதுத்தேர்தலில் குடியரசுக் கட்சியினர் வெற்றிபெற்று இவரது தன்னுட்சிக்கு முற்றுப்புள்ளி வைத்தனர்.

### ஆஸ்திரிய-பிரஷ்யப் போர்

1864ல் டென்மார்க்குடன் போர் செய்து ஸ்லெஷ்விக் (Schleswig), ஹோல்ஸ்டின் (Holstein) பகுதிகளை அதனிடமிருந்து பெற்றுர் பிஸ்மார்க். அவற்றைப் பகிர்ந்துகொள்வதில் பிரஷ்யாவுக்கும், ஆஸ்திரியாவுக்குமிடையே பூசல் ஏற்பட்டது. அப்பூசலை அடிப்படையாகக் கொண்டு, ஆஸ்திரியாமீது போர்தொடுத்தார் இரும்பு மனிதர் பிஸ்மார்க். இப் போரின்போது ஃபிரான்சை நடுநிலை வகிக்குமாறு வேண்டினுர் பிஸ்மார்க். மூன்றும் நெப்போலியன் ஆஸ்திரியாவை ஆதரித்தால், தான் வெற்றி பெறுவது அரிதென்பதை நன்குணர்ந்தே பிஸ்மார்க் அவரை நடுநிலை வகிக்குமாறு வேண்டினுர்.

மூன்றும் நெப்போலியன் பிஸ்மார்க்கை நன்கு புரிந்து கொண்டாரில்லை. வலுவுள்ள ஜெர்மனி, ஃபிரான்சின் நலனுக்கே யாகுமென இவர் தவருக நினைத்தார். வலுவுள்ள ஜெர்மனியைக் கொண்டு, ஆஸ்திரியாவை முறியடிக்கலாமென இவர் திட்ட மிட்டார். பிரஷ்யாவை முற்றிலும் ஆதரித்து அதனை மீண்டும் ஃபிரெஞ்சாதிக்கத்தின்கீழ் கொண்டுவரவேண்டும் என்பதே இவரது மாபெரும் நோக்கமாகும். அதோடு மட்டுமன்றி இப்போரில் பிரஷ்யாவை ஆதரித்து ஆஸ்திரியாவைத் தோற்கடித்து, அதன் விளைவாக வெனிஷியாவை இத்தாலிக்குப் பெற்றுத் தரவும் இவர் விழைந்தார். இந் நோக்கங்களுடன் நடுநிலேயே ஏற்றதென இவர் முடிவு செய்தார்.

பிஸ்மார்க், பேரரசர் மூன்றும் நெப்போலியனின் ஆதரவைப் பெறும்பொருட்டு, பியாரிட்ஸ் (Biarritz) என்ற இடத்தில் அவரைச் சந்தித்தார். அப்போது ஆஸ்திரியாவைத் தான் ஆதரிக்க வில்லையென இவர் பிஸ்மார்க்குக்கு வாக்குறுதியும் அளித்தார். பிரஷ்யத் தலைமையில் வடஜெர்மன் கூட்டரசு ஒன்று அமை வதையும் மூன்றும் நெப்போலியன் ஏற்றுக்கொண்டார். இதற்குக் கைம்மாருகப் பவேரியா, லக்சம்பர்க் போன்ற பகுதிகளை இழப் பீடாக ஃபிரான்சுக்குத் தர பிஸ்மார்க் உறுதி கூறினர். ஆயினும், பிஸ்மார்க் அரசியல் நுட்பமிக்கவரென்ற காரணத்தால், நேர்முகப் போட்டியின்போது தானும் ஃபிரெஞ்சுப் பேரரசர் மட்டுமே பேசுதல் வேண்டும். அப்போது வேறு யாரும் உடனிருத்தல் கூடாது எனக் கூறினர். அவ்வாறே அந் நேர்முகப் போட்டியின்போது வேறு யாரும் அனுமதிக்கப்படவில்லை. ஆதலின், இவர்கள் இருவரிடையே நடந்த பேச்சுவார்த்தை இவர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. மூன்றும் நெப்போலியன் இந் நட்பின் மூலம் ஆஸ்திரிய-ரஷ்யப் பிற்போக்கணியைக் கட்டுப்படுத்த விரும்பினர். அத்துடன், ஆஸ்திரிய-பிரஷ்யப் போரின் விளைவாக அவ்விரு நாடுகளும் நீண்ட நாள்கள் போர் புரியும்; போரின் விளைவாக, மிகச் சோர்ந்துபோய்த் தன்னுடைய துணையை அவை நாடுமென இவர் கருதினர். அப்போது மீண்டும் தலைமையேற்றுச் சிறப்பெய்தலாம் என்பது இவர்தம் திட்டம். பிரஷ்ய வெற்றி ஃபிரான்சுக்கு மிக்க சாதகமாயிருக்குமென இவர் நம்பினர்.

1866ல் நடந்த ஆஸ்திரிய-பிரஷ்யப் போர் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. ஏழே வாரங்களில் பிரஷ்யா, ஆஸ்திரியா வைச் சடோவா என்ற போர்க்களத்தில் தோற்கடித்தது. இதனை மூன்றும் நெப்போலியன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. இவர் தமது தவற்றினை இப்போது தெளிவாக உணரத்

தொடங்கினர். வலுவுள்ள ஜெர்மனி ஃபிரான்சுக்கு மிக்க ஊறு விளைவிக்குமெனவும் அவர் அஞ்சினர். ஜெர்மன் வளர்ச்சியைத் தடுக்க வேண்டுமென தையர் போன்றோர் வலியுறுத்தினர். ஃபிரெஞ்சுப் பேரரசர் இழப்பீடு கேட்டபோது, பிஸ்மார்க் அதனையும் தர மறுத்தார். "ஒரு சிறு ஜெர்மன் சிற்றூரினைக்கூட வழங்க மாட்டேன்" ( Not a single German village shall be given ) எனத் திட்டவட்டமாக அறிவித்தார் பிஸ்மார்க். இதனை ஃபிரெஞ்சுச் செய்தித்தாள்கள் வெளியிட்டபோது ஃபிரெஞ்சு மக்கள் கொதிப்படைந்தனர். மூன்றும் நெப்போலியன் மிகக் குன்றிப் போனர். பிரஷ்யாவுடன் அவர் போர் செய்யவேண்டிய கட்டாயமும் ஏற்பட்டது. அப்போரில் இவர் தோற்றார். அதன் விளைவாக இவர் பதவியிலிருந்தும் விலக்கப்பட்டார்.

**ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போர் (1870)**

ஃபிரான்சும், ஜெர்மனியும் அண்டை நாடுகளாயினும் பல நூற்றாண்டுகளாக அவை பகை நாடுகளாகவே விளங்கின. 17ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே ஃபிரான்சு ஜெர்மனியைப் பிரித்தாள்வதில் ஆர்வம் காட்டியது. 1648-ல் ஏற்பட்ட வெஸ்ட் பேலியா உடன்பாட்டிலும் ஃபிரான்சு இக் கோட்பாட்டினையே பின்பற்றியது. 350க்கும் மேற்பட்ட சிறு பகுதிகளைக் கொண்ட நாடாக ஜெர்மனி பிரிக்கப்பட்டது. முதலாம் நெப்போலியனும் ஜெர்மனியை வென்று அங்கு ரைன் கூட்டரசினை உருவாக்கினர். ஃபிரெஞ்சாதிக்கம் அங்கு முற்றிலும் நிறுவப்பட்டது. 1815-க்குப் பின்னர், அங்கு ஆஸ்திரிய ஆதிக்கம் நிறுவப்பட்டது. இந்நிலை 1866 வரை தொடர்ந்தது. இதனை ஃபிரான்சு ஒரு சிறிதும் விரும்பவில்லை.

1852-ல் பேரரசரான மூன்றும் நெப்போலியன் மீண்டும் அங்கு ஃபிரெஞ்சு ஆதிக்கத்தினை நிறுவ முயன்றார். "இத்தாலியின் விடுதலைக்காக நான் போரிட்டால், ஜெர்மனிக்காக வேறு உணர்வுகளை நான் மேற்கொள்ள இயலாது" என இவர் இதனைத் தெளிவுபடுத்தினர். அந் நோக்கத்தை நிறைவேற்றவே கிரிமியப் போரிலும் (1855), ஆஸ்திரிய-இத்தாலியப் போரிலும் இவர் ஈடுபட்டார். அந்நோக்கத்தில்தான் டேனிஷ் போரிலும் (1864), ஆஸ்திரிய-பிரஷ்யப் போரிலும் (1866) இவர் பிரஷ்யாவை ஆதரித்தார். ஆஸ்திரிய-பிரஷ்யப் போருக்குப் பின்னர்தான், அதன் விளைவுகளை இவர் நன்குணர்ந்தார். ஆயினும், பிரஷ்யாவுடன் போர் செய்யும் நிலை உருவாகுமென்பதை இவர் முற்றிலும் எதிர்பார்க்கவில்லை.

ஆஸ்திரிய-பிரஷ்யப் போருக்குப் பின்னர், இவர் ஆஸ்திரியாவுக்கும் பிரஷ்யாவுக்குமிடையே உடன்பாடு செய்துவைக்க முயன்றார். அப்போது பிரஷ்யா, தருவதாக வாக்களித்திருந்த பகுதிகளையும் ஃபிரான்சுக்குத் தருமாறு பிஸ்மார்க்கை வேண்டினார். அச்சமயம் பிஸ்மார்க், "லூயி நெப்போலியன் எங்களைத் தோற்ற நாடு போன்று நடத்துகிறார். அதற்குரிய விலையினை அவர் விரைவில் கொடுப்பார்" எனக் கூறினார். மேலும், ஃபிரான்சுடன் போர் செய்வது வரலாற்றில் மறுக்க முடியாத ஒன்றாகிவிட்டதெனவும் பிஸ்மார்க் பகர்ந்தார். ஃபிரான்சை முற்றிலும் புறக்கணித்துவிட்டு, ஆஸ்திரியாவுடன் பிஸ்மார்க் பிரேக் உடன்பாட்டினைச் செய்துகொண்டார். இவ்வுடன்பாட்டினை ஃபிரான்சு எதிர்த்தது. மூன்றாம் நெப்போலியன் இவ் எதிர்ப்பினைச் சமாளிக்க இழப்பீடு தருமாறு பிரஷ்யாவை வேண்டினார். அதனை அவர் "மெயின் திட்டம்" என்ற பெயரில் வெளியிட்டார். இதன்மூலம், ரைன் பகுதிகளில் சிலவற்றைப் பெற ஃபிரான்சு விழைந்தது. அதனைப் பிஸ்மார்க் முற்றிலும் ஏற்க மறுத்தார். அதன் பின்னரும் மூன்றாம் நெப்போலியன் இழப்பீடு பெறும் தமது முயற்சியைக் கைவிடவில்லை. பெல்ஜியத்தையேனும் தனக்குத் தருமாறு இவர் பிஸ்மார்க்கினைக் கேட்டார். அப்போது பிஸ்மார்க் தமது திட்டத்தினை வெளியிட்டார். ஃபிரான்சு தென் ஜெர்மனி மீது தமது ஆதிக்கத்தினை ஏற்றுக்கொண்டால், பெல்ஜியம் அதற்கு இழப்பீடாக வழங்கப்படுமென பிஸ்மார்க் அறிவித்தார். மூன்றாம் நெப்போலியன் இத்திட்டத்தினை ஏற்க மறுத்தார். லக்சம்பர்க்கையேனும் இழப்பீடாகத் தருமாறு இறுதியில் இவர் பிஸ்மார்க்கை வேண்டினார். அதுவும் மறுக்கப் பட்டது. இதனால், மூன்றாம் நெப்போலியன் மிகவும் ஏமாற்ற முற்றார். தமது செல்வாக்கினை நிலைநாட்டும்பொருட்டு, லக்சம்பர்க் கோட்டையை உடனே பிரஷ்யா காலி செய்ய வேண்டுமென இவர் ஆணையிட்டார். லக்சம்பர்க்கிற்காகப் போர் செய்ய பிஸ்மார்க் விரும்பவில்லை. 1867-ல் இப் பிரச்சினையைத் தீர்க்க லண்டனில் மாநாடு ஒன்று கூட்டப்பெற்றது. அம் மாநாட்டில் லக்சம்பர்க் நடுநிலைப் பகுதியாக இருக்குமெனவும் அது ஐரோப்பிய நாடுகளின் பாதுகாப்பின் கீழ் இருக்குமெனவும் முடிவு செய்யப்பட்டது. பிரஷ்யா அதனைக் காலி செய்ய வேண்டுமெனவும் முடிவு செய்யப்பட்டது. போர் இதனால், தடுக்கப்பட்டதெனினும், பகைமை தொடர்ந்தது. போர் தவிர்க்க முடியாததொன்றாகி விட்டது. இவ்விரு நாடுகளும் அச்சம் காரணமாகத் தங்களது படையைப் பெருக்கின. போர் என்ற முகில் இவ்விரு நாடுகளையும் சூழ்ந்துகொண்டது. அது 1870-ல் குருதிமாரி பொழிந்தது.

**ஃபிரெஞ்சு பிரஷ்யப் போருக்குரிய காரணங்கள்**

பிஸ்மார்க் தமது சூழ்ச்சித் திறனாலும், செயல் திறனாலும் மூன்றாம் நெப்போலியனை வியப்பில் ஆழ்த்தினார். 1866-க்குப் பின்னர், பிஸ்மார்க்கோடு இணைந்து செல்வது என்பது இயலாத தொன்று என்பதை மூன்றாம் நெப்போலியன் நன்கு புரிந்து கொண்டார். ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போர் தவிர்க்க முடியாத ஒன்றானது. மூன்றாம் நெப்போலியனும் மிகுந்த தயக்கத்திற்குப் பின்னர் போர் செய்யத் துணிந்தார். அப் போருக்குரிய காரணங்கள் பல :

1. **மெக்ஸிகோப் போர் :** மெக்ஸிகோப் போர் மூன்றாம் நெப்போலியனது செல்வாக்கினைப் பெரிதும் குறைத்தது. இத்தாலி, ரஷ்யா, ஆஸ்திரியா போன்ற நாடுகளின் நட்பையிழந்து குன்றிப் போன இப் பேரரசருக்கு மெக்ஸிகோப் போர் பேரிடியாய் அமைந்தது. உள் நாட்டிலும், வெளிநாட்டிலும் அவருக்கு எதிர்ப்பு மிகுந்தது. மெக்ஸிகோப் போரில் பெரும் பொருளை இழந்ததோடு, பெரும்படை ஒன்றினையும் இழந்தார். பிரஷ்யாவுடன் போர் செய்து இழந்த தமது புகழை மீண்டும் பெறத் தயக்கத்துடன் முற்பட்டார். மெக்ஸிகோப் போரில் பெரும்படையினை இழந்த மூன்றாம் நெப்போலியன்மீது போர் தொடுத்து அவரை முறியடிக்கத் துணிந்தார் பிஸ்மார்க்.

2. **ஃபிரெஞ்சு-பிரஷ்யப் பகைமை :** மூன்றாம் நெப்போலியன் பேரரசரானவுடன் பிரஷ்யாவுடன் மிக்க நட்பு பாராட்டினார். ஃபிரெஞ்சு ஆதரவைப் பெற்ற பிரஷ்யா, 1864-ல் டேனிஷ் போரிலும், 1866-ல் ஆஸ்திரிய-பிரஷ்யப் போரிலும் வெற்றி பெற்றது. 1866 க்குப் பின்னர்தான் மூன்றாம் நெப்போலியன் தமது மாபெரும் தவற்றினை உணர்ந்தார். இப் போர்களின் விளைவாகப் பிரஷ்யா ஒரு மாபெரும் வல்லரசாக மாறியது. ஐரோப்பிய நாடுகளனைத்தும் அதனைப் பெரிதும் மதித்துப் போற்றின. அதன் வலிமை ஃபிரான்சையே அச்சயுறுத்தவதா யிருந்தது. பிரஷ்யாவின் வலிமை வல்லரசுச் சமநிலையை வெகுவாகப் பாதித்தது. இதனால், ஃபிரான்சின் சிறப்பும், செல்வாக்கும் வெகுவாகக் குறையத் தொடங்கியது. இதனால், ஃபிரெஞ்சு மக்கள் பெரிதும் ஆத்திரமடைந்தனர். "சடோவா தோல்விக்குப் பழிவாங்குவோம்" என அவர்கள் கூவினர். பிரஷ்யாவும் வேண்டுமென்றே ஃபிரான்சின் பகையினை மேலும் வளர்த்தது. ஃபிரான்சுடன் போர் செய்தலைத் தவிர்க்க முடியாது என்பதைப் பிரஷ்யாவும் உணர்ந்தது. 1870-ல் போரும் மூண்டது.

**3. ஜெர்மன் இணைப்பினுல் விளைந்த அச்சம் :** ஜெர்மனியை இணைக்கும்பொருட்டு, ஆஸ்திரியாமீது போர் தொடுத்தார் பிஸ்மார்க். ஆஸ்திரிய-பிரஷ்யப் போரின்போது ஃபிரான்சின் நட்பையும் அவர் வெகுவாகப் போற்றினுர். ஆஸ்திரிய-பிரஷ்யப் போரில் வெற்றி பெற்ருல் ஃபிரான்சுக்கு இழப்பீடு தருவதாயும் இரும்பு மனிதர் வாக்களித்தார். போருக்குப் பின்னர், அரசியல் நுட்பமிக்க பிஸ்மார்க் இழப்பீடேதும் தர முற்றிலும் மறுத்தார். இதனுல் பெரிதும் ஏமாற்றமுற்ற மூன்ரும் நெப்போலியன் பிரஷ்யா வுடன் நட்பு பாராட்டுவது அரிதென உணர்ந்தார். 1866-க்குப் பின்னர், வட ஜெர்மன் கூட்டரசொன்றும் பிஸ்மார்க் தலைமையில் அமைந்தது. ஆயினும், தென் ஜெர்மன் மாநிலங்கள் பல வட ஜெர்மன் கூட்டரசில் சேர மறுத்தன. பவேரியா, பேடன், ஹெஸ்ஸி, உர்டம்பர்க் போன்ற தென் மாநிலங்கள் பிஸ்மார்க் தலைமையை ஏற்க மறுத்தன. மூன்ரும் நெப்போலியனும் அத்தகைய தென் ஜெர்மன் மாநிலங்களைப் பெரிதும் ஆதரித்தார். வலுவுள்ள, இணைந்த ஜெர்மனியைக் கண்டு, மூன்ரும் நெப்போலியன் அஞ்சினுர். ஜெர்மன் இணைப்பிற்கு மூன்ரும் நெப்போலியன் பகைவராயிருத்தலைக் கண்டு பெரிதும் ஆத்திர முற்ருர் பிஸ்மார்க். ஃபிரான்சைத் தோற்கடித்தால் தவிர, ஜெர்மனியை இணைக்க முடியாதென்பதைத் தெளிவாயுணர்ந்தார் அவர். தென் மாநிலங்களின் சில பகுதிகளை இழப்பீடாகக் கேட்கிருர் லூயி நெப்போலியன் எனக் கூறி, அம் மாநிலங்களையும் ஃபிரான்சுக்கெதிராகத் தூண்டிவிட்டார் பிஸ்மார்க். ஃபிரான்சும் ஜெர்மனியும் ஒன்றையொன்று வெறுத்துப் பகைமை பாராட்டிக் கொண்டன. அப் பகைமை காரணமாகப் போரும் மூண்டது.

**4. ஸ்பானிய வாரிசுரிமைப் பிரச்சினை :** ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போருக்குரிய உடனடிக் காரணம், ஸ்பானிய வாரிசுரிமைப் பிரச்சினையாகும். ஸ்பானிய மக்கள் இராணி இசெபெல்லாவின் கொடுங்கோன்மையாட்சியினை எதிர்த்துப் புரட்சி செய்து, அவரை நாட்டை விட்டும் விரட்டினர். ஸ்பானிய மக்கள் பிரஷ்ய அரசரின் உறவினரான லியோபால்டு என்பாரைத் தங்கள் அரசராக இருக்கமாறு வேண்டினர். பிஸ்மார்க்கும் அவரையே ஆதரித்தார். லியோபால்டும் ஹோகன்சோலன் குடும்பத்தைச் சேர்ந்தவர். பிரஷ்ய அரசருக்கு நெருங்கிய உறவினர் என்ற காரணத்தால், பிரஷ்யாவுக்கு எல்லா வகையிலும் ஆதரவாயிருப்பார் என்பது பிஸ்மார்க்கின் திட்டமாகும். மூன்ரும் நெப்போலியன் அத் திட்டத்தினை வன்மையாக எதிர்த்தார். மூன்ரும் நெப்போலியன் எதிர்ப்புக் காரணமாக, லியோபால்டு ஸ்பெயின் அரியணைக்குத் தான் போட்டியிடப் போவதில்லையென அறிவித்தார் (1870).

அச்சமயம் மூன்றும் நெப்போலியன் உடல் நலமற்றிருந்தார். அவர் உடல்நலமற்றிருந்தபோது வெளித்துறை அமைச்சரான கிராமவுட் (Gramout) என்பாரே வெளித் துறைச் செய்திகளுக்கும் பொறுப்பேற்றிருந்தார். அவருக்கு நடைமுறை தெரியாத காரணத்தால், பிரஷ்ய அரசரும் அத்தகைய வாக்குறுதி ஒன்றினைத் தரவேண்டுமென்றார். அவர் ஃபிரெஞ்சுத் தூதுவரான பெனடிட்டி என்பாரையும் பிரஷ்ய அரசரிடம் இவ் வாக்குறுதியினைப் பெற்று வருமாறு அனுப்பி வைத்தார். அவரது தவறான அரசியல் திட்டம் பிஸ்மார்க்கிற்குப் பெரிதும் நன்மையாயமைந்தது.

பெனடிட்டி என்பாரும் பிரஷ்ய அரசரை எம்ஸ் என்ற இடத்தில் சந்தித்து, தமது அரசு பணித்தபடி ஒரு வாக்குறுதியைத் தருமாறு அவரை வேண்டினர். பிரஷ்ய அரசர் முதலாம் வில்லியமும் மிக்க பெருந்தன்மையுடன் அத்தகைய வாக்குறுதி ஒன்றினைத் தருமாறு பிஸ்மார்க்கினைத் தந்தி மூலம் வேண்டினர். பிஸ்மார்க் அத் தந்தியினைத் தனக்கேற்றவாறு திரித்து வெளியிட்டார். அதன் விளைவாக, ஃபிரெஞ்சு மக்கள் தங்கள் பேரரசர் அவமதிக்கப்பட்டுவிட்டதாகக் கொதித்தெழுந்தனர். ஜெர்மனியர்களும் அத்தகைய வாக்குறுதியினைத் தங்கள் அரசர் தருவது முறையன்று எனச் சினமுற்றனர். இவ்விரு நாடுகளிலும் போர் வேண்டுமென்ற கூக்குரல் மிகுந்தது. மூன்றும் நெப்போலியன் ஃபிரெஞ்சு, இத்தாலி, ஆஸ்திரியக் கூட்டணியொன்றினைப் பிரஷ்யாவுக் கெதிராக உருவாக்க முனைந்தார். அவர் செய்த தவறுகள் காரணமாக, இத்தாலியும், ஆஸ்திரியாவும் அதில் சேர மறுத்தன. இங்கிலாந்தும் இவரது இழப்பீடு பெறும் கொள்கையினை முற்றிலும் வெறுத்தது. ஆங்கில வெளித்துறை அமைச்சரான பாமர்ஸ்டனும் இவரது கொள்கையினை வெறுத்தார். "மூன்றும் நெப்போலியன் ஓர் உணவு விடுதியின் உரிமையாளரைப் போன்று இழப்பீடு பெறுவதிலேயே குறியாக வுள்ளார்" என்ற பாமர்ஸ்டனின் கூற்று இதனை மெய்ப்பிக்கும். ரஷ்யாவும் ஃபிரான்சை வெறுத்தது. மூன்றும் நெப்போலியன் தனித்து நிறுத்தப்பட்டார்.

இறுதிவரை மூன்றும் நெப்போலியன் போரைத் தவிர்க்கவே விரும்பினர். மக்களது கட்டாயத்தின் பேரில் இவர் 1870-ல் பிரஷ்யாமீது போர் தொடுத்தார். பிஸ்மார்க் அதனைப் பெரிதும் வரவேற்றார். ஃபிரான்சும் மிக எளிதாகத் தோற்கடிக்கப் பட்டது. மீண்டும் இப் போர் செடான் என்ற இடத்திலேயே நிகழ்ந்தது. இதுவே இரண்டாவது பேரரசின் இரண்டாவது வாட்டர்லூ போர்க்களமானது. நெப்போலியனும் தோற்று,

பிரஷ்ய வீரர்களிடம் சரணடைந்தார். ஃபிரான்சும் உடனே அவரைப் பதவியிலிருந்து விலக்கியது. 1871-ல் நிகழ்ந்த பிராங்க்பர்ட் உடன்பாட்டிற்குப் பின்னர், இவரும் விடுவிக்கப் பட்டார். இங்கிலாந்து சென்று அங்கு இரண்டாண்டுகள் வாழ்ந்து 1873-ல் இவர் அங்கேயே காலமானுர். இவரது ஜெர்மன் கொள்கை இவரது வீழ்ச்சிக்குப் பெரிதும் காரணமானது எனில் மிகையாகாது.

**இவரது வீழ்ச்சிக்குரிய காரணங்கள்**

**1. இவரது பண்பு நலன்:** மூன்றும் நெப்போலியன் பல தவறுகளைச் செய்தார். அதற்குக் காரணம், அவரது பண்பு நலனேயாம். திடசிந்தை, தெளிவான போக்கு, எடுத்த காரியத்தை இடுக்கண்வரினும் தொடர்ந்து நின்று செயலாற்றும் திறன், விரைவாக ஒரு முடிவுக்கு வருதல் போன்ற சிறந்த பண்புகள் இவரிடமில்லை. இவரிடம் நிலையான கொள்கை யேதும் கிடையாது. அரசியல் சீர்திருத்தங்களிலோ அல்லது பொருளாதாரச் சீர்திருத் தங்களிலோ இவர் ஒரு கொள்கையைப் பின்பற்றவில்லை. 1860-க்குப் பின்னர், இவருக்கு எதிர்ப்பு மிகுந்த காரணத்தால், இவர் மிக்க தயக்கத்துடன் வரி உரிமைகளை மக்களுக்கு ஈந்தார். பொருளாதாரத் துறையிலும் இவருக்குத் தெளிவான கொள்கை யேதுமில்லை. ரிச்சர்டு கோப்டன் என்ற ஆங்கிலப் பொருளியியல் வல்லுநர் கூற்றுல் கவரப்பட்டுத் தடையற்ற வணிகக் கொள்கையை இவர் மேற்கொண்டார். அதன்விளைவாக, இரண் டாவது பேரரசின் பொருளாதாரச் சீர்கேட்டுக்கும் வழிவகுத்தார். இவர் தொலைநோக்கும், ஐரோப்பிய அரசியலறிவும் சற்றும் இல்லாதவர். “நான் தொலை நோக்குத் திட்டங்களை ஒருபோதும் தீட்டுவதில்லை. அவ்வப்போது தோன்றும் சூழ்நிலைகளால் ஆளப் படுகிறேன்” என்ற இவரது கூற்று இவரது ஆளுமையை நன்கு புலப்படுத்தும். டேனிஷ் போரிலும், ஆஸ்திரிய-பிரஷ்யப் போரிலும் இவரது நடுநிலைமை இவரது தொலை நோக்கின்மைக்குத் தக்க சான்றுகளாகும். இவரது தெளிந்த சிந்தைக்கு அவரது ‘நெப்போலியனது கருத்துகள்’ என்ற நூலே தக்க சான்ருகும். வல்லாட்சியினையும், உரிமையினையும் இவர் இணைக்க முயன்றதே இவரது தெளிவின்மைக்கு ஒரு சான்ருகும்.

இவர் பேராசை மிக்கவர். இப்பேராசையின் காரணமாகவே, பல குடியேற்றங்களை நிறுவ இவர் முயன்றுர். பல வெளிநாட்டுப் போர்களிலும் இவர் ஈடுபட்டார் நெப்போலியப் பேரரசை மீண்டும் நிறுவ முயன்றதும், மெக்ஸிகோவில் ஒரு மாபெரும்

ஃபிரெஞ்சுக் குடியேற்றத்தினை நிறுவ முயன்றதும், இவர் ஒரு பேராசைக்காரர் என்பதைப் புலப்படுத்தும். இப் பேராசையே இவரது வீழ்ச்சிக்கும் காரணமானது. இவர் மாபெரும் அறிஞர் போன்றும், பொருளியல் வல்லுநர் போன்றும், சிந்தனையாளர் போன்றும் நடித்தார். இவர் மிகக் குறைவாகவே பேசினார். எப்போதும் ஆழ்ந்து சிந்திப்பவர் போன்றும் இவர் காணப்பட்டார். இதனால், மக்கள் இவரை ஒரு மாபெரும் மனிதர் எனத் தவறாக நினைக்கத் தலைப்பட்டனர். எதனையும் ஆழ்ந்து சிந்திக்கவல்ல ஆற்றலுமற்றவர். அதன் விளைவுதான் இவரது வேண்டாத பல போர்களாகும். நாட்டுப்பற்றின் நண்பர் என இவர் தன்னை அழைத்துக்கொண்டபோதிலும், அதனையும் இவர் முற்றிலும் முழு மனத்துடன் ஆதரிக்கவில்லை. இத்தாலிக்கு இறுதிவரை துணைபுரியாத காரணத்தால், இவர் செல்வாக்கினை இழந்தார். கிரிமியப் போரில் ரஷ்யாவைத் தோற்கடித்தார். பிற்போக்கணியை முறியடிக்க முடிவு செய்த இவர் மீண்டும் ரஷ்யாவுடன் நட்பு பாராட்டத் தொடங்கினார். 1859-இல் ஆஸ்திரியாவைத் தோற்கடித்தார். அதன் பின்னரும், ஆஸ்திரியாவின் நட்பைப் பெறுவதில் பேரார்வம் காட்டினார். முற்போக்குக் கொள்கைகளை ஆதரித்த இவர் அவற்றை இறுதிவரை ஆதரிக்கத் தவறிவிட்டார். இதனால், அனைவரது நட்பையும் இழந்தார் இப் பெருமகனார். ஆதலின், 1870-ல் நிகழ்ந்த ஃபிரெஞ்சு–பிரஷ்யப் போரில் இவர் தனித்து நின்று போரிடும் நிலையேற்பட்டது இவரது நிலையற்ற கொள்கையாலும், தெளிவற்ற போக்காலும், தொலை நோக்கின்மையாலும் இவர் இறுதியில் வீழ்ந்துபட்டார்.

**2. இவரது உள்நாட்டுக் கொள்கை:** மூன்றாம் நெப்போலியனது பேரரசு ஒரு தவறான அடிப்படையில் அமைந்த பேரரசெனில் மிகையாகாது. பாராளுமன்றம் என்ற சொல்லின் அடிப்படையிலமைந்த வரம்பற்ற வல்லாட்சியே இவருடைய ஆட்சியாகும். உரிமையும், வல்லாட்சியும் இருவேறு துருவங்கள். அவற்றை ஒன்றிணைத்துச் செயல்படுவது என்பது இயலாத ஒன்றாகும். கட்டுப்பாட்டினையும், உரிமையினையும் ஒன்றிணைப்பதே இவரது தலையாய நோக்கமாகும். ஒழுங்கையும், அமைதியையும் நிலைநாட்டிய பின்னர், உரிமையினை வழங்குவதாக வாக்களித்தார் இம்மன்னர். உரிமையைப் போற்றுவதற்காகக் கட்டுப்பாட்டினைப் புகுத்திய இம் மன்னர், மக்களுக்கு உரிமையினை வழங்க முற்றிலும் மறந்தார். ஆக்டன் பிரபு (Lord Acton) என்பவரின் கூற்று இவரைப் பொருத்தமட்டில், முற்றிலும் மெய்யானது. 'அதிகாரம் மனிதனைக் கெடுக்கும்' என்ற ஆக்டனின் கூற்றுக்கு இவர் ஓர் இலக்கணமாய்த் திகழ்ந்தார்.

1852-லிருந்து 1860 வரையிலான அவரது ஆட்சியை ஆராய்ந்தால், இக் கூற்று உண்மையென்பது புலனாகும். இவருடைய பேரரசு, வாக்கெடுப்பின்மூலம் அமைந்த பேரரசு எனினும், அது மக்களாட்சியின் அடிப்படைக் கொள்கைகள் யாவையும் புறக்கணித்தது. அவரது அரசியலமைப்பும் மக்களாட்சிக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்டுக் காணப்பட்டது. பேரரசரிடமே அனைத்து அதிகாரங்களும் இருந்தன. பாராளு மன்றத்திலும் அனைத்தையும் முன்மொழிபவர் அவரே. பாராளு மன்றத்தின் அடிப்படை உரிமைகள் யாவும் மறுக்கப்பட்டன. மக்களாட்சியென்ற பெயரில் இவர் தன்னாட்சி புரிந்தார்.

1860-க்குப் பின்னர், எதிர்ப்பு மிகுந்த காரணத்தால், இவர் பல முற்போக்குச் சீர்திருத்தங்களைப் புகுத்த முற்பட்டார். மக்கள் அவற்றால் நிறைவு பெறவில்லை. குடியரசுக் கட்சியினர் முடியரசினையே முற்றிலும் வெறுத்தனர். அவர்கள் குடியரசினை நிறுவவும் துணிந்தனர். முற்போக்காளர்களும் அவரது சீர்திருத்தங்களால் நிறைவு பெறவில்லை. அவர்களும் இவரது ஆட்சியினை விரும்பவில்லை. இவரது சிறப்பற்ற வெளிநாட்டுப் போர்களை அனைவருமே வெறுத்தனர். நல்ல பொருளாதாரக் கொள்கையினை இவர் பின்பற்றாத காரணத்தால், சுரண்டல் மிகுந்தது. ஏழையர் இவரது ஆட்சியில் பெரிதும் துன்புற்றனர். பொருளாதார ஏற்றத்தாழ்வும் அங்கு மிகுந்து காணப்பட்டது. இவரது தடையற்ற வணிகக் கொள்கையும் நாட்டில் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் ஊறு விளைப்பதாயமைந்தது. இவரது தேவையற்ற வெளிநாட்டுப் போர்களும் அதனால் விளைந்த பெரும் செலவும், உள்நாட்டுப் பொருளாதார நிலையைப் பெரிதும் பாதித்தது. இவை உள்நாட்டில் பல பொருளாதாரச் சிக்கல்களை உருவாக்கின. அவையும் பிறவும் இரண்டாவது பேரரசின் வீழ்ச்சிக்குக் காரணமாயின.

**3. இவரது தவறான வெளிநாட்டுக் கொள்கை:** இவரது வீழ்ச்சிக்கு மிக முக்கியமான காரணம், இவரது வெளிநாட்டுக் கொள்கையாகும். இவரது இத்தாலியக் கொள்கை இவரது வீழ்ச்சிக்கு வழிவகுத்தது. இத்தாலியைத் தமது இரண்டாவது தாயகமாகக் கருதிய இவர் அதன் உயர்வுக்குப் பாடுபடத் துணிந்தார். இத்தாலியை ஒன்றுபடுத்தவும் விரும்பினார். ஃபிரெஞ்சுக் கத்தோலிகர்கள் இவரது இத்தாலியக் கொள்கையை விரும்பவில்லை. ஃபிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழ் ஓர் இத்தாலியக் கூட்டரசை உருவாக்கத் துணிந்தார். இத்தாலியைப் பொருத்த மட்டிலும்கூட, இவர் ஒரு முறையான கோட்பாட்டினைக் கொண்

டிருக்கவில்லை. இவரது முறையற்ற இத்தாலியக் கொள்கையின் விளைவாக, இவருக்கு எதிர்ப்பே மிகுந்தது. இவரது நாணயம், செல்வாக்கு, நற்பெயர் அனைத்தும் இதன் விளைவாகக் குன்றி விட்டன. இதுவே இவரது வீழ்ச்சியின் முதற் கட்டமாகும்.

இவரது ஜெர்மன் கொள்கையும் இவரது வீழ்ச்சிக்கு ஒரு காரணமானது. இவர் தொடக்கத்திலிருந்தே ஜெர்மனியை நன்கு புரிந்துகொள்ளத் தவறிவிட்டார். பிரஷ்யாவை ஆதரிப்பதன் மூலம், ஆஸ்திரிய ஆதிக்கத்தைக் குறைக்க முடியுமென இவர் தவறாக மதிப்பிட்டுவிட்டார். இத்தாலியையும் ஜெர்மனியையும் ஆதரித்து, வியன்னா மாநாட்டின் ஏற்பாட்டினை உடைக்க முயன்றார். ஆஸ்திரியாவினை முறியடித்து அங்குத் தமது ஆதிக்கத்தினையும் நிறுவ முயன்றார். இது முற்றிலும் தெளிவற்ற ஒரு போக்காகும். இதன் விளைவாக, ஃபிரெஞ்சு ஆதிக்கத்திற்கு மாறாகப் பிரஷ்ய ஆதிக்கத்திற்கே இவர் வித்திட்டார். டெய்லர் என்ற வரலாற்று வல்லுநர் கூறியதைப் போலப் பெரும் பிரஷ்யாவை உருவாக்க முனைந்த மூன்றும் நெப்போலியன் வலுவுள்ள ஐக்கிய ஜெர்மனியை உருவாக்கினார். இவரது ஜெர்மன் கொள்கை முற்றிலும் தவறானது. பிஸ்மார்க்கினது அரசியல் நோக்கத்தையும், திட்டத்தையும் இவர் செவ்வையாகப் புரிந்துகொள்ளவில்லை. ஜெர்மன் இணைப்பிற்கு ஃபிரான்சுடன் போர் செய்தல் தவிர்க்க முடியாதது என்ற பிஸ்மார்க், தொலைநோக்குடன் செயல்பட்டார். அதனைப் புரிந்து கொள்ளாத இவர், பிஸ்மார்க்கின் ஆதிக்க வெறிக்கு இரையானார். இதற்கு இவரே முற்றிலும் பொறுப்பாவார்.

இவரது மெக்ஸிகோ கொள்கையும் முற்றிலும் தவறானதாகும். அது அறிவுக்கும் நடைமுறைக்கும் முற்றிலும் ஒவ்வாத ஒரு கொள்கையாகும். நாட்டுப்பற்று, முற்போக்குக் கொள்கைகள் போன்றவற்றின் நண்பன் எனப் பறைசாற்றிக்கொண்ட இவர், மெக்ஸிகோவில் மக்களாட்சி, முற்போக்குக் கொள்கைகளின் அடிப்படையிலமைந்த அரசை ஏற்க மறுத்தார். இவரது முரண்பட்ட கொள்கைகளுக்கு இது ஒரு சான்றாகும். மெக்ஸிகோவில் தமது நாகரிகக் குடியேற்றமொன்றினை நிறுவ முயன்ற இவர், அதனைச் செயற்படுத்தும் திறனற்று விளங்கினார். 40,000க்கும் மேற்பட்ட ஃபிரெஞ்சு வீரர்களைக் கொண்ட படை மெக்ஸிகோவைக் கைப்பற்றத் தவறிவிட்டது. பெரும் பொருள் செலவு செய்தும் இறுதியில் இவரது மெக்ஸிகோ திட்டம் தோல்வி யிலேயே முடிந்தது.

இவரது போலந்துக் கொள்கையும் தவறான அடிப் படையிலமைந்த ஒன்றாகும். நாட்டுப் பற்றினைப் போற்றுவதாகக்

கூறிக்கொண்ட இவர், போலந்துக்கு உதவத் தவறிவிட்டார். போலந்து, புரட்சியைத் தொடங்கிய பின்னர், இவரது துணையை வேண்டியது. ரஷ்யாவுக்கஞ்சி போலந்துக்கு உதவ மறுத்து விட்டார். அதனால், போலந்துப் புரட்சி ஈவு இரக்கமின்றி நசுக்கப் பட்டது. இதனால், போலந்தின் நட்பினை இவர் முற்றிலும் இழந்தார். ரஷ்யாவின் எதிர்ப்புக்கும் ஆளானார். உள்நாட்டிலும் இவருக்கு எதிர்ப்பு மிகுந்தது. முதலாம் நெப்போலியனது புராணத்தைப் பாடி, அதனால் முன்னுக்கு வந்த இவர், அவர் போன்று செயலாற்றும் திறன் பெற்றிருக்கவில்லை. முதலாம் நெப்போலியன் போலந்தை வென்று, வார்சா கூட்டரசையும் அங்கு நிறுவி, அதனைத் தமது ஆதிக்கத்தின் கீழும் கொணர்ந்தார். தன்னை யெதிர்த்த அனைத்து ஐரோப்பிய வல்லரசு களையும் புறமுதுகு காட்டியோடச் செய்தார் இம்மாவீரர். அவரது அரிய பெரிய வெற்றிகளையும், அரும் பெருஞ் சாதனை களையும் கண்டு மக்கள் வியந்தனர். அவரது மெரங்கோ போரும் (1800), ஆஸ்டர்லிட்ஸ் போரும் (1805), பிரைடுலாந்துப் போரும் வரலாற்றுச் சிறப்பு மிக்கவையாகும். அத்தகைய அரும்பெரும் வீரரின் பெயரைக் கூறி, முன்னுக்கு வந்த இவர், ரஷ்யாவுக்கஞ்சி போலந்தில் தலையிடாததைக் கண்டு மக்கள் எள்ளி நகையாடினர். உள்நாட்டில் இவரது சிறப்பு மிகக் குன்றியது. இவரது திறமையின்மை இதனால், வெளிப்பட்டது. திறமையற்றோர் நீண்ட நாள்கள் கோலோச்ச முடியாது என்பதற்கு இவரது வரலாறு நல்லதொரு சான்றாகும்.

4. **இவர் வாழ்ந்த காலம் :** மூன்றாம் நெப்போலியன் வாழ்ந்த காலமும் அவரது பல பெரும் இன்னல்களுக்குக் காரணமா யிருந்தது. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி, வரலாற்றில் சிக்கல் மிக்க ஒரு பகுதியாகும். 1789 ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், ஐரோப்பாவெங்கும் நாட்டுப்பற்று மேலோங்கி நின்றது. இதனால், பல பிரச்சினைகள் உருவாயின. இவை யாவற்றையும் மூன்றாம் நெப்போலியன் எதிர்நோக்கிச் சமாளிக்க நேரிட்டது.

பெரிய நெப்போலியனுக்கு இல்லாத பல மாபெரும் பிரச்சினைகள் இச் சிறிய நெப்போலியனை எதிர் நோக்கி நின்றன. பத்தாம் சார்லஸ், லூயி பிலிப் போன்றோர் ஆட்சியி லிருந்தபோது, இவர் முதலாம் நெப்போலியனது சிறப்புகளையும், வெற்றிகளையும் எடுத்துக் கூறி, அதனால் சிறப்பெய்தினர். இவர் பதவிக்கு வந்தபோது ஃபிரான்சு ஐரோப்பாவில் சிறப்பற்ற நிலையிலிருந்தது. ஐரோப்பியப் பிற்போக்குக் கூட்டணி நாடுகள் ஃபிரான்சை முற்றிலும் வளரவொட்டாமல் தடுத்தன. இத்தகைய

பிற்போக்கு நாடுகளை எதிர்த்து, வலுவுள்ள ஒரு ஃபிரான்சை உருவாக்குவது இவரது தலையாய கடனாகும். பெரிய நெப்போலியனைப் போன்று இவரும் ஒரு பெரும் பேரரசை நிறுவி, ஃபிரெஞ்சுக் கொடியை ஐரோப்பாவெங்கும் பறக்க விடுவாரென மக்கள் எதிர்பார்த்தனர். 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அத்தகைய பேரரசு ஒன்றினை நிறுவுவது எளிதான செயலன்று. பிஸ்மார்க், கவூர் போன்று இவரும் செயலாற்றும் கட்டாயமேற்பட்டது. பெரிய நெப்போலியன், பிட், மெட்டர்னிக் போன்ற மாமனிதர்களை எதிர்த்து வெற்றி பெற்றார். இவரும் மாபெரும சூழ்ச்சித்திறன் மிகக பிஸ்மார்க்கினை எதிர்த்துச் செயலாறற வேண்டி வந்தது. ஆனால், செயல் திறனோ, அறிவாற்றலோ, தொலைநோக்கோ இலலாத இவரால், பிஸ்மார்க்கினை எதிர்த்து வெற்றி பெற இயலவில்லை. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சூழ்ச்சித் திறனில் ஈடு இணையற்று விளங்கிய பிஸ்மார்க்கைத் தோற்கடித்தல் என்பது அரிதான செயலேயாம். மூன்றும் நெப்போலியனைப போன்று பல்லோரை முறியடித்த பெருமை பிஸ்மார்க்கைச் சாரும். அவர் காலத்தில் மூன்றும் நெப்போலியனும் வாழ்ந்தது அவப்பேறாகும்.

அவர் வாழ்ந்த காலத்தின் தன்மையே இவரது தோல்விக்குரிய ஒரு முக்கிய காரணமாகும். அவர் காலத்திற்குப் பிற்பட்ட கொள்கைகளை யேற்று அதனைச் செயற்படுத்த முனைந்தார். நாட்டுப்பற்று, மக்களாட்சி வெற்றி பெற்றுவரும் நாள்களில் இவர் தன்னாட்சியினை நிறுவத் துணிந்தார். வல்லாட்சியினையும் மக்களாட்சியினையும் ஒன்றிணைக்க இவர் முற்பட்டார். பிஸ்மார்க் வல்லாட்சியினை உறுதியாய்ப் பற்றிக்கொண்டு அதில் ஓரளவுக்கு வெற்றி பெறவும் செய்தார். இவரும் வல்லாட்சி, மக்களாட்சி இவ் விரண்டில் ஏதேனுமொன்றினை உறுதியாய்ப் பற்றிச் செயலாற்றி யிருப்பின் வெற்றி பெற்றிருக்கக்கூடும். பிஸ்மார்க் போன்று கத்தி யிலும் இரத்தத்திலும் (Blood and Iron) நம்பிக்கை வைத்திருக்க வேண்டும். அல்லது, கவூரைப் போன்று மக்களாட்யினைப் போற்றிப் பேணியிருத்தல் வேண்டும். மக்களாட்சியும் வல்லாட்சியும் ஒன்றையொன்று மோதிக்கொண்ட நூற்றாண்டில் இவர் அவ் விரண்டில் ஒன்றை உறுதியாகப் பின்பற்றியிருப்பின், வெற்றி பெற்றிருக்கக்கூடும். வல்லரசும் மக்களாட்சியும் இரு வேறுபட்ட கருத்துகள். இவ்விரண்டையும் ஒன்றிணைக்கும் முயற்சியில் இவர் தோல்வியுற்றார். முற்போக்கும், பிற்போக்கும் ஒன்றோ டொன்று மோதிக்கொண்ட காலத்தில், இவர் வாழ்ந்தார். அதன் காரணத்தால் தொலை நோக்கற்ற இவரால் எதனையும் உறுதியாகப் பற்றி வாழ இயலவில்லை. சூழ்நிலையை வெல்லும் ஆற்றல் இவரிட

யில்லாமற் போனது. இவர் சூழ்நிலையின் கைதியாகவே வாழ்ந்தார். அச் சூழ்நிலை இறுதியில் இவரை வீழ்த்தியது.

5. **பிஸ்மார்க்கின் செயல் திறன் :** 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த தலைசிறந்த அரசியல் வல்லுநர் பிஸ்மார்க் எனில் மிகையாகாது. இவரே மூன்றும் நெப்போலியனை இறுதியில் வீழ்த்தியவராவார். பிஸ்மார்க்கின் வளர்ச்சிக்கே பெரிதும் துணையாயிருந்தவர் மூன்றும் நெப்போலியனுவார். வியன்னு மாநாட்டின் ஏற்பாடுகளை உடைத்து, மீண்டும் ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை மைய ஐரோப்பாவில் நிறுவும்பொருட்டு, ஆஸ்திரி யாவினை எதிர்த்து இத்தாலியினையும் ஜெர்மனியினையும் ஆதரித்தார் இவர். ஆஸ்திரிய ஆதிக்கத்தினை முறியடிக்க பெரும் பிரஷ்யா வினையும் இவர் உருவாக்கினுர். ஆஸ்திரிய-பிரஷ்யப் போருக்குப் பின்னர், பிரஷ்யா மாபெரும் வல்லரசாக மாறியது. 1866-க்குப் பின்னர்தான், மூன்றும் நெப்போலியன் தமது தவற்றினை உணர்ந்தார்.

1870-ல் பிஸ்மார்க்கை யெதிர்த்து, ஃபிரான்சு, இத்தாலி, ஆஸ்திரியா ஆகிய நாடுகளின் கூட்டணி யொன்றினை இவர் உருவாக்கப் பெரிதும் முயன்றுர். ஆயினும், பிஸ்மார்க் தமது அரசியல் நுட்பத்தால் தடுத்து நிறுத்தினுர். 1866-ல் ஆஸ்திரிய-பிரஷ்யப் போரில் இத்தாலி பிரஷ்யாவை ஆதரித்தது இந்த உதவிக்காக வெனிஷியாவை ஆஸ்திரியாவிடமிருந்து பெற்று, இத்தாலிக்கு வழங்கினுர் பிஸ்மார்க் இதனல், பிஸ்மார்க் இத்தாலியரின் உற்ற நண்பராஞர். 1866-க்குப் பின்னர் இத்தாலி ஐக்கியத்திற்கு உட்படாத ஒரே ஒருபகுதி ரோம் மட்டுமே. அதற்குக் காரணம், மூன்றும் நெப்போலியனே யாவார். ஃபிரெஞ்சுப் படையொன்றினைப் போப்பாண்டவருக்கு ஆதரவாக அங்கு வைத்திருந்த காரணத்தால், இத்தாலி ஐக்கியம் அங்கு முற்றுப் பெறவில்லை ஆகவே, மூன்றும் நெப்போலியன் 1866-க்குப் பின்னரும் இத்தாலியின் பகைவராகக் கருதப் பட்டார். ஆகவே 1870-ல் இத்தாலியின் நட்பை மூன்றும் நெப்போலியன் பெற முயன்றபோது, இத்தாலி அதற்கு உடன் படவில்லை. இதற்குக் காரணம், பிஸ்மார்க்கே யாவார். அவரது மறைமுகமான தூண்டுதலால், இத்தாலி ஃபிரான்சின் நட்பை யேற்க மறுத்தது. 1870-இல் மூன்றும் நெப்போலியன் ஆஸ்திரியத் துணையை நாடியபோது, அது அவருக்குத் துணைபுரிய முற்றிலும் மறுத்துவிட்டது. பிஸ்மார்க் 1866-க்குப் பின்னர், ஆஸ்திரியாவிடம் மிக்க நட்பு பாராட்டினுர். அதற்குப் பல சலுகைகளை வழங்கினுர். ஆஸ்திரியாவும் ஒரு ஜெர்மன் அரசுதான். ஜெர்மன் அரசுக்குத்

துன்பம் தருவது தமது நோக்கமல்ல என்பதை நயம்பட எடுத்தியம்பினர் பிஸ்மார்க். ஆஸ்திரியாவும் அவரது கொள்கையைப் பெரிதும் போற்றி வரவேற்றது. மூன்றும் நெப்போலியனை அது வெறுத்தும் ஒதுக்கியது. இது பிஸ்மார்க்கின் மாபெரும் சூழ்ச்சித் திறனின் சாதனையாகும்.

மேலும், ஆஸ்திரியாவும் ரஷ்யாவும் நட்பு நாடுகள். ஆனல், ஃபிரான்சும் ரஷ்யாவும் பகை நாடுகள். ரஷ்யாவைப் பகைத்துக் கொண்டு ஆஸ்திரியா ஃபிரான்சுடன் சேர மறுத்துவிட்டது. மூன்றும் நெப்போலியன் ரஷ்ய உதவியை நாடியபோது, அதனையும் தடுத்தார் பிஸ்மார்க். கிரிமியப் போருக்குப் பின்னரும் மூன்றும் நெப்போலியன் ரஷ்யாவின் நட்பைப் பெறத் தவறிவிட்டார். போலந்துப் புரட்சியின்போது, அதில் தலையிட்டு ரஷ்ய நட்பையிழந்தார். 1869-க்குப் பின்னர், துருக்கியுடன் போர் செய்ய நினைத்த ரஷ்யா, கருங்கடல் வழியே தனது போர்க் கப்பல்கள் செல்வதை ஃபிரான்சு எதிர்க்க வேண்டாமென வேண்டியது அதற்கு மூன்றும் நெப்போலியன் செவி சாய்க்கவில்லை, இதனையறிந்த பிஸ்மார்க், ரஷ்யாவை முற்றிலும் ஆதரித்தார். இதனல், மகிழ்ந்த ரஷ்யா பிரஷ்யாவையே பெரிதும் போற்றியது. 1870-ல் நிகழ்ந்த ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போரின் போது ரஷ்யா நடுநிலை வகிக்க வேண்டுமென பிஸ்மார்க் வேண்டியபோது ரஷ்யா அதனை ஏற்றுக்கொண்டது. ஃபிரான்சு ரஷ்ய உதவியைப் பெறுவதையும் பிஸ்மார்க் தடுத்து நிறுத்தினர்.

பிஸ்மார்க், மூன்றும் நெப்போலியன் இங்கிலாந்துடன் நட்பு பாராட்டுவதையும் தடுத்தார். இவரது இழப்பீடு பெறும் கொள்கையை இங்கிலாந்து முற்றிலும் வெறுத்தது. மூன்றும் நெப்போலியன் பெல்ஜியத்தை இழப்பீடாகக் கேட்டதை வேண்டுமென்றே பெரிதுபடுத்தினர் பிஸ்மார்க். இங்கிலாந்து இதனைக் கண்டு பெரிதும் ஆத்திரமுற்றது. தன்னுடைய பாதுகாப்புக்குப் பெல்ஜியம் தனித்த நாடாக இருப்பதே உகந்தது என இங்கிலாந்து கருதியது. ஹாலந்து, பெல்ஜியம் போன்ற ஐரோப்பியக் கடற்கரை நாடுகள் இங்கிலாந்தின் பாதுகாப்புக்குத் தேவையான நாடுகள். அவை கடல்மட்டத்திற்குத் தாழ்ந்து காணப்பட்டதாலும், அங்கிருந்து இங்கிலாந்துக்குச் செல்லுதலும் எளிதாகும். ஆகவே, இங்கிலாந்து பெல்ஜியத்தினைச் சுதந்திர, நடுநிலை நாடாகவே இருக்கவேண்டுமென வலியுறுத்தியது. மூன்றும் நெப்போலியன் பெல்ஜியத்தினை இழப்பீடாகக் கேட்டதை அதனல் ஏற்றுக்கொள்ள இயலவில்லை. இச் சூழ்நிலையை உருவாக்கியவர் பிஸ்மார்க்கே. இதனல், மூன்றும் நெப்போலியன்

பெரிதும் இகழப்பட்டு. செல்வாக்கிழந்தார். இதுவும் அவரது வீழ்ச்சிக்கொரு காரணமாகும்.

6. **உள்நாட்டில் ஆதரவின்மை:** பெரிய நெப்போலியனைப் பின்பற்ற விரும்பிய சிறிய நெப்போலியன் அவரைப் போன்று திறமையானவர் அல்லர். மூன்றும் நெப்போலியன் எத்தகைய அரும்பெரும் செயல்களையும் செய்தாரில்லை. முதலாம் நெப் போலியனின் கொள்கைகளைச் செயல்படுத்துவதாகக் கூறிப் பதவிக்கு வந்த இவர், அதற்கு ஒழுங்கும், கட்டுப்பாடும், அமைதியும் வேண்டுமென அறிவித்தார். அதன்பொருட்டு, உரிமையினை நல்க மறுத்தார். 1860 வரை கட்டுப்பாடு என்ற பெயரில் அடக்கு முறையைக் கையாண்டார். பாராளுமன்றமும் செயலிழந்துபோனது. மக்களது வாக்கெடுப்பில் வந்த இப் பேரரசு மக்களுக்கு உரிமை நல்க மறுத்தது வியப்பேயாகும். மக்களாட்சியில் நம்பிக்கை மிக்க அனைவரும் அவரது தன்னுட்சியை எதிர்த்தனர். உள்நாட்டில் அவருக்கு எதிர்ப்பு மிகுந்தது.

இவரது ஆட்சி, குழப்பத்தின் சின்னமாக விளங்கியது இவரை ஆதரித்து நின்ற முடியரசுக் கட்சியினர்கூட, இவரை ஆதரிக்க மறுத்தனர். இவரது திறமையின்மையால். வல்லாட்சியும் நன்கு செயல்படவில்லை. இவர் ஒரு வல்லாட்சியாளர் எனினும், மக்களாட்சியின் காவலர் போன்று நடித்தார். இவரது வெளி நாட்டுக் கொள்கையும் சிறப்பிழந்துபோனது. இதனை முடியரசுக் கட்சியினர் வெறுத்தனர். இவரது ஆட்சியில் குடியரசுக் கட்சி யினரும் அமைதியுறவில்லை. உரிமைகள் பறிக்கப்பட்டதைக் கண்டு அவர்கள் பதறினர். பாராளுமன்றம் உரிமையிழந்ததைக் கண்டும் அவர்கள் வெகுண்டனர். கையூட்டு முறையில் தேர்தலில் வாக்காளர்களை அவர் விலைக்கு வாங்குதலையும் கண்டு, மக்கள் பொருமினர். குடிரசு என்ற பெயரில் அவர் புரிந்த தன்னுட்சியை அவர்கள் எதிர்த்தனர். சோசலிஸ்டுகளும் அவரை வன்மையாக எதிர்த்தனர். 1852-ல் இவர் செய்த சதியை அவர்கள் மறந்தார் களில்லை. அவரது சீர்திருத்தங்களாலும் அவர்கள் நிறைவு பெறவில்லை. அவற்றால். அவர்கள் மேலும் அதிருப்தியுற்றனர். அவரது சிறப்பற்ற வெளிநாட்டுக் கொள்கைகளை தேசியவாதிகள் முற்றிலும் வெறுத்தனர். இவற்றால் உள்நாட்டில் அதிருப்தியே மிகுந்தது. ஃபிரான்சின் பெருவாரியான மக்கள் கத்தோலிகர்கள். அவர்களும் இவரது இத்தாலியக் கொள்கை போன்றவற்றை ஆதரிக்கவில்லை. உள்நாட்டில் ஆதரவற்ற நிலையிலிருந்த இவரது ஆட்சி வீழ்ந்துபட்டதில் வியப்பேதுமில்லை.

இவருக்கு வாய்த்த அமைச்சர்களும் பெரும்பாலோர் திறமை யற்றவர்கள். திறமையானவர்களை இவர் ஆதரிக்கத் தவறினார். அவர்கள் பதவி நீக்கம் செய்யப்பட்டதால், நிர்வாகமும் சீர்குலைந்து போனது. முன்னுக்குப்பின் முரணான இவரது ஆட்சியை நல்லோரும், வல்லோரும், அறிஞர்களும் எதிர்த்தனர். 1869-ல் நடந்த பொதுத் தேர்தலுக்குப் பின்னர் தனது செல்வாக் கின்மையை நன்குணர்ந்தார் இப் பேரரசர். அரசியலமைப்பும் திருத்தப்பட ஒப்புதலளித்தார்; உரிமைகள் வழங்கவும் முன் வந்தார். மக்கள் விரும்பிய சீர்திருத்தங்கள் பலவற்றையும் புகுத்தத் துணிந்தார். அவப்பேறு காரணமாக, இத் திட்டங்கள் நிறைவேற்றப்படு முன்னரே 1870-ல் தோற்கடிக்கப்பட்டு இவர் பதவியும் துறந்தார். இரண்டாவது பேரரசும் கலைக்கப்பட்டது. ஃபிரான்சில் மூன்றாவது குடியரசும் நிறுவப்பட்டது. மக்களது ஆதரவின்றி எந்த அரசும் செயல்படுதல் அரிதென்பதற்கு இவரது ஆட்சியே நல்லதொரு சான்றாகும்.

# 8. இத்தாலி ஒன்றுபடுதல்

பெருமை மிக்க ரோமப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு, இத்தாலிய தீபகற்பத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரையும் ஒரே அரசின் கீழ் ஒன்றுபடுத்த மேற்கொண்ட முயற்சிகளனைத்தும் தோற்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்கூட, இத்தாலி, மெட்டர்னிக் கூறியது போன்று, வெறும் ' நிலவியல் சொற்றொடராக'வே (Geographical expression) காட்சியளித்தது. ஐரோப்பிய வல்லரசுகளின் ஆதிக்கப் போராட்டத்தின் போர்க் களமாக மாறிய இத்தாலி, வனப்பும் வலிமையும் ஆற்றலும் (தன்னைத்தானே ஆண்டுகொள்கின்ற) அரசாள் உரிமையும் இழந்து, சிதைந்து, சீர்கெட்டு நின்றது. இடைக் காலத்தின் தொடக்கத்திலிருந்து இத்தாலியின் பல்வேறு பகுதிகளும் ஒன்றோ டொன்று போரிட்டு, ஒன்றை மற்றொன்று அடக்கவும் ஆளவும் முயன்று, தங்கள் சக்திகளை வீணடித்தன. "இத்தாலியில் மாநிலங்கள் மாநிலங்களுக் கெதிராகவும், நகரங்கள் நகரங்களுக் கெதிராகவும், குடும்பங்கள் குடும்பங்களுக் கெதிராகவும், மனிதர்கள் மனிதர்களுக்கெதிராகவும் இருக்கின்றனர்" என்று மெட்டர்னிக் எழுதினார். தீவகற்பத்தின் வெவ்வேறு பகுதிகள் வெவ்வேறு சமயங்களில் ஸ்பானிய, ஃபிரெஞ்சு, ஆஸ்திரிய அல்லது ஜெர்மனிய ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. ஆனால், இத்தாலிய மக்கள் ஸ்பானியர்களாகவோ, ஃபிரெஞ்சுக்காரர் களாகவோ, ஆஸ்திரியர்களாகவோ, ஜெர்மனியர்களாகவோ மாறிவிடாமல், தங்கள் தனித் தன்மைகளைக் காத்துவந்தனர். வரலாறு காணாத பெரும் பேரரசை நிறுவியவர்கள் தாங்கள் என்ற பெருமையும், டாண்டேயின் (Dante) கவிதைகளும் மறுமலர்ச்சிக் காலத்தில் உயர்த்தெழுந்த பண்டைய மரபுகளின் நினைவுகளும், ஃபிரெஞ்சுப் பேரரசர் நெப்போலியன் காலத்தில் இத்தாலியர்கள் பெற்ற அனுபவமும், மக்களிடையே தேசிய உணர்வை வளர்த்தன. இத்தாலியின் எல்லைகள் இந்த உணர்வுக்கு உரமிட்டன. ஐரோப்பாக் கண்டத்தில் இத்தாலிக்கு அமைந்திருக்கும் இயற்கை எல்லைகள் போன்று, வேறெந்த நாட்டிற்குமில்லை. வடக்கே ஆல்ப்ஸ் (Alps) மலையும் மற்ற மூன்று பக்கங்களில் ஆழ்கடலும் இந் நாட்டின் இயற்கை அரண்களாக அமைந்து, இத்தாலியரிடையே நாட்டுப்பற்றை ஊக்கின.

இத்தாலிக்குப் புத்துயிர் ஊட்டப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தலைவர்கள் முயன்றபொழுது, பல தடைகள் அவர்களைத் தடுத்தன. நாட்டின் பெரும் பகுதி அந்நியர் ஆட்சிக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது. ஆஸ்திரியா ஆண்ட பகுதிகளை விடுவிப்பது எங்ஙனம் என்பது தெரியாமல் அரசர்களும் அமைச்சர்களும் திகைத்தனர். இத்தாலியின் பல பகுதிகளை நேரடியாகவோ, மறைமுகமாகவோ அது ஆட்சி செய்தது. மற்றப் பகுதிகளிலும் அதன் செல்வாக்கினுக்குக் குறைவில்லை. அதன் படைப் பலத்தையும் பண பலத்தையும் எதிர்த்துப் போராட இத்தாலியர் அஞ்சினர். போப்பாண்டவர் ஆளுகையின் கீழ் இருந்த 'திருச்சபை நாடுகள்' (States of the Church) என்றழைக்கப்பட்ட பகுதிகளை அவரிடமிருந்து மீட்பதும் இயலாத செயலாகத் தோன்றியது. திருச்சபையின் செல்வத்தையும் செல்வாக்கையும் வளர்க்க உலகெங்கிலுமுள்ள கத்தோலிக்க அரசுகள் தயாராக இருந்த நேரத்தில் போப்பாண்டவரின் மாநிலங்களை அவரிடமிருந்து மீட்பது என்பது மனித சக்திக்கு அப்பாற்பட்ட செயலாக எண்ணப்பட்டது. திருச்சபையின் தலைவரைப் பகைத்துக்கொள்வதனால் உண்டாகும் விளைவுகள் விபரீதமானவையாய் இருக்கும் என மக்களஞ்சினர். இத்தாலிய மக்களின் தேசிய எண்ணங்களைத் தட்டி எழுப்புவதும் எளிதான காரியமாக இல்லை. மக்களின் அறியாமையும் அலட்சியப் போக்கும் தலைவர்களுக்கு ஏமாற்றத்தைத் தந்தன. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு என்ற பொன் மொழியின் பொருளை உணர்ந்தோர் மிகச் சிலராகவே இருந்தனர். இவ்வளவு இன்னல்களுக்கிடையே இத்தாலியின் ஐக்கியம் நிறைவேறியது என்றால், அது அந்த இயக்கத்தை முன்னின்று நடத்திய தலைவர்களின் திறமையினாலும் தன்னலமற்ற தியாகத்தினாலும்தான் என உறுதியாகக் கூறலாம்.

தற்கால ஐரோப்பிய வரலாற்றில் ஐக்கிய இத்தாலி என்னும் கனவை முதன்முதலில் நினைவாக்கிய பெருமை பேரரசர் நெப்போலியனையே சாரும். இத்தாலி அவருடைய ஆட்சிக்கு உட்பட்டிருந்த நாள்களில் நாடெங்கிலும் ஒரே மாதிரியான ஆட்சி முறை நிலவியது. மக்களனைவரும் ஃபிரெஞ்சு சட்டத் தொகுப்புகளை ஏற்றனர். புரட்சிக் கருத்துகளான 'சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்' போன்றவை மக்கள் மனத்தில் ஒரு புதிய வேகத்தையும் விழிப்பையும் உண்டாக்கின. அரசாங்கமும் நேர்மையோடும் திறமையோடும் செயல்பட்டது. இத்தாலி என்பது நிலவியல் அமைப்பு மட்டுமன்று, நல்லதொரு நாடும்கூட என்ற எண்ணம் மக்களுக்குத் தோன்ற ஆரம்பித்தது. ஆனால், வெண்ணெய் திரண்டு வருகிறபொழுது தாழி உடைந்தது போல, நெப்போலியனுடைய வீழ்ச்சி மக்களின் நம்பிக்கையைப்

பொய்யாக்கியது. எனினும், இந்த அனுபவத்தின் விளைவாக, இத்தாலி ஒரே நாடு என்ற கருத்து மக்கள் நெஞ்சில் நிலைத்து நின்றது.

1815-ல் கூடிய வியன்னா மாநாடு, இத்தாலியைப் பல பகுதிகளாகப் பிரித்து, அவற்றின் ஆட்சியைப் பல அரச குலங்களின் உரிமையாக்கியது. இந்த ஏற்பாடு அடுத்த அரை நூற்றாண்டு வரை நீடித்தது. 'இராஜ தந்திர விளையாட்டில் இத்தாலி ஒரு காலாட் காயாகக் கையாளப்பட்டது'[1] என்ற லிப்சனின் கூற்று இங்கு நினைவுகூரத்தக்கதாகும். இத்தாலியின் வடக்கிலிருந்த லொம்பார்டி, வெனிசியா ஆகிய இரு மாநிலங்கள் ஒன்றாக்கப்பட்டு, ஆஸ்திரியாவுக்கு வழங்கப்பட்டன. இவ்விரு மாநிலங்களும் ஆஸ்திரியப் பேரரசின் அங்கமாகவே மாறின. லொம்பார்டி, வெனிசியா ஆகியவற்றின் கூடுதல் மக்கள் தொகை ஆஸ்திரியப் பேரரசின் மக்கள் தொகையில் எட்டில் ஒரு பங்குக்கும் குறைவாக இருப்பினும், அதன் வருவாயில் நான்கில் ஒரு பங்குக்கு மேலாக இம் மாநிலங்களிடமிருந்து வசூலிக்கப்பட்டது. ஆஸ்திரிய ஆட்சி, திறமை மிக்க ஆட்சியாக இருந்தது உண்மையென்றாலும், அது எதேச்சாதிகார ஆட்சியாகச் செயல்பட்டதால், இத்தாலியர் அதை வெறுத்ததில் வியப்பில்லை. மெட்டர்னிக் முறை (Metternich System) என அழைக்கப்பட்ட அடக்குமுறை ஆஸ்திரிய ஆட்சியின் அடிப்படை அம்சமாக இருந்து, மக்களின் அதிருப்தியை நாளுக்கு நாள் அதிகரித்தது.

டஸ்கனி (Tuscany), மொடினா (Modena), பார்மா (Parma), லூகா (Lucca) ஆகிய நான்கு மாநிலங்களும் (ஆஸ்திரியாவை ஆண்ட) ஹாப்ஸ்பர்க் அரச குலத்தினருக்குத் தரப்பட்டன. டஸ்கனி ஒரு விதிவிலக்காக அமைந்து, நல்லாட்சியின் நன்மைகளைப் பெற்றதோடு, ஐரோப்பாவின் மற்றப் பகுதிகளில் தொழில், விவசாயம், வர்த்தகம் ஆகிய துறைகளில் ஏற்பட்ட மாற்றங்களை வரவேற்றது. இத்தாலிய தீபகற்பத்தில் குடி மக்களுக்குப் பயனுள்ள வகையில் ஆட்சி செய்த ஒரே அரசு டஸ்கனி மட்டுமேயாகும். மொடினாவில் வல்லாட்சியே இயங்கியது. பார்மாவை ஆண்ட நெப்போலியனின் விதவை மேரி லூயி (Marie Louise), ஆஸ்திரிய இளவரசியாய் இருந்தாலும் ஃபிரெஞ்சு ஆட்சி முறைகளைப் பின்பற்றினார்.

1 "At the vienna congress national aspirations were ignored and Italy was treated merely as a pawn in the diplomatic game. Lipson. Europe in the 19th & 20th Centuries—161.

பீட்மாண்டும் சார்டீனியா என்ற தீவும் சார்டீனிய அரசு (Kingdom of Sardinia) என்ற பெயரில் சவாய் அரச குலத்தினருக்கு (House of Savoy) அளிக்கப்பட்டது. அரசர் முதலாம் விக்டர் இமானுவேல் பிற்போக்கு ஆட்சியை நிறுவி, மக்களின் உரிமைகளைப் பறிக்க முயன்றார். அடுத்த ஐம்பது ஆண்டுகளில் இத்தாலிய ஐக்கியத்துக்கு இந்த அரச குடும்பம் செய்த சேவை ஏராளமாகும்.

ரோமக்னு (Romagna), அன்கோனு (Ancona), அம்பிரியா (Umbria), புனித பீட்டரின் பாட்ரிமனி (St. Peter's Patrimony) ஆகிய பகுதிகளில் போப்பாண்டவரின் ஆட்சி நடைபெற்றது. இத் திருச்சபை நாடுகளில் நடைபெற்ற அலங்கோலமான ஆட்சி எல்லா விதமான ஊழல்களுக்கும் உறைவிடமாய்த் திகழ்ந்தது. மற்ற அரசுகளுக்கு எடுத்துக்காட்டாகத் திகழவேண்டிய திருச்சபை அரசுகள், அநீதிக்கும் அக்கிரமங்களுக்கும் இடமளித்து திருச்சபையின் தூய்மையைக் களங்கப்படுத்தின.

இத்தாலியின் தென் கோடியிலிருந்த நேப்பிள்சும் அதை அடுத்திருந்த சிசிலித் தீவும் 'இரட்டைச் சிசிலிகள்' (Kingdom of the Two Sicilies) என்ற பெயரில் ஒரு நாடாக அமைக்கப்பட்டு, பூர்போன் அரச குலத்துக்கு உரிமையாக்கப்பட்டது. சட்டமும் ஒழுங்கும் மறைந்து ஆட்சி நடைபெறுகிறதா என்று ஐயப்படுகிற அளவுக்குப் பூர்போன் வம்சத்து ஃபெர்டினன்டின் (Bourbon Ferdinand) அரசாங்கம் வலிமை குன்றிச் செயல்பட்டது. இந்த நிலையைத்தான் பிரிட்டனில் கிளாட்ஸ்டன் (Gladstone) 'கடவுள் இன்மை'[1] என விவரித்தார். திருச்சபை நாடுகளையும் இரட்டைச் சிசிலியையும் ஆஸ்திரியா நேரடியாக ஆளவில்லை என்றாலும், அங்கும் அதன் செல்வாக்கு குறையவில்லை.

1845-ஆம் ஆண்டில் மாசினி (Mazzini) இத்தாலியைப் பற்றி எழுதுகிறபொழுது, இரண்டு கோடிக்கும் மேற்பட்ட மக்களைக் கொண்ட இத்தாலி, ஏழெட்டுப் பகுதிகளாகத் துண்டாடப்பட்டு, ஒன்றிற்கொன்று தொடர்பில்லாமல், அருகருகே இருந்தும்கூட அந்நிய நாடுகள் மாதிரி பழகிய விதத்தைக் குறிப்பிடுகிறார்.[2] அரசியல், பொருளாதாரம், பண்பாடு ஆகிய எல்லாத் துறைகளிலும்

[1] 'The Negation of God Erected into a system of Government Gladstone's vivid phrase quoted by C. D. M. Ketelbey, A History of Modern Times—231.

[2] Mazzini quoted by Lipson, Europe in the 19th & 20th Centuries 162—163.

நாடு பிரிந்து நின்றது. ஆஸ்திரியப் படைகள் 'நான்கரண்கள்' (The Quadrilateral) என்றழைக்கப்பட்ட வெரோனு (Verona), மெண்டுவா (Mantua), பெஷீரா (Peschiera), லெக்னுனே (Legnano) ஆகிய நான்கு கோட்டைகளிலும் நிறுத்தப்பட்டு விடுதலை இயக்கங்களை நசுக்கின. ஆஸ்திரிய ஆட்சி மீதிருந்த வெறுப்பே வெறியாக மாறி, அந்த அடக்குமுறை ஆட்சியை முறியடிக்க எல்லாவிதமான தியாகங்களையும் செய்ய மக்களைத் தூண்டியது. ஆஸ்திரிய ஆட்சியைக் கவிழ்க்கவும், அரசியல் உரிமைகளைப் பெறவும் கார்பொனரி (Carbonari) என்ற பெயரில் நாடெங்கிலும் இரகசிய அரசியல் கழகங்கள் தோன்றின. குருமார்களிலிருந்து குடியானவர்கள் வரை இக் கழகத்தைத் தங்கள் விடுதலைப் போராட்டத்தின் மையமாகக் கருதினர். கார்பொனரிக் கழகத்தின் பிறப்பிடம் நேப்பிள்சாக இருப்பினும், இத்தாலி முழுதும் இது பரந்து பரவி பல்லாயிரக் கணக்கான இத்தாலியருக்கு விடுதலை வேட்கையை ஊட்டியது. 1820, 1821 ஆகிய ஆண்டுகளில் நேப்பிள்சிலும் பீட்மாண்டிலும் தோன்றிய புரட்சிகளும், 1831 ல் மொடினுவிலும் திருச்சபை நாடுகளிலும் தோன்றிய புரட்சிகளும் கார்பொனரியின் தூண்டுதலின்பேரில் நடந்ததாகவே கருதப்படு கின்றன. இக் கழகத்துக்குத் தெளிவான நோக்கமோ முறையான அமைப்போ இல்லை எனினும், மக்களிடையே விடுதலை உணர் வையும், ஒன்றுபட வேண்டும் என்ற எண்ணத்தையும் இது வெகு வேகமாக வளர்த்தது. இத்தாலியருடைய அரசியல் ஆர்வத்தை ஆஸ்திரியாவுக்கு எதிராகத் திசை திருப்ப எந்தவிதமான சாதனமும் இல்லாதிருந்த நாள்களில் கார்பொனரி அவர் களுடைய கருத்துகளுக்கு வடிவமைக்க அரும்பாடுபட்டது. இந்த வகையில் இந்தக் கழகத்தைக் கிரீஸில் 1814-ல் தோன்றிய 'ஹெட்டாரியா' (Hetairia Philike) என்ற கழகத்தோடும், ரஷ்யாவில் 1818-ல் தோன்றிய பொது நல ஒன்றியம் (Union of Public Good) என்ற அமைப்போடும் ஒப்பிடலாம். துருக்கியரை முதலில் கிரீசிலிருந்தும், பின்னர் ஐரோப்பாவிலிருந்தும் வெளி யேற்றுவதற்காக நிறுவப்பட்ட கழகமே ஹெட்டாரியாவாகும். விடுதலையைத் தங்கள் உயிர்மூச்சு எனக் கருதிய பொது நல ஒன்றியம் ரஷ்யாவின் வரலாற்றில் இடம்பெறக் கூடிய அளவுக்குச் சேவை செய்திருக்கிறது.

1820-ல் ஸ்பெயினில் நடந்த புரட்சி, நேப்பிள்ஸ் மக்களையும் புரட்சியில் ஈடுபடத் தூண்டியது. அரசர் முதலாம் ஃபெர்டினண்டு அரசியலமைப்பு ஒன்றை வழங்கும்படி வற்புறுத்தப்பட்டார். வட மேற்கில் பீட்மாண்டிலும் புரட்சித் தீ விரைவில் பரவியது. அரசர் விக்டர் இமானுவேல் அரசியலமைப்பொன்றை வழங்கி,

அதன்படி ஆட்சி செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டார். ஆனல், ஆஸ்திரியாவின் ஆற்றலுக் கெதிராகப் போராடக்கூடிய சக்தியற்ற நிலையில் இருந்த இத்தாலியில், புரட்சி இயக்கங்கள் நொடிப் பொழுதில் நசுக்கப்பட்டன. ஆஸ்திரியப் படைகள ரீட்டிப் (Rieti) போரில் நேப்பிள்ஸ் கலக்காரர்களைத் தோற்கடித்து, அரசியலமைப்பை ரத்து செய்து, மீண்டும் ஃபெர்டினன்டையே அரயணையில் அமரச் செய்தன. பீட்மாண்டின்மீது படையெடுத்து வந்த ஆஸ்திரியா நொவாராப் (Novara) போரில் புரட்சி ஆதரவாளர்களை முறியடித்து மீண்டும் எதேச்சாதிகார ஆட்சியே நிலவ வழிவகுத்தனர். இதையெல்லாங் கண்ட ஆங்கிலக் கவி பைரன் (Byron) 'சுதந்திரத்தைப் பற்றிக் கனவு கண்டதற்கே மக்கள் நாடு கடத்தப்பட்டனர்'[1] என்று எழுதினர். இத்தாலியில் ஆரம்பகால சுதந்திர இயக்கங்கள் தோற்றதற்கு இரண்டு காரணங்கள் கூறப்படுகின்றன. முதலாவதும் முக்கியமானதுமான காரணம், ஆஸ்திரியாவின் தலையீடாகும். இரண்டாவது காரணம், இயக்கத்துக்குத் தலைமை தாங்கி நடத்த தக்க தலைவர்கள் இல்லாதிருந்ததாகும். விடுதலைபெற அதுவரை மேற்கொண்ட முயற்சிகள் போதுமானவையல்ல. மேலும் சிறந்த முயற்சிகள் தேவை என்பதை இத்தாலியர் உணர்ந்தனர்.

1830ஆம் ஆண்டில் நடைபெற்ற ஃபிரெஞ்சுப் புரட்சியும் இத்தாலியை ஓரளவுக்குப் பாதித்தது. மத்திய இத்தாலியின் பல பகுதிகளில் கலகங்கள் தோன்றின. பார்மா, மொடின ஆகியவற்றை ஆண்ட அரசர்கள் நாட்டை விட்டு விரட்டப்பட்டனர். திருச்சபை நாடுகளில் போப்பாண்டவரின் ஆட்சிக்கெதிராக ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. ஆனல், ஆஸ்திரியா இக் கலகங்களை எளிதில் அடக்கியது. ஃபிரெஞ்சுப் பேரரசர் லூயி பிலிப், தங்களுக்கு உதவி செய்வார் என எதிர்பார்த்த இத்தாலியர் ஏமாந்தனர். இத்தாலி ஆஸ்திரியாவின் செல்வாக்குக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ கட்டுப்பட்டிருக்கிறவரை, அதன் ஐக்கியம் கானல் நீராகவே இருக்கும் என்பது உறுதியாகியது. இத்தாலியத் தலைவர்கள் தங்கள் நாட்டிலிருந்து ஆஸ்திரிய ஆட்சியை அகற்றுவதையே தங்கள் பெரும் பணியாகக் கருதினர். ஆஸ்திரிய ஆட்சியும் அடக்குமுறை ஒன்றை மட்டும் அதன் ஆட்சிமுறையின் அடிப்படையாகக் கொண்டு எந்தவிதமான மனிதாபிமானமும் இல்லாமல் எதேச்சாதிகார ஆட்சிக்கு எடுத்துக்காட்டாகத் தொடர்ந்து செயல்பட்டது. "சில்வியோ பெலிக்கோ"

[1] Men were 'prescribed' wrote Byron, 'for having dreamt of liberty' — Grant and Temperley, Europe in the Nineteenth and Twentieth Centuries—160.

(Sylvio Pellico) தான் பத்தாண்டுக் காலம் ஆஸ்திரியச் சிறையில் அனுபவித்த கொடுமைகளை 'என்ற சிறை வாழ்க்கை' (My Prisons-1832) என்ற நூலில் விவரிக்கிறார். அரசியல் கைதிகள் சிறைச்சாலைகளில் ஓய்வின்றி உழைத்ததாலும், உணவு பற்றுக் குறையாலும் இறந்ததை பெலிக்கோ உருக்கமாக விவரித்தார்.

ஐக்கிய இத்தாலியை உருவாக்க அரும்பாடுபட்ட தலைவர்களுள் மாசினி (Mazzini) (1805–1872) முதலாமானவராகக் கருதப் படுகிறார். சிறந்த அறிஞரும், எழுத்தாளருமான மாசினி 1805ஆம் ஆண்டு ஜெனோவா நகரில் ஒரு மருத்துவரின் மகனாகப் பிறந்தார். தமது தாயகத்தின்மீது மிக்க பற்றுகொண்ட இவர், கார்பொனரி இயக்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து அதில் பெரும் பங்கேற்றுப் பணியாற்றினார். தனது தாயகத்தின் ஒற்றுமையின்மையினைக் கண்ட இப்பெருமகன் அதற்காக வருந்தி எப்போதும் கறுப்பு உடையே அணியலானார். இலக்கியத்தில் பேரார்வம் கொண்ட அவர், அதனைத் தனது தாயக நலனுக்காகத் தியாகம் செய்தார். இவர் 1830ஆம் ஆண்டுப் புரட்சியில் பங்கேற்ற காரணத்தால், கைது செய்யப்பட்டுச் சிறை வைக்கப்பட்டார். சிறையிலிருந்து விடுபட்ட பின்னர், 1341ல் "இளம் இத்தாலி" என்ற கழகத்தினை உருவாக்கினார். இவர் நிறுவிய 'இளைய இத்தாலி' (Young Italy-1831) என்ற கழகம் இத்தாலி ஒரு 'சுதந்திரக் குடியரசு நாடாக' (a free, independent, and republican nation) அமைய வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தியது. மாசினியின் இளந் தொண்டர்கள் தங்கள் கண்ணீரையும் செந்நீரையும் நாட்டின் விடுதலைக்காகவும் ஐக்கியத்துக்காகவும் காணிக்கையாக்கத் தயங்க வில்லை. "இளைஞர்களைக் கிளர்ச்சிக்காரர்களின் தலைவராக்குங்கள்; இளம் இதயங்களில் புதைந்து கிடக்கும் ஆற்றலின் இரகசியம் உங்களுக்குத் தெரியாது" என்று கூறி, இத்தாலிய இளஞ் சிங்கங்களைத் தட்டி எழுப்பினார். 'கடவுள், மக்கள், இத்தாலி' (God, the People, and Italy) என்ற சொற்கள் மாசினியின் இளைஞர் அணியின் பேரொலியாக நாடெங்கிலும் எதிரொலித்தன. இலக்கியத்துக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் என்று ஆரம்பத்தில் ஆசைப்பட்ட மாசினி, இத்தாலியின் அவல நிலையைக் கண்டு, அரசியல் ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட்டு, நாடு கடத்தப்பட்டு, ஏறத்தாழ நாற்பது ஆண்டுகள் வரை ஃபிரான்சு, சுவிட்சர்லாந்து, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் வாழ்ந்து, இத்தாலி யரிடையே விடுதலை அடைந்தே தீரவேண்டும் என்ற விருப் பத்தையும், அதை அடைய முடியும் என்ற நம்பிக்கையையும் வளர்த்தார். இத்தாலியர் அனைவரும் தோளோடு தோள் நின்று ஆஸ்திரியாவுக்கு எதிராகப் போரிட்டால், அந்நியர் உதவி

இன்றியே ஆஸ்திரியாவின் ஆதிக்கத்திலிருந்து விடுபட முடியும் என்று உண்மையாக அவர் நினைத்தார். இத்தாலி விடுதலை அடைந்தால் மட்டும் போதாது, அதன் பல பகுதிகளும் ஒன்று சேர வேண்டும் என்ற எண்ணத்தை முதன்முதலில் வலியுறுத்தியவர் மாசினியே. இத்தாலியர் அனைவரும் ஒரே மண்ணில் பிறந்தவர்கள்; ஒரே மொழி பேசுகிறவர்கள்; பொதுவான மரபுகளைக் கொண்டவர்கள்; தனியானதொரு வரலாற்றுப் பெருமையும் இலக்கியப் பெருமையும் அவர்களுக்கு உண்டு என்றெல்லாம் தாயகம் நீத்து வாழ்ந்த நாள்களில்கூட, ஏடுகளில் எழுதி மக்களின் எண்ணங்களுக்கு உயிரூட்டினர். ஐக்கிய இத்தாலி உருவாவது உறுதி என்று நம்பிய மாசினி, ஐக்கிய இத்தாலியின் தீர்க்கதரிசி என்று வரலாற்றில் புகழ்ந்து பேசப்படுகிறார்.

கியோபெர்ட்டி (Giobertı) என்ற பாதிரியார் 1843ல் வெளியிட்ட 'இத்தாலியின் முதன்மை' (The Civil and Moral Primacy of Italians) என்ற நூலில் போப்பாண்டவரின் தலைமையின் கீழ் இத்தாலி ஒரு கூட்டாட்சியாக அமைக்கப்பட வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார். கியோபெர்ட்டியின் கருத்து பல இடங்களில் வரவெற்கப்பட்டபோதிலும், இரு வினாக்களுக்கு அது விடையளிக்காமல் இருந்தது பெருங் குறையே முதலாவதாக, ஆஸ்திரிய ஆட்சியிலிருந்து இத்தாலி விடுதலை பெறுவதற்கான வழிவகைகளை அவர் ஆராயவில்லை இரண்டாவதாக, திருச்சபை நாடுகளையே ஒழுங்காக ஆள முடியாத போப்பாண்டவர், இத்தாலி முழுவதையும் எவ்வாறு ஆளமுடியும் என்ற வினாவுக்கும் அவர் விடை கூறவில்லை. 1846-ல் ஒன்பதாம் பயஸ் (Pius-IX) புதிய போப்பாகப் பதவி ஏற்றபொழுது கியோபெர்ட்டியின் எண்ணம் நிறைவேறக்கூடிய தருணம் வந்துவிட்டதாகப் பலர் நினைத்தனர். பயஸ் தாராளக் கொள்கைகள் உடையவராகக் கருதப்பட்டார். திருச்சபை நாடுகளில் அரசியல் குற்றவாளிகள் மன்னிக்கப்பட்டனர்; அரசாங்கங்களின் எதேச்சாதிகாரப் போக்கு மாறியது; செய்தித் தாள்கள் மீதிருந்த அடக்குமுறை தளர்த்தப்பட்டது; அரசின் அலுவல்களை விவாதிக்க அமைச்சரவை ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. ரோமின் நகராட்சி நிர்வாகத்தை மேற்கொள்ள நகரசபை ஒன்று நிறுவப்பட்டது; ஊர்க்காவல் படை (Civic Guard) ஒன்றும் தோன்றியது. 1848-ல் ஓர் அரசலியமைப்புகூட, அறிவிக்கப்பட்டது. இந்தச் சீர்திருத்தச் செயல்களைக் கண்ட இத்தாலி முழுதும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தது. ஆனால், ஆஸ்திரியப் பேரரசு இந்த மாற்றங்களைக் கண்டு அஞ்சியது. 'தாராளப் போப்பைத் தவிர, எதற்கும் நாங்கள் தயாராக இருந்தோம்; இப்பொழுது அவரும் வந்துவிட்டார். இனி என்ன நடக்கும் எனக்

கூறமுடியாது' என்று மெட்டர்னிக் கூறினர். 1846, 1847 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் போப் பயஸ் ஐரோப்பாவின் ஈடு இணையற்ற தலைவராக விளங்கினர். பிற்போக்குச் சக்திகளின் சின்னம் எனக் கருதப்பட்ட போப்பே முற்போக்குக் கருத்துகளைச் செயற்படுத்துவதில் முன்னேடியாய்த் திகழ்ந்ததைக் கண்ட ஐரோப்பா, நடப்பதனைத்தும் கனவா நனவா என அதிசயித்தது.

போப்பின் ஆசியோடு மூண்ட புரட்சித் தீ, காட்டுத் தீ என இத்தாலி எங்கும் பரவியது. சிசிலி, நேப்பிள்ஸ், டஸ்கனி, பீட்மாண்ட், மிலான், வெனிஸ் ஆகிய இடங்களிலெல்லாம் மக்கள் கிளர்ந்தெழுந்தனர். சிசிலி முழுவதும் கிளர்ச்சிக்காரர்களிடம் சிக்கியதைக் கண்ட அரசர் இரண்டாம் ஃபெர்டினுண்டு, அதைச் சேர்ந்த நேப்பிள்சிலும் கிளர்ச்சி பரவாமலிருக்க அரசியலமைப்பு ஒன்றை அறிவித்தார். சிசிலியிலும் நேப்பிள்சிலும் அரசியலமைப்புக்கு உட்பட்டதைக் கண்ட இந்தாலியின் மற்றப் பகுதிகளிலும் மக்கள் கிளர்ந்தெழுந்தனர். டஸ்கனி மன்னர் லியோபால்டும் ஆரம்பத்தில் அரசியலமைப்பு ஒன்றை அறிவித்து, பின்னர் நாட்டை விட்டு நேப்பிள்சுக்குத் தப்பி ஓடினர். பீட்மாண்டின் அரசர் சார்லஸ் ஆல்பர்ட் அரசியலப்பை அளிக்கும் ஆணைகள் பிறப்பித்தார். 1848-ல் முதல் மூன்று மாதங்களுக்குள்ளாகவே இத்தாலியில் ஆஸ்திரியாவின் நேரடி ஆட்சிக்குப்பட்டிருந்த பகுதிகளைத் தவிர, மற்ற எல்லா மாநிலங்களிலும் அரசியலமைப்புக்குக் கட்டுப்பட்ட முடியாட்சி (Constitutional monarchy) நிறுவப்பட்டது.

பல பகுதிகளில் புரட்சிக்குக் காரணமாயிருந்த போப் பயஸ், அந்த இயக்கம் மின்னல் வேகத்தில் பரவுவதைக் கண்டு அஞ்சி, அதிலிருந்து விலகிக்கொள்ள ஆரம்பித்தார். கிளர்ச்சிக்காரர்களின் விருப்பங்கள் அனைத்தையும் நிறைவேற்றுவது தன்னுடைய ஆட்சியைக் குழிதோண்டிப் புதைத்துவிடும் என்றும், தான் புரட்சியைத் தொடர்ந்து ஆதரித்தால், கத்தோலிக்க சமயத்தை எக்காலத்திலும் ஆதரித்து வந்திருக்கும் ஆஸ்திரியாவோடு போரிட வேண்டிவரும் என்றும் அஞ்சினர். கலகக்காரர்கள், அவருடைய அமைச்சர் ரோசியைக் (Rossi) கொலை செய்து ரோமைக் குடியரசாக்கினர். வேறு வழியின்றி ரோமிலிருந்து

[1] "We were prepared for everything," confessed Metternich, except for a liberal pope; now we have got one, there is no answering for anything." quoted by Lipson, Europe in the 19th and 20th Centuries—171.

வெளியேறிய போப், நேப்பிள்சில் கெட்டா (Geata) என்ற இடத்தில் அடைக்கலம் புகுந்தார். போப் எதிர்பாராத வகையில் பின்வாங்கியதைக் கண்டு, நாட்டுப்பற்று மிக்க இத்தாலியர் அனைவரும் ஏமாற்றமடைந்தனர்.

1848-ல் ஆஸ்திரியப் பேரரசின் தலைநகரிலும் மற்றப் பகுதிகளிலும் தோன்றிய புரட்சிகள் இத்தாலிய ஐக்கியத்தை மேலும் துரிதப்படுத்தின. இத்தாலியின் வட பகுதியிலிருந்த ஆஸ்திரிய மாநிலங்களான லொம்பார்டியாவும் வெனிசியாவும் ஆஸ்திரிய ஆட்சியிலிருந்து விடுதலையடையப் பெரும்பாடுபட்டன. லொம்பார்டியின் தலைநகரான மிலானில் (Milan) யாரும் புகை பிடிப்பதில்லை எனத் தீர்மானித்தனர். புகையின் மீதான வரியிலிருந்து ஆஸ்திரிய அரசாங்கம் பொருளீட்டுவதைத் தடுக்கவே இந்த ஏற்பாடு. இதனை ஒட்டி எழுந்த கலகங்கள் 'புகையிலைக் கலகங்கள்' (Tobacco Riots) என அழைக்கப்பட்டன. மிலானில் ஐந்து நாள்கள் தொடர்ந்து நடந்த கலகத்தின் விளைவாக, நகரை விட்டு ஆஸ்திரியப் படைகள் வெளியேறின. வெனிசில் இருந்த படைகளும் விரட்டப்பட்டு மானின் (Manin) என்ற வழக்கறிஞர் தலைமையில் அது குடியரசானதாக அறிவிக்கப்பட்டது. ஆஸ்திரியாவை எதிர்க்க இதுதான் தக்க தருணம் என எண்ணிய பீட்மாண்டின் அரசர் சார்லஸ் ஆல்பர்ட், போருக்குத் தயாரானார். "அரசாங்கத்துக்கும், மக்களுக்கும், அரசருக்கும ஒரே ஒரு வழிதான் திறந்திருக்கிறது; உடனடியாகப் போர் என்பதுதான் அது" என "ரிசார்ஜிமென்டோ" (Risorgimento) என்ற பத்திரிகையின் ஆசிரியரான கவூர் கூறினார். ஆஸ்திரியாவுக்கு எதிராகப் போர் தொடுத்த சார்லஸ் ஆல்பர்ட்டுக்கு உதவியாக இத்தாலியின் பல திசைகளிலிருந்தும் படைகள் வந்து குவிந்தன. இவை போகப் போகப் போரிலிருந்து விலகிக்கொள்ளவே சார்லஸ் ஆல்பர்ட், மனம் தளராமல் இறுதிவரை தனித்து நின்று போராடினார். முதலில் கஸ்டோஸா (Custozza, 23rd July 1848) என்ற போர்க்களத்திலும் பின்னர் நொவாரா (Novara, 23rd March 1849) என்ற போர்க்களத்திலும் ஆஸ்திரியத் தளபதி மார்ஷல் ரடட்ஸ்கி (Marshal Radetzky) புரட்சிப் படைகளைப் புறமுதுகிடச் செய்து, லொம்பார்டியும் வெனிசியாவும் ஆஸ்திரிய ஆட்சியின் கீழ் தொடர்ந்து இருக்கும்படி செய்தார். தோல்வியைக் கண்டு மனந் தளர்ந்த சார்லஸ் ஆல்பர்ட், அவருடைய மகன் இரண்டாம் விக்டர் இமானுவேலை அரசராக்கி முடி துறந்தார். டஸ்கனி, வெனிஸ், ரோம் ஆகிய இடங்களில் நிறுவப்பட்ட குடியரசுகள் நீக்கப்பட்டு, அவ்வரசுகள் பழைய அரசர்களிடமே திரும்பி அளிக்கப்பட்டன.

பீட்மாண்டின் புதிய அரசர் இரண்டாம் விக்டர் இமானுவேல், தந்தையின் புனிதப் பணியைத் தொடர்ந்தார். சார்லஸ் ஆல்பர்ட் அளித்த அரசியலமைப்பு நீடித்தது. இந்த அரசியலமைப்பை நீக்கிவிட ஆஸ்திரியா புதிய அரசரை வற்புறுத்தியபோதிலும், அவர் தன் போக்கில் இயங்கி அரசியலமைப்பைக் கடைசிவரை கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்தார். இத்தாலிய மக்கள் அனைவரும் இப்பொழுது இரண்டாம் விக்டர் இமானுவேலையே (1820—1878) தங்கள் விடுதலைக்கும் ஐக்கியத்துக்கும் நம்பியிருந்தனர். அந்த நம்பிக்கை வீணாகவில்லை என்பதைப் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் நிரூபித்தன. அமைச்சர் கவூர் (Count Cavour) (1810—1861) இரவு பகலென்று பாராமல் இத்தாலியன் நலனுக்கு, அறிவுடைமையோடும் ஆர்வத்தோடும் தம்மை அர்ப்பணித்துக்கொண்டார். ஃபிரான்சிலும் பிரிட்டனிலும் சுற்றுப் பயணங்கள் செய்த கவூர், அந்த நாடுகளில் அவர் கண்ட நல்ல அரசியல் நிறுவனங்களைப் போன்று, இத்தாலியிலும் நிறுவ விரும்பினார். தொழில் துறையிலும் வர்த்தகத் துறையிலும் அவை அடைந்திருக்கின்ற முன்னேற்றங்கள் இத்தாலியிலும் ஏற்பட வேண்டும் என ஆசைப்பட்டார். 1852-ல் அவர் முதலமைச்சராக அமர்ந்த பிறகு, நாட்டின் நிதி நிலைமையைத் திருத்தி அமைத்தார்; இருப்புப் பாதைகளை அபிவிருத்தி செய்தார்; ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கள் மீதான வரிகளைக் குறைத்தார்; அண்டை நாடுகளோடு வர்த்தக உடன்பாடுகளைச் செய்துகொண்டார்; விவசாயத்தையும் தொழிலையும் ஊக்குவித்தார். இதன் விளைவாக, நாட்டின் வருவாய் அதிகரித்தது. பெரும்படை ஒன்றையும் வைத்துப் பராமரிக்க முடிந்தது. மாசினி விரும்பியது போன்று, இத்தாலி ஒரு குடியரசாக ஆவதோ அல்லது கியோபெர்ட்டி நினைத்த மாதிரி ஒரு கூட்டாட்சியாக ஆவதோ இயலாது என எண்ணிய கவூர், அது சவாய் அரச குலத்தின்கீழ் ஒன்றுபட மக்களிடம் ஆதரவு திரட்டினார். பிரிட்டிஷ் அரசாங்கமும் கவூருடைய கருத்துக்கு ஆதரவு தெரிவித்து, சர் ஜேம்ஸ் ஹட்ஸன் (Sir James Hudson) என்பவரைத் தூதராகப் பீட்மாண்டின் தலைநகரான ட்யூரினுக்கு (Turin) அனுப்பியது.

இத்தாலியின் விடுதலையோ ஐக்கியமோ ஐரோப்பிய நாடுகளின் உதவியில்லாமல் சாத்தியமில்லை என்பதைக் கவூர் உணர்ந்தார். இத்தாலியின் பிரச்சினைகளை ஐரோப்பாவின் பிரச்சினைகளாக ஆக்கினால்தான், அவற்றிற்குத் திருப்திகரமான தீர்வு காண முடியும் என அவர் நினைத்தார். சர்வதேச சூழ்நிலையும் இதற்குச் சாதமாக அமைந்தது. 1854-ல் கிரிமியப் போர் (Crimean War) மூண்டபொழுது, ரஷ்யாவுக்கு எதிராக நேச நாடுகளின்

(Allies) தரப்பில் இத்தாலி கலந்துகொண்டது பதினையாயிரம் இத்தாலியர்கள் இந்தப் போரில் கலந்துகொண்டதன் விளைவாக, கவூர் பிரிட்டன், ஃபிரான்சு ஆகிய நாடுகளின் நட்பையும் நல்லெண்ணத்தையும் பெற்றார். கிரிமியப் போரின்பொழுது, நீர் நின்ற குழிகளிலிருந்து சண்டை செய்த இத்தாலியப் போர் வீரர் ஒருவர் ' இந்தச் சேற்றிலும் சகதியிலுமிருந்துதான் இத்தாலி உருவாகப் போகிறது ' என்று கூறியது நூற்றுக்கு நூறு உண்மையாகும். போரின் முடிவில் பாரிசு நகரில் நடந்த மாநாட்டில் (Congress of Paris) இத்தாலி பேச்சு வார்த்தைகளில் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட்டது. அது ஐரோப்பிய அரசுகளுள் ஒன்றாக அங்கீகரிக்கப்பட்டதற்கு அடையாளமாகக் கருதப்பட்டது. ஆஸ்திரிய ஆட்சியின் கொடுமைகளை மற்ற ஐரோப்பிய அரசுகளின் கவனத்துக்குக் கொண்டுவர கவூர் இம் மாநாட்டைப் பயன்படுத்திக் கொண்டார். ஃபிரெஞ்சுப் பேரரசர் மூன்றாம் நெப்போலியன் இத்தாலியன் அலுவல்களில் காட்டிய அக்கறையைக் கவனிக்கத் தவறவில்லை.

மூன்றாம் நெப்போலியன் இளைஞராக இருந்த நாள்களில் கார்பொனரிக் கழகத்தின் உறுப்பினராக இருந்து இத்தாலியின் விடுதலைக்காகப் போராடியிருக்கிறார். தேசிய இயக்கங்கள் எங்குத் தோன்றினும் அவற்றை ஆதரிப்பது தன் கடமை என எண்ணினார். 1815-ல் வியன்னா மாநாடு செய்த ஏற்பாடுகளை முதலாம் நெப்போலியனுக்குச் செய்யப்பட்ட அநீதியாக நினைத்த மூன்றாம் நெப்போலியன், ஆஸ்திரியாவுக்கெதிராக இத்தாலியை ஆதரிப்பதே நியாயமென நினைத்தார். 1858-ல் ஃபிரெஞ்சுப் பேரரசரையும் பேரரசியையும் கொலை செய்ய ஆர்சினி (Orsini) என்ற இத்தாலியர் வெடிகுண்டுகளை அவர்கள்மீது எறிந்தது, இத்தாலிய விடுதலைக்கு உதவி செய்யாதிருத்தல் தன் உயிருக்கு ஆபத்தை உண்டாக்கும் என்ற அச்சத்தைப் பேரரசருக்கு உண்டாக்கியிருக்க வேண்டும். கவூரும் மூன்றாம் நெப்போலியனும் ஜூலை 21—22-ல் பிளாம்பியர்ஸ் (Plombieres) என்ற இடத்தில் சந்தித்து, ஆஸ்திரியாவுக் கெதிராக ஃபிரான்சு இத்தாலிக்கு எந்த விதமான உதவியைச் செய்வதெனத் தீர்மானித்தனர் ஆஸ்திரியர்களை இத்தாலியிலிருந்து அகற்றி லொம்பார்டி, வெனிசியா, பார்மா, மொடினா, திருச்சபை நாடுகளின் ஒரு பகுதி ஆகியவற்றைப் பீட்மாண்டோடு இணைத்து வட இத்தாலிய அரசு (Kingdom of Northern Italy) என்பதாக ஓர் அரசையும், மத்திய இத்தாலியில் ரோம் நீங்கலாக எஞ்சிய பகுதியையும் டஸ்கனியையும் இணைத்து, மத்திய இத்தாலிய அரசு (Kingdom of Central Italy) என்பதாக ஓர் அரசையும், ரோம் நகரும் அதை அடுத்த

பகுதிகளும் போப்பாண்டவரின் ஆளுகைக்கு உட்படும்படியான ஓர் அரசையும், நேப்பிள்சில் தொடர்ந்து பூர்போன்களின் ஆட்சி நடக்குமாறு ஓர் அரசையும் அமைப்பது எனத் தீர்மானித்தனர். இந்த நான்கு அரசுகளும் போப்பின் தலைமையின் கீழ் ஒரு தளர்ந்த கூட்டாட்சியில் (Confederation) இணைவது என்றும் முடிவு செய்தனர். நீஸ் (Nice), சவாய் (Savoy) ஆகிய இரு இத்தாலிய மாநிலங்களை ஃபிரான்சு செய்யும் உதவிக்குப் பரிசாகத் தர கவூர் இசைந்தார். ஃபிரான்சுக்கும் பீட்மாண்டுக்கும் இடையேயுள்ள நட்பை, நெப்போலியனுடைய உறவினர் இளவரசர் ஜெரோமுக்கும் (Jerome) விக்டர் இமானுவேலின் மகள் க்ளாதில்டுக்கும் (Clothilde) மணம் முடித்து உறுதிப்படுத்துவது எனவும் நிச்சயிக்கப்பட்டது.

எந்த நேரத்திலும் ஆஸ்திரியாவோடு போர் மூளலாம் என்பதை உணர்ந்த கவூர், ஆஸ்திரிய எல்லையில் படைகளைக் குவித்தார். போரைக் கருத்தில் கொண்டே இருநூற்றைம்பது மைல்கள் நீலமுள்ள இருப்புப் பாதைகள் போடப்பட்டன. போர்ச் செலவுக்கு நிதி திரட்ட, 'போர்ப் பத்திரங்கள்' (War Bonds) வெளியிடப்பட்டன. தொண்டர் படை (Volunteer Army) ஒன்றும் திரட்டப்பட்டது. இந்த ஏற்பாடுகளைக் கண்ட ஆஸ்திரியா, இத்தாலி ஒரு மாதத்திற்குள் ஆயுதக் குறைப்பு செய்யவில்லையெனில், போர் தவிர்க்க முடியததாகும் என இறுதி எச்சரிக்கை விடுத்தது. போரைத் தவிர்ப்பதற்குப் பிரிட்டன் மேற்கொண்ட முயற்சிகள் தோற்றன. 1859-ல் ஆஸ்திரியப் படைகள் (Ticino) ஆற்றைக் கடந்தவுடன் போர் ஆரம்பமாகியது. ஆஸ்திரியாவின் தரப்பில் 5,20,000 காலாட் படையினரும், 60,000 குதிரை வீரரும், 1,500 பீரங்கிகளும் இருந்தபோதிலும் தக்க தளபதிகள் இல்லாத குறையால் அவர்களால் 10,000 பேரைக் கொண்டிருந்த இத்தாலியப் படையை வெல்ல முடியாமற் போயிற்று. நெப்போலியனுடைய தலைமையில் ஃபிரெஞ்சு வீரர்களும் இத்தாலியின் தரப்பில் போரிட்டு மெஜண்டா[1] (Magenta June 4, 1859) சால்பரினோ[2] (Solferino June 24, 1859) ஆகிய இரண்டு பெரும் போர்களில் ஆஸ்திரியப் படைகளைத்

1 இன்றைக்கு மெஜண்டா என்றால், சிவப்புச் சாயம் என்று பொருள். மெஜண்டாப் போர் முடிந்தவுடன் இந்தச் சாயப் பொருள் கண்டுபிடிக்கப்பட்டதால், இது மெஜண்டா என அழைக்கப்படுகிறது.

2 சால்பரினோச் சண்டை 19 ஆம் நூற்றுண்டின் மிகக் கொடூரமான சண்டைகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது ஆஸ்திரியர்களுள் 12,000 பேரும், இத்தாலியர். ஃபிரெஞ்சுக்காரர்களுள் 17,000 பேரும் உயிரிழந்தனர்; அல்லது காயமடைந்தனர். இந்தப் பேரிழைப்பைக் கண்ட சுவிஸ் மருத்துவரான ஹென்றி டுனண்ட் (Henry Dunant) சர்வதேசச் செஞ்சிலுவைச் சங்கத்தை (International Red Cross) ஆரம்பித்தார்.

தோற்கடித்து, லொம்பார்டியை வென்றனர். வெனிசியாவும் எந்தச் சமயத்திலும் வெல்லப்படலாம் என எதிர்பார்த்துக்கொண்டிருந்த இத்தாலியருக்கு, நெப்போலியன் ஆஸ்திரியப் பேரரசர் ஃபிரான்சிஸ் ஜோஸப்போடு (Francis Joseph) வில்லாபிராங்கா (Villafranca) என்ற இடத்தில் போர் நிறுத்த உடன்படிக்கை செய்துகொண்டு, போரிலிருந்து விலகியது பெருத்த ஏமாற்றத்தை உண்டாக்கியது. லொம்பார்டி பீட்மாண்டோடு இணைவது என்றும், வெனிசியர் ஆஸ்திரிய ஆட்சியின் கீழ் தொடர்ந்து இருப்பது என்றும், போரின் பொழுது தங்கள் நாட்டை விட்டோடிய டஸ்கனி, மொடினு ஆகியவற்றின் அரசர்களை மீண்டும் அவர்கள் அரியணையில் அமர்த்துவது என்றும், மேலே கூறப்பட்ட எல்லா நாடுகளும் போப்பின் தலைமையில் ஒரு தளர்ந்த கூட்டாட்சியில் சேர்ந்து வாழ்வது என்றும் வில்லாபிராங்காவில் தீர்மானிக்கப்பட்டது. வில்லாபிராங்கா முடிவுகள் பின்னர் சூரிச் உடன்படிக்கை (Treaty of Jurich) வாயிலாக, உறுதி செய்யப்பட்டன. பேரரசர் நெப்போலியன் போரை நிறுத்தியதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. சால்பரினோ போர்க்களத்தில் ஆயிரக் கணக்கான ஃபிரெஞ்சுக்காரர்கள் உயிர் நீத்தது அவரை மனங் கலங்கச் செய்திருக்கலாம். தன்னுடைய முயற்சியாலும் தன் வீரர்களின் உயிர்த் தியாகத்தாலும் உருவாகும் இத்தாலி, ஃபிரான்சைவிட வலுவான நாடாக மாறி, அதன் பாதுகாப்புக்கே இன்னல் விளைக்கக்கூடும் என அஞ்சியிருக்கலாம்; அல்லது இத்தாலியப் போரில் அவர் ஈடுபட்டிருக்கும்பொழுது பிரஷ்யா போன்ற பகை நாடுகள் ஃபிரான்சுமீது படையெடுக்கக்கூடும் என எண்ணியிருக்கலாம். காரணம் எதுவாக இருப்பினும், கவூருக்கு நெப்போலியனின் செயல் ஏமாற்றத்தை உண்டாக்கியதோடு, துரோகச் செயலாகக்கூடப் பட்டது. இரண்டாம் விக்டர் இமானுவேலைக் கலந்து ஆலோசிக்காமலேயே நெப்போலியன் போரிலிருந்து விலகிக்கொண்டதைக் கண்டு ஆத்திரமடைந்த கவூர், இத்தாலியர் மட்டுமாவது போரைத் தொடர்ந்து நடத்த வேண்டுமெனத் தன் அரசரை வேண்டிக்கொண்டார். அது இயலாது என்பதை உணர்ந்த அரசர், அமைச்சரின் ஆலோசனையை ஏற்க மறுக்கவே கவூர் பதவியிலிருந்து விலகினர்.

லொம்பார்டி, பீட்மாண்டு அரசோடு இணைக்கப்பட்டது. நெப்போலியன் போரிலிருந்து இடையிலேயே விலகியதால், சவாய் மற்றும் நீஸ் ஆகிய மாநிலங்கள் தனக்குத் தரப்படவேண்டும் என்று கேட்கவில்லை. ஆனல், வில்லாபிராங்காவில் செய்துகொண்ட மற்ற ஏற்பாடுகளை நிறைவேற்ற முடியவில்லை. போரின்பொழுது டஸ்கனி, மொடினு, பார்மா, ரோமக்னு ஆகிய இடங்களிலிருந்து

வெளியேறிய அரசர்களை மீண்டும் பதவியில் அமர்த்த இயலாமற் போயிற்று இப் பகுதிகளில் பொது மக்கள் பீட்மாண்டோடு இணைவதையே விரும்பினார்கள். தேசியக் கழகம் (National Society) போன்ற அமைப்புகள் பொது மக்கள் கருத்தை பீட்மாண்டுக்கு ஆதரவாக வளர்ப்பதில் பெரும் பங்கேற்றன. பிரிட்டனும் பழைய அரச குடும்பங்கள் மீண்டும் பதவிக்கு வருவதை வரவேற்கவில்லை. பிரிட்டிஷ் வெளி உறவு அமைச்சர் பால்மர்ஸ்டன் மத்திய இத்தாலியில் வாழும் மக்களுக்கு, மற்ற நாடுகளில் வாழும் மக்களைப்போல், தங்கள் அரசர்களை மாற்றும் உரிமை உண்டு என்றும், அவை பீட்மாண்டோடு அவற்றிற்கு அளவற்ற நன்மை பயக்கும் என்றும் கூறினர்.[1] இந்தச் சமயத்தில் பதவிக்குத் திரும்பிய கவூர், நெப்போலியனுடைய இசைவோடு டஸ்கனி, மொடினு, பார்மா, ரோமக்னு ஆகிய நான்கு இடங்களிலும் பொது மக்கள் நேர்முக வாக்கு (Plebiscite) நடத்தி, அந்த வாக்குகளின் முடிவுப்படி அவற்றை பீட்மாண்டோடு, இணைத்தார். இவ்வாறு உருவான புதிய பீட்மாண்டின் முதல் பாராளுமன்றம் 1860, ஏப்ரல் திங்கள், 2ஆம் நாள் ட்யூரினில் கூடியபொழுது மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தனர். 50,000 மக்களைக் கொண்ட பீட்மாண்டு, ஒரே ஆண்டில் 1,10,00,1000 மக்களைக் கொண்ட நாடாக மலர்ந்தது. 1815-க்குப் பிற்பட்ட ஐரோப்பாவின் மிகப் பெரிய அரசியல் மாற்றமாகக் கருதப்படுகிறது. வியன்னு மாநாடு எந்தெந்தப் பிற்போக்குக் கொள்கைகளை வளர்க்க வேண்டுமென்று நினைத்ததோ, அவையனைத்தும் ஒன்றன் பின் ஒன்றாக 1860-லிருந்து நிரந்தரமாகச் சிதைய ஆரம்பித்தன. மத்திய இத்தாலியில் மக்கள் கருத்தை அறிந்து அதன்படி நான்கு மாநிலங்களையும் பீட்மாண்டு அரசோடு சேர இசைந்த நெப்போலியனுக்குச் சவாய், நீஸ் ஆகிய இரு மாநிலங்களும் அளிக்கப்பட்டன. "நான் பிறந்த நாட்டிலேயே நீங்கள் என்னை ஓர் அந்நியனாக்கி விட்டீர்கள்"[2] என்று கரிபால்டி மனம் நொந்து கூற நேரிட்டாலும், அம்மாநில மக்கள் இனத்தாலும் மொழியாலும் ஃபிரெஞ்சுக்காரர் களாகவே கருதப்பட்டதால், இத்தாலி இதை ஓர் இழப்பு என எண்ண முடியாது.

[1] "The people of the duchies have as much right to change their Sovereigns," said Lord Palmerston, "as the English People, or the French, or the Belgian, or the Swedish. The annexation of the duchies to Piedmont will be an unfathomable good to Italy — Hazen, modern Europe, 331.

[2] "You have made me an alien in the land of my birth" Quoted by Southgate, A Text Book of modern European History, 1789—1960. p. 138—139.

**1859**-லும், **1860**-லும் நடந்த போர்கள் மற்றச் செயல்கள் விளைவாக இத்தாலியின் நிலையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது என்பது உண்மையானாலும், இத்தாலியின் ஐக்கியம் முழுமையடைய தொடர்ந்து முயற்சி செய்ய வேண்டியிருந்தது. வெனிசியா ஆஸ்திரியாவிடமே இருந்தது. ரோமக்னவைத் தவிர, மற்றத் திருச்சபை நாடுகள் போப்பாண்டவர் ஆட்சியில் இருந்தன. நேப்பிள்ஸ் அரசும் தனித்தே இருந்தது. இவை அனைத்தையும் போராலும் இராஜ தந்திரச் செயல்களாலும் பீட்மாண்டோடு இணைக்கும் செயலில் தலைவர்களும் தொண்டர்களும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டனர். " இராஜ தந்திரத்தால் வடக்கிலிருந்து இத்தாலியை உருவாக்குவதில் அவர்கள் என்னைத் தடுத்து விட்டார்கள். புரட்சியால் தெற்கிலிருந்து அதை நான் உருவாக்குவேன் "[1] எனக்கூறிய கவூர், அக்கம் பக்கத்து அரசர்களோடு உடன்படிக்கைகள் செய்து கொள்வதை விடுத்து, மாசினி, கரிபால்டி (1807—1882) போன்ற புரட்சியாளர்களின் உதவியை நாடினர்.

சிசிலியில், புதிய அரசரான இரண்டாம் ஃபிரான்சிஸ் (Francis-II) ஆட்சிக்கெதிராக மக்கள் கிளர்ச்சி செய்தனர். தேசியக் கழகத்தின் தலைவரான லா ஃபரீனு (La Farina) அடக்குமுறை ஆட்சி செய்யும் அரசருக்கெதிராகப் புரட்சி செய்யும்படி மக்களைத் தூண்டினர். ஃபிரான்செஸ்கோ கிரிஸ்பி (Francesco Crispi) என்ற புரட்சித் தலைவர் ஊர் ஊராகச் சுற்றுப் பயணம் செய்து, மக்களைக் கண்டு பேசி, நாற்பது ஆண்டுகளாக அவர்கள் அனுபவித்து வரும் கொடுமைகளிலிருந்து விடுபட ஒரே வழி புரட்சி தான் என்பதைத் தெளிவுபடுத்தினர். மாசினியும் கரிபால்டியும் இந்த இயக்கத்தில் கலந்துகொள்ள ஆரம்பித்த நாள் முதல், நேப்பிள்சும் சிசிலியும் விடுதலையடைவது உறுதி என்ற நம்பிக்கை ஏற்பட்டது. இளைஞராக இருந்த நாட்களிலிருந்து கரிபால்டி ஈடுபடாத விடுதலைப் போரே இல்லை எனக் கூறலாம். அவருடைய போராட்டங்களுக்காக அவர் அனுபவித்த தண்டனைகளும் கணக்கிலடங்கா. தீரச் செயல்கள் பல நிறைந்த அவருடைய வாழ்க்கை வரலாறு ஒரு "வீர காவியம்" (Garibaldian Epic) போலத் தோன்றுகிறது. அவருடைய தியாகத்தைப் பற்றிக் கேட்ட ஆயிரக் கணக்கான இத்தாலியர்கள், அவருடைய தலைமையின் கீழ் போரிடுவதைப் பெரும் பேருக நினைத்தனர்.

[1] " They have stopped me from making Italy by diplomacy from the north; I will make it by revolution from the south. " Quoted by Ketelbey, History of modern Times—231.

1860 ஏப்ரல் 4 அன்று நேப்பிள்சில் மெஸ்ஸினாவுக்கு (Messina) அருகே தோன்றிய கிளர்ச்சி ஒன்று அரசரின் சுவிஸ்-ஜெர்மனியக் கூட்டுப் படைகளால் எளிதில் அடக்கப் பட்டது. சர்வதேசக் கருத்துக்கு அஞ்சி கவூர் பகிரங்கமாகப் புரட்சியை ஆதிரிக்க முடியாத நிலையில் இருந்தபோதிலும், கரிபால்டிக்கு வேண்டிய உதவிகள் அனைத்தையும் இரகசியமாகச் செய்தார். 'ஆயிரவர்' (The Thousand) என அழைக்கப்படும் 1,150 போர் வீரர்களோடு கரிபால்டி சிசிலியின் மேற்குக் கரையிலுள்ள மார்சலா (Marsala) என்ற இடத்தில் மே திங்கள், 11-ஆம் நாள் இறங்கி, நான்கு நாள்கள் கழித்து கலடபிமி (Calatofimi) என்ற குன்றில் நேப்பிள்ஸின் (Neapolitan) படைகளைத் தோற்கடித்தார். மே திங்கள், 27-ஆம் நாள் இரவு தலைநகரான பாலர்மோவை (Palermo) வென்று தன்னைச் சிசிலியன் சர்வாதிகாரியாக அறிவித்துக்கொண்டார். தீவின் வடக்கில் மிலாஸா (Milazza) என்ற இடத்தில் நடந்த கடுமையான சண்டையில் வெற்றி பெற்ற பிறகு, மெஸ்ஸினாக் கோட்டை நீங்கலாகச் சிசிலித் தீவு முழுவதும் கரிபால்டியின் கைக்கு மாறியது. அரசர் இரண்டாம் ஃபிரான்சிஸ், நெப்போலியனை உதவிக்கு அழைத்தார். ஆனால், அவரோ, 'இது மக்கள் இயக்கமாக இருக்கிறது, இதைத் தடுப்பது இயலாத காரியம், நாம் செய்வதற்கு ஏதுமில்லை'[1] என்று கூறிவிட்டார்.

நேப்பிள்சைக் கைப்பற்றிய பிறகு, கரிபால்டி மெஸ்ஸினா கடற்காலைத் தாண்டி, தலைநிலத்தில் கலப்ரியாவை (Calabria) அடைந்தார். இரண்டாம் ஃபிரான்சிஸின் போர் வீரர்களுள் பெரும்பாலோர் அரசனைக் கைவிட்டுக் கரிபால்டியோடு சேர்ந்து கொண்டனர்; எஞ்சியிருந்த வீரர்களும் எளிதில் தோற்கடிக்கப் படவே அரசர் நாட்டைவிட்டு வெளியேறினார். அடுத்த நாளன்றே (செப்டம்பர், 7) கரிபால்டி மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்ய நேப்பிள்ஸ் நகருக்குள் நுழைந்தார். "இரண்டாவது இயேசு கிறிஸ்து" (a second christ) என மக்கள் அவரை வாழ்த்தி வரவேற்றனர்.

கரிபால்டியின் வெற்றிகளின் விளைவுகள் எப்படி இருக்கும் என்பதைப் பற்றிக் கவூர் கவலையடைந்தார். கரிபால்டி, மாசினியின் தலைசிறந்த சீடர்களுள் ஒருவர். நேப்பிள்சும் சிசிலியும் குடியரசாக அமையவேண்டும் என்று அவர் ஆசைப்படக்கூடும் எனக் கவூர்

1 "The power stands on the national side, and is irresistible. We stand defenceless before it." Quoted in Hamsworth History of the world volume xii, p. 5043.

அஞ்சினர்; அவர் ஆசை நிறைவேறுமானல், இத்தாலியின் ஐக்கியம் முற்றுப் பெறுமற்போகலாம். அடுத்து, கரிபால்டி வெற்றிப் பாதையில் தொடர்ந்து செல்லும் வகையில் ரோம் நகரைத் தாக்கினல், அது சர்வதேசப் பிரச்சினையாகிவிடும் என்ற அச்சமும் கவூருக்கு இருந்தது. கரிபால்டி ரோம் மீது படையெடுத்தால், அந் நகரைக் காத்து நிற்கும் ஃபிரெஞ்சுப் படைகளோடு சண்டையிடுவது தவிர்க்க முடியாததாகும். மற்ற கத்தோலிக்க நாடுகளும் போப்பிற்கு ஆதரவாகத் தலையிட்டு இதுவரை இத்தாலிய ஐக்கியததில் ஈடுபட்டிருக்கும் முன்னேற்றத்தைப் பாதிக்கச் செய்யலாம். இத் தருணத்தில் போப்பாண்டவரின் திருச்சபை நாடுகளில் அவருடைய ஊழல் மலிந்த ஆட்சிக்கெதிராக மக்கள் கிளர்ந்தெழ ஆரம்பித்தனர். போப்பும் அக் கிளர்ச்சியை அடக்க அயர்லாந்து, பெல்ஜியம், ஃபிரான்சு ஆகிய நாடுகளிலிருந்து தொண்டர் படை ஒன்றைத் திரட்டினர். படைக்கலைப்பு செய்யபீட்மாண்டு விடுத்த வேண்டுகோளைப் போப் நிராகரிக்கவே, இத்தாலியப் படைகள் திருச்சபை நாடுகள்மீது படையெடுத்துப் போப்பின் படைகளைக் கேஸல்ஃபிடார்டோ (Castelfiatardo) என்ற இடத்தில் முறியடித்தன. ரோமைத் தவிர, மற்ற எல்லாப் பகுதிகளையும் போப் இழந்தார்.

விக்டர் இமானுவேலின் தலைமையின்கீழ் இத்தாலியப் படைகள் நேப்பிள்சுக்குள் நுழைந்தன. கரிபால்டி அரசரைச் சந்தித்து, தான் வென்றிருந்த இரு பகுதிகளையும் பீட்மாண்டோடு இணைத்துக்கொள்ள இசைவு தெரிவித்தார். அரசர் அவருக்கு அளிக்க வந்த வெகுமதிகளனைத்தையும் வேண்டாமென்று மறுத்து, முன்னர் குடியிருந்த கேப்ரேரா (Caprera) என்ற சிறிய தீவுக்கே திரும்பிவிட்டார். இத்தாலியின் விடுதலைக்கும் ஐக்கியத்துக்கும் கரிபால்டி செய்த தியாகம் ஐரோப்பாவின் வரலாற்றில் ஈடு இணையற்றதெனக் கருதப்படுகிறது. புதிதாக வெல்லப்பட்ட திருச்சபை நாடுகளும் நேப்பிள்ஸ், சிசிலி, ஆகியவையும், மக்கள் தீர்ப்புப்படி பீட்மாண்டோடு இணைக்கப்பட்டன. புதிய இத்தாலியப் பாராளுமன்றம் 1861 பிப்ரவரி 18ஆம் நாள் ட்யூரினில் கூடி இரண்டாம் விக்டர் இமானுவேலை இத்தாலியின் அரசர் என அறிவித்தது. பிளாரன்ஸ் புதிய அரசின் தற்காலிகத் தலைநகராக ஏற்கப்பட்டது. வெனிசியா, ரோம் ஆகிய இவை நீங்கலாக இத்தாலியின் மற்ற எல்லாப் பகுதிகளும் இப்பொழுது ஒரே ஆட்சியின் கீழ் வந்துவிட்டன. இவை இரண்டும் இத்தாலிய ஐக்கியத்தில் சேர்வது உறுதி என்ற நம்பிக்கையோடு கவூர் 1861 ஜூன் திங்கள் உயிர் நீத்தார்.

வெனிசியாவையும் ரோமையும் வெல்வதற்குக் கவூர் காலத்தில் பின்பற்றப்பட்ட இராஜதந்திர முறைகளே இப்பொழுதும்

பின்பற்றப்படுகின்றன. ஆஸ்திரியாவுக்கும் பிரஷ்யாவுக்கும் இடையே 1866ல் நடந்த போரில் இத்தாலிய அரசு ஆஸ்திரியாவுக்கு எதிராகவும் பிரஷ்யாவுக்கு ஆதரவாகவும் போரிட்டது. ஆஸ்திரியாவால் இத்தாலியப்படை கஸ்டோஸாவில் தோற்கடிக்கப்பட்டதும், அதன் கடற்படை ஏட்ரியாட் கடலில் லிசாவுக்கு (Lissa) அருகே நடந்த போரில் அநேகமாக அழிக்கப்பட்டதும் உண்மை எனினும், ஆயிரக் கணக்கான ஆஸ்திரியர்களைத் தங்களோடு போரிடும்படி நிர்ப்பந்தித்து அவர்கள் பிரஷ்யாவுக்கு எதிராகப் போரிட முடியாத நிலையை ஏற்படுத்தியது, பிரஷ்யாவால் பேருதவியாகக் கருதப் பட்டது. சடோவாப் (Sadowa) போரில் பிரஷ்யா வெற்றி பெறவே, அது வெனிசியாவை ஆஸ்திரியாவிடமிருந்து பறித்து இத்தாலிக்கு அளித்தது.

ரோம் நகரம் இத்தாலியோடு இணையாதவரை அதன் ஐக்கியம் முற்றுப் பெற்றதாகாது என்பதை உணர்ந்த இத்தாலியர், தக்க தருணத்திற்குக் காத்திருந்தனர். 1849ஆம் ஆண்டிலிருந்து ஃபிரெஞ்சுப் படை ஒன்று ரோமைக் காத்து நின்றது. 1862லும், 1867லும் கரிபால்டி ரோமைத் தாக்கிப் பின் வாங்கினர். முதலாவதாக முயன்றபொழுது பீட்மாண்டியராலும், மறுமுறை முயன்ற பொழுது ஃபிரெஞ்சுக்காரர்களாலும் தோற்கடிக்கப்பட்டார். பிராங்கோ-பிரஷ்யப் போரின் (1870-71) பொழுது ஜெர்மனியப் படைகள் ஃபிரான்சுக்குள் நுழைந்த சமயத்தில் ஃபிரான்சின் தற்காப்புக்காக ரோமிலிருந்த ஃபிரெஞ்சுப் படைகள் திரும்ப அழைத்துக்கொள்ளப்பட்டன. இதைக் கண்ட இத்தாலியப் படைகள், 1870 செப்டம்பர், 2-ஆம் நாள் ரோமுக்குள் நுழைந்து அந்நகரைக் கைப்பற்றின. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அரசியலதிகாரங்களை அனுபவித்து வந்த போப்பாண்டவர், 1870லிருந்து சமயத் துறையில் மட்டும் கத்தோலிக்கர்களின் தலைவராக விளங்கும் நிலை எய்தினர். ரோமாபுரி மீண்டும் இத்தாலியின் தலைநகராக அமையும் பெருமை அடைந்தது. "இத்தாலியர்களுக்கே இத்தாலி" (Italy for Italians) என்ற நெடு நாளையக் கனவு இப்பொழுதுதான் நனவாகியது.

தொடக்கத்தில் லொம்பார்டி வெல்லப்பட்டது முதல், இறுதியாக ரோம் இணைக்கப்பட்டதுவரை, பீட்மாண்டு முடியாட்சியாக இருந்த காலத்தில்தான் நடைபெற்றது. ஆனால், மற்ற நாடுகளில் முடியாட்சிக்கு ஆதரவாக இருக்கும் சக்திகள் இத்தாலியில் இருந்ததாகத் தெரியவில்லை. அரசனைச் சுற்றிப் புகழ்மிக்கதொரு, பிரபுக்கள் கூட்டம் இருக்கவில்லை; அவர் பாரம்பரியம் மிக்க பழங்கால அரச வமிசத்தைச் சேர்ந்தவர் என்ற சிறப்பும் அவருக்கு

இல்லை; போர்க்களங்களில் வெற்றிகள் பல பெற்றவர் என்ற பெருமையும் அவருக்குக் கிடையாது. இருப்பினும் அரசர் மிகவும் நேர்மையானவர்; நிதானம் தவறாதவர் என்ற எண்ணம் மக்கள் மனத்தில் தோன்றியிருந்ததால், யாராலும் சாதிக்க முடியாது என நம்பப்பட்ட செயலை அவரால் சாதிக்க முடிந்தது. இத்தாலி ஐக்கியமடைந்த பிறகு, புதிய அரசாங்கம் முதல் பத்தாண்டுகள் வரை நல்ல அமைச்சர்கள், அதிகாரிகள் ஆகியோரின் சிறந்த சேவையால் செயல்பட்டது. ரிக்கசொலி (Ricasoli), லா மர்மாரா (La Marmara), லான்ஸா (Lanza), செல்லா (Sella), மின்கெட்டி (Minghetti), ஸ்பெவண்டா (Spaventa) ஆகியோரின் பெயர்கள் இத்தாலியில் இன்றைக்கும் நன்றியோடு நினைவுகூரப்படுகிறது.

# 9. ஜெர்மனிய ஐக்கியம்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் இத்தாலிபோன்றே ஜெர்மனியும் வெறும் நில இயல் அமைப்பாகவே விளங்கியது.[1] ஐக்கிய இத்தாலிக்கு வழிகோலிய பேரரசர் முதலாம் நெப்போலியனே, ஐக்கிய ஜெர்மனிக்கும் வித்திட்டார். 1648ஆம் ஆண்டின் வெஸ்ட்பேலியா உடன்படிக்கைப்படி (Peace of Westphalia) முந்நூறுக்கு மேற்பட்ட சிற்றரசுகளாகச் சிதைக்கப்பட்டிருந்த ஜெர்மனியில் முதன்முதலாகப் பதினுறு நாடுகளைக் கொண்ட 'ரைன் கூட்டரசு' (Confederation of the Rhine) என்ற அமைப்பை உருவாக்கிய பெருமை நெப்போலியனையே சாரும். மேலும், ஜெர்மனியரிடையே அதுவரை அவர்கள் கண்டிராத அளவுக்கு நாட்டுப்பற்றை வளர்த்தவரும் நெப்போலியனேயாவார். ஆனல், ஃபிரெஞ்சுப் பேரரசரை விழிப்படையச் செய்த சக்தியே அவருக்கெதிராக வெகுண்டெழுந்து விடுதலைப் போரில் (War of Liberation) அவரழிவுக்குக் காரணமாயிருந்தது.

1815ல் கூடிய வியன்ஞ மாநாடு, ஆஸ்திரியாவின் தலைமையில் முப்பத்தொன்பது நாடுகளைக் கொண்ட 'ஜெர்மனியக் கூட்டரசு' (The Germanic Confederation) என்ற புதிய அமைப்பு ஒன்றை நிறுவியது. ஆனல், ஜெர்மனிய தேச பக்தர்கள் எதிர்பார்த்த அளவிற்குக் கூட்டரசின் அரசியலமைப்பு நாட்டின் ஐக்கியத்தை வளர்க்கவில்லை. ஆஸ்திரியப் பேரமைச்சர் மெட்டர்னிக்கின் விருப்பு வெறுப்புகள் அடிப்படையில் புதிய அரசு இயங்கியதால், எங்கும் பிற்போக்குச் சக்திகளே செல்வாக்கு பெற்றிருந்தன. 'பிரஷ்யாவின் கொள்கை வியன்ஞவில் ஆக்கப்பட்டது' எனப் பிஸ்மார்க்கால் எழுதப்படும் அளவிற்குப் பிரஷ்யா போன்ற வலுவுள்ள நாடுகள்கூட ஆஸ்திரியாவுக்குப் பணிந்திருந்தன.

1817 அக்டோபரில் பிரஷ்யாவில் ஜேஞப் பல்கலைக் கழக மாணவர்கள், மார்ட்டின் லூதர் கத்தோலிக்க திருச்சபையை எதிர்த்த முந்நூறுவது ஆண்டு விழாவையும் நெப்போலியன்

[1] "The Germany of the nineteenth century... was, only slightly less than Italy, a mere geographical expression " Ketelbey. A History of Modern Times—p. 179.

தோற்கடிக்கப்பட்ட லீப்சிக் போரின் (Battle of Leipzig) நான்காம் ஆண்டு விழாவையும் வார்ட்பர்க் (Wartburg Festival) என்ற இடத்தில் கொண்டாடி ஜெர்மனியின் விடுதலையிலோ, ஐக்கியத்திலோ முன்னேற்றமில்லாத நிலையை எடுத்துக் கூறி, அவர்களின் வெறுப்புக்குரிய பல பொருள்களைத் தீயிட்டுக் கொளுத்தினர். இரண்டு ஆண்டுகள் கழித்து மார்ச் 1819ல், பிற்போக்குக் கொள்கைகளைப் பரப்பிய நாடக ஆசிரியரும் ரஷ்ய உளவாளி எனக் கருதப்பட்டவருமான கோட்ஸிபூ (Kotzebue) அதே பல்கலைக் கழக மாணவர்களால் கொல்லப்பட்டார். இதுபோன்ற புரட்சிகள் இனி நடைபெறாமல் தடுக்க மெட்டர்னிக் கார்ல்ஸ்பாட் (Carlsbad) என்ற இடத்தில் முக்கிய ஜெர்மனிய நாடுகளின் பிரதிநிதிகளை 1819ல் அழைத்து, ஜெர்மனியில் தாராளக் கருத்துகள் தலையெடுக்கா வண்ணம் செய்ய, 'கார்ல்ஸ்பாட் கட்டளைகள்' என்ற பெயரில் சில ஆணைகளைப் பிறப்பித்தார். பின்னர், இவை ஜெர்மனியப் பாராளுமன்றமான டயட்டாலும் (Diet) ஏற்கப்பட்டன. அவற்றின் படி பல்கலைக்கழகங்களில் பாடபோதனை அரசாங்கத்தால் கண்காணிக்கப்பட்டது. ஆசிரியர்களும் மாணவர்களும் அரசியல் காரணங்களுக்காக எந்தச் சமயத்திலும் வெளியேற்றப்படலாம் என்ற அச்சம் நிலவியது. அரசின் அனுமதியின்றி மாணவர் சங்கங்கள் செயல்படுவது தடை செய்யப்பட்டது. பத்திரிகைச் சுதந்திரமும் பறிக்கப்பட்டது. ஜெர்மனியில் மக்களிடையே அதிருப்தியை வளர்ப்பவர்களை விசாரிக்க மெயின்ஸ் (Mainz) நகரில் விசாரணைக்குழு ஒன்று நியமிக்கப்பட்டது. வெறும் சந்தேகத்தின்பேரில் மக்கள் சிறையிலடைக்கப்பட்டனர். இப்பேற் பட்ட கொடுமைகளால் தேச பக்தர்கள் துன்புறுத்தப்பட்ட போதிலும், 1830ஆம் ஆண்டின் புரட்சி, ஜெர்மனியில் பரவாமலில்லை. ப்ரன்ஸ்விக் (Brunswick), ஹனோவர், சாக்ஸனி, ஹெஸ்ஸி-காஸல் (Hesse-Cassel) ஆகிய இடங்களில் மன்னர்கள் மக்களுக்கு அரசியலமைப்புகள் வழங்க வற்புறுத்தப்பட்டனர். ஆனால், 1832ல் மெட்டர்னிக் மேலும் சில சட்டங்களை இயற்றச் செய்து அடக்கு முறை ஆட்சியைத் தீவிரமாக்கினர். அடக்குமுறை அச்சுறுத்தல், சர்வாதிகார ஆட்சி ஆகியவை தவிர, ஜெர்மனிக்கு அவர் வேறெதுவும் தரவில்லை.[1]

ஜெர்மனியில் அரசியல் துறையில் ஐக்கியம் தோன்றுவதற்கு முன்பே, பொருளாதாரத் துறையில் அது தோன்றியது குறிப்பிடத் தக்கதாகும். 1818ஆம் ஆண்டிலேயே ஜெர்மனிய நாடுகள்

[1] 'He had nothing to offer young Germany but repression, intimidation, and a police regime'—Grant and Temperley, Europe in the Nineteenth and Twentieth Centuries—p. 145.

அனைத்தையும் சுங்கக் கூட்டணி (Customs Union) ஒன்றில் பிரஷ்யா இணைக்க முயன்று, அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளில் வெற்றியும் பெற்றது. ஆஸ்திரியாவைத் தவிர, மற்ற எல்லா முக்கியமான ஜெர்மன் நாடுகளும் 'சால்வரின்' (Zollverein) என்றழைக்கப்பட்ட இந்தப் பொருளாதாரக் கூட்டில் சேர்ந்து, பல வர்த்தக நலன்களை அனுபவிக்க ஆரம்பித்தன. நாளுக்கு நாள் சால்வரினுடைய பயனும் செல்வாக்கும் அதிகரித்தன. ஜெர்மனியில் இந்த அமைப்பில் சேர்ந்த அரசுகளின் அனுகூலங்கள் அதிகரித்ததைப் போன்றே, சேராத நாடுகளின் இன்னல்களும் அதிகரித்தன. இவ்வாறு பொருளாதாரத் துறையில் ஜெர்மனியின் தலைவியாகப் பிரஷ்யா செயல்பட்டது. அடுத்த கால் நூற்றாண்டில் அதன் அரசியல் தலைமையை ஏற்க வழிவகுத்தது.[1] சால்வரினுக்குப் போட்டியாகத் தெற்கு ஜெர்மனியில் பவேரியாவில் தோன்றிய சுங்கச் சங்கமும், மத்திய ஜெர்மனியில் சாக்ஸனியின் தலைமையில் தோன்றிய சுங்கச் சங்கமும், காலப்போக்கில் சால்வரினில் இணைந்து அதைப் பலப்படுத்தின.

1848 புரட்சிகள் நிறைய நடந்ததோர் ஆண்டு. அந்த ஆண்டின் ஃபிரெஞ்சுப் புரட்சி, ஜெர்மனியிலும் பரவி, அந்நாட்டு மக்களிடையே விடுதலை வேட்கையை மேலும் வளர்த்தது. ஜெர்மனியக் கூட்டாட்சியில் பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் பிரஷ்யா, ஆஸ்திரியா, பவேரியா, சாக்ஸனி, ஹனோவர், பேடன், ஷெல்ஸ்விக் – ஹோல்ஸ்டீன் மக்கள் கிளர்ந்தெழுந்தனர். அரசியலமைப்புகள் வேண்டுமென்று கோரினர்; பல அரசுகள் அரசியலமைப்புகளை அளிக்கவும் செய்தன. பிரஷ்யாவின் தலைநகரான பெர்லினில் அரசர் நான்காம் வில்லியம் புரட்சியாளர்களின் ஊர்வலம் ஒன்றுக்குத் தலைமை ஏற்று, அரசியலமைப்பொன்றை வழங்குவதாக வாக்களித்தார்.

வியன்னா மாநாடு நிறுவிய, தளர்ந்த கூட்டரசால் அதிருப்தியடைந்திருந்த ஜெர்மனிய நாடுகளின் பிரதிநிதிகள், 1848 மார்ச் 5ஆம் நாள் ஹெய்டல்பர்க்கில் (Heidelberg) கூடி, ஐக்கிய ஜெர்மனிக்கான அரசியலமைப்பொன்றை வரைய விரும்பினர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணயசபை (Constituent Parliament) ஒன்று மே மாதம் ஃபிராங்பர்ட்டில் (Frankfurt) கூடி, புதிய ஜெர்மனியை உருவாக்கும் வழி வகைகளை ஆராய்ந்தது. ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற வல்லரசுகள் உள்நாட்டுக்

1 "......this was the fore runner, and in part the cause of her future military and political supremacy." Grant and Temperley, Europe in the Nineteenth and Twentieth Centuries—p. 147

குழப்பங்களை அடக்குவதில் ஈடுபட்டிருந்த நேரத்தில், இந்த அரசியல் நிர்ணயசபை, புதிய அரசியலமைப்பை அறிவித்துச் செயல்படுத்தவும் ஆரம்பித்திருக்கலாம். ஆனால், 831 அங்கத்தினர்களைக் கொண்ட பிராங்க்ஃபர்ட் பாராளுமன்றத்தில் 600 அங்கத்தினர்கள், வழக்கறிஞர்கள், பேராசிரியர்கள் போன்றோராக இருந்ததால், வீண் விவாதங்களில் அதன் நேரம் கழிந்தது. ஐக்கிய ஜெர்மனியில் அங்க நாடுகளின் எல்லைகள் பற்றியும், தலைமைப் பதவி பற்றியும் கருத்து வேறுபாடுகள் தோன்றின. ஆஸ்திரியாவுக்குப் பதிலாகப் பிரஷ்யாவைத் தங்கள் தலைவியாக ஏற்க விரும்பி, பிரஷ்யப் பேரரசரை ஜெர்மனியப் பேரரசராகப் பதவி ஏற்கும்படி அவை வேண்டின. ஆனால், பிரஷ்ய அரசரோ, இந்தப் பதவி அதிகாரமில்லாத ஆடம்பரப் பதவியாக மட்டும் இருக்கும் என்று நினைத்தாலும் புதிய பொறுப்புகளால் தோன்றக்கூடிய பிரச்சினைகள் பலவாக இருக்கும் என எண்ணியதாலும், ஆஸ்திரிய அரச குடும்பத்தவரான ஹாப்ஸ்பர்க்குகளுக்கு எதிராக எதையும் செய்வதை அவர் விரும்பாததாலும், ஜெர்மனியப் பேரரசராக அவர் உடன்படவில்லை. மேலும், மக்களால் பார்த்து அமர்த்தப் படும் அரசரை அவர்களே நீக்கவும் முடியும் என்ற நிலையும் இருந்ததால், அதுபோன்ற நிலைகளுக்கு அவர் தன்னை ஆளாக்கிக் கொள்ள விரும்பவில்லை.[1] பிராங்க்ஃபர்ட் பாராளுமன்றம் வரைந்த அரசியலமைப்பை ஆஸ்திரியா, பிரஷ்யா, ஹனோவர், சாக்ஸனி, பவேரியா, உர்டம்பர்க் ஆகிய நாடுகள் ஏற்றுக்கொள்ள மறுத்ததால், அது செயலாக்கப்படாமலேயே கைவிடப்பட்டது. சுதந்திரத்தின் இறைவி என ஒருகாலத்தில் அறிவிக்கப்பட்ட பிராங்க்ஃபர்ட் மன்றம் சாக்கடையில் பொதுப் பெண் போன்று இறந்தாள் என்பது டான்ஸோ–கார்ட்டஸ் என்பவரது கூற்றாகும்.[2] பிரஷ்யா மட்டும் அதற்குத் தனியானதோர் அரசியலமைப்பை உருவாக்கும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டது. அதன் பயனாக, 1850 பிப்ரவரியில் அரசியலமைப்பு நடைமுறைக்கு வநதது. அன்றிலிருந்து பிரஷ்யாவின் வரலாற்றில் அரசியலமைபபு இலலாத காலமே இல்லை எனக் கூறலாம்.

ஐக்கிய ஜெர்மனியை நிறுவும் பணி தொடர்ந்து நடந்தது. 1849ல் பிரடரிக் வில்லியம், பெர்லினில் ஜெர்மன் நாடுகளின் பிரதிநிதிகள் கூட்டமொன்றைக் கூட்டி, பிரஷ்யாவின் தலைமையில்

[1] Southgate—A Text-Book of Modern European History—p. 114.

[2] "Once proclaimed as the Goddess of Liberty, it was leftto die like a street women in the gutter"—Donso-Cortes Quoted say Ketelbey, A History of Modern Times—p. 184.

ஐக்கிய ஜெர்மனி அமைக்கும் திட்டத்தை ஆலோசித்தார். அதன் பயனாக, பிரஷ்யா, சாக்ஸனி, ஹனேவர் ஆகிய நாடுகளின் அரசர்களைக் கொண்ட "மூவேந்தர் சங்கம்" (League of the Three Kings) என்ற அமைப்பு தோன்றியது. பெரும்பாலான ஜெர்மன் நாடுகள் இதில் சேருமென எதிர்பார்க்கப்பட்டன. புதிய அமைப்பை வலுப்படுத்துவதற்கான வழிவகைகளை ஆராய எர்ஃபர்ட் (Erfurt) என்னுமிடத்தில் மேலுமொரு பாராளுமன்றம் அமைக்கப்பட்டது. ஆனால், அது எதையும் சாதிக்காமலேயே கலைந்தது. மூவேந்தர் சங்கத்தைவிட்டு வெளியேறிய சாக்ஸனியும் ஹனேவரும், பவேரியா, உர்டம்பர்க் ஆகிய இரு நாடுகளோடு சேர்ந்து "நான்கு அரசர்கள் சங்கம்" (League of the Four Kings) ஒன்றில் 1850ல் இணைந்தன. இதுவும் அதிக நாள்கள் நீடிக்கவில்லை.

1850ல் ஹெஸ்ஸி-காஸலில் எழுந்த சிக்கலைத் தீர்ப்பதில் பிரஷ்யா காட்டிய ஆர்வம், அது ஐக்கிய ஜெர்மனிக்குத் தலைமை வகிக்க முடியுமா என்ற ஐயத்தை உண்டாக்கியது. ஹெஸ்ஸி-காஸலின் அரசர், ஆஸ்திரியாவின் தூண்டுதலின்பேரில் 1848ல் அளித்த அரசியலமைப்பை நீக்கிவிட்டுப் பிரஷ்யக் கூட்டணியிலிருந்து விலகவே, அந்நாட்டு மக்கள் பிரஷ்யாவைத் தங்கள் உதவிக்கு வரும்படி வேண்டினர். ஆனால், அவ்வாறு செய்வது ஆஸ்திரியா மீது போருக்குச் செல்வதற்குச் சமமாகும் என்பதைப் புதிய ஆஸ்திரியப் பேரமைச்சர் ஷ்வார்சன்பர்க் (Schwarzenberg) தெளிவாக்கினர். இரண்டு இலட்சத்துக்கும் அதிகமான வீரர்களைக் கொண்டிருந்த ஆஸ்திரியப் படையைக் கண்டு அஞ்சிய பிரஷ்யா, ஆல்மூட்ஸ் (Olmutz) என்ற இடத்தில் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டது. இந்த உடன்படிக்கையின் நிபந்தனைகள் பிரஷ்யாவின் செல்வாக்கைப் பெரிதும் பாதித்தன. பிரஷ்யாவில் தேச பக்தர்கள் இந்த உடன்பாட்டை "ஆல்மூட்ஸ் மானக்கேடு" (the humiliation of Olmutz) என அழைத்தனர். 1815ல் நிறுவப் பட்ட ஜெர்மனியக் கூட்டரசு புதுப்பிக்கப்படுவதென்றும், பிரஷ்யாவின் தலைமையில் உருவான கூட்டமைப்பு கலைக்கப் படுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. படைப் பலமில்லாத காரணத்தால், ஆஸ்திரியாவைக் கண்டு அஞ்சிய பிரஷ்யா, அந்தக் குறையைச் சரி செய்துகொள்ள ஆரம்பித்தது.

1850க்கு அடுத்த சில ஆண்டுகளில் பிரஷ்யாவில் வியக்கத்தக்க மாற்றங்கள் பல தோன்றின. நகரங்கள் வேகமாக வளர்ந்தன. 4,50,000 மக்கள் வாழ்ந்த பெர்லின் (Berlin) வாணிக மையமாகத் திகழ்ந்தது. 1815க்கும் 1860க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் பெருஞ் சாலைகள் ஒன்பது மடங்காகப் பெருகின. மூன்றும்

ஜார்ஜ் காலத்தில் பிரிட்டனிலும் லூயி பிலிப் காலத்தில் ஃபிரான்சிலும் தோன்றிய தொழிற் புரட்சி, பிரஷ்யாவில் பரவி அதன் தொழில்துறை வளர உதவி செய்தது. துணி உற்பத்தியே தொடர்ந்து மிக முக்கியமான தொழிலாக விளங்கியபோதிலும், இரும்பு, எஃகு, இயந்திரங்கள் உற்பத்தி ஆகிய தொழில்கள் வளர்ந்து பொருளாதார முன்னேற்றத்துக்கு வழி செய்தன. ஜெர்மனியில் வேறெந்த அரசும் இந்த அளவுக்கு முன்னேறி இருந்ததாகக் கூற முடியாது. குறிப்பாக ஆஸ்திரியாவைப்பற்றிக் கூறினால், தொழில் துறையிலும் செய்திப் போக்குவரத்துத் தொடர்பு களிலும் மிகப் பொதுவாகவே மாற்றங்கள் நிகழ்ந்தன. அதன் அரசும் பொருளாதார முன்னேற்றத்தில் அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை.

1861ல் அரசராக அமர்ந்த அறுபத்திரண்டு வயதான முதலாம் வில்லியம் (William-I) பிரஷ்யப் படைகளின் சீரமைப்பில் சிறந்த கவனம் செலுத்தியதன் காரணமாக, பிரஷ்யா ஜெர்மனியில் முதல் தரமான இராணுவ அரசாக விளங்க முடிந்தது. ஒவ்வோர் ஆண்மகனும் மூன்று ஆண்டுகள் இராணுவ சேவை செய்ய வேண்டும் என்று சட்டமிருந்தாலும், ஆயிரக்கணக்கான பிரஷ்ய இளைஞர்கள் இராணுவத்தில் சேராமலும், அல்லது சேர்ந்தோர்கூட இரண்டு ஆண்டுகளே சேவை செய்ததையும் கண்டு அரசர் வான் ரூன் (Von Roon) என்பவரைப் போர் அமைச்சராக நியமித்துப் படைத் துறைக்கு வலுவூட்ட முயன்றார். காலாட் படைப் பிரிவில் முப்பத்தொன்பது புதிய அணிகளும், குதிரைப் படைப் பிரிவில் பத்துப் புதிய அணிகளும் அமைக்கவும், லாண்ட்வர் (Landwehr) குடிப்படையின் (Citizen Militia) முக்கியத்துவத்தைக் குறைக்கவும், நிலைப்படையினரின் (Standing Army) எண்ணிக் கையை இரண்டு மடங்காக்கவும் திட்டங்கள் தீட்டப்பட்டு, பிரஷ்ய சட்டமன்றமான லாண்ட்டேகின் (Landtag) அனுமதிக்காக அனுப்பப்பட்டன.

1861-ல் 90,00,000 டாலர்கள்[1] செலவு செய்ய அனுமதி வழங்கிய சட்டமன்றம் படைத்துறையின் பழைய நடைமுறைகள் திருத்தி யமைக்கப்படுவதை அது விரும்பாது என்பதைத் தெரிவித்தும் அரசன் தன் விருப்பப்படி மாற்றங்களைக் கொண்டு வந்ததைப் பார்த்து, 1862லிருந்து படைத்துறைக்கு எந்தச் செலவுத் தொகையும் அளிக்க அது மறுத்துவிட்டது. பழைய சட்டமன்றம் கலைக்கப்பட்டு புதிய சட்டமன்றம் தேர்ந்தெடுக்கப்பட்டபொழுதும்

1. ஜெர்மன் வெள்ளி நாணயம்.

இதே நிலை தொடர்ந்து அரசருக்கு இக்கட்டான நிலையை உண்டாக்கியது. தம்முடைய திட்டங்களைக் கைவிட்டுச் சட்ட மன்றத்தின் விருப்பத்தை ஏற்பதா, அல்லது படைப் பலத்தைப் பயன்படுத்தி அரசியலமைப்பை நீக்கிவிட்டுச் சட்டமன்றத்தைக் கலைப்பதா, அல்லது தான் முடி துறப்பதா—இவற்றில் எதைச் செய்வது என்பதைப்பற்றிச் சிந்தித்து, இறுதியாக முடி துறப்பதே நல்லது என்ற முடிவுக்கு வந்தார். தம் முடி துறப்பு பற்றி அறிக்கை கூட தயாரித்துவிட்டார். இந்தத் தருணத்தில்தான், தம் போரமைச்சர் அறிவுரைப்படி ஆட்டோவான் பிஸ்மார்க் (Otto von Bismark) என்பவரைத் தம் முதலமைச்சராக (President of the council of Ministers) நியமித்தார்.

செல்வக் குடும்பத்தில் பிறந்த பிஸ்மார்க், மக்களாட்சிக் கெதிராக முடியாட்சியை ஆதரித்த அரசியல் அறிஞர்களுள் தலைசிறந்தவர். பிரஷ்யாவின் பெருமைக்குக் காரணம், அதன் மக்களல்லர்; மன்னர்களே என்பது அவர் முடிவு. புதிய ஜெர்மனியில் ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய இரண்டும் இடம் பெறுவது இயலாது என்பதை அறிந்திருந்த பிஸ்மார்க், ஆஸ்திரி யாவின் ஆதிக்கத்தை ஜெர்மனியிலிருந்து அகற்ற பிரஷ்யாவின் படைகள் அளவிலும் தரத்திலும் அதிகரிப்பதை ஆதரித்தார். ஜெர்மனியின் ஐக்கியம் பேச்சுகளாலும் பெரும்பான்மையான வாக்குகளாலும் உருவாகாது; "இரத்தத்தாலும் இரும்பாலும்" (Blood and Iron) தான் அதை உருவாக்க முடியும் என நம்பினார். பாராளுமன்ற முறைகளும் தாராளக் கொள்கைகளும் ஒடுக்கப்படவேண்டும் என விரும்பிய பிஸ்மார்க்கை ஒரு பிற்போக்குவாதி (Reactionary) எனக் கூறுவதுகூட பொருத்தமே. அனுபவம், அறிவு, ஆற்றல் ஆகிய அருங்குணங்கள் அனைத்தும் ஒருங்கே அமையப் பெற்ற இந்த அமைச்சர், இருபத்தைந்து ஆண்டுகள் ஜெர்மனியின் தலைவிதியை நிர்ணயித்த தலைவராக இருந்ததில் வியப்பில்லை. அரசரின் முடிதுறப்பு அறிவிப்பைக் கிழித்தெறியச் செய்து சட்டமன்றத்தின் சம்மதமின்றியே வரி வசூல் செய்யவும், செலவு செய்யவும் ஆரம்பித்த பிஸ்மார்க்கின் அரசாங்கம் அதன் ஊழியர்களின் ஆதரவோடு தங்கு தடையின்றி இயங்கியது. திருத்தியமைக்கப்பட்ட பிரஷ்யப்படை ஜெர்மனியின் ஐக்கியத்துக்கு ஆற்றிய பணிகள் கொஞ்சநஞ்சமல்ல. ஒன்றுபட்ட ஜெர்மனியை உருவாக்க ஓய்வு ஒழிவில்லாமல் உழைத்த பிஸ்மார்க், பிரஷ்யா, புதிய ஜெர்மனியில் இரண்டறக் கலந்து தன் தனித் தன்மையை இழந்துவிடாமல் பாதுகாத்ததோடல்லாமல், அது ஜெர்மனியக் கூட்டரசில் முதன்மையான அரசாக மதிக்கப்படும் நிலைக்கும் உயர்த்தினார்.

மூன்று பெரும் போர்களின் விளைவே ஐக்கிய ஜெர்மனி யாகும். 1864ல் டென்மார்க்குக்கு எதிராகவும், 1866ல் ஆஸ்திரியாவுக்கு எதிராகவும், 1870ல் ஃபிரான்சுக்கு எதிராகவும் நடந்த போர்களே அவை.

ஷெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன் (Schleswig and Holstein) ஆகிய இரு மாநிலங்கள் தொடர்பாகத்தான் டேனிஷ் போர் மூண்டது. மூன்றே பேருக்குத்தான் இச்சிக்கலைப்பற்றித் தெரியும் என்றும் அவர்களுள் ஒருவர் இறந்துவிட்டார் என்றும் ஒருவருக்குப் புத்தி சுவாதீனம் இல்லை என்றும், மூன்றாமவர் தான் அதை மறந்துவிட்டதாகவும் பால்மர்ஸ்டன் கூறியது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஷெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன் ஆகிய இரு மாநிலங்களும் நானூறு ஆண்டுகளாக டென்மார்க் அரசரால் ஆளப்பட்டு வந்தன. ஆனால், அவை டென்மார்க்கின் பகுதிகளாகக் கருதப்பட்டதல்ல. ஷெல்ஸ்விக் மக்களுள் பெரும்பான்மையினர் ஜெர்மனியர். ஹோல்ஸ்டீனில் வாழ்ந்தோர் அனைவருமே ஜெர்மனியர். இவ்விரு மாநிலங்களையும் டென்மார்க்கோடு இணைக்க டேனிஷ் அரச குடும்பம் மிகவும் விரும்பினாலும், அப்பகுதிகளில் வாழ்ந்த ஜெர்மனியர் ஜெர்மனியோடு இணைவதையே விரும்பினர். ஷெல்ஸ்விக்கைச் சேர்ந்த சிறுபான்மை டேனியர் (Eider-Danes). அவர்கள் மாநிலத்தை டென்மார்க்கோடு சேர்த்துக்கொள்ளவேண்டும் எனக் கோரியதைக் காரணம் காட்டி, டென்மார்க் அரசர் 1863ல் ஷெல்ஸ்விக்கை டென்மார்க்கோடு இணைத்து அரசியலமைப்பு ஒன்றை வெளியிட்டார். இச்செய்கையைக் கண்ட ஜெர்மனி இது முறையற்றது மட்டுமன்று, 1852ல் செய்துகொள்ளப்பட்ட லண்டன் உடன்படிக்கைக்கு (Treaty of London) மாறானதுமாகும் எனக் கூறி, டென்மார்க்குக்கு எதிராகப் போரிடத் தயாரானது.[1] ஆனால், போர் ஒன்றின் மூலமாகத்தான் இந்தச் சிக்கலுக்குத் தீர்வு காண முடியும் என்ற நிலை இன்னும் தோன்றவில்லை. பேச்சு வார்த்தைகள் மூலமாகவே தீர்த்துக்கொள்ள முயற்சி செய்திருக்கலாம். பிரஷ்யாவின் புதிய படையினுடைய ஆற்றலைச் சோதிப்பதற்கே பிஸ்மார்க் இந்தப் போரில் இறங்கினார் என்ற உண்மைகூட, வரலாற்று ஆசிரியர்களிடம் நிலவுகிறது. இந்தப் போர் பிரஷ்யப் படைக்குத் துப்பாக்கிச் சண்டையில் ஒரு "ஞான ஸ்நானமாக" அமைந்தது என்பது லிப்ஸனின் (Lipson) கருத்தாகும்.[2] பிரஷ்யா ஆஸ்திரியாவோடு கூட்டு சேர்ந்து, டென்மார்க் அரசர் அறிவித்த

[1] Southgate, A Text-book of Modern European History 1789–1960. p. 153

[2] Lipson.

அரசியலமைப்பு, நாற்பத்து எட்டுமணி நேரத்தில் திரும்பப் பெற்றுக்கொள்ளப்படல் வேண்டும் என இறுதி எச்சரிக்கை ஒன்றை அனுப்பியது. இக்கோரிக்கை மறுக்கப்படவே, 1864, பிப்ரவரியில் பிரஷ்யாவும் ஆஸ்திரியாவும் படையெடுத்துச் சென்று டேனிஷ் படைகளை எளிதில் தோற்கடித்தன. வியன்னுவில் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கைப்படி (Treaty of Vienna) டென்மார்க், ஷெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன்மீது இனி உரிமை பாராட்டாது என உறுதி கூறியது.

டேனிஷ் போர், மிக முக்கியமானதொன்று என்பதற்கு, ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்கள் கூறப்படுகின்றன. பிரஷ்யப் படை, தன் திறமையை நிரூபிக்க இப்போர் ஒரு வாய்ப்பாக அமைந்தது. அதன் சீரமைப்புக்குச் செலவு செய்யப்பட்டிருக்கும் சக்தியும் பணமும் வீணுகவில்லை என்பது தெரியவந்தது. இறந்த தளபதிகள் பலரின் தகுதிகளைக் கண்டுகொள்ள இப்போர் பயன்பட்டது. வான் மோல்ட்கே (Von Moltke) என்ற புகழ்மிக்க தளபதி இப் போரில்தான் அரசரின் கவனத்தை ஈர்த்தார். ஐரோப்பியக் கூட்டணிகள் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கும் காலம் மறைந்துவிட்டது. ஐரோப்பியக் கூட்டணி (European concert) இனி பயனுள்ள வகையில் செயல்பட முடியாது என்ற நிலையில் போரை நிறுத்த அவை மேற்கொண்ட முயற்சிகள் அனைத்தும் தோற்றன. மேலும், பிரஷ்யா ஆஸ்திரியாவோடு கூட்டு சேர்ந்து ஈடுபட்டது. அதனுல், தனித்துப் போரிட முடியாது என்பதற்கன்று; வெல்லப்பட்ட மாநிலங்களில் இனி எவ்வாறு ஆட்சி செய்யப்படவேண்டும் என்பதை முடிவு செய்வதில், ஆஸ்திரியா வோடு ஏற்படக்கூடிய கருத்து வேறுபாட்டைப் பயன்படுத்தி, அதோடு போரிடுவதற்குச் சில காரணங்களைத் தோற்றுவிப்பதற்கே என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஷெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன் எவ்வாறு இனி இயங்கவேண்டும் என்பதைப்பற்றி, விரைவில் பிரஷ்யாவும் ஆஸ்திரியாவும் மாறுபட்ட கருத்துகளைத் தெரிவித்தன. அவை ஒரு தனி நாடாக அமைக்கப் படவேண்டும் என ஆஸ்திரியா கூறியது. அவ்வாறெனின், சில இராணுவ வர்த்தக சலுகைகளைப் புதிய நாடு அதற்குத் தரவேண்டும் எனப் பிரஷ்யா கோரியது. 1865ல் செய்துகொள்ளப் பட்ட கேஸ்டீன் உடன்படிக்கை (Convention of Castein), ஷெல்ஸ்விக்கின் ஆட்சிப் பொறுப்பை பிரஷ்யாவுக்கும், ஹோல்ஸ் டீனின் ஆட்சிப் பொறுப்பை ஆஸ்திரியாவுக்கும் அளித்து, உடனடியாகப் போர் மூளுவதைத் தடுத்தது. ஆஸ்திரியாவோடு எந்தச் சமயத்திலும் போர் மூளலாம் என நினைத்த பிஸ்மார்க்

தக்க தற்காப்பு ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார். 1862ல் போலந்து மக்கள் ரஷ்யாவுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்தபோது, பிஸ்மார்க் ரஷ்யாவின் உதவிக்குச் சென்றார். இப்பொழுது அவர் ஆஸ்திரியாவுக்கு எதிராகத் தொடுக்கப்போகும் போரில் ரஷ்யா அவருக்கு எதிராக எதையும் செய்யாது என நம்பினார். ஃபிரெஞ்சுப் பேரரசர் மூன்றாம் நெப்போலியனைப் பியாரிட்ஸ் (Biaritz) என்ற இடத்தில் சந்தித்து (1865, அக்டோபர்) இரகசிய உடன்பாடு ஒன்றைச் செய்துகொண்டார். ஜெர்மனியப் போரில் ஃபிரான்சு நடுநிலைமை வகிப்பது என்பதும், அதற்குக் கைம்மாறாக ஜெர்மனியில் பெல்ஜியம் போன்ற ஓரிரு பிரதேசங்களை ஃபிரான்சு இணைத்துக்கொள்ள பிரஷ்யா அனுமதிக்கும் என்பதும் பியாரிட்ஸ் சந்திப்பில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கலாம். ஆஸ்திரிய-பிரஷ்யப் போர் நீண்ட போராக இருக்கும் என்றும், அதில் தனக்குப் பயன்தரும் வகையில், தான் தலையிட்டு சமரசம் செய்யலாம் என நெப்போலியன் நம்பியிருக்கக்கூடும். ஆனால், எழுத்து மூலமாக எந்த ஏற்பாடும் செய்துகொள்ளப்படவில்லை. 1866 ஏப்ரலில் பிஸ்மார்க் இத்தாலியோடும் ஓர் இரகசிய உடன்படிக்கை செய்துகொண்டார். பிரஷ்யாவின் தரப்பில் இத்தாலி போரிடுமானால், அதற்கு வெனிஷியா வெகுமதியாக அளிக்கப்படும் என்பதைப் பிஸ்மார்க் தெளிவாக்கினார்.

ஹோல்ஸ்டீனின் அலுவல்களில் பிரஷ்யா தலையிட்டபொழுது, ஆஸ்திரியா அதை எதிர்த்து ஜெர்மனிய டயட் (Diet) முன்பாக அந்தப் பிரச்சினையைக் கொண்டுவந்தது. இச்செயல் கேஸ்டீன் உடன்பாட்டுக்கு எதிரானது என்று பிரஷ்யா எச்சரித்ததை ஆஸ்திரியா பொருட்படுத்தவில்லை. பிரஷ்யாவுக்கு எதிராகக் கூட்டாட்சிப் படைகள் அனுப்பப்படவேண்டும் என டயட் தீர்மானித்ததைக் கண்ட பிரஷ்யா, கூட்டாட்சி கலைக்கப்பட்டதாக அறிவித்து, ஜூன் 16ல் போரைத் தொடங்கியது. ஜூன் மாத இறுதிக்குள் வடக்கு ஜெர்மனி முழுவதையும் பிரஷ்யா வென்றது. ஹனோவர், சாக்ஸனி, ஹெஸ்ஸி-காஸல் (Hesse-Cassel) ஆகிய மாநிலங்களின் தலைநகரங்கள் அதன் வசம் வந்தன. சாக்ஸனியிலிருந்து இளவரசர் பிரடெரிக் சார்லஸ் தலைமையிலும், சைலீசியாவிலிருந்து பட்டத்து இளவரசர் தலைமையிலும் ஸாஹிமியானியின்மீது படையெடுத்த இரு படைகளின் முன்னேற்றத்தைத் தடுக்க ஆஸ்திரியத் தளபதி பெனடெக் (Benedek) அரும்பாடுபட்டும் அவர் முயற்சிகள் தோற்றன. 1866 ஜூலை 3-ஆம் நாள் கோனிக்ராட்ஸ் (Koniggratz), சடோவா (Sadowa) ஆகிய ஸாஹிமிய நகரங்களின் இடையே நடந்த பெரும்போரில் (இது சடோவாப் போர் என கணிக்கப்படுகிறது) ஆஸ்திரியப் படைகள் தோற்கடிக்கப்

பட்டன. இரு தரப்பிலுமாக ஏறத்தாழ 4,50,000 போர்வீரர்கள் கலந்துகொண்ட இந்தச் சண்டையில் ஆஸ்திரியா 44,313 பேரையும், பிரஷ்யா 9,153 பேரையும் இழந்தன. இதே சமயத்தில் தான் இத்தாலியப் படைகள் வெனிஷியாவில் படையெடுத்துச் சென்றன. வெனிஷியாவைக் காப்பாற்ற ஆஸ்திரியப் படை அனுப்பப்படவேண்டிய கட்டாயமேற்பட்டதால், ஆஸ்திரியா தன் சக்தி முழுவதையும் ஒன்று திரட்டிப் பிரஷ்யாவுக்கெதிராகப் போரிட முடியாமற்போனது. வெனிசியாவில் இத்தாலியர் தோற்கடிக்கப் பட்டது உண்மையெனினும், ஆஸ்திரியப் படைகளைத் தங்களுடன் போரிடச் செய்து, பிரஷ்யாவுக்கு எதிராக அவை பயன்படுத்த முடியாமற் செய்த சேவையைப் பிரஷ்யா பாராட்டியது.

பிரஷ்யாவின் வெற்றிக்குக் காரணம், அதன் படைத் துறையின் திறமையே ஆகும். வான் ரூன், வான் மோல்ட்கே ஆகிய இரு தளபதிகளின் உழைப்பும் ஊக்கமுமே பிரஷ்யப் படைகளுக்கு வெற்றிமேல் வெற்றியைத் தேடித் தந்தன. பிரஷ்யப் போர்வீரர் வைத்திருந்த புதுவிதத் துப்பாக்கியானது, ஆஸ்திரியப் போர்வீரர் வைத்திருந்த பழைய துப்பாக்கி ஒருமுறை சுடும் நேரத்தில் நான்கு அல்லது ஐந்துமுறை சுடக்கூடியதாக இருந்தது. இதற்கு எதிர்மாறாக ஆஸ்திரியப் படைகள் இராணுவத் துறையில் தோன்றிய நவீன கால மாற்றங்களை ஏற்காது பழைய முறைகளையே பின்பற்றின. பெனடெக் உட்பட அதன் தளபதிகள் தன்னம் பிக்கை இழந்தவர்களாகக் காணப்பட்டனர். படைகளை இடம்விட்டு இடம் பெயர்க்க, ஆஸ்திரியா இருப்புப் பாதைகளைப் போடத் தவறியதும் அதன் தோல்விக்கு ஒரு முக்கிய காரணமாகக் கூறப்படுகிறது. இந்தக் குறையால் விரைவான போக்குவரத்து தடைப்பட்டு, எதிர்பார்த்த இடத்துக்கு எதிர்பார்த்த படைகள் எதிர்பார்த்த நேரத்தில் போய்ச் சேரமுடியாமற்போயிற்று. ஏழே வாரங்கள் நடந்த ஆஸ்திரிய-பிரஷ்யப் போர் நிக்கல்ஸ்பர்க் (Nikolsburg) என்ற இடத்தில் நிகழ்ந்த பேச்சு வார்த்தை களின்படி நின்றது. ஒரு மாதம் கழித்து செய்துகொள்ளப்பட்ட பிரேக் சமாதானத்தில் (Peace of Prague) நிக்கல்ஸ்பர்க் நிபந்தனைகள் உறுதி செய்யப்பட்டன. இப்போரில் பிரஷ்யா வெற்றி யடைந்தபோதிலும், அதற்கென அஸ்திரியாவுக்குச் சொந்தமான எந்தப் பிரதேசத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆஸ்திரியா விடமிருந்து பறிக்கப்பட்ட வெனிசியா, இத்தாலிக்கு அளிக்கப் பட்டது. சிறு இழப்பீட்டுத் தொகை ஒன்றும் கொடுக்கவேண்டி யிருந்தது. 1815லிருந்து ஆஸ்திரியாவின் தலைமையில் இயங்கிவந்த ஜெர்மனியக் கூட்டரசு கலைக்கப்பட்டு, அதற்குப் பதிலாகப் பிரஷ்யாவின் தலைமையில் வடக்கு ஜெர்மனியக் கூட்டரசு (North

German Confederation) என்ற புதிய அமைப்பு ஒன்று உருவாக்கப் பட்டது ஹனோவர், ஹெஸ்ஸி-காஸல், நாசா (Nasau), ஷெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன், பிராங்க்ஃபர்ட் ஆகியவை பிரஷ்ய அரசோடு இணைக்கப்பட்டன. இதன் பயனாகப் பிரஷ்யாவுக்கு 1300 சதுர மைல் பரப்பளவுள்ள பிரதேசமும், 45,00,000 மக்களையும் பெற முடிந்தது. மெயின் ஆற்றுக்கு (River Maine) தெற்கே இருந்த ஜெர்மனிய நாடுகள்-பவேரியா (Bavaria), பேடன் (Baden), உர்டம்பர்க் (Wurtemburg), ஹெஸ்மார்மஸ்டாட்டின் ஒரு பகுதி ஆகியவை, அவற்றின் விருப்பம்போல் நீடிக்க அனுமதிக்கப்பட்டன.

மெயின் ஆற்றுக்கு வடக்கே இருந்த எல்லா ஜெர்மனிய நாடுகளையும் (எண்ணிக்கையில் 22) ஒருங்கிணைந்து உருவாக்கப் பட்ட வடக்கு ஜெர்மனியக் கூட்டரசின் தலைமைப் பதவியைப் பிரஷ்யா பெற்றது. பிரஷ்ய அரசரே கூட்டாட்சியின் தலைவரானார். வயது வந்த ஆடவர் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்பட்ட ரெய்ச்ஸ்டாக் (Reichstag) என்ற சட்ட மாமன்றம் ஒன்றும், அங்க நாடுகள் அனுப்பிய பிரதிநிதிகளைக் கொண்ட பண்டஸ்ராத் (Bundesrath) என்ற புதிய சபையின் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டன. பண்டஸ்வித்தில் இருந்த மொத்த வாக்குகள் நாற்பத்து மூன்றில் பிரஷ்யாவுக்கு மட்டும் பதினேழு வாக்குகள் தரப்பட்டன. படைத் தலைவராக இயங்கும் உரிமையும், அங்க நாடுகள் எல்லாவற்றின் அயல்நாட்டுக் கொள்கையை நிர்ணயிக்கும் உரிமையும், பிரஷ்யாவின் அரசருக்கே அளிக்கப்பட்டன. தெற்கு ஜெர்மனிய நாடுகள் தனித்தியங்க அனுமதிக்கப்பட்டபோதிலும், மூன்றும் நெப்போலியனது ஆக்கிரமிப்பு எண்ணங்களிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள அவை பிரஷ்யாவின் உதவியை நாட ஆரம்பித்தன. பிரஷ்யாவோடு அவை தற்காப்புக்காகவும் தாக்குத லுக்காகவும் ஒப்பந்தங்கள் (Defensive and Offensive alliances) செய்துகொண்டதால் பிரஷ்யா அவற்றின் படைகளைப் பயன் படுத்திக் கொள்ளக்கூடிய நிலையில் இருந்தது.

ஆஸ்திரிய-பிரஷ்யப் போரில் பிஸ்மார்க் ஆஸ்திரியாவைத் தண்டிக்கவேண்டிய அளவுக்குத் தண்டிக்காமல் விட்டுவிட்டார் எனச் சிலர் குறை கூறினர். ஆனால், காரணத்தோடுதான் அவர் அவ்வாறு நடந்துகொண்டதாகக் கூறலாம். ஆஸ்திரியா மிகவும் தாழ்வுபடுத்தப்பட்டிருந்தால் மற்ற ஐரோப்பிய நாடுகள் போரில் கலந்துகொண்டு பிரஷ்யாவுக்குப் பேரிழப்பை உண்டாக்கி இருக்கும். மேலும், ஜெர்மனிய ஐக்கியத்துக்கு ஃபிரான்சோடு போரிடுவது தவிர்க்க முடியாததாயிருக்கும் என்பதை உணர்ந் திருந்த பிஸ்மார்க், அப்போரில் ஆஸ்திரியா நடுநிலைமை

வகிப்பதை எதிர்பார்த்தார். ஆஸ்திரியா நிதானமாக நடத்தப் பட்டால் வரப்போகும் பிராங்கோ-பிரஷ்யப் போரில் அது நடுநிலைமை வகிக்கும் என நம்பினர்.

ஆஸ்திரிய-பிரஷ்யப் போரை ஜெர்மனியப் பேரரசின் வளர்ச்சியில் முதல்கட்டம் எனக் கூறினல், அடுத்து நிகழ்ந்த பிராங்கோ-பிரஷ்யப் போரை அதன் இரண்டாவது கட்டம் எனக் கூறலாம். முதலாம் நெப்போலியன் 1806ல் ஜேனுப் (Jena) போரில் பிரஷ்யாவைப் படுதோல்வியடையச் செய்த நாள்களிலிருந்தே, ஃபிரான்சும் பிரஷ்யாவும் பகைமை பாராட்டிவந்தன. பிஸ்மார்க் அமைச்சராக இருந்த ஆரம்ப காலத்தில் ஃபிரான்சு ஜெர்மனிய அலுவல்களில் நடுநிலைமை வகித்தபோதிலும், சடோவாப் போரில் பிரஷ்யா அடைந்த வெற்றியையும் அதன் விளைவாகக் கிடைத்த முக்கியத்துவத்தையும் கண்ட ஃபிரான்சு விழித்துக்கொண்டது. ஆனல், கண்கெட்ட பிறகு சூரிய வணக்கம் என்பதுபோல், அந்த விழிப்பு, காலம் கடந்த விழிப்பானது. வடக்கு ஜெர்மனியக் கூட்டரசின் படைகள் பிரஷ்யப் படைகள் மாதிரி திருத்தி அமைக்கப்பட்டன. இரண்டு மூன்று ஆண்டுகளுக்குள் 10,00,000 பேரைக் கொண்ட பெரும்படை ஒன்று பிரஷ்யாவுக்காகப் போரிடத் தயாராக இருந்தது.

மத்திய ஐரோப்பாவில் பிரஷ்யா ஒரு பெரிய வல்லரசாக வளர்ந்து வருவதைக் கண்ட ஃபிரான்சு, அந்த வளர்ச்சியைக் கண்டு பொருமைப்பட்டது. சடோவாப் போரில் அது வகித்த நடுநிலைமைக்குத் தக்க வெகுமதி தரப்படவில்லை எனவும் வெகுண்டது. வெவ்வேறு சமயங்களில் பாலட்டினேட் (Palatinate), லச்சம்பர்க் (Luxemburg), பெல்ஜியம் போன்ற வெவ்வேறு பிரதேசங்களைத் தனக்குத் தரும்படி வற்புறுத்தியது. பிஸ்மார்க் இதுபோன்ற கோரிக்கைகளை ஃபிரான்சுக்கு எதிராகப் பயன் படுத்தத் தவறவில்லை. லக்சம்பர்க், பெல்ஜியம் ஆகிய பிரதேசங் களின் உரிமையாளர்களுக்கு (அல்லது அவற்றில் அக்கறை உள்ளவர்களுக்கு) ஃபிரான்சின் நோக்கங்கள் தெரியவந்தவுடன் அவர்கள் ஃபிரான்சின்மீது அவநம்பிக்கை கொள்ள ஆரம் பித்தனர். ரஷ்யா, இத்தாலி ஆகிய நாடுகளும் நடுநிலைமை வகிக்க வழிகோலப்பட்டன. முதலாவதாகப் பிராங்கோ-பிரஷ்யப் போர் தோன்றுமாளுல், ரஷ்யாவுக்கும் அது உதவியாக அமையும் என விளக்கப்பட்டது. 1856ஆம் ஆண்டின் பாரிசு உடன்படிக்கையில் அதற்கெதிராகச் சேர்க்கப்பட்ட விதிகளிலிருந்து விடுபட இது தக்க தருணம் எனக் கூறப்பட்டது. இரண்டாவதாக, இத்தாலியிலும் ஃபிரான்சுக்கெதிரான எண்ணங்கள் வளர்க்கப்பட்டன. இத்தாலி

யின் ஐக்கியம் முற்றுப்பெருமல் இருப்பதற்கே ஃபிரான்சுதான் காரணம், எனக் காட்டப்பட்டது. ரோம் நகரை ஃபிரெஞ்சுப் படைகள் மட்டும் காத்து நிற்காமல் இருந்தால் இத்தாலி எளிதாக அந்நகரை வென்று, இத்தாலிய ஐக்கியத்தை முழுமையடையச் செய்திருக்கும். மூன்ருவதாக, ஆஸ்திரியாகூட நடுநிலைமை வகித்தது. பிரஷ்யாவுக்கு எதிராக ஃபிரான்சோடு ஆஸ்திரியா சேர்ந்தால், அது ரஷ்யாவால் தாக்கப்படும் என அஞ்சியதால், யாரோடும் கூட்டுச் சேராமல் ஒதுங்கி நின்றது.

பிரஷ்யா ஃபிரான்சோடு வலுச்சண்டைக்குப் போனதாகத் தோன்றக்கூடாது என்பதற்காகப் பிஸ்மார்க் தக்க தருணத்துக் காகக் காத்திருந்தார். ஸ்பெயின் அரியணையில் யார் அமர வேண்டும் என்பதுபற்றி எழுந்த தகராறுகளே பிராங்கே-பிரஷ்யப் போருக்கு இட்டுச் சென்றன. 1868ல் ஸ்பெயினில் நடந்த புரட்சி ஒன்றின் விளைவாக அரசி, இரண்டாம் இசபெல்லா பதவியிலிருந்து இறக்கப்பட்டு, பிரஷ்ய மன்னர் முதலாம் வில்லியத்தின் தூரத்து உறவினரான ஹோஹன் சோலன்-சிக்மரிங்கன் (Hohanzollern-Sigmaringin) அரச குடும்பத்தைச் சார்ந்த இளவரசர் (Leopold) அரச பதவியை ஏற்கும்படி வேண்டிக்கொள்ளப்பட்டார். 1870, ஜூலை 2-ஆம் நாள் லியோபால்டு ஸ்பானிஷ் அரசராக ஒப்புக் கொண்டுவிட்டார் என அறிவிக்கப்பட்டவுடன், ஃபிரான்சு இந்த ஏற்பாட்டை எதிர்த்தது. ஃபிரான்சின் வெளியுறவு அமைச்சரான கிராமண்ட் பிரபு (Duke of Gramont) ஜெர்மனிய இளவரசர் ஒருவர் ஸ்பெயின் அரசராவது ஐரோப்பிய வல்லரசுச் சமநிலையைப் பாதிக்கும் எனச் சட்டமன்றத்தில் அறிவித்தார். பிரஷ்யாவில் ஃபிரான்சின் தூதராக இருந்த பெனடிட்டியும் (Beneditt) அரசர் வில்லியத்தைச் சந்தித்து லியோபால்டு அரசராவதற்கு ஃபிரான்சு ஒருபொழுதும் இணங்காது என்பதைத் தெரிவித்தார். லியோ பால்டும், தான் அரசராகப்போவதில்லை என அறிவித்தார். ஃபிரான்சு அதன் விருப்பம்போல், எல்லாம் முடிந்தது என நினைத் துப் பேசாதிருந்திருக்கலாம். ஆனால், பெனடிட்டி, எம்ஸ் (Ems) என்ற இடத்தில் அரசர் வில்லியத்தைச் சந்தித்து லியோபால்டு இனி வரும் காலத்திலும் ஸ்பானிஷ் அரியணைக்கு அபேட்சகராக இருக்கமாட்டார் என்பதாக வாக்குறுதி அளிக்குமாறு வற்புறுத் தினர். அரசர் மிகவும் மரியாதையோடு மறுத்துவிட்டார். எம்ஸில் நடந்த பேச்சு வார்த்தைகளை அரசர், அமைச்சர் பிஸ்மார்க்குக்குத் தந்தி மூலமாகத் தெரிவித்தார். தந்தியின் வாசகத்தைச் சுருக்கி, செய்தித் தாள்களில் வெளியிடச் செய்த அமைச்சர், பிரஷ்யாவிலும், ஃபிரான்சிலும் அது தவருகப் புரிந்துகொள்ளப்படும்படியாகப் பார்த்துக்கொண்டார். பிரஷ்யர்கள் எம்ஸில் தங்கள் அரசர்

அவமதிக்கப்பட்டதாகவும், ஃபிரெஞ்சுக்காரர்களின் தூதர் அவமதிக்கப்பட்டதாகவும் தந்தியின் சொற்கள் இடமளித்தன. இரு நாடுகளின் பத்திரிகைககளும் உண்மையைத் திரித்துக் கூறிப் போரைத் தவிர்க்க முடியாததாக்கின.

1870 ஜூலை 19ஆம் நாள் ஃபிரான்சு பிரஷ்யாமீது போர் அறிவித்தது. இப்போரில் ஃபிரான்சு முதலிலிருந்து முடிவுவரை தனித்து நின்றே போரிட்டது. தெற்கு ஜெர்மனிய நாடுகள் அனைத்துமே பிரஷ்யாவுக்கு ஆதரவாகப் போரிட்டன. பிஸ்மார்க் பிரஷ்யப் படையைத் தயாரான நிலையில் வைத்திருந்ததால், அது தங்கு தடையின்றி இயங்க முடிந்தது. அதன் போர்வீரர்களின் எண்ணிக்கைகூட, ஃபிரெஞ்சு வீரர்களின் எண்ணிக்கையைப் போல இரண்டு மடங்கு இருந்தது. ஃபிரெஞ்சுப் படைகள் போதுமான பண்டங்களும் படைத் தலைவர்களும் இல்லாது இடர்ப்பட்டன.[1] வூர்த் என்ற இடத்தில் நடந்த சண்டையில் (Battle of Worth), மக்மஹன் (Mac Mahan) என்ற ஃபிரெஞ்சுத் தளபதி பட்டத்து இளவரசர் தலைமையில் ஜெர்மனியப் படைகளால் தோற்கடிக்கப்பட்டு, செலான்ஸ் (Chalons) என்ற இடத்திற்குப் பின்வாங்கினுர். பெசைன் (Bazainne) என்ற மற்றொரு ஃபிரெஞ்சுத் தளபதியும் தோற்கடிக்கப்பட்டு, மெட்ஸ் (Metz) என்ற கோட்டைக்குள் தஞ்சம் புகும்படி செய்யப்பட்டார். ஆனல், கோட்டை ஜெர்மனியரால் சூழ்ந்துகொள்ளப்பட்டது. மெட்ஸ் கோட்டையை விடுவிக்கச் சென்ற பேரரசர் மூன்றும் நெப்போலியன், செடான் (Sedan) என்ற இடத்தில் செப்டம்பர் 1ஆம் நாள் வெல்லப்பட்டார். 100,000 போர்வீரர்களுடன் அரசர் சரணடைந்தார். பாரிசில் அவர் அரசாங்கம் மண்கோட்டை எனச் சரிந்தது. பாரிசு நகரமும் முற்றுகையிடப்பட்டது. ஐந்து மாதங்கள் முற்றுகை நீடித்தன. பாரிசு நகர மக்கள் கடும் பஞ்சத்துக்குள்ளாயினர். பட்டினியாலும், குளிராலும், குண்டு வீச்சாலும் அவதியுற்ற பாரிசு நகரவாசிகள் அனுபவித்த இன்னல்கள் கொஞ்சநஞ்சமல்ல. மிருகக்காட்சி சாலையிலிருந்த விலங்குகளும், வீட்டின் மச்சிலிருந்த எலிகளும்கூட உணவாக உண்ணப்பட்டனவாம். கடைசியில் 1871 ஜனவரி 28ஆம் நாள் தலைநகரம் நிபந்தனையின்றிச் சரணடைந்தது.

சமாதானம் செய்துகொள்வதற்கு முன்பாக, மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கக்கூடிய அரசாங்கம், ஒன்றேடுதான்

1 "Suppliers for the army were lacky, cannon were without ammunition, men were without uniforms, regiments were without commanders, generals were without armies "—Southgate, A Text-Book of Modern European History, P. 159.

சமாதானம் செய்துகொள்ளமுடியும் என்று பிரஷ்யா கூறியதால், பிப்ரவரியில் ஃபிரான்சு எங்கும் பொதுத் தேர்தல்கள் நடந்தன. தேசிய மன்றத்தின் (National Assembly) தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்ட அடால்ப் தியர்ஸ் (Adolphe Thiers) பிரஷ்யா வற்புறுத்திய நிபந்தனைகளை ஏற்கவேண்டியிருந்தது. 1871 மே மாதம், 10ஆம் நாள் செய்துகொள்ளப்பட்ட பிராங்க்ஃபர்ட் உடன்படிக்கைப்படி (Treaty & Frankfort), ஃபிரான்சு ஜெர்மனிக்கு அல்சாஸ் (Alsau), கிழக்கு லொரேன் (Eastern Lorraine) ஆகிய பிரதேசங்களையும் இழப்பீட்டுத் தொகையாக இருபது கோடி பவுன் களையும் கொடுக்க இணங்கியது. இழப்பீட்டுத் தொகை கொடுத்து முடிக்கப்படும்வரை, ஜெர்மனியப் படை ஒன்றை வைத்துப் பராமரிக்கவும் ஃபிரான்சு இசைந்தது.

சேடான் போருக்குப் பிறகு, தெற்கு ஜெர்மனி அரசுகளும் கூட்டரசில் சேரும்படி அழைக்கப்பட்டன. ஆரம்பத்தில் பவேரியா மட்டும் சிறிது தயங்கினாலும், பிறகு, எல்லா அரசுகளும் ஒன்று சேர்ந்து முதலாம் வில்லியத்தை ஜெர்மனியின் பேரரசராக ஏற்றுக்கொண்டன. 1871ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 10ஆம் நாள் வெர்சாய் (Versailles) அரண்மனையிலிருந்த கண்ணாடி மண்டபத்தில் வில்லியம் ஜெர்மனியப் பேரரசராக அறிவிக்கப் பட்டார்.

# 10. ஆஸ்திரியா-ஹங்கேரி (1815 - 1870)

நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பின்னர், ஐரோப்பாவில் மிகச் சிறப்பெய்திய நாடுகளில் ஆஸ்திரியாவும் ஒன்று. மக்கள் தொகையிலும், பரப்பளவிலும் மிகுந்ததோடு, அது இதுகாறும் கண்டிராத அளவுக்கு மிக்க வலிமை பெற்றது. கடந்த இருபது ஆண்டுகளாக அது தொடர்ந்து போரிட்ட காரணத்தால், அதன் எல்லைகள் மாறினாலும், அதன் வலிமை குன்றவில்லை. இன்னும் கூறப்போனால், எல்லை மாற்றங்களால், அது பெரிதும் நன்மையே அடைந்தது. வியன்னா மாநாட்டின் விளைவாக, ஆஸ்திரியா பெல்ஜியத்தை இழந்தது. அதற்கு இழப்பீடாக அது இத்தாலியில் வெனிஸ், லொம்பார்டி பகுதிகளைப் பெற்றதோடு, இத்தாலி ஜெர்மனியின்மீது தனது ஆதிக்கத்தினை நிலைநாட்டிக்கொள்ளவும் அனுமதிக்கப் பட்டது. இதன் விளைவாகத் தொடர்ந்த எல்லைகளைப் பெற்ற ஒரு பேரரசாக மாறி, அது மிக்க வலிமை பெற்றது. ஆஸ்திரியப் பேரரசு இதுவரை காணாத அளவுக்கு ஒரு கட்டுக்கோப்பினை எய்தியது. மைய ஐரோப்பாவில் தனது ஆதிக்கத்தினை நிலைநாட்டிக் கொண்ட இப்பேரரசு, ஐரோப்பிய அரங்கில் பிற பேரரசுகளினும் சிறப்புற்றுத் திகழ்ந்தது.

**இப்பேரரசின் பிரச்சினைகள்**

பிற பேரரசுகளுக்கில்லாத மாபெரும் பிரச்சினைகளை இப் பேரரசு எதிர்நோக்க நேரிட்டது. இப் பேரரசில் அரசியல், சமூக, இன ஒற்றுமை இல்லாதுபோயிற்று. இது பல நாடுகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு மாபெரும் பேரரசாகத் திகழ்ந்தது. மேற்கே ஜெர்மன் மாநிலங்களான ஷெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன் இப் பேரரசின் பகுதிகளாக இருந்தன. தெற்கே இத்தாலியில் வெனிஷியாவும், லொம்பார்டியும் இதன் பகுதிகள். இதனால், இப் பேரரசு ஒரு கட்டுக்கோப்பைக் கொண்டதாகத் திகழவில்லை. அதைவிட, பல்வேறு மொழி, பல்வேறு இன மக்களைக் கொண்ட பேரரசாக இது திகழ்ந்த காரணத்தால், அது பல்வேறு பிரச்சினைகளைக் கொண்டதாக இருந்தது. ஆகவே, இப் பேரரசில் ஒற்றுமையுணர்வு இல்லாதுபோனதில் வியப்பில்லை. பல நாடுகளும்

இப் பேரரசின் ஆதிக்கத்தின் கீழிருந்த காரணத்தால், இதன் நிர்வாகமும் சிக்கல் மிக்கதாக இருந்தது. நாட்டுப்பற்றும் இப்பேரரசில் வளர வாய்ப்பில்லாதுபோய்விட்டது. இப் பேரரசில் வாழ்ந்த இரு முக்கிய இன மக்கள் ஜெர்மனியர்களும், மாகியர் களுமாவார்கள். அவர்களுடன் ருமேனியர்களும் அங்கிருந்தனர். ஸ்லாவ் இன மக்களும் அப் பேரரசில் பரவலாக வாழ்ந்தனர். இவ்வினப் பொருட்காட்சிச்சாலையில் சீரான, நல்ல நிர்வாகமென்பது இயலாத ஒன்றானது. அப் பேரரசின் பகுதிகள் பலவும் சிறப்புரி மைகள் பெற்றிருந்தன. அவை தங்களது சிறப்புரிமைகளை விட்டுக் கொடுக்க மறுத்தன. 1815க்குப் பின்னரும் ஆஸ்திரியாவால் இப் பிரச்சினைகளுக்கு நல்லதொரு தீர்வு காண இயலவில்லை.

ஜெர்மனியர்கள் இப் பேரரசில் மிக்க சிறப்புற்றுத் திகழ்ந் தார்கள். ஆஸ்திரியாவின் தலைநகரான வியன்னாவும் ஒரு ஜெர்மன் நகரமாகவே திகழ்ந்தது. ஜெர்மனியே அப் பேரரசின் ஆட்சி மொழியாகவுமிருந்தது. அதனால்தான், இரண்டாம் ஜோஸப், அப் பேரரசினை ஜெர்மன் மயமாக்க விரும்பினார். அவர் அம் முயற்சியில் தோல்வியுற்றாலும், அங்கு ஜெர்மென் ஆதிக்கம் மிகுந்து காணப்பட்டதென்பதற்கு இது ஒரு சான்றாகும். ஆஸ்திரியப் பேரரசில் ஜெர்மனியர்கள் சிறுபான்மையினராயிருந்தும் அவர் களது அறிவு, செல்வாக்கு காரணமாக, அங்கு அவர்கள் அனைத்துத் துறைகளிலும் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். அவர்களின் சிறப்பினையும் செருக்கினையும் பிற இன மக்கள் விரும்பவில்லை. ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் தோன்றிய நாட்டுப்பற்று காரண மாக, ஹங்கேரியர்களும், பொஹிமியர்களும் ஜெர்மனியர்களுடன் போட்டியிட்டு அவர்களின் ஆதிக்கத்தினைக் குலைக்க முற்பட்டனர். அப் பேரரசின் பெரும்பான்மையான மக்கள் ஸ்லாவ் இன மக்கள் தான். ஒற்றுமையின்மையாலும், ஆங்காங்கு பிரிந்து கிடந்தமை யாலும், அவர்கள் பிற இன மக்களுடன் போட்டியிட முடியாமல் ஒதுங்கி வாழ்ந்தனர். ஆயினும், அவர்களாலும் ஜெர்மனியர்களின் ஆதிக்கப் போக்கினையும், செல்வச் செருக்கினையும், மொழி வெறியினையும் பொறுத்துக்கொள்ள இயலவில்லை. 28 அல்லது 29 மில்லியன் மக்கள் தொகையினைக் கொண்ட இப் பேரரசினைக் கட்டிக் காப்பதென்பது அரிய செயலாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆஸ்திரியப் பேரரசராய்த் திகழ்ந்தவர் முதலாம் ஃபிரான்சிஸ் (1792-1835) ஆவார். அவருடைய சான்சலராயிருந்த இவருக்கு உற்ற துணையாய் நின்றவர் வரலாற்றுச் சிறப்புமிக்க "மெட்டர்னிக்" ஆவார். இவ்விருவரும் பேரரசு குலைந்துபோகாமல் கட்டிக்

காப்பதையே தங்களது அரும்பெரும் பணியாகக் கருதினர். பேரரசின் பல்வேறு பகுதிகளும் மரபுவழி உரிமைகளுடன் இயங்க அவர்கள் அனுமதி வழங்கினர். இல்லையெனில், அப் பேரரசு நிலைகுலைந்து போகக்கூடுமென அவர்கள் அஞ்சினர். அப் பேரரசில் ஒரே சீரான, திறமையான நிர்வாகமென்பது இல்லாது போயிற்று. அப் பேரரசின் நிர்வாகத்தினைப் போலப் பல துறைகளிருந்தன. ஒருசில துறைகளுக்கு மட்டுமே பேரரசு முழுவதிலும் ஆதிக்கம் செலுத்தும் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. பல துறைகளுக்கு அத்தகைய அதிகாரங்கள் நல்கப்படவில்லை. ஆகவே, அப் பேரரசில் ஒரு முறையான, அனைத்துப் பகுதிகளுக்கும் பொதுவான ஒரு நிர்வாகம் இல்லாமற்போனது. நிர்வாகமே அங்குக் குழப்ப மிக்கதாய், அறிவுக்குப் பொருத்தமற்றதாய்த் திகழ்ந்தது. மக்கள் நலம் பேணும் நல்ல அமைச்சரவையும் அங்கில்லை. பாராளுமன்ற ஆட்சிமுறையில்லாத காரணத்தால், மக்களது விருப்பு வெறுப்புகளை யறிந்து அதற்குத் தக ஆட்சி செய்யும் வாய்ப்பில்லாமற்போய்விட்டது. இதனால், அரசுக்கும் மக்களுக்கும் தொடர்பேதுமில்லாமற்போய் விட்டது. அதுமட்டுமன்றி, பேரரசின் பல்வேறு பகுதிகளும் நன்கு வரையிறுக்கப்படாமற் கிடந்தன. இதனால், குழப்பங்கள் மேலும் மிகுந்தன. இவையனைத்தும் அப்பேரரசின் பிரச்சினைகளைப் பெரிதும் சிக்கலாக்கின.

**மக்கள் நிலை**

ஆஸ்திரியப் பேரரசு, வல்லாட்சியின் சின்னமாய்த் திகழ்ந்தது. நெப்போலியன் போன்றோர்களால் அதன் எல்லைகள் மாற்றப் பட்டாலும், சமூக, பொருளாதாரத் துறைகளில் மாற்றமேதும் ஏற்படவில்லை. மக்கள் பல்வேறு வகுப்புகளாகப் பிரிந்து வேறுபட்டு நின்றனர். இப் பேரரசில் மிக்க சிறப்புற்றுத் திகழ்ந்தவர்கள் செல்வர்கள்தாம் என்பது கூறாமலே விளங்கும். அவர்கள் கட்டாய இராணுவ சேவையிலிருந்து விலக்கப்பட்டிருந்தனர். வரிகள் செலுத்துவதிலும் விலக்கு பெற்றுத் திகழ்ந்தனர். செல்வத்திலும், ஆடம்பரத்திலும், சிற்றின்பங்களிலும் புரண்ட அவ்வுயர்குடிமக்கள் அரசுக்கு வரியேதும் செலுத்தாதது வியப்பேயாகும். அத்துடன், பேரரசின் உயர் பதவிகள் அனைத்தும் அவர்களிடமே இருந்தன. நிலத்தில் பெரும் பகுதியும் அவர்களிடமே இருந்தது. சமயத் துறை யிலும் அவர்களே ஆதிக்கம் செலுத்தினர். உயர்படை அதிகாரி களும் அவர்களே. நாட்டின் செல்வத்தின் பெரும்பகுதி அவர்கள் வசமே இருந்தது. பெரும் பொருளை அவர்கள் நிலவரியாக ஈட்டினர். அவர்களும் ஃபிரெஞ்சுச் செல்வர்களைப் போன்று சிறப்புரிமைகள் பல பெற்றுத் திகழ்ந்தனர். தங்களுடைய நிலப்பகுதிகள் அனைத் திலும் அவர்களே ஆதிக்கம் செலுத்தினர். அவரவர் பகுதியில்

அவரவர்களே நீதிமன்றங்களேயும் கொண்டிருந்தனர். அப் பகுதிகளில் அவர்களே நீதி வழங்கி, அமைதியினையும் நிலைநாட்டினர். தங்களது பகுதிகளில் அவர்கள் அனைத்து அதிகாரங்களையும் பெற்று ஓர் அரசர் போன்றே வாழ்ந்தனர்.

இப் பேரரசின் பெருவாரியான மக்கள் உழவர் பெருங்குடி மக்கள்தான். அவர்கள் நிலை மிக இரங்கத்தக்க நிலையிலிருந்தது. அவர்கள் தங்கள் பாதி நேரத்தைச் செல்வர்களுக்காகச் செலவிட நேரிட்டது. மொத்த வருவாயில் மூன்றில் இரு பங்கினை வரியாக வழங்கினர். பலவிடங்களில் ஊண், உடை, உறைவிடத்திற்கும் அவர்கள் போராடும் நிலை ஏற்பட்டது. பல பகுதிகளில் கால்நடைகளுடன் அவர்களும் கால்நடைகளாகவே வாழ்ந்தனர். ஆஸ்திரியா பெரும்பாலும் வேளாண்மையை நம்பிய நாடாகவே இருந்தது. வேளாண்மைத் துறை மிகப் பின்தங்கிக் கிடந்தது. புதிய முறைகளும், புதிய கருவிகளும் அங்குப் பயன்படுத்தவேயில்லை. உழவுப் புரட்சியும் இப் பேரரசினை மிகுதியும் பாதிக்கவில்லை. தொழிற் புரட்சிக்கும் அங்கு வரவேற்பில்லை. இக் காரணங்களால் அப் பேரரசும் பொருளாதாரத் துறையில் மிகப் பின்தங்கிக் கிடந்தது. பெரும்பாலான மக்களும் வாழ்க்கைக்குப் போராடும் நிலையிலேயே இருந்தனர்.

இப் பேரரசு முழுவதிலும் "எஸ்டேட்ஸ்" என வழங்கப்பட்ட ஊராட்சி மன்றங்கள் செயல்பட்டன. ஆயினும், அவற்றிற்கு உரிமையேதும் வழங்கப்படவில்லை. அவற்றால் பேரரசின் ஆணைகளை மீறவோ, மறுக்கவோ இயலாது. உள்ளூர்ப் பிரச்சினைகளை ஆயவும், சிறு பூசல்களைத் தீர்த்துக்கொள்ளவுமே அவை பயன்பட்டன. பேரரசின் நிர்வாகத்தில் தலையிட அவை உரிமை பெற்றிருக்கவில்லை. அத்துடன் அம் மன்றங்கள் செல்வர்களின் ஆதிக்கத்தின் கீழேயே இயங்கின. அவை எப்போதும் செயல்படாது தேவை ஏற்படின் கூடின. அத் தேவைகள் முடிந்த பின்னர், அவை கலைந்தன. அவற்றின் தீர்ப்புகளும் முறையான ஒரு சட்ட திட்டத்திற்கு உட்பட்டதன்று. தீர்ப்புகள் மிகுதியும் சார்புடையனவாகவே இருந்தன. செலவர்கள் நலனே பெரிதும் பாராட்டப் பட்டதால், ஏழைக் குடிமக்களின் நலன் புறக்கணிக்கப்பட்டதில் வியப்பேதுமில்லை.

ஹங்கேரி நிலமட்டும் சற்று மேம்பட்டுக் காணப்பட்டது. அம் மக்களுக்கு மட்டும் பல சிறப்புரிமைகள் வழங்கப் பட்டிருந்தன. அங்கு மட்டும் பாராளுமன்றமும், மாநிலச் சட்ட மன்றங்களுமிருந்தன. அவை சிறப்புரிமைகள் பல பெற்றிருப்

பினும், அவையும் சமய ஆட்சியின் ஆணை வழியே இயங்கின. பேரரசின் ஆணைகளை மறுப்பதற்கு அவற்றிற்கு உரிமை ஏதுமில்லை. பேரரசின் ஓர் அங்கமாகவே அவையும் செயல் பட்டன. ஹங்கேரியின் அம் மன்றங்களும் மக்கள் மன்றங்கள் எனக் கூறுவதற்கில்லை. அவையும் செல்வர் மன்றங்களேயாம். செல்வர்களே அவற்றை நடத்தினர். எளிய மக்களுக்கும், அவற்றிற்கும் தொடர்பேதுமில்லை. அம் மக்களுக்கும் எத்தகைய உரிமைகளும் வழங்கப்படவில்லை. இதைத் தவிர, வேறு எந்தச் சிறப்புரிமையும் அதற்கு வழங்கப்படவில்லை. சுருங்கக் கூறின் ஆஸ்திரியப் பேரரசு வல்லாட்சியின் சின்னமாய், நிலமானிய முறையின் இலக்கணமாய்த் திகழ்ந்தது.

### மெட்டர்னிக்கும் அவரது முறையும்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி முழுவதிலும் முதலாம் ஃபிரான்சிஸும் (1792-1835) முதலாம் ஃபெர்டினண்டும் (1835-1848) ஆஸ்திரியப் பேரரசர்களாக அரசு கட்டிலில் வீற்றிருந்தனர். அவர்களுக்கு உறுதுணையாய் நின்று அப் பெரிய நிர்வாகப் பொறியினை இயக்கியவர் மெட்டர்னிக்காவார். செயல் திறனும், ஆற்றலும் மிக்கவராயினும் மெட்டர்னிக் ஒரு பிற்போக்கு வாதியாய்த் திகழ்ந்தார். பழைய மரபுகளைக் கட்டிக் காப்பதிலேயே அவர் பெரிதும் கவனம் செலுத்தினார். அவரது முறை மனித இயல்பை எதிர்த்துப் போராடுவதாயும், முற்போக்கு உணர்ச்சி களைப் புறக்கணிப்பதாயும் அமைந்திருந்தது. அவர், காவல் துறைக்கு மிக முக்கியத்துவம் தந்தார். அது எங்கும் பரவி எதிலும் தலையிட்டது. அத்துடன், இரகசிய ஒற்றர் படை யொன்றும் அனைத்தையும் கண்காணித்தது. செய்தத்தாள்கள் தீவிரமாகத் தணிக்கை செய்யப்பட்டன. பேச்சு, எழுத்து, செய்தித் தாள்கள், கலையரங்குகள் அனைத்தும் தணிக்கை செய்யப்பட்டன. வெளிநாட்டுப் பயணங்கள் பெரிதும் தடை செய்யப்பட்டன. வெளிநாட்டு நூல்கள் பேரரசின் எல்லைகளுக்குள் புகாமலிருக்கும் பொருட்டு, பேரரசின் எல்லைகள் அனைத்தும் பாதுகாக்கப்பட்டன. வரலாறும், அரசியலும் விஞ்ஞானமும் பாடத் திட்டத்திலிருந்து அகற்றப்பட்டன. மாணவர்களின் மனத்தைக் கெடுத்துவிடுமென அஞ்சி அவை பாடத் திட்டத்திலிருந்தும் அகற்றப்பட்டன. அரசு அலுவலகங்கள், கல்லூரிகள், பொதுவிடங்கள், கலை அரங்குகள், பூங்காக்கள் எங்கும் ஒற்றர்கள் நிரம்பியிருந்தனர். அவர்கள் அனைத்தையும் கண்காணித்தனர். புதிய கருத்துகளைத் தடுக்கும் பொருட்டே இத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பேராசிரியர்களும், மாணவர்களும் பெரிதும் கட்டுப்படுத்தப் பட்டனர். பேராசிரியர்களின் விரிவுரைகளை ஒற்றர்கள் கேட்டனர்.

ஆசிரியர்கள் படிக்கும் நூல்களையும் அவர்கள் மேற்பார்வை யிட்டனர். நூலகத்திலிருந்து எத்தகைய நூல்களை எடுத்து அவர்கள் படிக்கின்றனர் என்பதும் கண்காணிக்கப்பட்டது. அரசே பாட நூல்களையும் தீர்மானித்தது. வெளிநாட்டுப் பேராசிரியர்கள் ஆஸ்திரியப் பல்கலைக் கழகங்களில் நியமிக்கப்படுவது தடை செய்யப்பட்டது. ஆஸ்திரியப் பேரரசில் தனிப்பட்ட ஆஸ்திரிய இல்லங்களில்கூட, வெளிநாட்டினர் பயிற்றுநராகப் (Tutor) பணியாற்ற அனுமதிக்கப்படவில்லை. மாணவ மன்றங்கள்கூட, தடை செய்யப்பட்டன. மாணவர்கள் திருச்சபைக்குச் செல்ல கட்டாயப்படுத்தப்பட்டனர். அங்கு அவர்கள் தாங்கள் செய்த பாவங்களைக் கூறி மன்னிப்பைப் பெறுமாறும் கட்டாயப்படுத்தப் பட்டனர்.

கல்வியில் மாபெரும் கட்டுப்பாடு விதிக்கப்பட்டிருந்த காரணத் தால், அதன் வளர்ச்சி பெரிதும் குன்றிவிட்டது. முற்போக்குக் கருத்துகள் அனைத்தும் பேரரசில் புக அனுமதிக்கப்படவில்லை. இதனால் அறிவிலும் தேக்கநிலை ஏற்பட்டது. தமது பேரரசில் முற்போக்குக் கொள்கைகளைத் தடை செய்ததோடு இவர் இத்தாலி, ஜெர்மனி போன்ற நாடுகளிலும் அவற்றைத் தடை செய்தார். பிரஷ்யா, ரஷ்யா போன்ற தமது நட்பு நாடுகளையும் இதனையே பின்பற்றுமாறும் இவர் வலியுறுத்தினார். பிற ஐரோப்பிய வல்லரசு களும் இவரது அடக்குமுறையே சிறந்ததெனப் போற்றின. பாரிசு புரட்சிகளின் தாயகமாகத் திகழ்ந்ததுபோல வியன்னா தீவிரப் பிற்போக்கின் தாயகமாகத் திகழ்ந்தது. வியன்னா முறை பிற நாடுகளிலும் புகுத்தப்பட்டது. மெட்டர்னிக் பிற்போக்குக் கொள்கையின் தலைமைக் குருவாக இருந்து அதனை ஐரோப்பிய நாடுகள் அனைத்திற்கும் இடையறாது போதித்தார்.

### 1815க்குப் பின்னர் ஆஸ்திரியா

1815ல் நிகழ்ந்த வாட்டர்லூ போர்க்களத்தில் நெப்போலியனை வீழ்த்திய மிக முக்கியமான நாடுகளில் ஆஸ்திரியாவும் ஒன்று. வெற்றிபெற்ற பின்னர், ஐரோப்பிய நிலையை ஆராய வெற்றிபெற்ற நாடுகள் விரும்பின. அப்போது ஆஸ்திரியா அத்தகைய ஆய்வுக்குத் தனது தலைநகரமே தக்கதெனப் பிற வல்லரசுகளிடம் கூறி வியன்னாவில் அம் மாநாட்டினைக் கூட்டுவதாலும் வெற்றி பெற்றது. 1815க்குப் பின்னர், ஆஸ்திரியா ஐரோப்பாவில் ஒரு முக்கியப் பங்கை ஏற்பதற்கு அதுவே ஒரு முன்னறிவிப்பாக இருந்தது. வியன்னா மாநாட்டிற்கு ஆஸ்திரியச் சான்சலரே தலைமையும் ஏற்றார். அதன் விளைவாக, ஆஸ்திரியா பல நன்மை களைப் பெற்றது. அம் மாநாட்டின் நோக்கங்களை நிர்ணயிப்ப

திலும், அதன் ஏற்பாடுகளை நிறைவேற்றுவதிலும் ஆஸ்திரியா பெரும் பங்கேற்றது. அம் மாநாட்டின் முடிவில் அம் மாநாட்டின் நோக்கங்களையும் ஏற்பாடுகளையும் நிறைவேற்றுவதிலும் ஆஸ்திரியா மிக முக்கியப் பங்கேற்றது. வியன்னு மாநாட்டின் நோக்கங்களை நிறைவேற்ற "புனிதக் கூட்டணி" (Holy Alliance) ஒன்றினை அமைக்கவேண்டுமென சார் அலெக்ஸாந்தர் கூறியதையும் ஆஸ்திரியா ஏற்க மறுத்தது. புரட்சி, முற்போக்குக் கருத்துகளை முறியடிக்க மெட்டர்னிக் நால்வர் கூட்டணியொன்றினையும் அமைத்தார். இக் கூட்டணிக்கு மெட்டர்னிக்கே தலைமையுமேற்றார். ஐரோப்பிய அமைதிக்கு நிறுவப்பட்ட இக் கூட்டணி, மெட்டர்னிக்கின் பிற்போக்குக் கொள்கைகளால் முற்போக்கு இயக்கங்களை முற்றிலும் அடக்கியது. 1815க்குப் பின்னர், இக் கூட்டணி பிற்போக்கின் சின்னமாக மாறியது. இக் கூட்டணியும் ஐரோப்பாவில் மக்கள் இயக்கங்களை முறியடிக்கும் மாபெரும் இயந்திரமாகப் பயன்படுத்தப்பட்டது. இது பெரும்பாலும் மெட்டர்னிக்கினுடைய பிற்போக்குக் கொள்கையால் வந்த விளைவாகும்.

**ஆஸ்திரியாவும் கூட்டணி மாநாடுகளும்**

வியன்னு மாநாட்டிற்குப் பின்னர், ஆஸ்திரியாவே ஐரோப்பிய அரசியலுக்குத் தலைமை ஏற்றது. 1818ஆம் ஆண்டு கூடிய அக்ஸ்-லா-சாபேல் மாநாட்டிற்கு மெட்டர்னிக் தலைமையேற்று அதனை முன்னின்றும் நடத்தினார். நால்வர் கூட்டணியில் ஃபிரான்சும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. நால்வர் கூட்டணியும் ஐவர் கூட்டணியானது. ஐவர் கூட்டணியில் சேர்ந்த ஃபிரான்சும் பிற்போக்குக்கொள்கைகளை ஆதரிக்கத் தொடங்கியது. ஃபிரான்சின் மன்னராக நிலைநிறுத்தப்பெற்ற 18ஆம் லூயி மன்னரும் மெட்டர்னிக்கினுக்கும் மிக்க நன்றிக் கடப்பாடுடையவரானார். 18ஆம் லூயி மன்னரும் (1815-1824) அவருக்குப் பின்னர், பட்டத்திற்கு வந்த 10ஆம் சார்லஸும் மெட்டர்னிக்கின் கைப்பாவையாகவே விளங்கினர். 1830 வரை மெட்டர்னிக் தங்கு தடையின்றி ஃபிரெஞ்சு அரசியலில் ஆதிக்கம் செலுத்தினார்.

ரஷ்ய மன்னர் முதலாம் சார் அலெக்ஸாந்தரும் தமது முற்போக்குக் கொள்கைகளனைத்தையும் கை விட்டுவிட்டு, மெட்டர்னிக்கின் உற்ற நண்பரானார். மெட்டர்னிக்கின் தூண்டுதலால் அவர் பிற்போக்கின் சின்னமாய் மாறினார். ஃபிரான்சு, ரஷ்யாமீது ஆதிக்கம் செலுத்தியது போன்றே பிரஷ்யாமீதும் ஆஸ்திரியா ஆதிக்கம் செலுத்தியது. இங்கிலாந்து நீங்கலாக அனைத்து ஐரோப்பிய நாடுகளிலும் ஆஸ்திரிய ஆதிக்கமே மேலோங்கி நின்றது.

1820ல் இத்தாலி, ஸ்பெயின் போன்ற நாடுகளில் புரட்சிகள் தோன்றின. வியன்னு மாநாட்டு ஏற்பாடுகளை எதிர்த்துச் செய்யப் பட்ட புரட்சிகள் அவை. ஜோசப் நெப்போலியனுக்குப் பிறகு பதவியில் அமர்த்தப்பட்ட பூர்போன் மன்னர் 7ஆம் பெர்டினன்டை எதிர்த்து ஸ்பானிய மக்கள் புரட்சி செய்தனர். 1812இன் அரசிய லமைப்பை அவர் புறக்கணித்ததுடன் இன்குஷிஷன் (Inquisition) என வழங்கப்பெற்ற தண்டனை மன்றங்களையும் மீண்டும் நிறுவி, மக்களைத் துன்புறுத்தினர். அங்கு உரிமைகள் பறிக்கப்பட்டன. தணிக்கைமுறை செயலுக்கு வந்தது. இதனைக் கண்ட ஸ்பானிய மக்கள் வெகுண்டெழுந்தனர். இப் புரட்சியால் பெரிதும் ஊக்கம் பெற்ற இத்தாலியும் புரட்சியிலீடுபட்டது. இதனைக் கண்ட மெட்டர்னிக், 1820ல் டிரப்பாவ் என்ற இடத்தில் ஐரோப்பியக் கூட்டணி மாநாட்டினைக் கூட்டினர். ஸ்பெயின், இத்தாலி போன்ற நாடுகளில் தலையிட்டு அங்குத் தோன்றிய புரட்சியினை அடக்கி மீண்டும் அமைதியை நிறுவவேண்டுமென ஆஸ்திரியா வேண்டியது. அதனை ஃபிரான்சும் ஆதரித்தது. டிரப்பாவ் மாநாட்டில் இங்கிலாந்து நீங்கலாக அனைத்து நாடுகளும் மெட்டர்னிக்கையே ஆதரித்தன. அதன் விளைவாக, ஏற்பட்ட ஒப்பந்தப்படி (Protocol of Troppau) அமைதிக்காகப் புரட்சியிலீடுபட்ட நாடுகளை அடக்க கூட்டணிப் படைகளுக்கு அனுமதியும் வழங்கப்பட்டது. இத்தாலியப் புரட்சியினை அடக்குவதற்காக ஆஸ்திரியப் படைகளை ஏவப்பட்டன. இத்தாலிப் புரட்சியும் அடக்கப்பட்டது. 1820ல் ஸ்பெயின் மன்னரும் தமது நாட்டுப் புரட்சியினையடக்கும் பொருட்டு, ஃபிரான்சின் துணையை நாடினர். 1822ல் கூடிய வெரோனு மாநாட்டில் (The Congress of Verona) ஃபிரான்சு ஸ்பெயினில் தலையிடும் உரிமையை வேண்டியது. பிற நாடுகளின் உள்துறையில் தலையிடுவது முறையன்றென இங்கிலாந்தின் பிரதிநிதியான வெல்லிங்டன் பிரபு இடித்துரைத்தார். ஆயினும், மெட்டர்னிக்கின் தூண்டுதலின்பேரில் ரஷ்யாவும், பிரஷ்யாவும் ஃபிரான்சை ஆதரித்தன. ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா ஆகிய இம்மூன்று நாடுகளின் ஆதரவைப் பெற்ற ஃபிரான்சு, ஸ்பெயி னுக்குத் தனது படையினை அனுப்பி, அப் புரட்சியினை அடக்கியது. மீண்டும் ஸ்பெயினில் வல்லாட்சி நிறுவப்பட்டது. இங்கிலாந்து ஐவர் கூட்டணியிலிருந்து விலகியது. ஐரோப்பியக் கூட்டணி முறிந்தது. ஆயினும், ஐரோப்பாவில் ஆஸ்திரிய ஆதிக்கம் ஒரு சிறிதும் குன்றவில்லை.

**1830 ஜூலைப் புரட்சி**

1830 ஜூலைப் புரட்சி, ஐரோப்பாவில் பல நாடுகளில் எதிரொலித்தது. 1830ல் ஃபிரெஞ்சு ஜூலைப் புரட்சியைக் கண்ணுற்ற

இத்தாலி, ஜெர்மனி, பெல்ஜியம் போன்ற நாடுகளும் புரட்சியி லீடுபட்டன. ஃபிரான்சைப் பொருத்தவரை "மெட்டர்னிக்கின் முறை" (Metternich System) இப் புரட்சியால் முற்றிலும் குலைந்தது. புரட்சியினைத் தடுக்க விழைந்த மெட்டர்னிக்கினல் அதனைத் தடுத்து நிறுத்த இயலவில்லை. உரிமைமிக்க அரசிய லமைப்பொன்றினை ஃபிரெஞ்சு மக்கள் பெற்றதை அவரால் தடுத்து நிறுத்த முடியவில்லை. இப் புரட்சி மெட்டர்னிக் முறைக்குக் கிட்டிய மாபெரும தோல்வியாகும். அதனைப் போன்றே 1830 ஜூலையில் பெல்ஜியத்தில் ஏற்பட்ட புரட்சியினையும் மெட்டர் னிக்கினல் தடுத்து நிறுத்த இயலவில்லை. ஃபிரான்சைச் சுற்றி வலுவுள்ள அரண்கள் அமைக்கவேண்டுமென்ற அவரது கொள்கை இப் புரட்சியால் தோல்வியில் முடிந்தது. முற்போக்கு, புரட்சிக் கருத்துகள் போன்றவற்றிலிருந்து ஐரோப்பாவைப் பாதுகாக்கும் அவரது முயற்சியும் வீணனது. பெல்ஜியம், ஹாலந்திலிருந்து பிரிந்து போவதையும் அவரால் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஆஸ்திரியாவுக்கெதிராக மற்றுமொரு நாடு பெல்ஜியம் என்று மலர்ந்தது அவருக்குப் பேரதிர்ச்சியைத் தந்தது. தனது முறை உருக்குலைந்து வருவதைக் கண்டு வருந்துவதைத் தவிர ஆஸ்திரியச் சான்சலருக்கு வேறுவழி புலப்படவில்லை. கிழக்குப் பிரச்சினை யிலும் அவர் முறை வெற்றிபெறவில்லை. கிழக்குப் பிரச்சினையில் இங்கிலாந்தும் ரஷ்யாவும் செல்வாக்கு பெறுவதைத் தன்னலமிக்க மெட்டர்னிக் விரும்பவில்லை. ஆயினும், அந் நாடுகளையும் அவர் அப் பிரச்சினையிலிருந்து விலக்க இயலவில்லை. அவர் முறைக்கு எதிர்ப்பு மிகுவது வெள்ளிடை மலையானது. ஆயினும், ஆஸ்திரியா ஐரோப்பிய அரங்கில் தனது செல்வாக்கினை முற்றிலும் இழந்துவிடவில்லை.

### 1848—பிப்ரவரிப் புரட்சியும் ஆஸ்திரியாவும்

1830 ஜூலைப் புரட்சிக்குப் பின்னரும் ஆஸ்திரியா பல நாடுகள் மீது ஆதிக்கம் செலுத்திவந்தது. இத்தாலி, ஜெர்மனி, ஹங்கேரி போன்ற பல பகுதிகள் இன்னும் அதன் இரும்புப் பிடியிலேயே இருந்தன. மெட்டர்னிக் முறையும் இன்னும் செயல்பட்டுவந்தது. புரட்சிக் கருத்துகளைத் தடுக்கும் தமது முயற்சியினை அவர் இன்னும் கைவிட்டாரில்லை. பிரஷ்யாவும், ரஷ்யாவும் இன்னும் மெட்டர்னிக் தம் கொள்கையினையே ஆதரித்தன. பிரஷ்ய அரசர் களான மூன்றும் பிரடரிக் வில்லியமும், அவருக்குப் பின்னர், அரியணை ஏறிய அவர்தம் மைந்தரான நான்காம் பிரடரிக் வில்லியமும் (1840-1861) மெட்டர்னிக்கின் உற்ற நண்பர்களாக இருந்தனர். அதுபோன்றே முதலாம் சார் அலெக்ஸாந்தருக்குப் பின்னர், பட்டத்துக்கு வந்த அவர்தம் மைந்தரான முதலாம் சார் நிக்கலோலஸும் மாபெரும் பிற்போக்குவாதியாய்த் திகழ்ந்தார்.

இவரும் மெட்டர்னிக் முறைக்கு மாபெரும் அரணாய் நின்றார். 1830க்குப் பின்னர், மெட்டர்னிக்கும், அவர்தம் நண்பர்களான நான்காம் பிரடரிக் வில்லியமும், முதலாம் சார் நிக்கலொலஸூம் பிற்போக்குக் கொள்கைகளை ஆதரித்து அவற்றின் காவலர்களாக விளங்கினர்.

மெட்டர்னிக்கின் வன்முறையாட்சி ஐரோப்பிய நாட்டுப்பற்று என்ற பேராற்றுக்கெதிராக எதிர்நீச்சல் போடும் அவலநிலைக்கு வந்தது. ஐரேப்பாவெங்கும் புது உணர்வுகளும், புதுக் கொள்கைகளும், புது இயக்கங்களும் மெட்டர்னிக் முறைக்கெதிராகத் தலைதூக்கி நின்றன. மெட்டர்னிக்கும், அவர்தம் பிற்போக்கு நண்பர்களும் எவ்வளவு முயன்றும் புரட்சிகளையும், நாட்டுப் பற்றினையும் தடுக்க முடியவில்லை. அடிமைப்பட்டுக் கிடந்த நாடுகளனைத்திலும் விடுதலை வேட்கை கரைபுரண்டோடியது. மெட்டர்னிக் முறையினை எதிர்த்து 1848ல் பல நாடுகளும் புரட்சி செய்யத் தலைப்பட்டன. ஆஸ்திரியாவும் தனது சான்சலரான மெட்டர்னிக்கை எதிர்த்துப் புரட்சிக் கொடியினை உயர்த்தியது. தனது தாயகமே தம்மை எதிர்த்ததைக் கண்டு பெரிதும் அதிர்ந்து போனார். பிற்போக்கின் சினனமான மெட்டர்னிக், பிற நாடுகளில் புரட்சியை அடக்குவதில் வெற்றிகண்ட தன்னை எதிர்த்த தனது தாயகப் புரட்சியைக் கண்டு பெரிதும் சோர்ந்து போனார். தான் வீழ்வது உறுதி எனவும் அவர் துணிந்தார். செக் மக்கள், ஹங்கேரியர்கள், ஸ்லாவ் இனத்தோர், ருமேனியர்கள் அனைவரும் இவரை எதிர்த்தனர். "இளம் இத்தாலியும்" இவரை எதிர்த்தது. ஜெர்மனியும் இவரது முறையை எதிர்த்துப் போர்க் கொடியினை உயர்த்தியது இத்தாலியிலும், ஜெர்மனியிலும் பிப்ரவரிப் புரட்சி தோல்வியுற்றது. மீண்டும் ஆஸ்திரிய ஆதிக்கம் அங்கு நிலைநாட்டப்பெற்றது.

ஹங்கேரியின் ஒப்பற்ற தலைவரான லூயி கொசூத், அடக்குமுறை ஆட்சியினை எதிர்த்து விடுதலைப் போரைத் தொடங்கினார். மெட்டர்னிக் முறையினை எதிர்த்து வியன்னாவும் போர்க்கோலம் பூண்டது. ஆஸ்திரியப் பேரரசு அமைதியின்றி நிலைகுலைந்து காணப்பட்டது.

மெட்டர்னிக் தனக்கெதிராக உருவான புரட்சியினைக் கண்டு பெரிதும் மருண்டார். மாறுவேடம் பூண்டு அவர் இங்கிலாந்திற்குத் தப்பியோடினார் (மார்ச் 13, 1848). ஐரோப்பாவில் இத்துடன் மெட்டர்னிக் சகாப்தம் முடிவுற்றது.

ஆஸ்திரிய மக்கள் தங்களுக்கு ஒரு நல்ல அரசியலமைப்பு வேண்டுமெனத் தங்களது அரசரை வேண்டினர். பேரரசர்

முதலாம் ஃபெர்டினன்டும் மக்கள் விரும்பியவாறு அவர்களுக்கு அரசியலமைப்பு ஒன்றினையும் ஈந்தார். பேரரசர் வழங்கிய அரசியலமைப்பால் அமைதியுறாத அம் மக்கள் அவ்வதிகாரம் தங்களுக்கே நல்கப்படவேண்டுமென மீண்டும் புரட்சி செய்தனர். 1848ஆம் ஆண்டு, மே திங்களில் அவ்வுரிமையினையும் மக்கள் போராடிப் பெற்றனர். மக்களது செயல்களால் பெரிதும் வெறுப்பு கொண்ட பேரரசர் ஃபெர்டினன்ட் தலைநகரை விட்டு வெளியேறி, இன்ஸ்பர்க் என்ற நகருக்குச் சென்று சேர்ந்தார். இதன் விளைவாக வியன்னாவிலும், பிற பகுதிகளும் மாபெரும் குழப்பம் நிலவியது. நிர்வாக இயந்திரம் முற்றிலும் செயலிழந்தது. படையினரும் புரட்சியாளர்கள் பக்கம் சாய்ந்தனர். பேரரசெங்கும் கொந்தளிப்பு மிகுந்தது.

இக் குழப்பம் கொசூத் என்பாருக்கு நல்லதொரு வாய்ப்பாய் அமைந்தது. 1848ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் ஹங்கேரியப் பாராளுமன்றமான "டயட்"டும் கூடி வரலாற்றுச் சிறப்புமிக்க மார்ச் சட்டங்களை இயற்றியது (March Laws 1848). ஹங்கேரிக்குத் தன்னாட்சி வழங்கப்பட வேண்டுமெனவும், ஆஸ்திரியப் பேரரசர் பெயருக்கு மட்டுமே அதற்கு அரசராக இருக்க வேண்டுமெனவும், அதன் உள்துறை நிர்வாகமனைத்தும் அதன் டயட்டுக்கு வழங்கப் படவேண்டுமெனவும், உயர்குடியினரின் சிறப்புரிமைகளனைத்தும் அகற்றப்படவேண்டுமெனவும், சட்டமியற்றல், வரிவிதித்தல் போன்ற இன்றியமையா உரிமைகளனைத்தும் ஹங்கேரி மக்களுக்கே வழங்கப்படவேண்டுமெனவும் மார்ச் சட்டங்கள் வலியுறுத்தின. பேரரசரும் ஆஸ்திரியப் பேரரசின் நிலைக்குப் பெரிதும் இரங்கி. அச் சட்டங்களைத் தாம் ஏற்றுக்கொண்டதாகவும் அறிவித்தார்.

ஹங்கேரியப் புரட்சியால் பெரிதும் ஊக்கம்பெற்ற பொஹிமிய மக்களும் புரட்சிக் குரலை எழுப்பினர். தங்களுக்கும் விடுதலை வேண்டுமென்று " இளம் செக் " இயக்கமும் புரட்சியிலீடுபட்டது. அவர்களது வேண்டுகோளுக்கிணங்க, நல்ல அரசியலமைப்பும், பாராளுமன்றமும் வழங்கப்பட்டன (1848-ஏப்ரல் 8). அவப்பேறு காரணமாக அம் மக்களிடை நிலவிய ஒற்றுமையின்மை காரண மாக, அவர்களது சீரிய முயற்சிகளனைத்தும் வீணாயின. பொஹிமியப் பாராளுமன்றத்தில் செக் உறுப்பினர்களுக்கும், ஜெர்மன் உறுப்பினர்களுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் மிகுந்தன. பொஹிமிய-ஜெர்மனியர்கள் பிராங்க்பர்ட் பாராளுமன்றத் தோடு இணைய விரும்பினர். மொழிப்பற்று, இனப்பற்று காரண மாக, அவர்கள் ஜெர்மனியர்களுடன் இணைய விரும்பினர். இதனைப் பொஹிமிய-செக் மக்கள் ஏற்க மறுத்தனர். அவர்கள் அனைத்து

ஸ்லாவ் இன மக்களின் ஒருமைப்பாட்டினை நிறுவ விரும்பினர். 1848ஆம் ஆண்டு, ஜூன் திங்களில் பிரேக் நகரில் அத்தகைய மாநாடொன்றினையும் கூட்டினர். அம் மாநாட்டினை ஜெர்மனியர்கள் எதிர்த்தனர். இது அவர்களிடையே பெரும் பூசலாய் மாறியது. அவர்களிடை ஏற்பட்ட இப் பூசலை நன்கு பயன்படுத்தி, ஆஸ்திரியப் படைகள் அப் புரட்சியாளர்களை எளிதாகத் தோற்கடித்தன. பொஹிமியப் புரட்சி உட்பூசல் காரணமாகத் தோல்வியுற்றது. ஆஸ்திரியப் படைகள் இதனால் பெரிதும் ஊக்கம் பெற்றன. பிற புரட்சிகளை அடக்கவும் அவர்கள் இதனால் துணிந்தனர்.

ஹங்கேரியிலும் ஒற்றுமையின்மை நிலவியது. ஹங்கேரியில் மாகியர்களுடைய ஆதிக்கத்தினை நிறுவ வேண்டுமெனப் புரட்சியாளர்கள் விரும்பினர். ஹங்கேரியிலிருந்த பிற இன மக்களான குரோட்ஸ்கள், ருமேனியர்கள், ஸ்லாவ் இனத்தோர் போன்றோர்களுக்கு மாகியர்கள் சம உரிமைகள் வழங்க மறுத்தனர். கொசூத் போன்ற தலைவர்களும் அங்கு மாகியர்கள் ஆதிக்கமே இருக்க வேண்டுமென விரும்பினர். இதனை ஹங்கேரியச் சிறுபான்மை மக்கள் எதிர்த்தனர். ஹங்கேரி மாகியர் மயமாக்கப்படுதலை அவர்கள் வெறுத்தனர்.

ஹங்கேரியத் தலைவர்களிடையேயும் ஒற்றுமையில்லாது போனது. கொசூத்தும், டீக் (Deak) என்பாரும் வேறுபட்டு நின்றனர். ஆஸ்திரியப் படைகள் ஹங்கேரியை முற்றுகையிட்ட போது, டீக் போன்ற மிதவாதிகள் உடன்பாடு செய்து கொள்ளுதலே தக்கதென விரும்பினர். கொசூத். கார்கி (Gorgei) போன்ற தலைவர்கள் ஆஸ்திரியாவுடன் போரிட்டு ஹங்கேரியை மீட்க வேண்டுமென விரும்பினர். ஹங்கேரி இரண்டுபட்டது. இது ஆஸ்திரியர்களுக்கு மிக்க நன்மையாய் அமைந்தது.

ஆஸ்திரியப் பேரரசர் இழந்த ஊக்கத்தினை மீண்டும் பெற்றார். அனைத்து அதிகாரங்களையும் மைய அரசிடமே கொண்ட புதிய அரசியலமைப்பொன்றினை அவர் அறிவித்தார். அதன்படி அனைத்து அதிகாரங்களும் மைய அரசினிடமே குவிக்கப் பட்டன. ஆயினும், பல்வேறு பகுதிகளும் பாராளுமன்றங்களை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டன. ஹங்கேரியின் சிறப்புரிமைகள் மறுக்கப்பட்டன. பிற நாடுகளுக்கு வழங்கப்பட்ட உரிமைகளே அதற்கும் வழங்கப்பட்டன. தனது சிறப்புரிமைகளை இழந்த ஹங்கேரி, பெரிதும் ஆத்திரமடைந்தது. இதன் விளைவாகத் தன்னை ஒரு சுதந்திர நாடெனா அறிவித்துக்கொண்டது. 1849ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களில் தன்னை ஒரு குடியரசெனவும் அது

அறிவித்துக்கொண்டது. கொசூத், அதன் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இது ஹங்கேரி செய்த மாபெரும் தவருகும். கொசூத், அரசியல் நுட்பமற்றவர்; நடைமுறையினை அவர் அறியார். ஹங்கேரியின் தீவிரப் போக்கினைக் கண்டு ரஷ்யாவும் வெகுண்டது. ஆஸ்திரியா அதன் துணையை நாடியபோது, அது பெரிதும் மகிழ்வுற்றுப் பெரும்படை ஒன்றினை ஹங்கேரியை அடக்க அனுப்பியது. ஒன்றரை லட்சத்துக்கும் மேற்பட்ட ரஷ்ய வீரர்களைக் கொண்ட அப் பெரும்படை, ஹங்கேரியை வெகு எளிதாகத் தோற்கடித்தது. கொசூத், நாட்டைவிட்டுத் தப்பியோடினர். கார்கி, போரில் வீரமரணமெய்தினர். ஒற்றுமையின்மை என்ற காரணத்தால் ஹங்கேரி தோல்வியுற்றது. அதன் தீவிரப்போக்கும் அதன் வீழ்ச்சிக்கு வழிவகுத்தது. ஹங்கேரி புரட்சியின்போது அந்நாட்டின் சிறுபான்மையினரின் தலைவராயிருந்த ஜெல்லசி (Jellacie) என்பார் ஆஸ்திரியாவுக்குப் பெரிதும் துணை புரிந்தார். ஹங்கேரியச் சிறுபான்மையினரும் இப் புரட்சி தோல்வியுற்றதற்குக் காரணமாவர். ஹங்கேரி மீண்டும் ஆஸ்திரிய ஆதிக்கத்தின்கீழ் வந்தது.

### 1848-க்குப் பின்னர் ஆஸ்திரியா

புரட்சிகளாலும் குழப்பங்களாலும் அழியவிருந்த ஆஸ்திரியப் பேரரசு, முதலாம் நிக்கலொஸ் போன்றோரின் துணையால் காப்பாற்றப்பட்டது. 1850-க்குப் பின்னர், ஆஸ்திரியப் பேரரசு ஓரளவுக்குத் தனது ஆதிக்கத்தினை மீண்டும் நிலைநாட்டிக் கொண்டது. ஆயினும், 1848 புரட்சியால் அது எத்தகைய படிப்பினையையும் பெறவில்லை. மீண்டும் அது அடக்குமுறை ஆட்சியினையே மேற்கொண்டது. மீண்டும் வல்லாட்சியே எங்கும் நிறுவப்பட்டது. மீண்டும் பழைய இரும்புக்கரமே இத்தாலியை ஆண்டது. பிரஷ்யாவும் மிகத் தாழ்மையுற்றது. மீண்டும் ஆஸ்திரிய ஆதிக்கமே அங்கும் மேலோங்கியது. 1848-க்குப் பின்னர், ஹங்கேரியும் வல்லாட்சியின் வலிமையை நன்குணர்ந்தது. ஹங்கேரி, அடக்குமுறையாட்சியில் மிகத் துன்புற்றது. பல நூற்றாண்டுகளாக நுகர்ந்துவந்த அனைத்து உரிமைகளையும் ஹங்கேரி இழந்து நலிவுற்றுக் காணப்பட்டது. அதனுடைய டயட்டும் கலைக்கப்பட்டது. அது குரோஷியா, டிரேன்சில்வேனியா போன்ற இடங்களையும், செர்பிய மாநிலங்களையும் இழந்தது. அது ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுத் தனித்தனியாக ஆளப்பட்டது. வியன்னாவின் ஆதிக்கம் அங்கு முற்றுப்பெற்றது. அது முற்றிலும் ஆஸ்திரிய மாநிலமாகவே மாற்றப்பட்டது. ஆயினும், ஆஸ்திரிய வல்லாட்சியால், அம் மக்களின் நாட்டுப்பற்றினைப் போக்க இயலவில்லை. ஆஸ்திரியப் பேரரசரான ஜோஸப் ஃபிரான்சிஸூம்

பேரரசின் ஒற்றுமையைப் பேணுவதற்காக மைய அரசினையே வலுப்படுத்தினர். மக்களை ஓரளவுக்குத் திருப்திப்படுத்த பெரிதும் நிலமானிய முறையினை இப் பேரரசர் அகற்றினர். உழவர்களுக்குப் பல உரிமைகள் வழங்கப்பட்டன. புரட்சிக்குப் பின்னர், ஆஸ்திரியப் பேரரசின் வலுக்கரம் சற்றே தளர்ந்தது எனில் மிகையாகாது.

மக்கள் நம்பிக்கையினையும், ஆதரவினையும் இழந்த ஒரு பேரரசு நீண்டநாள்கள் நிலைத்து நிற்காது என்பதற்கு ஆஸ்திரியப் பேரரசே ஒரு சான்றாகும். 1855-க்குப் பின்னர், அது எப்போதும் வீழ்ச்சியுறலாம் என்ற நிலையை எய்தியது. 1859ல் அது இத்தாலியோடு போரிடும் நிலை ஏற்பட்டது. இத்தாலியிடமும் தோற்றது. இப் பேரரசின் திறமையின்மை இதனால் நன்கு வெளிப்பட்டது. பேரரசு தனது ஆதிக்கத்தினை இத்தாலி போன்ற பகுதிகளில் நிலையாக நிலைபெறச் செய்தலரிது என்பதைத் தெளிவாக உணர்ந்தது. லொம்பார்டியினையும் அது பீட்மாண்டிற்கு விட்டுக் கொடுக்கும் அவலநிலைக்கு உட்பட்டது.

1859-க்குப் பின்னர், ஆஸ்திரியப் பேரரசின் வீழ்ச்சி தொடங்கியது. அங்குப் பொருளாதார நெருக்கடியும் மிகுந்தது. இத்தாலியில் அது அடைந்த தோல்வி, ஹங்கேரியைப் பெரிதும் ஊக்குவித்தது. ஹங்கேரி மற்றுமொரு புரட்சிக்கு ஆயத்தமானது. அங்குப் புரட்சி தோன்றும் நிலையும் உருவானது.

பேரரசர் ஜோஸப் ஃபிரான்சிஸ் குன்றிவரும் தமது ஆதிக்கத்தினை உணரத் தலைப்பட்டார். மக்களது ஆதரவு இன்றியமையாதது என்பதைப் பேரரசர் தெளிவாக உணர்ந்தார். ஆயினும், அதனை எவ்வாறு பெறுவது என்பதையறியாது மயங்கினர். பேரரசின் ஒற்றுமையைக் குலைக்காமல் சீர்திருத்தங்களை எவ்வாறு புகுத்துவது என்பதுதான் அவரது தலையாயப் பிரச்சினையாகும். அங்கு எத்தகைய ஆட்சி வேண்டுமென்பதில் கருத்து வேறுபாடுகள் தோன்றின. பேரரசின் நன்மைக்காக அதிகாரங்கள் பன்முகப்படுத்தப்பட்டு (Decentralisation) அதன் பகுதிகள் பலவற்றிற்கும் மிகுதியான அதிகாரங்கள் வழங்கப்படவேண்டும். கூட்டாட்சியினை நிறுவி, மக்களுக்கு மிகுதியான உரிமைகளை வழங்கி, அதன்வழி பல பகுதிகளின் ஒத்துழைப்பினைப் பெற்றால் பேரரசு வீழ்ச்சியிலிருந்து காப்பாற்றப்படலாம். அதனல், மக்களிடை பேரரசின்மீது நம்பிக்கையும் மதிப்பும் மிகும். மக்கள் ஆதரவைப் பெற்று, அது வலுவுடன் திகழும் என்பது ஒரு சாரார் கூற்று. பேரரசின் வலிமையைப் பேண அதிகாரங்கள் ஒருமுகப்

படுத்தப்படவேண்டும் (Centralisation). வலுவுள்ள மைய அரசே அனைத்துப் பகுதிகளையும் கட்டுப்படுத்த இயலும். அதிகாரம் பன்முகப்படுத்தப்படுவதால், அதன் ஒற்றுமை மேலும் சீர்குலையும். ஆகவே, வலுவுள்ள மைய ஆட்சி வேண்டுமென்றனர் பிறிதொரு சாரார். பேரரசரும் யாது செய்வதென அறியாது மயங்கினர்.

பேரரசர் ஃபிரான்சிஸ், துணிந்து கூட்டாட்சி முறையினை 1860-ல் தமது பேரரசில் புகுத்தினர். அவப்பேறு காரணமாக, அது செவ்வையாகச் செயல்படவில்லை. இதனால், சோர்வுற்ற பேரரசர் 1861ல் ஒரு புதுமுறையினைத் தொடங்கினர். தமது பேரரசு முழுவதற்கும் இரண்டு அவைகளைக் கொண்ட பாராளுமன்ற மொன்றினைத் தொடங்கினர். அது ஆண்டுக்கு ஒருமுறை கூடுமெனவும் அறிவித்தார். செல்வர்கள் அவையைப் (The House of Lords) பேரரசரே தேர்ந்தெடுப்பாரென்றும், உறுப்பினர்கள் அவையை (The House of Representatives) அப் பகுதிகளின் டயட்டுகள் தேர்ந்தெடுக்குமெனவும் அறிவிக்கப்பட்டது. உறுப்பினர்கள் அவையில் ஹங்கேரிக்கு 85 இடங்களும், டிரேன்சில் வேனியாவுக்கு 20 இடங்களும், குரோஷியாவுக்கு 9 இடங்களும், பொஹிமியாவுக்கு 54 இடங்களும், மொரேஷியாவுக்கு 22 இடங்களும், கெலிஷியாவுக்கு 38 இடங்களும் நல்கப்பட்டன. அப் பகுதிகளின் உட்பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ள அந்தந்தப் பகுதிகளின் டயட்டுகளுக்கு உரிமைகள் அளிக்கப்பட்டன. இப்புதிய அரசியலமைப்புப்படி ஆஸ்திரியா ஒரு வரம்புக்குட்பட்ட முடியரசானது.

இப்புதிய அமைப்பும் செயல்படவில்லை. காரணம் என்னவெனில், ஹங்கேரி தன்னுடைய உறுப்பினர்களை இதற்கு அனுப்ப மறுத்ததேயாகும். ஹங்கேரியில் பல்வேறு இன மக்களிருந்தனர். அவர்களுள் மிக்க செல்வாக்குப் பெற்றவர்கள் மாகியர்களேயாவர். அவர்களே ஹங்கேரியில் ஆதிக்கம் செலுத்த நினைத்தனர். அவர்களிடையேயும் ஒற்றுமையில்லை. அவர்களுள் ஒரு சாரார் மிகத் தீவிரவாதிகள். அவர்கள் முற்றிலும் விடுதலை பெற்று ஆஸ்திரியாவிடமிருந்து பிரிந்து செல்லவேண்டுமென விரும்பினர். 1848-க்குப் பின்னர், இவர்களது செல்வாக்குப் பெரிதும் குன்றி விட்டது.

1849-க்குப் பின்னர், ஹங்கேரிய அரசியலில் மிக்க செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தவர்கள் மிதவாதிகளேயாவர். அவர்களது தலைவரான ஃபிரான்சிஸ் டீக் (Deak) என்பார்தாம் 19ஆம் நூற்றாண்டு ஹங்கேரிய வரலாற்றிலேயே நல்லவரும் அறிவுத்திறன்

மிக்கவருமாவார். டீக்கும் அவரது கட்சியினரும் ஹங்கேரி என்பது எப்போதும் ஒரு தனித்த நாடு. அது ஆஸ்திரியப் பேரரசுடன் இணைக்கப்பட்ட ஒரு நாடு. ஆஸ்திரியப் பேரரசர்தான் ஹங்கேரியின் அரசருமாவார். ஹங்கேரியின் அடிப்படை உரிமைகளை, சட்டங்களைப் பேணுவதாக வாக்குறுதி எடுத்தபின்னரே ஹங்கேரியின் அரசரென அவர் ஏற்றுக்கொள்ளப்படுகிறார். இவ்வடிப்படை உரிமைகளும், சட்டங்களும் பல நூற்றாண்டுகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டுச் செயலிலிருந்தன. அவையே 1848 புரட்சியின்போது மே சட்டங்களாக வரையறுக்கப்பட்டன. அதனைப் பேரரசர் முதலாம் ஃபிரான்சிஸும் ஏற்றுக்கொண்டார். அதில் மாற்றங்கள் செய்வதை நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம் என்றனர் மிதவாதிகள். இதில் மாற்றங்கள் செய்யப் பேரரசருக்குமட்டும் உரிமையில்லை, மக்களின் ஒப்புதலைப் பெற்ற பின்னரே அவர் மாற்றங்களைச் செய்யமுடியுமென அவர்கள் வாதாடினர். ஹங்கேரி என்பது ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்க நாடு. அதற்கெனத் திட்டவட்டமான எல்லைகளும், மரபுகளும், பண்பாடும் உள்ளன. இத்தகைய சிறப்புமிக்க ஒரு நாடு, இன்னொரு நாட்டின் ஆதிக்கத்தின்கீழ் இருத்தல் இயலாது. ஆஸ்திரியப் பேரரசில் தனித்து நிற்க விரும்புகிறோமென அவர்கள் அறிவித்தனர். ஹங்கேரி தனது உறுப்பினர்களைப் பாராளுமன்றத்திற்கு அனுப்பாத காரணத்தால், அரசியல் நெருக்கடி ஏற்பட்டது.

1861-லிருந்து 1865வரை இந்தச் சிக்கல் நீடித்தது. 1865-ல் இச் சிக்கலுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க முயன்றார் பேரரசர் ஃபிரான்சிஸ் ஜோசப். ஆயினும், 1866-ல் ஏற்பட்ட ஆஸ்திரிய-பிரஷ்யப் போரின் விளைவாக உடன்பாடு ஏற்படும் நிலை தாமதப்பட்டது. 1866-ல் நிகழ்ந்த ஆஸ்திரிய-பிரஷ்யப் போரில் ஆஸ்திரியா தோல்வியுற்றது. இது ஹங்கேரிக்கு நன்மையாய் முடிந்தது. இப்போரில் ஆஸ்திரியா தனது ஜெர்மன் ஆதிக்கத்தினை இழந்தது. பிரஷ்யாவின் தலைமையிலமைந்த ஜெர்மனி ஒரு வலுவுள்ள நாடாக மாறியது. அதன்பின்னர், ஆஸ்திரியப் பேரரசின் ஒற்றுமையினை நிலைநாட்டவேண்டிய கட்டாயமேற்பட்டது. அதற்கு ஹங்கேரியின் ஒத்துழைப்பும் மிகத் தேவைப்பட்டது. 1867-ல் டீக்கிடம் ஹங்கேரியின் பிரச்சினை என்னவென்று பேரரசர் ஜோஸப் வினவியபோது, 1848-ல் வழங்கப்பட்ட உரிமைகளே அப் பிரச்சினையென டீக் இயம்பினர். டீக்கின் சமரச உணர்வு ஆஸ்திரியாவுக்குப் பெரும் துணையாக இருந்தது. டீக்கின் வேண்டுகோளுக்கு ஆஸ்திரியப் பேரரசரும் செவிசாய்த்தார். 1867-ல் இவ்விரு நாடுகளும் சமரச உடன்பாடொன்றுக்கு உடன்பட்டன.

அதுதான் 1867-ல் ஏற்பட்ட வரலாற்றுச் சிறப்புமிக்க ஆஸ்க்லீக் சமரச உடன்பாடாகும் (Ausgleich or Compromise). அவ்வுடன்பாட்டுப்படி ஃபிரான்சிஸ் ஜோசப்பே அவ்விரு நாடுகளுக்கும் அரசராக முடிசூட்டிக் கொண்டார்.

## இரட்டை மன்னராட்சி (Dual Monarchy)

ஃபிரான்சிஸ் ஜோசப் ஆஸ்திரியப் பேரரசராகவும், ஹங்கேரியின் அரசராகவும் பதவியேற்றார். அவரது இரட்டை மன்னராட்சி வரலாற்றில் சிறப்புக்குரியதும், தனித்தன்மை வாய்ந்ததுமாகும். இவ்விரட்டை மன்னராட்சி ஒருமித்த ஆட்சியோ (Unitary) அல்லது கூட்டாட்சியோ அன்று. அது ஒரே அரசரின் கீழ்வரும் இரு நாடுகளின் ஆட்சியாகும். ஆஸ்திரியாவும், ஹங்கேரியும் சுதந்திரமான, சம அதிகாரங்களைக்கொண்ட இரு வேறு நாடுகளாகும். ஆயினும், அவை இரண்டும் ஒரே அரசரையும், ஒரே கொடியினையும் கொண்டவை. ஃபிரான்சிஸ் ஜோசப் ஆஸ்திரியாவுக்குப் பேரரசராயும் ஹங்கேரிக்கு அரசராயுமிருப்பார். இவ்விரு நாடுகளுக்கும் தனித்தனியாகப் பாராளுமன்றமும், அமைச்சரவையும், நிர்வாகத் துறைகளும் நிறுவப்பட்டன. உள்துறை நிர்வாகத்தில் இவ்விரு நாடுகளும் முழு அதிகாரங்களைக் கொண்ட சுதந்திர நாடுகளாகும். ஆயினும், வெளித்துறைச் செய்திகளுக்கும், போர்த்துறைக்கும், நிதித்துறைக்கும் கூட்டு அமைச்சரவை நிறுவ ஏற்பாடானது. இவ்விரு நாடுகளுக்கும் பொதுவான ஒரு பாராளுமன்றம் இல்லையெனினும், இவ்விரு நாடுகளுக்கும் பொதுவான ஒரு பேராட்குழு (Delegation) நிறுவப்பட்டது. 60 உறுப்பினர்களைக் கொண்ட பேராட்குழு ஒன்றினை ஹங்கேரியும், அதனைப் போன்றே ஆஸ்திரியாவும் தேர்ந்தெடுக்குமெனவும், அவை வியன்னாவிலும், புடாபெஸ்டிலும் (Budapest) மாறிமாறிக் கூடிப் பொதுப் பிரச்சினைகளை ஆராயுமெனவும் முடிவு செய்யப்பட்டது. இக்குழுக்கள் தங்கள் பணிகளைத் தனித்தனியே செய்தன. அவை தங்களது தாய்மொழி வாயிலாகவே செயல்பட்டன. ஒன்றோடொன்று எழுத்துமூலமே அவை தொடர்புகொண்டன. இவ்விரு குழுக்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றின. இரண்டும் கூடிப்பேசி முடிவு கண்டன, ஏதேனும் சிக்கலெனில், அதனை வாக்கெடுப்பு மூலமும் தீர்த்துக்கொண்டன. அக் குழுக்களில் பெருவாரியான வாக்குகள் பெறும் முடிவே இறுதியானதாகும். காப்புவரி, நாணயமுறை போன்றவை இக்குழுக்களுக்கு அப்பாற்பட்டவை. அவற்றை இவ்விரு நாடுகளின் பாராளுமன்றங்களே முடிவு செய்யும் உரிமையினைப் பெற்றிருந்தன. இதுபோன்ற பிரச்சினைகளை இரு நாட்டுப் பாராளுமன்றங்களும் ஒன்றுகூடி 10 ஆண்டுகளுக்குச்

செல்லத்தக்க உடன்பாடுகள் செய்துகொண்டு அவற்றைச் செயற் படுத்தின. காப்புவரி விதித்தலில், இரு நாடுகளுக்குமிடையே சிக்கல் ஏற்பட்டது.

இவ்விரட்டை மன்னராட்சியில் குறைகளிருப்பினும், அது அன்றைய சூழ்நிலைக்கு மிக்க ஏற்றதாகவே இருந்தது. பேரரசர் ஃபிரான்சிஸ எதிலும் தீவிரமான மாற்றங்களைச் செய்யத் தயங்கினர். இரு நாடுகளும் தங்கள் வேறுபாடுகளை மறந்து பேரரசரின் மேலான விருப்பத்தைப் பேணிக் காத்தன. இதனுல் பேரரசரின் ஒற்றுமையும் காக்கப்பட்டது. அதனுடன் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் உரிய தீர்வுகளை ஏற்கவும் தள்ளவுமான தடுப்பு அதிகாரத்தினை (Veto Power) பேரரசர் பெற்றிருந்த காரணத்தால், பேரரசின் ஒற்றுமையைப் பேணிக் காத்தலும் எளிதானது.

### புதுச் சிக்கல்கள்

1867-க்குப் பின்னர், இவ்விரு நாடுகளுக்குமிடையே புதுச் சிக்கல்கள் பல தோன்றின. 1867-க்குப் பின்னர், ஆஸ்திரியாவில் புதிய தொழிற்சாலைகள் பல திறக்கப்பட்டன. தொழில் துறையில் நாட்டம்மிக்க ஆஸ்திரியா தனது புதிய தொழிற்சாலையைப் பேண விரும்பியது. பிற நாடுகளுடன் போட்டியிடமுடியாத நிலையிலிருந்த தனது புதிய தொழிற்சாலைகளைக் காப்புவரி மூலம் ஆஸ்திரியா பேண விரும்பியது இதனுல், உழவு பொருளாதாரத்தின் அடிப் படையில் அமைந்த ஹங்கேரி பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆஸ்திரியா வெளிநாட்டுப் பொருள்கள்மீது மிகுதியான வரிகளை விதித்த காரணத்தால், பொருள்களின் விலை மிக உயர்ந்தது. ஆஸ்திரியா உழவினையும் அதனைச் சார்ந்த பிரச்சினையையும் முற்றிலும் புறக்கணித்தது. இதனுல், இவ்விரு நாடுகளுக்கு மிடையே பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் மிகுந்ததோடு, வேற்று மைகளும் மிகுந்தன. இதனுல் பேரரசின் வரவுசெலவுத்திட்டங்களை ஏற்க ஹங்கேரி எதிர்ப்புத்தெரிவித்தது. ஆஸ்திரியாவின் காப்புவரித் திட்டதினை ஹங்கேரி வன்மையாக எதிர்த்தது. உணவுப் பொருளகள விற்பனையில் ஆஸ்திரியா தன்னுடைய நாட்டு நலனுக்காகத் தங்கு தடையற்ற வணிகக் கொள்கையைப் (Free Trade) பின்பற்றியது. உணவுப் பொருள்களையும் காப்புவரி மூலம் காக்க வேண்டுமென ஹங்கேரி வேண்டியது. இவ்வெதிர்ப்புக் காரண மாக அவ்விரு நாடுகளுக்கிடையே ஓர் உடன்பாடும் ஏற்பட்டது. உழவையும், தொழிலையும் காப்பதென அவை முடிவு செய்தன. இது அவற்றின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது.

1868ல் இராணுவச் சீர்திருத்தங்களிலும் கருத்து வேறுபாடுகள் தோன்றின. தனது நாட்டிலுள்ள படைகள் தங்கள் நாட்டுப் படைத் தலைவர்களாலேயே நிர்வகிக்கப்பட வேண்டுமெனவும், இராணுவ மொழியாக மாகியர் மொழியே இருக்க வேண்டுமெனவும் ஹங்கேரி வேண்டியது. ஆஸ்திரியா, ஹங்கேரியின் வேண்டுகோளை நிராகரித்ததன் விளைவாக 1897-ன் இராணுவ ஒப்பந்தத்தை மீண்டும் புதுப்பிக்க ஹங்கேரி மறுத்துவிட்டது. பேரரசர் தமது தடுப்பு அதிகாரத்தினைப் பயன்படுத்திக் கூட்டு இராணுவ மொன்றினை நிறுவி, அதன்வழி அமைதியினை நிறுவினர். ஜெர்மன் மொழியே இராணுவ மொழியாகத் தொடர்ந்தது. 1907-ல் தான் ஐரோப்பாவில் ஏற்பட்ட பதட்ட நிலை காரணமாகப் பழைய இராணுவ ஒப்பந்தத்தை ஹங்கேரி மீண்டும் புதுப்பித்தது.

ஆஸ்திரியாவுக்கும், ஹங்கேரிக்கும் பகைமை நீடிக்க மற்றுமொரு காரணமாயிருந்தது அவற்றின் பொது வங்கியாகும். 1878-ல் வியன்னுவில் பொது வங்கியொன்று நிறுவப்பட்டது. அத்தகைய வங்கியொன்று ஹங்கேரியிலும் நிறுவப்படவேண்டு மென ஹங்கேரி விரும்பியது. ஆயினும், ஐரோப்பாவில் தோன்றிய இராணுவ உடன்பாடுகள், இன்னோரன்ன பிற காரணங்களால் அது நிறைவேறவில்லை. ஐரோப்பாவில் ஏற்பட்ட கெடுபிடிப் போரின் காரணமாக, ஹங்கேரியும் விட்டுக்கொடுக்கும் நிலையிலிருந்தது.

பல குறைபாடுகளிருப்பினும் 1867-ன் உடன்பாடு சிறப்பு மிக்க ஓர் உடன்பாடாகும். அது இரு நாடுகளின் நன்மையினையும் பேணியது. இரு நாடுகளும் இணைந்து செயல்பட்ட காரணத்தால், ஐரோப்பிய அரங்கில் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்தன. ஒரு மாபெரும் வல்லரசாக ஆஸ்திரியா-ஹங்கேரி ஏற்றுக்கொள்ளப்பட்டது. 1882-ல் ஏற்பட்ட முக்கூட்டு உடன்பாடு அவற்றை மேலும் சிறப்பித்தது. அவை தங்களது நாட்டு மூலப் பொருள்களை நன்கு பயன்படுத்தும் வாய்ப்பினைப் பெற்றன. அந் நாட்டுப் பொருள்களும் அப்பரந்த பேரரசில் நல்ல விலைக்கு விற்கப்பட்டன. இதனால், அவை பொருளாதார, வணிகத் துறையிலும் பெரிதும் முன்னேறின. கூட்டு இராணுவ ஒப்பந்தம் ஹாப்ஸ்பர்க் பேரரசை மிக வலுவுள்ள தாக்கியது. இரட்டை மன்னராட்சியில் ஆஸ்திரியப் பேரரசு, ஒரு மாபெரும் வல்லரசாகத் திகழ்ந்தது.

### ஆஸ்திரியப் பேரரசின் பிற பகுதிகள்

ஆஸ்திரியப் பேரரசிலிருந்த பிற பகுதிகளும் ஹங்கேரிக்கு வழங்கப்பட்ட சிறப்புரிமைகளைத் தங்களுக்கும் வழங்க வேண்டு மெனப் போராடத் தொடங்கின. அவற்றின் குறைகளைப் போக்க

இப் பேரரசு எவ்வித முயற்சியினையும் மேற்கொள்ளாதது வருந்தத் தக்க ஒன்றேயாகும். 1868-ல் பொஹிமிய மக்களும் (செக் இனத்தோர்) ஹங்கேரிக்கு வழங்கப்பட்ட உரிமைகள் தங்களுக்கும் வழங்கப்பட வேண்டுமென வேண்டினர். பொஹிமியாவும் ஒரு தனி நாடென்றும், பிற பகுதிகளைப் போன்று அதுவும் ஹாப்ஸ்பர்க் பேரரசின்கீழ் இணைக்கப்பட்ட ஒன்று என்றும் அவர்கள் வாதாடினர். பொஹிமிய அரசு ஒன்று அமைக்கப்பட வேண்டுமெனவும், அதற்கு ஆஸ்திரியப் பேரரசரான ஃபிரான்சிஸ் ஜோசப்பே அரசராவாரெனவும் அவர்கள் அறிவித்தனர். அவர், அவர்கள் அரசராக ப்ரேகில் (Prague) முடிசூட்டிக் கொள்ளவேண்டு மெனவும் வேண்டினர்.

ஹங்கேரிபோன்று அவர்களும் தங்களது உறுப்பினர்களை ஆஸ்திரியப் பாராளுமன்றத்திற்கு அனுப்ப மறுத்தனர். 1867ஆம் ஆண்டு அரசியலமைப்பினையும் அவர்கள் ஏற்க மறுத்தனர். அவர்கள் எதிர்ப்பு ஆஸ்திரியப் பாராளுமன்றத்தின் சிறப்பினை வெகுவாகக் குறைத்தது. அவர்களின் எதிர்ப்பும் மிகுந்தது. பேரரசரும் அவர்களின் வேண்டுகோளை ஏற்கும் நிலை ஏற்பட்டது. 1871-ல் அவர்களது வேண்டுகோளையும் ஏற்றுக்கொண்டதாக அறிவித்தார் பேரரசர் ஃபிரான்சிஸ் ஜோசப். ப்ரேகில் அவர்களின் அரசராக முடிசூட்டிக்கொள்ளவும் இசைந்தார். ஹங்கேரிக்கு வழங்கப்பட்ட உரிமைகள் பொஹிமியாவுக்கு வழங்கவும் ஏற்பாடானது. இரட்டை மன்னராட்சி, மூவர் மன்னராட்சியாக (Triple Monarchy) மாறும் நிலையும் ஏற்பட்டது. ஆயினும், அது செயல்படவில்லை.

பேரரசரின் திட்டத்தினை ஆஸ்திரிய-ஜெர்மனியர்கள் வன்மையாக எதிர்த்தனர். இதன் விளைவாகத் தங்கள் ஆதிக்கம் குறைந்து விடுமெனவும், ஸ்லாவ் மக்களின் ஆதிக்கம் மிகுந்துவிடுமெனவும் அவர்கள் மிக அஞ்சினர். பேரரசின் ஒற்றுமையும் குன்றிவிடுமென அவர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். எதிர்ப்பு மிகுந்த காரணத்தால், ஜோசப் செய்வதறியாது திகைத்தார். மூவர் மன்னராட்சி தொல்லை மிக்கதென்பதையும் அவர் எளிதாக உணர்ந்தார். இறுதியில் எதிர்ப்புக்கஞ்சி பொஹிமியர்களின் வேண்டுகோளை ஏற்க மறுத்தார். பொஹிமியர்கள் இதனால் பெரிதும் ஏமாற்றமுற்றனர். இத்தகைய வேண்டுகோள்விடுத்த பிற இன மக்களின் வேண்டு கோளும் நிராகரிக்கப்பட்டது. ஆஸ்திரியப் பேரரசு தொடர்ந்து இரட்டை மன்னராட்சியாகவே செயல்பட்டது.

# 11. ஸ்பெயின் - போர்ச்சுகல்

1815ல் கூடிய வியன்னு மாநாட்டினர் ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்டும்பொருட்டு, புரட்சிகளைத் தடுக்க விரும்பினர். மக்களாட்சி வேட்கையும், புதிய கருத்துகளும் மீண்டும் ஆதிக்கம் பெருமல் தடுக்கும்பொருட்டே, அவர்கள் புரட்சியைத் தடுக்க முற்பட்டனர் என்பது வெள்ளிடைமலை. பிற்போக்குவாதிகளென்ற முறையில் அவர்கள் தங்கள் நலனைப் பேணும்பொருட்டு, மக்களாட்சியினைத் தடுக்க முனைந்ததில் வியப்பேதுமில்லை. இம் முயற்சிக்குத் தலைமையேற்றவர் மெட்டர்னிக் ஆவார். அவரது முறையும் மெட்டர்னிக் முறையென அழைக்கப் பெற்றது. புரட்சியைத் தடுக்கும்பொருட்டுப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. ஃபிரான்சைச் சுற்றி வலுவுள்ள அரண்கள் அமைக்கப்பெற்றன. சிறு நாடுகள் பலவும் பெரு நாடுகளின் ஆதிக்கத்தின்கீழ் வந்தன. ஐரோப்பாவில் அமைதியினை நிலைநாட்டி விட்டதாக வியன்னு மாநாட்டினர் இறுமாந்திருந்த வேளையில் தீபகற்ப ஐரோப்பாவில் குழப்பம் மிகுந்தது. மெட்டர்னிக் முறைக்கே அது சவாலாக அமைந்தது.

1808-ல் நெப்போலியன் ஸ்பானிய அரியணையைக் கைப்பற்றித் தம்முடைய தனயன் ஜோஸப் போனபார்ட்டை அதன் அரசராக்கிஞர். ஸ்பானிய அரசர் 7 ஆம் ஃபெர்டினுண்டும் கைது செய்யப்பட்டு ஃபிரெஞ்சுச் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டார். நாட்டுப்பற்று மிக்க ஸ்பானியர்களும் போரிலீடுபட்டு, இறுதியில் வெற்றியும் பெற்றனர். அவர்களுடைய அரசர் அன்னிய மண்ணில் ஒரு கைதியாக இருந்த காரணத்தால், அவரது சார்பில் அவர்களே ஓர் அரசியலமைப்பினைத் தீட்டினர். இதுதான் அவர்களது வரலாற்றுச் சிறப்புமிக்க 1812-ன் அரசியலமைப்பாகும். அது அன்றைய முற்போக்குக் கருத்துகளனைத்தையும் உள்ளடக்கிய மாபெரும் மக்கள் சாசனமெனில் மிகையாகாது. இவ்வரசியலமைப்பு மக்களது இறையுரிமையை வலியுறுத்தியதோடு அதனை ஓர் இன்றியமையாக் கொள்கையாகவும் ஏற்றுக்கொண்டது. அனைவர்க்கும் வாக்குரிமை யினையும் அது நல்கியது. பாராளுமன்றத்திற்கே அனைத்து அதிகாரங் களையும் அவ்வரசியலமைப்பு ஈந்தது. மன்னர்க்கும் அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன, இருந்தபோதும் மக்களின் இறையுரிமை யினையே இது பெரிதும் வலியுறுத்தியது. சட்டத்திறகுமுன்

அனைவரும் சமமெனவும் இவ்வரசியலமைப்பு அறிவித்தது. ஆயினும், இவ்வரசியலமைப்பு மக்களின் ஒப்புதலைப் பெற்றதெனக் கூறவியலாது. சிறுபான்மையினரான முற்போக்காளர்களால் இது தீட்டப்பட்டது. அதனால், இதனைச் செல்வர்கள், சமயக்குருமார்கள், பிற்போக்காளர்கள் அனைவரும் எதிர்த்தனர். நெப்போலியனின் வீழ்ச்சிக்குப் பின்னர், 7ஆம் ஃபெர்டிநெண்ட் மீண்டும் அரச ரானதும் இது முற்றிலும் புறக்கணிக்கப்பட்டது.

**ஸ்பெயினில் பிற்போக்காட்சி**

மீண்டும் பதவியேற்ற 7ஆம் ஃபெர்டிநெண்ட், அரசுபுரியும் திறமையோ அல்லது தகுதியோ அற்றவர். கொடுமையான உள்ளமும், எதனையும் ஐயுறும் பாங்கும், ஏமாற்றும் திறனும் மிக்க இவ்வரசர், நல்ல பண்பு நலனற்றவர். இவர் அரசியலறிவோ, தொலைநோக்கோ முற்றிலும் அற்றவர். அரசு புரிதற்கு வேண்டும் நல்ல கல்வியோ பயிற்சியோ இவர் பெறாதவர். ஃபிரான்சில் பல ஆண்டுகள் வாழ்ந்தும் எதனையும் கற்கவோ, அறிந்துகொள்ளவோ இவர் ஆர்வம் காட்டவில்லை. இத்தகைய பண்பினர் 1812-ன் அரசியலமைப்பினை ஏற்பாரென எதிர்பார்த்தல் முற்றிலும் தவறாகும்.

ஃபிரான்சிலிருந்து விடுபட்டு, ஸ்பெயினுக்கு வந்த இம் மன்னரை மக்கள் பெரிதும் வரவேற்றனர். தங்கள் நலனுக்காகச் சிறையில் வாடிய செம்மல் என மக்கள் போற்றி அவரை வரவேற்றனர். மக்களின் வரவேற்பினை இவரது உள்ளம் தவறாகப் புரிந்துகொண்டது. தாம் எது செய்யினும் மக்கள் தம்மை ஆதரிப்ப ரென இவர் எண்ணினர். தமது தலைநகரை அடையுமுன்னரே 1812-ன் அரசியலமைப்புச் செல்லாதென அறிவித்தார். வல்லாட்சி மீண்டும் நிறுவப்பட்டது. உரிமைகள் யாவும் நீக்கப்பட்டன. ஆயினும் இவரைச் செல்வர்களும், சமயக் குருமார்களும், மூட நம்பிக்கையில் ஊறித் திளைத்த எளிய மக்களும் ஆதரித்தனர். மக்களும் பழைய வல்லாட்சியினையே வேண்டினர். பிற்போக்காட்சி மீண்டும் அங்குத் தொடங்கியது. 1812-ன் அரசியலமைப்பினை வரைந்த அனைவரும் தேடிக் கண்டுபிடிக்கப்பட்டுக் கொடுமைப் படுத்தப்பட்டனர். பல்லாயிரவர் தூக்கிலிடப்பட்டனர் ஆயிரமாயிரம் முற்போக்காளர்கள் சிறையிலடைக்கப்பட்டனர். ஜோசப் போனா பார்ட்டிற்குத் துணை நின்றவர்கள் அனைவரும் சுட்டு வீழ்த்தப் பட்டனர். தண்டனை மன்றங்கள் மீண்டும் தொடங்கப்பட்டன. இயேசு சங்கத்தார் பெரிதும் உவகையுற்று அரசரை ஆதரித்துப் போற்றினர். செய்தித்தாள்கள் உரிமையிழந்தன. எழுத்துரிமை பறிக்கப்பட்டது. முற்போக்கு நூல்கள் அனைத்தும் தடை செய்யப்

பட்டன. அவரது கொடுங்கோலாட்சியில் மக்கள் பெரிதும் அல்லலுற்றனர்.

ஸ்பானியப் பேரரசு திறமையின்மையின் சின்னமாகத் திகழ்ந்தது. இப்பேரரசு ஒவ்வொரு துறையிலும் பின்னடைந்து காணப்பட்டது. 11 மில்லியன் மக்களைக்கொண்ட இப் பேரரசில் மக்கள் அறியாமையிலும் வறுமையிலும் வாடினர். உழவுத் துறை மிகப் பின்னடைந்து நின்றது. தொழிலும், வணிகமும் நல்லோரால் நடத்தப்பெருத காரணத்தால் முடங்கிக் கிடந்தன. இப்பேரரசு, நல்ல வணிகக் கொள்கையினையோ அல்லது பொருளா தாரக் கொள்கையினையோ பெற்றிருக்கவில்லை. சுரண்டலும், ஏமாற்றலுமே அங்கு மலிந்துகிடந்தன. ஆழ்ந்த சமயப்பற்று மிக்க இப் பேரரசு மக்களைச் சமயத்தின் பேரால் ஏமாற்றியது. பல சமயத் துறவிகளின் நினைவுநாள்களைக் கொண்டாடியது இப் பேரரசு. அன்று எவரும் தொழிற்சாலைகளுக்கோ, பண்ணை களுக்கோ, செல்லக்கூடாதெனக் கூறியது இப்பேரரசு. இதனால், உற்பத்தி மிகக் குறைந்தது. கல்வியும், பிற்போக்குக் கொள்கை களும் மிக்க இயேசு சங்கத்தாரிடம் ஒப்புவிக்கப்பட்டது. அவர்கள் சமயமே கல்வியென நினைத்துச் சமய அறிவு ஒன்றினையே மக்களுக்கு வழங்கினர். அறிவியலையும், பிறவற்றையும் அவர்கள் புறக்கணித்தனர். வரலாறு, நிலவியல், அரசியல், விஞ்ஞானம் போன்ற பாடங்கள் பாடத் திட்டத்திலிருந்தே அகற்றப்பட்டன. மக்களும் இக்கல்வியினைப் பெற்ற காரணத்தால், நல்ல சமயவாதி களாயிருந்தனர். ஆயினும், அவர்கள் அறிஞர்களாய், விஞ்ஞானி களாய், சான்றோர்களாய் மலர அக் கல்வித் திட்டத்தில் வழியில்லாமற்போனது. ஸ்பானியப் பேரரசு பிற்போக்கின் பிறப்பிடமாய், மடமையின் மனையாய், அறியாமையின் அகமாய் மாறியது.

7ஆம் ஃபெர்டினண்டோ, அவர்தம் நண்பர்களோ இதுபற்றிக் கவலையேதும் படவில்லை. பேரரசை முன்னேற்றும் முயற்சியிலும் அவர்கள் ஆர்வம் காட்டவில்லை. திறமையற்ற இப்பேரரசு தமது பேரரசின் ஒற்றுமையினைக்கூட, கட்டிக் காக்கவில்லை. இப் பேரரசின் திறமையின்மையை நன்குணர்ந்த அதன் குடியேற்ற நாடுகள் இதன் ஆதிக்கத்திலிருந்து விடுபடப் புரட்சி செய்யத் தலைப்பட்டன. தாயகத்தின் சுரண்டல் கொள்கையினை எதிர்த்து லத்தீன் (Latin) அமெரிக்க நாடுகள் புரட்சி செய்தன. அமெரிக்க விடுதலை இயக்கமும், ஃபிரெஞ்சுப் புரட்சியும் அவர்களைப் பெரிதும் ஊக்குவித்தன. இங்கிலாந்தும் அவர்களின் புரட்சியினை மறைமுக மாக ஆதரித்தது. தமது குடியேற்ற நாடுகளின் உணர்வுகளை

மதிக்கும் பண்போ, அவை வேண்டும் வணிக உரிமைகளை நல்கும் பெருந்தன்மையோ 7ஆம் பெர்டினண்டிடம் இல்லை. சுரண்டல், அடக்குமுறைகளில் நம்பிக்கை மிக்க இப்பேரரசர், அம்மக்களின் உணர்வுகளை மதிக்க மறந்தார். அவரது அனைத்துக் குடியேற்ற நாடுகளும் புரட்சியில் ஈடுபட்டன. அவற்றை அடக்கி, மீண்டும் அமைதியினை அங்கு நிலைநாட்டுவது இவரது தலையாயப் பொறுப்பானது. அத்தகைய வன்மை அவரிடமில்லாததே மாபெரும் குறையாகும். ஐரோப்பியக் கூட்டணி நாடுகளின் துணையினை இப்பேரரசர் நாடினர். கூட்டணி நாடுகள் இவருக்குத் துணைபுரிய மிகத் தயங்கின. 1819ல், 20,000 வீரர்களைக்கொண்ட படையொன்றினை உருவாக்கினர். அப் படை வீரர்கள் இவர் எதிர்பார்த்ததற்கு மாறாக இவரையே எதிர்த்துப் புரட்சி செய்யத் தொடங்கினர். 1819ல் இவர் தம் மக்களும் இவரை எதிர்த்துப் புரட்சி செய்தனர். இது மெட்டர்னிக் முறைக்கு ஒரு பெரும் அறைகூவலாக அமைந்தது.

ஸ்பெயினில் இராணுவப் புரட்சிக்குக் காரணம், அந்நாட்டின் அரசேயாகும். படையினரின் நலனை அப் பேரரசு முற்றிலும் புறக்கணித்தது. படைத் தலைவர்கள் தக்க காரணமின்றி வேலை நீக்கம் செய்யப்பட்டனர். படைத் தலைவர்கள் பலர் கீழ் நிலைக்குத் தள்ளப்பட்டனர். தகுதியும் திறமையும் அற்ற பலர் பதவி உயர்வு பெற்றனர். சுகாதாரமற்ற குடியிருப்பு குறைந்த ஊதியம் போன்றவை படைவீரர்களிடையே பெரும் ஏமாற்றத்தை ஏற்படுத்தியிருந்தன. படை, சதிகளின் நிலைக்களனாய் நின்றது. படையினருக்கு முறையான பயிற்சியும், கருவிகளும் அளிக்கப்படாததால், திறமையின்மை அங்கு மலிந்துகிடந்தது. குடியேற்றங்களைக் கொண்ட இப்பேரரசு கடற்படையில் கவனமேதும் செலுத்தவில்லை. கடற்படையிலும் நேர்மையின்மை, ஊழல், வேண்டுவோர்க்கு வேண்டியதைச் செய்தல் போன்ற குறைகள் மலிந்து கிடந்தன. அதனால், அங்கும் சலசலப்பு மிகுந்து காணப்பட்டது. நல்ல படையில்லாத காரணத்தால், பேரரசைக் காத்தலென்பது 7ஆம் ஃபெர்டினண்டிற்கு இயலாத ஒன்றானது.

1814-லிருந்து 1819வரை இராணுவக் கிளர்ச்சிகள் என்பது மிகச் சாதாரணமான நிகழ்ச்சிகளாக இருந்தன. வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், இராணுவப் புரட்சியில்லாத ஆண்டே இல்லையெனலாம். ஒவ்வோர் ஆண்டும் கிளர்ச்சியினையடக்கிய பின்னர், அரசு மீண்டும் தீவிரமான அடக்குமுறையினைக் கையாண்டது. இதனால் முற்போக்காளர்கள், புரட்சியாளர்கள், ஐயுற்றோர்கள் அனைவர்மீதும் அரசு கடும் நடவடிக்கைகளை மேற்கொண்டது. 1820-ல் மீண்டும் இராணுவப் புரட்சி ஏற்பட்டது.

1820ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள் முதல்நாள் ரீகோ (Riego) என்ற படைத் தலைவர், 1812-ன் அரசியலமைப்பு வேண்டுமெனக் கூவி, நார்டிஸ் நகரில் புரட்சியினைத் தொடங்கினர். அவரது முயற்சி வெற்றி பெறவில்லை. ஆயினும், புரட்சியாளர்கள் அவரால் பெரிதும் ஊக்கம் பெற்றனர். அவரது தன்னலமற்ற பணியால் பலரும் கவரப்பட்டுப் புரட்சி செய்தனர். மேட்ரிட்டிலும் புரட்சி பரவியது. தமது தலைநகரிலும் புரட்சி பரவவே அரசர் அஞ்சிப் புரட்சியாளர்களின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டார். 1820ஆம் ஆண்டு, மார்ச் திங்கள், 7ஆம் நாள் தான், 1812-ன் அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டுவிட்டதாக அறிவித்தார். அவ்வரசியலமைப்பின் முக்கியக் கருத்துகளடங்கிய சுவரொட்டிகள் நகரெங்கும் ஒட்டப்பட்டன. சமயச் சொற்பொழிவுகளிலும் மக்களுக்கு இதனை விளக்குமாறு சமயக் குருமார்களையும் அரசர் வேண்டினர்.

1820-ல் ஸ்பெயின் புரட்சி வெற்றி பெற்றுவிட்டதாக அறிவிக்கப்பட்டது. தெய்விக உரிமையின் அடிப்படையில் நிறுவப்பட்ட அரசு போய், மக்கள் இறையுரிமையின் அடிப்படையில் நிறுவப்பட்ட அரசு செயலுக்கு வந்துவிட்டதாக அறிவிக்கப்பட்டது. மக்களது இறையுரிமையும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இப்புரட்சியின் வெற்றி ஐரோப்பாவெங்குமுள்ள அரசர்களையும், பிற்போக்காளர்களையும் அதிர்ச்சியில் ஆழ்த்தியது. ஐரோப்பியக் கூட்டணி நாடுகளும் (இங்கிலாந்து நீங்கலாக) இதனை எதிர்த்தன. மெட்டர்னிக்கும், 18ஆம் லூயி மன்னரும், முதலாம் சார் அலெக்ஸாந்தரும் இதனால் பெரிதும் வருந்தினர். புரட்சியினை அகற்றி, மீண்டும் புரட்சிகள் அற்ற பழைய ஐரோப்பாவை உருவாக்குவது எவ்வாறென அவர்கள் சிந்தித்தனர். அதற்கான முயற்சியிலும் அவர்கள் ஈடுபட்டனர். அப்போது புரட்சியும் புரட்சியிலீடுபட்டது.

கொந்தளிப்புமிக்க ஐரோப்பியச் சூழ்நிலையை ஆராய்வதற்காக 1820-ல் டிரப்பாவ் என்ற இடத்தில் இரண்டாவது கூட்டணி மாநாடொன்றினை மெட்டர்னிக் கூட்டினர். இம் மாநாட்டில் ஸ்பானியப் புரட்சிபற்றி மெட்டர்னிக் ஆழ்ந்த வருத்தம் தெரிவித்தார். இது ஐரோப்பிய அமைதியைக் கெடுத்துவிடும். இந்த எரிமலையை உடனடியாக அணைக்க வேண்டும் எனவும் இவர் வேண்டினர். இந்தத் தொற்றுநோய் உடனடியாக அகற்றப்பட வேண்டுமெனக் கூட்டணி நாடுகளை எச்சரித்தார். கூட்டணிப் படைகளையும் ஏவி அப் புரட்சியினை அடக்கலாமென்ற கருத்தினையும் இவர் தெரிவித்தார். பெரும்பாலான கூட்டணி நாடுகளின் ஒப்புதலைப்பெற்று டிரப்பாவ் உடன்பாட்டறிக்கை (Protocol of

Troppau) ஒன்றினையும் மெட்டர்னிக் வெளியிட்டார். இவ் அறிக்கையினை இங்கிலாந்து ஏற்க மறுத்தது. அவ்வறிக்கை ஐரோப்பியப் பொது நன்மைக்காகப் புரட்சியிலீடுபட்டுள்ள நாடுகளின் உள்துறையில் தலையிட்டுப் புரட்சியினை அடக்கலா மெனவும், அதன்பொருட்டு, அன்னியத் துருப்புகளை அங்கு ஏவுதலும் தக்கதே என்றும் அறிவித்தது. இதனை ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா ஆகிய நாடுகள் வரவேற்றன. ஸ்பானிய பூர்போன் மன்னரின் ஆன்பக்தினைத் துடைக்க ஃபிரான்சு துடித்தது. ஃபிரான்சு அதில் தலையிடுவது தக்கதன்று எனக் கூறி 1713-ல் செய்து கொள்ளப்பட்ட உட்ரக்ட் உடன்பாட்டினையும் சுட்டிக் காட்டியது இங்கிலாந்து. ஆயினும், பிற்போக்கு நாடுகளான ஆஸ்திரியாவும், பிரஷ்யாவும், ரஷ்யாவும் ஃபிரான்சை ஊக்கு வித்தன. உடனடியாக ஸ்பெயின் புரட்சியினை அடக்க ஒரு பெரும் ஃபிரெஞ்சுப் படை அனுப்பப்படுதலையும் அவை வரவேற்றன. அவற்றின் ஆதரவைப் பெற்ற ஃபிரான்சு பெரும்படை ஒன்றினை அங்கு ஏவியது. ஸ்பானியப் புரட்சியும் அடக்கப்பட்டு, மீண்டும் 7ஆம் ஃபெர்டினண்ட் பேரரசராக்கப்பட்டார். 1820-ன் ஸ்பானியப் புரட்சி பிற்போக்குக் கூட்டணி நாடுகளால் தோல்வியுற்றது.

அன்னியர்களின் துணையுடன் வல்லரசரான 7ஆம் ஃபெர்டி னண்ட் அடக்குமுறை ஆட்சியினை மீண்டும் மேற்கொண்டார். தம்மை எதிர்த்தோரையும், புரட்சியாளர்களையும், புரட்சிக்குத் துணை நின்றவர்களையும் ஈவு இரக்கமின்றிக் தண்டித்தார் இப்பெரு மகனார். பல்லாயிரக்கணக்கான புரட்சியாளர்கள் தூக்கிலிடப் பட்டனர். இராணுவ நீதிமன்றங்களை நிறுவி, மிகச் சாதாரணக் குற்றங்களுக்குக்கூட அவர் கடுந் தண்டனை வழங்கினார். ரீகோவை ஆதரித்தோரும், அவரது படத்தைப் புரட்சியின்போது சுமந்தோரும், அரசர் நீடூழி வாழ்க என்ற சொற்றொடரைச் சுவரிலிருந்து அழித்தோரும் கொடுந் தண்டனைக்குள்ளாயினர். ஐயங்கொண்ட அனைவரும் தண்டிக்கப்பட்டனர். பல்கலைக்கழகங் களும் சமூக, அரசியல் மன்றங்களும், மனமகிழ் மன்றங்களும் புரட்சியின் புகலிடமெனக் கருதி மூடப்பட்டன.

அன்னிய உதவியால் பதவியேற்ற இவர் 10 ஆண்டுக் காலம் தமது வல்லாட்சியினைத் தொடர்ந்தார். அப்போது முற்போக்குக் கருத்துகள் யாவும் அழிக்கப்பெற்றன. மக்கள் உரிமைகள் பறிபோயின. அடக்குமுறை ஆட்சி உள்நாட்டில் மட்டுமன்றிக் குடியேற்ற நாடுகளிலும் மேற்கொள்ளப்பட்டது. இதனால், குடியேற்ற நாடுகள் புரட்சியிலீடுபட்டன. நல்ல திறமைமிக்க கடற்படையின்மையின் காரணமாக, 7ஆம் ஃபெர்டினண்டினால்

குடியேற்றங்களை நன்கு ஆள முடியவில்லை. குடியேற்றங்களும் புரட்சி செய்து தாயகக் கொடுங்கோன்மையினின்றும் விடுபட்டன. ஸ்பெயின் தனது குடியேற்றங்களை இழந்ததற்குக் காரணம், இவரது நேர்மையற்ற, திறமையற்ற கொடுங்கோன்மையேயாகும்.

இப் பேரரசருக்கு மகப்பேறில்லை. தமக்குப்பின் யார் பட்டத்திற்கு வருவார் என்பதே இவரது பெருங் குறையாயிருந்தது. 1830-ல் இவருக்கு மகவொன்று பிறக்கும் நிலை ஏற்பட்டதும் மிகவும் மகிழ்ந்துபோனார். பிறக்கப்போகும் குழந்தை ஆணாயினும், பெண்ணாயினும் அதற்கே அரியணையினை வழங்குவதென முடிவு செய்தார். தமக்குப் பிறக்கப்போகும் குழந்தை ஆணாயினும் பெண்ணாயினும் அதற்கே அரசுரிமையென அறிவித்தார் அரசர். அரசரின் தம்பியான டான் கார்லோஸ் (Don Carlos) என்பவர் இதனை எதிர்த்து இது சட்டத்திற்குப் புறம்பானது எனவும் அறிவித்தார். இதற்கிடையில் 1830ல் அரசருக்குப் பெண் குழந்தையொன்று பிறந்தது. அதற்கு இசெபெல்லா எனவும் பெயரிடப் பட்டது. இதற்குப் பின்னர், பெண் குழந்தை அரியணை ஏறுவது தக்கதாவென்பது ஒரு மாபெரும் பிரச்சினையானது. ஒரு சாரார் பெண் குழந்தை அரியணை ஏறுவதில் தவறேதுமில்லை என்றனர். பிறிதொரு சாரார் அது முற்றிலும் தக்கதன்று என இயம்பினர். இதனால் சிக்கல்கள் மிகும் என அவர்கள் கடிந்துரைத்தனர் இதன் விளைவாகத்தோன்றிய கட்சிகள் நாட்டைப் பிளவுபடுத்தின இதனால், அரசர் பெரிதும் ஏமாற்றமுற்று இதன் காரணமாக நோய்வாய்ப் பட்டார். தாம் பிறப்பித்த ஆணையினையும் மாற்றித் தம்முடைய தம்பியான டான் கார்லோஸையே அரசராக்கவும் விழைந்தார். அவருக்கு மிக நெருங்கிய உறவினரான ஒருவர், இசெபெல்லாவே இருக்கவேண்டும் என வலியுறுத்தியபோது அவ் வேண்டுகோளையே அவர் இறுதியாகக் கொள்ளவும் துணிந்தார். அரசரும் நோயினின்றும் முற்றிலும் விடுபட்டார். தம்முடைய மகளே தமக்குப் பின்னர் அரசியெனத் திட்டவட்டமாக இவர் அறிவித்தார். டான் கார்லோஸும் அவரது ஆட்சியினரும் இதனை எதிர்த்த போதும் அவர்களும் நாளடைவில் இவ்வெதிர்ப்பினைக் கைவிட்டு விட்டனர். 1832-ல் இசெபெல்லா அரியணை ஏறுவது உறுதி செய்யப்பட்டது.

1833-ல் 7ஆம் ஃபெர்டினண்ட் (Ferdinand VII) மறைந்தார். அவருக்குப் பின்னர், அவர்தம் மகளான இசெபெல்லா (Isabella) என்பார் அரியணையேறினார். இதனை 7ஆம் ஃபெர்டினண்டின் சகோதரரான டான் கார்லோஸ் (Don Carlos) ஏற்க மறுத்தார். இசெபெல்லா மூன்று வயது சிறுமியாக இருந்த காரணத்தால்,

அவருடைய தாயாரான கிறிஸ்டியானு (Christiana) அரசியின் பாதுகாவலராகப் பொறுப்பேற்றார். இதன் காரணத்தால் 1833-ல் ஸ்பெயினில் உள்நாட்டுப் போர் தொடங்கியது.

அரசி இசெபெல்லாவை ஆதரித்தவர்கள் கிறிஸ்டினேக்கள் (Christinos) என அழைக்கப்பெற்றனர். இப்போரில் இவர்களே வலிமை பெற்றுப் திகழ்ந்தனர். நிர்வாகப்பொறி இவர்கள் கையில் இருந்ததால், இவர்கள் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். பலருக்குச் சிறப்புரிமைகள் வழங்கப்பட்டதால், அவர்கள் இவரை ஆதரித்தனர். படையினரும நிலையான வருவாயைப் பெற்றதால், அரசை ஆதரித்தனர். திறமைமிக்கோர்களுககுப் பதவி உயர்வு வழங்கப் பட்டதால், அவர்களும் மகிழ்ந்து அரசியையே ஆதரித்தனர். அத்துடன் தலைநகரான மேட்ரிட்டும் இவர்கள் வசமே இருந்தது. தலைநகரும் அவர்களுக்குப் பலவகையிலும் பெருந் துணையா யிருந்தது. டான் கார்லோஸினைச் செல்வர்களும், சமயக் குருமார்களும், வல்லாட்சியில் நம்பிக்கைமிக்கோரும் ஆதரித்தனர். டான் கார்லோஸின் ஆதரவாளர்கள் மிகப் பிற்போக்காளார்கள். அவர்கள் 7ஆம் ஃபெர்டினண்டின் ஆட்சியினையே குறை கூறினர். அது மென்மையானது. வல்லாட்சிக்குத் தகுதியற்றது எனத் தூற்றினர் அப் பெருமக்கள். இவ்வுள்நாட்டுப் போர் ஒழுங்கற்று பொருத்தமற்ற முறையில் நடந்தது. இரு சாராரிடம் நல்ல படையில்லாத காரணத்தால், போர் தொடர்ந்து நிகழவில்லை. பல ஆண்டுகள் இப் போர் முடிவற்ற நிலையில் நடந்தது.

அரசியின் பாதுகாவலரான கிறிஸ்டியானு, சீர்திருத்தங்களை ஒருபோதும் விரும்பியதில்லை. 'முடியரசின் அடிப்படைக் கொள்கைகளையும், அமைப்பினையும் நான் சிற்றிழையேனும் மாற்றாது பேணிக் காப்பேன். புதிய கொள்கைகளின் இடைஞ்சல் களையும், அவை முன்னர் விளைவித்த இடையூறுகளையும் நான் நன்கறிவேன். ஒரு நாட்டிற்கு அது பழக்கப்பட்ட பழைய ஆட்சி முறையே மிகச் சிறந்தது.' இது அரசியின் பாதுகாவலரான கிறிஸ்டியானுவின் கூற்றாகும் அவாது உள்ளக்கிடக்கையை இக் கூற்று நன்கு புலப்படுத்தும். அவர் வல்லாட்சியில் நம்பிக்கை மிக்கவர். ஆயினும், அவரால் மக்களின் விருப்பங்களை முற்றிலும் புறக்கணிக்க முடியவில்லை. உள்நாட்டுப் போரின் நெருக்கடி நேரத்தில் அவர்களின் ஆதரவு அவருக்கு மிகத் தேவைப்பட்டது. உயர் குடிமக்களும், சமயக் குருமார்களும், பிற்போக்கினரும் டான் கார்லோஸை ஆதரித்த காரணத்தால், இவர் மக்களது ஆதரவைப் பெறும் கட்டாயமேற்பட்டது. அவர்களை மகிழ்விக்க வரம்புக்குட்பட்ட முடியாட்சியினை ஏற்றுக்கொண்டார் இவர். இது

ஸ்பானிய அரசியலமைப்பு வரலாற்றில் ஒரு மிக முக்கிய நிகழ்ச்சியாகும். 1834ல் முற்போக்கினரின் ஆதரவினைப் பெற ஒரு சட்டமியற்றினர் இவ்வம்மையார் (The Royal Statute of 1834). அச்சட்டப்படி இரு அவைகள் கொண்ட ஒரு பாராளுமன்றத்தினை நிறுவ இவர் ஒப்புதல் தெரிவித்தார். பாராளுமன்றத்தில் மேலவையும் (Chamber of Peers), மக்களவையும் (Chamber of Deputies) இருக்குமென அறிவிக்கப்பட்டது. மக்களவையைச் சொத்துடையோர்கள் மூன்றாண்டுகளுக்கொருமுறை தேர்ந்தெடுப்பரெனவும் அறிவிக்கப்பட்டது. வரி விதிக்கவும், சட்டங்களை இயற்றவும் இப் பாராளுமன்றத்திற்கு உரிமையளிக்கப்பட்டிருந்தது. ஆயினும், சட்டங்களை முன்மொழியும் அதிகாரம் அரசிடமே இருந்தது. அமைச்சரவையும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையதாகாது. அது அரசர்க்கே பொறுப்புடையது எனவும் அறிவிக்கப்பட்டது. அரசர்க்குப் பாராளுமன்றத்தைக் கூட்டவும் கலைக்கவும் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. ஆயினும், ஆண்டுக் கொரு முறையேனும் பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டுமென்பதையும் இச்சட்டம் ஏற்றுக்கொண்டது. தனியார்க்குப் பல உரிமைகளை இச்சட்டம் வழங்கியது. இச்சட்டம் அனைத்து அதிகாரங்களையும் மக்களுக்கு வழங்கவில்லையாயினும் இது அவர்களின் ஆதரவு இன்றியமையாததென்பதைத் தெளிவுபடுத்தியது. இது ஸ்பானிய அரசியலமைப்பு வரலாற்றில் ஒரு மாபெரும் முதல் முயற்சியாகும். அரசர் இப்போது அரசியலமைப்புக்குட்பட்ட அரசரானர். இது புரட்சியின் விளைவன்று ; காலச் சூழ்நிலை அறிந்து அரசியாரே வழங்கிய உரிமையாகும்.

1834லிருந்து ஸ்பானியப் பாராளுமன்ற வரலாறு தொடங்குகிறது. ஆயினும், ஸ்பெயின் பாராளுமன்றம் என்ற தேர்வில் தேர்ச்சி பெறவில்லை. பாராளுமன்ற முறை வெற்றிபெறப் பயிற்சியும், முன் அனுபவமும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும், பொறுப்புணர்வும் வேண்டும். இம்முறை ஸ்பெயினில் புகுத்தப்பட்டபோது அது வெற்றி பெறவில்லை. பாராளுமன்றமே ஒரு போர்க்களமானது. கூச்சலும், குழப்பமும் அங்கு மிகுந்தது. தன்னலக்காரர்களின் கைப்பாவையாக அது மாறியது. அங்கு நிலையான அமைச்சரவை இல்லாதுபோனது. ஹேசன் என்பார் கூற்றுப்படி 1833லிருந்து 1858க்குள்ளான 25 ஆண்டு பாராளுமன்ற ஆட்சியில் 47 அமைச்சரவை பதவியேற்றுப் பதவி விலகியது. 61 உள்துறை அமைச்சர்கள் பதவியேற்று விலகினர். 78 நிதியமைச்சர்கள் பொறுப்பேற்றுச் செயலாற்றி விலகினர். 96 போர் அமைச்சர்கள் பதவியேற்றும் பணியாற்ற முடியவில்லை.[1] இது

[1] Hazen-p. 520.

அங்குப் பாராளுமன்ற முறை எவ்வாறு செயல்பட்டது என்பதை நன்கு விளக்கும். பாராளுமன்றம் தோல்வியுற்றதற்குக் காரணம், உள்நாட்டுப் போரும், மக்களிடை ஒற்றுமையின்மையுமேயாகும்.

பல்வேறு அரசியல் கட்சிகள் அங்கிருந்தன. அவற்றுள் ஒற்றுமை என்பது இல்லாதிருந்தது. அவை தன்னலத்துடன் திகழ்ந்தன. நாட்டு நலனை அவை முற்றிலும் புறக்கணித்தன. அங்கிருந்த முற்போக்குவாதிகளிடையேயும் ஒற்றுமையில்லை. அவர்களும் மிதவாதிகள், முன்னேற்றவாதிகளெனப் பிரிந்து செயல்பட்டனர். 1834இன் அரசு ஆணைகளை மிதவாதிகள் ஏற்றுக்கொண்டனர். பாராளுமன்றத்தின்மீது அரசர் ஆதிக்கம் செலுத்துவது முறையானவொன்றேயென அவர்கள் கருதினர். ஆயினும், முன்னேற்றவாதிகள் (Progresists) அதனை மறுத்து மக்கள் இறையுரிமையை வலியுறுத்தினர். பாராளுமன்றமே அனைத்து உரிமைகளையும் கொண்டு திகழவேண்டும். அதனை அரசர் கட்டுப்படுத்துதல் கூடாது என்பது முன்னேற்றவாதிகளின் கொள்கை. 1812ல் வழங்கப்பட்ட அரசியலமைப்பினும் சிறந்ததொன்று வேண்டுமென அவர்கள் எதிர்பார்த்தனர். உள்நாட்டில் போர், அமைதியின்மை, குழப்பம் நிலவிய காரணத்தால், அரசியார் அவர்களது வேண்டுகோளையும் ஏற்கும் கட்டாயம் ஏற்பட்டது. அவர்களது ஆதரவைப் பெறும் பொருட்டு வேறு ஓர் அரசியலமைப்பினையும் 1837ல் அவர்களுக்கு வழங்கினார். இது 1834ஆம் ஆண்டின் அரசியலமைப்பினும் சற்று மேம்பட்டது. 1837ஆம் ஆண்டின் அரசியலமைப்புப்படி பாராளுமன்றத்தில் செனட், காங்கிரஸ் என இரு அவைகள் இருக்குமெனத் தீர்மானிக்கப்பட்டது. செனட் உறுப்பினர்கள் சில கட்டுப்பாடுகளுடன் ஆயுட்கால உறுப்பினராக இருப்பர் என அறிவிக்கப்பட்டது. காங்கிரஸ் வாக்காளர்களால் மூன்றுண்டுகளுக்கொருமுறை தேர்ந்தெடுக்கப்படுமென அறிவிக்கப்பட்டது. இது மக்களின் பிரதிநிதிகளால் உருவாக்கப்பட்டது இதன் தனிச் சிறப்பாகும்.

ஸ்பெயினில் உள்நாட்டுப் போர் காரணமாக, முன்னேற்றம் பெரிதும் தடைப்பட்டது. பொருளாதாரத் துறையில் அந்நாடு மிகப் பின்தங்கி நின்றது. 1840ல் இங்கிலாந்து, ஃபிரான்சு போன்ற நாடுகளின் தலையீட்டால் இவ்வுள்நாட்டுப் போர் ஒரு முடிவுக்கு வந்தது. அரசியின் பாதுகாவலராயிருந்த கிறிஸ்டியானு நாடு கடத்தப்பட்டார். உள்நாட்டுப் போரின் விளைவாக, அரசு, படைத் தலைவர்களின் கைக்கு வந்தது. அவர்களே அனைத்து அதிகாரங்களையும் கொண்டிருந்தனர். 1843லிருந்து அரசு இரண்டாம் [illegible] பெயரில் [illegible] [illegible]லிருந்து [illegible] வரை

அவரே அரசியாக இருந்து ஆட்சி புரிந்தார். இவரது காலத்தில் முன்னேற்றமேதும் நிகழவில்லை. இதுவும் பிற்போக்காட்சியாகவே இருந்தது. 1837ஆம் ஆண்டின் அரசியலமைப்பும் புறக்கணிக்கப் பட்டது. உரிமை வேண்டி நின்ற அனைவரும் ஒறுக்கப்பட்டனர். ஆகவே ஸ்பெயின் எத்துறையிலும் முன்னேறவில்லை.

1861ல் மெக்ஸிகோ புரட்சி செய்தது. அதனையடக்க ஸ்பெயினும், இங்கிலாந்தும் ஃபிரான்சுடன் இணைந்து தங்களது படைகளை அனுப்பின. சிறிது காலத்தில் இங்கிலாந்தும், ஸ்பெயினும் அப் போரிலிருந்து விலகிக்கொண்டன. ஃபிரான்சு மட்டும் அப் போரினைத் தொடர்ந்தது. அப் போரில் மூன்றும் நெப்போலியன் தோல்வியுற்றார். ஸ்பெயின் சான்டொமிங்கோ (San Domingo) என்ற குடியேற்றத்தினைப் பெற்றாலும் அதனைத் தொடர்ந்து தனது ஆதிக்கத்தில் வைத்திருக்க இயலவில்லை. ஸ்பெயின் இலத்தீன் அமெரிக்கக் குடியேற்றங்களனைத்தையும் இழந்தது. இது அதன் திறமையின்மைக்கு நல்லதொரு சான்றாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் ஸ்பெயின் எத்துறையிலும் சிறப்பெய்தவில்லை. அது இன்னும் பிற்போக் காட்சியின் சின்னமாகவே விளங்கியது. அந்நாட்டு முற்போக் காளர்களும், அறிஞர்களும் அந்நாட்டின் நிலையினைக் கண்டு மிகவும் நலிவுற்றனர். அந்நாட்டின் அவல நிலை அவர்களை ஒன்று படுத்தியது. அரசியாரின் தன்னலமும் அவரின் பிற்போக்கும், நெறியற்ற பண்பும் அவர்களைச் செயல்படத் தூண்டின. அரசியல், வணிகம், படை போன்ற அனைத்துத் துறைகளிலுமிருந்த முற்போக்கெண்ணம் கொண்ட நல்லவர்கள் ஒன்றுகூடி, அரசியை நெறிப்படுத்த புரட்சியைத் தொடங்கினர். ப்ரிம் (Prim) என்ற படைத் தலைவர் 1865ல் இப் புரட்சியினைத் தொடங்கினார். அது தோல்வியுற்றது. ப்ரிமும் நாடுகடத்தப்பட்டார். 1866, 1867 ஆகிய ஆண்டுகளில் தொடர்ந்து புரட்சிகள் தோன்றின. அவையும் தோல்வியேயுற்றன. முறையாகத் திட்டமிடாத காரணத்தால் அவை தோல்வியுற்றன. புரட்சித் தலைவர்களிடையே ஒற்றுமை யின்மையும், அவர்கள் ஆதரவினைப் பெறாததும் அவை தோல்வியுறக் காரணமாயின. 1868ல் புரட்சித் தலைவர்கள் அனைவரும் ஒன்றுகூடி, திட்டமிட்டு, ஒரு மாபெரும் புரட்சியினைத் தொடங்கினர். இதனைப் படைத் தலைவர் ப்ரிமும், செர்ரனோ (Marshal Serrano) என்பாரும் முன்னின்று நடத்தி வெற்றிபெறச் செய்தனர். மக்களது ஆதரவையும் பெற்றனர். அரசியாரின் கொடுங்கோன்மையே அவர்களது வெற்றிக்கு மிக முக்கியமான

காரணமாகும். அரசியார் தப்பியோடி ஃபிரான்சில் தஞ்சமடைந்தார். ஸ்பெயினில் தாற்காலிக அரசு ஒன்று உடனடியாக நிறுவப்பட்டது. ஸ்பெயினில் பூர்போன் ஆட்சி முடிவுற்றதாகவும் அறிவிக்கப்பட்டது. சமய உரிமையினையும், எழுத்துரிமையினையும், வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமையினையும் இத் தாற்காலிக அரசு உடனடியாக நல்கியது. ஸ்பெயின் மக்களாட்சி வரலாற்றில் இது மிக முக்கிய நிகழ்ச்சியாகும்.

1869ல் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றம் (Cortes) ஸ்பானியப் பிரச்சினைகளை ஆராயும்பொருட்டு, கூடியது. அப் பாராளுமன்றம் இறையுரிமை மக்களுக்கே என அறிவித்தது. இப் பாராளுமன்றம் நாட்டுக்கு வரம்புக்குட்பட்ட முடியாட்சியே வேண்டுமென முடிவு செய்தது. ஆயினும், யாரை அரசராகத் தேர்ந்தெடுப்பது என்பதில் அதற்குச் சிக்கலேற்பட்டது. அரசியாரான இரண்டாம் இசெபெல்லா தம்முடைய மகன் அல்ஃபோன்சோவை (Alfonso) அரசரென அறிவித்துவிட்டு, ஸ்பெயினை விட்டகன்றார். ஸ்பானியப் பாராளுமன்றம் அவரை அரசராக ஏற்க மறுத்தது. பூர்போன்கள் இனி ஸ்பெயின் அரியணையேற அனுமதிக்கமாட்டார்களென அது திட்டவட்டமாக அறிவித்தது. பின்னர், எவரைத் தேர்ந்தெடுப்பது என்பது அதன் பிரச்சினையானது. போர்ச்சுகீசிய இளவரசர் ஒருவரைத் தேர்ந்தெடுக்கலாமெனப் பலர் விரும்பினர். லூயி பிலிப்பின் மகனை அரசராக்கலாமெனப் பலர் பகர்ந்தனர். ஆயினும், பெரும்பாலோர் அதனை ஏற்கவில்லை. நீண்ட ஆய்வுக்குப் பின்னர், ஸ்பானியப் பாராளுமன்றம் ஹோகன் சோலன் குடும்பத்தைச் சார்ந்த இளவரசர் லியோபால்டு என்பாரைத் தங்கள் அரசராகத் தேர்ந்தெடுத்தது. இத் தேர்வு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது.

லியோபால்டு ஜெர்மன் அரசர் முதலாம் கெய்சர் வில்லியத்தின் உறவினரென்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது. இதனைப் பிஸ்மார்க் (Bismarck) பெரிதும் வரவேற்றுப் போற்றினர். இதனை முற்றிலும் எதிர்த்தவர் ஃபிரெஞ்சுப் பேரரசர் மூன்றும் நெப்போலியனுவார். ஸ்பெயினும் ஜெர்மனியும் ஒரே குடும்பத் தலைமையின் கீழ் வருவது ஐரோப்பிய வல்லரசுச் சமநிலையைப் பெரிதும் பாதிக்குமென அஞ்சினர் மூன்றும் நெப்போலியன். ஜெர்மனியும் லியோபால்டினை ஆதரிக்கக்கூடாது என வேண்டுகோள் விடுத்தார் அவர். கெய்சர், வில்லியம் அத்தகைய வாக்குறுதியொன்றினையும் தரவேண்டுமென இவர் வலியுறுத்தினர். அதன் பயனாய் ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போரும் ஏற்பட்டு மூன்றும் நெப்போலியனும் தோற்கடிக்கப்பட்டார். இப்போருக்கு வித்திட்டது இப்பிரச்சினையே

யாகும். முடிவில் லியோபால்டு ஸ்பானிய அரியணையேறும் உரிமையை ஏற்க மறுத்தார்.

ஸ்பானியப் பாராளுமன்றம் இப்போது பெரிதும் குழப்பத்தில் ஆழ்ந்தது. அரியணையை யாருக்கு வழங்குவது என்ற பிரச்சினையி லிருந்து அது இன்னும் விடுபடவில்லை. இறுதியில் 1870ஆம் ஆண்டு, நவம்பர் திங்களில் விக்டர் இம்மானுவேலின் இரண்டாவது மகனை அமெடியோ (Amadeo) என்பாரை அது அரசராகத் தேர்ந்தெடுத்தது. 311 பேர்கள் அடங்கிய பாராளுமன்றத்தில் 191 பேர்களே இவர் தங்கள் அரசராக இருக்க வாக்களித்தனர். இவர் அப்பாராளுமன்றத்தின் முழு விருப்பத்தின்பேரில் தேர்ந் தெடுக்கப்படவில்லை என்பதனையே இது காட்டுகிறது. அவரால் தொல்லையின்றி ஆட்சி புரிய இயலாது என்பதற்கு இது ஓர் அறிகுறியாகும். 1870ல் ஸ்பெயினுக்குச் சென்ற இப்புது வேந்தரை மக்கள் பெரிதும் வரவேற்றுப் போற்றவில்லை.

பிற நாடுகளைப் போன்று ஸ்பெயினிலும் பல்வேறு கட்சிகள் இருந்தன. அவற்றுள் சிறப்பானது குடியரசுக் கட்சியாகும். இக்கட்சி அவரை வரவேற்கவில்லை. குடியரசு நிறுவும் முயற்சி தோல்வியுற்றதால், இக்கட்சியினர் அமெடியோவின் முடியாட்சி யினை வெறுத்தனர். இவர் ஓர் அந்நியரென்ற காரணத்தாலும் அவர்கள் இவரை வெறுத்தனர். 7ஆம் ஃபெர்டினென்டின் தம்பியான டான் கார்லோஸையும் பலர் ஆதரித்தனர். அவரே சட்டப்படியான அரசரென்றும் அமடியோ சட்டத்திற்குப் புறம்பான முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டவரெனவும் அவர்கள் கருதினர். இசெபெல்லா வின் மகனை அல்ஃபோன்சோவினையும் பலர் ஆதரித்தனர். அவரே முறையான அரசர் எனவும் கருதப்பட்டார். இதனால், இப்புது அரசருக்கு மிக்க எதிர்ப்பிருந்தது. அவரும் ஓர் அந்நியரென்ற காரணத்தால், அம்மக்களைக் கவர முடியவில்லை. அவர் ஒரு வரம்புக்குட்பட்ட முடியரசர் என்ற காரணத்தால், சமயத் துறவியர் பலர் அவரை வெறுத்தனர். சமய ஆட்சியினைப் போற்றவல்ல வல்லாட்சியினை எதிர்பார்த்த அத்துறவியர் அமெடியோ பதவி யேற்றதை விரும்பவில்லை. அவரை மதிக்கவும் மறுத்தனர் அத்துறவியர். ஸ்பானிய அரசாட்சி அமெடியோவுக்கு ஒரு பெருஞ் சோதனையாய் அமைந்தது. பல்வேறு கட்சிகளைக் கொண்ட பாராளுமன்றத்தில் இப்பேரரசர் யார் துணையினை நாடுவதென அறியாது மயங்கினர். எக் கட்சியின் ஆதரவையும் அவரால் பெற முடியவில்லை. ஸ்பானிய மக்களுக்கும் பாராளுமன்ற ஆட்சியால் பயிற்சியில்லாத காரணத்தால், அம்முறையில் அவர்களால் திறமை யாக இயங்க முடியவில்லை. அமைச்சரவையும் ஒற்றுமையின்மை, பயிற்சியின்மை [illegible] வில்லை. [illegible]

களில் எட்டு அமைச்சரவைகள் பதவியேற்றுச் செயல்படவியலாது கலைந்துபோயிற்று. பாராளுமன்றமுறை மக்களிடையே செல்வாக்கினை இழந்தது. அரசர் அமெடியோ தன்னால் இவ்வரசியல் கொந்தளிப்பு மிக்க கடலில் நீச்சலடித்தல் இயலாது எனக் கருதிப் பதவி துறந்தார். அவர் அப்பாராளுமன்றத்திற்கு வரைந்த மடல் சிறப்புமிக்கது. அதில் தமது தொல்லைகளை அரசர் நன்கு வெளிப்படுத்தியுள்ளார். "எனது நல்ல நோக்கங்கள் நிறைவேறவில்லை என்பதை நான் தெளிவாக உணர்கிறேன். இரண்டு நீண்ட ஆண்டுகளாக நான் இந்நாட்டின் மணிமுடியை அணிந்துவருகிறேன். ஆயினும், ஸ்பெயின் இன்னும் தொடர்ந்து போராட்டத்திலேயே உழல்கிறது. நான் பெரிதும் விரும்பிய அமைதி, வளமை என்ற கொள்கைகளிலிருந்து அது நாளுக்குநாள் பெரிதும் விலகிச் செல்கிறது. எனது முயற்சிகள் வீணானதையும், எனது கொள்கைகளை என்னால் நிறைவேற்ற இயலாது என்பதையும் நான் நன்குணர்கிறேன். நீங்கள்தான் எனக்கு இம்மணிமுடியினை நல்கினீர்கள். நானும் என்னுடைய குழந்தைகளும், சந்ததியினரும் அம்மணி முடியினைத் துறந்தவராகிறோம். அம்மணி முடியினை நன்றியுடன் மறுக்கிறேன்" எனத் தெளிவாகத் தமது கருத்தைப் பாராளுமன்றத்திற்குக் கூறி, அரச பொறுப்பிலிருந்து விடுபட்டார்.

அமெடியோ பதவி துறந்தபிறகு, ஸ்பெயின் மாலுமியற்ற மரக்கலம் போன்றதானது. பாராளுமன்றத்தில் செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தவர்கள் குடியரசுக் கட்சியினர்களேயாவர். அமெடியோ பதவி துறந்ததிலிருந்து முடியரசுக் கட்சியினர் மிக்க வலுவிழந்து போயினர். யாரை மீண்டும் அரசராக்குவது என்பதை அவர்களால் முடிவு செய்ய முடியவில்லை. அவர்களும் தங்களது செல்வாக்கினை முற்றிலும் இழந்து காணப்பட்டனர். நாட்டின் நிலைமை குடியரசுக் கட்சியினருக்கு நல்லதொரு வாய்ப்பாக இருந்தது. குடியரசுக் கட்சியின் தலைவரான காஸ்டிலெர் (Castelar) என்பார் இதுவே தக்க தருணம் எனக் கருதி, ஸ்பெயினை ஒரு குடியரசு என அறிவித்தார். அவரது கூற்றே அன்றையச் சூழ்நிலையை நன்கு விளக்கும். "ஒருவரும் அதனை (முடியரசினை) அழிக்கவில்லை. அதன் மறைவு இயற்கையாகாது. உள்நாட்டில் நிலவிய அரசியல் சூழ்நிலை காரணமாக, அது இறந்துபட்டது. இறைவனின் விருப்பமும் அதுவே போலும்! இக்குடியரசு சூழ்நிலையால் உருவாக்கப்பட்ட ஒன்றாகும். அது சமுதாய நிலை, இயற்கைச் சூழ்நிலை, வரலாற்றுச் சூழ்நிலை காரணமாக வருகிறது." 1873, பிப்ரவரி 12ஆம் நாள் ஸ்பெயின் ஒரு குடியரசாக அறிவிக்கப்பட்டது. பாராளுமன்றமும் அதை வரவேற்றது. பாராளுமன்றத்தில் அதனை 258 உறுப்பினர்கள் ஆதரித்தனர். 38 உறுப்பினர்களே அதனை எதிர்த்தனர். ஸ்பெயின் ஒரு குடியரசானது.

குடியரசு பல பிரச்சினைகளை எதிர்நோக்க நேரிட்டது. பாராளுமன்ற ஆட்சி, பல்லோரது ஆட்சியென்பது வெளிப்படை. பல்லோரது ஆட்சியில் கருத்து வேறுபாடுகள் தோன்றுதல் இயல்பு. ஸ்பெயினைப் பொருத்தமட்டில் பாராளுமன்றத்தில் நல்ல பயிற்சியில்லாத காரணத்தால், உறுப்பினர்களால் பொறுப்புடன் நடந்து கொள்ள இயலவில்லை. அமைச்சர்களாலும் ஒன்றுபட்டுச் செயல்பட இயலவில்லை. ஆயினும், இக்குடியரசு 1873லிருந்து 1874 வரை ஓராண்டுக் காலம் பணியாற்றியது. இது பணியாற்றிய காலத்தில் வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை நல்கியது. சமயப் பொறையுடைமையை இது ஏற்றுக்கொண்டது. இது அடிமைகளை விடுதலை செய்து பாராட்டுதலையும் பெற்றது. ஆயினும், குடியரசால் அங்குச் செயல்பட முடியவில்லை. அதற்குரிய காரணங்கள் வருமாறு:

குடியாட்சி முறையில் ஸ்பானிய மக்கள் பயிற்சியேதும் பெற்றிருக்கவில்லை. மன்னராட்சியில் வாழ்ந்து பழகிப் போயிருந்த அம்மக்களுக்கு உரிமைகள் வழங்கப்பட்டவுடன் அவற்றைச் செவ்வையாகப் பயன்படுத்தத் தெரியவில்லை. குடியாட்சிக்கு வேண்டும் பொறுப்புணர்வு, அரசியலறிவு, பல்வேறு கட்சியினர் கூறுவதையும் ஆராய்ந்து உண்மை எதுவெனத் தெளிதல் போன்ற நற்பண்புகள் அவர்களிடையில்லை. பல்வேறு சமயங்களில் அவர்கள் நாநலமிக்க, தன்னலம் கொண்ட அரசியல் தலைவர்கள் கூறும் கூற்றினை அவ்வாறே ஏற்றுக் கிளர்ச்சிகளில் ஈடுபட்டு அமைதியைக் குலைத்தனர். மக்களாட்சியின் பாதுகாவலர்களாகிய மக்கள் மாக்களாய்ச் செயல்படின் குடியாட்சி எவ்வாறு வெற்றி பெறும்? அரசியல் தலைவர்களும் மக்களாட்சியினைப் பேணும் பண்புநலன் கொண்டவர்களாயில்லை. அத்தலைவர்களும் தங்களது கொள்கை, முறை போன்றவை சிறந்ததெனப் போற்றினரேயன்றி, பிறரது கொள்கைகளைப் புரிந்துகொள்ள மறுத்தனர். மக்கள் நலனும், நாட்டு நலனும் பேணவேண்டிய அரசியல் தலைவர்கள், தங்கள் நலனை மட்டும் பேணிக் காத்தனர். அரசியலைப் பதவிக்கும், தங்கள் முன்னேற்றத்திற்கும், பொருள் ஈட்டுதற்கும் அவர்கள் ஒரு கருவியாகப் பயன்படுத்தினர். அப்போது அந்நாடு திறமைமிக்க நல்ல தலைவர்களையும் உருவாக்கவில்லை கட்சி அரசியலைப் பண்புடனும், பாங்குடனும் நடத்த அவர்கள் முயலவில்லை. மக்களாட்சியின் அடிப்படைத் தன்மையே அங்கில்லாதது மாபெரும் குறையாகும். கட்சிகளிடையே பூசல்கள் மிகுந்தன. ஒற்றுமையற்ற நாடு மேன்மையுறாது என்பதற்கு ஸ்பெயினே நல்ல சான்றாகும் ஒரே கட்சியினைச் சார்ந்தவர்களிடையேயும் ஒற்றுமை யில்லாதது அவப்பேறாகும். அங்குள்ள குடியரசுத் தலைவர்களிடையேயும்

ஒற்றுமையில்லாது போயிற்று. அவர்களுள் ஒரு சாரார் வலுவுள்ள மைய ஆட்சி வேண்டுமென்றனர். அப்போதுதான், திறமைமிக்க நல்லாட்சி நிலவ வாய்ப்பேற்படுமென்றனர். அக்கட்சியின் பிறிதொரு சாரார் கூட்டாட்சியே நல்லாட்சியென்று நவின்றனர். இதனால், குடியரசே வீழ்ந்துபட்டது.

குடியாட்சி அங்கு வீழ்ந்துபட்டதற்கு மற்றுமொரு காரணம், முடியரசுக் கட்சியினரும் (Monarehists) பிறருமாவர். கத்தோலிக்க சமயத் தலைவர்கள் குடியரசினை விரும்பவில்லை. சமயத்தைப் போற்றி நடக்கும் வல்லாட்சியே நல்லாட்சி என்றனர் அவர்கள். உரிமை, பகுத்தறிவு, சமயப் பொறையுடைமை, சமத்துவம் போன்ற கொள்கைகளைப் போற்றும் குடியாட்சியினை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. குடியரசில் நம்பிக்கையற்ற வேறு பல கட்சிகளும் அங்கிருந்தன. அவை குழப்பம் விளைவித்தன. குடியரசுக் கட்சியினர் அக்குடியரசினைக் காப்பாற்றும் திறன் பெற்றிருக்கவில்லை. இறுதியில் செர்ரனோ (Serrano) என்பார் சர்வாதிகாரியானார். அவர் குடியரசுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார். அவர் அல்ஃபோன்சோவை (Alfonso) மீண்டும் அரசராக்கினார். 1875ல் அல்ஃபோன்சோவும் அரசராகப் பதவியேற்றார். 1885 வரை இவர்தான் ஸ்பானிய அரசராக இருந்து கோலோச்சினார். 1876ல் அவர் அரசியலமைப்பொன்றினை வழங்கினார். அவ்வரசியலமைப்பு, அரசரே இன்றியமையாதவரென இயம்பியது. இரண்டு அவைகளைக் கொண்ட பாராளுமன்றம் தொடங்கப் பட்டது. ஆயினும், பாராளுமன்றம் செவ்வையாகப் பணியாற்ற வில்லை. அங்குள்ள இரு கட்சிகளான கன்சர்வேடிவ் கட்சியும், லிபரல் கட்சியும் தன்னலம் பேணித் திரிந்தன. பாராளுமன்றம் வழி இயங்கும் மன்னராட்சியிலும் அங்கு முன்னேற்றமேதும் ஏற்படவில்லை. தொடர்ந்து குழப்பமே ஏற்பட்டன. ஸ்பெயின் பிற நாடுகளைப் போன்று எத்துறையிலும் சிறப்படையவில்லை. ஒரு காலத்தில் ஐரோப்பாவையே ஆட்டிப் படைத்த அப்பெரும் பேரரசு 19ஆம் நூற்றாண்டு முழுவதும் வலுவிழந்து பொலிவுற்றுக் காணப்பட்டது.

**போர்ச்சுகல்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் போர்ச்சுகலும் நெப்போலியனது மாபெரும் படையெடுப்புக்கு உட்பட்டது. 1807ஆம் ஆண்டு கண்ட திட்டமும் அதன்மீது திணிக்கப்பட்டது. அதனால், அந்நாடு பொருளாதாரத் துறையில் பெரிதும் பாதிக்கப் பட்டது. பொருளாதாரத் துறையிலும் பிற துறைகளிலும் பெரிதும் இழப்புக்குட்பட்ட அச்சிறுநாடு மிகத் துணிவுடன் நெப்போலியன்

கண்ட திட்டத்தை எதிர்த்தது. இதனால், பெரிதும் சினங்கொண்ட நெப்போலியன் அதற்கொரு படிப்பினையை நல்கும்பொருட்டு, தனது மாபெரும் படையினை அதன் மீதேவினார். இப் ஃபிரெஞ்சுப் படையெடுப்பு அந்நாட்டு மக்களது உள்ளத்தில் நாடடுப்பற்று என்ற விதையினைத் தூவியதோடு நெப்போலிய வன்முறையாட்சியை எவ்வாறேனும் முறியடிப்பதென்ற உள்ளத் திண்மையினையும் நல்கியது. ஃபிரெஞ்சுப் படைகள் அந்நாட்டையடையும் தருவாயில் அந்நாட்டு அரச குடும்பம் பிரேசிலுக்குத் தப்பியோடியது. பிரேசில் அதன் குடியேற்ற நாடு என்ற முறையில் இவ்வரச குடும்பத்தை வரவேற்று மிகவும் போற்றியது. அரசரற்ற போர்ச்சுகலுக்கு ஆங்கிலப் படை தலைமையேற்றது. தீபகற்பப் போரில் 10 லட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் மாண்டுபோயினர். நெப்போலியன் தோற்கடிக்கப்பட்டபின், தங்கள் அரசர் தாயகம் திரும்புவாரென இம்மக்கள் எதிர்பார்த்தனர். போர்ச்சுகல் மன்னரான 6ஆம் ஜான் பிரேசிலிலிருந்து தாயகம் திரும்ப மறுத்துவிட்டார். பிரேசிலைவிட்டு அகன்றால், அம்மக்கள் புரட்சியிலீடுபட்டு உரிமைபெற முனைவர் என அஞ்சினர். ஆயினும், போர்ச்சுகீசிய மக்கள் இதனை விரும்பவில்லை. அரசர் பிரேசிலிலிருந்து தாயகத்தை ஆள்வதை அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தனர். 1815க்குப் பின்னரும் ஆங்கிலேயர்களும் போர்ச்சுகலைவிட்டு அகலவில்லை. பெரஸ்ஃபோர்டு (Beresford) என்ற ஆங்கிலப் படைத் தலைவர் போர்ச்சுகீசிய நிர்வாகத்தினை நடத்தினார். இதனை விரும்பாத போர்ச்சுகீசிய மக்கள் ஆங்கில ஆதிக்கத்தினை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தினர். படை வீரர்கள் ஆங்கில ஆதிக்கத்தினை எதிர்த்தனர். அவர்களுக்கு மிகக் குறைந்த ஊதியமே வழங்கப்பட்டது. பதவி உயர்வும் அவர்களுக்கு முறையாக வழங்கப்படவில்லை. அவர்களும் படையில் மிக வேறுபடுத்தப்பட்டனர். ஆங்கிலேயர்களே அனைத்து முக்கியப் பதவிகளையும் வகித்தலை அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. தங்களது தாயகம் அந்நியப் படையிடமிருப்பது அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றமாயிருந்தது. அவர்கள் தங்கள் தாயக விடுதலைக்காகக் கிளர்ச்சியும் செய்தனர். அம்மக்களின் கிளர்ச்சியினைக் கண்ட ஆங்கிலேயர்கள் அவர்களின் விருப்பத்தினை நிறைவேற்ற முன்வந்தனர். 1820ல் அம்மக்களின் விருப்பத்திற்கேற்ப போர்ச்சுகீசியப் பாராளுமன்றமும் (Cortes) கூட்டப்பெற்றது. நல்ல அரசியலமைப்பு தங்களுக்கு வேண்டுமென அவர்கள் வேண்ட, அதனை அவர்களே அடைந்துகொள்ளுமாறு கூறியது அங்கிருந்த ஆங்கில ஆட்சி. போர்ச்சுகீசியப் பாராளுமன்றம், 1812இன் ஸ்பானிய அரசியலமைப்பு போன்ற ஒன்று தனக்கும் வேண்டுமென வேண்டியது. ஆங்கில ஆட்சி பெருந்தன்மையுடன் அவ்வரசியலமைப்பை அம்மக்களுக்கு வழங்கியது. தாயகம்

திரும்புமாறு அப்பாராளுமன்றம் தன்னுடைய அரசரைவேண்டியது. போர்ச்சுகீசிய அரசரான 6ஆம் ஜானும் அதனை ஏற்றுக்கொண்டு தாயகம் திரும்பினர். பிரேசில் நாட்டிற்கு அரசப் பிரதிநிதியாகத் தம்முடைய மூத்த மகனை டாம் பெட்ரோ (Dom Pedro) என்பாரை நியமித்தார். 1822ல் பிரேசில் தன்னை ஒரு தனி நாடென அறிவித்தது. அதன் அரசராக டாம்பெட்ரோவே பதவியேற்றார். 1825ல் அதன் சுதந்திரத்தைத் தாயகமான போர்ச்சுகலும் ஏற்றுக் கொண்டது.

ஸ்பெயினைப் போன்றே போர்ச்சுகலும் மக்களாட்சியில் பயிற்சி ஏதும் பெற்றிருக்கவில்லை. அங்கும் மக்களாட்சி செயல்படவில்லை. 1823ல் முழு அதிகாரமிக்க மன்னராட்சியில் நம்பிக்கை மிக்கோர் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்றுத் திகழ்ந்தனர். அவர்கள் 1823ல் தங்களுக்கு வழங்கப்பட்டிருந்த அரசியலமைப் பினை எதிர்த்துப் போராடி அதனை நீக்கினர். இதனால், மக்க ளாட்சியின் முதல் முயற்சியே தோல்வியில் முடிந்தது. இதன் விளைவாக, முடியரசுக் கட்சியினர்க்கும் குடியரசுக் கட்சியினர்க்கு மிடையே பகை வளர்ந்தது.

கி.பி. 1826ல் 6ஆம் ஜான் காலமானர். இதனால், போர்ச்சுகலில் சிக்கல் மிகுந்தது. அவர்தம் மூத்த மகனை டாம் பெட்ரோ பிரேசில் நாட்டின் அரசராயிருந்த காரணத்தால், போர்ச்சு கலுக்கும் மன்னராக இயலவில்லை. போர்ச்சுகலை நேரடியாக ஆள இயலாது என்பதனை அறிந்த அம்மன்னர் தம்முடைய மகளான டோன்னு மெரியாடா குளோரியா (Donna Mariada Gloria) என்பாரைப் போர்ச்சுகல் நாட்டின் அரசியாக்கினர். ஆயினும், 6ஆம் ஜானின் மகளான டாம் மைக்குவல் (Dom Miguel) இதனை எதிர்த்தார். உள்நாட்டின் குழப்பத்தைத் தவிர்க்கும் பொருட்டு, டாம் பெட்ரோ, டாம் மைக்குவலைத் தம்முடைய மகளின் அரச பாதுகாவலராக நியமித்தார். ஆயினும், இதனை விரும்பாத தீவிர முடியரசுக் கட்சியினர். 1828ல் டாம் மைக்குவலையே தங்களுடைய அரசியாக்கினர். அவரது ஆட்சி போர்ச்சுகல் வரலாற்றில் களங்க மிக்க ஓர் ஆட்சியாகும். கொடுங்கோன்மையின் சின்னமாக இவ் வரசியார் திகழ்ந்தார். திறமையின்மை, நேர்மையின்மை, கையூட்டு வேண்டுவோர்க்கு வேண்டியது செய்தல், போன்ற குறைகள் ஆட்சியில் மலிந்தன. நிர்வாக இயந்திரம் ஊழல் காரணமாக, செவ்வையாக இயங்கவில்லை. பொருளாதார நெருக்கடி மிகுந்தது. கிளர்ச்சிகள் மிகுந்தன. போர்ச்சுகலின் கிளர்ச்சியினைக் கண்ட பிரேசில் அரசர் பெட்ரோ, பிரேசில் நாட்டின் மன்னர் பதவியினைத் துறந்துவிட்டு, தாயகமான போர்ச்சுகலுக்கு வந்தார். இதன்

விளைவாக, உள்நாட்டுப் போர் மூண்டது. அதில் டாம் மைக்குவல் தோல்வியுற்றார். அவர் 1834ல் நாடு கடத்தப்பட்டார். அவருடன் கொடுங்கோன்மையாட்சியும் அகன்றது

குளோரியா அரசியாக நியமிக்கப்பட்டார். 1853 வரை இவரே அந்நாட்டின் அரசியாயிருந்தார். அவரது காலத்திலும் குழப்பங்கள் மிகுந்தன. பல்வேறு கட்சிகள் குழப்பம் விளைவித்தன. தீவிர வாதிகள் வன்முறையிலீடுபட்டு அரசியையும் அவரைச் சார்ந்தோரையும் அச்சுறுத்தினர். அரசிலமைப்பிலும் திருத்தங்கள் வேண்டுமென்று பலர் வேண்டினர். 1852ல் அரசியலமைப்பில் பல திருத்தங்கள் செய்யப்பட்டன. இதனால் பல்வேறு கட்சிகளும் அமைதியுற்றன. நாட்டில் அமைதி நிலவியது.

1853ல் குளோரியா காலமானார். அவருக்குப் பின்னர், 5ஆம் பெட்ரோ (Pedro-V) என்பார் அரியணையேறினார். இவர் காலத்தில் எத்தகைய சிறப்பும் நிகழவில்லை. இவர் 8 ஆண்டுகள் அமைதியாக ஆண்டபின்னர், 1861ல் மறைந்தார். அவருக்குப் பின்னர், முதலாம் லூயி பட்டத்துக்கு வந்தார். அவர் 28 ஆண்டுகள் அரசோச்சிய பின்னர், 1889ல் மறைந்தார். அவருக்குப்பின் முதலாம் சார்லஸ் பதவிக்கு வந்தார். இவரது ஆட்சியின்போது குழப்பம் மீண்டும் தலை தூக்கியது. அப்போதிருந்த இரு முக்கியக் கட்சிகளான குடியரசுக் கட்சியும், சோசலிஸ்டுக் கட்சியும் குழப்பம் விளைவிததன. முதலாம் சார்லஸ் மீண்டும் வரமபற்ற வல்லாட்சியை நிறுவ விரும்பினார். பாராளுமன்றம் செயல்படவில்லை. போர்ச்சுகல் வரலாற்றில் இது ஒரு சோதனைக் காலமாகும். பாராளுமன்ற ஆட்சியைக் கலைக்க அவர் முற்பட்டது மாபெரும் தவறாகும். அவர் காலப்போக்கினைப் புரிந்துகொள்ளவில்லை. 1908ல் அவரும் அவருடைய மைந்தரும் சுட்டுக் கொல்லப்பட்டனர். தலைநகரான லிஸ்பனில் கொந்தளிப்பு மிகுந்தது. அவரது இரண்டாம் மகன் மேனுவல் என்பார் அரசராகப் பதவியேற்றார். அவரது ஆட்சியினையும் மக்கள் வெறுத்தனர். குடியரசே வேண்டுமெனப் பலரும் விரும்பினர். முடியரசு (Monarchy) ஒரு தேவையற்ற ஆடம்பரமாகக் கருதப்பட்டது. திறமையின்மை காரணமாக, முடியாட்சி முற்றிலும் சிறப்பிழந்தது. அதனை அகற்றும்பொருட்டு, 1910ல் மாபெரும் புரட்சி லிஸ்பனில் தோன்றியது. அரச ஆதரவாளர்களுக்கும் புரட்சியாளர்களுக்குமிடையே பல நாள்கள் போர் தொடர்ந்தது. இறுதியில் அரசர் இங்கிலாந்துக்குத் தப்பியோடினார். புரட்சி வெற்றிபெற்றது. போர்ச்சுகல் மீண்டும் குடியரசானது. மிகச் சிறிய நாடு என்ற காரணத்தால், போர்ச்சுகல் ஐரோப்பிய அரங்கில் சிறப்பான பங்கினை ஏற்க முடியவில்லை.

# 12. ரஷ்யா - (1815-1870)

ஐரோப்பிய நாகரிமென்ற தாய் ஈன்றெடுத்த இறுதிக் குழந்தை ரஷ்யா என்பார் (Fisher H.A.L.) என்ற வரலாற்று வல்லுநர். 19ஆம் நூற்றாண்டில் பிற ஐரோப்பிய நாடுகளெல்லாம் விரைவாக முன்னேறியபோது ரஷ்யா மட்டும் அனைத்துத் துறைகளிலும் பின் தங்கியே கிடந்தது. இதற்குரிய காரணம், அதன் புவியியல் அமைப்பாக இருக்கக்கூடும். வெண்கடல், கருங்கடல் இவற்றால் சூழப்பட்டுக் கிடந்த ரஷ்யா, பிற ஐரோப்பிய நாடுகளுடன் தொடர்பு கொள்ளாது தனித்தே நின்றது. இதனால், 19ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த பல புதிய மாற்றங்கள் ரஷ்யாவில் புகவில்லை. ரஷ்யா, ஓர் ஐரோப்பிய நாடாயினும் அது ஆசிய நாகரிகத்திலேயே முற்றிலும் மூழ்கிக் கிடந்தது. அனைத்துத் துறைகளிலும் பின்தங்கிக் கிடந்த ரஷ்யாவை மேம்படுத்த விரும்பியவர்களுள் மாமன்னர் பீட்டரே தலையானவர். அவர் தமது சீரிய கொள்கைகளால் ரஷ்யாவை மிக உயர்த்தினார் ரஷ்யாவின் தனிமையினையும் போக்கி, அது பிற நாடுகளுடன், தொடர்பு கொள்ளவும் செய்தவர் இவரேயாவார். 1709 ஆம் ஆண்டில் வடக்கின் சிங்கமெனப் போற்றப்பட்ட 12ஆம் சார்லஸைத் தோற்கடித்து பால்டிக் கடற்கரையில் தமது ஆதிக்கத்தினை நிறுவினார் இப்பெருமன்னர். அக்கடற்கரையில் பீட்டர்ஸ்பரக் என்ற அழகிய நகரையும் நிறுவி, மேலைநாட்டு நாகரிகம் ரஷ்யாவில் பரவவும், ரஷ்யர்கள் மேலை நாடுகளுடன் தொடர்பு கொள்ளவும் வழிவகுத்தார். இந்த மகாப் பீட்டர், பீட்டர்ஸ்பர்க்கே ரஷ்யாவில் ஐரோப்பிய நாகரிகம் எனும் தென்றலும், புகும் நுழைவாயிலானது. ஐரோப்பியக் கைவினைஞர்கள் பலரையும் வரவழைத்து ரஷ்யாவில் மேலைநாட்டுத் தொழில்கள் பலவற்றினைப் புகுத்தினார் இவர். மேலைநாட்டுக் கல்விமுறை, தொழில்முறை அனைத்தையும் இவர் பெரிதும் ஊக்குவித்தார். ஐரோப்பிய நாகரிகம், பண்பாடு, கலை, இலக்கியம், உடை அனைத்தும் ரஷ்யாவில் புகுத்தப்பட்டன. ஐரோப்பிய முறையில் செய்தித் தாள்களும் மருத்துவமனைகளும் பொருட்காட்சிச் சாலைகளும், பிறவும் தொடங்கப்பட்டன. ஐரோப்பிய நாகரிகம் கட்டாயமாகப் புகுத்தப்பட்டது. தொடக்கத்தில் ரஷ்யா அதனை ஏற்கத் தயங்கினாலும், இறுதியில் அதனை ஏற்று ஐரோப்பிய நாகரிகம் என்ற குழந்தைகளுள் ஒன்றானது. ரஷ்யாவும் ஐரோப்பிய வல்லரசுகளுள் ஒன்றானது.

மகாப்பீட்டருக்குப் பின் பதவிக்கு வந்த மன்னர்கள் அனைவரும் ஐரோப்பிய அரங்கில் சிறப்பிழந்து காணப்பட்டனர். ரஷ்யா மீண்டும் பின்தங்கத் தொடங்கியது. 18ஆம் நூற்றாண்டில் இறுதியில் பட்டத்துக்கு வந்த இரண்டாம் காதரைன் (1762-1796) மீண்டும் மகாப் பீட்டரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி ரஷ்யாவை மேம்படுத்தினர். மேலைநாட்டு நாகரிகம், பண்பாடு, கலை, இலக்கியம், மொழி மீண்டும் ரஷ்யாவில் புகுத்தப்பட்டன. தீவிரமான வெளிநாட்டுக் கொள்கையினைப் பின்பற்றி ரஷ்யாவின் உயர்வுக்கு இவர் மிகப் பாடுபட்டார். துருக்கியர்களை வென்றதோடு, போலந்தையும் பிரிவினை செய்து, அதில் ஒரு பகுதியினை இவர் பெற்று ரஷ்யாவை மிக உயர்த்தினர். ரஷ்யாவின் பரப்பு மிகுந்தது. அதன் புகழும் ஓங்கியது. இதுபற்றி இரண்டாம் காதரைன் குறிப்பிடுகையில், "நான் ஓர் ஏழைப் பெண்ணாக ரஷ்யாவுக்கு வந்தேன். அது என்னை ஏற்றுச் சீரிய முறையில் எனக்குச் சீர்வரிசை செய்தது. அதற்குக் கைம்மாறாக அசாவையும் (Azov), கிரிமியாவையும், உக்ரெயினையும் பெற்றுத் தந்தேன்" என்று நவின்றார்.

கி.பி. 1796இல் இரண்டாம் காதரைன் மறைந்தார். அவரது காலத்தில் ரஷ்யா மிகச் சிறப்பெய்தியது என்பது மெய்யே. ஆயினும், பிற ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிடுகையில் அது இன்னும் பின்தங்கிய நிலையிலேயே இருந்தது. அது ஆசிய நாகரிகத்திலேயே பெரிதும் மூழ்கிக் கிடந்தது. அதனுடைய சமயமும் அதன் பிற்போக்கு நிலைக்கு ஒரு காரணமாக இருந்தது. மூடப் பழக்க வழக்கங்களிலும் அறியாமையிலும் மக்கள் மூழ்கிக் கிடந்தனர். பாவங்களைப் பற்றியும், மறுமையைப் பற்றியும் எடுத்துரைத்த சமயம், மக்களது வறுமையினையும், அறியாமையினையும் போக்க வழியேதும் வகுக்கவில்லை. ரஷ்ய மக்களுள் பெரும்பாலானோர் ஸ்லாவ் இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுடன் மங்கோலியர்களும், போல் இனத்தாரும், டார்டர்களும் பிறரும் அங்கு வாழ்ந்தனர். வைதீக கிரேக்கத் திருச்சபையே சமயத் துறையில் அங்கு ஆதிக்கம் செலுத்தியது.

## முதலாம் பால் (Zar Paul-I) (1796-1801)

மகாக் காதரைன் மறைவிற்குப் பின்னர், அவருடைய மகன் முதலாம் பால் 1796ல் அரியணை ஏறினர். இவர் பட்டத்திற்கு வந்த பின்னர் பல மாற்றங்களைப் புகுத்தினர். மூத்த மகனே வாரிசுக்குரியவரென இவர் அறிவித்தார். இராணுவச் சட்ட திட்டங்களை மிகத் தீவிரப்படுத்தினர். அன்றாட இராணுவப் பயிற்சியினைப் புகுத்தினர். பிரஷ்ய முறையினைப் பின்பற்றித் தமது இராணு

வத்தைத் திறம்படத் திருத்தியமைத்தார். நிர்வாகத்திலும் பல சீர்திருத்தங்களைப் புகுத்தினர். ஊழல், கையூட்டு போன்றவற்றை நிர்வாகத்திலிருந்து போக்க முயன்றார். அரசவையிலும் ஒழுங்கை நிலைநாட்டினர். கண்டிப்பினை எங்கும் இவர் புகுத்தினர். இதன் காரணமாக, எங்கும் அச்சம் நிலவியது.

வெளிநாட்டுக் கொள்கையில் அமைதியினைப் பேணப் பெரிதும் முயன்றார். 1756லிருந்து போரிட்டு வரும் தமது நாட்டிற்கு அமைதி வேண்டுமென உரைத்தார். பால்டிக்கைப் பொருத்தவரையில் தம்முடைய தாயாரின் கொள்கையினை அவ்வாறே பின்பற்றினர். டென்மார்க்குடன் நட்பு பாராட்டினர். ஸ்வீடன் நாட்டுடனும் இவர் நட்பாகவே இருந்தார். 1799க்குப் பின்னர், பதவிக்கு வந்த நெப்போலியனை இவர் பெரிதும் ஆதரித்தார். புரட்சியினை வெறுத்த இவர் நெப்போலியனது ஆட்சியைப் பெரிதும் வரவேற்றார். தமது நாட்டிலும் புரட்சிக் கருத்துகள் பரவாமலிருக்க அனைத்து நடவடிக்கைகளையும் இவர் மேற்கொண்டார். மேலைநாட்டுப் பயணங்களை இவர் பெரிதும் தடை செய்தார். செய்தித்தாள்கள் தணிக்கை செய்யப்பட்டன. நாடக அரங்குகளும் தணிக்கை முறைக்கு உட்படுத்தப்பட்டன. நூல்களும் ஆராயப்பட்டு, புரட்சி நூல்கள் தடை செய்யப்பட்டன. ஃபிரெஞ்சுக்காரர்கள் ரஷ்யாவுக்கு வருவது தடை செய்யப்பட்டது. ஃபிரெஞ்சு ஆடை, அலங்காரங்களும்கூட தடை செய்யப்பட்டன. இதனால், உள்நாட்டில் இவரது செல்வாக்கு மிகக் குறைந்தது.

வெளிநாட்டுக் கொள்கையிலும் அமைதியையே பெரிதும் பாராட்டிய இம்மன்னர், இறுதியில் அதனைக் கைவிடும் நிலையேற்பட்டது. இவரது நட்பை ஸ்வீடன் ஏற்க மறுத்தது. பால்டிக் பகுதியில் தனது செல்வாக்கினை இழந்த ஸ்வீடனால் இவருடன் நட்பு பாராட்ட இயலவில்லை. இங்கிலாந்துடன் இவரால் இணைந்து செயலாற்ற முடியவில்லை. நெப்போலியன் மட்டும் இவரது நட்பைப் பெரிதும் பாராட்டினர். அந்நட்பின் சின்னமாக அவர் இவருக்கு மால்டாவை 1799ல் வழங்கினர். ஆஸ்திரியாவை மொரங்கோப் போர்க்களத்தில் நெப்போலியன் தோற்கடித்ததை இவர் பெரிதும் பாராட்டினர். மால்டாமீது இங்கிலாந்து படையெடுத்து அதனைக் கைப்பற்றிக்கொண்டது. அதனால், பெரிதும் வெகுண்ட முதலாம் பால் நெப்போலியனுடன் உடன்பாடொன்றும் செய்துகொண்டு, இங்கிலாந்தை எதிர்க்கும் திட்டமொன்றினையும் தீட்டினர். 1801ல் நெப்போலியனுடன் கூடி, இங்கிலாந்துமீது படையெடுக்கவும் துணிந்தார். அதனை நெப்போலியனும் பெரிதும் வரவேற்றார். நெப்போலியனுடன் கூட்டு சேர்ந்ததுடன் மட்டுமமையாது ஸ்பெயின்,

போர்ச்சுகல், அமெரிக்கா போன்ற நாடுகளுடனும் இணைந்து இங்கிலாந்தை முறியடிக்க முனைந்தார். அதற்கான மாபெரும் திட்டமொன்றினையும் இவர் தீட்டினார். நெப்போலியனையும் அக் கூட்டணியில் சேருமாறு வேண்டினார். இவர் இந்தியாமீது போர் தொடுக்கவும் விரும்பினார். பொக்காரா வழியாக ரஷ்யப் படையொன்றினையும், ஹீரட், காந்தார் வழியாக ஃபிரெஞ்சுப் படையொன்றினையும் அனுப்பி, இந்தியாவைக் கைப்பற்ற விரும்பினார் சார் மன்னர். அவப்பேறு காரணமாக, இத்திட்டம் நிறைவேறும் முன்னரே இவர் கொலை செய்யப்பட்டார்.

1801இல் கொலை செய்யப்படுவதற்கு முன்னரே இவருக்குச் சித்தம் கலங்கிவிட்டது. சொல்லிலும், செயலிலும் இவர் நிதானம் இழந்தார். தன்னைச் சார்ந்தோர் அனைவரையும் காரணமேதுமின்றி இவர் தண்டிக்கத் தொடங்கினார். பலரைத் தூக்கிலிடவும் உத்தர விட்டார். இவரைக் கண்டு அனைவரும் அஞ்சினர். நிர்வாகம் மிகவும் சீர்குலைந்தது. இவரால் பெரிதும் பாதிக்கப்பட்டோர் பலரும் ஒன்றுகூடி இவரை 1801ல் கொலை செய்தனர். கொடுங்கோலர் ஒருவர் பிடியிலிருந்து ரஷ்யா மீட்கப்பட்டது.

**முதலாம் சார் அலெக்ஸாந்தர் (1801-1825)**

முதலாம் பால் மறைவிற்குப்பின், அவருடைய மைந்தர் முதலாம் சார் அலெக்ஸாந்தர் 1801ல் அரியணையேறினார். இவர் நன்கு கற்றவர். இவர் லா ஹார்ப் (La Harpe) என்ற ஸ்விட்சர்லாந்து நாட்டைச் சார்ந்த அறிஞரிடம் கற்றார் அவரது நல்லுரைகளால் பெரிதும் ஆட்கொள்ளப்பட்ட இவர் தொடக்கத்தில் ஒரு முற்போக்காளராய்த் திகழ்ந்தார். எதிலும் நிலையான கொள்கையற்ற இவர் எடுப்பார் கைப்பிள்ளையாகவே திகழ்ந்தார். இவர் முரண்பாடுகள் மிக்கவர். சமயத் துறையிலும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார் இவர். 1815க்குப் பின்னர், இவர் மெட்டர்னிக்கின் உற்ற நண்பரானார். நிலையற்ற தன்மைமிக்க இவர் அவ்வப்போது பலரது ஆணைக்குட்பட்டு இயங்கினார். முற்போக்கில் நம்பிக்கைமிக்க இவர் ஒரு பிற்போக்குவாதியாய் இருந்தது விந்தையே.

**இவரது உள்நாட்டுக் கொள்கை**

இவர் பதவியேற்றபோது இவரது நல்லாசிரியர்கள் பலரது அறிவுரைகளால் முற்போக்காளராய்த் திகழ்ந்தார். நல்ல பல சீர்திருத்தங்களையும் இவர் புகுத்தினார். ரஷ்ய சமுதாயத்தின் அடிப்படைக் கோளாறுகளில் ஒன்றான பண்ணை அடிமை முறைபற்றி ஆழ்ந்து ஆராய்ந்தார். ஆயினும், அப்பிரச்சினை தீரப்

பெரியது என்பதாலும், இவரது நிலையற்ற போக்கினாலும் அத்துறையில் ஏதும் செய்யப்படவில்லை. அடிப்படை மாற்றங்களனைத்தையும் இவரும் விரும்பவில்லை. நாட்டின் அடிப்படைப் பொருளாதாரப் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ள இவர் அறிஞர்களின் துணையை நாடினர். இதனால், ரஷ்யச் சமுதாயத்தின் கட்டுக்கோப்பே சரிந்துவிடுமென எண்ணி, அதனை ஏற்க இவர் மறுத்தார். தீவிரச் சீர்திருத்தங்களை மேற்கொள்வது அன்றைய நிலையில் இயலாத ஒன்றாக அரசர்க்குப்பட்டது. இதனால், தொழிற்சாலைகளில் ஒழுங்கும், கட்டுப்பாடும் குலையுமென இவர் எண்ணினர். உரிமை கொடுத்தல் என்பது அன்று நினைக்க முடியாத ஒன்றாகும். பண்ணை அடிமை முறையில் திளைத்திருந்த சமுதாயத்தில் திடீரென உரிமையினை நல்குதல் ஏற்புடையதன்று என சார் மன்னர் கருதினர். ஆகவே, அறிஞர்களின் கருத்தை நாடிய இவர் அதனைச் செயல்படுத்தத் துணியவில்லை. எனினும், இவரால் சமுதாயத்தின் அடிப்படைக் குறைகளைப் புரிந்துகொள்ள முடிந்தது. அதன் விளைவாக, 1801ல் அடிமைகள் விற்பனை விளம்பரத்தை இவர் தடைசெய்தார். மற்றொரு சட்டத்தின் மூலம் நிலக்கிழார்கள் அனைவரும் பண்ணை அடிமைகளை நன்கு பேணிக் காக்க வேண்டுமென ஆணையிட்டார் பண்ணை அடிமைகளுக்குக் கொடிய தண்டனைகள் வழங்குவதையும் இவர் தடை செய்தார். ஆயினும், அவர்களுக்கு உரிமை வழங்க இவர் துணியவில்லை

உழவுத் துறையினைப் போன்று பிற துறைகளிலும் இவர் நாட்டம் செலுத்தினர். பதவிக்கு வந்தவுடன் இவர் வெளிநாட்டுப் பயணங்கள் மீதான தடையினை நீக்கினர். வெளிநாட்டினரும் ரஷ்யா வர இவர் அனுமதியளித்தார் செய்தித்தாள்களுக்கும் ஓரளவு உரிமை வழங்கப்பட்டது. இவர் பதவிக்கு வந்தபோது எங்கும் ஊழல் மலிந்து கிடந்தது. ஊழலை அகற்றி நல்லாட்சியினைப் புகுத்துவதிலும் இவர் நாட்டம் கொண்டார். நிர்வாகத்தை ஒழுங்குபடுத்திச் செப்பனிட்டார். பல மருத்துவமனைகளையும் இவர் நிறுவினர். பள்ளிகள் பலவும் திறக்கப்பட்டன. மாஸ்கோ, வில்னு, டோர்னு போன்ற பல்கலைக்கழகங்கள் விரிவுபடுத்தப்பட்டுச் சிறந்த கல்வி நிலையங்களாக மாற்றப்பட்டன. செயின்ட் பீட்டர்ஸ்பர்க், காஸன், கார்கோவ் போன்ற புதிய பல்கலைக் கழகங்களும் நிறுவப்பட்டுக் கல்விக்கு மிக்க ஊக்கம் தரப்பட்டது. அடக்குமுறையும் சற்றுத் தளர்த்தப்பட்டது. பாதுகாவல் படையும் கலைக்கப்பட்டது. தம் மக்களை அவ்வப்போது மாபெரும் அல்லல்களுக்கு ஆளாக்கிய பஞ்சத்தினைப் போக்கவும் சார் மாபெரும் முயற்சியினை மேற்கொண்டார். பலவிடங்களில் மாபெரும் களஞ்சியங்கள் நிறுவப்பட்டன. உபரிக் காலத்தில் அவற்றில்

தானியங்கள் சேமிக்கப்பட்டு, பஞ்ச காலங்களில் விநியோகிக்கப் பட்டன உழவும் தொழிலும் பெரிதும் ஊக்குவிக்கப்பட்டன. நாட்டு நலனில் இவர் பேரார்வம் காட்டினர். இந்நிலை 15 அல்லது 16 ஆண்டுகளே தொடர்ந்தன. பின்னர், அவர் மிக்கப் பிற்போக்கு வாதியாய் மாறினர். பழைய ஆட்சி மீண்டும் புகுத்தப்பட்டது.

இவரது மாற்றத்திற்குப் பல காரணங்கள் உள்ளன. 1815க்குப் பின்னர், முற்போக்காளர்களின் செயல்கள் காரணமாக, ஐரோப்பா வெங்கும் புரட்சி ஏற்பட்டது. அமைதி மிகவும் குலைந்தது. புரட்சி, குழப்பம் இவற்றை விரும்பாத முதலாம் சார் அலெக்ஸாந்தர் அவற்றைக் களைய முற்பட்டார். ஃபிரெஞ்சுப் பாராளுமன்றத்தில் தீவிரவாதிகளால் விளைந்த கொடுமைகளை இவர் பெரிதும் வெறுத்தார். 1817ஆம் ஆண்டின் ஜெர்மன் மாணவர்களின் புரட்சியும் வன்முறைப் போக்கும் இவரைத் துயரத்தில் ஆழ்த்தின. ஜெர்மனியில் தம் ஒற்றர் கோட்ஜிபு (Kotzebue) கொலை செய்யப் பட்டதை அறிந்து இவர் பெரிதும் வருந்தினர். செயின்ட் பீட்டர்ஸ் பர்க்கில் தம்முடைய சொந்தப் படைவீர்களின் கலகமும் இவரைப் பெரிதும் பாதித்தது. 1820ல் ஆர்ட்டாய் பிரபுவின் கொலையும் இவரைப் பெரிதும் சிந்திக்கவைத்தது. இரகசிய இயக்கங்கள் பல நாட்டில் கொந்தளிப்பை உருவாக்கின. போலந்து மக்களும் இவர் வழங்கிய உரிமைகளை மறந்து இவரைத் தூற்றினர். இதுவும் இவரது நெஞ்சத்தில் முள்ளெனத் தைத்தது. தமது முற்போக்குக் கொள்கைகளால் இவற்றைக் கட்டுப்படுத்துதல் எளிதன்றென உணர்ந்தார். மெட்டர்னிக்கின் அடக்குமுறையே சிறந்ததெனவும் இவர் கருதினர். அதன் பின்னர், துன்பம் வந்தபோதெல்லாம் மெட்டர்னிக்கின் துணையினையே நாடினர். அவரது உற்ற நண்பரு மானர். 1820ல் நடந்த டிரப்பாவ் மாநாட்டிற்குப் பின்னர், மெட்டர்னிக் கூறுவதே உண்மையெனக் கூறி, அவரையே தன்னை வழிப்படுத்துமாறும் இவர் வேண்டிக்கொண்டார். தன்னுடைய முந்தியக் கொள்கை முற்றிலும் தவருனதெனவும் இவர் விளம்பினர். "நான் 1815லிருந்து 1818 வரை சொன்னவற்றிற்கும், செய்தவற்றிற்கும் வருந்துகிறேன். காலம் வீணுவதற்கு மிக்க வருந்துகிறேன். தங்கள் விருப்பம் என்ன என்பதையும் தாங்கள் நான் என்ன செய்யவேண்டுமென விழைகிறீர்களோ அதனையும் சொல்லுங்கள். நான் அதனைச் செய்கிறேன்" என்ற இவரது கூற்று இவரது மாற்றத்திற்கு நல்லதொரு சான்ருகும்.

### இவரது வெளிநாட்டுக் கொள்கை

முதலாம் சார் அலெக்ஸாந்தர் பதவியேற்றபோது ஐரோப் பாவில் ஒப்பற்றுத் திகழ்ந்த நெப்போலியனுடன் தொடர்புகொள்ளும்

நிலை ஏற்பட்டது. 1801லிருந்து 1805 வரை இவர் நடுநிலைக் கொள்கையினையே பின்பற்றினார். நெப்போலியனது தீவிரப் போக்கையும், அவரது அயல்நாட்டுக் கொள்கையினையும் இவர் விரும்பவில்லை. ஜெர்மனி, இத்தாலி, ஆஸ்திரியா போன்ற நாடுகளில் நெப்போலியனது ஆதிக்கத்தினை வெறுத்த இவர் அவர்மீது பகைமை காட்டவும் தலைப்பட்டார். காலப்போக்கில் தமது நடுநிலைக் கொள்கையினைக் கைவிட்டு, இங்கிலாந்து போன்ற நாடுகளுடன் நட்பு பாராட்டவும் தொடங்கினார். 1805இல் நெப்போலியனுக்கு எதிராக அமைந்த மூன்றாவது கூட்டணியிலும் சேர்ந்து அவரை எதிர்க்க இவர் ஆயத்தமானார். இதனையறிந்த நெப்போலியன் ரஷ்யாமீதும் படையெடுத்தார். 1807இல் நடந்த பிரைடுலாந்து போர்க்களத்தில் ரஷ்யாவையும் பிரஷ்யாவையும் நெப்போலியன் தோற்கடித்தார். நெப்போலியனுடன் பகைமை பாராட்டியதன் விளைவை உணர்ந்தார் சார் மன்னர். 1807இல் இவர் நெப்போலியனுடன் டில்சிட் (The Treaty of Tilsit) உடன்பாடும் செய்து கொண்டார். அதன்மூலம் நெப்போலியனது திட்டத்தையும் இவர் ஏற்றுக்கொண்டார். இத்திட்டம் ரஷ்யாவுக்குப் பெரும் தீங்காய் அமைந்தது. ரஷ்ய மக்கள் வெளிநாட்டுப் பொருள்கள் பல கிடைக்காது பெரிதும் அவதியுற்றனர். அன்றாடத் தேவைக்கு வேண்டிய சர்க்கரையும், காப்பியும், டீயுமின்றி மக்கள் பெரிதும் வாடினர். ஆயினும், டில்சிட் உடன்பாட்டினால் விளைந்த நன்மைகளால் நெப்போலியனை இவர் எதிர்க்கத் தயங்கினார். டில்சிட் உடன்பாட்டின் விளைவாகப் பின்லாந்தையும் பெசரேபியாவையும் கவர்ந்துகொண்ட இவர் கண்ட திட்டத்தினால் விளைந்த இன்னல்களையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டார். பாரசீகத்தில் காகசஸ் பகுதியிலும் தமது ஆதிக்கத்தினை இவர் நிறுவினார். எண்ணெய் வளம் நிறைந்த இப்பகுதி இவருக்கு மாபெரும் நன்மையினை அளித்தது. 1809க்குப் பின்னர், நெப்போலியனின் வீழ்ச்சி தொடங்கியது. அதனால், துணிவு கொண்ட இவரும் கண்ட திட்டத்தை எதிர்க்கத் தொடங்கினார். இதனால், வெகுண்ட நெப்போலியன் 1812ல் ரஷ்யாமீது படையெடுத்து 5 லட்சத்திற்கும் மேற்பட்ட வீரர்களை இழந்து சோர்வுற்று நாடு திரும்பினார் நெப்போலியன். 1812க்குப் பின்னர், சார் மன்னர், நெப்போலியனையும் வென்றவராய்க் கருதப்பட்டார். நெப்போலியனுக்கெதிராக அமைந்த நான்காவது கூட்டணியிலும் இம்மன்னர் பங்கேற்று நெப்போலியனை முறியடித்தார். மாபெரும் படையினைக் கொண்டு நெப்போலியனை முறியடித்த காரணத்தால், இவர் ஐரோப்பாவில் மாபெரும் வல்லரசரெனக் கருதப்பட்டார். இதனால் 1815இல் கூடிய வியன்னா மாநாட்டிலும் இவரது செல்வாக்கு ஓங்கி நின்றது.

### வியன்னு மாநாடும் சார் அலெக்ஸாந்தரும்

வியன்னு மாநாட்டில் பங்கேற்ற தலையானவர்களுள் இவரும் ஒருவர். மாபெரும் படைப் பலத்துடன் திகழ்ந்த இவரை அனைவரும் போற்றினர். நெப்போலியனை வீழ்த்தியவரெனவும் இவர் பாராட்டப் பெற்றார். இவர் ஒரு "வெண் தேவதை" (White Angel) எனவும் போற்றப்பெற்றார். இவ்வாறு செல்வாக்கு பெற்றிருந்தும், வியன்னு மாநாட்டில் இவர் மிக்க பெருந்தன்மையுடன் நடந்துகொண்டார். மாநாட்டுக்கு வந்திருந்த அனைத்து அரசர்களுள் இவரே முற்போக்குவாதியாயிருந்தார். ஐரோப்பியப் புனரமைப்பில் இவர் மாபெரும் பங்கேற்றார். ஐரோப்பிய நாடுகளுக்குப் புனிதக் கூட்டமைப்பொன்று (The Holy Alliance) வேண்டுமெனவும் வலியுறுத்தினர். கிருத்துவ சமயத்தின் அடிப்படையில் அரசர்கள் ஆளவேண்டுமென இவர் வேண்டுகோள் விடுத்தார். வெற்றிபெற்ற நாடுகள் பழிவாங்கும் உணர்வில் செல்லுதல் கூடாதெனவும் இவர் கூறினர். வெற்றிபெற்ற நாடுகள் மிக்க பெருந்தன்மையுடன் ஃபிரான்சினை நடத்தியதற்குக் காரணம், இவரேயாவார். ஃபிரான்சுக்கு நன்மை கிட்டும் வகையில் வியன்னு ஏற்பாடுகள் அமைவதற்கும் இவர் வழிவகைகள் செய்தார். ஃபிரான்சு தனது நாட்டின் எப்பகுதிகளையும் இழக்காததற்கு இவரே காரணமானர். பூர்போன்கள் ஃபிரெஞ்சரியணையிலேறுவதையும் இவர் பெரிதும் வரவேற்றார். 18ஆம் லூயி மன்னரையும் மக்களைக் கவர நல்ல சாசனமொன்றினை வெளியிடுமாறும் ஊக்குவித்தார். இவரது நல்லுரையின் அடிப்படையில் அமைந்ததுதான் 1814ஆம் ஆண்டு ஃபிரெஞ்சு சாசனங்கள் எனில் மிகையாகாது.

### போலந்து

இவர் போலந்துமீது மிக்க அனுதாபம் கொண்டவர். தமது செல்வாக்கினைப் பயன்படுத்தி வியன்னு மாநாட்டில் போலந்தின் பெரும் பகுதியினைப் பெற்றார். நெப்போலியன் அமைத்த வார்சா அரசை (The Grand Duchy of Warsaw) மீண்டும் போலந்து அரசாக இவர் மாற்றினர். இது 3,000,000 மக்களைக் கொண்ட ஓர் அரசாகத் திகழ்ந்தது. இதன் தலைநகரும் வார்சாவானது. இது தனித்தியங்கவும் அனுமதிக்கப்பட்டது. அதற்கு 1815ல் நல்ல முற்போக்கு அரசியலமைப்பொன்றினையும் வழங்கினர். அங்கு இரண்டு அவைகளைக் கொண்ட பாராளுமன்றம் தொடங்கப்பட்டது. இது சட்டங்களை இயற்றவும், தனது வரவு செலவு திட்டங்களை ஆராயவும் இரண்டு ஆண்டுகளுக்கொருமுறை கூடியது. அங்குச் சமய உரிமை, எழுத்துரிமை, பேச்சுரிமை போன்ற உரிமைகள் வழங்கப்பட்டன. அங்குப் போலிஷ் மொழியும் ஆட்சி

மொழியானது. ஹேசன் என்ற வரலாற்று வல்லுநர் போலந்துபற்றி எழுதுகையில் ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற நாடுகளைக் காட்டிலும் இது உரிமை மிக்க பல நிறுவனங்களைக் கொண்டு திகழ்ந்தது. வாக்கெடுப்பு முறையும் இங்கிலாந்து ஃபிரான்சைக் காட்டிலும் விரிவான முறையிலிருந்தது. மக்களுக்கும் பிற நாடுகளைவிட, மிகுதியான உரிமைகள் அங்கு வழங்கப்பட்டன[1] எனக் குறிப்பிட்டுள்ளார். நாளடைவில் மெட்டர்னிக்கின் நட்பால் இவரது கொள்கைகளிலும் மாறுதல்கள் தோன்றின. 1815க்குப் பின்னர், நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளும் இவரை முற்றிலும் மாற்றின. போலந்து மக்களின் நன்றி மறந்த செயல் இவரைப் பெரிதும் வாட்டியது. வியன்னு மாநாட்டிற்குப் பின்னர், ஐரோப்பிய ஐவர் கூட்டணியில் சேர்ந்த இவர் பிற்போக்குக் கொள்கைகளை ஆதரிக்கத் தொடங்கினர். முற்போக்கினர்களும் அழிவு வேலையிலீடுபட்ட காரணத்தால், அவர்களை இவர் மிகவும் வெறுத்தார். சமய மீட்பிலும் (Religions Revivalism) நம்பிக்கைமிக்க இவர் பிற்போக்கினை ஆதரித்தார். அரசாது வழி இறைவனால் வகுக்கப்படுவது. அது மக்களுக்கு அப்பாற்பட்டது. அது மிக்க மேம்பட்டவொன்று என இவர் கருதினர். அரசருக்கு அறிவுரை வழங்க மக்களுக்குத் தகுதியில்லை; மன்னர் வழி நிற்பதே மக்களின் தலையாயக் கடனென இவர் கூறினர். முற்போக்கினர் இவர் புகுத்திய சீர்திருத்தங்களால் மகிழ்ச்சியடையவில்லை. மேன்மேலும் சீர்திருத்தங்கள் வேண்டுமென அவர்கள் போராடத் தொடங்கினர். போலந்து மக்களும் வழங்கப்பட்ட உரிமைகளின் விளைவாக, மேலும் உரிமைகள் வேண்டுமெனப் போராடத் தலைப்பட்டனர். 1820ல் தங்களுக்கு வழங்கப்பட்ட அரசியலமைப்பையும் ஏற்க மறுத்தனர். இதனால், பெரிதும் வெறுப்புற்ற இப்பேரரசர் அவர்களுக்கு வழங்கியிருந்த அனைத்து உரிமைகளையும் நீக்கினர். மீண்டும் அடக்குமுறையினைப் புகுத்தினர். அவர்கள் பெரிதும் ஏமாற்றமுற்றனர். காலத்துக்கு முற்பட்ட அவர்களது செயல் இறுதியில் அவர்களது நலனுக்கே ஊறு விளைவித்தது.

### பிற நாடுகள்

வெளிநாட்டுக் கொள்கையிலும் சிலகாலம் சார் அலெக்ஸாந்தர் முற்போக்குக் கொள்கைகளையே ஆதரித்தார். ஸ்பெயின், இத்தாலி, ஜெர்மனி போன்ற நாடுகள் உரிமைக்காகப் போராடியபோது, அந்நாடுகள்மீது அனுதாபம் கொண்டார். பிற்போக்குவாதியான

[1] Poland enjoyed freer institutions at this moment than did either Prussia or Austria. The Franchise was wider than that if England or France. Hazen—p. 576.

மெட்டர்னிக்கையும் இவர் ஒரு காலத்தில் குறைகூறினர். அவரை எதிர்த்து முற்போக்குக் கொள்கைகளுக்கும் ஆதரவாய் இருந்தார். வியன்ன மாநாட்டிற்குப் பின்னர், இவர் மெட்டர்னிக்கின் உற்ற நண்பரானர். 1818க்குப் பின்னர், மெட்டர்னிக்கே .இவரது அரசியல் குருவும் ஆனர். தமது முற்போக்குக் கொள்கைகள் தவருனவையென்பதை வெளிப்படையாகவே கூறினர் இவர்.

வியன்ன மாநாட்டிற்குப் பின்னர், இவர் மாறியதற்குக் காரணம், அம்மாநாட்டின் ஏற்பாடுகளேயாகும். மாநாட்டு ஏற்பாடுகளில் கையெழுத்திட்டு, ஐரோப்பியக் கூட்டணியில் உறுப்பிரானபின், கூட்டணி நாடுகளை ஆதரிப்பது இவரது கடமையானது. 1815க்குப் பின்னர், குடியரசை நிறுவ முற்போக்கினர் முயன்றனர். உரிமைக்குப் போராட அவர்கள் முன்வந்தனர். ஐரோப்பிய பழைய சமுதாய, அரசியல், பொருளாதார நிலைகளையே மாற்ற அவர்கள் முனைந்தனர். சார் மன்னரும் அவர்களின் போக்கை நன்கு புரிந்துகொண்டார். அமைதிக்குப் பிற்போக்கே சிறந்ததென நம்பத் தொடங்கினர். மெட்டர்னிக் போன்ரேர் அனுபவத்திலறிந்து கூறுவதில் உண்மையிருப்பதையும் இவர் தெளிவாக உணர்ந்தார். சமய மீட்பில் நம்பிக்கை மிக்க இவர், அதனையே புதிய கருத்துகளுக்கும் மேலாகப் போற்றத் தொடங்கினர். அமைதி, அறவழி, கொடைத் தன்மை வழி அரசு இயங்க வேண்டுமென்று இவர் விரும்பினர். தந்தை போன்றிருந்து குடிமக்களைப் பேண வேண்டுமென இவர் கூறினர். அம்மக்களே இவருக்கெதிராகச் சதியிலும், புரட்சியிலும் ஈடுபட்டபோது மனமுடைந்து, அவர்களை அடக்கி ஆட்படுத்துவதே தக்கதென இவர் துணிந்தார்.

ஐரோப்பியக் கூட்டணியும் இவரது மன்றத்திற்கு ஒரு பெரும் காரணமாயிருந்தது. பிற்போக்காளர்கள் நிறைந்த அவ்வணியிற் சேர்ந்து இவரும் பிற்போக்காளரானர். நிலையற்ற கொள்கையும், தெளிவற்ற சிந்தனையும் கொண்ட இவர் 1818க்குப் பின்னர், எடுப்பார் கைப் பிள்ளையானர். பிற்போக்கின் சின்னமாகவும் இவர் திகழ்ந்தார். அதன்பின்னர், அவர் தமது சிறப்பினையும் செல்வாக்கினையும் இழந்தார்.

1820ஆம் ஆண்டு ஸ்பெயின் புரட்சி செய்தபோது இவர் அதனை அடக்க முற்பட்டார். பிற கூட்டணி உறுப்பினர்களையும் அப்புரட்சியினை அடக்க துணைபுரியுமாறு வேண்டினர். ரஷ்ய வீரர்களை ஸ்பெயினுக்கனுப்பி, அப்புரட்சியினை அடக்கவும் இவர் திட்டம் தீட்டினர். அதனைப் பிற வல்லரசுகள் விரும்பவில்லை,

குறிப்பாக இங்கிலாந்து இதனை விரும்பவில்லை. ஸ்பெயினில் ரஷ்ய ஆதிக்கம் நிறுவப்படுதலை இங்கிலாந்து முற்றிலும் வெறுத்தது. மெட்டர்னிக்கும் அதனை ஆதரிக்கவில்லை. எதிர்ப்பு மிகுந்து காணப்பட்டதால், ரஷ்யா ஸ்பெயினில் தலையிட முடியவில்லை. இதனுல், ரஷ்ய ஆதிக்கம் ஸ்பெயினில் நிறுவப்படுவது தடைப் பட்டது.

கிரேக்க மக்களும் நாட்டுப்பற்றுக் காரணமாக, துருக்கிய ஆதிக்கத்தினை எதிர்த்து விடுதலைப் போரிலீடுபட்டபோது இவர் அம்மக்கள் பால் அனுதாபம் கொண்டு அவர்களுக்கு உதவ விழைந்தார். ஐரோப்பாவின் நோயாளியான துருக்கியை வீழ்த்தி விட்டு, பால்கனில் அந்நோயாளியின் பகுதிகளைப் பெறுவதையே இவர் நோக்கமாகக் கொண்டிருந்தார். கிரேக்கர்கள் புரட்சியி ல்டுபட்டபோது, அவர்களை ஆதரித்து, விடுதலை பெறச் செய்து, அங்குத் தமது ஆதிக்கத்தினை நிறுவ இவர் பெரிதும் விரும்பினுர். லேபாக் மாநாட்டில் அவர் கிரேக்கர்களுக்கு உதவப்போவதாகக் கூறியபோது, பிற வல்லரசுகள் அதனை ஆதரிக்கவில்லை ரஷ்யாவின் ஆதிக்கப்போக்கினையும் அது பால்கன் பகுதிகளில் தலையிட விரும்புவதையும் இங்கிலாந்து விரும்பவில்லை. கிரேக்க மக்கள் பால் இங்கிலாந்து அனுதாபம் கொண்டாலும் ரஷ்யா அங்குத் தனது செல்வாக்கினை நிறுவுவதை எதிர்த்தது. மெட்டர்னிக்கும் சார் அலெக்ஸாந்தரின் உள்நோக்கத்தை நன்கு புரிந்துகொண்டு அவரை ஆதரிக்கவில்லை. வியன்னு மாநாட்டேற்பாடுகளைக் காப்பதே தன் கடனென இயம்பினுர் மெட்டர்னிக். துருக்கிக்கு கிரேக்கத்தின் மீதான ஆதிக்கம் நியாயமானதே என்பதையும் இவர் விளக்கினுர். சார் மன்னரும் அதனை மறுக்கவில்லை. கிரேக்கத்தின்மீதும் ரஷ்யாவினுல் தனது ஆதிக்கத்தினை நிலைநாட்ட முடியவில்லை. இதனுல், சார் மன்னர் பெரிதும் ஏமாற்றமுற்றுர். இவர் தமது வாழ்க்கையில் எதனையும் செவ்வை யாக நிறைவேற்றவில்லை. உள்நாட்டுப் பிரச்சினைகள் எதற்கும் இவர் நிரந்தரத் தீர்வு காணவில்லை. வெளிநாட்டுக் கொள்கையிலும் மெட்டர்னிக்கைப் பின்பற்றிச் சிறப்பிழந்தார். இவரது கொள்கை யால் மக்கள் மிக்க ஆத்திரமுற்றனர். 1825ல் நாட்டில் ஒருவகை அமைதியின்மையை உருவாக்கிப் பின்னர் இவர் காலமானுர்.

### 1825ல் டிசம்பர் புரட்சி

1825ல் முதலாம் சார் அலெக்ஸாந்தர் மறைவுக்குப் பின்னர், ரஷ்யாவில் அமைதியின்மையும், கொந்தளிப்பும் நிலவின. முதலாம் சார் அலெக்ஸாந்தரின் சீர்திருத்தங்களை வரவேற்ற மக்கள் அவரது மாற்றத்தினுல் பெரிதும் ஏமாந்துபோயினர்.

அவர் பிற்போக்குவாதியாக மாறியதைக் கண்டு, பெரிதும் ஆத்திர முற்றனர். 1789ல் ஃபிரெஞ்சுப் புரட்சியின் கருத்துகளும் ரஷ்யாவில் பரவின. அவர்களும் உரிமை, சமத்துவம், வரம்புக்குட்பட்ட முடியாட்சி போன்றவற்றை விரும்பினர். அவை தங்கள் நாட்டிலும் செயல்பட வேண்டுமென விரும்பினர். முற்போக்குக் கருத்துகளும், புதிய நிறுவனங்களும், வரம்புக்குட்பட்ட முடியரசும், சீர்திருத்தங் களும் தங்கள் நாட்டிலும் புகுத்தப்பட வேண்டுமென விரும்பினர். அவர்களும் அவற்றிற்காகக் கலகம் செய்யத் தலைப்பட்டனர். சார் மன்னரின் கொடுங்கோன்மையால் பெரிதும் அவதியுற்ற அவர்கள் அதனை எதிர்க்கவும் துணிந்தனர்.

1815க்குப் பின்னர், ரஷ்யாவெங்கும் பல இரகசிய இயக்கங்கள் தோன்றின. சார் ஆட்சியில் துன்புற்ற அனைவரும் இவற்றில் சேர்ந்து கலகம் விளைவிக்க முனைந்தனர். பல உயர்குடியினரும், உயர் அரசு அலுவலர்களும் ஒன்றுகூடி, 1816இல் பீட்டர்ஸ் பர்க்கில் விடுதலை இயக்கமொன்றினைத் தொடங்கினர். (The Union of Salvorino) பண்ணை அடிமை முறையினை அகற்றுதல், வரம்புக்குட்பட்ட முடியாட்சியினைக் கொணர்தல், மக்களுக்கு வாக்குரிமையினை நல்குதல் போன்ற சீர்திருத்தங்களுக்காக அவ்வியக்கம் தொடங்கப்பட்டது. ஆயினும், அவ்வியக்கம் செவ்வையாகச் செயல்படவில்லை. அடக்குமுறையாட்சிக்கு எதிராக அது செயல்பட முடியாது உடைந்துபோனது. அதன் பின்னர், 1822ல் வேறுபல இரகசிய இயக்கங்களும் தோன்றின. அவற்றில் பீட்டர்ஸ்பர்க்கில் தோன்றிய வடவர் கழகமும் (Northern Society) உக்ரைனில் தோன்றிய தென்னவர் கழகமும் (Southern Society) இன்றியமையாதவை. ஸ்லாவ் இன மக்களின் நலன் பேணு வதற்காக ஸ்லாவ் இனத்தோர் சங்கமும் நிறுவப்பட்டது. இச்சங்கம் நாளடைவில் தென்னவர் கழகத்தில் இணைந்துவிட்டது. தென்னவர் கழகத்தின் தலைவராக பெஸ்டெல் என்பார் இருந்தார். ரஷ்யாவில் குடியரசு நிறுவுதலையே தமது தலையாய நோக்கமாகக் கொண்டிருந்தார் பெஸ்டெல். அடிமைமுறை அகற்றப்படல் வேண்டும்; வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை வழங்கப் படவேண்டும்; ரஷ்யாவில் வாழும் அனைவரும் ரஷ்யமயமாக்கப்படல் வேண்டும் (Russification) போன்றவை அவரது முக்கிய நோக்கங் களிற் சில. ரஷ்ய முன்னேற்றத்திற்கு அரசகுடும்பம் அகற்றப்பட வேண்டுமெனவும் அவர் வலியுறுத்தினர். வடவர் கழகம் சீர்திருத் தங்களைப் படிப்படியாகப் புகுத்தவேண்டுமென வலியுறுத்தியது. ஆயினும், பெரும்பாலோர் பெஸ்டலையே ஆதரித்தனர். 19ஆம் நூற்றாண்டில் ரஷ்யாவில் விடுதலையின் சின்னமாகப் பெஸ்டல் திகழ்ந்தார்.

1825ல் முதலாம் சார் அலெக்ஸாந்தர் காலமானார். அவரது மறைவு தென்னவர் கழகத்திற்கு நல்லதொரு வாய்ப்பினை நல்கியது. அவர்க்குப்பின் யார் அரியணையேறுவது என்ற குழப்பமெழுந்தது. முதலாம் சார் அலெக்ஸாந்தருக்கு மகப்பேறில்லை. அவர்க்கு மூன்று சகோதரர்களிருந்தனர். அவர்களுள் மூத்தவரான கான்ஸ்டான்டைன் என்பார் எளிய குலமங்கை யொருவரைத் திருமணம் செய்துகொண்டதால் அரசராகும் வாய்ப்பு தனக்கிராது என எண்ணி அதனைத் துறந்தார். அரச பதவி வேண்டாமென்றும் ஓர் ஆவணத்தில் கையெழுத்திட்டு (Document) அதனை அரசுக்கும் அனுப்பிவிட்டார் அவர். இதனைப் பலர் அறியார். அவர்க்கு அடுத்த சகோதரனை முதலாம் நிக்கலொசும் தனக்கு அரச பீடம் வேண்டாமெனவும் தம்முடைய தனையன் கான்ஸ்டான்டைனே பதவியேற்க வேண்டுமெனவும் அறிவித்தார். கான்ஸ்டான்டைன் அரியணையேற மறுக்கவே முதலாம் நிக்கலொசே அரசரானார். இவ்வரசு உரிமைச் சிக்கல் காரணமாக, நாட்டில் குழப்பமும் அமைதியின்மையும் நிலவின. அதனை நன்கு பயன் படுத்திக்கொண்டு தென்னவர் கழகம் 1825ஆம் ஆண்டு, டிசம்பர் திங்கள், 26ஆம் நாள் புரட்சியிலீடுபட்டது. அதே நாளில் படை வீரர்கள் முதலாம் சார் நிக்கலொஸுக்கு உண்மை ஊழியர் களாக இருப்போம் என உறுதிமொழியெடுக்குமாறு பணிக்கப் பட்டனர். பெஸ்டல் அவர்களை உறுதிமொழி எடுக்க வேண்டா மெனவும், புரட்சி செய்யுமாறும் தூண்டினார். அவரது வேண்டு கோளையேற்ற பெட்ரோகிரேடு வீரர்கள் உறுதிமொழி யெடுக்க மறுத்தனர். முதலாம் சார் நிக்கலொஸ் திறமைமிக்கவர். புரட்சி யாளர்களின் செயல்களையும் இவர் முன்கூட்டியே அறிந்திருந்தார். ஒற்றர்மூலம் அவர்களை நன்கு கண்காணித்து வந்த அவர் மிக்க அமைதியாக அவர்களை ஒடுக்கும் முயற்சியிலீடுபட்டார். பிற படையினரின் துணைகொண்டு அவர்களை அடக்குவதில் இவர் வெற்றியும் பெற்றார். புரட்சியாளர்களும் சரணடைந்தனர். டிசம்பர் புரட்சி தோல்வியில் முடிந்தது.

### இப்புரட்சியின் தோல்விக்குரிய காரணங்கள்

டிசம்பர் புரட்சி தோல்வியுறுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. (1) புரட்சியாளர்கள் பல உண்மையான ஈடுபாட்டுடன் இதில் பங்கேற்கவில்லை. அவர்கள் அச்சுறுத்தப்பட்டபோது தங்களது புரட்சியின் திட்டங்களை அரசு ஒற்றர்களிடம் வெளியிட்டு விட்டனர். புரட்சியின அரகசிய திட்டங்கள் அம்பலமாகிவிட்டன. அரசும் புரட்சியாளர்களின்மீது கடும் நடவடிக்கை யெடுத்து அவர்களை ஒடுக்கியது. (2) புரட்சித் தலைவர்களிடையே உறுதியும்,

திட நம்பிக்கையுமில்லை. இறுதிவரை போராட வேண்டுமென்ற உறுதியும் கட்டுப்பாடும் அவர்களிடையேயில்லை. அச்சுறுத்தப் பட்டபோது தங்களது திட்டங்களை வெளியிட்டதோடு, புரட்சியி லிருந்தும் அவர்களுள் பலர் ஒதுங்கிச் சென்றுவிட்டனர். பலர் புரட்சிக்குத் தலைமையேற்கவும் அஞ்சினர். ஒற்றுமையின்றி அவர்கள் சிதறிப்போன காரணத்தால், புரட்சியும் எளிதாக அடக்கப்பட்டது. (3) இப்புரட்சி காலத்திற்குச் சற்று முற்பட்ட புரட்சியாகும். மக்களிடையே புரட்சிக் கருத்துகள் தெளிவாகப் பரப்பப்படவில்லை. மக்களும் அதனை வரவேற்கவில்லை. காலத்துக்கு முற்பட்ட கருத்துகளை மக்கள் ஏற்கத் தயங்கியதோடு புரட்சி யாளர்களையும் கலகக்காரர்களென வெறுத்தனர். புரட்சி மக்களுடைய ஆதரவைப் பெறாத காரணத்தால் தோல்வியுற்றது. அதன் தலைவரான பெஸ்டெல் என்பார் "விதையை விதைக்கு முன்னரே நான் அறுவடை செய்ய முனைந்ததே எனது தவறாகும்" எனக் கூறியதிலிருந்தே அப்புரட்சி ஏன் தோற்றது என்பது நன்கு புலனாகும். புரட்சியின் அனுபவமற்ற பல தலைவர்கள் தூக்கிலிடப் பட்டனர். பலர் நாடு கடத்தப்பட்டனர். பலர் சைபீரியாவுக்கு அனுப்பப்பட்டனர். (4) நிக்கலொலாஸும் திறமையோடு இயங்கிப் புரட்சியை நசுக்கினார். 1815ஆம் ஆண்டு டிசம்பர் புரட்சி, புரட்சி யாளர்களுக்கு நல்லதொரு படிப்பினையாயமைந்தது.

1825ஆம் ஆண்டு டிசம்பர் புரட்சி தோல்வியுற்றபோதும், அது ஒரு முன்னோடித் திட்டமாக அமைந்தது. அதற்குப் பின்னர், தோன்றிய அனைத்துப் புரட்சிகளுக்கும் இதுவே வழிகாட்டியா யமைந்தது. இப்புரட்சியாளர்கள் விதைத்த விதை, தொடர்ந்து வளரத் தொடங்கியது. அது வன்முறையால் நசித்துப் போய்விட வில்லை. 1840க்குப் பின்னர், வந்த அறிஞர்கள் பலரை அது மிகவும் ஊக்குவித்தது. 1860க்குப் பின்னர், செல்வாக்குடன் திகழ்ந்த நிகிலிஸ்டுகளையும் அது பெரிதும் ஊக்குவித்தது. 1870க்குப் பின்னர், தோன்றிய வன்முறையாளர்களும் (Anarchists) கம்யூனிஸ்டுகளும் இப்புரட்சியால் பெரிதும் பயன் பெற்றனர். இப்புரட்சியே ரஷ்யாவில் தோன்றிய அனைத்துப் புரட்சிகளுக்கும் அடிப்படையாகும்.

## முதலாம் நிக்கலொலாஸ் (1825-1855)

1825ல் முதலாம் சார் அலெக்ஸாந்தரின் மறைவுக்குப் பின்னர் முதலாம் சார் நிக்கலொலாஸ் அரியணையேறினார். முதலாம் அலெக்ஸாந்தருக்குப்பின் கான்ஸ்டான்டைன் என்பாரே அரசுக் கட்டிலேறியிருக்க வேண்டும். அவரை முதலாம் அலெக்ஸாந்தர்

விரும்பவில்லை. காரணம், கான்ஸ்டான்டைன் ஒரு முற்போக்காளர்; மக்கள் நலனில் நம்பிக்கை மிக்கவர்; அரசியலமைப்புக்குட்பட்ட முடியாட்சியில் நம்பிக்கை கொண்டவர். ஆதலின் இவரை முதலாம் அலெக்ஸாந்தர் வெறுத்ததில் வியப்பேதுமில்லை. முதலாம் சார் அலெக்ஸாந்தர் காலத்திலேயே முற்போக்காளர்கள் பலர் அரசியலமைப்பும் கான்ஸ்டான்டைனுமே வேண்டுமென்றனர் (Constantine and Constitution). முதலாம் அலெக்ஸாந்தர் தம்முடைய அடுத்த தம்பியான நிக்கலோஸை பதவிக்கு வரவேண்டுமென விரும்பினர். அவரே அவர் விருப்பப்படி பட்டத்திற்கு வந்தார். டிசம்பர் புரட்சி (1825) அவரை ஒரு மாபெரும் பிற்போக்குவாதியாக்கியது. அவர் வன்முறையிலீடுபட்டு டிசம்பர் புரட்சியினையும் அடக்கினர். புரட்சியினையும், முற்போக்கினையும் இவர் முற்றிலும் வெறுத்தார். இராணுவ முகாமில் பயிற்சி பெற்ற அவர் ஒரு பிற்போக்குவாதியாய்க் கட்டுப்பாட்டில் நம்பிக்கைமிக்கவராய், வரம்பற்ற வல்லாட்சியில் நாட்டம் மிக்கவராய்த் திகழ்ந்தார்.

முதலாம் சார் நிக்கலோஸ் பட்டத்திற்கு வந்தபோது, 30 ஆண்டுகள் நிறைந்த இளைஞராய் இருந்தார். அவர் பட்டத்திற்கு வந்தபோது, நிர்வாகத்தைப்பற்றியும், அரசியலைப்பற்றியும் அவர் மிகுதியும் அறிந்து வைத்திருக்கவில்லை. படைத் துறையில் பயிற்சி பெற்றிருந்த அவர் வல்லாட்சியிலேயே நாட்டம் மிகக் கொண்டிருந்தார். இராணுவ முகாமில் பயிற்சி பெற்றிருந்த அவர் திறமையின்மையினையும் ஊழலையும் அறவே வெறுத்தார். அவற்றை இவர் அறவே ஒழிக்க முனைந்தார். பரந்து விரிந்து கிடந்த அப்பேரரசில் அதிகாரங்களனைத்தும் மையத்திலே குவிந்து கிடந்தன. அத்தகைய பேரரசில் ஊழல்களை முற்றிலும் அகற்றுதலென்பது இயலாத ஒன்றாகும். பல நூற்றாண்டுகளாகத் திறமையின்மையிலும், ஊழலிலும், வேண்டுவோர்க்கு வேண்டியதைச் செய்யும் முறையிலும் தோய்ந்து கிடந்த ஒரு நிர்வாகப் பொறியை ஒரு சில ஆண்டுகளில் திருத்தியமைத்தல் என்பது இயலாதவொன்றாகும். முதலாம் சார் நிக்கலோஸ் நிர்வாகத்தினைச் செப்பனிட முயன்றார். ஆயினும், அதில் வெற்றிபெற முடியவில்லை.

1825லிருந்து 1855 வரை ஒரு தலைமுறைக் காலம் ஐரோப்பாவிலேயே ஒப்பற்ற வல்லரசராய்த் திகழ்ந்தார். ஐரோப்பாவில் இவரே, வல்லாட்சியின் மாபெரும் தூண் என்று கருதப்பட்டார். நிர்வாகத்திலும், வாழ்க்கை முறையிலும் இவர் ரஷ்ய முறையினையே பின்பற்றினர். மகா பீட்டரும், இரண்டாவது காதரைனும் மிகப் போற்றிப் பின்பற்றிய கொள்கைகளனைத்தையும் இவர் முற்றிலும் மாற்றினர். தமது நாட்டில் மேலைநாட்டு நாகரிகம்,

பண்பாடு, கலை, இலக்கியம் போன்றவை பரவுவதையும், பின்பற்றப் படுவதையும் இவர் முற்றிலும் வெறுத்தார். ரஷ்ய நாகரிகம், பண்பாடு, மொழி, கலை, இலக்கியம் போன்றவற்றையே இவர் பெரிதும் போற்றினர். ரஷ்யா, ரஷ்ய முறையினைப் பின்பற்றி முன்னேறுதலே தக்கதென இவர் கருதினர்.

**அடக்குமுறையாட்சி**

இவரது முப்பதாண்டு கால ஆட்சியில் தொடர்ந்து அடக்கு முறையே பின்பற்றப்பட்டது. கெட்டல்பீ என்ற வல்லுநர் இவரது ஆட்சிபற்றி குறிப்பிடுகையில் நிக்கலொஸின் முப்பதாண்டுக் கால ஆட்சியும் வல்லாட்சியைப் பாதுகாக்கவே செலவிடப்பட்டது என்பர்.[1] மக்களது முற்போக்கு இயக்கங்களை நசுக்குவதிலேயே இம்மன்னர் கண்ணுங் கருத்துமாய் இருந்தார். மக்களுக்கு உரிமை வழங்க இவர் ஒருபோதும் உடன்பட்டதில்லை. இரகசியப் போலீஸ் படையும், தணிக்கை முறையும் இவர் கையாண்ட இரண்டு அடக்கு முறைக் கருவிகளாகும். இரகசியப் போலீஸ் மூன்றும் பிரிவு (Third Section) அடக்குமுறையில் தீவிரமாக ஈடுபடுத்தப்பட்டது. அப்படைக்கு அனைத்து அதிகாரங்களும் வழங்கப்பட்டன. அது ஐயுற்றோரை விசாரணையின்றிக் கைது செய்யவும், சிறையி லடைக்கவும், நாடுகடத்தவும், தூக்கிலிடவும் அதிகாரம் பெற்றி ருந்தது. இதன் மிக முக்கிய நோக்கம் மறைந்து செயல்படும் இரகசிய இயக்கங்களையறிந்து அவற்றை அழித்தலேயாம். இது பென்கென்ட்ராப் (Benckendorff) என்ற படைத் தலைவரின் தலைமையில் இயங்கியது. அவர் அடக்குமுறையின் சின்னமெனக் கருதப்பட்டார். இம்மூன்றும் பிரிவு எட்டுப் பிரிவுகளாகப் பிரிந்து நாடெங்கும் பரவிக் கிடந்தது. இது அடக்குமுறையில் ஸ்பானிய தண்டனை மன்றங்களையும் (Inquisition) விஞ்சி நின்றது. மக்கள் மிக அஞ்சி வாழ்ந்தனர். இதுதான் உண்மையில் ரஷ்ய வரலாற்றில் இருண்ட காலம்.

மூன்றும் பிரிவு போன்று தணிக்கைக் குழுவும் (The Board of Censarship) அடக்குமுறையின் கருவியாகப் பயன்பட்டது. கவுன்ட் யுவரோவ் என்பார்தான் (Count Uvarov) இதன் தலைவரா யிருந்தார். இக்குழு நாடெங்கும் பரவி அனைத்தையும் கண்காணித்தது. யுவரோவே கல்வியமைச்சராயுமிருந்த காரணத் தால், கல்வித் துறையிலும் அடக்குமுறையே விரவி நின்றது. பேச்சுரிமை, எழுத்துரிமை அனைத்தும் தடை செய்யப்பட்டன. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், செய்தித்தாள்

1 Ketelbey—p. 297.

நிறுவனங்கள் அனைத்தையும் இக்குழு இடையறாது கண்காணித்தது. ரஷ்ய மாணவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று பயில அனுமதிக்கப்படவில்லை. மேலைநாட்டு நூல்கள் யாவும் ரஷ்யாவில் தடை செய்யப்பட்டன. தத்துவம் பாடத் திட்டத்திலிருந்து விலக்கப் பட்டது. இசைப் பண்களைக் கூட இக்குழு தணிக்கை (Musical Notes) செய்யத் தவறவில்லை. இசையையே ஒரு கருவியாகக் கொண்டு புரட்சியாளர்கள் சதி செய்யக்கூடுமென்ற அச்சங் காரணமாக, இசைக் குறிப்புகள் யாவும் தணிக்கை செய்யப் பட்டன. உடற் கூறுபற்றிய நூல்களும் பாலுணர்வினை வெளிப் படுத்துவதாய் அமைதல் கூடாதென வலியுறுத்தப்பட்டது. தரக் குறைவானவையெனக் கருதப்பட்ட அனைத்து நூல்களும் தடை செய்யப்பட்டன. வெளிநாட்டுப் பயணங்களும் தடை செய்யப் பட்டன. வெளிநாட்டினரும் இங்கு வர எளிதாக அனுமதிக்கப் படவில்லை. எங்கும் எதிலும் தணிக்கை முறை காணப்பட்டது.

குற்றவாளிகள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். எளிய குற்றங்களுக்குக்கூட கடுந் தண்டனைகள் வழங்கப்பட்டன. பலர் சைபீரியாவுக்குத் தக்க காரணமின்றியும் அனுப்பப்பட்டனர். 1848 ஆம் ஆண்டு பிப்ரவரிப் புரட்சிக்குப் பின்னர், அடக்குமுறை மேலும் தீவிரப்படுத்தப்பட்டது. தணிக்கையாளர்களைத் தணிக்கை செய்ய வேறு ஒரு தணிக்கைக்குழு நியமிக்கப்பட்டது. 1832லிருந்து 1852 வரையிலான இவ்விருபதாண்டில் 150,000க்கு மேற்பட்டோர் சைபீரியாவுக்கு நாடுகடத்தப்பட்டனர். பல்லாயிரக் கணக்கானோர் சிறையிலடைக்கப்பட்டனர்.[1] ரஷ்யா கொடுந் தண்டனைகளின் பிறப்பிடமாய் மாறியது.

பேச்சுரிமையும், எழுத்துரிமையும் மறுக்கப்பட்ட காரணத் தால், செய்தித்தாள்கள் படிப்போர் தொகை மிகக் குறைந்து காணப்பட்டது. ஹேசன் என்ற வரலாற்று வல்லுநர் ஆய்கையில் பங்குவரி (Subscribers) கட்டிச் செய்தித்தாள்கள் வாங்கியோர் 12000க்கும் மேற்படவில்லையென்பர்.[2] வெளிநாட்டுப் பயணங் களுக்கு வாய்ப்பளிக்கப்படவில்லை. வெளிநாட்டுப் பயணச் சீட்டுகள் பேரரசரின் ஒப்புதலின்றி வழங்கப்படவில்லை. அவ்வாறு வழங்கப் படினும், அவை ஐந்தாண்டுகளுக்கு மட்டுமே வழங்கப்பட்டன. 5 ஆண்டுகளுக்குமேல் வெளிநாடுகளில் தங்குவோர் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். அவர்களின் சொத்துகளும் பறிமுதல் செய்யப்பட்டன. அவ்வாறே வெளிநாட்டினர் ரஷ்யாவில் பயணம்

[1] Hazen—p. 379.

[2] ibid.

செய்வதும் பெரிதும் தடை செய்யப்பட்டது. அப்படி அனுமதிக்கப் பட்டாலும், அவர்கள் பெருஞ் சட்டதிட்டங்களுக்கு உட்படுத்தப் பட்டனர். புரட்சிக் கருத்துகளை அவர்கள் பரப்புகின்றனரோவென ஐயுற்று அவர்களை எப்போதும் கண்காணித்தது. ஒற்றர்கள் அவர்களை இடையறாது கண்காணித்துவந்தனர்.

அடக்குமுறைகளையும் உடைத்தெறிந்து புரட்சிக் கருத்துகள் பரவின. மாஜினி, கொசூத் போன்றோர்களின் கருத்துகள் ரஷ்யா விலும் விரைவாகப் பரவின. உரிமை, சமத்துவம் போன்ற, ஃபிரெஞ்சுக் கருத்துகள் படித்தோர் மனத்தில் ஆழப் பதிந்தன. சோசலிஸமும், அதன் புரட்சித் திட்டங்களும் ரஷ்ய மக்கள் மனத்தில் மாபெரும் நம்பிக்கையை உண்டாக்கின. 1848ல் தோன்றிய பிப்ரவரிப் புரட்சியும் ரஷ்ய மக்கள் மனத்தில் ஒரு புத்துணர்வைத் தோற்றுவித்தது. ஆயினும், கொடுங்கோன்மை, அடக்குமுறை, கொடுந் தண்டனைகள் போன்றவற்றால் அவர்கள் செயலிழந்து காணப்பட்டனர்.

### இவரது சீர்திருத்தங்கள்

கொடுங்கோன்மை நிறைந்த இவரது ஆட்சியிலும் ரஷ்யா சில நன்மைகளைப் பெற்றது. இவர் பண்ணை அடிமை முறையினை விரும்பவில்லை. பண்ணை அடிமை முறைபற்றி ஆராய ஆறு குழுக்களை நியமித்தார். இதன் விளைவாகப் பண்ணை அடிமைகள் விற்பதையும் ஏலத்தில் விடுவதையும் தனது 1842ஆம் ஆண்டின் அரசு ஆணைகள் மூலம் தடைசெய்தார். அவர்கள் விடுதலை பெறவும் அனுமதித்தார். அரசு நிலங்களில் பணியாற்றி வந்த பண்ணை அடிமைகளுக்கெனப் பள்ளிகளும் மருத்துவமனைகளும் நிறுவப் பட்டன. அவர்களது பொருளாதார வாழ்வு மேம்படவில்லை யெனினும், அவர்களது பிரச்சினைகளை அரசர் பரிவுடன் ஆராய்ந்தது பாராட்டப்படவேண்டிய ஒன்றாகும்.

தொழில் துறையிலும் இவர் பணி சிறப்பானது. தொழிற் புரட்சியின் விளைவாகப் புதிய தொழிற்சாலைகள் பல இங்கு நிறுவப் பட்டன. 1804லிருந்ததைவிட, தொழிற்சாலைகள் இவர் காலத்தில் ஏழு மடங்காகப் பெருகின. சர்க்கரை ஆலைகள் பல நிறுவப் பட்டன. புதிய நெசவாலைகள் பல தொடங்கப்பட்டன. இருப்புப் பாதைகளும் போடப்பட்டன. இவர் காலத்தில் 632 மைல்கள் நீளத்திற்கு இருப்புச் சாலைகள் போடப்பட்டன. இது போன்றே உழவுத் துறையிலும் நாடு முன்னேறியது. ஆயினும், பிற ஐரோப்பிய நாடுகளுடன் இது மிகப் பின்னடைந்த நிலையேயாகும்.

**இலக்கியம்**

கலை, இலக்கியத்தைப் பொருத்தவரையில் இவர் காலத்தை "ரஷ்யாவின் அகஸ்டியன் காலம்" என்பர். (The Agustian Age of Russia). அரசியலில் அடக்குமுறையாட்சி நிலவிய காரணத்தால், அறிஞர்கள் அரசியலிலிருந்து விலகி, கலை, இலக்கியம் போன்றவற்றின் வளர்ச்சியில் பெரிதும் நாட்டம் செலுத்தினர். இலக்கியத் துறையில் இவர் காலத்தில் இருவகை அறிஞர்கள் சிறப்புற்று விளங்கினர். அவற்றில் முதல் வகையினர் ஸ்லாவோபில்கள் (Slavopuile) என அழைக்கப்பெற்றனர். இவர்கள் ரஷ்ய நாகரிகத்தினையும், மரபினையும் போற்றி வழிபட்டனர். அவர்கள் ரஷ்ய நாகரிகமே பிற நாகரிகத்திலும் சிறந்தது. ரஷ்ய மக்கள் தங்கள் நாகரிக வழி நின்று ஒழுகலே சிறப்பென்ற கருத்தினர் இவர்கள். ரஷ்ய நாகரிகம், பண்பாட்டினை மேலைநாட்டு நாகரிகம் குலைக்குமென இப்பெருமக்கள் அஞ்சினர். ஃபிரெஞ்சு மொழி, கலை போன்றவற்றை இவர்கள் பெரிதும் தூற்றினர். கோகொல், டாஸ்டோவெஸ்கி, புஷ்கின் போன்றோர் ஸ்லாவோபில்ஸ்களுள் முதன்மையானவர்கள். மற்றொரு சாரார் மேற்கத்தியராவார்கள் (Westerners) இவர்கள் மேலைநாட்டுப் பண்பாட்டினையே பெரிதும் போற்றினர். ரஷ்யா பிற நாடுகளினின்றும் ஒதுங்கி நிற்றலை இவர்கள் வன்மையாகக் கண்டித்தனர். ரஷ்யாவின் தேக்க நிலைக்கு இதுவே தலையாய காரணமென்பது அவர்கள் தம் கூற்று. பகுனின், ஹெர்சன், பெலின்ஸ்கி போன்றோர் மேலை நாகரிகத்தினை ஆதரித்தோர்களுள் சிலர்.

முதலாம் நிக்கலோஸைப் பொருத்தமட்டில் அவர் பிற ஐரோப்பிய நாடுகளின் நாகரிகத்தினை முற்றிலும் வெறுத்தார். தமது நாட்டு இலக்கியத்தையே பெரிதும் போற்றினார். இவர் காலத்தில் தோன்றிய அறிஞர்கள் இவர் காலத்தைச் சிறப்புறச் செய்தனர். எழுத்தாளர்கள் அனைவரும் இவரது தனி வல்லாட்சியினை எதிர்த்தனர். ரஷ்யாவின் முன்னேற்றத்தையே அவர்கள் பெரிதும் வரவேற்றனர். மக்களைப் பெருமளவில் அவர்கள் விழிப்படையவும் செய்தனர்.

**இவரது வெளிநாட்டுக் கொள்கை**

முதலாம் சார் நிக்கலோஸ் மாபெரும் பிற்போக்காளர் என்ற காரணத்தால், அவர் புரட்சி, நாட்டுப்பற்று போன்ற முற்போக்குக் கொள்கைகளின் பகைவராய்த் திகழ்ந்தார். வியன்னா மாநாட்டின் ஏற்பாடுகளே சாலச் சிறந்தவை. அவையே தொடரவேண்டும் என்றும் இவர் கருதினார். 1830ல் போலந்து மக்கள் புரட்சி

செய்தபோது அதனை ஈவு இரக்கமின்றி அடக்கினர். போலந்தையும் இவர் ரஷ்யாவுடன் இணைத்துக்கொண்டார். ரஷ்ய மொழி அங்கு ஆட்சி மொழியாக்கப்பட்டது. ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற பிற்போக்கு நாடுகளுடன் சேர்ந்துகொண்டு புரட்சி இயக்கங்கள் அனைத்தையும் நசுக்கினர். 1848ல் ஐரோப்பா வெங்கும் புரட்சி அனல் வீசியபோது இவர் மட்டும் தனித்து நின்று அதனை அணைக்க முயன்றார். ஐரோப்பிய நாடுகள் பல புரட்சிப் புயலில் சிக்கித் தவித்தபோது, இவரது அடக்குமுறைக் கஞ்சி ரஷ்யா அமைதி வழி நின்றது. 1848ல் ஹங்கேரி புரட்சி செய்தபோது, இவர் அதனைப் பெரிதும் எதிர்த்தார். பெரும் ரஷ்யப் படையொன்றினையனுப்பி அப்புரட்சியினையும் அடக்கினர் இம்மன்னர். கொசூத் (Kossuth) போன்ற தலைவர்கள் தோல்வியுற்று மனந்தளர்ந்து போயினர். 1848ல் ஜெர்மனி புரட்சி செய்தபோது, அதனையும் அடக்கப் போவதாக அச்சுறுத்தினர். பிரஷ்ய அரசர் 4ஆம் பிரடெரிக் வில்லியம் புரட்சியாளர்களிடம் அனுதாபம் காட்டியபோது இவர் அவரை வன்மையாகக் கண்டித்தார். புரட்சிக்கு அடிமையாயிருத்தல் தக்கதன்று என்று இவர் அவருக்கு அறிவுறுத்தினர். ஜெர்மன் புரட்சியும் அடக்கப்பட்டது. 1848ஆம் ஆண்டின் ஜெர்மன் புரட்சி தோல்வியுற்றதற்கு இவரே காரணமாவார். இவருக்கஞ்சி 4ஆம் பிரடெரிக் வில்லியம் 1848ல் புரட்சிக்குத் தலைமையேற்கத் தயங்கியதால், அப்புரட்சி தோல்வியுற்றது. மீண்டும் பழைய ஆட்சி எங்கும் நிறுவப்பட்டது.

### துருக்கிப் பிரச்சினை

இவர் ரஷ்ய ஆதிக்கத்தினை மத்திய ஆசியாவரை பரப்பியதோடு நிறைவுபெறாமல் துருக்கியிலும் அதன் ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பினர். மகா பீட்டரையும், இரண்டாம் காதரைனையும் போன்று இவரும் கருங்கடலில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்ட முனைந்தார். அவர்களைப் போன்றே இம்மன்னரும் நோயாளியான துருக்கியின்மீது தமது ஆதிக்கததினை நிறுவத் துணிந்தார்.

இவர் துருக்கிமீது ஆதிக்கம் செலுத்த முனைந்ததைப் பல ஐரோப்பிய நாடுகள் விரும்பவில்லை. குறிப்பாக இவரை இங்கிலாந்து வன்மையாக எதிர்த்தது. ரஷ்ய ஆதிக்கத்தினை மத்தியதரைக் கடல் பகுதியிலிருந்து அகற்றவே இங்கிலாந்து பெரிதும் விரும்பியது. ஐரோப்பாவில் வல்லரசுச் சமநிலை நிலைநாட்டப்பட வேண்டுமென இங்கிலாந்து கூறியது. பால்கன் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் வளர்வதையும் இங்கிலாந்து எதிர்த்தது. இங்கிலாந்துடன் ஆஸ்திரியா, ஃபிரான்சு போன்ற நாடுகளும் சேர்ந்துகொண்டு ரஷ்யாவைக் கண்டித்தன. அவை ஒன்றுகூடி ரஷ்யாவை

முறியடிக்கவும் விரும்பின. இங்கிலாந்து, ஃபிரான்சு போன்ற நாடுகள் தன்னை எதிர்த்தபோதும் துருக்கிமீது தமது ஆதிக்கத்தை நிறுவும் முயற்சியினை முதலாம் சார் நிக்கலோஸ் கைவிடவில்லை.

**கிரேக்க விடுதலைப் போர்**

1820லிருந்து துருக்கியை எதிர்த்துக் கிரேக்கர்கள் புரட்சி செய்துவந்தனர். அவர்களது விடுதலைப் போராட்டத்தைப் பல ஐரோப்பிய நாடுகள் பரிவுடன் நோக்கின. முதலாம் சார் நிக்கலோஸ் கிரேக்கர்களைப் பெரிதும் ஆதரித்தார். முதலாம் சார் அலெக்ஸாந்தர் ஐரோப்பியக் கூட்டணிகளுக்கு அஞ்சி கிரேக்கர்களை ஆதரிக்கவில்லை. அவர்க்குப்பின் அரியணையேறிய முதலாம் சார் நிக்கலோஸ் இக்கூட்டணி நாடுகளைப்பற்றி மிகுதியும் கவலைப்படவில்லை. அவர்களுக்குத் துணைபுரியத் தமது கடற்படையொன்றினையும் அனுப்பிவைத்தார். கிரேக்கத்தில் ரஷ்ய ஆதிக்கம் நிறுவப்படுதலை விரும்பாத இங்கிலாந்தும் ஃபிரான்சும் தங்கள் படைகளையும் அங்கு அனுப்பி வைத்தன. நெவெரினோப் போர்க்களத்தில் ரஷ்யா, இங்கிலாந்து, ஃபிரான்சு இவற்றின் கூட்டுப் படைகள் துருக்கிப் படைகளை முற்றிலும் முறியடித்தன. கானிங் பிரபுவின் மறைவுக்குப் பின்னர், இங்கிலாந்து அப்போரிலிருந்து விலகிக்கொண்டது. அதைக் கண்ணுற்ற ஃபிரான்சும் தனது படைகளை அங்கிருந்து திரும்ப அழைத்துக்கொண்டது. ஆயினும், நிக்கலோஸ் தமது உதவியைத் தொடர்ந்தார். ரஷ்யாவின் வலிமையைக் கண்டஞ்சிய துருக்கியும் கிரேக்கத்திற்கு விடுதலை தர இசைந்தது. 1829இல் ஆட்ரியாநோபிள் உடன்பாட்டின்படி கிரேக்கத்துக்கு விடுதலையும் வழங்கப்பட்டது. இவ்வுடன்பாடு ரஷ்யாவுக்குப் பெரும் நன்மையைத் தந்தது. பகுதிகள் பலவற்றைப் பெற்றதோடு, ரஷ்யா, துருக்கியிடமிருந்து பல வணிக உரிமைகளையும் பெற்றது. இதனை விரும்பாத இங்கிலாந்து போன்ற பிற ஐரோப்பிய நாடுகள் அவ்வுடன்பாட்டினைத் திருத்த முயன்றன. அந்நாடுகளின் தலையீட்டால் இவ்வுடன்பாட்டில் பல திருத்தங்கள் செய்யப்பட்டன. ஆயினும், பால்கன் நாடுகளில் ரஷ்யாவின் செல்வாக்கு மிகுந்ததை அவற்றால் தடுக்க முடியவில்லை. பால்கன் நாடுகள் தங்களது துணைக்கு ரஷ்யாவையே நம்பத் தொடங்கின. இது ரஷ்யாவுக்கு மாபெரும் வெற்றியாகும். ரஷ்யாவின் செல்வாக்கு மிகவும் உயர்ந்தது.

**எகிப்து–முகமது அலி**

கிரேக்க விடுதலைப் போர்க்குப் பின்னர், துருக்கியச் சுல்தானுக்கும், முகமது அலிக்கும், போர் தொடங்கியது. கிரேக்க

விடுதலைப் போரின்போது, முகமது அலியைத் தமக்குத் துணை புரியுமாறு வேண்டினார் துருக்கிய சுல்தான். அவ்வுதவிக்காக அவருக்குப் பல பகுதிகளை வழங்குவதாயும் சுல்தான் வாக்களித்தார். அப்போருக்குப் பின்னர், கிரிட் (Crete) என்ற பகுதியை மட்டும் இழப்பீடாக முகமது அலிக்கு வழங்கினார் சுல்தான். இதனால் வெறுப்படைந்த முகமது அலி, துருக்கியின் பகுதிகளான சிரியா, ஆசியா மைனர் போன்ற பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டார். முகமது அலி கான்ஸ்டான்டிநோபிளையும் கைப்பற்றும் முயற்சியிலீடுபட்டார். இதனால். அச்சம் மிகுந்த துருக்கிய சுல்தான் ரஷ்யாவின் துணையை நாடினார். 1833ல் இவ்விரு நாடுகளுக்குமிடையே உன்கியர் ஸ்கெலெஸ்ஸி என்ற உடன்பாடும் ஏற்பட்டது. இவ்வுடன்பாட்டின்படி துருக்கி ரஷ்யாவின் பாதுகாப்பின்கீழ் வந்தது. இனி ஏதேனும் போரெனில் ரஷ்யா துருக்கிக்கு உதவுமெனவும், போர்க்காலங்களில் டார்டனெல்ஸ் பகுதியில் பிறநாட்டுப் போர்க் கலங்கள் அனுமதிக்கப்படமாட்டா எனவும் அவ்வுடன்பாடு கூறியது. இதனால், ரஷ்யாவின் செல்வாக்கு கருங்கடல் பகுதிகளில் மிகவும் ஓங்கியது. ரஷ்யாவுக்கு இதனால், மத்தியதரைக் கடலுக்கான வழியும் திறக்கப்பட்டது போன்றதானது. இவ்வுடன்பாட்டினைக் கேள்வியுற்ற இங்கிலாந்து பெரிதும் ஆத்திரமுற்றது. அவ்வுடன்பாட்டினைத் திருத்தவும் இங்கிலாந்து விரும்பியது.

முகமது அலி, கைப்பற்றிய தமது பகுதிகளான சிரியாவையும், ஆசியா மைனரையும் மீண்டும் பெற 1839ல் துருக்கிய சுல்தான் முகமது அலியை எதிர்த்துப் போர் தொடுத்தார். ஆனால், சுல்தான் அப்போரில் முற்றிலும் முறியடிக்கப்பட்டார். இதனையறிந்து இங்கிலாந்து 1840ல் நால்வர் கூட்டணியொன்றினை அமைத்தது. பிரிட்டன், ரஷ்யா, ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகிய நான்கு நாடுகளும் இதில் சேர்ந்தன. முகமது அலிக்கு உதவ நினைத்த ஃபிரான்சு இக்கூட்டணியில் சேரவில்லை. இக்கூட்டணிப் படைகள் சிரியா, மெசபடோமியா போன்ற பகுதிகளைக் கைப்பற்றின. முகமது அலியை ஆதரிக்கவேண்டுமென்று கூறிய ஃபிரெஞ்சு தலைமையமைச்சரான தையர் பதவியிலிருந்து நீக்கப்பட்டார் (லூயி பிலிப்பால்). முகமது அலி தோல்வியுற்று 1814ல் இலண்டன் உடன்பாட்டிலும் கையொப்பமிட்டார். இவ்வுடன்பாட்டின்படி எகிப்து சுயாட்சி பெற்றது. முகமது அலியின் வாரிசுகள் அதனை ஆள்வரெனவும் முடிவு செய்யப்பட்டது. சிரியாவும், மெசபடோமியாவும் மீண்டும் துருக்கிக்கு வழங்கப்பட்டன. இவ்வுடன்பாட்டிற்குப் பின்னர், கிழக்குப் பிரச்சினையில் இங்கிலாந்தின் செல்வாக்கே மிகுந்து காணப்பட்டது. லண்டன் உடன்பாட்டிற்குப் பின்னர், இங்கிலாந்து ஃபிரான்சின் நட்பையும் பெற முனைந்தது. ஃபிரான்சுடன் அது

"ஜலசந்தி ஒப்பந்தம்" (Straits Convention) செய்துகொண்டது. இவ்வுடன்பாட்டின்படி எந்நாட்டுப் போர்க் கலங்களும் டார்டெனெல்ஸ், டாஸ்பரஸ் ஆகிய ஜலசந்திகளில் நுழைதல் கூடாது என அறிவிக்கப்பட்டது. 1814ல் இவ்வுடன்பாட்டினைப் பிரிட்டன், ரஷ்யா, ஃபிரான்சு, ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற நாடுகள் ஏற்றுக்கொண்டன. இதனால் ரஷ்ய ஆதிக்கம் பால்கனில் பெரிதும் குறைந்துபோனது. இதனால் முதலாம் சார் நிக்கலொஸ் பெரிதும் ஏமாற்றமடைந்தார்.

இங்கிலாந்தின் துணையின்றிக் கிழக்குப் பிரச்சினைக்குத் தீர்வு காண இயலாது என்பதை சார் மன்னர் தெளிவாக உணர்ந்தார். கடலாதிக்கமிக்க அந்நாட்டினை எளிதில் தோற்கடிக்க முடியாது என்பதை இவர் திட்டவட்டமாய் உணர்ந்தார். நட்பு பாராட்டிக் கிழக்குப் பிரச்சினையைத் தீர்த்துக்கொள்ளுதலே விவேகமெனக் கருதித் தமது ஏமாற்றத்தையும் மறந்து அந்நாட்டுடன் நட்பு பாராட்டினார் முதலாம் நிக்கலொஸ். கி.பி. 1814ல் அந்நாட்டிற்கு அரசியற் பயணமொன்றினையும் மேற்கொண்டார். அப்போது துருக்கியைத் துண்டாடிக்கொள்ளும் தமது திட்டத்தினையும் அங்கு வெளியிட்டார். எகிப்து, கிரீட் போன்ற பகுதிகளை இங்கிலாந்து வைத்துக்கொள்ளலாமெனவும், பால்கனைத் தான் வைத்துக்கொள்வதாயும், இவர் அறிவித்தார். துருக்கிப் பேரரசில் வாழும் கிருத்துவக் குடிகள்மீது தனது ஆதிக்கத்தினை இங்கிலாந்து ஏற்றுக்கொள்ள வேண்டுமெனவும் அத்திட்டத்தில் கூறினார். இங்கிலாந்து சார் மன்னரின் திட்டத்தினை ஏற்கவுமில்லை, அதேபோன்று அதனை மறுக்கவுமில்லை. தமது திட்டத்தினை இங்கிலாந்து ஏற்றுக்கொண்டதாக இவர் தவறாகப் புரிந்துகொண்டார். இது அவர் துருக்கியப் பிரச்சினையில் மேலும் தலையிட வாய்ப்பளித்தது.

**கிரிமியப் போர்**

தமது இங்கிலாந்து பயணத்திற்குப் பின்னர், அது தன்னை முற்றிலும் ஆதரிக்குமென நிக்கலொஸ் நம்பினார். துருக்கியப் பேரரசினைப் பிரித்துக்கொள்வதையும் அது ஏற்குமெனவும் இவர் எண்ணினார். அந்நோயாளியின்மீது போர் தொடுத்து வெற்றி பெற்றால் இங்கிலாந்து மிக்க மகிழ்ச்சியோடு தன்னை ஆதரிக்குமெனவும் இவர் கருதினார். அந்தத் துணிவில் துருக்கியப் பேரரசில் வாழும் கிருத்துவக் குடிகளைப் பாதுகாக்கும் பொறுப்பினைத் தமக்கு நல்குமாறு இவர் துருக்கியை வேண்டினார். அவரது வேண்டுகோளைத் துருக்கிய சுல்தானை முகமது ஏற்க மறுத்தார். இதனால் பெரிதும் ஆத்திரமுற்ற சார் மன்னர், துருக்கியின் பகுதிகளான

மால்டேவியா, வாலச்சியாமீது போர்தொடுத்து அவற்றைக் கைப்பற்றிக்கொண்டார். அதனால், துருக்கியும் போரிலிறங்கும் நிலைக்கு வந்தது. இங்கிலாந்து துருக்கியை ஆதரிக்குமென நிக்கலொஸ் எதிர்பார்க்கவில்லை. பிரஷ்யா நீங்கலாக அனைத்து ஐரோப்பிய நாடுகளும் தன்னை எதிர்க்குமென இவர் சற்றும் எதிர்பார்க்கவில்லை. சார் மன்னரின் கொள்கையில் தவறேதுமில்லை என்பதை ஆங்கில வரலாற்று வல்லுநர்கள், கிரேண்ட், டெம்பர்லி (Grant and Temperley) என்பவர்களும் ஏற்றுக் கொள்கின்றனர். ஆயினும், அவர் இங்கிலாந்து தன்னை ஆதரிக்குமென எதிர்பார்த்தது தவறாகும் என்பர் அவ்வரலாற்று வல்லுநர்கள். பால்மர்ஸ்டன் என்பார்தான் அப்போது இங்கிலாந்தின் வெளித்துறை அமைச்சராயிருந்தவர். அவர் ரஷ்ய ஆதிக்கத்தினை முற்றும் வெறுத்தார். ரஷ்ய ஆதிக்கம் தமது வணிக நலனை முற்றிலும் பாதிக்குமென இவர் அஞ்சினார். இங்கிலாந்து மக்களும் சார் மன்னரின் ஆதிக்கப் போக்கினையும், அவரது பிற்போக்குத் தன்மையினையும் விரும்பவில்லை. எப்போதும் தன்னலத்தையே பேணும் இங்கிலாந்தினைச் சார் மன்னர் புரிந்து கொள்ளாதது அவரது தவறேயாகும்.

ஆஸ்திரியப் பேரரசும் முதலாம் நிக்கலொஸின் ஆதிக்கப் போக்கினைப் பெரிதும் எதிர்த்தது. பால்கன் பகுதியில் ரஷ்யா விரைவாக வளர்ந்துவருவதைக் கண்டு அது பெரிதும் அஞ்சியது. "இங்கிலாந்தும் நானும் ஒப்புக்கொண்டால், நான் பிறரைப்பற்றிச் சிறிதும் கவலைப்படேன்" என்ற அவரது கூற்று பிற நாடுகளுக்கு ஓர் அறைகூவலாயமைந்தது. 1853ல் மால்டேவியாவையும் வாலச்சியாவையும் ரஷ்யா கைப்பற்றிக்கொண்டதைக் கண்டு, ஆஸ்திரியா மிகவும் அஞ்சியது. துருக்கியப் பேரரசு தொடர்ந்திருப்பதே தனது நலனுக்கு நல்லதென அது நினைத்தது. அதனால், அது இங்கிலாந்து போன்ற நாடுகளுடன் ஒன்றுகூடி ரஷ்யாவை எதிர்த்தது.

முதலாம் நிக்கலொஸை ஃபிரான்சும் ஆதரிக்கத் தயங்கியது. 1852ல் மூன்றும் நெப்போலியன் ஃபிரெஞ்சுப் பேரரசராகப் பதவியேற்றபோது, அவரை நிக்கலொஸ் மதிக்க மறந்தார். அவரை அரசரென அழைக்கவும் இவர் ஒருப்படவில்லை. சார் மன்னரின் இப்போக்கைக் கண்டு மூன்றும் நெப்போலியன் பெரிதும் ஆத்திரமடைந்தார். கிரிமியப் போர் ஏற்பட்டதையும் அவர் வரவேற்றார். அதில் பங்கேற்று, வெற்றிபெற்று மேலும் புகழடைய அவர் விரும்பினார். ரஷ்யாவைத் தோற்கடித்து, தனது நாடு இழந்த புகழை மீண்டும் பெற இவர் முடிவு செய்தார். ஒரு

பேரரசர் என்ற முறையில் அனைத்து நாடுகளின் ஒத்துழைப்பை நிக்கலோஸ் பெற்றிருக்க வேண்டும். மாறாக அனைத்து நாடுகளுடன் பகைமையை இவர் பாராட்டினார். தனக்கு ஆதரவின்மையை உணர்ந்து இவர் இப்போரைத் தவிர்த்திருத்தல் வேண்டும். ஆயினும், ஆணவம் மிக்க வல்லாட்சியாளரான இவர் அமைதியில் நாட்டம் செலுத்தவில்லை.

இத்தாலியும் ஃபிரான்சையே பெரிதும் ஆதரித்தது. அதன் ஐக்கியத்திற்கு இங்கிலாந்து ஃபிரான்சு போன்ற நாடுகளின் நட்பு தேவைப்பட்டது. அந்நாட்டின் புரட்சி இயக்கங்களை அவை பரிவோடு போற்றின. ஆணவப் போக்குமிக்க சார் மன்னர், இத்தாலியப் புரட்சிகளையும், அம்மக்களின் உளப்பாங்கையும் ஒருபோதும் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. இத்தாலியும் இவரைப் பெரிதும் எதிர்த்தது. கிரிமியப் போர் ஏற்பட்டபோது இது ரஷ்யாவை எதிர்த்துப் போரிட்டதில் வியப்பில்லை.

கிரிமியப் போரில் துருக்கியை ஆதரித்து இங்கிலாந்து, ஃபிரான்சு, இத்தாலி போன்ற நாடுகள் போரிட்டன. ரஷ்யா தனித்து நிறுத்தப்பட்டது. இதற்கு முதலாம் சார் நிக்கலொஸின் கொள்கைகளே காரணமாகும். ரஷ்யா இப்போரில் முற்றிலும் தோற்கடிக்கப்படுவதற்கு முன்னர் இவர் காலமானார். 1856ல் ரஷ்யா முற்றிலும் தோற்கடிக்கப்பட்டது. அதன்பின்னர், ஏற்பட்ட பாரிசு உடன்பாட்டினால் ரஷ்யா கருங்கடலில் தனது ஆதிக்கத்தினை முற்றிலும் இழந்தது. அத்துடன் பெசரேபியாவையும் அது இழந்தது. இப்போரில் 250,000க்கும் மேற்பட்ட ரஷ்ய வீரர்கள் உயிரிழந்தனர்.[1] அதற்காக ரஷ்யா பெரும் பொருளும் செலவு செய்தது. அவை யாவும் விழலுக்கிறைத்த நீராயின. ரஷ்ய ஆதிக்கம் இதில் முற்றிலும் குன்றியது.

லிப்சன் என்ற ஐரோப்பிய வரலாற்று வல்லுநர் முதலாம் நிக்கலொஸை இரண்டாம் பிலிப்புடன் ஒப்பிடுகிறார். பிலிப் போன்று இவரும் தான் வாழ்ந்த காலத்திற்குப் பொருத்தமற்றவர். தான் வாழ்ந்த காலத்தின் போக்கை இவர் முற்றிலும் உணரவில்லை. தான் வாழ்ந்த காலத்திற்கு முற்றிலும் ஒவ்வாத கொள்கைகளுக்காக இவர் தொடர்ந்து போரிட்டார். 16ஆம் நூற்றாண்டில் ஸ்பானியப் பேரரசு சமயச் சீர்திருத்தத்திற்குப் பெரும் பகையாய்த் திகழ்ந்ததுபோல, இவர் மக்களாட்சியின் கடும் பகைவராய்த் திகழ்ந்தார். இவரது ஆட்சியில் ரஷ்ய முன்னேற்றம் பெரிதும் தடைப்பட்டதில் வியப்பேதுமில்லை.

[1] Hazen—p. 580.

கிரிமியப் போர் ரஷ்ய வரலாற்றில் மிக முக்கியமான போராகும். அதன் விளைவாக ரஷ்யாவின் திறமையின்மை நன்கு வெளிப்பட்டது. ரஷ்யா தனது குறைகளையுணர்ந்து அவற்றைப் போக்க வேண்டியதன் அவசியத்தினை நன்குணர்ந்தது. முதலாம் நிக்கலொலஸுக்குப் பின்னர், பட்டத்துக்கு வந்த இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் காலத்தில் ரஷ்யா பெரிதும் சீர்படுவதற்கு இப்போரே காரணமானது.

## இரண்டாம் அலெக்ஸாந்தர் (1855-1881)

1855ல் முதலாம் சார் நிக்கலொலஸின் மறைவிற்குப் பின்னர், அவர்தம் அருமை மைந்தர் இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் அரியணையேறினர். இவர் பட்டத்துக்கு வந்தபோது, இவருக்கு வயது 37 இவர் தம்முடைய தந்தைக்கு முற்றிலும் மாறுபட்டவர். இளவயது முதற்கொண்டே ஆட்சிபுரிதற்கு வேண்டும் அனைத்துப் பயிற்சிகளும் பெற்று, நல்லியல்புகள் அனைத்தும் மிக்கவராய் இவர் விளங்கினர். இவர் வெளிப்படையாகப் பேசும் பண்பினர். முற்போக்கு உள்ளம் கொண்டவர். தமது தாயகத்தின்மீது ஆழ்ந்த பற்று கொண்டவர்.

1855ல் நடந்த கிரிமியப் போரில் தமது நாடு தோல்வியுற்றதை எண்ணி இவர் பெரிதும் வருந்தினர். நாட்டின் திறமையின்மையையும் இவர் நன்குணர்ந்தார். நாட்டின் குறைகளுக்கெல்லாம் காரணம், உள்நாட்டில் நிலவிய சமூக, பொருளாதார அரசியல் சீர்கேடுகளே என்பதை இவர் நன்கு தெளிந்தார். கிரிமியப் போர்க்கு நாம் நன்றி செலுத்தவேண்டுமென இவர் விளம்பியது இவரது உளப்பாங்கைத் தெள்ளென விளக்கும். நாட்டிற்குச் சீர்திருத்தங்கள் தேவைப்படுவதைத் தெளிவாக உணர்ந்த இம்மன்னர், அம்முயற்சியில் பெரிதும் ஈடுபட்டார். மக்களின் குறைகளைப் போக்குவதே தமது தலையாய பணியென எண்ணி மக்களின் குறைகளைப் போக்கும் முயற்சியில் இவர் பெரிதும் ஈடுபட்டார்.

## இவரது சீர்திருத்தங்கள்

இவர் பதவிக்கு வந்தவுடன் செய்தித் தாள்கள் தணிக்கை முறைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார். பல்கலைக் கழகங்கள்மீது சுமத்தப்பட்டிருந்த அனைத்துக் கட்டுப்பாடுகளையும் நீக்கினர். வெளிநாட்டுப் பயணங்கள் மீதிருந்த அனைத்துக் கட்டுப்பாடுகளையும் இவர் தளர்த்தினர். அரசியல் குற்றவாளிகள் அனைவரும் விடுவிக்கப்பட்டனர். 30 ஆண்டுகளுக்கு முன்னர் அவர்

தந்தையால் சிறை செய்யப்பட்டுச் சிறையில் வாடித் துன்புற்றோர் அனைவரும் விடுதலை பெற்றனர். சட்டங்கள் பல இயற்றி, இவர் அடக்குமுறை ஆட்சியின் கொடுமையிலிருந்து மக்களைக் காப்பாற்றினர்.

உழவுத் துறையிலும், தொழில் துறையிலும்கூட இவர் பல சீர்திருத்தங்களைப் புகுத்தினர். புதிய தொழிற்சாலைகள் பலவற்றை இவர் ரஷ்யாவில் நிறுவினர். தொழில், வணிக முன்னேற்றத்திற்கு நல்ல சாலைகள் வேண்டுமென்பதை நன்குணர்ந்து நாடெங்கும் புதிய நல்ல சாலைகள் அமைக்கப்பட்டன. மேலை நாடுகளில் போக்குவரத்துத் துறையில் புரட்சியினை நிகழ்த்திய புகைவண்டிகளையும் தமது நாட்டில் ஊக்குவித்தார். இருப்புச் சாலைகள் மிகவும் அமைக்கப்பட்டன. அதன் விளைவாகப் பொருளாதார முன்னேற்றம் மேம்பட்டது.

**அடிமைகள் விடுதலை**

முதலாம் சார் அலெக்ஸாந்தரின் சீர்திருத்தங்களில் தலையானது அவர் அடிமைகளுக்கு வழங்கிய விடுதலையேயாம். ஆதலின் ரஷ்ய மக்கள் அவரை "விடுதலை நல்கியவர்" (The Liberator) எனப் போற்றுகின்றனர்.

அவரது விடுதலைச் சட்டங்கள் எவ்வளவு சிறப்பானவை என்பதை அறிய நாம் அக்கால வாழ்வு நிலையினையறிதல் வேண்டும். உழவு நிலங்களின் மொத்தப் பரப்பில் பத்தில் ஒன்பது (9/10) அரசரிடமும், அவரது உறவினர்களிடமும், உயர்குடியினரிடமுமே இருந்தன. ரஷ்ய நிலப்பரப்பின் பெரும்பகுதியும் 1,40,000 நிலப்பிரபுக்களிடமே இருந்தன.[1] உழவு நிலங்களனைத்தும் மாபெரும் பண்ணைகளாகவே இருந்தன. அனைத்து நிலங்களும் மிகச் சிறுபான்மையினரான உயர்குடி மக்களிடமே இருந்தன. அங்குள்ள அனைத்துப் பண்ணைகளும் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒரு பிரிவு நிலப்பிரபுக்களுடைய சொந்த மேற்பார்வையிலிருந்தது. அது நிலப் பிரபுக்களின் சொந்த மேற்பார்வையிலேயே உழுது பயிரிடப்பட்டது. மற்றொரு பகுதி பண்ணை அடிமைகள் வசமிருந்தது. இவ்வடிமைகள் நிலப் பிரபுக்களின் சார்பாக அந்நிலங்களை உழுது பயிரிட்டனர். இந்தப் பண்ணை அடிமைகள் பெரும்பாலும் சிற்றூர்களிலே வாழ்ந்தனர். அந்நிலங்கள் "மிர்" (Mir) என்று அழைக்கப்பட்ட ஊர் மன்றங்களின் பாதுகாப்பிலிருந்தன இம்மன்றங்கள் அந்நிலங்க[illegible] தகாத்ததோ[illegible]

1 Hazen—P. 581.

செல்வர்களுக்கு நிலவரியினையும் வசூலித்துத் தந்தன. இம்மன்றங்களின் ஒரு பிரிவு அரசரது பண்ணைகளையும், மற்றொரு பிரிவு பிரபுக்களின் நிலங்களையும் பராமரித்தன.

ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் பல நாடுகள் அடிமை முறையினை அகற்றிவிட்டன. ஆயினும், ரஷ்யாவில் பண்ணை அடிமை முறை அகற்றப்படவில்லை. பண்ணை அடிமை முறையே அங்குச் சமூக பொருளாதார வாழ்வின் அடிப்படையாக இருந்தது. ஹேசன் என்ற வரலாற்றியலறிஞர் ரஷ்யாவில் அப்போது மொத்தம் 5 கோடி பண்ணை அடிமைகள் இருந்தனரென்றும், அவர்களுள் சுமார் 2 கோடி 30 லட்சம் பேர்கள் அரசுப் பண்ணைகளிலும், சுமார் 2 கோடி 30 லட்சம் பண்ணை அடிமைகள் செல்வர்களின் பண்ணைகளிலும் பயிரிட்டனரென்றும், மீதமுள்ள சுமார் 30 லட்சத்துக்கும் மேற்பட்ட பண்ணை அடிமைகள் உயர்குடியினரிடம் பணியாளர்களாக இருந்தனர் எனவும் கணக்கிட்டுக் கூறியுள்ளார்.[1]

பண்ணை அடிமைகள் தங்களுக்கு வழங்கப்பட்ட நிலங்களில் உழுது பயிரிட்டு வரி கொடுத்தது போக மீதியில் வாழ்ந்தனர். தங்களுக்கு வழங்கப்பட்ட நிலங்களை உழுததுடன் அவர்கள் தங்களது பிரபுக்களின் நிலங்களிலும் வாரத்திற்கு 2 அல்லது 3 நாள்கள் இலவசமாக வேலை செய்தனர். அவர்கள் நிலத்துடன் கூடிய அடிமைகள். அவர்கள் நிலத்துடன் விற்கவும் வாங்கவும் பட்டனர். அவர்களுக்குக் கொடுந் தண்டனைகள் வழங்கவும் பிரபுக்களுக்கு உரிமையிருந்தது. முதலாம் சார் அலெக்ஸாந்தரும், முதலாம நிக்கலொஸும் அவர்கள் முன்னேறப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டாலும், அவர்களது நிலையில் பெரும் மாறுதலொன்றும் ஏற்படவில்லை. கடுந் தண்டனைகள் அவர்களுக்கு வழங்கக்கூடாதென்ற சட்டமிருந்தும், அவர்கள் கொடுந் தண்டனைகள் பலவற்றுக்கு உட்படுத்தப்பட்டனர். மிகவும் அடங்காத தன்மைமிக்க பண்ணை அடிமைகள் இராணுவத்தில் சேர்க்கப்பட்டனர். பண்ணை அடிமைகள் பலர் சைபீரியாவுக்கும் அனுப்பப்பட்டனர். நிலத்தில் அவர்களுக்கு எத்தகைய உரிமையுமில்லை. விலங்குகள் போன்று அவர்கள் வாழ்ந்தனர். பண்ணை அடிமைகளும் கால்நடைகளுடன் ஒரே கூரையில் வாழ்ந்தனர். பலவிடங்களில் தக்க உறைவிடங்களில்லாத காரணத்தால் அவர்கள் செல்வர்களின் மாளிகைகளின் ஒதுக்குப்புறங்களிலும் வாழ்ந்தனர். உண்ண உணவும், உடுக்கப் போதுமான உடையுமின்றி அவர்கள் பெருந்துயரப்பட்டனர். அவர்களுக்கு நிலையான

[1] Hazen— p. 582.

வாழ்வுமில்லை. பல சமயங்களில் அவர்கள் விற்கப்பட்ட காரணத்தால், தங்களுடைய குடும்பத்தைவிட்டுப் பிரிந்துபோயினர். பல சமயங்களில் அவர்களுடைய குடும்பம் முழுவதுமே ஏலத்தில் விற்கப்பட்டது. அவர்களின் சிறு குழந்தைகள்கூட உரிமையோடு இயங்க முடியவில்லை அச்சிறு குழவிகளும்கூட பல சமயங்களில் கடுமையான வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டனர். மக்கள் தொகையில் பெரும்பாலோர் அடிமைகளாக இருந்த காரணத்தால், ரஷ்யா அனைத்துத் துறைகளிலும் பின்தங்கிக் கிடந்தது.

தனிப்பட்ட செல்வர்களிடம் பணியாற்றிய அடிமைகளைவிட, அரசுப்பண்ணைகளில் பணிசெய்துவந்த அடிமைகள் பொருளாதார வாழ்வில் சற்று மேம்பட்டு விளங்கினர். ஒரு தொகையினை நிலவரியாகச் செலுத்திய அவர்கள் நடைமுறையில் அந்நிலங்களின் உரிமையாளர்களைப்போன்றே திகழ்ந்தனர். பிற அடிமைகளைவிட, அவர்கள் குறைந்த நிலவரியே செலுத்தினர். 1859ல் பலருக்கு விடுதலையும் வழங்கப்பட்டது. செல்வர்களின் இல்லங்களில் பணியாற்றிய அடிமைகளுக்கு விடுதலை வழங்குவது எளிதாயிருந்தது. ஆயினும், பெரும் செல்வர்களின் பண்ணைகளில் வேலை செய்துவந்த அடிமைகளை விடுவிப்பதில் சிக்கலிருந்தது. ஆயினும், சீர்திருத்தங்களிலும், அடிமைகள் நலனிலும் நாட்டம் கொண்ட இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் இவ்வடிமை முறையினை அகற்ற உறுதிபூண்டார். இவ்வடிமைகளும் தங்கள் விடுதலைக்காகக் கலகம் செய்யத் தலைப்பட்டனர். அவர்களின் கலகங்களால சீர்திருத்தங்கள் இன்றியமையாதவை என அரசர்க்கு நன்கு புலப்பட்டது. அடிமை முறையும், மாறிவரும் சமுதாய, பொருளாதார, அரசியல் நிலைகளுக்கு ஏற்றதாயில்லை. அதனால், பொருளாதார வளர்ச்சி குன்றியதோடு, உழவு முன்னேற்றமும் பெரிதும் தடைப்பட்டது. நவீன முறைகளை உழவுத் துறையில் புகுத்துதல் அரிதாயிற்று. உணவு உற்பத்தியில உழவு நாடான ரஷ்யா மிகவும் பின்தங்கி நின்றது. பண்ணை அடிமைகளின் செயல் திறனும் பிற உழைப்பாளிகளோடு ஒப்பிடுகையில் மிகக் குறைந்தே காணப்பட்டது. அதற்குக் காரணம், அவர்களது ஏழைமையும் அறியாமையுமேயாம் என்பதை அறிஞர்கள் பலர் சுட்டிக் காட்டினர். பண்ணை அடிமை முறையினை அகற்றி அவர்களுக்குப் புதுவாழ்வு அளிக்க வேண்டுமெனவும் அறிஞர்கள் வலியுறுத்தினர். அரசரும் அதனை நன்குணர்ந்து அவர்களுக்கு விடுதலை வழங்கவே விரும்பினர். சீர்திருத்தங்கள் மிகத் தேவைப்படும் காலத்தில் நாம் வாழ்கிறோம். அவை மேல்மட்டத்திலிருந்து வரவில்லையெனில், கீழ்மட்டத்திலிருந்து வெளிப்படும். அவை மேல்மட்டத்திலிருந்து வருவதுதான் செல்வர்களுக்கு

நலமாக அமையும். இதனைச் செல்வர்கள் உணர்தலே நலமெனச் சார் மன்னர் உயர்குடியினருக்கு வேண்டுகோள் விடுத்தார்.

செல்வர்கள் தங்களது அடிமைகளுக்கு விடுதலை நல்க ஒருப்படவில்லை. அவ்வடிமைகள் அவர்களின் சொத்தின் ஒரு பகுதியாகவே விளங்கினர். ஒரு செல்வரின் மதிப்பு அவர் கொண்டிருந்த அடிமைகளைக் கொண்டே மதிப்பிடப்பட்டது. தங்களின் நிலங்களை விற்பதாயின் அடிமைகளோடு விற்பதுதான் அவர்களுக்கு எளிதாயிருந்தது. நிலத்தினும் அடிமைகளுக்கே மிக்க மதிப்பிருந்தது. பண்ணை அடிமை முறை வழியின் அடிப்படையில் இயங்கிய உழவர் சமுதாயமாதலின், அங்கு அடிமைகளுக்கே தேவை மிகுந்திருந்தது. அவர்களுக்கு விடுதலை வழங்கப்படின், தங்களது நிலத்தின் மதிப்பு குறைந்துவிடுமென செல்வர்கள் அஞ்சினர். அத்துடன் அவர்களுக்கு விடுதலை வழங்கிவிடின், தங்களது உழவுத் தொழிலை மேற்கொள்வோர் யாரெனவும் அவர்கள் வினவினர். அவர்களை வழிக்குக் கொணர வேண்டுகோள் போதாதென்பதை அரசர் விரைவில் உணர்ந்தார். அதனைச் சட்டத்தின்மூலம் நிறைவேற்றத் துணிந்தார் சார் மன்னர். 1859ல் அரசுப் பண்ணைகளில் பணியாற்றி வந்த அடிமைகளுக்கு விடுதலை வழங்கினர். இதனால், 23 மில்லியன் அடிமைகள் விடுதலை பெற்றனர். 1861ல் பண்ணை அடிமைகள் அனைவர்க்கும் விடுதலை நல்கப்பட்டது. இதனால், இவர் "விடுதலை நல்கியவர்" எனப் போற்றப்படுகிறார். விடுதலை நல்கினால் மட்டும் போதாதென்பதை அரசர் விரைவில் உணர்ந்தார். பொருளாதாரத் துறையில் தன்னிறைவு பெற்றாலன்றி அவர்களது விடுதலையில் பொருளேது மிராது என்பதை இவர் தெளிவாக உணர்ந்தார். இல்லையெனில் அவர்கள் மீண்டும் உயர்குடியினரையே நம்பி வாழும் நிலையேற்படும் என இரண்டாம் அலெக்ஸாந்தர் கருதினர். அதே சமயத்தில் நிலமனைத்தையும் உழவர்களுக்கே வழங்குவதையும் அவர் ஏற்கவில்லை. அத்தகைய செயல் செல்வர்களது நிலையினை முற்றிலும் தாழ்த்திவிடுமெனவும் இவர் அஞ்சினர். இரு சாராரின் நன்மைகளையும் கருத்தில் கொள்ளுதலே தக்கதென இவர் கருதினர்.

உழவர்கள், செல்வர்கள் ஆகிய இவ்விரு சாராரின் நன்மைக்காக சார் மன்னர் நிலமனைத்தையும் இரு பிரிவுகளாகப் பிரித்தார். ஒரு பிரிவு செல்வர்களுக்கும், மறு பிரிவு விடுதலை செய்யப்பட்ட உழவர்களுக்கும் நல்கப்பட்டது. விடுதலை பெற்ற அடிமைகள் அனைவர்க்கும் குடியிருக்க வீடும் அதனைச் சுற்றிச் சிறு நிலப்பரப்பும் அவர்களின் சொந்தத் தேவைக்காக வழங்கப்

பட்டன. ஊரைச் சுற்றியிருந்த நிலமனைத்தும் அவ்வூரின் "மிர்" என்று வழங்கப்பட்ட ஊராட்சி மன்றத்திடம் ஒப்படைக்கப்பட்டது. அம்மன்றம் அதனை அதன் மரபுப்படி உழவர்கள் அனைவரின் ஒத்துழைப்பால் ஊரின் பொது நன்மைக்காக உழவு செய்யப் பட்டது. உற்பத்தியான உணவுப் பொருள்கள் அனைவராலும் பங்கிட்டுக்கொள்ளப்பட வேண்டுமெனவும் ஏற்பாடானது. உழவர்கள் தாங்கள் பெற்ற நிலத்திற்குச் செல்வர்களுக்கு இழப்பீடு வழங்க வேண்டுமெனவும் வலியுறுத்தப்பட்டது. ஆயினும், அடிமைத்தளையிலிருந்து விடுபட்ட உழவர்கள் இழப்பீடு கொடுக்கும் நிலையிலில்லை. ஆகவே, அரசு அவர்களுக்குக் கடன் வழங்க முன்வந்தது. அதனை உழவர்கள் தவணைமுறையில் 49 ஆண்டு களில் திருப்பித் தரலாமெனவும் அரசு அறிவித்தது. இதனால், உழவர்கள் அடிமைத் தளையிலிருந்து விடுபட்டனர்.

இரண்டாம் சார் அலெக்ஸாந்தரின் அடிமை விடுதலைப் பட்டயம் 300 பக்கங்களுக்கும் மேற்பட்ட 22 சட்டங்களின் தொகுப்பாகும். அச்சட்டங்களின்படி, (1) ரஷ்யப் பண்ணை அடிமைகள் அனைவரும் உரிமை பெற்றவர்களென அறிவிக்கப் பட்டது. அவர்களும் பிறரைப் போன்று அனைத்து உரிமை களுக்கும் தகுதி பெற்றார்கள். அவர்கள் மீதான செல்வர்களின் உரிமைகள் நீக்கப்பட்டன. அவர்கள் தாங்கள் விரும்பிய வண்ணம் திருமணம் புரிந்துகொள்ளவும், சொத்து வைத்துக்கொள்ளவும், விரும்பும் தொழில்செய்யவும் உரிமையளிக்கப்பட்டனர் ( ) நிலம் இரு கூறுகப் பிரிக்கப்பட்டு, ஒரு பிரிவு அவர்களுக்கு வழங்கப் பட்டது. விடுதலை வழங்கப்பட்ட உழவர்களுக்கு எவ்வளவு நிலம் வழங்க வேண்டுமென்பதை அப்பகுதியில் பணியாற்றும் குற்ற நடுவர்கள் (Magistrates) முடிவு செய்வரென அறிவிக்கப்பட்டது. குற்ற நடுவர்களுள் பெரும்பாலோர் உயர்குடியினர் என்பது ஈண்டு நினைவுகூரவேண்டிய ஒன்றாகும் (3) அரசின் சட்டம் நிலம் செல்வர்களுக்கே உரியது என்பதையே வலியுறுத்தியது. அவர்களின் நிலத்தினைப் பெற்ற உழவர்கள் அதற்கு இழப்பீடு தரவேண்டு மெனவும் வலியுறுத்தப்பட்டது. அவ்விழப்பீட்டினை உழவர்கள் கொடுக்க முடியாத நிலையிலிருந்த காரணத்தால், அரசு அவர் களுக்குக் கடனுதவி செய்யும் என அறிவிக்கப்பட்டது. அக்கடனுக்கு அவர்கள் ஆண்டொன்றுக்கு 6.5 சதம் வட்டி செலுத்த வேண்டுமெனவும் இச்சட்டம் கூறியது. (4) நிலத்தின் மீது தனிபபட்ட உழவர்களுக்கு முழு உரிமையும் வழங்கப் படவில்லை. நிலம் முழுவதும் "மிர்"ரிடமே ஒப்படைக்கப் பட்டது. மிர்ரே அதற்கு முழுப் பொறுப்பேற்று நிர்வகிக்கும் எனவும் வலியுறுத்தப்பட்டது.

### இச் சட்டத்தின் குறைபாடுகள்

அடிமைகள் விடுதலைப் பிரகடனத்திற்குப் பின்னரும் உழவர்களின் பொருளாதார, சமூக வாழ்வில் குறிப்பிடத் தக்க மாற்றமோ, முன்னேற்றமோ ஏற்படவில்லை. கொள்கை யளவில் மிகவும் பாராட்டத் தக்கதாயிருந்த இப்பிரகடனம், நடைமுறையில் எத்தகைய நல்ல மாற்றத்திற்கும் வழிவகுக்க வில்லை. இது உழவர்களுக்கு முழு உரிமையினை வழங்கவில்லை. உயர் குடி மக்களின் செல்வாக்கினையும் இது குறைக்கவில்லை. அடிமைத் தளையிலிருந்து விடுபட்ட உழவர்களை ஏமாற்றுவதாகவே யிருந்தது. (1) இதனால், செல்வர்கள் பெரிதும் அதிருப்தி யுற்றனர். தங்களது உரிமைகள் பறிபோயின என்று அவர்கள் கூக்குரலிட்டனர். இதனால், அவர்கள் அரசை எதிர்க்கத் தலைப்பட்டனர். (2) இப் பிரகடனத்திற்குப் பின்னரும் செல்வர்கள் அனைத்துத் துறைகளிலும் சிறப்புற்றே விளங்கினர். அவர்களே குற்ற நடுவர்களாகப் பொறுப்பேற்றுத் தங்கள் நலனைப் பாதுகாத்துக்கொண்டனர். இச் சட்டங்களால் அவர்கள் பெரிதும் பாதிக்கப்படவில்லை. (3) செல்வர்கள் இப்பிரகடனத்தைப் பெரிதும் எதிர்த்தனர். தங்களது உரிமைகளை அவர்கள் இழக்கவில்லை. ஆயினும், அவர்கள் "மிர்" என்ற ஊராட்சி மன்றங்களுக்கு உட்பட்டே இயங்கும் நிலையேற்பட்டது. அவர்கள் கிராம சபைகளின் ஆதிக்கத்தின் கீழ் வாழும் நிலையேற்பட்டது. விடுதலை பெற்ற அடிமைகளும் இதனால் பெரிதும் அதிருப்தியுற்றனர். அவர்களின் வாழ்க்கைச் சுமையினைக் குறைப்பதற்குப பதிலாக இப்பிரகடனம் மிகுதிப் படுத்தியது. செல்வர்களின ஆதிக்கத்தின் கீழ மட்டும் வாழ்ந்த அவர்கள் இப்போது "மிர்" அதிகாரதத்தின் கீழும், அரசின ஆதிக்கத்தின் கீழும் வந்தனர். 49 ஆண்டுகளுக்கு அவர்கள் அனைவரும அரசுக்குக் கடன்பட்டவராயினர். விடுதலைப் பிரகடனத்திற்குப் பின, அரசு நிலவரியினையும் உயர்த்தியது. இதனால், அவர்கள் அரசுக்குரிய கடனையும் அதற்குரிய வட்டியினையும் கொடுத்ததோடு, நிலவரியும் மிகுதியாகச் செலுத்த வேண்டிய நிலையேற்பட்டது. நிலம் உழுபவனுக்கே சொந்தம் என்று கூறப்பட்டதே தவிர, அதில் பெரும் பகுதி செல்வர்களுக்கே மீண்டும் வழங்கப்பட்டது. இதனால், அது ஓர் ஏமாற்று வேலையாகவே பலர்க்குப்பட்டது. உழவர்கள் தேவைக் கேற்ப நிலமும் வழங்கப்படவில்லை. அவர்கள் முன்னர் உழுத நிலத்தைவிட இப்போது குறைவான நிலமே வழங்கப்பட்டது. இது அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்யவில்லை. விடுதலை பெற்ற பெரும்பாலோர் வறுமையிலேயே மீண்டும் வாழும் நிலை

யேற்பட்டது. நாளடைவில் மக்கள் தொகை பெருகியது. 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் ரஷ்ய மக்கள் தொகை இரு மடங்காகப் பெருகியது. இதனால் உழவர்களின் உழும் நிலப்பரப்பு மேலும் குறைந்தது. இதனால், அவர்கள் வாழ்க்கைத் தரம் மிகவும் குறைந்துபோயிற்று; விடுதலை அவர்களுக்கு எத்தகைய மகிழ்ச்சியையோ, மலர்ச்சியையோ நல்கவில்லை என்பது வெள்ளிடைமலை. (4) விடுதலை பெற்ற அடிமைகளுக்கு வழங்கப் பட்ட நிலம் பெரும்பாலும் தரிசு நிலமாகும். அது உழவுக்கு முற்றிலும் தகுதியற்றிருந்தது. நல்ல நிலத்தினைத் தாங்கள் வைத்துக்கொண்டு, பயனற்ற நிலங்களையே செல்வர்கள் அடிமை களுக்கு வழங்கினர். இதற்கும் விடுதலை பெற்ற அடிமைகள் மிகுதியான நிலவரி செலுத்தும் அவல நிலையேற்பட்டது. இதனால், உற்பத்தி மிகக் குறைந்தது; விடுதலைச் சட்டங்களே பெரும் எதிர்ப்புக்குள்ளாயின. இது இயற்றப்பட்ட நான்கு மாதங்களில் 469க்கு மேற்பட்ட கிளர்ச்சிகளை உருவாக்கிற்று என்பர் ஹேசன் என்ற வரலாற்று வல்லுநர் இக் கிளர்ச்சிகளே 1905, 1917 புரட்சி களுக்கு வித்திட்டன எனில் மிகையாகாது.

**இதன் நன்மைகள்**

விடுதலைப் பிரகடனத்தால் நன்மையேதும் விளையவில்லை எனக் கூறவுமியலாது. அடிமை முறையினை அகற்றியதால், ரஷ்யா பிற நாடுகளின் பார்வையில் மிக உயர்ந்து காணப் பட்டது. பிற நாடுகளுடன் கூடி, ரஷ்யாவும் தலை நிமிர்ந்து நடந்ததற்கு இது ஒரு வாய்ப்பினைக் கொடுத்தது. கொள்கை யளவிலேனும் மக்கள் அனைவரும் சமம் என்ற இச்சட்டங்கள் மக்களிடையே மாபெரும் விழிப்புணர்ச்சியை உண்டாக்கியது. பொருளாதாரத் துறையில் மிகுந்த நன்மைகள் இதனால் ஏற்படவில்லை; ஆஸ்திரிய, பிரஷ்ய உழவர்களைக் காட்டிலும் ரஷ்ய உழவர்கள் மேம்பட்டு விளங்கினர்.[1]

**உள்ளாட்சித் துறையில் சீர்திருத்தங்கள்**

அடிமை முறையினை அகற்றியது இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் செய்த நற்பணிகளில் ஒன்றாகும். அவர் மேற்கொண்ட சீர்திருத்தங்களில் உள்ளாட்சித் துறைச் சீர்திருத்தங்களும் சிறப்பு மிக்கவையாகும். 1864ல் ஓர் ஆணையினை வெளியிட்டு அதன் மூலம் இவர் உள்ளாட்சி நிறுவனங்களுக்கு (Local-Government) பல உரிமைகளை

[1] Hazen—P. 584.

வழங்கினர் உள்ளாட்சித் துறையில் சீர்திருத்தங்களைப் புகுத்தும்பொருட்டு அதனை ஆராய 1859ல் இவர் ஒரு குழுவினை நியமித்தார். அக்குழு பரிந்துரைத்த பரிந்துரைகளின் அடிப்படையில் உள்ளாட்சித் துறையில் பல சீர்திருத்தங்களைப் புகுத்தினர். அதுவரை ரஷ்யாவில் மூன்று உள்ளாட்சி நிறுவனங்கள் ஒன்றுக்கொன்று தொடர்பின்றிச் செயலாற்றி வந்தன. அவை (1) செல்வர் மன்றம் (The Assembly of the nobility), (2) உழவர் மன்றம் (The Assembly of the Peasants), (3) ஊராட்சி மன்றம் (Mirs) என்பனவாகும். இதைத் தவிர, ரஷ்யா மாநிலங்களாகவும், மாநிலங்கள் மாவட்டங்களாகவும் பிரிந்து கிடந்தது. இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் ஒவ்வொரு மாவட்டத்திலும் செம்ஸ்டோவ் என்ற (Zemstov) ஸ்தல ஆட்சி நிறுவனமொன்றினை நிறுவினர். இந்த ஸ்தல நிறுவனங்களின் உறுப்பினர்களை மக்களே தேர்ந்தெடுத்தனர். மாவட்ட செம்ஸ்டோவ் உறுப்பினர்கள் மாநில செம்ஸ்டோவ் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தனர். இச் செம்ஸ்டோவ்கள் ஆண்டுக்கு ஒருமுறை கூடி, அரசுக்குப் பல பரிந்துரைகளை அனுப்பினர். அரசின் நிர்வாகத்திற்கும் உறுதுணையாய் நின்று இவ் வுறுப்பினர்கள் பெரும் பணியாற்றினர். இவை யாவும் அரசியல் சார்பற்றவை. அரசரின் தனி வல்லாட்சிக்கும் ஊறு விளைவிப்பன அல்ல இவை. இச் செம்ஸ்டோவ்கள் சாலைகள், பாலங்கள், தொடக்கக் கல்வி சுகாதாரம், பஞ்ச நிவாரணம் போன்றவற்றை மேற்பார்வையிட்டு அரசுக்கு உற்ற துணையாய் நின்றன. இவை தொழில் வளர்ச்சிக்கும் பெரிதும் உதவின; குற்ற நடுவர்களையும் நியமித்து அமைதிக்கும் வழி வகுத்தன.

### இதன் குறைபாடுகள்

இவரது உள்ளாட்சித் துறைச் சீர்திருத்தங்களை மக்கள் வரவேற்கவில்லை. அது பற்றி மக்கள் மிகுதியும் கவலைப் படவில்லை. மேலும், செம்ஸ்டோவ்களுக்கு அரசியல் துறையில் செல்வாக்கு வழங்கப்படவில்லை. அரசரையோ அல்லது நிர்வாகத்தினையோ குறை கூறவோ, திருத்தவோ இவற்றிற்கு உரிமை வழங்கப்படவில்லை. இவை மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவை யெனினும் மக்களுக்கு இவற்றைக் கட்டுப்படுத்தும் உரிமை யேதுமில்லை. இவற்றைப் பிரபுக்களே பெரிதும் கட்டுப் படுத்தினர். எளிய மக்களுக்கு அவை எத்தகைய பணியினையும் புரியவில்லை. வரிகளை வசூலிக்கும் உரிமையினையோ அல்லது வரி விதிக்கும் உரிமையினையோ அது பெற்றுத் திகழவில்லை,

அவை தங்களது அனைத்துச் செயல்களுக்கும் அரசரையே நம்பியிருந்தன அரசர் வழங்கிய சொற்ப தொகையினைக் கொண்டே அவை தங்களது பணிகளைச் செய்தன. பொருளாதார நெருக்கடி காரணமாகப் பல வேளைகளில் அவை செயல்படவில்லை. அரசு அலுவலர்களும் அடிக்கடி தலையிட்டு அதன் சொற்ப உரிமைகளையும் பறித்தனர். நடைமுறையில் இவை தனி வல்லாட்சியின் ஓர் அங்கமாகவே திகழ்ந்தன. மக்கள் இதில் எத்தகைய ஆர்வமும் காட்ட வில்லை. அரசும் தனது அதிகாரங்களைப் பகிர்ந்துகொள்ள முற்றிலும் விரும்பவில்லை. எனினும், இச் சீர்திருத்தம் ரஷ்ய வரலாற்றில் சிறப்பு மிக்கதே. அவை அன்று அரசியல் பயிற்சிக் கூடங்களாகத் திகழ்ந்தன. இவற்றின் செயல்கள் பெரும்பாலும் கட்டுப்படுத்தப்பட்டாலும், அல்லது மறுக்கப் பட்டாலும், மக்களுக்கு அவை அரசியல் கல்வியை அளித்து விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின. மருத்துவம், கல்வி போன்ற துறைகளில் இவை மக்களுக்காற்றிய பணிகள் உண்மையில் பாராட்டப்பட வேண்டியவையேயாகும். இதனால், மக்கள் விழிப் படைந்து மாபெரும் மாற்றங்களுக்கு ஆயத்தமாயினர்.

**கல்வி, நீதித்துறைச் சீர்திருத்தங்கள்**

இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் காலத்தில் கல்வித் துறையிலும் பல சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. கல்வித் துறை மீது சுமத்தப்பட்டிருந்த வேண்டாத கட்டுப் பாடுகள் அனைத்தும் அகற்றப்பட்டன. நாடெங்கும் தொடக்கப் பள்ளிகள் தொடங்கப்பட்டன. உயர்நிலைக் கல்வியிலும் பல மாற்றங்கள் புகுத்தப்பட்டன. உயர் கல்வியில் அறிவியலுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. பெண் கல்விக்கும் முக்கியத்துவம் நல்கப்பட்டது. 1858ல் பெண்களுக்கான உயர் நிலைப்பள்ளியொன்று தொடங்கப்பட்டது. ஆறு ஆண்டுகளில் நூற்றுக்கு மேற்பட்ட அத்தகைய பள்ளிகள் தொடங்கப் பட்டன. ஆயினும், கற்றோர் தொகை மிகக் குறைவாகவே இருந்தது.

நீதித் துறையினையும் இம் மன்னர் புறக்கணிக்கவில்லை மேலை நாட்டு நீதி முறையினைத் தமது நாட்டில் புகுத்தினர். ரஷ்ய நீதித் துறையில் குறைகள் மலிந்து கிடந்தன. திறமையின்மை, ஊழல், வேண்டுவோர்க்கு வேண்டுவதைச் செய்யும் நிலை, நேர்மையின்மை போன்றவை நீதித் துறையில் மலிந்து கிடந்தன. நடுவர்களுக்குக் குறைந்த ஊதியமே வழங்கப்பட்ட காரணத்தால், அவர்கள் கையூட்டுப் பெறுவதி

லேயே குறியாக இருந்தனர். விசாரணைகள் அனைத்தும் மூடிய அறைகளுக்குள்ளேயே நிகழ்ந்தன. காரணம், பிறர் அறியா வண்ணம் இரகசியமாகக் கையூட்டு பெற்று விசாரணையை நடத்தினர். கையூட்டு வழங்கிய செல்வர்கள் நீதித் துறையில் மிக்க ஆதிக்கம் செலுத்தினர். இவற்றை ஆராய்ந்தறிந்த சார் மன்னர், இக்குறைகளனைத்தையும் களைய முற்பட்டார்.

நீதித் துறை நிர்வாகத்தினின்றும் பிரிக்கப்பட்டது. சார்பற்ற நீதித்துறையைப் (Independence of Judiciary) புகுத்தியது இவரது ஆட்சியின் சிறப்பெனக் கூறுகிறார் லிப்சன் என்ற வரலாற்றுப் பேராசிரியர்.[1] நன்கு பயிற்சி பெற்ற நடுவர்களையே இவர் உயர்நீதி மன்றங்களில் நியமித்தார். விசாரணைகள் திறந்த அறைகளிலேயே நிகழ வேண்டுமென இவர் வலியுறுத்தினர். Trial by Jury முறையும் புகுத்தப் பட்டது நீதித் துறை மேலும் சீர்பட இவரது சீர்திருத் தங்கள் பெரிதும் துணையாயிருந்தன. ஆயினும், இவரது சீர்திருத்தங்கள் முற்றிலும் வெற்றி பெற்றன எனக் கூற வியலாது.

## இவரது சீர்திருத்தங்கள் தோல்வியுறுதற்குரிய காரணங்கள்

இவரது சீர்திருத்தங்கள் தோல்வியுற்றமைக்குப் பல காரணங்கள் உள. மக்கள் அவற்றை விரும்பவில்லை. அவற்றிற்கு வரவேற்பும் இல்லாது போயிற்று. மக்கள் மீது கொண்ட உண்மையான பற்றுக் காரணமாக புகுத்தப் பட்டவை அல்ல அவை நாட்டில் குறைகள் மலிந்தன. அரசர்க்கும் எதிர்ப்பு மிகுந்தது. கிளர்ச்சிகள் பல தோன்றின. மக்களது கவனத்தைத் திருப்பவும், தமது நிலையை நிலைப் படுத்திக்கொள்ளவும் இவர் தமது சீர்திருத்தங்களை ஒரு கருவியாகக் கொள்ள முனைந்தார். தமது அதிகாரத்தினைச் சிறிய அளவுகூட விட்டுக்கொடுக்க இவர் மறுத்தார். அவரது சீர்திருத்தங்களும் நாளடைவில் சிறப்பிழந்தன. காலப் போக்கில் இவரது சீர்திருத்த வேகமும் குன்றியது. மக்கள் அவற்றால் நிறைவு பெறவில்லை. அவற்றிற்கு எதிர்ப்பு மிகுந்தது.

இவரது சீர்திருத்தங்களால் புதிதாக விடுதலை பெற்ற உழவர்களும் மகிழ்ச்சி பெறவில்லை. அவர்கள் தாங்கள் ஏமாற்றப்பட்டதாகக் கருதினர். அடிமைத்தளையிலிருந்து விடு

[1] Lipson—P. 97.

பட்ட போதும், அவர்கள் சமூக, பொருளாதார, அரசியல் துறைகளில் மிகப் பின் தங்கியே நின்றனர். அரசியல் துறையில், குறிப்பாக, அவர்கள் உரிமையேதும் பெறவில்லை. சமூகத் துறையில் அவர்கள் இன்னும் தாழ்ந்தோராகவே கருதப்பட்டனர். அவர்களும் தங்களையொத்த மனிதர்கள் தாம் என்ற கருத்தைச் செல்வர்கள் ஏற்க முன் வரவில்லை. உயர் குடியினரோடு சமமாகப் பழகும் வாய்ப்பு அவர்களுக்கு இன்னும் கிட்டவில்லை. அனைத்து அதிகாரங்களும், உயர் பதவிகளும் செல்வர்களிடமேயிருந்தன. செம்ஸ்டோவ்களும் செல்வர்களின் கருவிகளாகவே இருந்தனர். விடுதலை எய்திய உழவர்களின் பொருளாதார நிலை மிக்க வருந்தத் தக்க நிலையிலிருந்தது. தங்களுக்கு வழங்கப்பட்ட நிலங்கள் பெரும்பாலும் உழவுக்குப் பயன்படாத தரிசாக இருந்த காரணத்தால், அவர்களின் உழவு சிறப்படைய வழியில்லாது போய் விட்டது. இதனால், அவர்கள் கடனாளிகளாக மாறினர். வரி செலுத்தவும் இயலாது பலர் நகரங்களுக்குக் குடியேறினர். இதுகாறும் உயர் குடி மக்களின் அடிமைகளாக இருந்த ரஷ்ய உழவர்கள் இப்போது "மிர்"களுக்கும் அரசுக்கும் அடிமைகளாயினர்.

உயர் குடி மக்களும் அரசரது சீர்திருத்தங்களைப் பெரிதும் எதிர்த்தனர். தங்களது நிலத்தின் ஒரு பகுதியை இழந்த அவர்கள் இவரது சீர்திருத்தங்களால் பெரிதும் வெறுப்படைந்தனர். அரசரின் சீர்திருத்தங்களால் தங்களது உரிமைகளும், உடைமைகளும் பறிபோனதாக அவர்கள் கருதினர். அரசரது நீதித் துறைச் சீர்திருத்தங்களை அவர்கள் வன்மையாக எதிர்த்தனர். கையூட்டு வழங்கி, நீதியைத் தங்கள் பால் வைத்திருந்த செல்வர்கள், வெளிப்படையான விசாரணை, நேர்மையான நீதி முறை போன்றவற்றை வெளிப்படையாகவே எதிர்த்தனர். செம்ஸ்டோவ்களிலும் தங்களுக்குக் கீழ் பணியாற்றி உழவர்களோடு இணைந்து செயலாற்றுவதை அவர்கள் முற்றிலும் வெறுத்தனர் அவர்களால் தேர்ந்தெடுக்கப் படுவதையும் செல்வர்கள் இழிவாகக் கருதினர். அரசரது தனி வல்லாட்சியில் வெறுப்புற்ற இச் செல்வர்கள் தங்களுக்குப் பிரதிநிதித்துவ ஆட்சி வழங்குமாறு அரசரை வேண்டினர். அவர்கள் உள் நோக்கைப் புரிந்துகொண்ட அரசர், பெரிதும் அதிர்ச்சியுற்றார். அவர்களது வேண்டுகோளையும் ஏற்க மறுத்தார். தங்களுக்கும் அரசர் உரிமை நல்குவார் என எதிர் பார்த்த செல்வர்கள் இதனால் வெறுப்படைந்து அரசரை எதிர்க்கத் தலைப்பட்டனர்.

முற்போக்காளர்களும், அறிஞர்களும் இவரது ஆட்சியைத் தொடக்கத்தில் வரவேற்றனர். இவரது சீர்திருத்த மனப் பான்மையைக் கண்டு அவர்கள் பெரிதும் மகிழ்ந்தனர். ஆயினும், இவரது சீர்திருத்தங்களால் அவர்கள் நிறைவு பெறவில்லை. மேன் மேலும் சீர்திருத்தங்களை அவர்கள் எதிர் பார்த்தனர். தனி வல்லாட்சியில் மிக்க பற்று கொண்ட இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் அவர்களது விருப்பத்திற்கு முற்றிலும் மாறுபட்டு நின்றார். முற்போக்காளர்கள் நல்ல அரசியலமைப்பை வழங்குமாறு அரசரை வேண்டினர். அதனை அரசர் ஏற்க மறுத்தார். இதனால், ஏமாற்றமுற்ற முற்போக் காளர்கள் அரசரைக் குறை கூறத் தொடங்கினர். அவரைப் பெரிதும் தூற்றினர். 1863ல் போலந்தில் நடந்த புரட்சியின் காரணமாக, அரசர் ஒரு பிற்போக்காளராக மாறினார். ரஷ்ய மக்களும் கிளர்ச்சி செய்தபோது அவர் முற்போக்கி லுள்ள நம்பிக்கையை முற்றிலுமிழந்தார். மக்கள் உரிமை களுக்குத் தகுதியற்றவர்களென அரசர் கருதினார். இதனால், மிகுந்த ஏமாற்றமடைந்த புரட்சியாளர்கள் அரசரைக் கொல்லும் சதியில் ஈடுபட்டனர். வெறுப்படைந்த அவர்கள் அரசரை 1881ல் சுட்டு வீழ்த்தினர்.

**போலந்துப் புரட்சி**

ஐரோப்பிய வரலாற்றில் அவப்பேறு மிக்க நாடு போலந் தாகும். 18ஆம் நூற்றாண்டிலேயே ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா போன்ற நாடுகள் அதனை மும்முறை துண்டாடி அதன் பகுதிகள் பலவற்றைத் தங்களுடன் இணைத்துக் கொண்டன. வியன்னா மாநாடும் அதனை மீண்டும் துண் டாடியது. வியன்னா மாநாட்டின் விளைவாக ரஷ்யா போலந்தின் பெரும் பகுதியைக் கைப்பற்றிக்கொண்டது. முதலாம் சார் அலெக்ஸாந்தர், அதற்கென ஓர் அரசியலமைப்பினையும் வழங்கினார். அவரது சீர்திருத்தங்களால் நிறைவுறாத அம் மக்கள். 1830ல் புரட்சியிலீடுபட்டனர். நாட்டுப் பற்றும், விடுதலை வேட்கையும் மிக்க அம்மக்களை முதலாம் நிக்கலொலஸ் பெரிதும் வெறுத்தார். 1830ல் புரட்சியிலீடுபட்ட அம்மக்களைக் கொடுமையாக அடக்கி, அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்த அரசியலமைப்பினையும் நிராகரித்தார் முதலாம் நிக்கலொலஸ். தோல்வியுற்ற அம்மக்கள், சார் மன்னரின் அடக்கு முறை ஆட்சியினையும் ஏற்றுக்கொண்டனர். 1855ல் இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் பதவியேற்றபோது அவர்கள் நம்பிக்கை மீண்டும் துளிர்த்தது. இரண்டாம் சார் அலெக்ஸாந்தரின்

முற்போக்கும், சீர்திருத்த வேட்கையும் அவர்களுக்கு மீண்டும் நம்பிக்கையை யூட்டின. நாட்டுப் பற்றும் அவர்களை மீண்டும் ஆட்கொண்டது. இத்தாலியர்கள் ஃபிரெஞ்சுத் துணையுடன் தங்கள் நாட்டை இணைப்பதில் வெற்றி பெற்றுவருவது அவர்களுக்குப் பெரும் ஊக்கத்தினை நல்கியது. அதற்கேற்ப இரண்டாம் சார் அலெக்ஸாந்தரும் தம்முடைய தந்தையின் அடக்குமுறைக் கொள்கையினை விடுத்து, அவர்களுக்கு உரிமைகள் பல வழங்கினர். அவர்களுக்கு உள்துறை ஆட்சியிலும் பல உரிமைகளை வழங்கினர் இம் மன்னர். போலந்து மொழியும் பெரிதும் போற்றி ஆதரிக்கப்பட்டது. இதனால், நம்பிக்கை மிகுந்த போலந்து முற்போக்காளர்கள் விடுதலையும் பெற முடியுமெனக் கருதினர். இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் விடுதலை பெறும் முயற்சியிலீடுபடுவது தவறென எச்சரித்த போதும் நாட்டுப் பற்று மிக்க போலந்து மக்கள் அதனைப் பெரிதும் பொருட்படுத்தவில்லை.

போலந்து மக்கள் புரட்சி செய்யத் தொடங்கினர். தங்களுக்கு முழு விடுதலை வேண்டுமென அவர்கள் வேண்டினர். 1772க்கு முந்தைய மாபெரும் போலந்து (Great Poland) வேண்டுமென அவர்கள் கிளர்ச்சி செய்தனர். மூன்றும் நெப்போலியனும் அவர்களுக்கு உதவி புரிவதாக இரகசியமாக வாக்களித்திருந்தார். அவரது வாக்குறுதியைப் பெற்ற இம்மக்கள் புரட்சியில் தீவிரமாக ஈடுபட்டனர்.

1863ல் போலந்து புரட்சி செய்தபோது அதற்கென்று ஓர் அரசில்லை; படையுமில்லை. 1832க்குப் பின்னர், போலந்து ரஷ்யாவுடன் முற்றிலும் இணைக்கப்பட்ட காரணத்தால், அது நாடாகவே இயங்கவில்லை. அவர்களது தலைநகரான வார்சாவும் ரஷ்யப் படைகள் வசமிருந்ததால், அவர்களது தலைநகரைக் கூட அவர்களால் கைப்பற்ற இயலவில்லை. போலந்து முழுவதையும் வென்று, ஒன்றிணைத்து விடுதலை பெறச் செய்வதே விடுதலைப் படையினரின் நோக்கமாக இருந்தது. நாட்டுப் பற்றுடன், சமயப் பற்றும் அவர்களது விடுதலைப் போர்க்குக் காரணமாயிருந்தது. போலந்து மக்கள் ரோமன் கத்தோலிக சமயத்தினைச் சார்ந்தவர்கள். ரஷ்ய மக்கள் வைதீக கிரேக்க திருச்சபையினைச் சார்ந்தவர்கள். முதலாம் நிக்கலொஸ் காலத்தில் ரஷ்ய வைதீக சமயம் போலந்து மக்கள்மீது திணிக்கப்பட்டது. ஆகவே, சமயப் பற்று மிக்க போலந்து மக்கள் அனைத்துத் துறைகளிலும் விடுதலை பெற விரும்பினர். போலந்து மக்களின் விடுதலைப் போரை

விரும்பாத இரண்டாம் சார் அலெக்ஸாந்தர், அவர்களை முற்றிலும் முறியடிக்கத் துணிந்தார். அம்மக்கள்பால் இங்கிலாந்து, ஆஸ்திரியா, ஃபிரான்சு போன்ற நாடுகள் அனுதாபம் காட்டின. ஆயினும், அவை இவர்களுக்கு உதவ முன்வரவில்லை. இதனால், போலந்து மக்கள் பெரிதும் ஏமாந்து போயினர். பிற நாடுகளின் அனுதாபத்தை உணர்ந்த சார் மன்னர் பெரிதும் வெறுப்புற்றார். அப்புரட்சியினை ஈவு இரக்கமின்றி ஒடுக்கவும் சார் மன்னர் முடிவு செய்தார்.

போலந்து மக்களின் குருதியில் ஊறிப்போயிருந்த வேற்றுமையுணர்வு அவர்களது தோல்வியை விரைவுபடுத்தியது. போலந்து மக்களிடை ஒற்றுமையில்லை. செல்வர்களும், உழவர்களும் பகைவர்களாய்த் திகழ்ந்தனர் உயர்குடியினர் உழவர்களைப் பெருங் கொடுமைப்படுத்தியதால் உழவர்கள் அவர்களைப் பெரிதும் வெறுத்தனர். அவர்கள் ஒன்றுபட்டுப் புரட்சி செய்யாததால், சார் மன்னர் அப்புரட்சியினை எளிதாக அடக்கினார். புரட்சியாளர்களிடையேயும் இரு பிரிவினர் இருந்தனர். தீவிரவாதிகள், மிதவாதிகள் என இரு பிரிவாகப் புரட்சியாளர்கள் பிரிந்து கிடந்தனர். 1863ல் தீவிரவாதிகள் போலந்திலிருந்து ரஷ்ய ஆளுநரைக் கொலை செய்ய முயன்றனர். அதனையறிந்த ரஷ்யப் படைகள் அவர்களை அடக்க முற்பட்டன. 1863ல் மிதவாதிகள் புரட்சியிலிருந்து ஒதுங்கியிருந்தனர். உழவர்களும் அதனை ஆதரிக்கவில்லை. மூன்றும் நெப்போலியனின் தூண்டுதலின் பேரில் மிதவாதிகளும் புரட்சியிலீடுபட்டனர். ஆயினும், ரஷ்யப் படைகளுக்கு முன்னர் போலந்துப் புரட்சியாளர்கள் செயலிழந்துபோயினர். 1864ல் போலந்துப் புரட்சியாளர்கள் தோல்வியுற்றனர்.

**போலந்துப் புரட்சியின் தோல்விக்குரிய காரணங்கள்**

(1) போலந்து, மிகச் சிறிய நாடு. அது 1831க்குப் பின்னர், ரஷ்யாவின் மாநிலமாகவே மாறிவிட்டது. அதற்கென நல்ல படையோ, பொருளாதார வசதியோ இல்லை. மிகப் பெரிய நாடான ரஷ்யாவை எதிர்த்து அது தோற்றதில் வியப்பேதுமில்லை. (2) போலந்து மக்களிடை ஒற்றுமை என்பதில்லை. ஏற்றத் தாழ்வுகள் காரணமாகச் செல்வர்களிடையேயும், உழவர்களிடையேயும் பகைமை நிறைந்து காணப்பட்டது. போலந்துப் புரட்சியில் பெரும்பாலும் செல்வர்களே பங்கேற்றனர். அவர்கள் பிற மக்களின் ஒத்துழைப்பைப் பெறாதது மாபெரும் தவறாகும். அவர்களது

வேற்றுமையுணர்வு அவர்களைத் தோல்வியுறுமாறு செய்தது. (3) போலந்து அனைத்து உரிமைகளையும் இழந்தது. அது ரஷ்யாவின் "10ஆம் அரசு" (The Tenth Government of the Vistula) எனவும் வழங்கப்பட்டது. போலந்து ரஷ்ய மயமாக்கப் பட்டது. ரஷ்ய மொழி ஆட்சி மொழியாக்கப்பட்டது. போலந்து மொழி தடை செய்யப்பட்டது. அடக்குமுறை ஆட்சி அங்குப் புகுத்தப்பட்டது. ரஷ்ய ஆதிக்கத்திலிருந்த போலந்து, பொலி விழந்து பலங்குன்றிப் போயிற்று. (4) போலந்துப் புரட்சியின் போது, சார் மன்னர் பிரித்தாளும் கொள்கையினைப் பின்பற்றினர். தமது அரசியல் நுட்பத்தால் உழவர்களைச் செல்வர்களிடமிருந்து பிரித்தார். உழவர்களுக்குப் பல சலுகைகளை வழங்கினர். 1864ல் அவர்கள் ஒத்துழைப்பைப் பெறும்பொருட்டு உழவுத் துறையில் பல சீர்திருத்தங்களைப் புகுத்தினர். செல்வர்களின் நிலங்களில் பாதிக்கு மேல் அவர்களுக்கு வழங்கினர். உழவர்கள் செல்வர்கள் பிடியி லிருந்தும் தளர்த்தப்பட்டனர். செல்வர்களுக்கு அவர்கள் எம்முறையினும் கடமைப்பட்டவர்களல்லரெனவும் அறிவிக்கப் பட்டது. 13,40,000க்கு மேற்பட்ட உழவர்கள் நிலம் பெற்று உரிமை மிக்க குடியானவர்களாயினர். இச் சலுகைகளைப் பெற்ற உழவர்கள் தங்களுடைய செல்வர்களை ஆதரிக்க மறுத் தனர். இதனால், போலந்து மக்களிடையே பெரும் பிளவேற் பட்டது. வேறுபட்டு, ஒற்றுமையற்று, பிளவுண்ட போலந்து, அந்நிய ஆதிக்கத்திற்கு எளிதாக இரையானது. போலந்துப் புரட்சி தோல்வியுற்றது. மீண்டும் ரஷ்ய ஆதிக்கம் அங்குத் தொடர்ந்தது.

## இரண்டாம் அலெக்ஸாந்தரின் வெளிநாட்டுக் கொள்கை கிரிமியப் போரும் அதன் விளைவுகளும்

1855ல் கிரிமியப் போரின்போதே, முதலாம் சார் நிக்கலோஸ் இறந்துவிட்டார். அப்போர் நடந்துகொண்டிருக்கும்போதே, இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் பட்டத்திற்கு வந்தார். கிரிமியப் போரில் ரஷ்யா தோற்கடிக்கப்பட்டது. பழைய கருவிகளைக் கொண்டும், நிலமானியப் படைகளைக்கொண்டும் போரிட்ட ரஷ்யா, தோல்வியடைந்ததில் வியப்பேதுமில்லை. பொருளாதாரத் துறையில் மிகச் சீர்குலைந்துபோன ரஷ்யா முற்றிலும் முறியடிக்கப்பட்டது. 1856 பாரிசு உடன்பாட்டின் விளைவாக, சார் மன்னர் பெரிதும் நிலைகுலைந்துபோனர். ஆயினும், கிரிமியப் போரும், பாரிசு உடன்பாடும் அவரது கண்களைத் திறந்தன. கருங்கடலில் ரஷ்ய ஆதிக்கம் முற்றிலும் அகன்றதைக் கண்டு இம்மன்னர் பெரிதும் வருந்தினர். பெசரேபியாவையுமிழந்து ரஷ்யா

தலைகுனிந்து நின்றது. போலந்துப் புரட்சியும், நிகலிஸ்டு களின் புரட்சியியக்கமும் அவரைப் பெரும் துயரத்தில் ஆழ்த்தின. இதுவும் ரஷ்யாவுக்கு நன்மையாகவே அமைந்தது. அரசர் உள்நாட்டுச் சீர்திருத்தங்களிலேயே ஆழ்ந்த கவனம் செலுத்தும் கட்டாயமேற்பட்டது. ஆதலின், 1865 வரை ரஷ்யா பிற நாடுகளின் விவகாரங்களில் தலையிட இயலவில்லை. கிரிமியப் போர்க்குப் பின்னர், இரண்டாம் அலெக்ஸாந்தர் ஃபிரான்சுடனான நட்பைப் பாராட்டினார். 1859ல் ஃபிரான்சு ஆஸ்திரியாவை எதிர்த்து இத்தாலிக்கு உதவியபோது சார் அலெக்ஸாந்தர், நடுநிலை வகித்தார். 1863ல் ஃபிரான்சு, போலந்துப் புரட்சிக்குப் பரிவு காட்டியதால், அது ரஷ்யாவின் நட்பையிழந்தது. 1863க்குப் பின்னர், ரஷ்ய-ஃபிரெஞ்சு உறவு முற்றிலும் முறிந்தது. அதன் பின்னர், இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் பிரஷ்யாவின் நட்பைப் பெறுவதில் பெரிதும் ஆர்வம் காட்டினார். ஃபிரான்சிடம் வெறுப்பு கொண்ட சார் மன்னர், பிரஷ்யாவின் நட்பைப் போற்றினார். இதன் விளைவாக, இரண்டாம் சார் அலெக்ஸாந்தரும் முதலாம் கெய்சர் வில்லியமும் உற்ற நண்பர்களாயினர். இந்நட்பின் விளைவாக, 1864ல் பிரஷ்யா டென்மார்க்குடன் போர் செய்தபோது இவர் நடுநிலை வகித்தார். 1866ல் ஆஸ்திரிய-பிரஷ்யப் போரின்போதும், இவர் நடுநிலை வகித்தார். 1870லும் இவர் நடுநிலை வழியே நின்றார். ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போரின்போது, தமது நடுநிலை மூலம் பிரஷ்யாவுக்குத் தமது நட்பை வெளிப்படுத்தினார். இவரது நடுநிலை பிரஷ்யாவுக்குப் பெரும் நன்மையாயமைந்தது. இவரது கொள்கை இத்தாலியையும், ஜெர்மனியையும் ஒன்றிணைத்தது. ஃபிரான்சு ஐரோப்பாவில் தனித்து நிறுத்தப் பட்டு, தோறகடிக்கப்பட்டது. ரஷ்யா மீண்டும் ஐரோப்பிய அரங்கில் சிறப்பெய்தியது.

**தூரக் கிழக்குப் பிரச்சினை**

ஐரோப்பாவில் நடுநிலைக் கொள்கையினைப் பின்பற்றிய இரண்டாம் அலெக்ஸாந்தர் தூரக் கிழக்குப் பிரச்சினைகளில் மிகத் தீவிரமாய் ஈடுபட விரும்பினார். 1875ல் ஜப்பானிடமிருந்து ஷாகாலியன் தீவுகளைப் பெற்றார். இதனால், அமர்நதி (Amur River) முகத்துவாரத்தில் ரஷ்யா தனது செல்வாக்கினை நிலைநாட்டிக்கொள்ள முடிந்தது. கிழக்கு சைபீரியாவில் பணியாற்றிவந்த ரஷ்ய ஆளுநர், சீனாவின் பல பகுதிகளைப் பெற்று அங்கு ரஷ்ய ஆதிக்கத்தினை நிலைநாட்டினார். 1858ல் ஏற்பட்ட அய்கன் உடன்பாட்டின்படி (The Treaty of Aigun)

ரஷ்யா மங்கோலியாவில் பல பகுதிகளைப் பெற்றது. இதே கொள்கையினை மத்திய ஆசியாவிலும் ரஷ்யா பின்பற்றியது. யூரல் நதிக் (Ural River) கரையிலிருந்த பொகாரா, கோகண்ட் போன்ற பகுதிகளை ரஷ்யா தன்னுடன் இணைத்துக்கொண்டது. இவரது கொள்கையின் விளைவாக, ரஷ்ய எல்லைகள் ஆப்கானிஸ் தானம், பாரசீகம், சீன எல்லைகள் வரை பரந்து விரிந்தது இதனால், ஆசியாவில் ரஷ்யா தனது ஆதிக்கத்தினைப் பெருமளவு நிலைநாட்டிக்கொண்டது.

**கிழக்குப் பிரச்சினை**

கிழக்குப் பிரச்சினையிலும் இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் மிகத் தீவிர ஈடுபாடு காட்டினார். அன்று நிலவிய ஐரோப்பிய அரசியல் சூழ்நிலையே இவரைக் கிழக்குப் பிரச்சினையில் மிகத் தீவிரம் காட்டுமாறு செய்தது. 1866ல் ஆஸ்திரியா, பிரஷ்யாவிடம் தோற்றது. 1870ல் ஃபிரான்சு பிரஷ்யாவிடம் தோற்றது. ஆகவே, தங்களுக்குள் போரிட்டுக்கொண்ட ஐரோப்பிய நாடுகளால் இவரைக் கண்காணிக்க இயலவில்லை. இதனால், கிழக்குப் பிரச்சினையில் தலையிடுவதற்கு இவர்க்கு நல்லதொரு வாய்ப்பேற்பட்டது. தோல்வியுற்ற ஆஸ்திரியாவும், ஃபிரான்சும் இவரைத் தடுக்கும் ஆற்றலின்றி இருந்தன. ரஷ்யாவின் நட்பைப் பெரிதும் போற்றிய பிரஷ்யாவாலும், இதனை எதிர்க்க முடியவில்லை. தனித்து நின்ற இங்கிலாந்தும் ரஷ்யாவினைத் தடுத்து நிறுத்த விரும்பவில்லை. 1856ல் ஏற்பட்ட பாரிசு உடன்பாட்டினைப் புறக்கணித்துவிட்டு சார் மன்னர் பால்கன் பிரச்சினையில் தலையிடத் துணிந்தார். துருக்கிக்கு எதிராகப் பால்கன் நாடுகளைத் தூண்டிவிட்டார் இவர். அவையும் ஸ்லாவ் நாடுகள் என்ற முறையில் இவரைப் பெரிதும் நம்பின. 1865ல் துருக்கியை யெதிர்த்துப் புரட்சி செய்யுமாறு கிரீட்டைத் தூண்டினார். அதுபோன்றே 1870ல் பல்கேரியர்களையும் புரட்சி செய்யுமாறு தூண்டினார் சார் மன்னர். 1875ல் பல்கேரியா, ஹெரஜிகோவினா, பாஸ்னியா போன்ற பகுதிகளில் வாழ்ந்த கிருத்துவர்களைத் துருக்கி அடக்க முற்பட்டது. அதனை ஐரோப்பிய நாடுகளும் விரும்ப வில்லை. அப்போது கிருத்துவர்களைக் காப்பாற்றும் போர்வையில் இவர் துருக்கி மீது போர் தொடுத்தார். துருக்கியினையும் தோற்கடித்து அதனுடன் 1878ல் ஸ்டேன்ஸ்டெபேனோ (The Treaty of Stanstefano) என்ற உடன்பாட்டினையும் இவர் செய்துகொண்டார். இவ்வுடன்பாட்டின்மூலம் ரஷ்யா தனது ஆதிக்கத்தினை மீண்டும் பால்கன் பகுதியில் நிலை நாட்டிக்கொண்டது.

ரஷ்யாவின் வெற்றி நீண்ட காலம் நிலைக்கவில்லை. இவ் வெற்றியினைக் கண்டு இங்கிலாந்து அஞ்சியது. அவ்வெற்றியினை முறியடிக்கும்பொருட்டு இங்கிலாந்து தனது கடற்படைகளைக் கருங்கடலுக்கு விரைந்தனுப்பியது. ஃபிரான்சும், ஆஸ்திரியாவும் இங்கிலாந்தை ஆதரித்தன. பால்கனில் மீண்டும் போர் ஏற்படும் நிலையேற்பட்டது. ரஷ்யா பிரஷ்யாவின் துணையை நாடியது. சூழ்ச்சித் திறன் மிக்க பிஸ்மார்க், ரஷ்யாவை ஆதரிக்க மறுத்ததோடு ஆஸ்திரியாவைப் போற்றவும் தொடங்கினர். இதனால், ஸ்டேன்ஸ்டெபேனோ உடன் பாட்டினை மறு ஆய்வு செய்ய ரஷ்யா இசைவு தெரிவித்தது. அதன்பொருட்டு, 1878ல் பெர்லின் நகரில் ஒரு மாநாடும் கூட்டப்பெற்றது. இம் மாநாடு ஸ்டேன்ஸ்டெபேனோ உடன் பாட்டினைப் பெரிதும் மாற்றியது. ரஷ்யா, தனது பால்கன் ஆதிக்கத்தினையும் இம்மாநாட்டின்மூலம் இழந்தது. ஆஸ்திரியாவின் நட்பைப் பெற விரும்பிய பிஸ்மார்க் பாஸ்னியா, ஹெரசிகோவினு போன்ற பகுதிகளை ஆஸ்திரியாவுக்கு வழங்கினர். ஆஸ்திரியா இதன் விளைவாகக் கிழக்குப் பிரச்சினையில் தலையிடும் நல்லதொரு வாய்ப்பினைப் பெற்றது. ரஷ்யா பிரஷ்யாவின் நட்பை இதனால் இழந்தது. பிரஷ்யாவும், ஆஸ்திரியாவும் நட்பு நாடுகளாயின.

இரண்டாம் சார் அலெக்ஸாந்தரின் ஆட்சி ரஷ்ய வரலாற்றில் சிறப்பு மிக்கதோர் ஆட்சியாகும். உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் இவர் சிறப்புற்று விளங்கினர். இவரது காலத்தில் ரஷ்யாவின் செல்வாக்கு மிக உயர்ந்தது. இவரது உள்நாட்டுச் சீர்திருத்தங்கள் இவர்க்கு அழியாப் புகழைத் தேடித் தந்தன. இவர் தமது வெளிநாட்டுக்கொள்கைமூலம் ரஷ்யாவின் எல்லைகளை மிகவும் விரிவுபடுத்தினர். இவர் காலத்தில் ரஷ்யா தனது செல்வாக்கினை ஆசியாமீது நன்கு நிலைநாட்டிக்கொண்டது. சுருங்கக் கூறின் இவரது ஆட்சி, ரஷ்ய வரலாற்றில் சிறப்புமிக்க, பாராட்டத்தக்க நல்லதோர் ஆட்சி எனலாம்.

**புரட்சி இயக்கங்கள் : நிகிலிஸம் : (Nihilism)**

19ஆம் நூற்றாண்டு ரஷ்ய வரலாறு சிறப்புமிக்க ஒன்றாகும். புரட்சி இயக்கங்கள்பற்றிய குறிப்புகள் இல்லையெனில் அவ்வரலாறு நிறைவுபெற்றதாகாது. 19ஆம் நூற்றாண்டில் ரஷ்ய மக்களிடையே மாபெரும் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்திய இயக்கம் நிகிலிஸம் என்ற இயக்கமாகும். 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அடக்குமுறை ஆட்சியின் கொடுமைகளை எதிர்ப்பதையும், மக்களிடையே புதிய கருத்துகளைப் பரப்புவதையுமே இவ்வியக்கம்

நோக்கமாகக் கொண்டு செயல்பட்டது. அன்றைய அரசியல், சமூக, பொருளாதார ஏற்பாடுகளை எதிர்த்து மக்களுக்கு நன்மை புரிய இவ்வியக்கம் முன்வந்தது. டர்ஜினிவ் (Turgeniev) என்ற புகழ்பெற்ற நாவலாசிரியர் தான் நிகிலிஸ்ட் என்ற சொல்லைத் தன்னுடைய சிறப்புமிக்க "தந்தைகளும் தனயன்களும்" (Fathers and Sons) என்ற நாவலில் முதன்முதலில் பயன்படுத்தினார். இந்நாவலின் தலைவனான பெசராவ் (Bazarov) என்ற இளைஞன், புரட்சியாளனாய், கொடுங்கோன்மையினை எதிர்ப்பவனாய்ச் சித்தரிக்கப்பட்டான். அவன்தான் அன்றைய புரட்சியின் சின்னமாய், முற்போக்குக் கருத்துகளின் நிலைக்களனாய், ஏழையரின் நண்பனாய்த் திகழ்ந்தான். அதன்பின்னர், நிகிலிஸ்ட் என்ற சொல் புரட்சிக் கொள்கைகளைக் குறிப்பதாய் மாறியது. அந்நாவலின் தலைவனான பெசராவ் சார் மன்னராட்சியின் கொடுங்கோன்மைக்கு அடிபணியாது அதனை எதிர்த்துச் செயல்பட்டதோடு, அன்றிருந்த அனைத்து நிறுவனங்களையும் அழிக்க வேண்டுமென விரும்பினான். அன்றிருந்த நிறுவனங்கள் அனைத்திலும் மலிந்து கிடந்த ஊழல்களை அவன் மக்களுக்கு எடுத்தியம்பினான். அரசு, திருச்சபை, சமுதாயம் அனைத்தும் குறைபாடுகள் மிக்கவை என்பதை இந்நாவல் நன்கு விளக்கியது. குடும்ப வாழ்க்கை, தனியார் சொத்துரிமை, மூலதனம் இவற்றை இவ்வாசிரியர் இகழ்ந்து தூற்றினார். தங்கு தடையற்ற காதல் வாழ்வினையும், அறிவு சார்ந்த சமயத்தினையும், கூட்டுச் சொத்துரிமையினையும் அவர் பெரிதும் போற்றினார். தொடக்க காலத்தில் நிகிலிஸ்டுகள் அனைவரும் அன்று நிலவிய அனைத்து நிறுவனங்களையும் தூற்றியதோடு அவை அகற்றப்படவேண்டுமெனவும் விரும்பினர். பழையன கழிந்தால்தான் புதியன பூக்கும் என்பது இவர்களது ஆழ்ந்த நம்பிக்கை. நிகிலிஸம் என்றாலே அழித்தல் என்று பின்னர் தவறாகப் புரிந்துகொள்ளுதற்கு இதுவே அடிப்படையாகும்.

எதனையும் அறிவியல் அடிப்படையில் ஆழ்ந்து, அதன்பின்னர் ஏற்புடையதாயின் ஏற்றுக்கொள்ளத்தக்க முறை என்பது இவர்கள் தம் கொள்கை. அன்றைய நிறுவனங்கள் அனைத்தையும் ஆராய்ந்த இவர்கள் அவை குறைபாடுடையவை; அழிக்கப்படவேண்டியவை என வாதிட்டனர். எதிலும் கட்டுப்பாட்டினை இவர்கள் விரும்பவில்லை. சமுதாயத்தில் முற்றிலும் தனித்தன்மை (Absolute Individualism) நிலவ வேண்டும் என இவர்கள் வலியுறுத்தினர். [illegible] களையும் எதிர்த்துப் புரட்சி செய்தனர் அவர்கள் முற்றிலும் பயன்பாட்டுவாதிகள் (Utiliterians). எதனையும் அதன் பயன்

கருதியே ஏற்கவேண்டுமென்பது இவர்கள் தம் தலையாய கொள்கை. அவர்களுக்கு ஒரு மாபெரும் அறிஞனைக் காட்டிலும் ஒரு தச்சன் சிறப்புமிக்கவன். அவர்களுக்குப் பாடல்களினும் தச்சன் செய்யும் பொருள்களே மேலானவை.

தொடக்கத்தில் எதனையும் அழிக்கவேண்டும் எனக் கூறிய நிகிலிஸ்டுகள் காலப்போக்கில் தீவிரப் புரட்சியாளர்களாய் மாறினர். அன்றைய அடக்குமுறையினை எதிர்த்துப் பெரும் புரட்சியாளர்களாக அவர்கள் மாறினர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் புரட்சி, பொருளாதாரக் கருத்துகளும், முறைகளும் அவர்களைப் பெரிதும் கவர்ந்தன. சோஷலிஸக் கருத்துகளின் உயரிய தன்மையினைக் கண்டு அதனைப் போற்றி ஏற்றனர். அத்தகைய பொருளாதாரக் கொள்கை நடைமுறைக்கு வரவேண்டு மெனப் புரட்சி செய்தனர் இப்பெருமக்கள்.

நிகிலிஸ்டுகளுள் தலையானவர் பகுனின் என்பார். இவர் ரஷ்யாவினின்றும் வெளியேற்றப்பட்ட காரணத்தால், லண்டனில் தஞ்சம் புகுந்தார். அனைத்து நிறுவனங்களையும் அழிக்கவேண்டு மென்பது இவர்தம் கொள்கை. உயரிய, மேலான, நல்ல சமுதாய அமைப்பிற்கு இன்றுள்ள அரசு, திருச்சபை, தனியார் சொத்து முறைச் சட்டங்கள் அனைத்தையும் அழிக்கவேண்டுமென இவர் வாதிட்டார். பல்லாயிரக்கணக்கான எளிய மக்கள் இவற்றால், ஏமாற்றப்பட்டும், வஞ்சிக்கப்பட்டும், அடிமைப்பட்டும், அல்லலுற்றும் மடிகின்றனர். இவை அழிக்கப்பட்டால் அவர்கள் முழு உரிமையுடன் வாழ வழி ஏற்படுமென இவர் எடுத்தியம்பினர். இவரது தீவிரக் கொள்கைகள் பலரை ஆட்கொண்டன. சமுதாயத்தின் அனைத்து நிறுவனங்களையும் அழித்தபின்னர், என்ன செய்வது? ஆக்க பூர்வமான பணியேதும் வேண்டாவா எனப் பலர் வினவினர். அதன் விளைவாக, அழிப்பதுடன் ஆக்க வேலையும் மேற்கொள்ளப்பட வேண்டுமென்ற கருத்து வலிமை பெற்றது. நிகிலிஸ்டுகள் பலரும் இக்காரணம்பற்றி சோஷலிசக் கொள்கை களைப் போற்றத் தொடங்கினர். அதன் அடிப்படையில் ஒரு புதிய சமுதாயம் உருவாக வேண்டுமெனவும் விரும்பினர். அதற்கான பணிகளிலும் அவர்கள் தீவிரமாக ஈடுபட்டனர். அவ்வாறு அத்தகைய மேலான பணிகளில் ஈடுபட்டோர்களுள் லவ்ரோவ் (Lavroff) என்பார் சிறப்புமிக்கவர். சமுதாய மாற்றத் திற்கு நல்ல அரசியல், கல்வி வேண்டுமென்பது அவரது கொள்கை யாகும். அவர் வழிநின்று பல நிகிலிஸ்டுகள் மக்களுடன் நேரடித் தொடர்பு கொள்ளவும் முற்பட்டனர். பலர் அவரது சோஷலிஸக் கருத்துகளை ஏற்றுக்கொண்டனர். 1870க்குப் பின்னர், மக்க

ளுக்குக் கல்வி வழங்கவும், அவர்களுக்குப் புரட்சிக் கருத்துகளை எடுத்தியம்பவும் பல்லாயிரக்கணக்கான தன்னலமற்ற நிகிலிஸ்டுகள் தங்களை அர்ப்பணித்துக்கொண்டனர். ரஷ்ய வரலாற்றில் இது ஓர் ஒப்பற்ற தியாக வரலாறாகும். ஏழை, எளியவர், பாட்டாளி, உழவர் அனைவரும் இவர்களால் பெரிதும் ஈர்க்கப் பட்டனர். பாட்டாளிகளின் புதிய உலகம் ஒன்றினைச் சமைப் போம் என்ற நிகிலிஸ்டுகளின் கூற்றுக்குப் பெரும் வரவேற்பு கிட்டியது.[1] அவர்களது வீரம், தன்னலமற்ற பணி மக்களைப் பெரிதும் ஊக்குவித்தது. பல இன்னல்களையேற்று, தன்னலமற்ற தொண்டாற்றியவர்களுள் சோபி பார்டைன் (Sophie Bardine) என்ற வீரமங்கையும் ஒருவர்.[2] இம்மங்கை இப்புதிய கொள்கை களைப் பரப்புவதற்காக ஒரு நெசவாலையில் ஒரு தொழிலாளியாகச் சேர்ந்து நாளொன்றுக்கு 15 மணிகளுக்கு மேலும் உழைத்தார். தொழிற்சாலையில் பணிபுரியும் பெண்டிர்களுக்கு மெல்ல மெல்லத் தமது கருத்தினையும் விளக்கினார். பாட்டாளி மக்களுக்கு இவர் புதிய கொள்கைகள் அடங்கிய துண்டு வெளியீடுகளை வழங்கிய போது, இவர் கைது செய்யப்பட்டார். நீதிமன்றத்தில் புதிய சமுதாயத்தை உருவாக்குவதே தங்களது குறிக்கோள என்பதனை இவர் வெளிப்படையாக ஒப்புக்கொண்டார். இத்தகைய தன்னல மற்ற நிகிலிஸ்டுகள் ரஷ்ய சமுதாயத்தில் மாபெரும் விழிப் புணர்ச்சியை உண்டாக்கினர். 1872லிருந்து 1878-க்குள்ளான காலத்தில் 2000லிருந்து 3000க்கும் மேற்பட்ட புரட்சிக் குழுவினர் செயல்பட்டதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.[3] ஆயினும், இவர்களுக்கு வெற்றி கிட்டவில்லை. பழமையிலும், அறியாமை யிலும் மூழ்கிக் கிடந்த ரஷ்ய மக்கள் இவர்களை ஏற்க மறுத்தனர். இவர்களுள் பெரும்பாலோர் நாடு கடத்தப்பட்டனர். பலர் சைபீரியாவுக்கு அனுப்பப்பட்டனர். பலர் கொல்லப்பட்டனர். அடக்குமுறையின் விளைவாக, அவர்கள் தீவிரவாதிகளாயினர். அடக்குமுறை ஆட்சியினை வன்முறையிலீடுபட்டு அழிக்கவும் அவர்கள் திட்டமிட்டனர். ஆதலின், அவர்கள் வன்முறையி லீடுபடலாயினர். அடக்குமுறைக்குக் காரணம், அரசரே எனக் கருதி அவரைக் கொல்லவும் இவர்கள் திட்டம் தீட்டினர். 1881ல் இரண்டாம் சார் அலெக்ஸாந்தரும் இவர்களது வன்முறைச் செயலுக்கு இரையானார். மக்கள் இவர்களது அயராத பணியால் விழிப்புற்றனர். அதன் விளைவாக, 1905இன் புரட்சியும் 1917இன் புரட்சியும் உருவாயின எனில் மிகையாகாது.

[1] Hazen—p. 590. [2] Ibid. [3] Hazen—P. 590.

**நரோதிச இயக்கம்**

19ஆம் நூற்றாண்டில் ரஷ்யாவில் புரட்சிக் கருத்துகளுக்கு வித்திட்ட மற்றுமோர் இயக்கம் நரோதிச இயக்கமாகும். "நரோட்" என்ற சொல்லுக்கு நண்பன் என்று பொருள். இவ்வியக்கம் நடுத்தர வகுப்பு மக்களின் மாபெரும் இயக்கமாகும். ஹெர்சன் (Herzen), பெலின்ஸ்கி (Belinsky), செர்னிஷீவ்ஸ்கி (Chernyshevsky) போன்ற அறிஞர்கள் இப்புரட்சிக்குத் தலைமை யேற்று மக்களிடையே புரட்சிக் கருத்துகளைப் பரப்பினர். ஹெர்சன் என்பார் "கம்யூன்" என வழங்கப்பெற்ற சமதர்மக் கோட்பாட்டினை மக்களிடையே பரப்பினார். இச்சமதர்மக் கோட்பாடுகளின் விளைவாக வல்லாட்சியின் கொடுமைகளும், சுரண்டலும் நீங்குமென அவர் பகர்ந்தார். "நிலமும் உரிமையும்" (Land and Liberty) என்பதே அவரது புரட்சிக் குரலாகும். உழவர்களுக்கு வேண்டுவது நிலமும் உரிமையும் என்பது இவர்தம் கருத்து. செர்னிஷீவ்ஸ்கி தமது ஒப்பற்ற "என்ன செய்யப்பட வேண்டும்" (What is to be done) என்ற நூலில் கூட்டு இல்லங்களைத் தொடங்கி, மக்களுக்குப் பணிபுரிய வேண்டுமென்றார். மக்கள் கூட்டு முயற்சியிலீடுபட்டுத் தங்கள் துயரங்களைத் துடைத்துக்கொள்ள வேண்டுமென இவர் மக்களுக்கு அறைகூவல் விடுத்தார்.

இவர்கள் வல்லாட்சியும், நிலமானிய உரிமைகளும் மடிந்து சோஷலிஸம் செயலுக்கு வரவேண்டுமென விரும்பினர். ஆயினும், இவர்கள் கம்யூனிஸ்டுகளல்லர். இவர்கள் சோஷலிஸம் என்பதை "கிராமியக கூட்டமைப்பு" (Village commune) என்றனர். இவர்கள் அரசு ஆணைவழி இயங்கும் தொழிற்சாலைகளுக்கு மாறாக ஆங்காங்கு தொழிலாளர்களே நடத்தும் சிறு சிறு தொழிற்சாலைகளே வேண்டுமென வலியுறுத்தினர். கொடுங்கோன்மையமைக்க மைய அரசுக்கு மாறாக மக்கள் நலனுக்காக ஆங்காங்கு சிறு கூட்டரசுகள் அமையவேண்டுமென இவர்கள் இயம்பினர். சோஷலிஸம் என்பது உழவர்களை மையமாகக் கொண்டு உழவர்கள் மூலம் செயலுக்கு வரவேண்டுமென இவர்கள் விரும்பினர். 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவர்கள் மிக்க செல்வாக்குடன் விளங்கினர். இவர்களது இயக்கமும் அடக்கப் பட்ட காரணத்தால், இவர்களும் வன்முறையினை நம்பத் தொடங்கினர். 1879ல் இவர்களது இயக்கத்தில் பிளவு தோன்றியது. அவர்களுள் பெரும்பாலோர் வன்முறையே சிறந்ததென ஏற்றுக் கொண்டனர். அவர்களுள் சிலர் அமைதி வழி நடத்தலே தக்கதென வலியுறுத்தினர்.

இவர்களது தீவிரப் போக்கினையும் மக்கள் விரும்பவில்லை. மக்களிடம் செல்வாக்கு பெறாத இவர்களை அரசும் எளிதில் அடக்கியது. அதன் பின்னர், அவர்களுள் பலர் புரட்சிக் கட்சிகள் பல தோன்றப் பெரிதும் துணை நின்றனர். இவர்களது அயராத, தன்னலமற்ற பணியால் ரஷ்யா பெரிதும் விழிப்படைந்தது. கொடுங்கோன்மையினை எதிர்க்க அவர்கள் துணிந்தனர். உரிமைக்காகப் போராடவும் அவர்கள் முன் வந்தனர். இவர்களின் இம்மாபெரும் விழிப்புணர்ச்சியே ரஷ்யாவில் ஒரு புதிய சமுதாயம் உருவாவதற்குப் பெரிதும் துணை நின்றது.

# 13. பிற ஐரோப்பிய நாடுகள்

**ஹாலந்து, பெல்ஜியம்**

1830 ஜூலைப் புரட்சியின் விளைவாக, ஹாலந்தின் ஆதிக்கத்தினின்றும் பெல்ஜியம் பிரிந்து தனி நாடானது. ஃபிரான்சுக்கு எதிராக உருவாக்கப்பட்ட வலுவான அரண் இப்புரட்சியின் விளைவாக உடைந்துபோனது. ஹாலந்தைப் பொருத்தமட்டில் அது தனது பழைய பெயரான ஹாலந்து அரசு (The kingdom of the Netherlands) என்றே தன்னையழைத்துக்கொண்டது. 1830க்குப் பின்னர் பெரிதும் வணிகத் துறையில் வளர்ந்த இந்நாடு தன்னுடைய சிறிய நிலப்பரப்பின் காரணத்தால், பெரிதும் ஐரோப்பிய அரசியலில் பங்கு பெற இயலவில்லை.

1814லிருந்து 1840 வரை, ஹாலந்தின் அரசராயிருந்தவர் முதலாம் வில்லியமாவார். 1815ல் அவர் தமது நாட்டிற்கு அடிப்படைச் சட்டமொன்றை (Fundamental Law) வழங்கினர். அச்சட்டப்படி அவர் ஒரு வரம்புக்குட்பட்ட முடியரசரானர். இச்சட்டப்படி இரு அவைகளைக்கொண்ட பாராளுமன்றம் (States General) ஒன்று தொடங்கப்பட்டது. இப்பாராளுமன்ற மேலவை உறுப்பினர்களை அரசரே தேர்ந்தெடுத்தார். கீழவை உறுப்பினர்களை மக்கள் வாக்கெடுப்பு மூலம் தேர்ந்தெடுத்தனர். வாக்குரிமை அனைத்து மக்களுக்கும் வழங்கப்படவில்லை. சொத்துடையவர்களுக்கே வாக்குரிமை கொடுக்கப்பட்டது. பாராளுமன்றம் அங்கு செயல்பட்டபோதிலும் அது முற்றிலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவொன்றன்று. அது போன்றே பாராளுமன்றமும் சட்டங்களை யியற்றும் அதிகாரத்தினைப் பெற்றிருக்கவில்லை. சட்டங்களைக் கொண்டு வரவோ, திருத்தங்களைச் செய்யவோ அதற்கு அதிகாரங்கள் வழங்கப்படவில்லை பாராளுமன்றத்தில் அரசின் சார்பில் கொண்டுவரப்படும் சட்டங்களை ஏற்கவோ மறுக்கவோ மட்டும் அதற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. வரவு செலவு திட்டங்கள் மீதும் அதற்கு மிகக் குறைந்த அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன. கொண்டுவரப்படும் வரவு செலவு திட்டத்தினை ஓராண்டுக்கு மட்டும் ஏற்கவோ தள்ளவோ அதற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டதன்று. சிவில் சர்வீஸ் துறைகளைக் கட்டுப்

படுத்தும் அதிகாரமும் பாராளுமன்றத்திற்கு வழங்கப்படவில்லை. பாராளுமன்றம் என்ற பெயரில் அது அரசரின் சொற்படியே இயங்கியது. ஆயினும், அதன் ஒப்புதலைப் பெறுவது அரசரின் கடமையானது. இது அரசியலமைப்பு வரலாற்றில் ஒரு மாபெரும் முன்னேற்றமாகும்.

1815க்குப் பின்னரும் முதலாம் வில்லியம் ஒரு வல்லாட்சியாளராகவே திகழ்ந்தார். 1830ல் ஜூலைப் புரட்சி அவரது தனி வல்லாட்சிக்கு ஓர் அறைகூவலாக அமைந்தது. 1830ல் ஜூலைப் புரட்சியின் விளைவாக டச்சு முற்போக்காளர்கள் அவரைப் பெரிதும் கட்டுப்படுத்த விரும்பினர். பாராளுமன்றத்திற்கு முழு அதிகாரம் வழங்கப்படவேண்டுமென்றும் அரசர் பாராளுமன்றத்திற்குக் கட்டுப்பட்டுச் செயல்படவேண்டுமெனவும் அவர்கள் கிளர்ச்சி செய்தனர். ஆயினும், முதலாம் வில்லியம் அப்புரட்சியினை மிகவும் பொருட்படுத்தவில்லை. காலம் அவர்க்குப் பெரிதும் துணை நின்றது. புரட்சியாளர்கள் மிகச் சிறுபான்மையினரேயாவர். அவர்கள் மக்கள் ஆதரவைப் பெறத் தவறிவிட்டனர். அதோடு மட்டுமன்றி அவர்களிடையேயும் ஒற்றுமையில்லை. அவர்களது ஆதரவின்மையும், ஒற்றுமையின்மையும் அரசர்க்கு மிக்க நன்மையாய் அமைந்தது. ஆதலின், அவர் புரட்சியாளர்களின் வேண்டுகோளை ஏற்க மறுத்தார். ஆயினும், நாள்கள், செல்லச் செல்ல அவரது வல்லாட்சிக்கும் எதிர்ப்பு மிகுந்தது. எதிர்ப்புக்கிடையில் மன்னர் 1840ல் மறைந்தார். அவர்க்குப் பின்னர், அவருடைய மைந்தர் இரண்டாம் வில்லியம் அரியணையேறினார். 1840லிருந்து 1849 வரை அவரே அரசுக் கட்டிலில் வீற்றிருந்து கோலோச்சினார்.

இரண்டாம் வில்லியம் காலத்தில் ஐரோப்பாவில் மாபெரும் மாறுதல்கள் பல ஏற்பட்டன. மக்கள் பெரிதும் விழிப்படைந்திருந்தனர். உரிமை, சமத்துவம், மக்களாட்சி போன்ற கருத்துகள் மக்களிடையே மாபெரும் செல்வாக்கு பெற்றிருந்தன. வியன்னா மாநாட்டு ஏற்பாடுகளை மக்கள் பெரிதும் எதிர்க்கத் தொடங்கிவிட்டனர். வல்லாட்சிக்கும் எதிர்ப்புகள் மிகுந்தன இரண்டாம் வில்லியம், காலத்தின் போக்கை நன்குணர்ந்து கொண்டார். அதற்கேற்த்தக செயல்படவும் துணிந்தார். 1848ல் தோன்றிய பிப்ரவரிப் புரட்சியால் அவர் பெரிதும் அகர்ந்து போனார். புரட்சியாளர்கள் அவரது வல்லாட்சியினை எதிர்த்துப் போர்க்கோலம் பூண்டனர். பாராளுமன்றத்திற்கு அனைத்து அதிகாரங்களும் வழங்கப்படவேண்டும். பாராளுமன்றம் மக்களுக்குப் பொறுப்பாக இருக்கவேண்டுமேயன்றி மன்னர்க்கன்று.

மன்னர் பாராளுமன்ற விருப்பப்படி இயங்கவேண்டுமெனப் புரட்சி யாளர்கள் கூக்குரலிட்டனர். அக் கூக்குரலை மன்னராலும் புறக்கணிக்க இயலவில்லை. இரண்டாம் வில்லியமும் அரசிய லமைப்பில் மாற்றம் செய்ய முன்வந்தார். அரசியலமைப்புத் திருத்தம்பற்றி ஆராய ஒரு குழு நியமிக்கப்பட்டது. அக் குழுவின் பரிந்துரைகளை ஆராய 1848ல் பாராளுமன்றமும் கூட்டப்பெற்றது. பாராளுமன்றம் அப் பரிந்துரைகளை ஏற்று அரசியலமைப்பினை மாற்றியமைத்தது. 1848ல் திருத்தியமைக்கப்பட்ட (Revised Constitution of 1848) அரசியலமைப்புப்படி அரசரதுஅதிகாரங்கள் பெரிதும் குறைக்கப்பட்டன. மிகுதியான அதிகாரங்கள் பெரிதும் குறைக்கப்பட்டன. மிகுதியான அதிகாரங்கள் பாராளுமன்றத் திற்கு வழங்கப்பட்டன. பாராளுமன்ற மேலவை உறுப்பினர் களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையினை அரசர் இழந்தார். திருத்தப்பட்ட அரசியலமைப்புப்படி மேலவை உறுப்பினர்களை மாநிலச் சட்டமன்றங்கள் தேர்ந்தெடுக்கும் உரிமையினைப் பெற்றன. கீழவை உறுப்பினர்களை மக்களே தேர்ந்தெடுத்தனர். வாக்குரிமை வரி செலுத்துபவர்களுக்கு மட்டுமே வழங்கப் பட்டது. அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்கே பொறுப்புடையவர் களெனவும் இத்திருத்தப்பட்ட அரசியலமைப்பு வலியுறுத்தியது. பாராளுமன்றமும் சட்டங்களை இயற்றும் அதிகாரத்தினைப் பெற்றது. திருத்தப்பட்ட 1848இன் அரசியலமைப்புச் சட்டம் ஹாலந்து அரசியலமைப்பு வரலாற்றில் சிறப்புமிக்க ஒன்றாகும் எனில் மிகையாகாது.

ஹாலந்து 11 மாநிலங்களைக் கொண்ட ஒரு கூட்டரசாகும். ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு சட்டமன்றமிருந்தது. இச் சட்ட மன்றங்கள் யாவும் சிறப்புரிமைகள் பல பெற்றுத் திகழ்ந்தன. உள்ளாட்சித் துறையில் அனைத்து அதிகாரங்களையும் பெற்றுச் சிறப்புடன் திகழ்ந்தன அவை. இச் சட்டமன்ற உறுப்பினர் களனைவரும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சொத்துகளை யுடைய சிறுபான்மையினரே வாக்குரிமை பெற்றுத் திகழ்ந்தனர். இது ஹாலந்தில் மட்டுமன்று. பாராளுமன்றத்தின் தாயகமெனப் போற்றப்படும் இங்கிலாந்திலும் 1848-ல் இதே நிலைதான் நிலவிய தெனில் மிகையாகாது. 1848க்குப் பின்னர், வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை நல்கப்படவேண்டுமென்ற போராட்டம் இங்கு மிகுந்தது 1887இல் கொண்டுவரப்பட்ட அரசியலமைப்புச் சீர்திருத்தம் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும். இதனால் ஹாலந்தில் வாக்குரிமை விரிவுபடுத்தப்பட்டது. வீடுடையோர் அனைவரும் (House-holders) வாக்குரிமை பெற்றனர். 1887க்கு முன்னர், 1,40,000 பேர்களே வாக்குரிமை பெற்றிருந்தனர். 1887க்குப்

பின்னர், 8`0,000க்கு மேற்பட்டோர் வாக்குரிமை பெற்றனர்.[1] 1917-ல்தான் வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை நல்கப் பட்டது.

ஐரோப்பிய வரலாற்றில் ஹாலந்து ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. சமயச் சீர்திருத்தத்திற்குப் பின்னர், அது புராட்டஸ்டன்ட் சமயத்தைத் தழுவியதால், புதுப் பொலிவு பெற்றது. விடுதலை பெற்ற பின்னர், அது கடல் வாணிகத்தில் மிகச் சிறப்புற்று விளங்கியது. ஐரோப்பாவிலேயே இங்கிலாந்திற்கு அடுத்து கடல் வணிக நாடாகச் சிறப்புற்றுத் திகழ்வது இந்நாடு தான். கிழக்கிந்தியத் தீவுகளிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும் தனது குடியேற்றங்களை நிறுவி, பிற வல்லரசுகளுடன் பீடு நடைபோட்டது இச்சிறு நாடு. 7,000,000 மக்கள் தொகையினைக் கொண்ட இச்சிறு நாடு 47,000,000க்கு மேற்பட்ட மக்கள் தொகையினைக் கொண்ட பரப்பளவில் தனது குடியேற்றங்களை நிறுவியது ஒரு மாபெரும் சாதனையாகும். காப்பி, சர்க்கரை, இன்டிகோ, வாசனைப் பொருள்களைத் தனது குடியேற்றங்களி லிருந்தும் பெற்று 19-ஆம் நூற்றாண்டு முழுவதும் மிகச் சிறப் பெய்தித் திகழ்ந்தது இச்சிறு நாடு.

**பெல்ஜியம்**

1830-ல் ஜூலைப் புரட்சி பெல்ஜிய வரலாற்றில் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும். அப் புரட்சிக்குப் பின்னர், அது தனி நாடானது. 1831-ல் அது தனக்கென ஓர் அரசியலமைப்பினையும் தீட்டிக் கொண்டது. அதுதான் அந்நாட்டின் இன்றைய அரசியலமைப்பின் அடிப்படையாகும். அவ்வரசியலமைப்புப்படி பெல்ஜியம் மரபுவழி அரசரை ஏற்றுக்கொண்டது. இரு அவைகளைக் கொண்ட பாராளு மன்றமொன்றும் தொடங்கப்பட்டது. அமைச்சரவையும் நிறுவப் பட்டு அது பாராளுமன்றத்திற்கே பொறுப்பாயிருக்குமெனவும் கூறப்பட்டது. நற்பேறு காரணமாக, பெல்ஜியம் பாராளுமன்ற முறையில் சிறப்புற்றுத் திகழ்ந்தது. அதற்குக் காரணம், அந் நாட்டரசர் முதலாம் லியோபால்டேயாவார். அவர் பாராளு மன்ற முறைகளைச் செவ்வையாகப் பின்பற்றினார். தமதுடைய அமைச்சர்களையும் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்றுத் திகழ்ந்த கட்சியிலிருந்தே தேர்ந்தெடுத்துக்கொண்டார். அவர் 1831லிருந்து 1865 வரை அரசராயிருந்து அந்நாட்டிற்கு நல்ல தொண்டினையாற்றினார். நாட்டுக்கு நலன் பயக்கும் அனைத்துச் செயல்களிலும் மிக்க ஈடுபாடு காட்டினார் இவ்வரசர். அக் காலத்தில்

[1] Hazen—p. 529.

மிகச் செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்த இந்த நல்ல அரசர் தமது செல்வாக்கு முழுவதையும் நாட்டு நலனுக்குப் பயன்படுத்தினர். ஐரோப்பிய நாடுகளனைத்தும் இதன் நடுநிலைமைக்கு உறுதி யளித்தன. ஆயினும், நல்ல நிர்வாகத்திற்கும் பாதுகாப்பிற்கும் நல்லதொரு படை வேண்டுமெனக் கருதிய இவர் 1,00,00ப படையினரைக் கொண்ட திறமையான படையொன்றையும் நிறுவினர். பல்கலைக் கழகங்கள் பலவற்றை நிறுவி, நாட்டின் நிலையை மேம்படுத்தினர் முதலாம் லியோபால்டு. நாடெங்கும் தொடக்கப் பள்ளிகள், நடுத்தரப் பள்ளிகள், நிறுவப்பட்டன. உழவும், வணிகமும், தொழிலும் சிறக்குமாறு பல சட்டங்கள் இயற்றப்பட்டன. அரசியலமைப்புப்படி சமய உரிமை, பேச்சுரிமை, எழுத்துரிமை போன்றவையும் நல்கப்பட்டன. அமைதியான இவரது ஆட்சியில் நாடு மிக வேகமாக முன்னேறியது. அறிவுத் துறையிலும், பொருளாதாரத் துறையிலும், பெல்ஜியம் ஐரோப்பிய நாடுகளிலேயே மிகச் சிறப்புற்றுத் திகழ்ந்தது.

1865ல் இப் பண்பாளர் மறைந்தார். அவர்க்குப் பின்னர், அவருடைய மைந்தரான இரண்டாம் லியோபால்டு பெல்ஜிய அரசரானர். இவர்தான் 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி முழுவதும் பெல்ஜிய அரசராக வீற்றிருந்தார். 1909 வரை பெல்ஜியத்தின் அரசராக இருந்து பல்வேறு பிரச்சினைகளை இவர் எதிர்நோக்கி நின்றார். இவர் காலத்தில் தோன்றிய மிக முக்கியமான போராட்டம் வாக்குரிமையைப் பற்றியதாகும். மக்களாட்சியே அங்கு நடந்தபோதும் உண்மையில் பெரும் பான்மையான மக்களுக்கு வாக்குரிமை நல்கப்படாமலிருந்தது. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் மிகச் சிறப்புற்றுத் திகழ்ந்த சோஷலிஸ்டுகள் வாக்குரிமைக்காகப் போராடத் தொடங்கினர். பெரும் சொத்துடையோர்களுக்கு மட்டும் வாக்குரிமை நல்கப் பட்டிருந்தது. 1890ல் அந்நாட்டின் மொத்த மக்கள் தொகை 6 மில்லியனாகும். அவர்களுள் 1,35,000 பேர்களுக்கு மட்டுமே வாக்குரிமை கொடுக்கப்பட்டிருந்தது. அதாவது, 40 பேர்களுள் ஒருவர்க்கே அங்கு வாக்குரிமை அளிக்கப்பட்டிருந்தது. தொழிற் புரட்சிக் காரணமாக, தொழிற்சாலைகளும், நகரங்களும் வளர்ந் தன. பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வாக்குரிமை கொடுக்கப்படவில்லை. ஆகவே, அவர்கள் வயது வந்தோர் அனைவர்க் கும் வாக்குரிமை கொடுக்கப்படவேண்டுமெனப் போராடத் தலைப் பட்டனர். 1893ல் அரசியலமைப்பும் மாற்றப்பட்டு வாக்குரிமை விரிவுபடுத்தப்பட்டது. 25 ஆண்டுகள் நிறைந்த அனைவர்க்கும் வாக்குரிமை நல்கப்பட்டது. ஆயினும், அவப்பேறு காரணமாக, பன்மை வாக்குரிமை முறை (Plural Voting) அங்கு பின்பற்றப்

பட்டது. வயதுடன், சொத்துரிமை போன்றவற்றிற்கும் கூடுதல் வாக்கு கொடுக்கப்பட்டது. காட்டாக, மிகுதியான சொத்துடையோர் 25 வயதுக்குப் பின்னர், வயதுக்கென ஒரு வாக்கும், சொத்துக்கென பிறிதொரு வாக்கும் பெற்றனர். இரு வாக்குகளைப் பெற்ற அவர்கள் மக்களாட்சியில் தங்களுக்கு வேண்டியவற்றைச் சாதித்துக் கொள்ளுதல் எளிதாயிற்று. இதனால், வசதி பெற்றோரும், வாய்ப்புடையோரும் மக்களாட்சி என்ற பெயரில் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். ஒரு வாக்கினையே பெற்றிருந்த பாட்டாளிகளும் பிறரும் மக்களாட்சியில் சிறப்பெய்த முடியவில்லை. இந்தப் பன்மை வாக்குரிமையினைச் சோஷலிஸ்டுகள் வன்மையாக எதிர்த்தனர். "ஒருவர்க்கு ஒரு வாக்கு மட்டுமே" என அவர்கள் வேண்டினர். பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுவதிலுமே அவர்களது வேண்டுகோள் வெற்றி பெறவில்லை. அங்கிருந்த மிக முக்கியமான கட்சிகள் சோஷலிஸ்டுக் கட்சியும், கத்தோலிகக் கட்சியுமாகும். பெல்ஜிய மக்களுள் பெரும்பான்மையோர் கத்தோலிகர்களென்ற முறையில் கத்தோலிகக் கட்சியினையே பெரிதும் ஆதரித்தனர். ஆகவே, 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முழுவதிலுமே சோஷலிஸ்டுகள் தங்கள் கொள்கைகளைச் செயலுக்குக் கொண்டு வருவதற்குப் போராட நேரிட்டது. நடுநிலையில் நின்ற இச்சிறு நாடு அமைதியிலேயே பெரிதும் நாட்டம் செலுத்தியது.

**ஸ்விட்சர்லாந்து**

ஐரோப்பாவில் மிகுந்த அமைதியோடு வாழ்ந்த நாடுகளில் ஸ்விட்சர்லாந்தும் ஒன்று. 1815ல் ஸ்விட்சர்லாந்தில் 22 மாநிலங்கள் அல்லது கன்டோன்கள் (Cantons) இருந்தன. அவற்றின் அரசுகள் பெரிதும் மாறுபட்டிருந்தன. சிறிய கன்டோன்களின் விவகாரங்களை மக்களே திறந்த வெளியிலோ அல்லது ஒரு புல்தரையிலோ சந்தித்து நேரிடையாகவே முடிவு செய்தனர். அவர்களே நேரடியாக உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தனர். தங்களுக்கு வேண்டும் சட்டங்களையும் அக்கூட்டங்களிலேயே இயற்றிக்கொண்டனர். இவ்வாறு சில சிறிய கன்டோன்களில் நேரடி மக்களாட்சி செயலிலிருந்தது. சற்று பெரிய கன்டோன்களில் நேரடி மக்களாட்சி நடைமுறைக்கு ஒவ்வாதிருந்த காரணத்தால், அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட தங்கள் உறுப்பினர்கள்மூலம் தங்கள் கன்டோன்களை நிர்வகித்துக்கொண்டனர். இவற்றில் பெரும்பாலும் செல்வர்களே செல்வாக்கு பெற்றுத் திகழ்ந்தனர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அவர்கள் கன்டோன்களின் நிர்வாகத்தில் பெரும் பங்கேற்றனர். பெரும்பாலான கன்டோன்கள் செல்வர்களது ஆதிக்கத்திலேயே இருந்தன. அனைத்துக் கன்டோன்களுக்கும் பொதுவான ஒரு பாராளு

மன்றமும் இருந்தது (Diet). அது கன்டோன்கள் தேர்ந்தெடுத்தனுப்பும் உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பொது அவையாகும். இவ்வுறுப்பினர்கள் தங்கள் கன்டோன்களின் ஆணைப்படியே பாராளுமன்றத்தில் இயங்குவர். இப்பாராளுமன்றத்திற்கும் கன்டோன்களைக் கட்டுப்படுத்தவல்ல மிகுதியான அதிகாரங்கள் வழங்கப்படவில்லை. ஆதலின் இதனை ஒரு கூட்டரசு என்பதிலும் (Federal State), அரசுகளின் கூட்டு (Federation of States) என்பதே முற்றிலும் பொருத்தமாகும். 1815ல் இந்தக் கன்டோன்கள் செய்துகொண்ட ஒப்பந்தந்தான் இதனுடைய அரசியலமைப்பாகும். இதற்கென்று ஒரு தலைநகரும் இல்லாதது ஈண்டு நினைவு கூரவேண்டியவொன்றாகும். இதனுடைய பொதுப் பாராளுமன்றமும், பெர்ன் (Bern), ஜூரிச் (Zurich) போன்ற நகரங்களில் மாறி மாறிக் கூடியது.

ஸ்விட்சர்லாந்தைப் பொருத்தமட்டில் வலுவுள்ள மைய அரசு என்பது இல்லாதுபோய்விட்டது. ஆகவே, அங்கு அனைத்தும் கன்டோன்கள் வழியே இயங்கின. போக்குவரத்து, தபால் துறைகள் கூட, கன்டோன்கள் வசமே இருந்தன. நாணய முறையும் கன்டோன்களின் ஆதிக்கத்திலேயே இருந்தது. அம் மக்களும் தங்களை ஒரு குறிப்பிட்ட கன்டோனின் குடிகளெனக் கருதினரேயன்றி ஸ்விட்சர்லாந்தின் குடிமக்களெனக் கருதிக்கொள்ளவில்லை. வெளிநாடுகளுடன் இக் கன்டோன்களே வணிக உடன்பாடுகளும் செய்துகொண்டன. 1815இன் ஒப்பந்தம் மிகவும் தெளிவில்லாதிருந்தது. அதில் பேச்சுரிமை, எழுத்துரிமை, சமய உரிமை போன்றவைபற்றிக் குறிப்பேதுமில்லை. ஆகவே, அவற்றையும் கன்டோன்களே தீர்மானித்தன. பல கன்டோன்கள் அவ்வுரிமைகளை வழங்கின ; பல அவற்றை மறுத்தன.

பல கன்டோன்களில் அவற்றிற்கென்று நிறுவப்பட்ட திருச்சபைகளிருந்தன. அவை அவற்றின் உறுப்பினர்களைத் தவிர, பிறரை அனுமதிக்கவும் மறுத்தன. கன்டோன்களில் பல புராட்டஸ்டன்ட் சமயத்தினையும், மற்றவை கத்தோலிக சமயத்தினையும் ஏற்றிருந்தன. அவை பிற சமயத்தினரைத் தங்களது திருச்சபைகளில் அனுமதிக்க மறுத்தன. சமயத் துறையில் அவற்றிடையே தாராளப் போக்கு இல்லையென்றே கூறலாம். கல்வியும் கன்டோன்களின் ஆதிக்கத்திலேயே இருந்தது. ஆகவே, நாடு முழுவதற்குமான ஒரு பொதுக் கல்வியும் அங்கு இல்லாமலிருந்தது. கன்டோன்களாகப் பிரிந்து கிடந்த நாட்டில் ஒற்றுமையென்பதற்கு வாய்ப்பே இல்லாமலிருந்தது.

1815லிருந்து 1830 வரை அனைத்து மாநிலங்களும் பிற்போக்குக் கொள்கை வழியே நின்றன. 1830க்குப் பின்னர், அங்கும் பல மாற்றங்கள் தோன்றின. இதுகாறும் செல்வாக்கு பெறாத மக்கள் 1830க்குப் பின்னர், தங்களுக்கும் உரிமை வழங்கப் படவேண்டுமெனவும் போராடத் தொடங்கினர். கன்டோன் அரசு களும் அவர்களின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டன. பேச்சுரிமை, எழுத்துரிமை, வயது வந்தோர் அனைவர்க்கும் வாக்குரிமை போன்றவற்றைக் கன்டோன் அரசுகள் படிப்படியாக மக்களுக்கு வழங்க முன்வந்தன.

சீர்திருத்தங்கள் வேண்டுமென்று கூறிய முற்போக்காளர்கள் நாட்டின் அடிப்படை முறையினையும் நன்குணரத் தலைப்பட்டனர். தங்களது நாட்டிற்கு வலுவுள்ள மைய அரசில்லாத குறையை அவர்கள் போக்க முன்வந்தனர். உரிமையுடன் தங்களுக்கு வலுவுள்ள மைய அரசும் வேண்டுமென் அவர்கள் போராடத் தலைப்பட்டனர். உரிமைகளனைத்தையும் தங்களிடமே கொண்டு விளங்கிய கன்டோன்கள் அதனை எளிதில் ஏற்க முன்வரவில்லை. அதன் விளைவாக உள்நாட்டுப்போர் ஏற்பட்டதும் ஈண்டு நினைவு கூரவேண்டிய ஒன்றாகும்.

ஸ்விட்சர்லாந்தில் பெரும் மாற்றங்களைப் புகுத்த தீவிரக் கட்சி யினர் பெரிதும் விரும்பினர். சமய உரிமை, சமயச் சார்பற்ற கல்வி, சமயச் சார்பற்ற நாடு இவற்றை அடைவதே தன்னுடைய மாபெரும் கொள்கையென அறிவித்தது தீவிரக் கட்சி (The Radical Party). இதனைக் கத்தோலிகக் கன்டோன்கள் விரும்பவில்லை. அங்கிருந்த ஏழு கத்தோலிக கன்டோன்களும் தீவிரக் கட்சியின் கொள்கையினை ஏற்க முற்றிலும் மறுத்தன. சமயமும், கல்வியும் அவர்கள் கையிலே இருந்த காரணத்தால், அத்துறைகளில் தங்களது கட்டுப்பாட்டினை அவை தீவிரப்படுத்தின. இதன் காரணமாக, கத்தோலிக கன்டோன்களுக்கும், தீவிரக் கட்சியினர்க்குமிடையே மிகுதியான பகைமை வளர்ந்தது. கத்தோலிக கன்டோன்கள், மாநிலங் களுக்கே மிகுதியான உரிமைகள் வேண்டுமென்றன. மைய அரசும் வேண்டாதவொன்று என்றும் அதனைத் தூற்றின. தீவிரக் கட்சியினர் நாட்டுக்கு மிக இன்றியமையாதது வலுவுள்ள மைய அரசு. நல்ல கொள்கைகளைச் செயல்படுத்த வலுவுள்ள மைய அரசு வேண்டுமென அவர்கள் இயம்பினர். இதன் காரணமாக, இவ்விரு சாராரிடையே கருத்து வேறுபாடு மிகுந்து அது இறுதியில் உள்நாட்டுப் போர்க்கு வழிவகுத்தது.

1847ல் கத்தோலிக கன்டோன்கள் அனைத்தும் ஒன்று கூடி ஒரு கூட்டணியை நிறுவிக்கொண்டன (Sonderbund).

இக்கூட்டணிமூலம் தங்களது நலனைக் காத்துக்கொள்ள அவை விரும்பின. இதனைத் தீவிரவாதிகள் முற்றிலும் விரும்பவில்லை. பாராளுமன்றத்தில் அக்கூட்டணியைக் கண்டித்துப் பேசியதோடு அது உடனடியாகக் கலைக்கப்படவேண்டுமெனவும் பாராளுமன்றத்தை வேண்டினர். பாராளுமன்றமும் அவர்களது வேண்டுகோளுக்கிணங்க கத்தோலிகக் கூட்டணி உடனடியாகக் கலைக்கப்படவேண்டுமென ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. கத்தோலிகப் பெருமக்கள் தங்களது கூட்டணியைக் கலைக்க மறுத்ததால், 1847ல் உள்நாட்டுப் போர் ஏற்பட்டது. நற்பேறு காரணமாக, அப்போரில் கூட்டரசின் படைகளே வென்றன. எண்ணிக்கையில் மிகக் குறைந்த அளவிலிருந்த கத்தோலிகக் கூட்டணிப் படைகள் எளிதில் தோற்கடிக்கப்பட்டன. கத்தோலிகக் கூட்டணியும் (Sonderbund) உடனடியாகக் கலைக்கப்பட்டது. கத்தோலிக வெறியர்களும், இயேசு சங்கத்தினரும் நாடு கடத்தப்பட்டனர். வெற்றிபெற்ற தீவிரவாதிகள் தங்களது கொள்கையினை நிறைவேற்ற முன்வந்தனர். கூட்டரசின் கையைப் பெரிதும் வலுப்படுத்த விரும்பினர். 1848ல் ஒரு புதிய அரசியலமைப்பினைத் தீட்டி அதன் மூலம் அவர்கள் தங்களது திட்டத்தினை நிறைவேற்றிக் கொண்டனர். நாட்டை மிகவும் சீர்குலையச் செய்த 1815இன் ஒப்பந்தம் புறக்கணிக்கப்பட்டு ஒற்றுமை வலியுறுத்தப்பட்டது. இவ்வரசியலமைப்பு ஸ்விட்சர்லாந்தை ஒரு வலுவுள்ள கூட்டரசாக (Federal Union) மாற்றியது.

இப்புதிய அரசியலமைப்புப்படி இரு அவைகளைக் கொண்ட ஒரு கூட்டுப் பாராளுமன்றம் (Federal Legislative) இருக்குமெனத் தீர்மானிக்கப்பட்டது. தேசிய மன்றம் (National Council) மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. 20,000 மக்களுக்கு ஓர் உறுப்பினர் என்ற விகிதத்தில் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, தேசிய மன்றத்திற்கு அனுப்பப்படுவரென முடிவு செய்யப்பட்டது. மாநில மன்றத்தினைப் பொருத்தமட்டில் (Council of States) ஒவ்வொரு கன்டோனும் இரண்டு உறுப்பினர்களை அனுப்பி வைக்கும் என அறிவிக்கப்பட்டது. இவ்விரு மன்றங்களும் ஒன்றுகூடி எழுவரடங்கிய கூட்டுமன்றம் (Federal Council) ஒன்றைத் தேர்ந்தெடுக்கும். அம்மன்றம் நாட்டின் நிர்வாகத்திற்குப் பொறுப்பேற்கும். இவ்வெழுவர் கூட்டுமன்றம் தங்களது தலைவரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும். அவர் "ஸ்விஸ் கூட்டரசின் தலைவர்" (President of Swiss Confederation) என அழைக்கப்படுவார் எனவும் அறிவிக்கப்பட்டது. இக்கூட்டரசு பெர்ன் (Bern) என்ற இடத்தைத் தனது தலைநகராகத் தேர்ந்

தெடுத்துக்கொண்டது. இது ஸ்விட்சர்லாந்து வரலாற்றில் மாபெரும் திருப்பு முனையாகும்.

இந்த அரசியலமைப்பை நான்கில் மூன்று (Three Fourths) பங்கு கன்டோன்களும், மூன்றில் இரண்டு பங்கு வாக்காளர்களும் ஏற்றுக்கொண்டதால், உடனடியாக அது செயலுக்கு வந்தது. இதனால், ஸ்விட்சர்லாந்து ஒரு வலுவுள்ள கூட்டரசாக மாறியது. முதன் முதலாக ஸ்விட்சர்லாந்து என்பது ஒரு நாடாக மாறியது. நாட்டுப்பற்று இறுதியில் அங்கும் வென்றது. உண்மையான மக்களாட்சியினைக் கொண்ட ஒரு நாடாக ஸ்விட்சர்லாந்து மாறியது. மிகுதியான அதிகாரங்கள் மைய அரசுக்கு வழங்கப்பட்டன. வெளிநாட்டு விவகாரங்கள், படையினைக் கட்டுப்படுத்தல், வரிவிதிப்பு, போக்குவரவு, நாணய வெளியீடு போன்ற அனைத்து முக்கியத் துறைகளும் மைய அரசின் அதிகாரத்தின்கீழ் வந்தன. கன்டோன்களுக்கும் சில அதிகாரங்கள் வழங்கப்பட்டன. கல்வியும், சமயமும் தொடர்ந்து அவற்றின் அதிகாரத்திலேயே இருந்தன. இதைச் சில கன்டோன்கள் ஏற்கத் தயங்கின. ஆயினும், பெரும்பாலான கன்டோன்கள் புதிய அரசியலமைப்பினை ஏற்றுக்கொண்டதால், அவையும் இதனை ஏற்றுக்கொள்ளும் நிலையேற்பட்டது. முதன் முதலாக நாட்டு நலனே கன்டோன்களின் நலனிலும் தலையானது என்பது உணரப்பட்டது. நடுநிலைக் கொள்கையினை ஏற்று அமைதி வழியில் இன்றும் நடக்கும் நாடு இதுவாகும்.

**ஸ்கான்டிநேவிய நாடுகள்**

**(1) டென்மார்க்: 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்** நெப்போலியனுக்கு நட்பு நாடாக இருந்த ஒரே ஒரு நாடு டென்மார்க்காகும். இதனைப் பிற நாடுகள் விரும்பவில்லை. நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பிறகு, வெற்றி நாடுகள் இதற்கு ஒரு படிப்பினையைத் தரத் துணிந்தன. வெற்றி பெற்ற நாடுகள் 1814ஆம் ஆண்டு, ஜனவரித் திங்களில் அதனுடன்கீல் உடன்பாடு (The Treaty of Kiel) ஒன்றினைச் செய்துகொண்டனர். அதன்படி அது நார்வேயை ஸ்வீடனுக்குக் கொடுக்குமாறு கட்டாயப்படுத்தப்பட்டது. நார்வேயுடன் இந்நாடு மூன்றில் இரண்டு பங்கு மக்கள் தொகையினையும் இழந்தது. தொழிலும் வணிகமும் இதனால் அங்குப் பெரிதும் சீர்குலைந்துபோயின. பொருளாதார நெருக்கடியும் அங்கு மிகுந்தது. 1815ல் அந்நாட்டின் நிலை மிக இரங்கத்தக்கதாக இருந்தது.

1808லிருந்து 1839 வரை டென்மார்க்கின் அரசராக இருந்தவர் 6ஆம் பிரடெரிக்காவார். அரசரும் தன் வல்லாட்சியாளராய்த்

திகழ்ந்தார். மக்களுடைய உரிமைக்காகப் போராடும் நிறுவனங்கள் அங்கு ஏதும் நிலவவில்லை. அரசரைக்கட்டுப்படுத்தவல்ல அவையும் அங்கில்லை. இதனுல், மக்கள் நலன் பெரிதும் புறக்கணிக்கப்பட்டது. 1830 வரை அங்கு எத்தகைய முக்கிய அரசியல் நிகழ்ச்சியும் நடைபெறவில்லை. பொருளாதாரச் சீர்கேட்டில் உழன்ற ஒரு நாடு அரசியலைப்பற்றிக் கவலைப்பட இயலாதென்பதற்கு இந்நாடே மாபெரும் சான்ருய்த் திகழ்ந்தது. நார்வேயின் இழப்பினை அது பல ஆண்டுகள் ஈடுகட்ட முடியவில்லை. இக்கொடுமையினை அம்மக்கள் பெரிதும் வெறுத்தனர். வல்லரசுகளுக்கெதிராக ஒன்றும் செய்ய இயலாது என்பதனை நன்கறிந்து வாய் மூடி மௌனிகளாய் அம்மக்கள் நின்றனர்.

1830க்குப் பின்னர், அந்நாடு முற்போக்குப் பாதையில் அடிவைக்கத் தொடங்கியது. அதற்குப் பெரிதும் துணைநின்றவர் அந்நாட்டரசர் 6ஆம் பிரடெரிக்கேயாவார். மக்களைக் கலந்தாலோசித்து நிர்வாகம் புரியும்பொருட்டு, நான்கு மன்றங்களை (Consultative Bodies) நிறுவினர். ஜட்லாந்து, ஸ்வெல்ஸ்விக், ஹோல்ஸ்டீன், தீவுகள் ஆகிய இடங்களில் அந்நான்கு மன்றங்களும் நிறுவப்பட்டன. இந்த மன்றங்களைச் சொத்துடைய மக்கள் ஆறு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுத்தனர். சட்டங்களையும், வரிவிதிப்பையும் ஆராய இவை அனுமதிக்கப்பட்டன. அரசின் செயல்களைத் திறனாய்வுகூட செய்ய இவை அனுமதிக்கப்பட்டன. ஆயினும், அவற்றிற்கு உண்மையான அதிகாரங்கள் வழங்கப்படவில்லை. அவை அரசனுக்கு அறிவுரை வழங்க அனுமதிக்கப்பட்டன. அவரைக் கட்டுப்படுத்த அவற்ருல் இயலாது. அரசரும் அவற்றின் அறிவுரைகளை ஏற்கவோ அல்லது தள்ளவோ செய்யலாம். அவை இரகசியமாகச் சந்தித்தன. அவற்றினது ஆலோசனைகளும் வெளியிட அனுமதிக்கப்படவில்லை. 6ஆம் பிரடெரிக் காலத்தில் பாராளுமன்றத் துறையில் எத்தகைய முன்னேற்றமும் ஏற்படவில்லை. முற்போக்குத் துறையிலும் நாடு முன்னேறவில்லை.

6ஆம் பிரடெரிக்குப் பின்னர், அவருடைய மைந்தர் 8ஆம் கிறிஸ்டியன் (Christian VIII) அரியணையேறினர். 1839லிருந்து 1848 வரை இவரே அரசுபுரிந்தார். முற்போக்கெண்ணம் கொண்ட இம்மன்னர், பட்டத்துக்கு வந்ததை மக்கள் பெரிதும் வரவேற்றனர். அவர்களிடை ஒரு விழிப்புணர்வும் ஏற்பட்டிருந்த காரணத்தால், முற்போக்குக் கொள்கைகளை மன்னர் பின்பற்றுவார் என எதிர்பார்த்தனர். ஆயினும், அரசர் முற்போக்குத் திட்டங்களைச் செயல்படுத்தத் தயங்கியதால், அவர்கள் பெரிதும் வெறுப்படைந்

தனர். ஆகவே, அவர்களும் பிற ஐரோப்பிய மக்களைப் போன்று போராட்டங்களிலிடுபட்டனர். 1818ல் அவர்களது தீவிரமான போராட்டத்தினைக் கண்டஞ்சிய 8ஆம் கிறிஸ்டியன், அவர்கள் வேண்டும் சீர்திருத்தங்களைப் புகுத்துவதாக வாக்களித்தார். ஆயினும், அவரது வாக்குறுதிகளை அவர் நிறைவேற்றுமுன்னர் இறந்துபட்டார்.

அவர்க்குப் பின் அரசுக் கட்டிலேறிய 7ஆம் பிரடெரிக் 1849ல் ஓர் அரசியலமைப்பினை வெளியிட்டார். அவை தீவுகளுக்கும் ஜுட்லாந்துக்கும் மட்டும் வழங்கப்பட்டவை. அவ்வரசியலமைப்பு ஸ்லெவல்ஸ், ஹோல்ஸ்டீன் பகுதிகளுக்கு வழங்கப்படவில்லை. மீண்டும் 1851, 1855 ஆகிய ஆண்டுகளிலும் அரசியலமைப்புகளைத் தம்முடைய மக்களுக்கு வழங்கினர் இவ்வரசர். அவையும் ஸ்லெவல்ஸ்விக், ஹோல்ஸ்டீன் பகுதிகளுக்கு வழங்கப்படவில்லை. ஏனெனில், அவை டென்மார்க்கின் பாதுகாப்பிலிருந்த இரு ஜெர்மன் மாநிலங்களாகும். அம்மாநிலங்கள்மீது டென்மார்க் அரசர் முழு உரிமை கொண்டாடலாமா என்பதே ஒரு மாபெரும் பிரச்சினையாக இருந்தது. டென்மார்க் அவற்றின்மீது முழு ஆதிக்கத்தினைச் செலுத்த முடியவில்லை. ஏழாம் பிரடெரிக் இறுதிவரை அம்மாநிலங்கள்மீது தபது நாட்டின் முழு ஆதிக்கத்தினை நிறுவ இயலவில்லை. அவர்க்குப் பின் 9ஆம் கிறிஸ்டியன் (Christian-IX) பட்டத்திற்கு வந்தார் (1863-1906). இவர் காலத்தில் இம்மாநிலங்களின் பிரச்சினைக்கு ஒரு முடிவேற்பட்டது. 1864ல் டென்மார்க்கின்மீது ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் போர்தொடுத்து இம்மாநிலங்களைக் கவர்ந்துகொண்டன. 1864ல் கூடிய வியன்னா மாநாட்டின்மூலம் டென்மார்க் இவ்விரு மாநிலங்களையும் இழந்தது. 19ஆம் நூற்றாண்டில் இரண்டாவது முறையாக டென்மார்க் தனது பகுதிகளை இழந்தது. இதனால், அந்நாடு தனது மூன்றில் ஒரு பங்குப் பரப்பினை இழந்தது. ஏறக்குறைய அதன் மொத்த மக்கள் தொகையில் 10 லட்சம் குறைந்தது. இது அந்நாட்டிற்குப் பெரும் இழப்பாகும்.

1864க்குப் பின்னர், மிகவும் ஏமாற்றமுற்ற டென்மார்க் தன்னுடைய உள்நாட்டு வளர்ச்சியில் பெரிதும் கவனம் செலுத்தியது. 1866-ல் ஒரு புதிய அரசியலமைப்பினையும் அது பெற்றது. முதல் உலகப்போர் வரை அவ்வரசியலமைப்பே செயலிலு மிருந்தது. அதன்மூலம் இரு அவைகளைக் கொண்ட பாராளுமன்றம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. மேலவை (Lands Thing) 66 உறுப்பினர்களைக் கொண்டது. அவர்களுள் 12 பேர்களை அரசர் நியமித்தார். மற்றவர்களை வரிகொடுப்போர் 8 ஆண்டுகளுக்கு ஒருமுறை

தேர்ந்தெடுத்தனர். கீழவையை (Folke Thing) மூன்றுண்டு களுக்கொருமுறை மக்களே தேர்ந்தெடுத்தனர். 9ஆம் கிறிஸ்டியன் மேலவையின் ஆதரவில் பல ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். கீழவையை அவர் பெரிதும் புறக்கணித்தார். பிஸ்மார்க்கினைப் பின்பற்றி அவரும் வல்லாட்சியில் ஆர்வம் காட்டினர். அவரது வரவு செலவு திட்டத்தினையும், படைச் சீர்திருத்தங்களையும் கீழவை ஏற்க மறுத்தது. இதனல், அரசர்க்கும் கீழவைக்கும் பூசல் மிகுந்தது. ஆயினும், இறுதியில் அரசரே வென்றுர். காரணம், பாராளுமன்ற முறை உண்மையில் அங்குச் செயல்படவில்லை. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் சோஷலிஸ்டுகள் செல்வாக்கு பெற்ற பின்னர்தான், பாராளுமன்றம் பல உண்மையான உரிமைகளைப் பெற்றது. பல சீர்திருத்தச் சட்டங்களும் இயற்றப் பட்டன. உண்மையான மக்களாட்சியும் அங்குச் செயலுக்கு வந்தது.

டென்மார்க்கும் பல குடியேற்றங்களைக் கொண்டு சிறப்புடன் திகழ்ந்தது. கிரீன்லாந்து, ஐஸ்லாந்து, பெரோத் தீவுகள் (Faroe Island) போன்ற பகுதிகளில் இது குடியேற்றங்களை நிறுவி, 19ஆம் நூற்றுண்டு முழுவதும் சிறப்பாகத் திகழ்ந்தது. ஆயினும், மிகச் சிறிய நாடு என்ற காரணத்தால், 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இது ஐரோப்பிய அரங்கில் சிறப்பினை எய்தவில்லை.

**நார்வே, ஸ்வீடன்**

நார்வேயும், ஸ்வீடனும் நெப்போலியனது படையெடுப்பு களால் பெரிதும் அவதியுற்றன. 1807ல் ஏற்பட்ட டில்சிட் உடன் பாட்டினல் (The Treaty of Tilsit, 1807) ரஷ்யா பெரிதும் நன்மை எய்தியது. இவ்வுடன்பாட்டினைப் பயன்படுத்திக்கொண்டு ரஷ்யா பின்லாந்தை ஸ்வீடனிடமிருந்து கைப்பற்றிக்கொண்டது. இதனல், பால்டிக் கடலில் அது நீண்டதொரு கடற்கரையினைப் பெற்றது. வியன்ன மாநாட்டு ஏற்பாட்டின்படி ஸ்வீடன் நார்வே யுடன் இணைக்கப்பட்டது. இவ்விணைப்பினைப்பற்றி வியன்ன மாநாடு அம்மக்களைக் கலந்தாலோசிக்கவில்லை. அவற்றை வியன்ன மாநாட்டினர் ஒரு பொருட்டாகவே கருதவில்லை. ஐரோப்பிய அரங்கில் அவற்றிற்கு ஒரு சிறிதும் முக்கியத்துவம் வழங்கப் படவில்லை. இதனல், அச்சிறிய நாடுகளான நார்வேயும் ஸ்வீடனும் பெரிதும் ஏமாற்றமுற்றன. 1814ல் அம்மாநாட்டினர் அதற்கென ஓர் அரசியலமைப்பினையும் வழங்கினர் அதுதான் சிறப்புமிக்க எயிட்ஸ்வால்ட் அசியலமைப்பாகும் (The Constitution of Eidsvold). அதன்படி அங்கு ஒரு பாராளுமன்றமும் நிறுவப்பட்டது (Storthing).

1814ல் ஸ்வீடன் அரசர் நார்வேயினை ஆளும்பொருட்டு தம்முடைய மகனை பெர்னடோட் (Bernodotte) என்பாரை நார்வேக்கு அனுப்பிவைத்தார். இதனை விரும்பாத நார்வே மக்கள், உள்நாட்டுப் போரினைத் தொடங்கி வெற்றியும் பெற்றனர். அதன்பின்னர், வல்லரசுகள் தலையிட்டு நார்வேயினையும் ஸ்வீடனை யும் ஒன்றிணைத்தன. நார்வே மக்களும் ஸ்வீடன் அரசரைத் தங்க ளுடைய அரசராகத் தேர்ந்தெடுத்துக்கொண்டனர். அவர்களது வேண்டுகோளின்படி ஸ்வீடன் மன்னரும் (1814) அரசியலமைப் பினை அவர்களுக்கு வழங்கினர்.

தொடக்கத்திலிருந்தே இவ்விரு நாடுகளுக்குமிடையே உண்மை யான நட்போ, இணைப்போ இல்லை. அவை இரண்டும் ஒரே அரசின் மேற்பார்வையில் இயங்கினும், அவற்றிற்கிடையேஒற்றுமையென்பது இல்லாதுபோயிற்று. அவை ஒவ்வொன்றிற்கும் தனிச் சட்டங்களும், தனி அமைச்சரவைகளும் இருந்தன. அவை தங்கள் வழக் காறுகள், மரபுகள்வழியே இயங்கின. ஸ்வீடனைச்சார்ந்த குடிமகன் நார்வேயிலும், நார்வேயின் குடிமகன் ஸ்வீடனிலும் பதவி வகிக்க முடியாது. அவை ஒவ்வொன்றுக்கும் தனி அரசியலமைப்பும், தனிப் பாராளுமன்றமும் வழங்கப்பட்டிருந்தன. ஸ்வீடன் நாட்டுப் பாராளுமன்றத்தில் நான்கு அவைகளிருந்தன. செல்வர்களுக்கும், சமய குருமார்களுக்கும், நகரங்களுக்கும், உழவர்களுக்கும் என அங்கு நான்கு அவைகளிருந்தன. நார்வே பாராளுமன்றத்தில் இரு அவைகளே இருந்தன. ஸ்வீடன் நாடு, செல்வர்கள் நிறைந்த நாடாகும். ஆயினும், எளிய குடியானவர்கள் நிறைந்த நார்வேயில் செல்வர்கள் மிகக் குறைவாயிருந்தனர். ஆகவே, ஸ்வீடன் பாராளு மன்றம் செல்வர்களால் ஆதிக்கம் செலுத்தப்பட்டது. அங்கு அவர்கள் பல நிலமானியச் சிறப்புரிமைகளைப் பெற்றுச் சிறப்புடன் விளங்கினர். நார்வே நாட்டில் மக்களாட்சி மரபுகள் மிகுதியாக வழக்கிலிருந்தன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மொழி இருந்தது. தனித்தனி நகரங்களையும் அவை கொண்டிருந்தன. ஸ்வீடனின் தலைநகராக ஸ்டாக்ஹோமும், நார்வேயின் தலைநகராக கிறிஸ்டி யானியாவும் இருந்தன. இவ்வாறு இரண்டு நாடுகளும் அனைத்துத் துறைகளிலும் வேறுபட்டு நின்றன. அரசரும், போர், வெளித்துறை அமைச்சர்கள் மட்டும் அவ்விரு நாடுகளுக்கும் பொதுவானவர் களாக இருந்தனர். வேறுபட்டு நின்ற இவ்விரு நாடுகளால் ஒன்று பட்டு நீண்டநாள்கள் செயல்படமுடியவில்லை. இறுதியில் அவை பிரிந்தும் போயின.

8ஆம் சார்லஸ் மகப் பேறற்றவர் என்ற காரணத்தால், அவர்க்குப்பின் யார் என்ற வினா எழுந்தது. அவர் ஃபிரெஞ்சு

மார்ஷலான பெர்னடொட் என்பாரைச் சுவீகாரம் எடுத்துக் கொண்டார். பெர்னடொட் 1818ல் அரசரானார். 14ஆம் சார்லஸ் என்ற பட்டப் பெயரில் அவர் 1844 வரை ஆண்டார். அவர் வல்லாட்சியில் மிக்க நம்பிக்கையுடையவரென்ற காரணத்தால், அவர் சீர்திருத்தங்களை முற்றிலும் விரும்பவில்லை. ஆயினும், இவரது ஆட்சிக் காலத்தில் ஸ்வீடன் பொருளாதாரத் துறையில் சற்று முன்னேறியது. சமய உரிமையும் நல்கப்பட்டது. அது கடன் தொல்லையினின்றும் பெரிதும் விடுபட்டது. பாராளுமன்றத் திற்கு மிகுதியான உரிமைகள் வழங்கப்படவேண்டுமென்ற வேண்டுகோளை மட்டும் இவர் ஏற்க மறுத்தார். நான்கு அவைகளைக் கொண்ட பாராளுமன்றம் அவர்க்கு மிக்க ஏற்றதாயிருந்தது. செல்வர்களும், சமய குருமார்களும் எப்போதும் அவரை ஆதரித்தனர். உழவர்கள்கூட, பல சமயங்களில் இவரை ஆதரித்தனர். நகர உறுப்பினர்கள் மட்டும் இவரை மிகுதியும் எதிர்த்தனர். பாராளுமன்றத்தில் சிறுபான்மையினரான அவர்களை இவர் எளிதாகப் புறக்கணிக்க முடிந்தது. இம்முறையில் இவர் மிகச் சிறப்புற்றுத் திகழ்ந்தார். இதில் மாற்றம் செய்வதையும் இவர் எதிர்த்தார். அவர்க்குப் பின்னர், அரசுக் கட்டிலேறிய முதலாம் ஆஸ்கர் (Oscar-I) (1844-1859) காலத்திலும் இந்நிலையே தொடர்ந்தது. அவர்க்குப் பின்னர், அரியணையேறிய 15ஆம் சார்லஸ் (1859-1872) காலத்தில் அரசியலமைப்பில் அடிப்படை மாற்றமொன்று செய்யப்பட்டது. 1866ல் அரசியலமைப்பு மாற்றப்பட்டு பாராளுமன்றத்திற்கு உரிமை நல்கப்பட்டது. இரு அவைகளைக் கொண்ட பாராளுமன்ற மொன்று நிறுவப்பட்டது. நான்கவைகளைக் கொண்ட பாராளு மன்றமும் அகற்றப்பட்டது. மேலவை உறுப்பினர்கள் 9 ஆண்டு களுக்கொருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டனர். மிகுதியான சொத் துடையவர்களுக்கே இவ்வுறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை நல்கப்பட்டது. இவ்வுறுப்பினர்களுக்கு ஊதியம் வழங்கப்படவில்லை. ஆகவே, அவர்கள் பெரும் செல்வர்களாகவே இருந்தனர். கீழவை உறுப்பினர்கள் மூன்றாண்டுகளுக்கொருமுறை தேர்ந்தெடுக்கப்பட் டனர். அவர்களையும் சொத்துடையவர்களே தேர்ந்தெடுத்தனர். மொத்த மக்கள் தொகையில் 8 சத மக்களே வாக்குரிமை பெற் றிருந்தனர். ஆகவே, 1866க்குப் பின்னரும் மக்களாட்சி அங்குச் செயலிலிருந்தது எனக் கூற இயலாது. இம்முறை 1909 வரை செயல்பட்டது.

இரண்டாம் ஆஸ்கர் 1872ல் பட்டத்திற்கு வந்தார். (1872-1907). இவர் காலத்தில் நார்வேயும், ஸ்வீடனும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டன. அதன் விளைவாக, அவை பிரிந்துபோகும்

நிலைக்கு வந்தன. ஸ்வீடன் மக்கள் நார்வேயின் இணைப்பினைத் தொடக்கத்திலிருந்தே விரும்பவில்லை. ஆனல், நார்வே மக்கள் தாங்களே முன்வந்து ஸ்வீடனுடன் இணைந்ததாகவும், தாங்களே ஸ்வீடிஸ் அரசரைத் தங்கள் அரசராகத் தேர்ந்தெடுத்துக்கொண்ட தாகவும், தங்கள் அரசியலமைப்பைத் (Constitution of Eidsvold) தாங்களே உருவாக்கிக்கொண்டதாகவும், தாங்கள் முற்றிலும் சுதந்திரமானவர்களெனவும் நார்வே மக்கள் கருதினர். ஸ்வீடன் தங்களை எவ்வகையிலும் கட்டுப்படுத்த முடியாதெனவும் அவர்கள் வலியுறுத்தினர். இதனை ஸ்வீடன் மக்கள் விரும்பவில்லை. இதனல், அவர்களிடையே வேறுபாடு மிகுந்தது. தேசிய நாளைக் கொண்டாடு வதிலும் அவர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது. நார்வே மக்கள் மே திங்கள், 17ஆம் நாளைத் தங்களது தேசிய நாளாகக் கொண்டாட விரும்பினர். 1814ஆம் ஆண்டு, மே திங்கள் 17ஆம் நாளன்றுதான் அவர்கள் எயிட்ஸ்வால்ட் அரசியலமைப்பினைப் பெற்றனர். அதன் நினைவாக அந்நாளையே அவர்கள் தேசிய நாளாகக் கொண்டாட விரும்பினர். ஸ்வீடிஸ் மக்கள் நவம்பர் மாதம், 4ஆம் நாளைத் தங்களது தேசிய நாளாகக் கொண்டாட விரும்பினர். அன்றுதான் அவர்களது அரசியலமைப்பு வெளியிடப் பட்டது. ஸ்வீடன் அரசரே நார்வேக்கும் அரசராக இருந்த காரணத்தால், அவரை நார்வேயில் காண்பதரிதானது. அவர் நார்வே துறையில் மிகுதியும் நாட்டமும் செலுத்தவில்லை. அதனல், நார்வே மக்கள் பெரிதும் அதிருப்தியுற்ற நிலையிலிருந்தனர்.

நார்வே பாராளுமன்றம் அரசர்க்குத் தடுப்பதிகாரத் தினை வழங்கியிருந்தது. இதனல், அப்பாராளுமன்றத்திற்கும் அரசர்க்கும் இடையே அடிக்கடி, பூசலேற்பட்டது. நார்வே தனது வெளிநாட்டு வணிகத்தையும் மிகப் பெருக்கிக்கொண்ட தால், அதனைப் பேண விரும்பியது. நான்கில் ஒரு பங்கு ஐரோப்பிய வணிகம் இவர்கள் வழியே நடந்தது. ஆகவே, இவர்கள் தங்களது வெளிநாட்டு வணிக உரிமையினைப் பேண விரும்பினர்.

1892ல் தங்களது வணிக உரிமையைப் பேணும் முயற்சியில் அவர்கள் ஸ்வீடனுடன் மோதும் நிலைக்கு வந்தனர். நார்வே பாராளுமன்றம் வெளித்துறைச் செய்திகள் அனைத்தும் தங்கள் வசமே இருக்கவேண்டுமென வேண்டியது. அரசர் அதனை ஏற்க மறுத்தார். அதனல், ஐக்கியம் முறிந்துவிடுமென அவர் அஞ்சினர். இரு நாடுகளும் இருவகை வெளிநாட்டுக் கொள்கை களைக் கொண்டிருத்தல் முறையன்று என அவர் கருதினர். இப்போராட்டம் பல ஆண்டுகள் தொடர்ந்தது. 1905ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் நார்வே ஸ்வீடனுடன் கூடிய தனது ஐக்கியம்

முறிந்தது என அறிவித்தது. அதனை ஸ்வீடன் ஏற்க மறுத்தாலும் போர் செய்ய அது விரும்பவில்லை. அதனை நார்வே மக்களின் விருப்பத்திற்கு விட்டுவிடுவதாக அது அறிவித்தது. 1905ல் நடந்த தேர்தலில் நார்வே மக்களும் பிரிவினையையே ஆதரித்து வாக்களித்தனர். 3,68,000 பேர்கள் பிரிவினையை ஆதரித்தும் 184 பேர்கள் பிரிவினையை எதிர்த்தும் வாக்களித்தனர். இதுபற்றி இறுதி முடிவெடுக்க கார்ல்ஸ்டெட் என்ற இடத்தில் ஒரு மாநாடும் கூடியது. அதன்படி இரு நாடுகளும் பிரிந்தன. 1905ல் நார்வே தனி நாடானது.

# 14. கிழக்குப் பிரச்சினை

ஐரோப்பிய வரலாற்றில் கிழக்குப் பிரச்சினை என்பது சிக்கல் மிக்க ஒன்றாகும். இதனைக் குறித்து ஆராய்ந்த அரசியலறிஞர் ஒருவர், "இப்பிரச்சினையை உலகிலேயே மூவர்தான் அறிவர். அவர்களுள் ஒருவர் முன்னரே இறந்துவிட்டார். இரண்டாமவர்க்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. மூன்றுமவர் நான். நான் அதனை முற்றிலும் மறந்துவிட்டேன்" என நகைச்சுவையுடன் கூறிய கூற்று இச்சிக்கலின் தன்மையை நன்கு விளக்கும். 1453ல் கிழக்கு ரோமப் பேரரசின் தலைநகரான கான்ஸ்டாண்டி நோபிளை வெற்றிகொண்ட பின்னர், துருக்கிப் பேரரசு கிழக்கு ஐரோப்பியப் பகுதிகளில் விரைவாகப் பரவியது. 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சுலைமான் என்ற மாபெரும் துருக்கிப் பேரரசரின் தலைமையில் அது விரைவாக ஐரோப்பிய நாடுகளில் பரவியது. சுலைமான் வியன்னாவையும் முற்றுகையிட்டார். புனித ரோமப் பேரரசரான 5ஆம் சார்லஸ் அவர்க்கு ஹங்கேரியை வழங்கி உடன்பாடு செய்துகொண்டார். துருக்கியின் ஆதிக்கம் ஐரோப்பிய வல்லரசுகளை வியப்பில் ஆழ்த்தியது. சுலைமானுக்குப் பின்னர், வலுவுள்ள பேரரசர் இல்லாத காரணத்தால், அதன் வீழ்ச்சியும் தொடங்கியது. 5ஆம் சார்லஸின் மகனான 2ஆம் பிலிப் துருக்கியர்களை முறியடித்து வெற்றி கண்டார். இரண்டாம் பிலிப்பின் மாபெரும் படைத் தலைவரான டான் ஜான் (Don John) என்பார் 1572ல் துருக்கியர்களை லிபெண்டோ போர்க்களத்தில் (The Battle of Lepanto) முறியடித்தார். 1572க்குப் பின்னர், துருக்கியின் வீழ்ச்சி தொடங்கியது. ஆயினும், அது முற்றிலும் வீழ்ந்துபடவில்லை.

கி.பி. 1815ல் துருக்கிப் பேரரசு அளவில் மிகச் சுருங்கி விட்டது. எனினும், அது ஐரோப்பாவின் பல பகுதிகளில் பரந்து விரிந்து கிடந்தது. ஆசியாக் கண்டத்தில் அது ஆசியா மைனர், சிரியா, யூப்ரட்டஸ் பகுதியிலிருந்து அரேபியாவரை பரவிக் கிடந்தது. ஆப்பிரிக்காவில் எகிப்திலிருந்து மொராக்கோ வரையிலுமான பெரும் பகுதியில் அது தனது பேரரசை நிறுவியிருந்தது. ஐரோப்பாவிலும் அது பால்கன் தீபகற்பத்திலிருந்து மால்டேவியா, வாலச்சியாவரை தனது பேரரசின் பகுதிகளைக் கொண்டிருந்தது.

இம்மாபெரும் பேரரசு காலப்போக்கில் வலிமை குன்றத் தொடங்கியது. ஐரோப்பிய வல்லரசுகளான ரஷ்யா, ஆஸ்திரியா, ஃபிரான்சு இங்கிலாந்து போன்ற வல்லரசுகள் இப்பேரரசின் பகுதிகள் பலவற்றின்மீது தங்களது ஆதிக்கத்தை நிறுவ முயன்றன. ஐரோப்பிய நாகரிகம் ஈன்றெடுத்த இறுதிக் குழந்தையான ரஷ்யா, மகாபீட்டர் காலத்திலிருந்தே துருக்கிப் பேரரசின் பல பகுதிகளைக் கவரத் தொடங்கியது. அவர்க்குப் பின்னர், இரண்டாம் காதரையும் துருக்கிப் பகுதிகள் பலவற்றைப் பெற்றார். ரஷ்யாவே துருக்கிப் பேரரசு முழுவதையும் விழுங்கிவிடுமோ என்ற அச்சம் ஐரோப்பாவெங்கும் நிலவியது. அப்போது ஆஸ்திரியாவும் நோயாளியான துருக்கியின் பகுதிகள் பலவற்றைக் கவர முயன்றது. நெப்போலியனும் இப்பேரரசின் வலிமையைப் பெரிதும் குறைத்தார். பிற வல்லரசுகள் அதன்மீது ஆதிக்கம் செலுத்துவதைக் கண்ட இங்கிலாந்தும் தனது ஆதிக்கத்தினை அங்கு நிறுவ முயன்றது. ரஷ்யா நோயாளியைக் கொன்று அதன் பகுதிகளைக் கவர நினைத்தது. அதனை விரும்பாத இங்கிலாந்து அந்நோயாளிக்குப் புத்துயிர் ஊட்ட முயன்றது. ஆயினும், துருக்கியால் தனது பேரரசின் பல பகுதிகளைக் கட்டிக் காக்க முடியவில்லை. 1789க்குப் பின்னர், அது விரைவாக வீழ்ச்சியுறத் தொடங்கியது. அதற்குக் காரணம், ஐரோப்பாவெங்கும் தோன்றிய நாட்டுப்பற்றுகும். துருக்கியைப் பொருத்தமட்டில் அது ஒரு மாபெரும் இஸ்லாமியப் பேரரசு. அதன் ஆதிக்கத்திலிருந்த ஐரோப்பிய மக்கள் பெரும்பாலோர் கிருத்துவர்கள். துருக்கியப் பேரரசினைப் பொருத்தமட்டில் பல்வேறு மக்களையும் ஒன்றிணைத்துப் பொதுவான ஒரு நிர்வாகத்தினை உருவாக்க இயலவில்லை. பல்வேறு மக்களையும் ஒன்றிணைப்பதற்கு மாறாக அது அவர்களை வேறுபடுத்தியது. முஸ்லீம்களுக்கும், முஸ்லீம் அல்லாதார்க்கும் ஒரே சட்டம், நிர்வாகமுறை முதலியவற்றினைப் பின்பற்றியது. அவர்கள், முஸ்லீம்கள் ஆளப் பிறந்தோரென்றும் பிற மக்கள் அவர்களுக்கு அடிபணிந்து வாழவேண்டுமெனவும் கருதினர். இதன் காரணத்தால், இப்பேரரசு பிற இன மக்களை அடக்கியாள முற்பட்டது. மக்களது ஆதரவை இப்பேரரசு முற்றிலும் இழந்து நின்றது. மேலும் துருக்கியப் பேரரசு ஒற்றுமையும் கட்டுக்கோப்பும் மிக்க ஒரு பேரரசன்று. அது பல மாநிலங்களாகப் பிரிந்து சிதறுண்டுக் கிடந்தது. அம்மாநிலங்களின் ஆளுநர்களும் பல சமயங்களில் இப்பேரரசின் ஆணைகளுக்குக் கட்டுப்பட மறுத்தனர். 1789ல் நிகழ்ந்த ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர் நாட்டுப்பற்றுக் காரணமாக, அவர்களும் துருக்கிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறவே முனைந்தனர். திறமையற்ற சுல்தானால் அவர்களை

அடக்கியாள இயலவில்லை. அல்பேனிய ஆளுநரும், எகிப்திய ஆளுநரும் துருக்கிய ஆதிக்கத்தினை எதிர்த்துப் போராடி வெற்றியும் பெற்றனர். இதனால், பிற பகுதிகளும் ஊக்கம் பெற்றுக் கிளர்ச்சி செய்யத் தலைப்பட்டன.

நாட்டுப்பற்றுக் காரணமாக, துருக்கியப் பேரரசில் வாழ்ந்த பல இன மக்களும் இப்பேரரசினை எதிர்த்து விடுதலைப் போரைத் தொடங்கினர். அவ்வாறு விடுதலை பெற முனைந்தவர்களில் முக்கியமானவர்கள் கிரேக்கர்களாவர். பழைய கிரேக்கர்களின் வழித் தோன்றல்கள் எனத் தங்களைக் கருதிக்கொண்ட இவர்கள் முஸ்லீம் ஆட்சியினையும், ஆதிக்கத்தினையும் விரும்பவில்லை. விடுதலை பெறும்பொருட்டு, போர்க்கொடியும் உயர்த்தினர் இந் நாட்டுப்பற்று மிக்க மக்கள். அடுத்து இப் பேரரசின் ஆதிக்கத்திலிருந்த மற்றுமொரு முக்கிய இன மக்கள் ருமேனியர்களாவர் இவர்களும் தங்களைச் சிறப்புமிக்க ரோமப் பெருமக்களின் வழித் தோன்றல் களெனக் கருதினர். அந்நிய ஆட்சியினையும் இவர்கள் ஏற்க மறுத்தனர். இவர்களைப் போன்று அங்கிருந்த மற்றுமொரு மிக முக்கிய இனம் ஸ்லாவ் இனமாகும். 1789க்குப் பின்னர், இம்மக்களும் துருக்கியின் ஆதிக்கத்தை ஏற்க மறுத்தனர். துருக்கிப் பேரரசும் மக்களது நலனைக் கருதி அவர்களது ஆதரவைப் பெறவில்லை. அவர்களைத் தங்களுக்குச் சமமாகக் கருதவும் இப்பேரரசு மறுத்துவிட்டது. அவர்களை இரண்டாந்தரக் குடிமக்களாக இழிவோடு நடத்தியது. துருக்கிப் பேரரசு பல சமயங்களில் அவர்களின் சொத்துகளையும் சூறையாடியது. இது சமய வெறியின் காரணமாகக் கிருத்துவர்கள் பலரைக் கொன்று குவித்தது. கிருத்துவ மக்களின் உயிர்க்கும், உடைமைகளுக்கும் இது பாதுகாப்பு தர மறுத்தது. அவர்கள்மீது இப்பேரரசு மிகுதியான வரிகளையும் சுமத்தியது. வரிகள் கொடுக்கத் தவறியவர்கள் பெருங் கொடுமைகளுக்கு உட்படுத்தப்பட்டனர். இத்தகைய அடக்கு முறைகளை மக்கள் வெறுத்தனர். (2) துருக்கியப் பேரரசின் நிர்வாகத் திறனும் பெரிதும் குன்றிப்போனது. துருக்கிப் பேரரசர்கள் சமயத்துறையில் பொறையுடைமைக் கொள்கையினைப் பின்பற்றி, மக்களின் ஆதரவைப் பெறத் தவறிவிட்டனர். அவ்வரசின் கொடுங்கோன்மையும், நேர்மையற்ற ஆட்சியும், ஊழலும், அடக்குமுறையும் அதனைப் பெரிதும் செல்வாக்கிழக்கச் செய்தன. மாநில ஆளுநர்களும் மக்கள் நலனை மறந்து சிற்றின் பத்தில் மூழ்கித் திளைத்தனர். அவர்களது முறைகேடற்ற ஆட்சியில் மக்கள் பெரிதும் அவதியுற்றனர். (3) துருக்கியப் பேரரசு படைவன்மையின் அடிப்படையிலமைந்த ஒரு பேரரசாகும்.

19ஆம் நூற்றுண்டில் அதன் படை வன்மை குன்றியபோது, அவ்வாட்சியும் குன்றியது. அவை ரஷ்யப் படைகளிடம் பலமுறை தோற்றன. அதன் தோல்விகள் அதன் ஆதிக்கத்திலிருக்கும் மக்களுக்குப் பெரும் ஊக்கத்தினைத் தந்தது. மேரியட் என்பார் கூறுவது போன்று துருக்கியர்கள் மாபெரும் வெற்றியாளர்கள். ஆயின், நல்ல ஆட்சியாளர்கள் அல்லர். நல்லாட்சியை வழங்க அவர்கள் என்றும் முயன்றதில்லை. நல்லாட்சியற்ற பேரரசு வீழ்ச்சியுறுவது திண்ணம். (4) துருக்கி ஆளுநர்கள் உயர்வு மனப்பான்மை மிக்கவர்கள். செருக்கும், ஆணவமும், தற்பெருமையும், பிறரை மதியாத மனப்பாங்கும் மிக்கவர்கள். தாங்கள் ஆளும் மக்கள் தங்களினும் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணத்துடன் அவர்கள் ஆண்டனர். மக்கள் குறைகளைப் போக்கவும் அவர்கள் முன்வரவில்லை. மக்களைச் சுரண்டவும் அவர்கள் தயங்கவில்லை. மக்கள் தங்களுக்காகவே இருக்கின்றனர். அரசுக்கு வரி கொடுப்பது அவர்கள் கடமை. அரசு எவ்வகையிலும் அவர்களுக்குக் கடமைப்பட்டதல்ல என அவர்கள் நினைத்தனர். இதனல், ஆள்வோர்க்கும் ஆளப்படுவர்க்குமிடையே பிளவு மிகுந்தது. இதனுல், அப்பேரரசுக்கு நல்ல அடித்தளமில்லாதுபோய்விட்டது. நல்ல அடித்தளமின்றி அழகாகக் கட்டப்பட்ட அந்த மாளிகை, இடையில் இடிந்து வீழ்ந்ததில் வியப்பில்லை. (5) 19ஆம் நூற்றுண்டின் போக்கினையும் துருக்கியச் சுல்தான்கள் புரிந்து கொள்ள மறுத்துவிட்டனர். அந் நூற்றுண்டில் தோன்றிய புரட்சிகளால் அவர்கள் எத்தகைய படிப்பினையையும் பெறவில்லை. அந் நூற்றுண்டில் முகிழ்த்த புதிய சக்திகளையும் அவர்கள் உணராது அவற்றைப் புறக்கணித்தனர். மக்கள் நாட்டுப்பற்று, புதிய கருத்துகள் காரணமாகப் புரட்சி செய்தபோது, இச்சுல்தான் அதனை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. புதிய சக்திகள் என்ற மாபெரும் அலைகள் தோன்றியபோது, அவர்கள் செயலிழந்து போயினர். சுருங்கக் கூறின் துருக்கிச் சுல்தான்களின் திறமையின்மை, ஐரோப்பிய வல்லரசுகளின் தன்னலம், நாட்டுப்பற்று போன்றவை அப்பேரரசை இறுதியில் வீழ்த்தின. கி.பி. 1789க்குப் பின்னர், பல்வேறு இனமக்களும் புரட்சியிலீடுபட்டனர். செர்பியர்கள் தான் துருக்கிப் பேரரசினை முதலில் எதிர்த்தவர்கள். காரா ஜார்ஜ் (Kara George) என்பார் தலைமையில் அவர்கள் புரட்சி செய்தனர். 1830ல் செர்பியா சுயாட்சியும் பெற்றுப் பிற நாடுகளுக்கு வழிகாட்டியாயும் அமைந்தது. பின்னர் கிரேக்கம் போன்ற நாடுகள் துருக்கி ஆதிக்கத்தினை எதிர்த்துப் புரட்சிசெய்து விடுதலையும் பெற்றன.

**கிரேக்க விடுதலைப் போர்**

இன்றைய ஐரோப்பிய நாகரிகத்தின் தாயகமென போற்றப் படுவது கிரேக்கமாகும். தனது நாகரிகம், பண்பாடு, இலக்கியம் போன்றவற்றால், அது ஐரோப்பாவுக்குப் புத்துயிர் அளித்தது. இத்தகைய சிறப்புமிக்க கிரேக்கம் துருக்கியர்களால் கவரப்பட்டுத் தாழ்வுற்றுக் கிடந்தது. துருக்கியின் அடக்குமுறைக்கு அதுவும் உட்படுத்தப்பட்டது. நாட்டுப்பற்றின்மையாலும், ஒற்றுமை யின்மையாலும் அது துருக்கிக்கு அடிபணிய நேரிட்டது. அது துருக்கிய ஆதிக்கத்தின்கீழ் வருவதற்குக் காரணமே துருக்கியின் படை வலிமையேயாகும். 19ஆம் நூற்றாண்டில் துருக்கியின் படைமாட்சியும் பெரிதும் குன்றியது. ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், கிரேக்க மக்கள் புத்துயிர் பெற்றனர். உரிமைக்காகப் போராடவும் அவர்கள் துணிந்தனர். அதற்குரிய காரணங்கள் பல:

(1) 1789ல் வெடித்த ஃபிரெஞ்சுப் புரட்சி, ஐரோப்பிய வானில் நாட்டுப்பற்றென்னும் பகலவனுய்த் திகழ்ந்தது. ஃபிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக நாட்டுப்பற்றும், விடுதலை வேட்கையும் கிரேக்கத்திலும் பரவின. சமயமும் அவர்களது விடுதலைப் போர்க்குப் பெரிதும் துணை நின்றது. கிருத்துவர்கள் இஸ்லாமியச் சமயத்துக்கு அடிபணியக் கூடாதென்ற சமய உணர்வும் அவர்களது விடுதலைப் போராட்டமெனும் நல்ல நிலத்திற்கு நல்ல உரமாய் அமைந்தது. அந்நிய ஆதிக்கத்தினை எதிர்ப்பதை அவர்கள் தங்களது தலையாய பணியாகக் கருதினர். அவர்கள் இழிவாக நடத்தப்படுவதை இந் நாட்டுப்பற்று மிக்க கிரேக்கர்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. நாட்டுப்பற்று என்ற மாபெரும் கொள்கையைக் கருவியாகக் கொண்டு, விடுதலைப் போராட்டமெனும் போர்க்களத்தில் வெஞ்சமர் புரிய அவர்கள் ஆயத்தமாயினர்.

(2) கிரேக்கர்களது விடுதலைப் போர்க்குக் கிரேக்க இலக் கியத்தில் நிகழ்ந்த மறுமலர்ச்சியும் ஒரு காரணமாகும். கிரேக்கர்கள் துருக்கிய ஆதிக்கம் என்ற பெரு வெள்ளத்தில் சிக்குண்டு தவித்தனரேயன்றி அவர்கள் மாண்டு போகவில்லை. 19ஆம் நூற்றாண்டில் அவர்களிடையே ஒரு மாபெரும் விழிப் புணர்வு ஏற்பட்டது. துருக்கிய ஆதிக்கத்திற்கு அடிபணிதலை விடப் போரிட்டு மாண்டுபோவதே மேல் என அவர்கள் உணர்ந் தனர். 19ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த மாபெரும் இலக்கிய மறுமலர்ச்சி அவர்களுக்குப் புத்துணர்வை ஊட்டியது. பழைய கிரேக்க மொழி அழிந்துபோகும் நிலையிலிருந்தது. அம்மக்களும்

ஒரு வகையான கொச்சைமொழியினைப் பேசிவந்ததால், அச்சிறப்பு வாய்ந்த உயர் தனிச் செய்மொழியின் சிறப்பினை உணரவில்லை. சமயத் துறவிகளும், அறிஞர்களும் மட்டுமே அம்மொழியினைப் பயன்படுத்தி வந்தனர். அச்சிறப்புமிக்க மொழிக்கு வந்த இழிவினைக் கண்டு வருந்திய கோரஸ் (Koraes) என்பார் அதனைத் தூய்மைப்படுத்தி மீண்டும் மக்கள் பேசும் மொழியாக்கும் அரிய முயற்சியிலீடுபட்டார். அவரது முயற்சியில் பெரிதும் வெற்றி பெற்றார். அவர் அம்மக்கள் அம்மொழியின் சிறப்பினைப் புரிந்துகொள்ளுமாறு செய்தார். அதனையறிந்துகொண்ட மக்கள் பெருமையும், பெருமிதமும் கொண்டனர். தங்கள் மொழியின் பாலும், நாட்டின்பாலும் அவர்கள் அன்பு செலுத்த முற்பட்டனர். மொழிப்பற்று நாட்டுபற்றாய் அவர்களிடையே மலர்ந்தது. தங்களைக் கிரேக்கர்கள் என அழைத்துக்கொள்வதில் பெருமைப்பட்டனர். இப் புத்துணர்வையும், விழிப்புணர்வையும் கொண்ட அம்மக்கள் துருக்கியின் ஆதிக்கத்தினை எதிர்த்து விடுதலைப் போராட்டத்தைத் தொடங்கியதில் வியப்பேதுமில்லை.

(3) கிரேக்கர்கள் இயல்பாகவே விடுதலை வேட்கை மிக்க வர்கள். அவர்கள் உரிமையில் என்றும் நாட்டம் மிக்கவர்களாய்த் திகழ்ந்தனர். அவர்களது நாட்டுப் புவியியலமைப்பும் அத்தகையது. வரலாற்றைப் புவியியல் அமைப்பு ஆட்டிப் படைக்கிறது என்பது உண்மை. புவியியல் நிலைக்கேற்ப மக்களது வாழ்வு, நாகரிகம், பண்பாடு போன்றவையும் அமைகின்றன என்பது தெளிவு. பண்டைய கிரேக்க வரலாற்றை அறிந்தவர்கள் அம்மக்களின் பண்பாட்டினையும் பண்பு நலனையும் நன்கறிவர். நகர, நாடுகளை அமைத்து அன்று அவர்கள் உரிமையோடு வாழ்ந்தனர். மக்க ளாட்சியில் என்றும் மாறாப் பற்றுமிக்க அம்மக்கள் அந்நிய ஆதிக்கத்தில் வாழ்வதை வெறுத்தனர். நல்ல மலைப்பாங்கான பகுதிகளில் வாழ்ந்த அவர்கள் நல்ல உடற் கட்டுடனும், உரிமையில் வேட்கை மிக்கவராயும் திகழ்ந்தனர். அத்தகைய சிறப்புமிக்க மரபுவழி வந்த கிரேக்க மக்கள் 19ஆம் நூற்றாண்டிலும் அப்பண்போடு திகழ்ந்ததில் வியப்பில்லை. 19ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே அவர்கள் துருக்கிய ஆதிக்கத்தினை எதிர்த்துப் போராடினர். ஆயினும், வலுவுள்ள படையின் முன்னர் அவர்கள் செயலிழந்தனர். துருக்கியினது வீழ்ச்சியின் காரணமாக, அவர்கள் மீண்டும் விடுதலைப் போரைத் தொடங்கினர். 1820க்கு முன்னரேகூட, கிரேக்கர்கள் துருக்கிய ஆதிக்கத்தில் சுயாட்சி உரிமையுடன் வாழ்ந்தனரென்பது இங்கு நினைவுகூரவேண்டிய ஒன்றாகும். அதுமட்டுமன்றி துருக்கிய ஆட்சியில் நிர்வாகப் பயிற்சியும் பெற்றுவந்தனர். அதனால், அவர்கள் அவ்வாட்சியின்

திறமையின்மையினை நன்கு புரிந்துகொள்ள வாய்ப்பேற்பட்டது. துருக்கிப் படையில் பணியாற்றிய பல கிரேக்கர்கள் அதன் சீர்குலைவைக் கண்டுகொண்டனர். கிரேக்க வணிகர்களும் துருக்கிப் பேரரசின் பல பகுதிகளில் நல்ல வணிகம் செய்து பெருஞ் செல்வராய்த் திகழ்ந்தனர். பல நாடுகளுடன் தொடர்பு கொண்ட அவர்கள் தங்கள் நாட்டின் நிலையை நன்கு புரிந்துகொள்ள முடிந்தது. அவர்கள் தங்கள் நாடு மீண்டும் பழைய சிறப்பெய்த வேண்டுமென விரும்பினர். 1789க்குப் பின்னர், அவர்கள் விடுதலைப் போரையும் தொடங்கினர்.

(4) கிரேக்க விடுதலைக்கு அந்நாட்டில் செயல்பட்டு வந்த இரகசிய இயக்கங்கள் பலவும் காரணமாயின. இத்தாலி, ஜெர்மனி போன்று கிரேக்கமும் தனது விடுதலைக்காகப் பல இரகசிய இயக்கங்களைத் தொடங்கியது. அத்தகைய இயக்கங்களில் மிக முக்கியமானது "ஹெறட்டெய்ரிய பிலிக்" (Hetairia Philike) என்று அழைக்கப்பெற்ற "நண்பர்கள் கழகம்" ஆகும். கிரேக்க விடுதலைக்கு இவ்வியக்கம் ஆற்றிய பணிகள் மகத்தானவை. 1814ல் இக்கழகம் தொடங்கப்பட்டது. வியன்னா மாநாட்டால் மிக்க ஏமாற்றமுற்ற கிரேக்கம், இக்கழகத்தின்மூலம் தனது விடுதலையைப் பெற முயன்றது. இக்கழகத்தின் நோக்கம் ஐரோப்பாவிலிருந்து துருக்கியர்களை விரட்டிய பின்னர், மீண்டும் பழைய கிரேக்கக் கிழக்குப் பேரரசினை (Eastern Greek Empire) நிறுவுதலேயாகும். இக்கழகம் ரஷ்யாவின் துணையையே பெரிதும் நம்பிச் செயல் பட்டது. ஏனெனில், ரஷ்யாவும் துருக்கியின் வீழ்ச்சியில் மிக்க அக்கறை காட்டியது. அத்துடன் இவ்விரு நாடுகளும் ஒரே சமயத்தைச் சார்ந்த நாடுகள். ஆகவே, ரஷ்யாவும் தன்னை கிரேக்கத்தின் புரவலன் எனக் கருதிக்கொண்டது. ரஷ்யாவின் ஆதரவைப் பெற்ற இந்த நண்பர்கள் கழகம் மிக விரைவாக வளர்ந்தது. 1820ல் இது மொத்தம் 80,000 உறுப்பினர்களைக் கொண்டிருந்தது. இவ்வுறுப்பினர்கள் ரஷ்யப் படையிலும் பணியாற்றினர். இக்கழகம் பெரும் பொருளையும், படைக் கருவிகளையும் சேகரித்து வைத்துக்கொண்டு விடுதலைப் போர்க்கு ஆயத்தமாய் நின்றது. இக்கழகம் கிரேக்க விடுதலைக்கு உடனடிக் காரணமாய் அமைந்தது.

### கிரேக்க விடுதலைப் போர்

1821ல் கிரேக்கர்கள் தங்கள் விடுதலைப் போரினைத் தொடங்கினர். 1821ல் ஐரோப்பியக் கூட்டணி நாடுகள் தங்களது மாநாட்டினை லைபாக் (Laibach) என்ற இடத்தில் கூட்டியிருந்தன. இவ்விடுதலைப் போரையறிந்த வல்லரசுகள் அதிர்ச்சியுற்றன.

கருத்து வேறுபாடுகள் காரணமாக, ஐவர் கூட்டணி இவ்விடுதலை இயக்கத்தினை ஆதரிக்கவில்லை. 1821ல் தொடங்கிய இவ்விடுதலைப் போர், 1829 வரை தொடர்ந்தது. 1825 வரை இது கிரேக்க-துருக்கியப் போராக இருந்தது. அந்நிய நாடுகள் இதில் தலையிடவில்லை. இக்காலத்தில் துருக்கியர்களும், கிரேக்கர்களும் மாருச் சினத்துடன் ஒருவரையொருவர் வெட்டிச் சாய்த்துக்கொண்டனர். ஏதுமறியாக் குழவிகளும், பெண்டிர்களும் கூட ஆயிரக்கணக்கில் கொல்லப்பட்டனர். "இனி துருக்கியர்கள் வாழ்தல் கூடாது. மோரியாவிலோ உலகில் வேறெங்குமோ அவர்கள் வாழ்தல் கூடாது" எனக் கூவினர் கிரேக்கர்கள். இதுவே கிரேக்கர்களின் போர்க் கீதமானது. அதே கொள்கையினைத் துருக்கியர்களும் கொண்டிருந்தனர்.

முதன்முதலில் மால்டேவியா வாலச்சியாவின் பகுதிகளில் தான் புரட்சி தோன்றியது. அங்குப் புரட்சி தோன்றுவதற்குக் காரணம், மால்டேவியாவின் துருக்கிய ஆளுநரான அலெக்ஸாந்தர் ஒய்ப்சிலாண்டி (Alexander Ypsilanti) என்பாரேயாவார். இவர் ஒரு கிரேக்கர் என்ற காரணத்தால், நாட்டுப்பற்றுக் காரணமாகத் தமது தாயக விடுதலை இயக்கமான நண்பர் கழகத்தை ஆதரித்த தோடு அவர்களைப் புரட்சியிலீடுபடுமாறும் தூண்டினர். அப்புரட்சிக்குத் தாமே தலைமையேற்றும் நடத்தினர். 1821ல் இவர் ரஷ்யாவின் துணையை நாடினர். ரஷ்யா தனக்குத் துணைபுரிய வராததைக் கண்டு இவர் பெரிதும் ஏமாற்றமுற்ருர். ரஷ்ய அரசர் முதலாம் சார் அலெக்ஸாந்தர் கிரேக்கர்களை ஆதரிக்கவே விரும்பினர். ஒய்ப்சிலாண்டியை ஆதரிக்கப்போவதாயும் இரகசியச் செய்தியொன்றினை இவர் அவர்க்கு அனுப்பினர். 1821ல் ஐவர் கூட்டணி சார் அலெக்ஸாந்தரை எதிர்த்த காரணத்தால், அவர் பெரிதும் கட்டுண்டுபோனர். இங்கிலாந்தும், ஆஸ்திரியாவும், ரஷ்யாவை எதிர்த்தன. அரசியல் நோக்கம் காரணமாக, அவை சார் மன்னரை எதிர்த்தன. மெட்டர்னிக்கும் புரட்சியின் பகைவர் என்ற முறையில் கிரேக்கப் புரட்சியினை விரும்பவில்லை. கலக வெறியர்களை ஒடுக்குவதற்குத் துருக்கிக்கு அனைத்து உரிமைகளும் உண்டென மெட்டர்னிக் வாதிட்டார். சார் மன்னரையும் தலையிடாது தடுத்தார் இவர். மெட்டர்னிக்கின் உற்ற நண்பரான சார் அலெக்ஸாந்தரும் புரட்சியை ஆதரிக்க மறுத்துவிட்டார். ஐவர் கூட்டணியும் கிரேக்க விடுதலையைக் கண்டித்து அறிக்கை விட்டன இங்கிலாந்து இதனை எதிர்த்தபோதும் அதன் எதிர்ப்பு புறக்கணிக்கப்பட்டது. ரஷ்யத் துணையை நம்பிப் புரட்சியிலீடுபட்ட ஒய்ப்சிலாண்டி ட்ரகாஷான் (Dragashan) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டார். அவர் தோல்விக்குப் பின்னர், ஆஸ்திரியா

வுக்குத் தப்பியோடினுர். அவர் பின்னர், கைது செய்யப்பட்டுச் சிறை சென்ருர். 1828ல் அவர் சிறையிலேயே மாண்டார். இவரது வீரமும், தியாகமும் கிரேக்க விடுதலைப் போரைப் பெரிதும் ஊக்குவித்தது.

**மோரியாவில் புரட்சி**

ஒய்ப்சிலாண்டியின் வீரமும், தன்னலமற்ற பண்பும் கிரேக்க விடுதலை வீரர்களைப் பெரிதும் ஊக்குவித்தன. மோரியாவிலும், பிற பகுதிகளிலும் புரட்சிகள் தோன்றின. கிரேக்கத்தில் வாழ்ந்த முஸ்லீம்கள் பல்லாயிரக்கணக்கில் கொன்று குவிக்கப்பட்டனர். மோரியாவில் மட்டும் 25,000க்கும் மேற்பட்ட துருக்கியர்கள் கொல்லப்பட்டனர் எனக் கூறப்படுகிறது. இதனையறிந்த துருக்கியர்களும், கான்ஸ்டான்டிநோபிள், ஆசியா மைனர், மாசிடோனியா போன்ற பகுதிகளில் வாழ்ந்த பல்லாயிரக் கணக்கான கிரேக்கர்களைக் கொன்று குவித்தனர். 1821ஆம் ஆண்டு ஈஸ்டர் ஞாயிறன்று கிரேக்க வைதீகத் திருச்சபையின் தலைவர் அவரது புனித உடையுடன் தூக்கிலிடப்பட்டார். இது ரஷ்யாவிலும் இங்கிலாந்து போன்ற நாடுகளில் வாழ்ந்த பல்லாயிரக்கணக்கான கிருத்துவர்களைப் பெரும் துன்பத்தில் ஆழ்த்தியது. ஐரோப்பியக் கிருத்துவ மக்களனைவரும் கிரேக்கத்தின்பால் பரிவு காட்டினர். அரசியல் தலைவர்கள் பல்வேறு காரணங்களை முன்னிட்டு, இதில் தலையிடவில்லை. துருக்கியை இங்கிலாந்து வெறுத்தபோதும், அதன்மீது எவ்வித நடவடிக்கையினையும் அது எடுக்கவில்லை. அவ்வாறு செய்யின் துருக்கியின் வலிமை குன்றிவிடும். துருக்கியின் வலிமை குன்றிப்போயின் அது ரஷ்யாவுக்கு நன்மையாய் அமைந்துவிடுமென இங்கிலாந்து அஞ்சியது. பிற்போக்கின் சின்னமான மெட்டர்னிக்கும் கிரேக்கத்திற்குத் துணைபுரிய மறுத்துவிட்டார். முதலாம் அலெக்ஸாந்தரும் எதிர்ப்புக் காரணமாக, அப்பிரச்சினையில் தலையிட மறுத்துவிட்டார். ஆயினும், சார் அலெக்ஸாந்தரால் கிரேக்கத் திருச்சபைத் தலைவர் ஈவு இரக்கமின்றித் தூக்கிலிடப்பட்டதைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. சமயப் பற்றுமிக்க அவர் துருக்கியச் சுல்தானுக்கு எச்சரிக்கையொன்றினை அனுப்பினுர். துருக்கியப் பேரரசில் வாழும் கிருத்துவ மக்களைப் பாதுகாப்பது தமது கடன் என்றும், சுல்தான் துருக்கியப் பேரரசில் வாழும் கிருத்துவர்களைத் தக்க முறையில் பாதுகாக்க வேண்டுமெனவும், மால்டேவியா, வாலச்சியாப் போன்ற பகுதிகளிலிருந்து துருக்கியப் படைகள் உடனடியாக விலக வேண்டுமெனவும் அவர் வேண்டுகோள் விடுத்தார். சார் மன்னர் தமது எச்சரிக்கையினைச் செயல்படுத்தவும் முனைந்தார். போர் ஆயத்தங்களிலும் அவர் முனைந்தார்

ரஷ்யாவின் போர் ஆயத்தங்களைக் கண்டு இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும் அஞ்சின. இதனால், இங்கிலாந்தின் வெளித்துறை அமைச்சராயிருந்த காசல்ரீயும் மெட்டர்னிக்கும் ஒருங்கிணைந்து செயல்பட்டு மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளிலிருந்து துருக்கியப் படைகள் வெளியேறுமாறு செய்தனர். ரஷ்யாவின் விருப்பத்திற்கேற்ப, தம்முடைய கிருத்துவக் குடிமக்களைப் பரிவுடனும் பாங்குடனும் நடத்துவதாகவும் சுல்தான் உறுதியளித்தார். இதனால், ரஷ்யா பெரிதும் மகிழ்வுற்றுத் தமது போர் ஆயத்தங்களைக் கைவிட்டது. இதனால், பிற வல்லரசுகளும் மகிழ்ந்தன. கிரீஸ், வல்லரசுகளின் போக்கைக் கண்டு பெரிதும் ஏமாந்துபோனது. ஆயினும், அது தனது விடுதலை பெறும் முயற்சியினைக் கைவிடவில்லை. 1822ல் தனது விடுதலைப் பிரகடனத்தை வெளியிட்டு தனது நோக்கம் முழு விடுதலையே என அது அறிவித்தது. துருக்கியை எதிர்த்து மீண்டும் நாடெங்கிலும் புரட்சிகள் தோன்றின.

### எகிப்து தலையீடு

கிரீஸ் மீண்டும் போரைத் தொடர்ந்தது. புரட்சியாளர்களை முற்றிலும் அடக்கிவிடமுடியுமென நம்பி, துருக்கி தனது அடக்குமுறையினைத் தீவிரப்படுத்தியது. துருக்கியின் திறமையின்மையின் காரணமாக, அது இயலாதுபோயிற்று. திறமையின்மை, படைவலிமையின்மை, நல்ல தலைமையின்மை காரணமாக, கிரேக்க மக்களால் வெற்றிபெற முடியவில்லை. சியாஸ் என்ற இடத்தில் மட்டும் பல்லாயிரவர் கொல்லப்பட்டனர். ஹேசன் என்பார் கணக்குப்படி 90,000 மக்களைக் கொண்ட சியாஸில் (Chios) 23,000 பேர்கள் கொல்லப்பட்டனர். 43,000 பேர்கள் அடிமைகளாகத் துருக்கியர்களால் விற்கப்பட்டனர்.[1]

கிரேக்கக் கிளர்ச்சியைத் துருக்கியால் அடக்கமுடியாத காரணத்தால், தனது எகிப்திய ஆளுநரை (முகமது அலியை) தனக்கு உதவுமாறு வேண்டியது. எகிப்திடம் மேலைநாட்டு முறையில் பயிற்றுவிக்கப்பட்ட நல்லதொரு படையிருந்தது. 1825ல் முகமது அலி, தம்முடைய மகனை இப்ராஹிம் என்பார் தலைமையில், 11,000 வீரர்களைக் கொண்ட படையொன்றை மோரியாவுக்கு அனுப்பி வைத்தார். 1825ல் அவர் மோரியாவை எளிதில் வென்றார். கிரேக்கர்களின் வலிவுமிக்க அரணெனக் கருதப்பட்ட மிஸ்ஸொலாங்கி (Missolonghi) என்ற இடமும் 1826ல் பகைவர்கள் வசமானது. ஏதென்ஸ், அக்ரபோலிஸ் (Acropolis) போன்ற

1. Hazen—P. 551.

இடங்களையும் பகைவர்கள் எளிதாகக் கைப்பற்றினர். ஒருசில இடங்கள் நீங்கலாக கிரீஸ் முழுவதும் இப்ராஹிம் வசம் வந்தது. கிரீஸ் அடிபணியும் நிலையிலிருந்தது.

கிரேக்கர்களின் இவ்வவல நிலையினைக் கண்டு ஐரோப்பிய மக்கள் பெரிதும் இறங்கினர். அதற்கு உதவவும் முன்வந்தனர். ஐரோப்பா வெங்கும் கழகங்கள் நிறுவப்பட்டன. படைக் கருவிகள், உடை, உணவுப்பொருள்களைச் சேகரித்து, அக்கழகங்கள் கிரீஸுக்கு அனுப்பின. பலர் தாமாக முன்வந்து இவ்விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்றனர். இங்கிலாந்து, ஃபிரான்சு, ஜெர்மனி, அமெரிக்கா, ஸ்விட்சர்லாந்து போன்ற நாடுகளிலிருந்து பலர் வந்து கிரேக்கப் படையில் சேர்ந்து போர்முனைக்குச் சென்றனர். அவ்வாறு போர் முனைக்குச் சென்றவர்களுள் தலையாயவர் ஆங்கிலக் கவி பைரனும் ஆவார். 1824ல் அப்போரில் அப்பெருங் கவி உயிரும் நீத்தார். பவேரியா அரசரான முதலாம் லூயியும் இப்போர்க்குப் பெரிதும் உதவினர். ஃபிரெஞ்சுப் புரட்சி வீரரான லபாயத்தும் (Lafayette) இவ்விடுதலைப் போர்க்குப் பெரிதும் உதவினர். ஐரோப்பிய மக்கள் கிரீஸுக்கு உதவினலும் அரசுகள் அதற்கு உதவ மறுத்தன. ஒருசில ஆயிர மக்கள் தூக்கிலிடப்படுவதையோ, கொல்லப் படுவதையோ, நாம் மிகைப்படுத்த வேண்டியதில்லை என்பது மெட்டர்னிக்கின் கூற்றாகும். பிற நாடுகள் அதில் தலையிடுவதையும் அவர் தடுத்தார்.

கிரேக்க மக்களின் நற்பேறு காரணமாக, இங்கிலாந்தின் முதலமைச்சராக, கானிங் பிரபு பதவியேற்றார். கிரேக்க மக்களுக்கு உதவ இவர் முன்வந்தார். கிரீஸில் ரஷ்யாவின் செல்வாக்கு வளர்வதை அவர் விரும்பவில்லை. ஆங்கிலேயர்கள் பலர் கிரீஸில் பெரும் பொருள் முதலீடு செய்திருந்தனர். ஆங்கில வணிகத் தையும் கானிங் பிரபு பேண விரும்பினர். ஆகவே, கிரேக்க விடுதலைப் போரில் அவர் தலையிடத் துணிந்தார்.

ரஷ்ய அரசியலிலும் இப்போது பெரும் மாற்றம் நிகழ்ந் திருந்தது. மெட்டர்னிக்கின் நல்ல நண்பரான முதலாம் சார் அலெக்ஸாந்தர் 1825ல் மறைந்தார். அவர்க்குப் பின் முதலாம் சார் நிக்கலொஸ் பதவிக்கு வந்தார். இவர் மெட்டர்னிக்கைப் பற்றியோ, கூட்டணியைப்பற்றியோ மிகுதியும் கவலைப்படவில்லை. முதலாம் சார் அலெக்ஸாந்தரின் கொள்கையினை இவர் வெறுத்த தோடு, கிரேக்க மக்களுக்கு உதவுவதைத் தமது கடனாகவும் கருதினர். ரஷ்யாவின் இந்நிலையைக் கண்ட கானிங் பிரபுவும் தமது தலையிடாக் கொள்கையினைக் கைவிட்டுக் கிரேக்கத்திற்கு

உதவ முன்வந்தார். இங்கிலாந்து தலையிடவில்லையெனில், ரஷ்ய அரக்கன் கிரேக்க நாட்டை விழுங்கிவிடுவான் என, கானிங் தமது தாயகத்தை எச்சரித்தார். உடனடியாக இப்பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டுமென முடிவுசெய்தார் கானிங். ஃபிரான்சும் கிரீஸுக்கு உதவ முன்வந்தது.

**நவாரினேப் போர்**

கிழக்குப் பிரச்சினைக்குத் தீர்வு காண வல்லரசுகளின் மாநாடு ஒன்றினைச் செயின் பீட்டர்ஸ்பர்க்கில் கூட்ட விரும்பினர் சார் அலெக்ஸாந்தர். வல்லரசுகள் அனைத்தும் இணைந்து கிரேக்கத்திற்குச் சுயாட்சி பெற்றுத் தரலாம் என்ற கருத்தினை வெளியிட்டார் சார் மன்னர். இதனை மெட்டர்னிக் ஏற்க மறுத்தார். இங்கிலாந்தும், ரஷ்ய ஆதிக்கம் அங்கு நிறுவப்படுவதை எதிர்த்தது. இந்நிலையில் முதலாம் சார் அலெக்ஸாந்தர் மறைந்து அவர்க்குப் பின் முதலாம் நிக்கலொஸ் பதவிக்கு வந்தார். இவர் கிரேக்கர்கள் பிரச்சினையில் தீவிரமாகத் தலையிட விரும்புவதையறிந்து கானிங் பிரபு கூட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள ஒப்புக்கொண்டார். 1826ஆம் ஆண்டு பீட்டர்ஸ்பர்க்கில் சந்தித்து உடன்பாடும் செய்து கொண்டார். அதன்படி கிரீஸுக்குச் சுயாட்சி பெற்றுத்தர முடிவு செய்தனர். இதற்கிடையில் முதலாம் நிக்கலொஸ் மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளிலிருந்து துருக்கியப் படைகள் விலக வேண்டுமென எச்சரித்தார். அவர்க்கஞ்சிய துருக்கிய சுல்தானும் 1826ல் அக்கர்மான் உடன்பாடொன்றினை (The Treaty of Akkerman) செய்துகொண்டார். ரஷ்ய ஆதிக்கம் துருக்கியில் மிகுவதைக் கண்டஞ்சிய கானிங் பிரபு, ரஷ்யாவுடன் ஒன்றுகூடி, இப்பிரச்சினைக்குத் தீர்வு காண விரும்பினர். ஃபிரான்சும் இதில் மிக்க ஆர்வம் காட்டியது. 1827ல் இம்மூன்று நாடுகளும் ஒன்றுகூடி, லண்டனில் சந்தித்து லண்டன் உடன்பாடும் செய்து கொண்டன. கிரீஸைப் பாதுகாக்கும்பொருட்டு, தங்களது கடற்படைகளை நவாரினே வளைகுடாவிற்கு அனுப்புவதென முடிவு செய்தன. எகிப்துடன் எக்காரணத்தைக் கொண்டும் போரைத் தொடங்கக்கூடாது. அமைதியை அங்கு நிலைநாட்ட வேண்டுமென்று படைத் தலைவர்களுக்கு இவை ஆணையிட்டிருந்தன. 1827ல் எகிப்து இவற்றின்மீது பீரங்கித் தாக்குதலுடன் போரைத் தொடங்கியது. ஆயினும், எகிப்தியத் துருக்கியப் படைகள் கூட்டணிப் படைகளுக்கெதிராகப் போரிட முடியவில்லை. விரைவில் எகிப்திய துருக்கிப் படைகள் முற்றிலும் அழிக்கப்பட்டன. அப்போரின்போதே கானிங் பிரபு இறந்துவிட்டார். அவர்க்குப்பின் வெல்லிங்க்டன் பிரபு பதவியேற்றார். இப்போர்

வேண்டார்தவோன்று எனக் கருதி . இங்கிலாந்தின் அப்போரி லிருந்து விலக்கிக்கொண்டார். ஃபிரான்சும் இப் பிரச்சினையில் நம்பிக்கையிழந்து தனது படைகளையும் விலக்கிக்கொண்டது. ரஷ்யா இப்போரிலிருந்து விலக மறுத்துவிட்டது. அது போரைத் தொடர்ந்து நடத்த முடிவு செய்தது.

### ரஷ்ய-துருக்கியப் போர் 1828

இங்கிலாந்தும், ஃபிரான்சும் போரிலிருந்து விலகியதையறிந்து துருக்கி மிக மகிழ்ந்தது. 1827ல் அக்கர்மான் உடன்பாட்டினைப் புறக்கணித்துவிட்டு, ரஷ்யாமீது புனிதப் போர் ஒன்றினைத் தொடங்கியது துருக்கி. இதனால், பெரிதும் ஆத்திரமுற்ற சார் மன்னர், துருக்கிமீது போர் தொடுத்தார் 1828ல் சார் நிக்கலொஸே இப்போரில் கலந்துகொண்டு போர்வீரர்களைப் பெரிதும் ஊக்கு வித்தார். இதனைக் கண்டு, இங்கிலாந்தும், ஃபிரான்சும் பெரிதும் அதிர்ந்துபோயின. ரஷ்யா ருமேனிய மாநிலங்களைக் கைப்பற்றிய தையும் டார்டெனெல்ஸ் (Dardanelles) ஜலசந்தியை வெற்றிகர முற்றுகையிட்டதையும் கண்டு இங்கிலாந்து பெரிதும் அஞ்சியது. இதனால், பொறுமையுற்ற இங்கிலாந்து மீண்டும் இப்பிரச்சினையில் தலையிட விரும்பியது. ஃபிரான்சு தனது செல்வாக்கினை நிறுவிக் கொள்ள இப்பிரச்சினையில் மீண்டும் தலையிட விரும்பியது. ஃபிரான்சு தனது படைகளை மோரியாவுக்கு அனுப்பியது. இங்கிலாந்தும் தனது படைகளை அலெக்ஸாந்திரியாவுக்கு அனுப்பியது. அலெக்ஸாந்திரியாவில் நிறுத்தப்பட்டிருந்த ஆங்கிலக் கடற்படையினைக் கண்டு, முகமது அலி பெரிதும் அஞ்சினார். இங்கிலாந்துடன் 1828ல் அலெக்ஸாந்திரியா உடன்பாடு (The Convention of Alexandria) ஒன்றினைச் செய்துகொண்டு தனது படைகளை மோரியாவிலிருந்து விலக்கிக்கொண்டது எகிப்து. இது கிரேக்க விடுதலையின் முதற் படியாகும்.

### கிரீஸ் விடுதலை பெறுதல்

முகமது அலி மோரியாவிலிருந்து விலகியது ரஷ்யாவுக்கு மாபெரும் வாய்ப்பினை நல்கியது. தனித்து நிறுத்தப்பட்ட துருக்கிய சுல்தான்மீது தனது படைகளை ஏவுவதற்கு அது ஏற்றதொரு வாய்ப்பாக இருந்தது. டார்டெனெல்ஸ் ஜலசந்தியில் ரஷ்யா தனது முற்றுகையினைத் தீவிரப்படுத்தியது. ரஷ்யப் படைகள் ஆட்ரியாநோபிளை நோக்கி விரைந்து முன்னேறின. போர் செய்யாமலே ரஷ்யா ஆட்ரியாநோபிளைக் கைப்பற்றிக்கொண்டது. ஆட்ரியாநோபிளின் வீழ்ச்சி துருக்கிக்குப் பெரும் அச்சத்தைத் தந்தது. இனி கான்ஸ்டான்டிநோபிளைக் காப்பதும் அரிதெனச் சுல்தான் உணர்ந்தார். போரைத் தொடர்வதும் சிறப்பல்லவெனக்

கருதி, ரஷ்யாவுடன் உடன்பாடு செய்துகொள்ளவும் துருக்கிய சுல்தான் துணிந்தார். 1829ல் ரஷ்யாவும் துருக்கியும் ஆட்ரியா நோபிள் உடன்பாடு செய்துகொண்டன. இவ்வுடன்பாடு கிரேக்க விடுதலை வரலாற்றில் மிக முக்கியமான ஓர் உடன்பாடாகும். இவ்வுடன்பாட்டின்படி (1) துருக்கி ஆதிக்கத்தின் கிரீஸுக்கு விடுதலை வழங்கப்பட்டது. (2) மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளுக்கு உரிமை நல்கப்பட்டு அவை ரஷ்ய ஆதிக்கத்தின்கீழ் வந்தன. (3) ஜார்ஜியா, காகசஸ் போன்ற பகுதிகள் ரஷ்ய ஆதிக்கத்தினை ஏற்றுக்கொண்டன. (4) செர்பியாவுக்கு சுயாட்சி வழங்கப்பட்டது. (5) பால்கன் பகுதிகளில் வணிகம் செய்ய ரஷ்யா பல சிறப்புரிமைகளைப் பெற்றதோடு அப் பகுதியிலுள்ள ரஷ்ய வணிகர்கள் ரஷ்யத் தூதர்க்கு மட்டுமே கட்டுப்பட்டவர்களெனவும் வலியுறுத்தப்பட்டது. அதன் விளைவாக, பால்கன் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் நிறுவப்பட்டது. ஆட்ரியா நோபிள் உடன்பாடு ரஷ்யாவுக்கு மாபெரும் வெற்றிச் சின்னமாகும். கிரீஸிலும் ரஷ்யாவின் செல்வாக்கு மிக ஓங்கியது.

ரஷ்யாவின் செல்வாக்கு பால்கன் பகுதியில் மிகுந்ததை இங்கிலாந்து முற்றிலும் விரும்பவில்லை. தனது அண்டை நாடுகளில் ரஷ்யாவின் செல்வாக்கு மிகுவதை ஆஸ்திரியாவும் விரும்பவில்லை. ஃபிரான்சும் ரஷ்யாவைக் கண்டு பொறாமைப்பட்டது. தனது செல்வாக்கினையும் அது அங்கு நிறுவப் பேரவாக் கொண்டது. இம்மூன்று நாடுகளும் ஒன்றுகூடி, பால்கன் பிரச்சினைக்குத் தங்களது முடிவுகளை அறிவித்தன. கிரீஸ் முற்றிலும் விடுதலை பெறவேண்டும். பவேரிய இளவரசரான ஆட்டோ (Otto) அதன் அரசராதல் வேண்டுமென அவை அறிவித்தன. 1831ல் வல்லரசுகளின் முடிவை ரஷ்யாவும் ஏற்றுக்கொண்டது. 1831ல் கிரீஸ் விடுதலை பெற்றுத் தனி நாடானது.

### கிரேக்க விடுதலைப் போரின் முக்கியத்துவம்

கிரேக்க விடுதலைப் போர் ஐரோப்பிய வரலாற்றில் சிறப்பானதொரு நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. அது கிழக்குப் பிரச்சினையின் பல்வேறு தன்மைகளையும் நன்கு வெளிப்படுத்தியது. (1) இந்த விடுதலைப் போரின் விளைவாகத் துருக்கியின் வலிமையின்மையும், திறமையின்மையும் நன்கு வெளிப்பட்டது. (2) ரஷ்யா பால்கன் பிரச்சினைமீது கொண்ட ஆழ்ந்த பற்று இதன்மூலம் நன்கு புலனாயிற்று. அதுபோன்றே பிற ஐரோப்பிய நாடுகளும் நோயாளியின் பிரச்சினையில் கொண்டிருந்த அக்கறை நன்குவெளிப்பட்டது. இங்கிலாந்தும், ஃபிரான்சும், ஆஸ்திரியாவும் தங்கள் நலனுக்காகவே செயல்பட்டன என்பது இப்போரின் மூலம் தெளிவானது.

இப்போரின் விளைவாக, ரஷ்யாவின் செல்வாக்கு பால்கன் பகுதியில் மிக உயர்ந்தது. அந்நாடுகள் ரஷ்யாவின் தலைமையை ஏற்கவும்முன் வந்தன. (4) கிரேக்க விடுதலை துருக்கிப் பேரரசின் வீழ்ச்சிக்கு ஒரு முன்னோடியானது. (5) இவ்விடுதலைப் போர் பிற நாடுகளிலும் நாட்டுப்பற்றினை மிகுதிப்படுத்தியது. அவையும் கிரீஸைப் போன்று விடுதலைபெற விரும்பின. இதனால், 19ஆம் நூற்றாண்டில் பல போர்கள் ஏற்படவும் காரணமானது. (6) ஒரு தனிப்பட்ட வல்லரசு மட்டும் பால்கன் பிரச்சினைக்குத் தீர்வு காண இயலாது என்பதனையே கிரேக்க விடுதலைப்போர் தெளிவாக்கியது. அனைத்து வல்லரசுகளும் ஒன்றுபட்டு இப்பிரச்சினைக்கு முடிவு காண வேண்டும் என்பது இவ்விடுதலைப் போர்க்குப் பின் உறுதியானது.

**முகமது அலி**

கிரேக்க விடுதலைப் போர் துருக்கிப் பேரரசின் குறைகளையும், திறமையின்மையையும் நன்கு வெளிப்படுத்தியது. அதன் விளைவாக, இப்பேரரசின் பல பகுதிகளிலும் அமைதியின்மை நிலவிற்று. நாட்டுப்பற்று, மொழிப்பற்றுக் காரணமாகப் பல நாடுகள் கிரீஸைப் போன்று விடுதலைபெற விரும்பின. எகிப்தும் பிற நாடுகளைப் போன்று உரிமைபெற விரும்பியது. அது முகமது அலியின் தலைமையில் ஒரு வலுவுள்ள நாடாக மாறியது. நெப்போலியன் எகிப்துமீது படையெடுத்துச் சென்றபோது முகமது அலி துருக்கிப் பேரரசருக்கு உறுதுணையாய் நின்று அவர்க்கு மாபெரும் பணியாற்றினர். அவரது துணிவையும், செயல்திறனையும், போர்த்திறனையும் கண்டு வியந்த துருக்கிச் சுல்தான் அவரையே எகிப்தின் ஆளுநராக நியமித்தார். முகமது அலி, கல்வியறிவு அற்றவரெனினும் பெரும் அனுபவம் மிக்கவர். வீரமும், திறமையும், நிர்வாக ஆற்றலும், பிறர்மீது ஆதிக்கம் செலுத்தும் பண்பும் அவரது இயல்பிலேயே இருந்தன. நல்ல அமைப்பாளர், ஆட்சியாளர் என்ற காரணத்தால், தமக்கெதிராக எழுந்த கலகங்கள் அனைத்தையும் இவர் எளிதாக அடக்கினர். தமது திறமையால் பல சீர்திருத்தங்களைப் புகுத்தி இவர் எகிப்தை ஒரு வலுவுள்ள நாடாக மாற்றினர். தந்தையைப் போன்று அவர்தம் மகனும் (இப்ராஹிம்) போர்த்திறனும், நிர்வாகத் திறனும் மிக்கவராய்த் திகழ்ந்தார். இவர்கள் தலைமையில் எகிப்து துருக்கியப் பேரரசிலேயே ஒரு வலுவுள்ள நாடாகத் திகழ்ந்தது.

எகிப்தியப் படைகளுக்கு மேற்கத்திய முறையில் பயிற்சிகள் நல்கப்பட்டன. ஃபிரெஞ்சுப் படைத் தலைவர்கள் தலைமையில் அவரது படைகள் திருத்தியமைக்கப்பட்டு மிக்க வலுவுள்ளதாய் அவை திகழ்ந்தன. இத்தகைய வலுவுள்ள

படைகளைக் கொண்ட முகமது அலி துருக்கிய ஆதிக்கத்தின் கீழிருக்க விரும்பவில்லை. சிரியா, கிரீட் பகுதிகளையும் வென்று ஒரு வலுவுள்ள எகிப்தியப் பேரரசைத் தமது ஆதிக்கத்தின் கீழமைக்க அவர் பெரிதும் விரும்பினார். துருக்கியச் சுல்தானும் கிரேக்க விடுதலைப் போரின்போது, அவர்க்கு கிரீட், சிரியா போன்ற பகுதிகளை இழப்பீடாகத் தருவதாயும் வாக்களித்திருந்தார். துருக்கியச் சுல்தான் தமது வாக்குறுதியினை நிறைவேற்றவில்லை. முகமது அலிக்கு அவர் அப்போர்க்குப் பின்னர், கிரீட் பகுதியினை மட்டும் வழங்கினார். இதனால், சீற்றம் மிகக் கொண்ட முகமது அலி, தம்முடைய மகனை இப்ராஹிம் தலைமையில் மாபெரும் படையொன்றினைச் சிரியாவைக் கைப்பற்ற அனுப்பினார். 1832ல் இப்ராஹிம் சிரியாமீது போர் தொடுத்து அதனை எளிதில் வென்றார்.

இப்ராஹிம் சிரியாமீது போர்தொடுத்து அதனை வென்றதைத் துருக்கி விரும்பவில்லை. துருக்கியும் இப்ராஹிம்மீது போர் தொடுத்தது. துருக்கி தோற்கடிக்கப்பட்டது. துருக்கிப் படையினை வென்ற இப்ராஹிம் கான்ஸ்டான்டிநோபிள் நகரையும் நோக்கி விரைவாக முன்னேறினார். இதனால், பெரிதும் அஞ்சிய துருக்கியச் சுல்தான் வல்லரசுகளைத் தனக்கு உதவுமாறு அழைத்தார்.

ஐரோப்பிய வல்லரசுகளைப் பொருத்தமட்டில் அவை வெவ்வேறு நோக்கங்கள் கொண்டிருந்தன. ஃபிரான்சைப் பொருத்தமட்டில் அது கிழக்குப் பிரச்சினையில் ஆழ்ந்த அக்கறை காட்டியது. அது ஆப்பிரிக்காவில் தனது ஆதிக்கத்தை நிறுவ விரும்பியதால், எகிப்தின் துணை அதற்குத் தேவைப்பட்டது. டுனிஸ் (Tunis), மொராக்கோ, அல்ஜியர்ஸ் போன்ற பகுதிகளில் நாட்டம் கொண்ட ஃபிரான்சு முகமது அலியை ஆதரிக்க விரும்பியது. வட ஆப்பிரிக்காவில் துருக்கியை எதிர்த்து ஒரு மாபெரும் குடியேற்றத்தை அமைக்க ஃபிரான்சு விரும்பியது. வட ஆப்பிரிக்காவில் பெரும் குடியேற்றமொன்று நிறுவி அதன்மூலம் மத்தியதரைப் பகுதியிலும் தனது ஆதிக்கத்தினை நிலைநாட்டப் பெரிதும் முயன்றது ஃபிரான்சு. ஆகவே, துருக்கியை எதிர்த்துப் போராடும் முகமது அலியை ஆதரிப்பதே தக்கதென ஃபிரான்சு கருதியது. இங்கிலாந்தைப் பொருத்தமட்டில் அதன் வெளித் துறை அமைச்சரான பாமர்ஸ்டன் யாரை ஆதரிப்பதென அறியாது சற்று மயங்கினார். முகமது அலி ஒரு மாபெரும் சக்தியாகத் திகழ்ந்தார். அவரை ஆதரிக்கவில்லையெனில் எகிப்தில் தமது செல்வாக்கு மிகக் குறையுமென அவர் அஞ்சினார். ஃபிரெஞ்சு ஆதிக்கம் எகிப்தில் மிகுவதையும் அவர் விரும்பவில்லை. எகிப்தை ஆதரித்தால், துருக்கியில் தமது செல்வாக்கு குறையுமெனவும் அவர் அஞ்சினார்.

துருக்கியின் பலம் குன்றினால் அது ரஷ்யாவுக்கே பெரும் நன்மையாய் அமையுமெனவும் அவர் கருதினார். இதனால், பாமர்ஸ்டன் பெரிதும் தயங்கினார். ரஷ்யாவைப் பொருத்தவரையில் அது துருக்கியைத் துணிந்து ஆதரித்தது. இங்கிலாந்தின் தயக்கம் ரஷ்யாவுக்கு நன்மையாய் அமைந்தது. அத் தயக்கத்தினை நன்கு பயன்படுத்திக்கொண்டு துருக்கியில் தமது ஆதிக்கத்தை நன்கு நிறுவிக்கொண்டது ரஷ்யா. இப்ராஹிமை எதிர்த்து ரஷ்யப் படைகள் ஏவப்பட்டன. துன்பக் கடலில் மூழ்கவிருந்த துருக்கியச் சுல்தானுக்கு இந்த ரஷ்ய உதவி ஒரு பெரும் மரக்கலமாய்ப்பட்டது. அதனை அவர் நன்கு பற்றிக்கொண்டார்.

ரஷ்யாவின் துணையைத் துருக்கி ஏற்றுக்கொண்டதைக் கண்டு பிற வல்லரசுகள் பொருமின. இங்கிலாந்து, ஃபிரான்சு, ஆஸ்திரியா மூன்றும் சிரியாவை முகமது அலிக்கே விட்டுக் கொடுக்கவேண்டு மெனத் துருக்கியை வேண்டின. 1833ல் குடாயா ஒப்பந்தத்தில் அவற்றின் வேண்டுகோளைத் துருக்கியும் ஏற்றுக்கொண்டது. சிரியாவும் முகமது அலிக்கே வழங்கப்பட்டது. முகமது அலியும் துருக்கியின் ஆதிக்கத்தின்கீழ் ஓர் அரசராக இருக்க ஒப்புக் கொண்டார்.

துருக்கியின் இப்போக்கினை ரஷ்யா விரும்பவில்லை ரஷ்யா தனக்கு இழப்பீடு தரவேண்டுமெனத் துருக்கியை வற்புறுத்தியது. ஆகவே, ரஷ்யாவை மகிழ்விப்பதும் துருக்கியின் கடமையானது. அதனுடன் துருக்கி 1833ல் உன்கியர் ஸ்கெலஸ்ஸி (The Treaty of Unkiar Skelessi) செய்துகொண்டது. இது ரஷ்ய வரலாற்றில் மிக முக்கிய உடன்பாடுகளுள் ஒன்றாகும். இதனால், துருக்கி மீதான ரஷ்யாவின் ஆதிக்கம் மேலும் மிகுந்தது. துருக்கியின் சுதந்திரத்தையும், ஒற்றுமையினையும் காப்பதாக ரஷ்யா இவ்வுடன் பாட்டின்மூலம் வாக்களித்தது. போர்க் காலத்தில் ரஷ்யக் கப்பல் களைத் தவிர, டார்டனெல்ஸ் துறைமுகத்தில் பிற கப்பல்கள் அனுமதிக்கப்படமாட்டா எனவும் இவ்வுடன்பாடு கூறியது. இவ்வுடன்பாட்டினை இங்கிலாந்தும் ஃபிரான்சும் எதிர்த்தன.

**மீண்டும் துருக்கிய - எகிப்துப் போர்**

உன்கியர் ஸ்கெலஸ்ஸி உடன்பாடு லண்டனிலும் பாரிசிலும் பெரும் அச்சத்தை விளைவித்தது. வியன்னாவும் அவ்வுடன் பாட்டினைக் கண்டு பெரிதும் அஞ்சியது. ஆஸ்திரியா முதலாம் நெப்போலியன் காலத்திலிருந்தே தனது வலுவுள்ள அண்டை நாடுகளான ஃபிரான்சையும் ரஷ்யாவையும் கண்டு அஞ்சி வாழ்ந்தது. 1815க்குப் பின்னர், ரஷ்யாவின் வலிமையைக் கண்டு

பெரிதும் அஞ்சியது ஆஸ்திரியா. பால்கன் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் மிகுவதைக் கண்டு அது மிகவும் கலங்கியது. பாமர்ஸ்டனும் ரஷ்யாவின் செல்வாக்கினைக் கண்டு அஞ்சினர். ரஷ்யாவின் ஆதிக்கத்தினைக் குறைக்க அவர் பெரிதும் முயன்றார். இல்லையெனில், துருக்கி ரஷ்ய ஆதிக்கத்தின்கீழ் வந்துவிடுமெனவும் அவர் பிற வல்லரசுகளை எச்சரித்தார். உன்கியர் ஸ்கெலஸ்ஸி உடன்பாட்டினை ஏற்க மறுத்து அதில் திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென வலியுறுத்தினர் பாமர்ஸ்டன்.

சிரியாவை இழந்த துருக்கியச் சுல்தானுன இரண்டாம் முகமது அதனை மீண்டும் கைப்பற்ற விரும்பினர். 1839-ல் சிரியாவைக் கைப்பற்றும்பொருட்டு, அதன்மீது போர் தொடுத்தார். எகிப்தியச் சுல்தானுன முகமது அலியும், ஃபிரெஞ்சு ஆதரவை நம்பித் தன்னை உரிமையுள்ள அரசரென அறிவித்துக்கொண்டார். முகமது அலியின் மகனுன இப்ராஹிம் துருக்கியைத் தோற்கடித்தார். அரேபியாவும் இப்ராஹிம் வசம் வந்தது. அரேபியா வழியாக இந்தியாவுக்கு வருவது வெகு எளிது. இவ் வெற்றியினைக் கண்டு இங்கிலாந்து பெரிதும் அஞ்சியது. நெஜிப் போர்க்களத்தில் (The Battle of Nezib) துருக்கியை முற்றிலும் முறியடித்தார் இப்ராஹிம்.

இப்ராஹிமின் வெற்றி வல்லரசுகளிடையே ஒரு பெரும் பரபரப்பை உருவாக்கியது. ஃபிரான்சு, இவரது வெற்றியைப் பெரிதும் போற்றி வரவேற்றது. ரஷ்யாவும் இங்கிலாந்தும் இதனுல் பெரிதும் கவலைப்பட்டன. துருக்கி தோற்கடிக்கப்பட்டு அதன் விளைவாக, ஆப்பிரிக்காவில் ஒரு ஃபிரெஞ்சுக் குடியேற்றம் அமைவதை ரஷ்யா விரும்பவில்லை. ஃபிரான்சு, முகமது அலியை ஆதரிப்பதை ரஷ்யா எதிர்த்தது. இங்கிலாந்தும் எகிப்தின் வெற்றியினையும் வளர்ச்சியினையும் கண்டு பொறுமைப்பட்டது. இதனுல், தனது வணிகம் பாதிக்கப்படுமெனக் கவலைப்பட்டது இங்கிலாந்து. ஐரோப்பாவின் நோயாளிக்காகப் பெரிதும் இரங்கி, அந் நோயாளிக்கு உதவவும் துணிந்தது இங்கிலாந்து. ரஷ்யாவும் இங்கிலாந்துடன் சேர்ந்துகொண்டு ஃபிரெஞ்சு ஆதிக்கத்தை ஒடுக்க முனைந்தன. இங்கிலாந்தின் விருப்பப்படி உன்கியர் ஸ்கெலஸ்ஸி உடன்பாட்டினைத் திருத்தவும் இசைவு தெரிவித்தது ரஷ்யா. இதன் விளைவாக, 1840-ல் லண்டனில் ஒரு மாநாடு கூடியது. இங்கிலாந்து, ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா ஆகிய நான்கு நாடுகளும், லண்டன் உடன்பாடு செய்துகொண்டன (1840). ஃபிரான்சு, இதில் கலந்துகொள்ளவில்லை. இந்த லண்டன் உடன்பாட்டின்படி எகிப்துக்கு

முழு உரிமை அளிக்கப்பட்டது. டார்டெனல்ஸ் ஜலசந்தி வழியாகப் போர்க்கலங்களேதும் செல்லக்கூடாதெனவும் முடிவு செய்யப்பட்டது. எகிப்திடமிருந்து சிரியா, கிரீட், அரேபியா போன்ற பகுதிகளைத் துருக்கி பெறும் எனவும், துருக்கிப் பேரரசின் ஐக்கியம் பேணப்படுமெனவும் வலியுறுத்தப்பட்டது. அதன் பின்னர், லண்டன் கூட்டணிப் படைகள் சிரியாவையும் மெசபடோமியாவையும் மீட்டன. தையர், முகமது அலியைப் பெரிதும் ஆதரித்தார். கூட்டணி நாடுகளுடன் போர் செய்தேனும் முகமது அலியை ஆதரிக்க வேண்டுமென்றார் ஃபிரெஞ்சுத் தலைமையமைச்சரான தையர். போரை விரும்பாத ஃபிரெஞ்சு அரசர் லூயி ஃபிலிப்பும் தையர் என்பாரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, இப்போரிலிருந்து விலகிக்கொண்டார். ஃபிரெஞ்சு ஆதரவைப் பெரிதும் நம்பிக் கூட்டணி நாடுகளை எதிர்த்த முகமது அலி, இதனால் பெரிதும் ஏமாற்றமுற்றார். அவரும் 1841-ல் லண்டன் உடன்பாட்டினை ஏற்றுக்கொண்டார். அதன்படி எகிப்து முழு உரிமை பெற்றுத் தனிநாடானது. சிரியா, மெசபடோமியா போன்ற பகுதிகளைத் துருக்கி மீண்டும் பெற்றது. துருக்கியின் ஐக்கியமும் இதனால் காப்பாற்றப்பட்டது.

லண்டன் உடன்பாடு பாமர்ஸ்டனின் மாபெரும் சாதனை எனலாம். வட ஆப்பிரிக்காவில் ஃபிரெஞ்சு ஆதிக்கம் பெரிதும் குன்றியது. டார்டெனல்ஸ் ஜலசந்தியில் ரஷ்ய ஆதிக்கம் மிகக் குன்றியது. இது ரஷ்யாவுக்கும் ஃபிரான்சுக்கும், ஒரு படிப்பினையாக அமைந்தது. எந்த ஒரு தனி வல்லரசும் துருக்கிமீது ஆதிக்கம் செலுத்த முடியாதென்பது தெளிவானது. எகிப்தில் இங்கிலாந்தின் செல்வாக்கு மிகுந்தது. கிழக்குப் பிரச்சினையிலும் இங்கிலாந்து தனது செல்வாக்கை நிறுவுவதில் பெரும் வெற்றிபெற்றது. 1841-ல் 'ஜலசந்தி ஒப்பந்தம்' (Straits Convention) கையெழுத்தானது. இதில் இங்கிலாந்து, ஃபிரான்சு, ரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகிய நாடுகள் கையொப்பமிட்டன. அதன்படி எந்த நாட்டுப் போர்க்கலங்களும் டார்டெனல்ஸ், பாஸ்பரஸ் ஆகிய ஜலசந்திகளில் நுழைதல் கூடாதென முடிவானது. இது இங்கிலாந்திற்கு மாபெரும் வெற்றியாகும்.

**கிரிமியப் போர் (1854–56)**

1815-ல் வாட்டர்லூ போர்க்குப் பின்னர், நிகழ்ந்த போர்களில் கிரிமியப் போரே மிக முக்கியமான போராகும். பிரஷ்யாவைத் தவிர, பிற ஐரோப்பிய வல்லரசுகள் அனைத்தும் இதில் பங்கேற்றன. வியன்னா மாநாட்டிற்குப் பின்னர், 40 ஆண்டு

களாகப் பெரும் போரேதுமின்றி அமைதியாக இருந்த ஐரோப்பா இப்போரினுல் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஐரோப்பிய அமைதியினை இது பெரிதும் குலேத்ததுடன் ஐரோப்பியக் கூட்டணியினையும் இது முறித்தது.

1. **இப் போர்க்குரிய காரணங்கள்:** கிரிமியப் போர் மிகச் சிறிய காரணமொன்றிற்காக ஏற்பட்டது. ஜெருசலத்திலுள்ள வழிபாட்டு இடங்கள்மீது யார் ஆதிக்கம் செலுத்துவது என்ற பிரச்சினை பெரிதுபடுத்தப்பட்டு அது போர்க்கு வழிவகுத்தது. இயேசு கிருத்துவின் பிறப்பிடம் என்ற காரணத்தால், ஐரோப்பா அதற்குத் தனி முக்கியத்துவம் கொடுத்தது. அவப்பேறு காரணமாக, அது துருக்கியப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது. பல சிலுவைப் போர்களுக்குப் பின்னரும் கிருத்துவர்களால் அதனை மீட்க முடியவில்லை. ஆயினும், ஜெருசலத்திலுள்ள புனித இடங்கள் கிருத்துவப் பாதிரிமார்களின் கண்காணிப்பின் கீழிருந்துவர, சுல்தான் இசைவு தெரிவித்தார். ஜெருசலத்தைப் பொறுத்தமட்டில் அங்கு இரு கிருத்துவச் சமயப் பிரிவினர் வாழ்ந்து வந்தனர். லத்தீன் திருச்சபையைச் சார்ந்தோர்க்கும், வைதீகக் கிருத்துவத் திருச்சபையைச் சார்ந்தோர்க்கும் (Orthodox Greek Church) வழிபாட்டு முறைகளில் வேறுபாடுகள் மிகுந்தன. அதன் காரணமாக, அவர்களிடையே பூசல்கள் ஏற்பட்டன. தங்கள் தங்கள் வழிபாட்டு முறையே சிறந்ததென அவர்கள் கருதினர். இப் பூசல்கள் காரணமாக, வழிபாட்டிடங்கள் அனைத்தும் தங்களது ஆதிக்கத்தின்கீழ் வரவேண்டுமென இவ்விரு சாராரும் விரும்பினர். அதன் காரணமாக, அவர்களிடையே பூசல்கள் மிகுந்தன. திருச்சபைகளில் குழப்பம் மிகுந்தது. 1740-லிருந்தே அங்குள்ள திருச்சபைகளை ஃபிரான்சு மேற்பார்வையிட்டுவந்தது. 1789-ல் ஏற்பட்ட ஃபிரெஞ்சுப் புரட்சியின் காரணமாக ஏற்பட்ட குழப்பத்தினுல், ஃபிரான்சால் அத் திருச்சபைகளைப் பேணிப் பாதுகாக்க முடியவில்லை. இதன்விளைவாக, அவற்றைப் பேணிப் பாதுகாக்கும் பொறுப்பு ரஷ்யாவுக்குக் கிட்டியது.

1852-ல் மூன்றும் நெப்போலியன் ஃபிரெஞ்சுப் பேரரசராகப் பதவியேற்றவுடன் மீண்டும் பழைய உரிமையினைப் பெற முயன்ருர். இதன் விளைவாகப் பூசல்கள் தோன்றின. மூன்றும் நெப்போலியன் மீண்டும் ஃபிரான்சுக்கே பழைய உரிமைகள் வழங்கப்படவேண்டுமெனவும் புனித இடங்களின் திறவுகோல்களை மீண்டும் ஃபிரான்சுக்கே நல்க வேண்டுமெனவும் வேண்டினர். சுல்தானும் பழைய உரிமைகளை மீண்டும் ஃபிரான்சுக்கே வழங்க முடிவு செய்தார். இதனைக் கேட்ட ரஷ்யா மிகவும் சீற்றங் கொண்டது.

அவ்வுரிமை தன்னிடமே தொடர்ந்து இருக்கவேண்டுமென அது வலியுறுத்தியது. இதனைப் பெற மென்ஷிகோவ் (Menshikov) என்பாரைத் தமது அந்தரங்கச் செயலராகக் கான்ஸ்டான்டி நோபிளுக்கு அனுப்பினார். துருக்கிப் பேரரசில் வாழும் அனைத்துக் கிருத்துவக் குடிமக்களையும் பாதுகாக்கும் உரிமையினையும் தனக்குக் கொடுக்கவேண்டுமென சார் மன்னர் வேண்டுகோள் விடுத்தார். தமது வேண்டுகோளைத் துருக்கி ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய அதன் ருமேனிய மாநிலங்களான மால்டேவியாவினையும் வாலச்சியாவினையும் கைப்பற்றிக்கொண்டார் சார் மன்னர். உடனே ரஷ்யப் படைகள் அப்பகுதிகளிலிருந்து விலகவேண்டுமெனவும் இல்லையேல், போர் மூளும் எனவும் துருக்கி அறிவித்தது. ரஷ்யா அவ் வேண்டுகோளை முற்றிலும் புறக்கணித்தது. இதனால், வெகுண்ட துருக்கி, ரஷ்யாமீது போர்தொடுத்தது. இச் சிறு நிகழ்ச்சியே கிரிமியப் போரின் உடனடிக் காரணமாகும். இது அல்லாது வேறுபல காரணங்களுமிருந்தன. அவை வருமாறு :

**2. ரஷ்யாவின் கொள்கை:** கிரிமியப் போர்க்குரிய மிக முக்கியமான காரணங்களுள் ஒன்று ரஷ்யாவின் வெளிநாட்டுக் கொள்கையாகும். ஐரோப்பிய நோயாளியான துருக்கியினை வீழ்த்தி, தனது ஆதிக்கத்தினை நிறுவ ரஷ்யா பல காலம் முயற்சி செய்துவந்தது. பால்கன் பகுதியில் தனது செல்வாக்கினை நிலைநிறுத்துவதையே தலையாய கொள்கையாகக் கொண்டிருந்தது ரஷ்யா. இதற்கு அதன் சமயமும் உறுதுணையாக நின்றது. ரஷ்யாவும், பால்கன் நாடுகளும் ஸ்லாவ் இனத்தைச் சார்ந்த நாடுகள். ஃபிரெஞ்சுப் புரட்சிக்குப் பின்னர், நாட்டுப்பற்று காரணமாக, அப் பால்கன் நாடுகள் விடுதலைபெற விழைந்தபோது, ரஷ்யா இனப்பற்றுக் காரணமாக, அந் நாடுகளை ஆதரித்தது. அந் நாடுகளும் ரஷ்யாவின் துணையை வரவேற்றன. ரஷ்யச் செல்வாக்கும் அங்கு மிகுந்தது. துருக்கி வீழ்வது உறுதி. அதன் பகுதிகளைக் கவர்ந்துகொள்வதே அரசியல் தந்திரமெனக் கருதினார் சார் நிக்கலஸ். ஃபிரான்சு துருக்கியில் தலையிடுவதையும் அவர் விரும்பவில்லை. அப் புரட்சிக்காரர்களின் நாடான ஃபிரான்சு, பால்கன் பிரச்சினையில் தலையிட்டு நிலைமையைக் குழப்புவதற்கு முன் தான் முந்திக்கொள்ளவேண்டுமென நினைத்தார் சார் மன்னர். இங்கிலாந்துடன் ஒன்றுகூடி, புரட்சிக்காரர்களின் பிடியிலிருந்து அதனைக் காப்பாற்றவும் இவர் விரும்பினார். இங்கிலாந்துடன் சேர்ந்து அப் பேரரசினைப் பகிர்ந்துகொள்ளவும் இவர் துணிந்தார். ஆஸ்திரியா, ஃபிரான்சு போன்ற நாடுகளுக்குச் சில பகுதிகளை வழங்கிவிட்டு, எஞ்சிய பகுதியை இங்கிலாந்துடன் பகிர்ந்துகொள்ள இவர் திட்டமிட்டார். 'இங்கிலாந்தும் நானும்

ஒப்புக்கொண்டால், பிறரைப்பற்றி ஒருசிறிதும் கவலைப்படேன்' எனவும் இவர் அறிவித்தார்.

1840-ல் இங்கிலாந்துடன் இணைந்து ஃபிரான்சுக்கெதிராக ஒரு கூட்டணியை உருவாக்கவும் இவர் முயன்றார். ஆயினும், இத் திட்டத்திற்கு இங்கிலாந்து இணங்கவில்லை. ஃபிரான்சை எதிர்த்துக் கூட்டணி அமைக்க இங்கிலாந்தின் அரசியலமைப்பு அனுமதிக்காது என இங்கிலாந்து அறிவித்தது. இத் திட்டம் நிறைவேறாததைக் கண்ட சார் மன்னர், துருக்கியைப் பிரித்துக் கொள்ளலாமென்ற திட்டத்தை இங்கிலாந்தின்முன் வைத்தார். 1844-ல் இங்கிலாந்துக்கு விஜயம் செய்தபோது இவர் துருக்கியைப் பகிர்ந்துகொள்ளும் திட்டத்தினை மீண்டும் வலியுறுத்தினார். சார் மன்னரின் சான்சலரான நெஸல்ராடு (Nestlerade) என்பார் துருக்கியை எவ்வாறு பகிர்ந்துகொள்ளலாம் என்ற சரியான திட்டமொன்றையும் இங்கிலாந்தின் வெளித்துறை அமைச்சரான அபெர்டீன் (Aberdeen) என்பார்க்கு அனுப்பிவைத்தார். அத் திட்டத்தில் துருக்கி வீழ்ந்துபடுவது உறுதி. அதற்குமுன் நாம் அதனைப் பகிர்ந்துகொள்வதே சிறப்பென வலியுறுத்தப்பட்டது. அபெர்டீன் அத் திட்டத்தினை ஏற்க மறுத்தார். ஆனால், துருக்கிப் பேரரசைப் பகிர்ந்துகொள்ளுதல் இயலாது என்பதை அவர் தெளிவாகக் கூறவில்லை. இதனால், ரஷ்யா தனது திட்டத்தை இங்கிலாந்து ஏற்றுக்கொண்டுவிட்டதெனத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டது. 1853-ல் ஜெருசலத்திலிருந்த புனித இடங்கள்மீது யார் ஆதிக்கம் செலுத்துவது என்ற பிரச்சினை எழுந்தபோது, சார் மன்னர் இங்கிலாந்து தன்னை ஆதரிக்குமென நம்பினார். போர் மூளும் என்ற அச்சம் ஏற்பட்டவுடன் 1853-ல் சார் மன்னர் இங்கிலாந்தின் தூதரான ஹாமில்டன் செய்மர் என்பாரைச் சந்தித்து நோயாளி இறப்பதற்கு முன்னர் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென வலியுறுத்தினார். ரஸ்ஸல் பிரபு (Lord John Russel) அதனை ஏற்க மறுத்துவிட்டார். நோயாளி இறப்பதற்குப் பல ஆண்டுகளாகும். இப் பிரச்சினையை ஃபிரான்சு, ஆஸ்திரியா, பிரஷ்யா போன்ற நாடுகளைக் கலந்து ஆலோசித்த பின்னரே முடிவுசெய்ய இயலும் என அவர் அறிவித்தார். இங்கிலாந்து தன்னை ஆதரிக்குமென சார் மன்னர் இறுதிவரை நம்பினார். அந் நம்பிக்கையின் அடிப்படையிலேயே சார் மன்னர், ஃபிரான்சையும் பகைத்துக்கொண்டார். அப் பகை இறுதியில் கிரிமியப் போரில் முடிந்தது.

**3. இங்கிலாந்தின் கொள்கை:** இங்கிலாந்து பின்பற்றிய கொள்கையும் கிரிமியப் போர்க்கு வழிவகுத்தது. ரஷ்யாவின்

கொள்கையான துருக்கியைப் பகிர்ந்துகொள்வது என்ற கொள்கைக்கு மாறாகத் துருக்கிய ஐக்கியத்தைப் பாதுகாக்க முயன்றது இங்கிலாந்து. கிழக்குப் பிரச்சினையையும் அவ்வாறே பேணிக் காக்க விரும்பியது இங்கிலாந்து. துருக்கியைப் பகிர்ந்து கொள்வது தக்கதல்லவென்பதை இங்கிலாந்து என்றும் வெளிப் படையாக இயம்பாதது அதன் தவறாகும். தன்னுடைய கொள்கையைத் திட்டவட்டமாக அறிவித்திருப்பின் ரஷ்யா அதற்கேற்பத் தனது கொள்கையை மாற்றிக்கொண்டிருக்கக்கூடும். இது இங்கிலாந்து செய்த மாபெரும் தவறாகும். மேலும், பாமர்ஸ்டன் போன்ற ஆங்கில வெளித்துறை அமைச்சர்கள் ரஷ்யாவுடன் போர் செய்வதையே வரவேற்றனர். இங்கிலாந்தின் நலனைக் காக்க ரஷ்யாவுடன் போர் செய்தல் தவிர்க்க முடியாதவொன்று என்று பாமர்ஸ்டன் கருதினார். அவரது போர் வெறியும் இப் போர்க்குரிய மிக முக்கியக் காரணங்களுள் ஒன்றாகும். அத்துடன் இங்கிலாந்து நாட்டின் செய்தித்தாள்களும் (குறிப்பாக Times) மக்களிடையே போர் வெறியைப் பரப்பின. ரஷ்யாவைத் தோற்கடித்தலே தங்கள் நாட்டிற்கு நலம் பயக்குமென அவை எழுதின. அவற்றைப் படித்த மக்களும் போர் வெறியர்களாயினர். அவர்களுள் பலர் ரஷ்யாவின் பிற்போக்குக் கொள்கைகளை விரும்பவில்லை. அது ஐரோப்பாவில் முற்போக்கின் பகைவனாய்த் திகழ்ந்ததை ஆங்கில முற்போக் காளர்கள் முற்றிலும் வெறுத்தனர். ரஷ்யா தோற்கடிக்கப்பட்டா லன்றி ஐரோப்பாவில் முற்போக்கு வெற்றி பெறாது என எண்ணி அவர்களும் ரஷ்யாவைத் தோற்கடிக்க விரும்பினர். மக்களின் குரலை ஏற்று இங்கிலாந்தும் போரைத் தொடங்கியது.

**4. மூன்றாம் நெப்போலியனின் கொள்கை:** ஃபிரெஞ்சுப் பேரரசர் மூன்றாம் நெப்போலியனும் இப் போர் ஏற்பட ஒரு வகையில் காரணமாயிருந்தார். ஜெருசலத்திலுள்ள புனித இடங்களை அவர் பாதுகாக்க விரும்பினார். ஃபிரெஞ்சு மக்களுள் பெரும்பாலோர் லத்தீன் திருச்சபையினைச் சார்ந்தவர்கள் என்ற காரணத்தால், அவர்களின் ஆதரவினைப் பெறும்பொருட்டு, ஜெருசலத்திலுள்ள லத்தீன் திருச்சபைகளைத் தமது ஆதிக்கத்தின் கீழ்க் கொணர விரும்பினார் இப் பேரரசர். அதுமட்டுமன்றி இவர் முதலாம் நிக்கலஸிடம் கொண்டிருந்த சொந்தப் பகைமையும் இப் போர்க்கு ஒரு காரணமானது. இவர் 1852-ல் அரியணை யேறியபோது இவரை அங்கீகரிக்க மறுத்தார் முதலாம் நிக்கலஸ். அவரைப் பலவாறு தூற்றவும் செய்தார் சார் மன்னர். இவர்களை முறியடித்தாலன்றி, தான் செல்வாக்குப் பெற இயலாதெனக் கருதினார் மூன்றாம் நெப்போலியன். ஆகவே, ரஷ்யாவைத் தோற்கடிப்பதில் இவர் பேரார்வம் காட்டினார். முதலாம்

நெப்போலியனைத் தோற்கடித்த ரஷ்யாவைத் தோற்கடித்துப் பெரும் புகழ்பெற விழைந்தார் மூன்றாம் நெப்போலியன். ரஷ்யா வுடன் போர் புரிதற்கும் இவர் ஆயத்தமானார்.

**5. ஆஸ்திரியாவின் கொள்கை:** ஆஸ்திரியாவும் போரை வரவேற்றது. பால்கன் பிரச்சினையில் தலையிட்டு ரஷ்யா பெரும் செல்வாக்குப் பெறுவதை ஆஸ்திரியாவும் விரும்பவில்லை. மால்டேவியா, வாலச்சியாப் போன்ற பகுதிகளில் ரஷ்யா தனது ஆதிக்கத்தினை நிறுவிக்கொண்டதை ஆஸ்திரியா வெறுத்தது. தனது நாட்டுக்கு அடுத்த பகுதிகள்மீது ரஷ்யா ஆதிக்கம் செலுத்துவது தனது நாட்டின் பாதுகாப்பிற்கு ஊறு விளைவிக் குமோவென ஆஸ்திரியா ஐயுற்றது. பிற நாடுகள் ரஷ்யாமீது போர் தொடுத்தபோது ஆஸ்திரியாவும் அதன் மீது போர் தொடுத்தது. 1854-ல் கிரிமியப் போர் ஏற்பட்டபோது, இது இங்கிலாந்து, ஃபிரான்சு போன்ற நாடுகளை ஆதரித்துப் போரில் இறங்கியது.

**6. சார்டினியாவின் கொள்கை:** சார்டினியாவும் கிரிமியப் போரை வரவேற்றது. அது தன்னலம் காரணமாக, ஃபிரான்சை ஆதரித்தது. இத்தாலிய ஐக்கியத்திற்கு ஃபிரான்சின் துணை தேவைப்பட்டது. மூன்றாம் நெப்போலியனின் உதவியைப் பெறும் பொருட்டு, இப் போரில் இறங்கினார் கவூர். கிரிமிய மண்ணிலிருந்து ஒரு புதிய இத்தாலியை உருவாக்குவதே அவர்தம் நோக்கம். ஆகவே, இத்தாலியும் இப் போரில் ஈடுபட்டது. பல்வேறு ஐரோப்பிய நாடுகளும் பல்வேறு காரணங்களை முன்னிட்டு இப் போரில் இறங்கின.

**7. உடனடிக் காரணம்:** ரஷ்யா, தன்னுடைய தூதுவரான மென்ஷிகோவ் என்பாரைக் கான்ஸ்டான்டிநோபிளுக்கனுப்பி ஜெருசலத்திலுள்ள புனித இடங்களைக் காப்பாற்றும் பொறுப் பினைத் தன்னிடமே விட்டு வைக்குமாறு வேண்டியது. அப்போது ஸ்டராட்ஃபோர்டு ராட்கிலிஃப் (Stratford Radcliffe) என்பார் கான்ஸ்டான்டிநோபிளில் ஆங்கிலத் தூதுவராயிருந்தார். திறமை யும் மதி நுட்பமும் மிக்க இவர், சுல்தானைப் பெரிதும் கவர்ந் திருந்தார். அவரது அறிவுரையினைத் துருக்கிய சுல்தான் பெரிதும் போற்றிவந்தார். ராட்கிலிஃப் சுல்தானை ரஷ்ய வேண்டுகோளை ஏற்க வேண்டாமென வற்புறுத்தினார். அவரது வேண்டுகோள்படி சுல்தான், ரஷ்ய வேண்டுகோளைப் புறக்கணித்தார். இதன் விளைவாக, ரஷ்யா பெரிதும் ஏமாந்துபோனது. சார் மன்னர் தமது வேண்டுகோளைத் துருக்கி ஏற்குமாறு செய்ய அதன் பகுதிகளான

மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டார் இதனைக் கண்ட வல்லரசுகளான இங்கிலாந்து, ஃபிரான்சு, ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகியவை வியன்னாவில் கூடி அமைதிக்கான ஒரு திட்டத்தினைத் தீட்டின. இத் திட்டத்தினை ஏற்குமாறு ரஷ்யாவையும் துருக்கியையும் வேண்டின. ஸ்ராட்ஃபோர்டின் அறிவுரைப்படி துருக்கி அத் திட்டத்தினையும் புறக்கணித்தது. ரஷ்யாவுக்கு நல்லதொரு படிப்பினையைப் புகட்ட வேண்டுமென்பதே இங்கிலாந்தின் நோக்கமாகும். மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளை ரஷ்யா கவர்ந்தது, முறையற்ற செயலெனக் கூறி, துருக்கி, ரஷ்யாமீது போர் தொடுத்தது. சினோப் (Sinope) என்ற கடற்படைப் போரில் ரஷ்யா துருக்கியைத் தோற்கடித்தது. சினோப் போர்க்களத்தில் ரஷ்யா பெற்ற வெற்றி ஐரோப்பிய நாடுகளை அச்சத்தில் ஆழ்த்தியது. இங்கிலாந்தும் ஃபிரான்சும் துருக்கியை ஆதரித்துப் போரில் இறங்கின. ஃபிரான்சின் ஆதரவைப் பெற சார்டினியாவும் இப் போரில் இறங்கியது. கிரிமியப் போர் தொடங்கியது.

**1841**-ல் ஏற்பட்ட ஜலசந்தி ஒப்பந்தம் புறக்கணிக்கப்பட்டது. ஆங்கில, ஃபிரெஞ்சுப் படைகள் சிலிஸ்ட்ரியா (Slistria) வந்தடைந்தன. இதனைக் கண்ட ரஷ்யா தனது படைகளை மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளிலிருந்து வெளியேற்றியது. உடனே ஆஸ்திரியப் படைகள் அப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டன. கிரிமியத் தீபகற்பத்தில் செவஸ்டாபோல் (Sevastapol) என்ற இடத்தில் ரஷ்யாவுக்கு வலுவுள்ள கடற்படைத் தளம் ஒன்றிருந்தது. அதனைக் கைப்பற்ற ஆங்கில-ஃபிரெஞ்சுக் கடற்படைகள் திட்டம் தீட்டின. **1854**ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் **14**ஆம் நாள் கிரிமியாவில் அவை ஆயத்தமாய் நின்றன. நவம்பர்த் திங்கள் **20**ஆம் நாள் அவை ரஷ்யப் படைகளை ஆல்மா என்ற இடத்தில் தோற்கடித்தன. அதன்பின்னர், ஆங்கில-ஃபிரெஞ்சுப் படைகள் செவஸ்டாபோலை நோக்கி விரைவாக முன்னேறின. பலக்லாவா (Balaclava), இங்கர்மான் (Inkerman) போன்ற வரலாற்றுச் சிறப்புமிக்க போர்க்களங்களில் ரஷ்யா தோற்கடிக்கப் பட்டது. **1855**-ல் ரஷ்யாவின் சிறந்த அரணான செவஸ்டாபோலும் வீழ்ந்தது. அப்போது முதலாம் சார் நிக்கலஸ் இறந்துபட்டார். அவர்க்குப்பின், அவருடைய மைந்தரான இரண்டாம் சார் அலெக்ஸாந்தர் அரியணையேறினார். இதன் பின்னர், இங்கிலாந்தைச் சார்ந்த கூட்டணி நாடுகள் நான்கம்சத் (Four Points) திட்டமொன்றினை ரஷ்யாவுக்கு அனுப்பிவைத்தன. அதன்படி (1) மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகள் மீதான தனது உரிமைகளை ரஷ்யா விட்டுக்கொடுக்கவேண்டும். (2) டான்யூப் நதியில் அனைத்து

நாட்டு நாவாய்களும் செல்ல உரிமையுண்டு. (3) கருங்கடலில் எந்நாடும் கடற்படையினை வைத்திருத்தல் கூடாது. (4) துருக்கியப் பேரரசில் வாழும் கிருத்துவர்களின் பாதுகாவலன் என்ற உரிமையினை ரஷ்யா விட்டுக் கொடுத்தல் வேண்டும்.

போர் தொடர்ந்து நிகழ்வதை எந்நாடும் விரும்பவில்லை. அனைத்து நாடுகளும் மிகச் சோர்ந்துபோயின. போரை நிறுத்தும் பேச்சு வார்த்தைகளைத் தொடங்குவோமென இங்கிலாந்துக் கூட்டணி நாடுகள் ரஷ்யாவுக்கு அழைப்பு விடுத்தன. அவை 1855ஆம் ஆண்டு, மார்ச் திங்களில் போரை நிறுத்தும் நோக்கத்தில் வியன்னாவில் கூடின. பாஸ்பரஸ், டார்டெனெல்ஸ் போன்ற ஜலசந்திகளில் ரஷ்யப் போர்க் கலங்கள் புகுதல் கூடாதென இங்கிலாந்தைச் சார்ந்த நாடுகள் வாதிட்டன. அனைத்து நாட்டுக் கப்பல்களும் அங்கு அனுமதிக்கப்படலாமென ரஷ்யா வலியுறுத்தியது. அதனை இங்கிலாந்தைச் சார்ந்த நாடுகள் ஏற்க மறுத்தன. இம் மாநாடும் தோல்வியில் முடிந்தது.

இப் போர் மீண்டும் தொடங்கியது. அனைத்து நாடுகளையும் எதிர்த்துப் போரிடுவது எளிதன்று என ரஷ்யா நன்குணர்ந்தது. இறுதியில் அனைத்து நாடுகளும் இப் போரை நிறுத்த விரும்பின. அதன்பொருட்டு, அவை 1856-ல் பாரிசில் கூடின. பாரிசு உடன்பாடும் அதன் பின்னர் ஏற்பட்டது.

**பாரிசு மாநாடு**

1856ஆம் ஆண்டு, மார்ச் திங்கள் பாரிசு மாநாடு கூட்டப் பெற்றது. அதில் ரஷ்யா, ஆஸ்திரியா, இங்கிலாந்து, ஃபிரான்சு, துருக்கி, சார்டினியா போன்ற நாடுகள் பங்கேற்றன. 1856-ல் பாரிசு உடன்பாட்டிலும் அவை கையெழுத்திட்டன. அதன்படி (1) துருக்கியின் சுதந்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. துருக்கியின் ஐக்கியத்தினையும் சுதந்திரத்தினையும் அனைத்து நாடுகளும் ஏற்றன. (2) ஐரோப்பியக் கூட்டணியில் துருக்கியும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. (3) துருக்கியின் உள்நாட்டுப் பிரச்சினையில் தலையிட எவ்வல்லரசுக்கும் உரிமையில்லையென முடிவாயிற்று. (4) தனது பாதுகாப்பின் கீழிருக்கும் கிருத்துவக் குடிமக்களின் நலனைப் பேணுவதாகத் துருக்கிச் சுல்தான் உறுதியளித்தார். (5) கருங்கடலிலும், டார்டெனல்ஸிலும் எந்நாட்டுப் போர்க் கலங்களும் செல்லக்கூடாதென முடிவாயிற்று. (6) மால்டேவியா, வாலச்சியாப் பகுதிகளுக்குத் துருக்கியின் ஆதிக்கத்தின்கீழ் சுயாட்சி வழங்கப்பட்டன. (7) டான்யூப் நதியில் எல்லா வல்லரசு நாவாய்களும் செல்ல உரிமையளிக்கப்பட்டது. (8) செவ்ஸ்டாபோலில்

ரஷ்யா மீண்டும் தனது கடற்படைத் தளத்தினை நிறுவுவது தடை செய்யப்பட்டது. (9) பெசரேபியாவை ரஷ்யா துருக்கிக்கு விட்டுக் கொடுக்கவேண்டுமென ஏற்பாடாயிற்று.

**இம் மாநாட்டின் விளைவுகள்**

1856-ல் ஏற்பட்ட இவ்வுடன்பாடு வரலாற்றுச் சிறப்புமிக்க ஓர் உடன்பாடாகும். இதன்படி ரஷ்யா தனது செல்வாக்கினை முற்றிலும் இழந்தது. இங்கிலாந்துக்கு இது ஒரு மாபெரும் வெற்றியாகும். பாமர்ஸ்டன் தமது சிறப்புமிக்க வெளிநாட்டுக் கொள்கையின்மூலம் பால்கன் பகுதியில் இங்கிலாந்தின் செல்வாக்கினை மிக உயர்த்தினர். கருங்கடல் பகுதியில் ரஷ்ய ஆதிக்கம் மிகக் குறைந்தது. ஆயினும், 1856-க்குப் பின்னரும் ரஷ்யா தனது தலையிடும் கொள்கையினைக் கைவிடவில்லை. பால்கன் பகுதிகளில் தோன்றிய விடுதலை இயக்கம் ரஷ்யாவுக்கு மீண்டும் அப் பகுதிகளில் தலையிடும் வாய்ப்பினை நல்கியது. இங்கிலாந்தால் அதனைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

பாரிசு மாநாடும் பால்கன் நாடுகளின் பிரச்சினைகளை ஓரளவு புரிந்துகொண்டுதான் செயல்பட்டது. அவர்களது தேசிய உணர்வினை இம் மாநாடு ஓரளவுக்கு மதித்தது. இம் மாநாட்டின் விளைவாக, செர்பியா உரிமை பெற்றது. செர்பிய இளவரசரே அதனை ஆளவேண்டுமென முடிவானது. அதன்படி மிலோஷ் ஒப்ரேநோவிட்ச் (Milosh Obrenovitch) என்பார் அதன் அரசராக்கப்பட்டார். மால்டேவியாவும் வாலச்சியாவும் சுயாட்சி பெற்றன. பின்னர், அவை ருமேனியா என்ற பெயரில் ஒன்றுபட்டு முழு உரிமை பெற்றன. பாரிசு மாநாடே இதற்கு வித்திட்டதெனில் மிகையாகாது.

பன்னாட்டுச் சட்டக் கொள்கைகள் உருவாவதற்கும் (Principle of International Law) இம் மாநாடு பெரிதும் துணை நின்றது. பன்னாட்டுக் கடற்போக்குவரத்துக்குரிய கொள்கைகளை இம் மாநாடு வரையறுத்தது வரலாற்றுச் சிறப்புமிக்கதாகக் கருதப்படுகிறது. அமைதியான கடற் பகுதிகளிலும், ஜலசந்திகளிலும் போர்க் கலங்கள் செல்லுதல் சட்டப்படி குற்றமென இம் மாநாடு அறிவித்தது. பன்னாட்டு வரம்பை மீறிய வணிகப் பொருள்களைத் தவிர, பிற பொருள்களை எந்நாடும் கைப்பற்றுதல் கூடாதென இம் மாநாடு வலியுறுத்தியது.

கிழக்குப் பிரச்சினைக்கு முடிவுகாண முயன்றது இம் மாநாட்டின் தனிச் சிறப்பாகும். இம் மாநாட்டின் விளைவாகத்

துருக்கி புத்துயிர் பெற்றது. துருக்கியின் சுதந்திரமும் பேணப் பட்டது. துருக்கியும் தன்னுடைய கிருத்துவக் குடிகளின் நலனுக் காகச் சீர்திருத்தங்களேப் புகுத்துவதாக வாக்களித்தது. இந் நோயாளியும் ஐரோப்பியக் கூட்டணியில் சேர்த்துக்கொள்ளப் பட்டது ஒரு சிறப்பான நிகழ்ச்சியாகும்.

இம் மாநாடு ரஷ்யாவுக்குப் பெருத்த ஏமாற்றத்தினேத் தந்தது. கருங்கடலில் ரஷ்யா தனது ஆதிக்கத்தினே இழந்தது. ஜலசந்தி களிலும் அதன் போர்க்கலங்கள் செல்வது தடை செய்யப்பட்டது. டான்யூப்பிலும் அதன் செல்வாக்குக் குன்றியது. பெசரேபியாவை யும் அது துருக்கிக்கு விட்டுக்கொடுத்தது. பால்கனில் அதன் செல்வாக்கு மிகவும் குறைந்தது. அங்கு இங்கிலாந்து தனது செல்வாக்கினே நிறுவிக்கொண்டது. எவ்வல்லரசும் தனித்துக் கிழக்குப் பிரச்சினேக்கு முடிவெடுக்க இயலாது என்பதை இம் மாநாடு நன்கு உணர்த்தியது.

பல சாதனேகளுக்கும் வெற்றிகளுக்கும் வித்திட்ட இம் மாநாட்டால் கிழக்குப் பிரச்சினேயை வெற்றிகரமாகத் தீர்த்து வைக்க முடியவில்லே. துருக்கியின் வீழ்ச்சியினே இதனுல் தடுத்து நிறுத்த இயலவில்லே. துருக்கியச் சுல்தானும் தான் வாக்களித்தபடி சீர்திருத்தங்களேப் புகுத்தவில்லே. நிருவாகத்தில் மாற்றங்கள் எதையும் அவர் புகுத்தவில்லே. துருக்கியில் ஊழலும் சீர்கேடுகளும் மலிந்தன. இவர் கிருத்துவக் குடிமக்களின் நலனேப் பேணத் தவறியதால், அவர்கள் புரட்சியிலீடுபட்டு விடுதலே பெற முனேந்தனர். வல்லரசுகளாலும் அதன் ஒற்றுமையினேக் காக்க முடியவில்லே. பால்கனில் ரஷ்யச் செல்வாக்கு மிகுவதை இம் மாநாட்டால் தடுக்க முடியவில்லே. அங்கு ரஷ்ய ஆதிக்கம் மிகுந்தது. 1870-ல் ஃபிரெஞ்சு-பிரஷ்யப் போர் ஏற்பட்டபோது ரஷ்யா இப் பாரிசு உடன்பாட்டினே முற்றிலும் கைவிட்டுவிட்டது. டான்யூப், டார்டெனெல்ஸ், பாஸ்பரஸ் போன்ற பகுதிகளில் அது மீண்டும் தனது ஆதிக்கத்தினே நிறுவிக்கொண்டது. 1877-ல் அது துருக்கியோடு சேன்ஸ்டெஃபேனு (Sanstefano) என்ற உடன்பாட் டினேயும் செய்துகொண்டது. 1878-ல் அது பெசரேபியாவையும் மீண்டும் கைப்பற்றியது. இதனுல், டான்யூப் பகுதியில் அதன் ஆதிக்கம் மீண்டும் நிறுவப்பட்டது. பெர்லின் மாநாட்டில் மீண்டும் அதன் செல்வாக்குப் பெருமளவுக்குக் குறைக்கப்பட்டது. ஆயினும், ரஷ்ய ஆதிக்கத்தினே அதனுல் முற்றிலும் குறைக்க முடியவில்லே.

பாரிசு மாநாடு துருக்கிப் பேரரசின் ஐக்கியத்தினேப் பேணு வதாக வாக்களித்தது. துருக்கிப் பேரரசின் ஐக்கியத்தினே அதனுல் பேணிக் காக்க முடியவில்லே. 1878-ல் நிகழ்ந்த பெர்லின்

மாநாட்டில் இங்கிலாந்து சைப்ரஸைப் பெற்றது. துருக்கியின் பாதுகாவலனுன இங்கிலாந்து சைப்ரஸைப் பெற்றதுடன் துருக்கியின் சிதைவும் தொடங்கியது. பாஸ்னியா, ஹெரஜி-ஹோவினுவை ஆஸ்திரியா பெற்றது. ஃபிரான்சு ஆப்பிரிக்காவில் பல பகுதிகளைப் பெற்றது. துருக்கியப் பேரரசின் முழுமை சிதைந்தது. இதனுல், பாரிசு மாநாடு பயனற்றுப்போனது.

**பிற விளைவுகள்**

கிரிமியப் போரின் விளைவாக, மூன்றும் நெப்போலியன் பெரும் பயன் பெற்ருர். இதனைத் தமது வளர்ச்சிக்குப் பெரிதும் பயன் படுத்திக்கொண்டார் இவர். பாரிசு மாநாட்டிற்குத் தலைமையேற்று அதன்மூலம் தமது புகழைப் பெருக்கிக்கொண்டார் மூன்றும் நெப்போலியன். இதனுல், ஃபிரான்சு பெரிதும் செல்வாக்குப் பெற்றது. பிற நாடுகளுடன் போட்டியிட்டு முன்னேறவும் இதனுல் முடிந்தது. கிரிமியப் போரின்மூலம் ஒரு பிற்போக்குக் கூட்டணியை முறியடித்தார் மூன்றும் நெப்போலியன். ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யக் கூட்டணி இதன்மூலம் முறிந்தது.

இப் போரின் விளைவாகப் பெரும் பயன் பெற்ற நாடுகளுள் சார்டினியாவும் ஒன்ருகும். கிரிமிய மண்ணிலிருந்து ஒரு புதிய இத்தாலி (Italy) உருவானது. இப் போரின் விளைவாக, அது இங்கிலாந்து, ஃபிரான்சு போன்ற நாடுகளின் ஆதரவினைப் பெற்றது. இதன் விளைவாக, இத்தாலியும் ஒன்றுபட முடிந்தது. கிரிமியப் போர் மறைமுகமாக ஜெர்மன் ஐக்கியத்திற்கும் துணை புரிந்தது. கிரிமியப் போர்வரை ரஷ்யாவும் ஆஸ்திரியாவும் நல்ல நண்பர்கள் என்ற காரணத்தால், ரஷ்யா ஆஸ்திரியாவைப் பெரிதும் ஆதரித்தது. ரஷ்யத் துணைகொண்டே ஜெர்மன் புரட்சியினையும் ஆஸ்திரியா அடக்கியது. அவையிரண்டும் ஒன்று கூடி, முற்போக்குச் செயல்கள் அனைத்திற்கும் முட்டுக்கட்டையிட்டன. 1856-க்குப் பின்னரும் அவை ஒன்றுபட்டுச் செயல் புரிந்திருந்தால், ஜெர்மனி ஒன்றுபட்டிராது. கிரிமியப் போரின் விளைவாக, ஆஸ்திரிய–ரஷ்ய நட்பு முறிந்தது. அத்துடன் கிரிமியப் போரில் பிரஷ்யா நடுநிலை வகித்ததை ரஷ்யா நன்றியுடன் போற்றியது. 1856-க்குப் பின்னர், அது நட்பாக மாறியது. 1866-ல் ஆஸ்திரிய-பிரஷ்யப் போரின் போது, ரஷ்யா நடுநிலை வகித்துப் பிரஷ்யாவை ஊக்கியது. அதனுல், பிரஷ்யா வெற்றிபெற்றது. 1870-லும் ரஷ்யாவின் நடுநிலைமை, பிரஷ்யாவின் வெற்றிக்குப் பெரிதும் துணையா யிருந்தது. இதனுல், ஜெர்மனியும் ஒன்றுபட்டது.

ரஷ்ய வரலாற்றிலும் கிரிமியப் போர் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. இப் போரின் விளைவாக, ரஷ்யா தனது குறையை

நன்குணர்ந்துகொள்ள ஒரு வாய்ப்பேற்பட்டது. இரண்டாம் சார் அலெக்ஸாந்தர், சீர்திருத்தங்களின் இன்றியமையாமையை நன்கு புரிந்துகொள்ள இது பெரிதும் துணைபுரிந்தது. இதனால், ரஷ்ய வரலாற்றில் மாபெரும் சீர்திருத்தங்கள் புகுத்தப்பட்டன. அடிமைகள் விடுதலை செய்யப்பட்டனர். உள்ளாட்சித் துறையில் சீர்திருத்தங்கள் பல புகுத்தப்பட்டன. பால்கன் பிரச்சினையி லிருந்து சற்று ஒதுக்கப்பட்ட ரஷ்யா மத்திய ஆசியாவிலும், தூரக் கிழக்கிலும் தனது கவனத்தைச் செலுத்தியது. இதுதான் பழைய போர் முறையில் நடைபெற்ற இறுதிப் போராகும். இதன்பின்னர், புதிய போர்க்கருவிகள் பயன்படுத்தப்பட்டன. புதிய போர் முறை களும் பின்பற்றப்பட்டன. பழைய ஐரோப்பா மறைந்தது. புதிய ஐரோப்பா அதன்பின்னர் மலர்ந்தது.

## 1856 க்குப் பின்னர் கிழக்குப் பிரச்சினை

1856-ல் பாரிசு மாநாடு கிழக்குப் பிரச்சினைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தது எனக் கூற இயலாது. பால்கன் நாடுகள் பாரிசு உடன்பாட்டையேற்க மறுத்தன. காரணம், பாரிசு மாநாடு, அம் மக்களின் உணர்ச்சிகளைப் புறக்கணித்தது. கிரிமியப் போர்க்குப் பின்னர், நாட்டுப்பற்று அப் பகுதிகளில் மேலும் மிகுந்தது. அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுபட அவர்கள் பெரிதும் முயன்றனர். கிரேக்க விடுதலைப் போர் அவர்களை மிகவும் ஊக்குவித்தது. கிரேக்க மக்களும் தங்களுக்குக் கிட்டிய எல்லை களால் அமைதியுறவில்லை. தங்களது நாட்டெல்லைகளை விரிவு படுத்தும் முயற்சியிலும் அவர்கள் ஈடுபட்டனர். கிரேக்க மொழி பேசும் அனைத்து இடங்களையும் தன்னுடன் இணைத்துக்கொள்ள கிரீஸ் விரும்பியது. அங்கும் அமைதியின்மை நிலவியது.

பாரிசு மாநாடு காரணமாக, ருமேனிய மாநிலங்களான மால்டேவியா, வாலச்சியா சுயாட்சி பெற்றன. அவர்களுக்குப் படிப்படியாக முழு உரிமையளிக்கப்படுமெனப் பாரிசு மாநாடு உறுதியளித்தது. நாட்டுப்பற்று மொழிப்பற்று காரணமாக, ருமேனிய மாநிலங்கள் முழு உரிமை பெற விரும்பின. மால்டேவி யாவும், வாலச்சியாவும் ஒரே நாடாக இணையவும் விரும்பின. இங்கிலாந்தும், ஃபிரான்சும் அவை இணைவதை வரவேற்றன. அவை இணைந்தால், ரஷ்யாவுக்கும் துருக்கிக்குமிடையே வலுவுள்ள அரணாக அமையுமென அவை கருதின.

அவற்றிற்கு முழு உரிமையளிக்க துருக்கி விரும்பவில்லை. 1858-ல் கூடிய வல்லரசுகளின் மாநாடுகள் அவை தனித்தனியே இருத்தலே நன்றென முடிவு செய்தன. அவை ஒவ்வொன்றும்

தனிப் பாராளுமன்றம், தனி அரசு கொண்டு இயங்கலாமெனவும் அவ் வல்லரசுகள் முடிவு செய்தன. இதனை அவ்விரண்டு மாநிலங்களும் எதிர்த்தன. நாட்டுப்பற்றின் சின்னமெனத் தன்னை எண்ணிக்கொண்ட மூன்றும் நெப்போலியன், அவை இணைவதை வரவேற்றார். 1859-ல் அவ்விரண்டு மாநிலங்களும் ஒருவரையே தங்களுடைய அரசராகத் தேர்ந்தெடுத்தன. அலெக்ஸாந்தர் கௌசா (Alexander Couza) அவ்விரு மாநிலங்களின் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஒருவர் தலைமையில் அவை இரண்டும் இணைவதன் முதல் படியாகும் இது. 1859-ல் நிகழ்ந்த ஆஸ்திரிய–இத்தாலியப் போரின் காரணமாக, ஆஸ்திரியா இப் பிரச்சினைமீது தனது முழுக் கவனத்தையும் செலுத்த முடியவில்லை. இதனைப் பயன்படுத்திக்கொண்டு அவ்விரு மாநிலங்களின் பாராளுமன்றங்களும் ஒன்றாக இணைந்தன. மூன்றும் நெப்போலியன் அதனை வெளிப்படையாக வரவேற்றார். அவற்றின் உறுதியினையும், நாட்டுப் பற்றினையும், விடுதலை வேட்கையினையும் கண்ட துருக்கி, அவற்றின் இணைப்பை அங்கீகரித்தது. ருமேனியா என்ற பெயரில் 1862-ல் அவை புதிய நாடாக விடுதலை பெற்றன. ஆஸ்திரியாவும் வேறு வழியின்றி அதனை ஒரு நாடெனவும் அங்கீகரித்தது. பாரிசு மாநாட்டின் விளைவாக, ஒரு புதிய நாடு பால்கனில் தோன்றியது. இது பால்கன் பகுதி மக்களின் நாட்டுப்பற்றுக்குக் கிடைத்த ஒரு மாபெரும் வெற்றியாகும்.

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அனைத்து பால்கன் நாடுகளும் விடுதலை பெறத் துணிந்தன. கொடுங்கோன்மை மிக்க அன்னிய ஆதிக்கமான துருக்கியை எதிர்த்துப் புரட்சி செய்யத் தலைப்பட்டன. அவை அனைத்தும் ஒரே இனத்தைச் சார்ந்த நாடுகள் என்ற காரணத்தால், ஒற்றுமையுணர்வும் அவற்றிடையே நிலவிற்று. அங்கு ஸ்லாவ் இன மக்களின் முன்னேற்றத்திற்காகப் பல இரகசிய இயக்கங்கள் தோன்றின. ரஷ்யாவும் ஒரு மாபெரும் ஸ்லாவ் நாடு என்ற முறையில் அவற்றை வரவேற்றது. தன் இன மக்கள் ஒன்றுபட்டு விடுதலை பெறுவதையும் ரஷ்யா ஆதரித்தது.

பால்கன் நாடுகளும் இனப்பற்றுக் காரணமாக, ரஷ்யாவின் தலைமையை வரவேற்றன. 1867-ல் அனைத்து ஸ்லாவ் இன மாநாடு, மாஸ்கோவில் கூடி, அம் மக்களின் ஒற்றுமையை வரவேற்றது. அதன்பின்னர், மாஸ்கோவே அவற்றிற்குத் தலைமையேற்றது. பல்வேறு பால்கன் பகுதி இளைஞர்களுக்கும் மாஸ்கோ பல்கலைக் கழகத்தில் பயிற்சியளிக்கப்பட்டன. மாஸ்கோ அவர்களின் இரகசிய இயக்கங்களையும் ஊக்குவித்தது.

நாட்டுப்பற்று காரணமாகத் தோன்றிய இரகசிய இயக்கங்களைத் துருக்கியால் ஒடுக்க முடியவில்லை. அப்போது துருக்கிச் சுல்தானாக இருந்தவர் அப்துல் அஜிஸ் (Abdul Aziz) என்பாராவார். அவர் நாட்டுப்பற்றின் வலிமையை நன்கு புரிந்து கொண்டார். அதன் காரணமாகப் பல்வேறு சீர்திருத்தங்களைப் புகுத்தினர். சட்டத்திற்குமுன் அனைவரும் சமம். தனியார் சுதந்திரம், சமயப் பொறையுடைமை, மாநிலப் பிரதிநிதித்துவம் போன்ற நல்ல சீர்திருத்தங்களைப் புகுத்தினர். இதனால், இரகசிய இயக்கங்கள் நிறைவு பெறவில்லை. மேலும், தீவிரச் சீர்திருத்தங்கள் வேண்டுமென அவை போராடத் தலைப்பட்டன. அஜிஸின் சீர்திருத்தங்களைத் துருக்கியில் பழைமை விரும்பிகள் எதிர்த்தனர். 1876-ல் தோன்றிய புரட்சியின் காரணமாக, அவர் பதவியிலிருந்து அகற்றப்பட்டார். அவர்க்குப்பின் 5ஆம் மூராத் பதவியேற்றார். அவரும் மிகுந்த எதிர்ப்புக் காரணமாக, ஒருசில மாதங்களில் பதவி துறந்தார். அவர்க்குப் பின்னர், இரண்டாம் அப்துல் ஹமீது அரியணை ஏறினர். அவர் வல்லாட்சியில் நம்பிக்கைமிக்கவர். அடக்குமுறையினைப் பயன்படுத்தி மக்களின் உரிமைகளைப் பறித்தார். நாட்டிலிருந்த முற்போக்காளர்களை மிகவும் கொடுமைப் படுத்தினர் இச் சுல்தான். பிரிவினைபற்றியும் நாட்டுப்பற்று பற்றியும் பேசிய அனைவரும் சிறையிலடைக்கப்பட்டனர். திறமையின்மை, ஊழல், முறைகேடுகள் இவரது ஆட்சியில் மலிந்து காணப்பட்டன. பால்கன் பகுதிகளின் கிருத்துவர்கள் மிகக் கொடுமைப்படுத்தப்பட்டனர். அவர்களது விடுதலை இயக்கங்களும் நசுக்கப்பட்டன. இவரது கொடுங்கோன்மை வன்முறைக்கே வழிவகுத்தது. விடுதலை இயக்கங்களும் தீவிரமடைந்தன. அவற்றால், பால்கன் நாடுகள் பலவும் விடுதலை பெற்றன. துருக்கியின் திறமையின்மை, மக்களின் நாட்டுப்பற்று இவற்றால், பால்கன் நாடுகள் படிப்படியாக விடுதலை பெற்றன.

---